தமிழ் வெளியீட்டுக் கழக வரிசை எண் - 112



# கிரேக்க நாட்டு வரலாறு-II

(HISTORY OF GREECE - II)

ஆசிரியர் :

ஜே. பி. ப்யூரி

தமிழாக்கம் :

சைமன் ஐ. எஸ். பாக்கியநாதன்,

வரலாற்றுத்துறை, புதுக்கல்லூரி, சென்னை-14.

பி. இராமானுஜம் தேவதாஸ்,

வரலாற்றுத்துறை, மாநிலக்கல்லூரி, சென்னை-5.




தமிழ் வெளியீட்டுக் கழகம்

தமிழ்நாடு — அரசாங்கம்

# அணிந்துரை

(திரு. எம். பக்தவத்ஸலம், தமிழக முதலமைச்சர்)

தமிழைக் கல்லூரிக் கல்வி மொழியாக ஆக்கி ஆறு ஆண்டுகள் ஆகிவிட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் பி.ஏ., வகுப்பு மாணவர்கள் தங்கள் பாடங்கள் அனைத்தையும் தமிழிலேயே கற்று வருகின்றனர். தொடக்கத்தில் இருந்த இடர்ப்பாடுகள் மெல்ல மெல்ல மறைந்து வருகின்றன நாடு முழுதும் பரந்துள்ள மாணவர்களின் ஆர்வம், 'தமிழிலேயே கற்பிப்போம்' என முன்வந்துள்ள கல்வி ஆசிரியர்களின் ஊக்கம், பிற பல துறைகளிலும் தொண்டு செய்வோர் இதற்கெனத் தந்த உழைப்பு, தங்கள் சிறப்புத் துறைகளில் நூல்கள் எழுதித் தர முன்வந்த நூலாசிரியர்கள் தொண்டுணர்ச்சி இவற்றின் காரணமாக இத் திட்டம் நம்மிடையே திருப்திகரமாக நடைபெற்று வருகிறது.

பல துறைகளில் பணி புரியும் பேராசிரியர்கள் எத்தனையோ நெருக்கடிகளுக்கிடையே குறுகிய காலத்தில் அரிய முறையில் நூல்கள் எழுதித் தந்துள்ளனர்.

வரலாறு, அரசியல், உளவியல், பொருளாதாரம், புவியியல், வேதியியல், உயிரியல், வானியல், புள்ளியியல், தத்துவம் ஆகிய பல துறைகளில் தனி நூல்கள், மொழி பெயர்ப்பு நூல்கள் என்ற இருவகையிலும் தமிழ் வெளியீட்டுக் கழகம் நூல்களை வெளியிட்டு வருகிறது.

இவற்றுள் ஒன்றான 'கிரேக்க நாட்டு வரலாறு-II' என்ற இந்நூல் தமிழ் வெளியீட்டுக் கழகத்தின் 112 ஆவது வெளியீடாகும். கல்லூரித் தமிழ்க் குழுவின் சார்பில் வெளியான 35 நூல்களையும் சேர்த்து இதுவரை 147 நூல்கள் வெளிவந்துள்ளன.

கணக்கிலடங்காத் தடைகளை எல்லாம் அகற்றித் தமிழன்னை கல்லூரிக் கலையாசனத்தில் அமர்ந்துள்ளாள். எனவே, இவ்வன்னையை வாழ்த்துவோமாக. உழைப்பின் வாரா உறுதிகள் இல்லை ; ஆதலின் உழைத்து வெற்றி காண்போம் தமிழைப் பயிலும் மாணவர்கள் உலக மாணவர்களிடையே சிறந்த இடம்பெற வேண்டும் ; அதுவே தமிழன்னையின் குறிக்கோளுமாகும். சென்னைப் பல்கலைக் கழகத்தின் பலவகை உதவிகளுக்கும் ஒத்துழைப்புக்கும் நம் மனம் கலந்த நன்றி உரித்தாகுக

எம். பக்தவத்ஸலம்

# உள்ளுறை

## இரண்டாம் பாகம்

# கிரேக்க நாட்டு வரலாறு

## 7. கிரீஸ் நாட்டிற்கு ஏற்பட்ட இடர்கள்: பெர்சியர், பியூனியரின் படையெடுப்பு

பாரசீகத்தின் இரண்டாவதும் பெரியதுமான படையெடுப்பின் முகப்பில் நாம் நிற்கின்ருேம். இதுவே கிரேக்கர்களின் இரண்டாவதும் பெரியதுமான வெற்றியாகும். இப் பகுதியின் சிறப்பு கிரீஸ் வரலாற்று ஏடுகளில் அழிந்து போகவில்லே. ஆசியாவிலிருந்து வந்த காட்டுமிராண்டிகளான எதிரிகளிடமிருந்து ஐரோப்பாவைக் காத்ததும், உரிமை பெற்ற அரசுகளின் கூட்டுறவால் இவர்கள் மிகப் பெரிய சேனையையும், கப்பற் படையையும் தங்கள் சிறிய படையைக் கொண்டு முறியடித்து வெற்றி கொண்டதுமான வியத்தகு செயல்கள் கிரேக்கர்கள் உள்ளத்தில் நிரந்தரமான உணர்ச்சியை உண்டுபண்ணின. தரமறிந்து உய்த்துணரும் பக்குவமடையாத நிலேயில் உள்ள கிரேக்கர்களின் கற்பனேயில் இச் செயல்கள் உள்ளத்தைத் தூண்டி விடும் சம்பவங்களாக விரிந்தன. இச் சரித்திரத்தை வெறுங்கதையாகப் பார்ப்போமாஞல் ஹெரோடட்டஸ் கூறும் சிறப்பான முறையில் வேறு ஒருவரும் கூறமுடியாது. கிரேக்கருள் கதைகளேக் கோப்பதில் வல்லுநரான இவரைப் போன்று வேறு எவரும் விரித்துரைத்ததில்லே. சரித்திர முறையாக இதனேச் சீர்தூக்கிப் பார்ப்பது வேறு விஷயமாம். கதையில் வரும் நம்பத்தகாத முறையில் துணிந்து கூறப்படும் ஒன்றன்பின் ஒன்ருய்த் தொடரும் மிகையுரைகள், வெளிப்படையான செய்தித் துணுக்குகள், கற்பனே மிகுந்த உட்கருத்துகள், அசரீரிகள், சொல்லமுடியாத திருவிளேயாடல்கள் ஆகியவற்றிலிருந்து நாம் உண்மை எது என்று ஆராய்ந்து அறியவேண்டும். இம் மிகையுரைகள் பெரும்பான்மை பின்வரும் நிகழ்ச்சிகளின் உண்மையான போக்கை

மாற்றி விடுகின்றன மேலும் இவை அத்தீனியருடன் பெரிதும் தொடர்புகொண்டு ஒருதலைப் பட்டனவாகவும் அவர்களது பண்புகளை ஒட்டியனவாகவும் காணப்படுகின்றன. ஹெரோடட்டஸ் தனது சரித்திரக் குறிப்புகளில் பெரும் பகுதியை அத்தீனியரிடமிருந்து மேற் கொண்டிருக்கக் கூடும்.

## 1. ஸெர்க்ஸீஸ் படைச் செலவும் அதற்கான முன்னேற்பாடுகளும்

பாரசீகத்தின் கிரேக்கப் படையெடுப்பின் முதற் படையெடுப் புக்கும் இரண்டாவது படையெடுப்புக்கும் இடையேயுள்ள பத்து ஆண்டுகளில் (கி.மு. 490 – 480) நடந்த முக்கிய நிகழ்ச்சி டேரியஸின் மரணமாகும். எதிர்பாராத வகையில் மாரத்தான் போரில் முறி யடிக்கப் பட்டபின் மீண்டும் படையெடுக்க வேண்டும் என்று அவன் முடிவு செய்தான். நான்கு ஆண்டுகளுக்குப் பின் எகிப்து மாகாணத்தில் ஏற்பட்ட கலகம் உடனடியாக அவனது கவனத்தைக் கவர்ந்தது. ஆனால் இக் கலகத்தை அடக்குமுன் டேரியஸ் மரணமடைந்ததால் இச் செயல் நீடித்து அவனுக்குப்பின் பட்டம் சூடிய அட்டோசாவின் மகனான ஸெர்க்ஸீஸ் மன்னனால் முடிவு பெற்றது. இதற்குப்பின் கிரீஸுக்கு எதிராகப் படையெடுத்து மாரத்தானில் இழந்த பாரசீக மக்களுக்காகப் பழிவாங்கிப் பாரசீகத்தின் படைச் சிறப்பை நிலை நாட்டுவதைப் பற்றிய கேள்வி பிறந்தது. ஸெர்க்ஸீஸ் இதைப்பற்றி ஒருவித தீர்மானத்திற்கும் வரவில்லை என்று கூறப்படுகிறது. ஆனால் உறவினனான மார்டோனியஸ் இச் செயலில் இறங்கும்படி பெரிதும் வற்புறுத்தியதாகத் தெரிகிறது. ஆனால் ஹெரோடட்டஸ் எழுதிய நூலின்மூலம் ஸெர்க்ஸீஸ் மன்னனது மாமனாகிய அனுபவம் மிகுந்து அறிவிற் சிறந்த அர்ட்டா பேனஸ் பின் நேரக்கூடிய இடையூறுகளை யும் தோல்வியையும் முன்னறிந்து அவனுக்கு அறிவுறுத்தியதாகத் தெரிகிறது. இவ் விருவரது முரணான அறிவுரைகளுக்குமிடையே ஸெர்க்ஸீஸ் இன்னது செய்வது என்று அறியாது அங்குமிங்குமாய் மனங்கலங்கி யிருக்கும்போது அவன் கண்ட ஒரு கனவை உற்பாத மாகக் கொண்டு மார்டோனியஸ் கூறிய மாற்றத்துக்கு மனமிசைந் தான். இவ்வாறு ஆர்ட்டோமேனஸ் கூறிய அறிவுரைகள் அக் கனவின் வலிமையால் மறைந்தன. இவ்வாறு ஹெரோடட்டஸ் சூசாவில் நடைபெற்ற ஆலோசனை மண்டபத்திற்கு மறைமுகமாக நம்மை அழைத்துச் செல்வது போன்ற ஒரு பாவனையை ஏற்படுத்தியுள்ளார். இத் தோற்றம் பின்வரும் செயல்களுக்கு முன்னறிவிப்பாகவும் அமை கின்றது. ஆனால் பயிற்சியற்றதும் மூடத்தனமானதுமான மார்டோனி யஸ்ஸின் அறிவுரைகள் ஹெரோடட்டஸ் வகுத்த முறைப்படி செயற்

படுத்தப் பட்டிருப்பினும் இது ஏற்கெனவே முதிர்ந்த அனுபவமுடைய டேரியஸ் மன்னனால் உருவாக்கப்பட்டுச் செயலாற்ற முன்வந்த நிகழ்ச்சியாம். எவ்வாறாயினும் மார்டோனியஸ், ஆர்ட்டபேனஸ் இவர்களது முரண்பாடான அறிவுரைகளும் தீய நோக்கத்துடன் தெய்வீகமாக ஏவப்பட்ட கனவும் வரலாற்றின் ஏடுகளில் இடம் பெறாவிடினும், படையெடுப்பின் நிகழ்ச்சித் தொடரை மிகவும் உணர்ச்சியைத் தூண்டும் முறையில் நமக்கு அறிமுகப் படுத்து கின்றன. மேலும் பாரசீக மன்னனின் சபைக்குச் சென்ற கிரேக்கர் களும் மன்னனை இச் செயலில் ஈடுபடுமாறு மிகத் தூண்டினர். தெசலி யைச் சார்ந்த அல்யூயட் (Aleuad) அரச குமாரர்கள் அனுப்பிய தூதுவர்கள், சோதிடனும் பிசிஸ்ட்ரேட்டர் (Pisistratid) குடும்பத்தின் அங்கத்தினர் ஆகியோரும் அவர்கள் அழைத்துச் சென்ற ஆனோமாக்கி ரட்டஸ் (Onomacritus) என்ற ஸெர்க்ஸீஸ் மன்னன் மனத்தில் பதியு மாறு அனுகூலமான அசரீரி வாக்குகளைக் கேட்கச் செய்தனர்.

படையெடுப்பில் கடல்வழியாகவும் தரைவழியாகவும் இருதரப் பாக இணைந்த தாக்குதல் இன்றியமையாதது என்பது தெளிவாயிற்று. ஏறக்குறைய ஒன்றரை மைல்கள் நீளத்தில் ஆதோஸ் மலையின் பூசந்தி யில் வாய்க்கால் வெட்டும் மிகக் கடினமான வேலையுடன் ஏற்பாடுகள் தொடங்கின. மார்டோனியஸ் த்ரேஸ், மாசிடோனியா ஆகிய இரு நாடுகளுக்கும் எதிராக மேற்கொண்ட படையெடுப்பின்போது அவர்களது கப்பற்படையின் பெரும்பகுதி மிகவும் ஆபத்தான தலை நிலத்தைச் சுற்றிவரும் நிலையில் மோதுண்டு சின்னபின்னமாகச் சிதறினது ஈண்டு நினைக்கற்பாலது. இவ்வாறு கப்பற்படை ஆதோஸ் முனைக்கு அருகில் செல்ல முற்பட்டது அவசியமான ஒரு செயலாகுமா? அவர்கள் ஏன் நேரடியாக ஈஜியன் கடல் வழியாக கிரேக்க நாட்டை அடைந்திருக்கக்கூடாது? அவர்கள் அவ்வாறு ஆதோஸ் மலையைக் குடைந்து செல்ல முயன்றது தங்கள் திறனைப்பற்றிப் பறைசாற்றவே அன்றி வேறொன்றுமில்லை என்று ஹெரோடட்டஸ் இக் கேள்விகளுக்கு விளக்கம் தருகிறார். ஆனால் இது ஆதாரமற்ற கூற்றாகும். இப் படை யெடுப்புகளில் பாரசீகத்தின் போர்முறைச் சூழ்ச்சிகளின் அடிப்படைக் கொள்கை யாதெனின், கடற்படையும் தரைப்படையும் ஒன்றை யொன்று ஒரு சிறிதும் விலகாது நின்று ஒரு முகமாகச் செயற்பட வேண்டும் என்பதே. டேரியஸ் மன்னன் திரேஸ் நாட்டிற்கு எதிராகவும், மார்டோனியஸ் மாசிடோனியாவை எதிர்த்தும், ஸெர்க்ஸீஸ் மன்னன் கிரேக்க நாட்டின்மீதும் எடுத்த படையெடுப் புகள் பாரசீகரின் போர் முறையின் சூழ்ச்சிக்கு எடுத்துக்காட்டாகும். எனவே ஆதோஸ் வாய்க்கால் வெட்டப்பட்ட நோக்கம் யாதெனின், திரேஸ் கடற்கரை யோரமாகக் கப்பல்கள் ஆபத்துக்குள்ளாகாமல் தரைப்படையுடன் சேர்ந்து செல்வதற்காகவேயாம். பிற்கால எழுத்

தாளர்கள், கால்வாய் வெட்டும் தொழில் முடிவுபெற்று அதனைப் பயன்படுத்தவும் செய்தனர் என்பதை உறுதிப்படுத்தினர். இந்த வேலை முடிந்தவுடன் படைகள் கடந்து செல்வதற்காக ஸ்ட்ரைமான் (Strymon) நதிமீது பாலம் கட்டப்பட்டு அதன் வழியாக மிகப் பெரிய படைகளுக்கு உணவு அனுப்புவதற்கான ஏற்பாடுகள் அப் பாதை முழுவதும் செய்யப்பட்டன.

இலையுதிர்காலத்தில் ஸெர்க்ஸீஸ் மன்னன் சூசாவிலிருந்து சார்டிசுக்கு (Sardis) வந்தான். அவன் தன் படையின் கிழக்குப் பிரிவு களைக் கப்படோசியா (Cappadocia)விலுள்ள கிரிட்டில்லாவில் (Critalla) சந்தித்தான். செலேனே (Celaenae) என்னுமிடத்தில் அவனது பேரரசில் மிகச் செல்வனாக விளங்கிய பிதியஸ் என்பவன் தன் சொந்த பணத்தைக்கொண்டு ஸெர்க்ஸீசுக்கும் அவனது படைகளுக்கும் விருந் தளித்தாகக் கூறப்படுகிறது. பிதியஸின் செல்வம் அனைத்தும் ஏழா யிரம் குறைய நான்கு மில்லியன் தங்க டேரிக் (daric) நாணயங்கள். அந்த ஏழாயிரம் தங்க நாணயங்களையும் ஸெர்க்ஸீஸ் அவனுக்குக் கொடுத்துக் குறைவை நிறைவாக்கினான். குளிர்காலம் முழுவதும் அங்கே தங்கினான். மன்னனது மனங்குளிர்ந்த இச் செயலைக் கண்ட பிதியஸ் உளமிக மகிழ்ந்தான். வசந்த காலம் தோன்றிய காலை மன்னன் கிரேக்க நாட்டை நோக்கிப் புறப்படும்போது பிதியஸ் துணிந்து படையிலிருக்கும் தன் மக்கள் அறுவருள் முதல்வனைத் தன் னுடன் வைத்துக்கொள்ள அனுமதி கேட்டான். சீற்றம் மிகுந்த ஸெர்க்ஸீஸ் ஓர் 'அடிமை' இவ்வாறு துணிந்து கேட்டதை அவமதிப் பாகக் கருதினான். மூத்த மகனின் உடல் இரு கூறாகத் துணிக்கப் பட்டது. சார்டிஸ் நகரவாயிலின் இருமருங்கும் துணிக்கப்பட்ட பகுதிகள் வைக்கப்பட்டன. இவற்றைக் கடந்துதான் படைகள் அணி வகுத்துச் செல்லவேண்டும். தனிமனிதன் போர்ச்சேவையில் ஈடுபடு வதில் கையாளப்படும் கொடுமையை இக் கதைத் துணுக்கு விளக்கிக் காட்டுகிறது.

படை முழுவதும் மன்னனுடன் சார்டிஸ் நகரில் தங்கியிருந்தது என்னும் கூற்று நம்பக்கூடாத ஒன்றாம். பினீஷிய, எகிப்தியப் பொறி யியல் வல்லுநரால் செஸ்டாஸ் (Sestos), அபிடாஸ் (Abydos) என்ற இரு நகரங்களுக்கு அருகில் ஹெலஸ்பாண்ட் ஜலசந்தியின்மீது இரு பாலங்கள் கட்டப்பட்டன. இந்த இடத்தில் படைகள் கூடியிருக்கலாம் என்று கூறினால் பொருந்தும். இப் பாலங்கள் உறுதியாகக் கட்டப் படாமையால் புயற்காற்றில் அழிந்துபோயின. இப் பெருங்கேட்டை அறிந்த ஸெர்க்ஸீஸ் வெகுண்டெழுந்தான். பாலங்கட்டிய பொறி யியல் வல்லுநரைச் சிரச்சேதம் செய்ததுமன்றி ஹெலஸ்பாண்டை 300 முறை அடிக்குமாறும் கட்டளையிட்டான். இப் புதுமையான கட்ட

ளையை மேற்கொண்டவர்கள் தண்ணீரை அடிக்கும்போது 'ஏ கொடிய கசப்பான கடலே, உனக்கு ஒரு தீங்கும் செய்யாத எங்கள் ஆண்டவனுக்கு நீ திங்கிழைத்ததால் அவர் உனக்கு இந்த தண்டனையைக் கொடுக்கிறார். உனக்கு விருப்பமிருந்தாலும், இல்லாவிட்டாலும் மன்னர் ஸெர்க்ஸீஸ் உன்னைக் கடந்தே தீருவார். ராஜத்துரோகியும் உப்புக்கடலுமாகிய உனக்கு ஒருவனும் பலிகள் செலுத்தாதிருப்பது பொருத்தமான நீதியே' என்று வசைமொழிகள் கூறினர். ஹெரோடட்டஸ் இவர்கள் இவ்வாறு கூறியது 'கிரேக்கத் தன்மையற்றதும் தெய்வத்துக்கு அடாத செயலுமாகும்' என்று இடித்துரைக்கின்றார். பாலங்களை மீண்டும் அமைப்பதற்காகப் புதிய பொறியியல் வல்லுநர்கள் நியமிக்கப்பட்டனர். இடைகழியின் குறுக்காக நாவாய்கள் முன்னும் பின்னும் நங்கூரம் பாய்ச்சப்பட்டு இரு அணிகளாக நிறுத்தப்பட்டன. ப்ரோபாண்டிஸ் கடலுக்கருகில் நிறுத்தப்பட்ட நாவாய்கள் முந்நூற்று அறுபதும் அதற்கடுத்த அணியில் முந்நூற்றுப் பதினான்கு நாவாய்களுமாம். இப் போர்க்கப்பல்களில் மூன்றடுக்குத் துருப்புகளைக் கொண்டு தண்டு வலிப்பனவும் (triremes) ஐம்பது துருப்புகளைக் கொண்டு தண்டு வலிப்பனவுமாகப் (penteconters) பெரியதும் சிறியதுமாகக் கலந்திருந்தன. இந் நாவாய்களின் அணிகள் ஒவ்வொன்றுக்கும் மேலாக இரு சணற்கயிறுகளும் நான்கு பாப்பிரஸ் கயிறுகளைக் கொண்டனவுமான ஆறு பெரிய வடங்கள் இழுத்துக் கட்டப்பட்டன. வடங்களுக்கடியில் நாவாய்களுக்கு இடையே மூன்று இடைவெளிகள் அமைக்கப்பட்டன. இந்த இடைவெளிகளின் வழியாகக் கருங்கடலுக்கும் ஈஜியன் கடலுக்கும் இடையே செல்லும் சிறிய வாணிக நாவாய்கள் தங்கு தடையின்றிச் செல்வதற்கு ஏதுவாக இருந்தது. வடங்கலின் குறுக்காகப் பலகைகள் வைத்து அவற்றின்மீது மீண்டும் வடங்களைக்கொண்டு வரிந்துகட்டினர். இந்தப் பலகைகளின் உறுதியான தளத்தின்மீது பலகையும் மண்ணும் கொண்டு பாதையைச் சமைத்தனர். பாதையில் செல்லும்போது குதிரை முதலியன தண்ணீரைப் பார்க்காதபடி இருமருங்கும் உயர்ந்த சுவர்கள் எழுப்பப்பட்டன. கடற்கரையில் அமைக்கப்பட்ட உயரமானதொரு அரியணையில் ஸெர்க்ஸீஸ் மன்னன் வீற்றிருந்த வண்ணமாய்த் தன் படைகள் யாவும் இப் பாலத்தைக் கடந்து செல்வதைப் பார்வையிட்டான். அவை கதிரவன் கீழ்த்திசையில் தோன்றிய கணத்திலிருந்து கடக்கத்தொடங்கின. அடித்து விரட்டப்பட்ட படை பாலத்தைக் கடந்து மறுபுறம் சேர இரண்டு நாட்களாயின. அவர்கள் அணிவகுத்துச் சென்ற முறையைக் கண்முன் தோன்றும் காட்சிபோல் வர்ணிக்கின்றார். ஒட்டேன்ஸ் (Ottanes) தலைமையில் அணிவகுத்துச் சென்ற பாரசீகப் படையினர் போர்ச் சின்னமுள்ள கவசமணிந்து கால்சட்டைகள் தரித்திருந்தனர். அவர்கள் பிரம்பினாலான கேடயந் தாங்கி, பெரிய வில்லையும் குட்டையான குத்தீட்டிகளை

யும் வைத்திருந்தனர். மீதியர்கள் (Medes), சிசியர்கள் (Cissians) ஹிர்கேனியர்கள் (Hyrcanians) ஆகியோரும் பாரசீகரைப்போலவே உடையணிந்து சென்றனர். அதற்குப்பின் அசீரியர்கள் (Assyrians) பித்தளையாலான தலைக் கவசமும் நாரால் செய்த உடற் கவசமும் (linen cuirasses) அணிந்து குண்டாந்தடிகள், ஈட்டிகள், குறுகிய வாள்கள் இவற்றை ஆயுதங்களாகக் கொண்டனர். பாக்டீரியர்கள் (Bactrians) பிரம்பினாலான வில்லை ஏந்திச் சென்றனர். கால்சட்டை யணிந்த சாக்கியர்கள் (Sacae) கூரான தொப்பியணிந்து கோடாரி களைத் தாங்கிச் சென்றனர். இந்தியர்கள் பருத்தியுடை யணிந்து சென்றனர். காஸ்பியர்கள் (Caspians) ஆட்டுத் தோலுடை யணிந் தனர். சாரங்கியர் (Sarangians) சாயமேற்றிய உடைகளும் முழங் கால்வரை உயர்ந்த ஜோடுகளு மணிந்திருந்தனர். எத்தியோப்பியர் (Ethiopians) வேங்கை அல்லது சிங்கத்தோலுடையுடன் கல்முனை கொண்ட பிற்காலத்தில் பாரசீகப் படையின் எண்ணிக்கை மிகைப் படுத்தி நம்பமுடியாத வகையில் ஐந்து மில்லியன் என்று கூறப்பட் டது. அதன்படியே சிறிதும் தயக்கமின்றி அவர்களுக்கு மிகவும் விருப்பமான எண்ணிக்கையில் கதை புனைந்து படை கடத்தலுக்கு ஏழு பகலும் ஏழு இரவுமாயின என்று கூறினர்.

திரேசிலுள்ள டாரிஸ்கஸ் (Doriscus) என்னுமிடத்தில் தரைப் படையும் நாவாய்ப்படையும் ஒன்று சேர்ந்தன. இதுமுதல் இவ்விரு படைகளும் இணைந்தே செயலில் இறங்கவேண்டும். டாரிஸ்கஸ் சம வெளியில் ஸெர்க்ஸீஸ் மன்னன் தன் படைத்தொகுதிகளை எண்ணிக்கை யிட்டான். ஆசியாவிலிருந்து ஸெர்க்ஸீஸ் தலைமையில் கிரேக்க நாட்டுக்கு எதிராக அணிவகுத்துச் செல்லாத நாடு யாதுளது? என்று ஹெரோடட்டஸ் தமது வரலாற்றில் கேட்கிறார். மேலும் அவர் நாற்பத்தாறு நாட்டினர் என்ற எண்ணிக்கையுடன் கூறுவதுமன்றி அம்புகளுடன் சென்ற காட்சி நாகரிகத்திற்கு முற்பட்ட காலத்தை நமக்கு நினைவூட்டுகிறது. சகார்ஷயர் (Sagartians) உடைவாளும் கயிற்றுக் கண்ணிகளும் கொண்டு சென்றனர். திரேஷியர் (Thracians) நரித்தோலால் செய்த குல்லாக்களை அணிந்திருந்தனர். கோல்சியர்கள் (Colchians) பசுத்தோலால் செய்த கேடயம் தாங்கிச் சென்றனர். பொனிஷியர் (Phoenicians) எகிப்தியர், சிப்பிரியர்கள் (Cypriotes), சிலிசியர் (Cilicians), பம்பிலியர் (Pamphylians), லிசியர் (Lycians), கேரியர் (Carians), பாரசீக ஆட்சிக்குட்பட்ட கிரேக்கர் ஆகிய அனைவர் பங்கை யும் கொண்டிருந்தது அவர்களது நாவாய்ப்படை. இப் படை 1207 போர்க்கப்பல்களையும் 3000 சிறிய நாவாய்களையும் கொண்டிருந்தது என்று கூறப்படுகிறது. படைகளை எண்ணிக்கையிட்டது பற்றி வேடிக்கையான கதையொன்று உளது. பத்தாயிரம் ஆட்களை மிகவும் சிறிய இடத்தில் கூட்டி அவர்களைச் சுற்றி ஒரு கோடுவரையப்பட்டது.

அக் கோட்டின்மேல் ஒரு மதிற்சுவரை எழுப்பினர். காலாட்படை முழுவதும் மாறிமாறி இவ்வடைப்பினுள் செலுத்தப்பட்டனர். இவ் வாறு இந்த அடைப்பு 170 முறை நிரப்பப்பட்டது. எனவே காலாட் பகுதியின் கூட்டுத் தொகை 1,700,000 என்று கூறப்படுகின்றது. குதிரைப்படையின் எண்ணிக்கை 80,000 எனப்படுகின்றது. இவை தவிர எண்ணிக்கையில் சேராத மற்றச் சில படைகளுமிருந்தன. இவற்றுடன் கப்பலாட்கள் தொகுதியையும் சேர்க்கவேண்டும். பெரிய கப்பலினங்கள் ஒவ்வொன்றிலும் 200 ஆட்களும், சிறிய கப்பல்கள் ஒவ்வொன்றிலும் 80 ஆட்களுமாவர். எனவே படையாட்களின் மொத்த எண் 2,317,000. இம் மாபெரும் படை அணிவகுத்துச் செல்லும் வழியில் திரேஸ், மாசிடோனியா முதலிய நாடுகளிலிருந்து புதிதாக அனுப்பப்பட்ட துணைப்படைகளும் சேர்ந்து கொண்டன. இன்னும் படையாட்களல்லாத ஏவலாளர்கள், மதுவிற்போர் (Sutlers), பாசறைப் பணியாட்கள் (camp-followers) ஆகியோரின் எண்ணிக்கை படையாட்களின் எண்ணிக்கைக்கு ஈடாகும் என்று ஹெரோடட்டஸ் கூறுகிறுர். படையுடன் சென்ற காமக் கிழத்தியரை யும் அலிகளையும் சேர்த்தால் மாபெரும் படையின் கூட்டுத் தொகை 5,000,000க்கு மேற்பட்டது என்று கூறப்படுகின்றது.

இந்த எண்ணிக்கைகள் யாவும் கட்டுக் கதைகள் என்பது கண் கூடு. ஹெரோடட்டஸ் போர்ப்படையின் தொகையைக் குறிக்கும் எண்கள் யாவும் உண்மையானவை அல்ல. இன்னும் படையுடன் சென்ற பெருந்திரளின் எண்ணிக்கை படையாட்களின் எண்ணிக்கை யின் இரட்டிப்பாகும் என்று கூறுவதும் நம்ப முடியாதது. இறத்த வில்லாத வீரர்கள் என்றழைக்கப்பட்ட தெரிந்தெடுக்கப்பட்ட 10,000 படைவீரர் பகுதி தங்கள் மனைவிகளுடனும் மூட்டை முடிச்சுகளுடனும் பல வசதிகளுடனும் போருக்குச் செல்லும் வாய்ப்பைப் பெற்றனர். ஆனுல் படைவீரரின் கூட்டம் அனைத்தும் பணியாளர்கள் புடைசூழச் சென்றனர் என்று கூறுவதற்கு இடமில்லை. காலாட்படையின் கூட்டுத் தொகை 300,000 என்று கூறலாமே யொழிய எவ்விதத்திலும் இதற்கு மேற்பட்டது என்று கூற வகையேதுமில்லை. மிகவும் சிறியதும் மலை சார்ந்ததுமான நாட்டில் இதைவிடப் பெரியதொரு படையைக் கொண்டு செலுத்துவது என்பது முடியாததொரு செயலாம். மேலும் இந்த 300,000 பேர் கொண்ட படைக்கு உணவளித்துப் பராமரிப்பதே அருந்திறற் செயலாகும். அப்படியே கப்பற்படையின் எண்ணிக்கையை யும் மூன்று தள வரிசை கொண்ட (triremes) சுமார் 800 நாவாய்கள் என்று குறைத்துச் சொல்வது மிகையாகாது.

ஸெர்க்ஸீஸ் டாரிஸ்கசிலிருந்து புறப்பட்டுக் கற்பனைக்கெட்டாத மாபெரும் படையுடன் தெர்மாவை (Therma) நோக்கிச் சென்முன்.

போகும் வழியில் குடி தண்ணீருக்கான ஆறுகளெல்லாம் வற்றிக் கிடந்தன. ஸ்ட்ரைமானைக் கடக்கும் இடத்தில் 'ஒன்பது சாலைகள்' (Nine Roads) என்ற நகருக்கருகில் பாரசீக நாட்டைச் சேர்ந்த ஒன்பது வாலிபர்களையும், ஒன்பது இளம் பெண்களையும் பலி கொடுத்தான். தெர்மாவில் ஸெர்க்ஸீஸின் காலாட்படையுடன் இதுவரை தனித்து சிதோனியாவையும் பாலீனையும் சுற்றிவந்த கடற்படையும் இணைந்தது.

ஸெர்க்ஸீஸ் மன்னன் போருக்கு அணிவகுத்துச் சென்ற கதையைக் கூறுமிடத்து ஹெரோடட்டஸ் எடுத்தியம்பும் அநேக நிகழ்ச்சிகள் கிரேக்கர்களுக்கும் மூர்க்கரான பாரசீகருக்கும் இடையே நிகழ்ந்த போரைப்பற்றி ஆசிரியரது பொதுவான கருத்துகளை விளக்கும் முறையில் அமைந்த உள்ளத்துக்குகந்த கதைகளாம். பிதியஸுக்கு ஸெர்க்ஸீஸ் இழைத்த கொடுமையும், பக்தியின்றிக் காட்டுத்தனமாக ஹெல்லஸ்பாண்ட் கடலை அடிக்கும்படிக் கட்டளையிட்டதும், அவனது கொடுங்கோலாட்சியையும் மூர்க்கப் பண்பையும் விளக்கும் முறையில் பயன்படுத்தப்பட்டுள்ளன. ஐரோப்பாவைப் படைவெள்ளமாக்க நீர்ச்சந்திகளின் வழியாகப் புறப்பட்டுத் திரண்டு வந்த படையின் பெருந்திரளை மிகைப்படுத்திக் கூறுமுகத்தால் கிரேக்க நாட்டின் பெருமையும் அதற்கு ஏற்பட்ட இடரின் தன்மையும் விளக்கப்பெறும். பாரசீகப் பெரும்படைக்கு ஏற்படும் தோல்விக்கு முன்னறிகுறியாக ஸெர்க்ஸீஸ் சார்டீசிலிருந்து புறப்பட்டவுடன் கதிரவன் இருளடைந்தான் என்று ஹெரோடட்டஸ் கூறியுள்ளார். இக் கிரகணம் உண்மையில் இரண்டு ஆண்டுகளுக்குப் பின்னரே திகழ்ந்தது. முக்கியமான நிகழ்ச்சியின் சிறப்பை வற்புறுத்திக் காட்டுமாறு கிரகணத்தின் நாளை முன் கூட்டிக் கூறும் முறையைக் கையாண்டார்.

## 2. கிரேக்கரது ஆயத்த முறைகள்

ஸெர்க்ஸீஸ் மன்னன் படை திரட்டும் செய்தியை அறிந்து கிரேக்கர்கள் தாங்களும் அதற்கு எதிராக ஆவன செய்ய முற்பட்டனர். ஆதோஸ் வாய்க்காலை வெட்டியது கிரேக்கர்களுக்கு முன்னறிவிப்பாயிற்று. மன்னன் சார்டிஸ் நகரத்துக்கு வருகிறான் என்பதைக் கொண்டு ஆபத்து மிகவும் அண்மையில் உள்ளது என்பதையும் அறிந்து கொண்டனர். ஆதென்ஸ், ஸ்பார்ட்டா ஆகிய இரு நகர அரசுகள் நீங்கலாக ஏனைய அரசுகளுக்கெல்லாம் ஸெர்க்ஸீஸ் தூதுவரை அனுப்பி மண்ணும் நீரும் கேட்டான். இவ்விரண்டு அரசுகளும் எதிரியின் படையெடுப்பைத் தாக்குவதில் ஒன்று சேர்ந்தன. எனவே கிரேக்க நாட்டை இக்கட்டினின்று காப்பதற்கு இவ்விரண்டும் தலைமை

தாங்கும் நிலை தானுகவே அமைந்தது. நாம் இதற்குமுன் அறிந்தபடி ஸ்பார்ட்டா யாவராலும் மதிக்கப்பெறும் தலைமையைப் பெற்றிருந்தது. ஆதென்ஸ் மாரத்தானில் மேதியரை எதிர்த்து வெற்றி கண்டு புகழ் பெற்றது. இவ்விரண்டு அரசுகளும் சேர்ந்து நிகழவிருக்கும் படையெடுப்பை எதிர்ப்பதற்காக முறைகளைக் கலந்து பேச பூசந்தியில் கிரேக்க மகாநாடு ஒன்றைக் கூட்டின. ஏற்கெனவே கிரேக்க நாட்டில் அகில கிரேக்க உணர்ச்சி உண்டு என்பதை நாம் முன்பே அறிவோம். ஆனுல் இந்த மகாநாட்டில் ஆழ்ந்த அகில கிரேக்கப் பற்றுணர்ச்சியின் கொள்கைகளைக் காணலாம். இது கிரேக்க உலகத்தில் சிதறிக்கிடக்கும் நகரங்களை ஒன்று கூட்டி பாரசீகத்தின் வல்லரசை எதிர்ப்பதற்காக மேற்கொண்ட அரியதொரு முயற்சியாம். கிரேக்க நாட்டில் இது வரை கண்டிராத புதிய நிகழ்ச்சியாக• இம் மகாநாட்டின் முதற் கட்டமும் கருத்துகளும் அமைந்தன.

ஸ்பார்ட்டா மேற்கொண்ட கிரேக்க நாட்டின் தலைமைச் சார்பாகப் பெருகிக்கொண்டு வரும் கடமைகளும் தொழில்களும் இதுவரை ஸ்பார்ட்டாவின் பொறுப்பாக இருந்தது. இப்போது இப் பொறுப்பு ஸ்பார்ட்டா தாங்க முடியாத அளவில் பெருகிற்று. அநேக நகரங்கள் மகாநாட்டுக்குப் பிரதிநிதிகளை அனுப்பின. இம் மகாநாடு சினேட்ரியான் ஆஃப் ப்ரோபூலே, (Synedrion of Probuloi) அதாவது பிரதிநிதிகளின் மகாநாடு என்று அழைக்கப்பட்டது. ஏனைய இடங்களுக்கு மையமாக அமைந்துள்ள பூசந்தியில் ஸ்பார்ட்டாவின் தலைமையில் மகாநாடு கூடிற்று. முப்பத்தொரு நாடுகளின் பிரதிநிதிகள் இதில் கலந்து கொண்டனர். இவர்கள் எல்லாரும் ஒருமையுணர்ச்சியால் ஒழுங்கு முறைப்படி கூட்டிணைப்பு நாடுகளாகச் சேர்ந்து ஆழ்ந்த பற்றுடன் 'வற்புறுத்தாமல் மூர்க்கப் பகைவனுக்கு அடிபணிந்த யாவரையும் பத்தில் ஒரு பங்கு கொடுக்கச் செய்வோம்' என்று ஆணையிட்டனர். இப் பத்தில் ஒரு பங்கு டெல்ஃபிக் தெய்வத்திற்குச் சேர வேண்டியது. செய்ந்நன்றி கொன்ற நாட்டுப் பகைவரை இவ்வாறு அழிப்போம் என்று அவர்கள் நேர்ந்து கொள்ளும் முறையாகும் இது. தெசலியர்கள், பியோஷியாவிலுள்ள நகரங்களில் பெரும்பான்மையானவை, இன்னும் வட கிரேக்கிலுள்ள சிறுதிற மக்களும் லாக்ரியர் (Locrians), மேலியர் (Malians) அக்கியர், டால்ஃபியர் (Dolophians) ஆகியோரும் இன்னும் சிலரும் இந்த மகாநாட்டில் கலந்து கொள்ளவில்லை. இவர்கள் இவ்வாறு செயலில் இறங்காமல் இருந்ததால் இவர்கள் உள்நாட்டுப் பகைவர்களாகிவிடத் தீர்மானம் செய்தார்கள் என்று கூறிவிட முடியாது. இவர்கள் நிகழ்ச்சிகளின் போக்கு எவ்வாறு செல்லும்என்று அறிவது பற்றியும் தங்கள் இருப்பிடத்தின் அமைப்பைக் கொண்டு தங்கள் இயற்கையான உரிமை உணர்ச்சியை மேற்கொள்ளுவதன் நேர்மை பற்றியும் கவனித்துக் கொண்டிருந்தனர்.

பாரசீகரின் முதல் தாக்குதல் வடக்கு அரசுகளின் மீதுதான் நிகழும்; அதனால் அவர்கள் தனித்து நின்று எதிரியை எதிர்ப்பது முடியாதகாரிய மாகும். இவர்கள் ஸ்பார்ட்டாவையும் கிரேக்கக் கூட்டிணைப்பு நாடு களையும் முற்றிலும் நம்பி அவர்களது துணைகொண்டுதான் தெசலியின் வட எல்லையைப் பாதுகாத்துக்கொள்ளமுடியும். இல்லாவிட்டால்பகை வனுக்கு அடிபணிய வேண்டியதுதான். இந்த நெருக்கடியான நிலையில் அவர்கள் வெளிப்படையாகக் கூட்டிணைப்பு நாடுகளுடன் சேர்ந்து ஒப்பந்தம் செய்து கொள்வது ஆராயாமல் செய்த செயலாக முடியும். அவர்கள் கூட்டிணைப்பு நாடுகளுடன் சேர்ந்து தங்கள் வலிமை அனைத்தையும் வடகிரேக்கப் பகுதியைப் பாதுகாப்பதற்காக ஈடு படுத்தியிருந்தால் அவர்கள் மிகவும் பரிதாபமாக ஏமாந்திருப்பார்கள் என்பது பின்வரும் நிகழ்ச்சிகளால் மெய்ப்பிக்கப்படும். நாம் காணு மளவில் அவர்கள் படைபலம் மிக்க அரசுகளிடமிருந்து பக்கபலம் கிடைக்கும் நம்பிக்கையுள்ளவரை எதிர்த்து நிற்க ஆயத்தமாக இருந் தனர். சில பிரிவினரும், வகுப்பாரும் குறிப்பாக தெசலியைச் சேர்ந்த சிறு குழு ஆட்சியாளரான தீப்ஸீம் (Thebes) அலூடேயும் (Aleuadae) பாரசீகரைச் சேர்ந்துகொள்ள விருப்பமுள்ளவர்களாயிருந்தனர்.

இவ்வாறு கூட்டுச் செயலில் இறங்குவதற்குத் தடையாக இருந்த வற்றுள் உள்நாட்டு வேறுபாடு முக்கியமான தொன்றாகும். தெச லிக்கும் ஃபோசிசுக்கும் (Phocis), ஆர்காசுக்கும், லாசிடெமானுக்கும் (Lacedaemon) ஆதென்சுக்கும் ஈகைனாவுக்கும் (Aegina) முறையே கலக உணர்ச்சி இருந்துவந்தது. இத்தகைய வேறுபாடுகளை நீக்கி ஒற்றுமை நிலைநாட்டுவதில் மாநாடு முயன்று ஆதென்சையும் ஈகைனா வையும் பகைமையை மறந்து கிரேக்க உரிமைக்காக எதிரியை எதிர்க்க ஒன்று கூட்டியது. மற்றுமொரு முக்கியமான கேள்வி யாதென்றால், கூட்டிணைப்பு நாடுகளின் படையில் யார் தலைமை தாங்குவது என்பது. தரைப்படையின் தலைமையை ஸ்பார்ட்டா மேற்கொள்ளுவது என் பது தடையில்லாமல் ஒப்புக்கொள்ளப்பட்டது. ஆனால் கடற்படை யைப்பற்றி அவ்வாறு கூறுவதற்கில்லை. ஸ்பார்ட்டா கடல்வலிமை பெற்ற நாடன்று. ஏனைய அரசுகளைக் காட்டிலும் ஏராளமான கப்பல்கள் ஆதென்ஸ் கப்பற்படைக்கு கொடுக்கக்கூடியதால் ஆதென்ஸ் தலைமையைத் தாங்க ஏற்ற உரிமையுண்டு. மற்ற அரசுகள் ஆதென்ஸ்மீது பொறாமைகொண்டு தாங்கள் ஸ்பார்ட்டாவின் தலைமை யில்தான் இருக்கமுடியும் என்று கூறிவிட்டனர். நேச அரசுகளின் இத்தகைய உணர்ச்சிகளைக் கண்ட ஆதென்ஸ் பிரதிநிதிகள் இதற்கு உடனடியாக ஒப்புக்கொண்டனர்.

மகாநாடு இன்னும் சில முறைகளைக் கையாண்டது. சிறிய ஆசியாவில் (Asia Minor) ஸெர்க்ஸீஸ் செய்துவரும் ஆயத்தங்களை

உளவறிந்து வருமாறு ஒற்றர்களை ஏவினர். கிரேக்க நாட்டிலுள்ள ஏனைய அரசுகள் தோறும் தூதுவர் அனுப்பப்பட்டுக் கூட்டிணைப்பு நாடுகளுடன் புதிய அரசுகளையும் சேர்த்தனர். பூசந்திக்குப் பிரதிநிதி நிதிகளை அனுப்பாது ஆர்காசை (Argos) தம் பக்கம் சேர்க்கவும், கிரீட் (Crete), கார்சிரா (Corcyra), சைரக்யூஸ் (Syracuse) ஆகிய நாடுகளிடமிருந்து பல உதவிகள் தருமாறு வாக்குறுதி பெறவும் தூது வர்கள் அனுப்பப்பட்டனர். ஆனால் இத் தூதுவர்கள் சென்றதால் பயன் ஒன்றும் கிட்டவில்லை. சைரக்யூசின் கொடுங்கோல் மன்னனான கிலான் (Gelon) தான் கார்த்தஜினியரை எதிர்த்துப் போராடும் திட்டத்தில் முனைந்திருந்தான். அதனால் அவன் விரும்பினாலும்கூட தாய்நாட்டிற்கு ஒருவித உதவியும் செய்யமுடியாத நிலைமையி லிருந் தான்.

இவ்வாறு கிரேக்க நாட்டைப் பாதுகாப்பதற்காக ஆயத்தங்கள் செய்யப்பட்டுப் படைத்தலைவர்களைத் தேர்ந்தெடுத்தனர். பிரதிநிதி நாடுகளின் மகாநாடு மீண்டும் வசந்த காலத்தில் கூடியது. இதில் எவ்வாறு செயல்களை மேற்கொள்ளுவது என்பது படைத்தலைவர் களின் மகாநாட்டுக்கு ஒப்படைக்கப்பட்டது. இவர்கள் அவ்வப் போது கூடி ஒவ்வொரு செயலையும்பற்றி ஸ்பார்ட்டாவின் படைத் தலைவர்களின் தலைமையில் முடிவு செய்தனர். லீயோனிடாஸ் அரசன் (King Leonidas) கூட்டிணைப்புத் தரைப்படையின் தலைவனானான். இரு அரச குடும்பங்களுக்கும் தொடர்பு இல்லாதவனான யூரிபியாடஸ் (Eurybiadas) கூட்டிணைப்புக் கப்பற்படையின் தலைவனாக நியமிக்கப் பட்டான்.

கிரேக்கர்கள் தங்கள் எதிர்ப்புத் திட்டங்களைப் பலப்படுத்துவ தற்கும் புதிய கப்பல்கள் கட்டுவதற்கும் மற்றும் பல ஆயத்தங்கள் செய்வதற்கும் அவர்களுக்கு வேண்டிய காலம் இருந்தது. ஏனைய நகரங் களைவிட ஆதென்ஸ் நகரம் மிகத் தீவிரமாக இச் செயலில் முனைந் திறங்கியது. ஆதென்ஸ் நகரத்தின் வரலாற்றில் மிகவும் உணர்ச்சி மிக்க நிலையான வேளை வந்துள்ளது என்னும் உண்மையை உணர்ந்து அதனை முற்றும் அறிந்துகொண்ட முறையில் அறிவுள்ள செயல் ஒன் றில் ஈடுபட்டதைக் காணலாம். ஆஸ்ட்ரஸிஸ் வாக்கெடுக்கும் முறைப் படி கடந்த பத்து ஆண்டுகளுக்குள் நாடு கடத்தப்பட்ட புகழ்பெற்ற குடிகளை ஆதென்ஸ் திருப்பி அழைத்தது. அரிஸ்டைடிஸ்ஸும், ஸாந் திப்பஸ்ஸும் நாடு மீண்டனர். நாட்டிற்கு ஏற்பட்டுள்ள கொடிய ஆபத்தான வேளையில் இவர்களுக்கும் தெமிஸ்டோகிளிஸ்க்கும் இடையேயுள்ள பகை மறைந்தது. நகரமானது அவர்களுடைய நாட் டுப் பற்றில் தன்னுடைய நம்பிக்கையைக் காட்டும் முறையில் அவர் களைப் படைத்தலைவர்களாகத் தேர்ந்தெடுத்ததாகத் தோன்றுகிறது.

இத் தலைவர்கள் ஒவ்வொருவரும் வருங்காலப் போரில் தத்தம் பங்கை நிறைவேற்றுவார்கள்.

## 3. தெர்மோபைலீயிலும், ஆர்டிமிஸியத்திலும் நடந்த போர்கள்

ஸெர்க்ஸீஸ் ஹெலஸ்ப்பாண்டை அடைந்த சமயத்தில், படையெடுத்து வரும் பகைவர்களுக்கு விரோதமாக டெம்பி (Tempe) கணவாய் கட்டாயமாகப் பாதுகாக்கப்படவேண்டு மென்று தெசலியர்கள் கூட்டு இணைப்பு நாடுகளுக்கு ஒரு தகவல் அனுப்பினர். அதுபோலவே 10000 ஹாப்லிட்டர்கள் அனுப்பப்பட்டனர். ஆனால் இவர்கள் அங்குச் சேர்ந்தவுடன் மாசிடோனியாவிற்கும் தெசலிக்குமிடையில் வேறு கணவாய்கள் இருப்பதைக் கண்ணுற்றனர். இவைகள் டெம்பியை விடப் பாரசீகர்களுக்கு அதிக உதவியாயிருக்கும் என்றும் அவர்கள் இவைகளின் வழியாகத்தான் பெரும்பாலும் வருவார்கள் என்றும் அறிந்தனர். டிடாரிஸியஸ் (Titaresius) நதியின் பள்ளத்தாக்கிற்கு மேல் புறத்தில் வாலுஸ்டானு (Volustana), பெட்ரா (Petra) என்ற இரண்டு கணவாய்கள் இருந்தன. இவைகளில் ஒன்றின் வழியாகவேதான் ஸெர்க்ஸீஸ் அணிவகுத்துச் சென்றான். இந்த மூன்று கணவாய்களையும் பாதுகாக்கப் பத்தாயிரம் ஹாப்லிட்டர்கள் போதாது. டெம்பியின் பக்கத்தில் பாளையமிறங்குவது பயனில்லாததும் மிகவும் ஆபத்தானதுமாகத் தோன்றியது. ஆகையால் டெம்பியைப் பாதுகாப்பதை விட்டுவிட்டு, படைகள் தெசலியிலிருந்து வெளியேறின. இவ்விதமாகக் கைவிடப்பட்டதால் டெம்பிக்கும் தெர்மோபைலீக்கும் இடையிலுள்ள வடக்குக் கிரேக்கர்கள் ஸெர்க்ஸீஸ்க்குப் பிடி மண்ணையும் தண்ணீரையும் கொடுத்து, தமது சரணடைதலைத் தெரிவித்துக்கொள்ளக் கட்டாயப் படுத்தப்பட்டனர்.

டரக்கிஸ் (Trachis) ஸை லோக்ரிஸ்ஸிலிருந்து பிரிக்கின்ற மலைக்கும் கடலுக்கும் இடையிலுள்ள குறுகிய தெர்மோபைலீ கணவாய்தான் அடுத்தபடியாகப் பாதுகாக்கப்படக்கூடிய இடமாக அமைந்திருந்தது. ஈட்டா மலைக்குத் தெற்கேயுள்ள எல்லாக் கிழக்கு கிரீஸ் நாடுகளுக்கும் இதுவே வாயிலாக இருந்தது. அந்தக் காலத்தில் இந்தக் கணவாயின் கிழக்கு, மேற்கு எல்லைகள் மிகவும் குறுகியிருந்தன. இவைகளுக்கு மத்தியில் தெசலியர்களின் புகுதலைத் தடுப்பதற்காகப் போக்கியர்கள் ஒரு சுவரைத் தடையாகக் கட்டினார்கள். மேற்குக் கோடியில் ஆம்பிக்டியானி மன்றம் கூடும் இடமாகிய ஆந்தீலா அமைந்துள்ளது. லோக்ரியன் பக்கத்தில் பள்ளத்தாக்கிலிருந்து வெளியே வந்தால் சிறிது தூரத்தில் ஆல்பினாய் (Alpenoi) கிராமம் தென்படுகின்றது. இங்குக்

கடலானது பின் வாங்கிய காரணத்தால் மேலியன் (Malian) சமவெளியானது மிகவும் அகலமாகி, நினைவில் வைக்கத் தகுந்த இந்தக் கணவாயின் தோற்றத்தை மிகவும் மாற்றியுள்ளதால் இதனைப் பற்றிய பழைய விளக்கத்தை நினைவிற்குக் கொண்டுவரல் அதிகக் கடினமாயிருக்கின்றது. இங்குள்ள சூடான கந்தக ஊற்றுகளும், செங்குத்தான மலையும்தான் நிரந்தரமானவை. இந்த கந்தக ஊற்றுகளிலிருந்தே இதற்குத் தெர்மோபைலீ என்ற பெயர் வந்தது. தெர்மோபைலீக்கு இந்த வழியில் போவதைத் தடுத்தால், சுறுசுறுப்பான மக்களைக் கொண்ட ஒரு கூட்டம், மலைகளின் ஊடேயுள்ள கரடுமுரடானதும் செங்குத்தானதுமான வழியாகச் சென்று லோக்ரியன் சாலையை ஆல்பெனுய்க்குக் கிழக்கே உள்ள ஓர் இடத்தில் சந்திக்கக்கூடும். எனவே தெர்மோபைலீயைப் பாதுகாக்க ஒரு படைத் தலைவன் முற்பட்டால் அவன் இந்தப் பாதையைத் தன் கைவசப் படுத்திக்கொள்ள வேண்டும். இல்லாவிடில் படைப்பகுதி ஒன்று எளிதில் இந்த வழியாக அனுப்பப்பட்டுத் தன்னுடைய படையின் பின்னணியைத் திடீரென்று தாக்கக் கூடும்.

தெர்மோபைலீயை எவ்விதத்திலும் பாதுகாத்தல் செய்ய கிரேக்கர்கள் மனவுறுதி கொண்டார்கள். லீயோனிதாஸ் தம்முடைய படைகளுடன் இவ்விடத்திற்கு அணிவகுத்துச் சென்றார். இவர் கையின்கீழ் பெலோபோனீஸஸ்ஸிலிருந்து 4000 போர்வீரர்கள், 1000 போக்கியர்கள், 400 தீபர்கள், 700 தெஸ்பியர்கள் (Thespians), எல்லா லோக்ரிய போர்வீரர்களும் சேர்ந்து கிட்டத்தட்ட 7000, போர்வீரர்கள் இருந்தார்கள். இங்குக் குறிப்பிடாத வேறு பியோஷியர்களும் இந்தப் படையில் இருந்திருக்கக்கூடும். பெலோபோனீஷியர்களில் ஆர்கேடியர்கள் பாதிக்கு மேலானவர்கள். ஆர்கைவ் கட்டுப்பாடிலில்லாத மைஸீனீ 80 போர்வீரர்களை அனுப்பியது. இதில் கொரிந்தியர்களும் பிலியாசியர்களும் (Phliasians), 1000 லாக்கோனியர்களும் 300 ஸ்பார்ட்டர்களும் இருந்தனர். பெலோபோனீஸியர்களைப் பொறுத்தவரையில் அவர்கள் அனுப்பிய போர்வீரர்கள் அவர்களுடைய படைகளில் ஒரு மிகச் சிறிய பகுதியினரே ஆவர். ஆதென்ஸ் இல்லாவிட்டால், பெலோபோனீஸியர்கள் வட கிரீஸ் முழுவதையும் கைவிட்டுவிட்டு தங்களுடைய எல்லாப் படைகளையும் பூசந்தியில் வைத்து பூசந்தியைப் பாதுகாவல் செய்திருப்பார்கள் என்று நாம் சந்தேகிக்கக்கூடும். ஆனால் இவர்கள் யாவரும் ஆதென்ஸைச் சார்ந்திருந்தார்கள். ஏனென்றால் ஆதென்ஸின் கப்பற்படையானது மிகவும் வலிமையுடையதாயிருந்தது. ஆகையால்தான் அந் நாட்டின் நலனை இவர்கள் முக்கியமாகக் கவனிக்க வேண்டியதாயிற்று. தெர்மோபைலீயைச் சரணமடைய விட்டு பூசந்திக்குப் பின்வாங்கினால் அட்டிக்காவைச் சரணமடையச் செய்ததற்

2508



குச் சமானம். ஆனல் ஸ்பார்ட்டர்கள் பூசந்தியையே பாதுகாவல் செய்ய ஆர்வம் கொண்டிருந்தார்களே ஒழிய வடகிரீஸ் நாடுகளைக் காப்பாற்ற எண்ணம் கொள்ளவில்லை. அவர்களுடைய கொள்கை யானது மிகவும் குறுகி, பெலோபோனீஸியஸ்ஸையே அடிப்படை யாகக் கொண்டிருந்தது. கார்னியன் (Carnean) விழாவைக் கொண் டாடுவதாலும், ஒலிம்பிக் விளையாட்டுகள் நடைபெறுவதாலும் தங்க ளுடைய எல்லாப் படைகளையும் அணிவகுத்து அனுப்ப முடியவில்லை என்று கூறி, தம்முடைய தன்னலமுள்ளதும் சமீபப் பார்வையைக் கொண்டதுமான கொள்கையை மறைக்க முயன்றனர். லியோனி தாஸும் அவரைச் சேர்ந்த போர்வீரர்களும் முன்னணி காவலர் என்றும் மற்றவர்கள் இவர்களைத் தொடர்ந்து பின் செல்வர் என்றும் கூறினர்கள். ஆனல் இந்த விழாக்கள் கூட்டிணைப்பரசுக் கப்பல் படை யின் புடை பெயர்ச்சியைத் தடை செய்யவில்லை.

பாரசிகர்களுடைய தரைப்படையும் கப்பற்படையும் எப்பொழு தும் ஒன்ருக இயங்கினதால், ஈட்டா மலைக்கருகிலுள்ள கணவாயை கிரேக்க ஹாப்லிட்டர்கள் காத்துக்கொண்டிருக்கும்போது, கிரேக்கப் போர்க்கப்பல்கள் யூபியா தீவிற்கும் பெருநிலப் பகுதிக்கும் இடையி லுள்ள கடலில் பாரசீகக் கப்பல்களை எதிர்ப்பது அவசியமாயிருந்தது. பாரசிகர்கள் யூபியாவிற்கும் மாக்னீஸியா (Magnesia)விற்கும் இடையே தம் கப்பல்களை எடுத்துச் சென்று மாலியன் வளைகுடாவை அடைய இயல்பாகவே முயல்வர். அங்கிருந்து தரைப்படையானது முன்னேறும்போது, கப்பற்படை நீண்ட தீவின் மேற்குக் கரையோரம் யூரிப்பஸ்ஸை (Euripus) நோக்கிச் செல்லக்கூடும். இதைத் தடை செய்வதும், மாலியன் வளைகுடாவைத் தம் கையின்கீழ் வைத்துத் தெர்மோபைலியிலுள்ள கோட்டைப் பாதுகாப்புப் படைக்குப் பலம் அளிப்பதே கிரேக்கர்களுடைய முக்கிய நோக்கமாயிற்று.

324 மூன்று அடுக்கு பெஞ்சுகள் கொண்ட டிரைரீமிகளையும், 9 ஐம்பது துருப்புகளைக்கொண்ட பென்டகான்டர்களையும் கொண்ட கிரேக்கக் கப்பற்படை—இதில் 200 கப்பல்கள் அத்தீனியர்கள் தம் பங்காகக் கொடுத்தனர்—யூபியாவின் வடகரையிலுள்ள ஆர்டிமீஸி யத்தைத் தனது நிலையமாகத் தெரிந்துகொண்டது. மூன்று கப்பல்கள் நோட்டமறிய தெர்மேயிக் வளைகுடாவிற்கு அனுப்பப்பட்டன. அவைகளில் இரண்டு பாரசீகர்களால் அழிக்கப்பட்டன. இதுவே இந்தப் போரில் ஏற்பட்ட முதல் மோதலாகும். இந்த நிகழ்ச்சியால் கிரேக்கர்கள் அதிகமாகத் தளர்ச்சியடைந்து தமது கப்பற்படை யாவையும் யூரிப்பஸ்ஸிற்கு மாற்றியதாகச் சொல்லப்படுகின்றது. ஆனல் இது நடந்திருக்கக்கூடாத காரியமாகும். ஏனென்ருல் கப்பற் படையானது, லியோனிதாஸ் தெர்மோபைலியைத் தன் வசம் வைத்

திருக்கும் மட்டும் மாலியன் வளைகுடாவில் கட்டாயம் இருக்கக் கடன் பட்டுள்ளது. எப்படி யிருந்தாலும் யூரிப்பஸ்ஸும் பாதுகாக்கப்பட வேண்டிய அவசியம் இருந்தது. ஏனென்றால் பாரசீகர்கள் ஒரு சிறு கப்பற்படையை யூபியாவைச் சுற்றித் தெற்கே அனுப்பி கிரேக்கர்களுடைய பின் வாங்குதலைத் தடுக்கச் சரியானபடி வசதியிருந்தது. முதல் சண்டைகளில் ஐம்பத்து மூன்று அத்தீனியக் கப்பல்கள் ஆர்டிமீஸியாவில் காணப்படாததனால் இவைகள் யூரிப்பஸ்ஸைக் காப்பாற்றுவதற்காக அனுப்பப்பட்டிருக்கலாம் என்று யோசிக்க இடமிருக்கின்றது.

ஜூலை மாதத்தில் பாரசீகத் தரைப்படை தெர்மோபைலீயையும், பாரசீகக் கப்பற்படை மெக்னீஸியக் கடற்கரையில் காஸ்தானியா (Casthanaea) விற்கும் செபியஸ் (Sepias) முனைக்கும் இடையில் வந்து சேர்ந்தன. பாரசீகர்களின் கப்பல்கள் மிகப் பலவாக இருந்தபடியால் அவைகள் யாவையும் கரையில் நங்கூரம் பாய்ச்சி நிறுத்த இயலவில்லை. எனவே கடற்கரைக்கு எதிரே எட்டு வரிசை




படம் 1. ஆர்ட்டிமீஸியமும் தெர்மொபைலீயும்

களில் அவைகள் நிறுத்தப்பட்டன. கப்பல்கள் இவ்விதம் சரியாகப் பாதுகாப்பில்லாமல் இருக்கும்பொழுது ஒரு புயல் தோன்றிக் குறைந்தது 400 கப்பல்களை நாசமாக்கிற்று. இப்படியாக பாரசீகப் படைகளுக்கும் கிரேக்கப் படைகளுக்குமிடையே இருந்த சமமின்மை

யைக் குறைக்கத் தெய்வங்களே குறுக்கிட்டனர். பாரசீகர்களுக்கு ஏற்பட்ட இந்தக் கடுந் துன்பத்தினுல் எழுச்சி யூட்டப்பட்ட கிரேக்கக் கப்பற்படை ஆர்டிமீஸியத்திலுள்ள தனது நிலையத்திற்குத் திரும்பி வந்தது. ஹெரோடட்டஸ்ஸின் வசனத்தில் மெக்னீஸியன் கடற்கரை யில் பாரசீகர்கள் புயலினுல் அடைந்த நட்டமானது ஒரு முக்கிய நிகழ்ச்சியாக இருக்கின்றது. ஆனுல் முதலில் கப்பற்படையின் எண் ணிக்கை மிகைப்படக் கூறப்பட்ட அளவிற்குத் தகுந்தபடி இந்த நட் டமும் மிகைப்படக் கூறப்பட்டுள்ளது. கிரேக்கக் கப்பல்களின் அசைவு களும் தவருக விவரிக்கப்பட்டுள்ளன.

இந்தச் சேதத்திற்குப் பிறகும் பாரசீகர்களின் எண்ணிக்கையின் மேம்பாட்டைக் கண்டு நடுக்கமுற்ற கிரேக்கப்படைத் தலைவர்கள் மீண்டும் பின்வாங்க விரும்பினர் என்றும், அவர்கள் அப்படிச் செய்யாதபடி தெமிஸ்டோகிளிஸ் தடை செய்தாரென்றும் ஒரு கதை கூறுகின்றது. யூபியர்கள் கப்பற்படையானது ஆர்டி மீஸியத்தில் இருக்கவேண்டுமென்று ஆர்வங் கொண்டிருந்தனர். ஏனென்ருல் இங்கே கப்பற்படை யிருந்தால் தம் தீவிற்கு இது ஒரு பாதுகாப்பாகும். இந்த நோக்கத்தை அடைவதற்கு யூபியர்கள் தெமிஸ்டோகிளிஸ்ஸிற்கு முப்பது தாலந்துகளை அளித்தனர். தெமிஸ்டோகிளிஸ் இந்தத் தொகையில் எட்டைத் தம்முடைய கூட்டாளிகளுக்குக் கைக் கூலியாக்க் கொடுத்துவிட்டு, எஞ்சியதைத் தாமே வைத்துக்கொண்டார். நடக்கப் பெற்ற உண்மை நிகழ்ச்சிகள் இக் கதையை நம்பக் கூடாததாகச் செய்கின்றன. ஒருகால் சில வாரங் களுக்குப்பின் ஸாலமிஸ்ஸில் நடந்த சில நிகழ்ச்சிகள் இக் கதையைத் தூண்டியிருக்கலாம். ஏனென்ருல் எவ்வளவு காலம் தரைப்படை யானது தெர்மோபைலீயில் இருக்கின்றதோ அவ்வளவு காலம் யூரிபையதாஸ்ஸும் (Eurybiadas) பெலோபோனீஸியர்களும் ஆர்டி மீஸியத்தில் நிச்சயம் இருக்கக் கடமைப்பட்டவர்கள்.

புயலுக்குப்பின் பாரசீகர்கள் அப்பிடியை (Aphetae) தமது கப்பற் படையின் நிலையமாக்கினர். கிரேக்கர்களின் பின்வாங்குதலைத் தடுக்கத் தீர்மானம் கொண்டு இரகசியமாக 200 கப்பல்கள் கொண்ட ஒரு படையை யூபீயாவைச் சுற்றிவர அனுப்பினுர்கள். கிரேக்கப் பாசறைக்கு இந்தப் படைப் பெயர்ச்சியின் செய்தியானது ஸ்கியானி (Scione) லுள்ள ஸ்சில்லியாஸ் (Scyllias) என்றும் முக்குளிப்பாளரால் கொண்டு வரப்பட்டது. இவர் தமது காலத்தில் ஒரு சிறந்த முக்குளிப் பாளர். இவர் அப்பிடியில் (Aphetae) மூழ்கிப் பத்து மைல்களுக்கு அப்பாலுள்ள ஆர்டிமீஸியம் (Artemisium) மில் வெளியே தலையைக் காட்டினுராம். ஹெரோடட்டஸ் இந்தக் கதையை ஏற்றுக்கொள்ளத் தயங்கி ஸ்சில்லியாஸ் ஒரு படகில் ஆர்டிமீஸியத்திற்கு வந்து

சேர்ந்தான் என்று தமது சொந்தக் கருத்தை எழுதியுள்ளார். நள்ளிரவு கழிந்தபின் யூரிபஸ்ஸை நோக்கிச் சென்று கொண்டிருக்கும் கப்பல்களைத் தாக்கத் தாம் செல்லவேண்டுமென்று கிரேக்கர்கள் திட்டமிட்டனர். ஆனால் பிற்பகலிலேயே கிரேக்கர்கள் தமது பகைவர்கள் எவ்விதம் போர் புரிகின்றனர் என்று அறிய அவர்களைத் தாக்கி முப்பது பாரசீகக் கப்பல்களைக் கைப்பற்றினர். இரவிலே புயலானது மும்முரமாக வீசியது. கிரேக்கர்களுக்கு உதவியளிக்கத் தேவர்கள் மறுமுறையும் குறுக்கிட்டனர். யூபியாவின் தெற்கு முனையைச் சுற்றி வந்ததும் இந்த 200 கப்பல்களும் பொந்துகள் (Hollows) என்றழைக்கப்பட்ட கடற்கரையோரத்தில் சேதப்படுத்தப்பட்டன. இந்தப் பெருங்கேட்டின் செய்தி கிடைத்த சமயத்தில் தான் ஆர்டிமீஸியத்தை நோக்கிச் சென்று கொண்டிருந்த ஐம்பத்து மூன்று அட்டிக்கா கப்பல்கள் அவ்விடத்தை அடைந்தன. இதன் பயனாகக் கிரேக்கர்கள் தாம் பின்வாங்கி ஓடவேண்டுமெனக் கொண்டிருந்த எண்ணத்தை விட்டுவிட்டனர். இதற்கு மேலும் போரானது ஆங்காங்கே நடந்தது. இருதரப்பாரும் நட்டமடைந்தனர். கிரேக்கர்களின் விவரத்தின்படி இச் சண்டைகளினால் ஒரு நல்ல பயனும் ஏற்பட்டதாகத் தெரியவில்லை. ஆனால் இச் சண்டைகளினால் பாரசீகர்களுக்குச் சில இலாபங்கள் உண்டாயிருக்கலாம் என்று நாம் சந்தேகிக்க இடமிருக்கின்றது.

இதற்கிடையில் லியோனிடாஸ் தமது ஸ்தானத்தைத் தெர்மோப்பைலீ (Thermopylae)யில் ஏற்படுத்திக் கொண்டார்; இந்த இடத்தை நன்கு அறிந்த போக்கியர்கள் (Phocians) மலைகளினூடு வரும் பாதையைப் பாதுகாக்கும் வேலையை மேற்கொண்டனர். இந்தக் கணவாயின் மத்தியிலுள்ள பழைய போக்கியர்களின் சுவரானது பழுதுபார்க்கப்பட்டது. மேலியன் சமவெளியில் (Malian plain) பாளையமிறங்கிய இந்தப் பெரிய பாரசீக இராணுவத்திற்கும் தெர்மாபைலீயின் குறுகிய பாதையைத் தீர்மானத்துடன் அங்குப் பாதுகாக்க வந்திருக்கும் 6000 வீரர்களுக்கு எதிராகத் தம் வசம் வைத்துக்கொள்ளுவது ஒரு இடர் நிரம்பிய காரியமாக இருந்தது. தமது வலிமை பொருந்திய தளவாடங்களைக் கண்ணுற்றதும் பயந்து கிரேக்கர்கள் பின்வாங்குவார்கள் என்று நம்பிய ஸெர்க்ஸீஸ் நான்கு நாட்கள் காத்திருந்தார். ஐந்தாவது நாளில் இவர் தாக்கினர். கணவாயின் மேற்கு முனையில் நடந்த சண்டைகளில் ஈட்டித் தாங்கிய கிரேக்க வீரர்கள் ஆசியாவின் வில்லாளிகளைவிடத் தாம் திறமையுடையவர்கள் என்பதைத் தெளிவாக எடுத்துக் காட்டினர். அதற்கு அடுத்த நாளிலும் இந்த முடிவு தான் காணப்பட்டது. இறத்தலில்லாத வீரர்கள்கூட (Immortals) கணவாயைப் பாதுகாத்துவந்த கிரேக்கர்களைப் பயப்படச் செய்ததாகத் தெரியவில்லை. ஸெர்க்ஸீஸ் 'தமது படை படும் துயரத்தைக்

காணமுடியாமல் அரியணையிலிருந்து மூன்று முறை துடிதுடித்துக் குதித்து எழும்பினர்' என்று ஹெரோடட்டஸ் கூறுகின்றார். இதன்பின்னரே 'இறத்தலில்லாத வீரர்களை' (10,000 பேர்களை மொத்தமாக அல்ல) அவர்களுடைய தலைவராகிய ஹைடார்னஸ்ஸின் (Hydarnes) கீழ் கிரேக்கர்களின் படையின் பின்னணியைத் தாக்கும்படி மலையூடே வரும் குறுகிய பாதையின் வழி அனுப்பத் திட்டமிட்டனர். எபியல்டீஸ் (Epialtes) என்னும் மேலிய கிரேக்கர்களில் ஒருவன் இந்தப் பாரசீகப் படையை அந்தக் குறுகிய வழியில் நடத்திக்கொண்டு வந்து கிரீஸ் நாட்டைக் காட்டிக்கொடுத்த இழிவான பெயரைப் பெற்றான். விடியற்காலத்தில் இவர்கள் போக்கியர்கள் நிறுத்தப் பட்ட பாதையின் உயர்ந்த இடத்தை அடைந்தனர். போக்கியர்கள் மலைகளின் சிகரங்களை நோக்கி ஓட ஆரம்பித்தனர். ஆனால் பாரசீகர்கள் அவர்களைக் கவனிக்காமலே அலட்சியமாக முன்னேறி நடந்தனர். இதற்கு மத்தியில் படையை விட்டோடியவர்கள் பாரசீகர்களின் யுத்த சூழ்ச்சி முறையைப்பற்றி லீயோனிடாஸிடம் அறிவித்தனர். அவர் உடனே மடமடவென்று யுத்தசபை ஒன்றைக் கூட்டினார். இச் சபையில் தீர்மானிக்கப்பட்ட திட்டம் என்ன என்பது நமக்குச் சரியாகத் தெரியவில்லை. ஸ்பார்ட்டர்களும், தீபர்களும், தெஸ்பியர்களும் கணவாயில் நின்றுகொள்ள மற்ற கிரேக்கர்கள் யாவரும் தெற்கு நோக்கிச் சென்றனர். பிற்காலத்தில் இவர்கள் கணவாயைப் பாதுகாக்கும் வேலையிலிருந்து விட்டோடி தம் வீட்டை அடைந்தனர் என்று சொல்லப்பட்டது. இப்படி நடத்திருக்கக் கூடுமானால் இரண்டு பகைவர்களின் மத்தியில் லியோனிடாஸ் கணவாயைத் தம் கையில் வைத்திருக்க முயன்றது மிகவும் பகட்டான காரியமானாலும் இது ஒகு முட்டாள்தனமான செய்கையாகும். எல்லா இராணுவமும் கணவாயைக் கைவிட்டுவிட வேண்டும் அல்லது கிரேக்கர்களைச் சுற்றிக்கொள்ளப் பாரசீகர்கள் யோசித்ததுபோல, கிரேக்கர்கள் ஹைடார்னஸைச் சுற்றி வளைத்துக் கொள்ளவேண்டும். இவை இரண்டுமே பகுத்தறிவுள்ள வழிகளாக இருந்தன. இரண்டாவது திட்டமே உண்மையில் ஏற்றுக்கொள்ளப்பட்டதென்று நாம் சந்தேகிக்கலாம். லியோனிடாஸும் அவருடைய ஸ்பார்ட்டர்களும் கணவாயில் இருக்கும்பொழுது, ஹைடார்னஸ்ஸின் பின்னணியைத் தாக்கும் பொருட்டு மலையிலிருந்து வரும் பாதையானது பெரும் சாலையுடன் சேரும் இடத்திற்குக் கிழக்கே சிறிது தூரத்தில் மற்றவர்கள் அணிவகுத்திருந்தனர் என்று நாம் எண்ணலாம். கணவாயிலிருந்த 1400 வீரர்களில் சிலர் ஹைடார்னஸ்ஸிற்கு எதிராகக் கிழக்கு வாயிலைக் காக்க வேண்டியதாயிருந்தது. மற்றவர்கள் ஸெர்க்ஸீஸின் பெரிய படை உள்ளே நுழையாதபடி மேற்கு வாயிலைக் காக்க வேண்டியதாயிற்று. லியோனிடாஸும் அவருடைய 300 ஸ்பார்ட்டர்களும் மேற்குப் பாகத்தைக் காக்கும் தொழிலை எடுத்துக் கொண்டனர்.

ஆனால் இவர்கள் எதிரியின் வலிமையான தாக்குதல்களை எதிர்த்துத் தள்ளுவதில் மாத்திரம் மனநிறைவு கொள்ளாமல், எதிரியின்மேல் பாய்ந்து தாக்கினார்கள். இவர்களுடைய தாக்குதல் பயன் விளையத் தக்கதாயிருந்தது. ஆனால் லியோனிடாஸ் இப் போரில் கொல்லப் பட்டார். அவருடைய சடலத்தை அடைய இருதரப்பாரும் ஹோமர் காலத்தில் நடந்தது போலச் சண்டையிட்டனர். ஸெர்க்ஸீஸ்ஸின் இரு சகோதரர்களும் இந்த யுத்தத்தில் மாண்டனர். அநேக பாரசீகர்கள் கடலுக்குள் துரத்தியடிக்கப்பட்டனர். ஆனால் கடைசி யில் இந்தக் கணவாயைக் காத்து வந்த கிரேக்கர்கள் சுவருக்குப் பின் துரத்தப்பட்டனர். இவர்கள் ஒழுங்காகப் பின் வாங்கி ஒரு குன்றை அடைந்து கடைசி முறையாக அங்கிருந்து போர் தொடுத்தனர். ஆனால் பொங்கி எழும்பும் எண்ணிக்கையில் அடங்காத பாரசீகர் களால் சூழப்பட்டுக் கொல்லப்பட்டனர். இதற்கிடையில் பின்னணி யில் உள்ள கிரேக்கர்களை முறியடித்துவிட்டு, 'இறத்தலில்லாத வீரர்கள்' கணவாய்க்குள் பலாத்காரமாகப் புகுந்தனர். இதில் 4000 கிரேக்கர்கள் மாண்டனர் என்று சொல்லப்படுகின்றது.

தெர்மோப்பைலீயின் துணிச்சலான பாதுகாப்பானது கிரீஸின் மேல்மறையாதஒருமதிப்பைஉண்டு பண்ணியது. தெர்மோப்பைலீயின் யுத்தமானது ஸ்பார்ட்டர்களின் வீரத்தின் புகழை அதிகரித்தது. இந்த தெர்மோப்பைலீ யுத்தமானது ஸ்பார்ட்டர்கள் கைவிடப்பட்டபோதி லும் இந்தக் கணவாயைக் காப்பாற்ற அவர்கள் வீராவேசத்துடன் போரிட்டனர் என்று கூறப்படுகின்றது—சிறு வயது முதல் இவர் களுக்குப் போதித்து வரப்பட்ட ஸ்பார்ட்டாவின் முறைக்குத் தகுந்த வாறு லியோனிடாஸும் அவருடைய கூட்டத்தாரும் தமக்குக் கிடைக் கப்போவது மரணம் என்று முழுவதும் அறிந்தபோதிலும் தமது இடத்தைவிட்டு அகலாது தமது இராணுவக் கடமைகளை இறுதி வரை யிலும் செய்து முடித்தனர். தைரியம் பொருந்திய தெஸ்பியர்கள் (Thespians) ஸ்பார்ட்டர்களை விட்டுவிட்டு ஓடாமல் நிலைத்திருந்தனர். ஆனால் தீபர்கள் இரகசியமாகப் பாரசீகர்களுடன் சதிசெய்ய முயன்றத னால் லியோனிடாஸ் இவர்களைக் கணவாயைவிட்டுப் போகாதபடித் தடுத்ததாகச் சொல்லப்படுகின்றது. தெர்மோப்பைலீயின் பாதுகாப் பில் மிகவும் அசட்டையாகத் தீபர்கள் இருந்ததாகவும், பின்பு பாரசீக எதிரிகளை அணுகித் தாங்கள் பாரசீக மன்னரின் (Great King) நண்பர்கள் என்றும், தங்கள் சுய விருப்பத்துடன் தெர்மோப்பைலீக்கு வரவில்லை யென்றும், ஆகையால் தங்களுக்குப் பாரசீகர்கள் காப்பகம் கொடுக்கவேண்டும் என்றும் கோரினதாக வன்மம் பொருந்திய கதை ஒன்று கூறுகின்றது. இவர்களுக்கு உயிர்ப்பிச்சை அளிக்கப்பட்டது. ஆனால் இவர்களும் இவர்களுடைய படைத்தலைவர்களும் மோசமான அடிமைகள் எனப் பழிசுமத்தப்பட்டு அவமானப்படுத்தப்பட்டனர்.

பிற்காலத்தில் தீப்ஸ் நகரமானது பாரசீகர்களுடன் சதியில் இறங்கிய தால் தெஸ்பியர்களுக்கும் தீபர்களுக்கும் உள்ள இந்த வேறுபாடானது புகுத்தப்பட்டிருக்கக் கூடும் என்பது திண்ணம். தெர்மோப்பைலீயின் பாதுகாவலானது வீரம் செறிந்ததாக இருந்தாலும் முடிவு வரையும் நம்பிக்கை இல்லாததாக இருந்ததா என்பது சரியாகத் தெரியவில்லை. நாம் நினைத்தபடி 'இறத்தலில்லாத வீரர்களை' போரில் எதிர்க்க முயற்சி செய்திருந்து, அந்த முயற்சியானது பயனுள்ளதாய் இருந்திருந் தால், கணவாயைக் காப்பாற்ற முடிந்திருக்கும். அவ்வண்ணம் ஏற்பட்டிருந்தால் ஒரு கடற்போர்தான் பாரசீகர்களா அல்லது கிரேக்கர்களா பின்வாங்க வேண்டும் என்பதைத் தீர்மானித் திருக்கும்.

பிற்காலத்தில் லியோனிடாஸும் அவனுடைய 300 வீரர்களின் பெயர்களும் ஒரு தூணில் பொறிக்கப்பட்டு ஸ்பார்ட்டாவில் நிறுவப் பட்டது. டீனிகீஸ் (Dienekes) என்பவரின் பெயர் இவைகளில் ஒன் ருகும். அதிகமோசமான நிலைமையிலும் ஸ்பார்ட்டாவின் படைவீரர் கள் கவலையில்லாமல் மிகவும் மகிழ்ச்சியுடன் இருந்து வந்தனர் என்ப தைக் காட்டக்கூடிய மேற்கோள் வாசகம் ஒன்றை இயற்றியவர் இவர் தாம். பாரசீகவீரர்கள் எண்ணிக்கைக்கு அடங்காமலிருக்கின்றபடி யால் அவர்களுடைய அம்புகள் கதிரவனை மறைக்கின்றன என்று இவரிடம் கூறிய பொழுது, இவர் மறுமொழியாக, 'அது நமக்கு ஒரு நல்ல காரியம்தான். ஏனென்ருல் நாம் நிழலிலிருந்துகொண்டு போர் புரியலாம்' என்று கூறினுர்.

தெர்மோப்பைலீயின் செய்தியானது நொடியளவில் ஆர்ட்டி மீஸியத்திலுள்ள கப்பற்படைக்குத் தெரியவந்தது. கிரேக்கர்கள் உடனே நங்கூரங்களை உயர்த்தி, யூரிப்பஸ் (Euripus) வழியாகச் சென்று அட்டிக்காவின் கரையை அடைந்தனர்.

## 4. ஸாலமிஸ் சண்டை

கிரேக்க நாடுகளில் மேம்பட்டிருந்த சிறந்த நாட்டின் மன்னனைக் கொன்றும், கிரீஸின் உள்வாயிலான தெர்மோப்பைலீயை உடைத் தெறிந்தும், வெற்றியுடன் ஸெர்க்ஸீஸ் முன்னேறினுர். இவர் லோக்ரிஸ் (Locris) ஸிலிருந்து போசிஸ் (Phocis)ஸுக்கும் அங்கிருந்து பியோஷியா விற்கும் சென்ருர். ஆனுல் எங்கும் இவருக்கு எதிர்ப்பு இல்லை. இப்பொழுது தீபர்களும், கிட்டத்தட்ட மற்றெல்லா பியோஷியர் களும், வேறு எதையும் செய்ய இயலாதவர்களாகப் பாரசீகர்களுக்குச் சரணடைந்தனர். டெம்பி (Tempe)யைக் கிரேக்கர்கள் விட்டு விட்டு

வெளியேறியவுடன் எவ்விதம் தெசலியர்கள் தமது விருப்பமின்றிப் பாரசீகர்களுக்குக் கீழ்ப்படிந்தனரோ அவ்விதமே, தெர்மோப்பைலீ யின் இழப்பு பியோஷியர்களேயும் செய்யக் கட்டாயப்படுத்தியது.

போசிஸ்ஸிலுள்ள பெரும் படையிலிருந்து ஒரு பாரசீகக் கூட்ட மானது தம்மைப் பிரித்துக் கொண்டு பித்தோ (Pytho) விலுள்ள கோயிலேக் கொள்ளேயிட அந்த நகரத்திற்கு நேராகச் சென்றதாகப் பிற்காலக் கதையொன்று கூறுகின்றது. ‘ஸெர்க்ஸீஸ் தனது கருவூலங் களேத் தான் அறிந்திருந்ததைவிட இவைகளே நன்ருய் அறிந்திருந்தான் என்று நான் நினேக்கிறேன்’ என்று ஹெரோடட்டஸ் கூறுகின்ருர். பாரசீக வீரர்களேக் கண்ட மாத்திரத்தில் டெல்பியர்கள், அறுபது மனிதர்களேயும் அஸெராடஸ் (Aceratus) என்னும் தீர்க்கதரிசியையும் கோயிலில் விட்டுவிட்டு பார்ஞஸஸ் மலேயின் சிகரத்திற்கு ஓடிச் சென்றனர். டெல்பியர்கள் கருவூலங்களில் காணப்பட்ட விலேயுயர்ந்த பொருள்களே எடுத்துச் செல்லவில்லே. ஏனென்ருல் தெய்வம்தான் தன்னுடைய சொத்து யாவையும் தானே பாதுகாத்துக் கொள்வதாகத் திருவாய் மலர்ந்தது. காட்டுமிராண்டியர் ஆலயத்தை அணுகியதும் வியப்படையக்கூடிய நிகழ்ச்சிகள் நடைபெற்றன. நரன் ஒருவனுலும் தொடப்படாத தூய திருக்கரங்கள் இரகசிய முறையில் எடுத்துச் செல்லப்பட்டு ஆலயத்தின் முன்புறத்தில் கிடத்தியிருப்பதைத் தீர்க்க தரிசி கண்ணுற்ருர். காஸ்டாலியன் சுனேயின் (Castalian fountain) பக்கத்திலிருந்த அத்தீனு ப்ரோனியா (Athena Pronaea) ஆலயத் தைப் பாரசீகர்கள் அடைந்ததும் மின்னல் மின்னியது. பார்ஞ ஸஸ்ஸிலிருந்து இரண்டு பாறைகள் கீறப்பட்டுக் கீழே விழுந்து பல பாரசீகர்களே நசுக்கின. அதே சமயத்தில் அத்தீனுவின் ஆலயத் தில் ஒரு போர் முழக்கம் கேட்கப்பட்டது. காட்டுமிராண்டிகள் ஓட்டம் பிடித்தனர். பேருருவுடைய இரண்டு ஹாப்லிட்டர்கள் அவர்களேத் துரத்தி வந்ததாக அவர்கள் கூறினுர்கள். இவர்கள் தாம் டெல்பிக்கு உரிய வீரர்களான பிலேகஸ் (Phylacus)ஸும் ஹடோனஸ் (Autonous) ஸும் ஆவர். 'பாரசீகப் படையெடுப்பைப்பற்றி டெல்பி யில் செல்லப்பட்ட புராணக்கதை இதுவே.

அத்தீனியர்கள் ஆர்ட்டிமீஸியத்திலிருந்து திரும்பியபோது பெலோப்போனீஸிய இராணுவத்தில் முக்கியப் பகுதியானது முன் னுல் தாம் ஏற்றுக் கொண்டபடி பியோஷியாவின் பாதுகாப்பிற்கு முன்னேறிச் செல்லாமல், பூசந்திப் பிரதேசத்தில் கூடி அங்கே மேற்குக் கடலேயும் கிழக்குக் கடலேயும் இணேத்து ஒரு சுவரை எழுப்பிக் கொண்டிருப்பதைப் பார்த்தனர். இப்படி பியோஷியாவும், அட்டிக் காவும் பாதுகாப்பில்லாமல் விடப்பட்டன. தெமிஸ்டாக்கிளீஸ்ஸும் அவனுடன் வேலே செய்பவர்களும் ஆதென்ஸ் நகரைக் காலி செய்யத்

தீர்மானித்தனர். எல்லாக் குடிமக்களும் மூன்று அடுக்குகள் கொண்ட கப்பல்களாகிய ட்ரைரீம்களில் ஏறிக்கொள்ளவேண்டும் என்றும், தங்களால் முடிந்தவர்கள், தங்களுடைய குடும்பத்தார் களையும், தங்களுக்குண்டான யாவற்றையும் எடுத்துப் பத்திரமான இடங்களுக்குச் செல்லவேண்டுமென்றும் ஒரு கட்டளையைப் பிறப்பித் தனர். இதன்படியே நடந்தேறியது. பெண்களும், பிள்ளைகளும் ட்ரிஸென் (Troezen), ஈகைனு (Aegina), ஸாலமிஸ் முதலிய இடங் களுக்கு எடுத்துச் செல்லப்பட்டனர். இந்த நெருக்கடியான கண்டத் தில் கப்பலில் ஏறிய ஒவ்வொரு குடியுரிமை உள்ள அத்தீனியனுக்கும் எட்டு டிரான்மாக்களைக் (drachmae) அத்தீனுவின் கருவூலத்திலிருந்து ஏரியோபேகஸ் மன்றமானது கொடுத்துதவியது. சேம அரணின் சுவர்கள் கொடுங்கோலர்கள் விரட்டியடிக்கப்பட்டபோது தரைமட்ட மாக்கப்பட்ட போதிலும், சேம அரணின் இயற்கையான வலிமை யானது பாரசீகர்களுடன் எதிர்த்துப் போர்புரிய உதவும் என்று நம் பிக்கை கொண்ட அத்தீனியர்கள் அதேசமயத்தில் இங்கு ஒரு சிறு கோட்டைப் பாதுகாப்புப் படையை விட்டுச் சென்றனர். கப்பலில் செல்லவேண்டும் என்ற துணிவும், கூரறிவும் கொண்ட கொள்கை யானது சூழ்நிலைகளால் உருவாக்கப்பட்டாலும்,இது ஒருதெய்வமொழி யின்மேல் சார்ந்திருந்ததாகக் கூறப்படுகின்றது. ‘பலகையினுலாகிய சுவர்’ மாத்திரம் நீங்கலாக அட்டிக்கா முழுவதுமாக அழிக்கப்படும் என்று இத் தெய்வ மொழி உரைத்திருந்தது. பலகையினுலாகிய சுவர் என்பது கப்பல்களைக் குறிக்கின்றது என்று பொருள் கூறப்பட்டது. இந்தக் கருத்திற்குப் பொருத்தமாயிருக்கும்படி கோட்டைப் பாது காப்பிற்காக விடப்பட்ட படையானது ஒரு எளிமை பொருந்திய குடிமக்களின் கூட்டமென்றும், இவர்கள் வேறு வழியில்லாது பலகை களால் தடை அரண் செய்துகொண்டு தெய்வ மொழியானது பலகைகளினுல் ஆகிய சுவர் என்று தடை அரணைத்தான் குறித்திருக்கு மென்றும் கூறப்பட்டது. தெய்வ மொழியைப் பற்றிய விளக்க மானது பின்னுல் ஏற்பட்ட நிகழ்ச்சிகளால் ஒருவேளை குறிப்பாகக் கூறப்பட்டிருக்கலாம்.

அத்தீனியர்கள் தங்களுடைய மண்ணிற்குக் கட்டுப்பட்டவர்கள் அல்லர் என்பதை உலகத்திற்கு எடுத்துக் காட்டிக்கொண்டிருக்கும் போது, நேசதேசக் கப்பற்படையானது ஸாலமிஸ் விரிகுடாவில் நிறுத்தப்பட்டிருந்தது. புதிதாகக் கட்டப்பட்ட கப்பல்களால் படை வலுப் பெருக்கப்பட்டு, தற்போது இப் படையானது 378 மூன்று அடுக்குள்ள ட்ரைரீம்களையும், ஏழு, ஐம்பது துடுப்புகளுள்ள கப்பல் களையும் கொண்டிருந்தது. பூசந்தியிலுள்ள இராணுவமானது கிளி யோம்பிரோட்டஸ்ஸின் (Cleombrotus) தலைமையின்கீழ் விடப்பட் டிருந்தது. இந்தக் கிளியோம்பிரோட்டஸ் லியோனிடாஸின் சகோ

தரரும், அவருடைய குழந்தைப் பருவத்திலிருந்த மகனுன பிளீஸ் டார்கஸ்ஸின் (Pleist rchus) காப்பாளருமா யிருந்தார்.

ஸெர்க்ஸீஸ் தமது கப்பற்படைகள் பேலரோன் (Phaleron) துறை முகத்தை யடைந்த சமயத்தில் ஆதென்ஸ்ஸைச் சேர்ந்தார். சேம அரணுகிய அக்ராப்போலிஸில் அகழ்ந்துகொண்டிருந்த ஒரு சிறு கூட்டமான வீரர்கள் நீங்கலாக, பட்டினமானது வெறுமையாக இருப்பதை இவர் கண்ணுற்ருர். சேம அரணுகிய அக்ராப்போலிஸ்ஸிலிருந்து அகலமான சேணம் போன்ற ஒரு கணவாயினுல் பிரிக்கப்பட்டுள்ள ஏரியோபேகஸ் மலேயின் கீழ்பாகத்தைப் பாரசீகப் படை வீரர்கள் கைப்பற்றினர். இங்கிருந்து அக்ராப்போலிஸ்ஸிலுள்ள பலகைகளினுல் செய்யப்பட்ட தடை அரணே எரிகின்ற அம்புகளேக் கொண்டு நெருப்புப் பிடிக்க வைத்தனர். கோட்டைக் காப்புப்படையானது மேலிருந்து பாரசீகர்கள்மேல் பெரும் பாறைகளே உருட்டின. அக்ராப்போலிஸ்ஸின் இயல்பான வலிமை மிகுதியாக இருக்கவேதான் இந்த முற்றுகையானது இரண்டு வாரங்கள் நடைபெற்றது. பின்பு அக்லாரஸ் (Aglaurus) ஆலயமருகில் வரும் ஒரு இரகசியப் பாதையின் மூலம் வடக்கிலுள்ள செங்குத்தான பாறையில் பாரசீகர்கள் ஏறினுர்கள். அங்குள்ள கிரேக்கர்கள் கொலே செய்யப்பட்டனர். அந்தக் கோயிலானது கொள்ளே யடிக்கப்பட்டுக் கொளுத்தப்பட்டது.

அக்ராப்போலிஸ்ஸின் வீழ்ச்சிக்குப்பின் படைத்தலேவர்கள் ஒரு போர்ச் சபையைக் கூட்டுவித்து அதில் பெரும்பான்மையினரின் வாக்குகள்மூலம் தாம் பூசந்திக்குப் பின்வாங்கி அங்கே பாரசீகர்களின் கப்பற்படையின் தாக்குதலே எதிர்பார்த்து இருக்கவேண்டும் என்று தீர்மானித்தனர். இந்தத் தீர்மானத்தின் நற்பயன் யாதெனில் இவர்கள் நிலப் படைகளுடன் நெருங்கிய தொடர்பு கொண்டிருக்கலாம். அதுவுமன்றித் தோல்வியை அடைந்தால் பெலோப்போனீஸஸ்ஸிற்குப் பின்வாங்க முடியும். ஆனுல் ஸாலமிஸ்ஸில் இவர்கள் மற்றவர்களிடமிருந்து பிரிக்கப்படக்கூடும். ஈகைஞ, ஸாலமிஸ், மேகாரா முதலிய இடங்கள் இத் தீர்மானத்தினுல் கைவிடப்படும்; ஆகையால் ஈகினீட்டர்களும், அத்தீனியர்களும், மேகாரியரும் இத் தீர்மானத்தை மும்முரமாக எதிர்த்தனர். தெமிஸ்டாக்கிளீஸ் இந்தத் தீர்மானத்தை எவ்விதத்திலாகிலும் கெடுத்துவிட எண்ணங்கொண்டார். இவர் தனிமையாக யூரிபயடாஸிடம் சென்று பகைவரின் கப்பல்களின் எண்ணிக்கையும் வேகமும் பூசந்தியினருகிலுள்ள திறந்த விரிகுடாவில் அதிக நாசத்தை விளேவிக்கும் என்றும், குறுகிய ஸாலாமினியன் கால்வாயில் போர் ஏற்பட்டால் கிரேக்கர்களுக்கு அதிக அனுகூலமாயிருக்கும் என்றும் மனத்தில் பதியும்படிக் கூறி நம்பவைத்தார். ஒரு புதிய சபையானது கூட்டப்பட்டது. இதில் அத்தீனிய,

கொரிந்தியப் படைத் தலைவர்களுக்கிடையே வார்த்தைகள் அதிகரித்தன. ஆசாரப்படி யூரிபையடாஸ் சொற்போரைத் துவங்கி வைக்குமுன்னமே தெமிஸ்டாக்கிளீஸ் வாதத்தைத் துவக்கியதும், கொரிந்தியப் படைத்தலைவரான அடிமான்டஸ் (Adeimantus) 'ஓ! தெமிஸ்டாகிளீஸரே, யார் அவசரமாக எழுந்து நிற்கின்றார்களோ அவர்களெல்லாம் சவுக்கினால் அடிக்கப்படுவார்கள்' என்று கூறினான். இதற்கு மறுமொழியாக 'ஆமாம், ஆனால் நேரத்தில் துவங்காதவர்கள் முடிசூடப்படுவதில்லையே' என்று தெமிஸ்டாக்கிளீஸ் கூறினார். தமது கருத்தைச் செயல்முறைக்குக் கொண்டு வரும்படி வலியுறுத்த தெமிஸ்டாக்கிளீஸ்பூசந்திப் பகுதிக்குப்போகவேண்டும் என்று தீர்மானித்தால் நேசதேசக் கப்பற்படையில் நேர் பாதிக்குமேலுள்ள ஆத்தீனியக் கப்பல்கள் நேசதேசங்களுடன் கூடிச் சேராது, தனியாகப் பிரிந்து மேற்கிலுள்ள ஏதாவது நிலபாகத்தில் ஒரு குடியேற்றத்தை அமைக்கும் என்று பயமுறுத்தினார் என்று எழுதப்பட்டுள்ளது. தெமிஸ்டாக்கிளீஸின் தீர்மானம் ஏற்றுக்கொள்ளப்பட்டதனால் அவர் பெரியதொரு வெற்றியைப் பெற்றார். ஸாலமினியன் தண்ணீரில் போர் செய்யவேண்டும் என்ற தீர்மானம் ஏற்றுக்கொள்ளப்படவே, இத்தீவின் வீரர்களான அஜாக்ஸ் (Ajax), டெலாமன் (Telamon) முதலியோர் தம் உதவிக்கு வரத் தொழுது வேண்டப்பட்டனர். ஈகைனாவிலுள்ள ஈயாசிட்டர்களாகிய ஏனைய வீரர்களைக் கொண்டுவர ஒரு கப்பல் அனுப்பப்பட்டது.

நினைவில் வைக்கத்தகுந்த இந்த நாட்களில் நடந்த தெய்வ ஆற்றலால் ஏற்பட்ட அடையாளங்களிலும், வியக்கத் தகுந்த நிகழ்ச்சிகளிலும் அத்தீனியர்களுக்கு அதிக கவர்ச்சியைக் கொடுத்தது திரியாசியன் (Thriasian) சமவெளியில் நாடு கடத்தப்பட்ட இரண்டு கிரேக்கர்கள் அடைந்த அனுபவமாகும். இவர்களில் ஒருவர் டிக்கீயஸ் (Dicaeus) என்னும் அத்தீனியர். மற்றவர் இவருடைய தோழரும், பாரசீக அவையில் அபயம் தேடிச் சென்ற ஸ்பார்ட்டாவின் மன்னருமாகிய டிமேராட்டஸ் (Demaratus) என்பவருமாவர். இவர்கள் நடந்து செல்லும்போது அதிக தூரத்தில் எலியுஸிஸ்ஸிற்கு (Eleusis) அருகில் முப்பதாயிரம் மக்கள் நடந்தால் எழும்பும் புழுதி மண்காற்று எழும்புவது போன்ற ஒரு பெரிய புழுதிக் காற்று எழும்பியது; அதனுடன் இந்தப் புழுதியின் மத்தியில் திடீரென ஒரு சப்தம் கிளம்பியது. இந்த சப்தமானது எலிஸினியன் விழாவில் கேட்கப்படும் ஐயாக்கஸ்ஸின் குரல் போலிருந்தது. டிமேராட்டஸ் இது என்னவாயிருக்கக் கூடும் என்று தன் நண்பனை வினவினார். 'இது பாரசீக மன்னருடைய இராணுவத்திற்கு ஏற்படும் ஒரு பெரும் கேட்டைக் காட்டும் அறிகுறி' என்று டிக்கியஸ் கூறினார். மேலும் இவர் கூறியதாவது, 'இந்த சமவெளியில் மக்களே இல்லாததால் இந்தசப்தமானது தெய்வீகமானது;

இந்தப் புழுதிக் காற்ருனது எலியுஸிஸ்ஸிலிருந்து அத்தீனியர்களின் உதவிக்காக வருகின்றது. இது பெலோப்போனீயஸ்ஸிற்கு நேராகச் சென்ருல், பாரசீகத் தரைப் படைகளுக்கு மோசத்தை விளைவிக்கும். ஆனுல் இது கப்பல்களை நோக்கிச் சென்ருல் பாரசீக மன்னனின் கப்பல்களுக்கு ஆபத்து நேரிடும்' என்ருர். இதற்கு மறு உத்தரவாக, 'அமைதி, ஏனென்ருல் உன்னுடைய வார்த்தைகள் பாரசீக மன்னரின் காதுகளுக் கெட்டினுல், உன் தலைக்கே ஆபத்து வரும்' என்று டிமேராட்டஸ் கூறினுர். இதன்பின் சப்தம் இருந்த புழுதிக் காற்ருனது ஒரு மேகமாக மாறி, உயர எழுந்து ஸாலமிஸ்ஸிலுள்ள கிரேக்கக் கப்பற்படையை நோக்கிச் சென்றது. எனவே ஸெர்க்ஸீஸின் கப்பற் படைக்கு நாசம் விளையப் போகிறதை இவர்கள் அறிந்தனர்.

இதற்கிடையில் பாரசீகர்களும் போர் புரிய ஆலோசித்துத் தீர் மானத்திற்கு வந்தனர். ஹெரோடட்டஸ் கூறியிருக்கும் ஒரு ஹாலி கார்னஸஸ் (Halicarnasus) கதையின்படி கேரியாவின் இராணியாகிய ஆர்ட்டிமீஸியா மாத்திரம் முதல்தரமான அறிவுரை கொடுத்தார். பாரசீகர்கள் கிரேக்கர்களுடன் துணிந்து கடலில் போர் செய்யக் கூடாது என்றும், அவர்கள் அப்படி கிரேக்கக் கப்பற்படையைத் தாக்க வேண்டுமானுல் உணவுப் பொருள்கள் இல்லாமல் கிரேக்கக் கப்பற் படை சிதறிப் போகுமட்டும் காத்திருக்கவேண்டும்; இல்லையேல் அவர்கள் தரை மார்க்கமாக பெலோப்போனீஸஸ்ஸின்மேல் முன் னேறவேண்டும் என்றும் கூறினுர்.

ஸாலமிஸ் தீவிற்கும் அட்டிக்காவிற்கும் இடையிலுள்ள குறுகிய கடற்கழியின் தெற்குப் புகுவழியானது சிறு தீவாகிய சைட்டாலியா வாலும் (Psyttalea), ஸாலமிஸ்ஸிலிருந்து பெருநிலப்பகுதியை நோக் கிச் செல்லும் நீண்ட நிலமுனை அல்லது உந்துநிலத்தாலும் தடைப் பட்டிருந்தது. இந்த உந்துநிலத்தின் வடபாகத்தில் ஸாலமிஸ் பட்டி னத்திற்கு அருகில் கிரேக்கக் கப்பல்கள் நங்கூரம் பாய்ச்சி நின்றன. கிரேக்கர்கள் பாரசீகக் கப்பற்படையை ஆசைகாட்டி ஸாலாமினியன் விரிகுடாவிற்குள் வரும்படி கவர்ச்சி செய்தால் இது கிரேக்கர்களுக்கு மிகவும் உதவியாயிருக்கும். ஏனென்ருல் பாரசீகக் கப்பற்படையா னது இந்தக் குறுகிய நீர்ப்பாகத்தின் வழியாக வரும்போது அதன் பக்க அணியானது பாதுகாவல் இல்லாமல் இருக்கும். எனவே கிரேக்கர்கள் வெகு எளிதில் அவைகளைப் பக்கவாட்டில் தாக்கக்கூடும். அதே நேரத்தில் கிரேக்கப்படைகளை வெளியே திறந்த கடலில் வரவைத் தால் பாரசீகர்களுக்கு அதிக அனுகூலமாயிருக்கும். இரவில் தன் பகைவர்கள் இங்கிருந்து தப்பி ஓட முயலலாம் என்று ஸெர்க்ஸீஸ் எண்ணங்கொண்டார். இதைத் தடுக்க ஸெர்க்ஸீஸ் தமது கப்பற் படையைச் சிறிது முன்னே கொண்டுவந்து சைடேலியா தீவிற்கு வலது

இடது பக்கங்களிலுள்ள கடல் கழிகளாகிய வழிகளை அடைத்தார். இதன்பின் சண்டை நடக்கும்போது இத் தீவை நோக்கி நீந்திவரும் பாரசீகர்களை விடுவிக்கவும், கிரேக்கர்களைக் கொல்லவும் ஸெர்க்ஸீஸ் தம் படைவீரர்களில் சிலரை இங்கு இறக்கினர். பிற்பகலில் நடத் தப்பட்ட இந்தப் படைப் பெயர்ச்சிகள் கிரேக்கர்களைப் பயத்




படம் 2. ஸாலமிஸ் சண்டை கி.மு. 480

துடன் நடுங்கச் செய்தன. பெலோப்பொனீஸஸ்ஸிலுள்ள படைத்தலை வர்கள் யூரிபயதாஸ்ஸை ஸாலமிஸ்ஸை விட்டு வெளியேறும்படி வற்புறுத்தினர்கள். இதன் பயனாக மற்றொரு சபை கூட்டப்பட்டது. தான் மிகவும் கஷ்டப்பட்டுச் செய்த யாவும் இச் சபையில் தள்ளி விடப்பட்டுப் போகும் என்று தெமிஸ்டாக்கிளீஸ் தெளிவாக அறிந் தார். இதைத் தடுப்பதற்காக வெகு துணிச்சலான ஒரு காரியத் தைச் செய்யக் கங்கணம் கட்டிக்கொண்டார். இவர் சபையிலிருந்து வெளியேறி, இரவில் கிரேக்கர்கள் ஸாலமிஸ்ஸிலிருந்து கிளம்பிப் போர்த்திட்டமிட்டுள்ளனர் என்ற செய்தியை, பாரசீகர்களின் நன் மையை விரும்புகிறவராகிய தெமிஸ்டாக்கிளீஸ் அனுப்பினர் என்று சொல்லும்படி தம்முடைய அடிமையாகிய சிக்கின்னஸ்ஸைப் (Sicinnus) பாரசீகப் பாசறைக்கு அனுப்பி வைத்தார். கிரேக்கர்கள் போகாதபடி தடுக்கப்பட்டால், கிரேக்கர்களுக்குள் இருக்கும் ஒற் றுமை யின்மையால், பாரசீகர்களுக்கு நம்பிக்கையாக வெற்றி கிடைக் கும். அதே சமயத்தில் பாரசீகர்கள் கிரேக்கர்கள் இருக்குமிடத்தி லேயே அவர்களைத் தாக்கினுல் அத்தீனியர்கள் தமது நேசதேச நாடு

களுக்கு எதிராகத் திரும்புவார்கள் என்றும் அந்தச் செய்தியில் தெமிஸ்டாக்கிளீஸ் கூறினர். இந்தச் செய்தியை ஸெர்க்ஸீஸ் முழுவதுமாக நம்பினர். ஸாலமிஸ்ஸிற்கும் மேகாராவுக்கும் இடையிலுள்ள மேற்குக் கடல்கழியின் வழியாக கிரேக்கக் கப்பற்படைகள் தப்பி ஓடாதபடி சாயங்காலத்திலேயே ஸெர்க்ஸீஸ் பல முயற்சிகளைச் செய்தார். ஸாலமிஸ்ஸின் தெற்கு உந்துநிலப்பகுதியைச் சுற்றிக் கொண்டு மேற்கிலுள்ள இந்தக் கடல் கழியின் வழியை மறைக்கத் தனக்குக்கீழ் இருந்த 200 எகிப்தியக் கப்பல்களை இவர் அனுப்பி வைத்தார். இவர் காலையில் தாக்குதலைத் தொடங்கத் தீர்மானித்தார்—தமது பகைவர்களுக்குள் சிலர் நம்பிக்கைத் துரோகம் செய்யக்கூடும் என்ற எண்ணமே இவரை இந்தச் சாவுக்குரிய தீர்மானத்தைச் செய்யத் தூண்டியிருக்கும்.

இதற்குள் கிரேக்கப்படைத் தலைவர்கள் தமக்குள் சினத்துடன் வாதாடிக் கொண்டிருந்தனர். திடீரென்று தெமிஸ்டாக்கிளீஸ் சபையிலிருந்து வெளியே அழைக்கப்பட்டார். இவரை அழைத்தவர் அவருடைய எதிரியான அரிஸ்டைடீஸ் (Aristides) ஆவார். இவர் ஈகைனுவிலிருந்து கப்பற் செலவில் வந்து கிரேக்கக் கப்பற்படைகள் பாரசீகப் பகைவர்களால் சூழப்பட்டுள்ளன என்ற செய்தியை அறிவித்தார். தெமிஸ்டாக்கிளீஸ் அரிஸ்டைடீஸ்ஸையே மற்றக் கிரேக்கப் படைத்தலைவர்களுக்கு நடந்த யாவையும் அறிவிக்கச் செய்தார். இந்தச் செய்தியைப் பாரசீகர்களை விட்டோடிய டெனியன் (Tenian) கப்பல் ஒன்று அதே சமயத்தில் உறுதிப்படுத்தியது. அரிஸ்டைடீஸ் இந்தச் செய்தியைக் கொண்டு வந்தார் என்ற உணர்ச்சிகரமான நிகழ்ச்சியை நாம் முழுவதுமாக நம்பலாம். ஆனல் இதுவே அவர் தமது ஆஸ்ட்ரைசிஸத்திலிருந்து (ostracism) முதல் முதலாக வந்த பயணம் என்று எண்ணவேண்டாம். ஈகைனுவிற்கு அங்குள்ள ஈயாசிட்டர்களை அழைத்துவர அனுப்பப்பட்ட கப்பலில் இவர் சென்றிருக்கலாம் ; அதுவுமன்றி இவர் பத்து ஸ்ட்ரடிகங்களில் (இராணுவத் தலைவர்களில்) ஒருவராயிருந்தார்.

ஸாலமிஸ்ஸில் கிரேக்கர்களுக்கு அதிக அனுகூலமான சூழ்நிலைகளின் மத்தியில் ஒரு கப்பற் சண்டை ஏற்படவேண்டுமென்று தெமிஸ்டாக்கிளீஸ் சமாளித்து வெற்றி யடைந்தார். இரு தரப்பாரின் கப்பற்படைகள் அணிவகுத்த விதமும், அவைகள் மேற்கொண்ட நயத்திற நடவடிக்கைகளும் அதிகமான வாதங்களின் பொருள்களா யிருந்தன. பாரசீகக் கப்பற்படைகள் இந்தக் கடற்கழியின் வாயிலில் மூன்று வரிசைகளாக நிறுத்தப்பட்டிருந்தன என்று இச் சண்டையை நேரில் கண்ணுற்ற கவியாகிய ஈஸ்கைலஸ் கூறுகின்றார். இவைகளின் இடது கோடி படைச் சிறகானது அயோனியக் கிரேக்கர்களைக் கொண்

டிருந்தது. பிரியேயஸ் (Piraeus) அருகிலுள்ள வலது படைச்சிறகானது பினீஷியக் கப்பல்களைக் கொண்டிருந்தது. இந்தப் படையின்மேலே தான் ஸெர்க்ஸீஸ் முக்கியமாகத் தம் நம்பிக்கையை வைத்திருந்தார். கைனோசூரா (Cynosura) உந்து நிலத்திற்குப் பின்னால் கிரேக்கக் கப்பற் படையானது வடக்கு நோக்கி நிறுத்தப்பட்டிருந்தது. இடது பக்கத்தில்—அதாவது ஸாலமிஸ் நகரத்திற்குப் பக்கத்தில்—அத்தீனியர்களின் கப்பற்படையும், அவர்களுக்குப் பக்கத்தில் ஈகைனாவின் கப்பற் படையும், வலப் பக்கத்தில் லாஸிடிமோனியர்களின் கப்பற்படையும் வரிசையாக அணிவகுக்கப்பட்டிருந்தன. எதிராகவுள்ள பெருநிலப் பகுதியின் கரையில், ஈகேலியோஸ் (Aegaleos) மலைச் சாரலில் ஒரு பெரிய அரியணை நிறுவப்பட்டது. இதில் வீற்றிருந்து இப் போரையும் தனது வீரர்களின் நடத்தையையும் ஸெர்க்ஸீஸ் நன்றாகப் பார்க்கக் கூடும்.

காலையில் பாரசீகர்கள் கடற் கழியினுள் முன்னேற ஆரம்பித்தனர், இம் மூன்று வரிசைகளும் தம்மை மூன்று படை வரிசையாக மாற்றி அமைத்துக் கொண்டன. சைடேலியாவிற்கும் பெருநிலப் பகுதிக்கும் இடையிலுள்ள வழியாக பீனீஷியர்கள் முதலில் சென்றனர். இடப் பக்கத்திலுள்ள அயோனியர்கள் சைடேலியாவிற்கும் ஸாலமிஸ்ஸிற்கும் இடையிலுள்ள குறுகலான வழியாகத்தான் செல்லக்கூடும். பீனீஷியர்கள் தென்பட்ட உடனே அத்தீனியக் கப்பல்கள் முன்னேறிச் சென்று அவர்களைப் பக்கவாட்டில் தாக்கி ஏனைய கப்பற்படைகளிலிருந்து இவர்களைப் பிரித்து அட்டிக்காவின் கரைக்கு நேராக விரட்டியடித்தனர். இதர பாரசீகக் கப்பல்கள் கடல் காலில் நெருக்கப்பட்டு நின்றன. பயங்கரக் கைகலப்புத் துவங்கியது. இந்தக் கைகலப்பானது சாயங்கால வேளைமட்டும் நடைபெற்றது. அட்டிக்காவிற்கும் கைனோசூராவிற்கும் இடையிலுள்ள கப்பல் போகக்கூடிய பாதையானது ஒரு மைலுக்குச் சற்று அதிகமாக இருக்கின்றது. இந்தக் குறுகிய இடத்தில் போர்த் தந்திரத் திறமையைக் காட்ட இடமே காணாமல் போயிற்று. ஈகைனாவின் கப்பலோட்டிகளின் வீரமானது முனைப்பாகத் தோன்றிற்று. இவர்கள் பீனீஷியர்களின் தோல்வியை நிறைவாக்கினதுமன்றி அயோனியர்களையும் விரட்டி யடித்தனர்.

தமது மன்னனின் பார்வைக்கு முன் நின்று பாரசீகர்கள் மிகவும் வீரத்துடன் போர் புரிந்தனர். ஆனால் அவர்கள் சரியானபடி தமது படைத் தலைவர்களால் நடத்தப்படவில்லை. அதே நேரத்தில் சண்டை செய்யப்பட்ட இடமும் அவர்களுக்கு அவ்வளவாக அனுகூலமாக இல்லை. சூரியன் மறையும் நேரத்திற்குள் ஸெர்க்ஸீஸின் கப்பற் படைகளில் ஒரு பகுதி நாசமாக்கப்பட்டது. மற்றொரு பகுதி சேதப்

படுத்தப்பட்டது. ஸாலமிஸ்ஸின் கரையில் அத்தீனிய ஹாப்லிட்டர்களுடன் நின்று நிகழ்ச்சிகளைக் கவனமாகப் பார்த்துக்கொண் டிருந்த அரிஸ்டைடீஸ், சைட்டேலியாவைத் தாண்டிச் சென்று அங்கு ஸெர்க்ஸீஸ்ஸால் நிறுத்தப்பட்டிருந்த காட்டுமிராண்டியர்களை வெட்டிக் கொன்றார்.

இந்தச் சண்டையைப் பற்றிச் சொல்லப்பட்ட கதைகளில் அதிகப் புகழ் பெற்றதும், ஹாலிகார்னஸஸ்ஸில் வழக்கத்திலிருந்ததுமான கதையானது கேரியாவின் அரசியாகிய ஆர்டிமீஸியாவின் குறிப்பிடத் தக்க வீரத்தையும், அதே சமயத்தில் அவளுடைய நற்பாக்கியத்தையும் குறிப்பதாகும். மற்றொரு கேரியக் கப்பலைத் தாக்கி அதனை அமிழ்த்திய சூழ்ச்சி முறையால் ஆர்டிமீஸியா தன்னைக் காப்பாற்றிக் கொண்டாள். ஸெர்க்ஸீஸ்ஸைச் சுற்றி நின்றவர்கள் இதனைக் கண்டார்கள். ஆனால் நாசமடைந்த மூன்றடுக்குக் கப்பல் கிரேக்கர்களுடையது என்று யோசித்துக் கொண்டனர். ஆகையால் அவர்கள் ஸெர்க்ஸீஸ்ஸை நோக்கி, 'பார்த்தீரா ஐயன்மீரே, எவ்விதம் நமது ஆர்டிமீஸியா ஒரு பகைவரின் கப்பலைக் கவிழ்த்தார்' என்று கூறினார்கள். அதற்கு மறுமொழியாக ஸெர்க்ஸீஸ், 'ஆமாம், என்னுடைய ஆண்கள் பெண்களாகவும், என்னுடைய பெண்கள் ஆண்களாகவும் மாறிவிட்டனர்' என்று வியந்துரைத்தான்.

## 5. ஸாலமிஸ்ஸால் விளைந்த பயன்கள்

ஸாலமிஸ்ஸில் கிரேக்கர்களுடைய வெற்றியானது பாரசீக நாட்டின் கடற்படைகளுக்கு ஒரு தாங்கமுடியாததும் முடிவுகரமானதுமான பேரடியாகும். பினீஷியர்களின்மேல் ஸெர்க்ஸீஸ் எல்லையில்லாக் கோபத்தைக் கொண்டார். இவர்களை ஸெர்க்ஸீஸ் சார்ந்திருந்தார். சண்டையில் தமது தோல்வி பினீஷியர்களின் துரோகத்தால் உண்டாயிற்று என்று கூறினர். எஞ்சியிருந்த பினீஷியக் கப்பல்கள் இவருடைய பயமுறுத்துதலுக்கு அஞ்சி இவருடைய படையிலிருந்து ஓடின. ஆனால் இந்தப் படையெடுப்பின் இறுதி வெற்றி தம்முடையது என்று நம்பி இன்னமும் அனுகூலமான வாய்ப்புகள் இருந்து வந்தன. இதுவரையிலும் தரைப்படையானது ஒரு தோல்வியையும் அடையவில்லை. அதுவுமன்றி எண்ணிக்கையில் இந்தப் படையானது மேம்பாடுடையதா யிருந்தது. இந்தப் படைக்கு உணவுப் பொருள்கள் தருவித்து வழங்குவதுதான் ஒரு கடினமான வேலையாயிருந்தது. இத் தறுவாயில் கடலில் தமது வலிமையை இழந்தது பெரியதொரு துர்ப்பாக்கியமாயிற்று. ஸெர்க்ஸீஸைக் கிரேக்கர்கள் வீராவேசத்துடன் ஹெலஸ்பாண்டிற்குத் தரை வழியாக ஓடுகிறதாக

வும், சூசாவையடையும் வரை மூச்சுக்கூட விட முடியாதவராகவும் வர்ணித்திருக்கிறார்கள். இந்த வெற்றியை உணர்ச்சி தூண்டும்விதத்தில் புகழ்ச்சி செய்த செயலானது அப்போதிலுள்ள உண்மையான நிலைமையைத் தவறாக விவரிக்கின்றது. ஸெர்க்ஸீஸ்ஸைப் பொறுத்த வரையில் அவர் இடுக்கண் ஒன்றிலும் சிக்கவில்லை. அவருக்கு உண்மையான அபாயம் அட்டிக்காவில் இல்லை; அயோனியாவில்தான் உள்ளது. தமது கப்பற்படையானது அடைந்த கடும் தோல்வியின் செய்தியானது எவ்விதத்தில் ஆசியாவிலுள்ள கிரேக்கர்களைப் பாதிக்குமோ வென்று பாரசீகர்கள் அஞ்சுவதற்கு நல்ல காரணங்கள் இருந்தன. ஸெர்க்ஸீஸ் எதையாவது குறித்துப் பயப்பட்டிருந்தால், அது ஆசிய கிரேக்கர்களின் கலகமாகத்தான் இருக்கக்கூடும். இவர் பயந்ததற்கு ஏற்ப அடுத்த ஆண்டில் அருகே ஒரு பெரிய கலகம் ஏற்பட்டது. தம்முடைய படைகள் பின்வாங்குவதற்காகப் பாதையைப் பாதுகாப்பதே இவருடைய மிக முக்கிய எண்ணமாயிற்று. ஆயினும் கிரீஸைக் கைப்பற்ற வேண்டும் என்ற முயற்சியை இவருக்கு விட்டுவிட எண்ணம் தோன்றவேயில்லை. இந்த ஆராய்வுகள் பின்னால் என்ன நடந்தன என்பதை விளக்குகின்றன. ஹெலஸ்பாண்டிலுள்ள பாலத்தையும், பின்வாங்குவதற்கான பாதையையும் பாதுகாக்க உடனே கப்பற்படையானது அங்கு அனுப்பப்பட்டது. தரைப் படைகள் மார்டோனியஸ்ஸின் (Mardonius) தலைமையில் விடப் பட்டன. பருவகாலமானது முற்றிவிட்டபடியால் மார்டோனியஸ் தெசலியில் பனிக்காலத்தில் தங்கிவிட்டு இலையுதிர் காலத்தில் மேலும் இராணுவ நடவடிக்கைகள் எடுக்கத் தீர்மானித்தார். ஹெலஸ் பாண்டிற்கு ஸெர்க்ஸீஸுடன் செல்வதற்காகத் தரைப்படையிலிருந்து 60,000 வீரர்களைக் கொண்ட ஒரு படையானது பிரிக்கப் பட்டது.

இவர் ஹெலஸ்பாண்டை அடைந்ததும் அங்கேயுள்ள பாலமானது புயல் காற்றினால் நொறுக்கப்பட்டிருப்பதைக் கண்டார். இந்தப் புயல் காற்றுத்தான் மெக்னீஸியாவில் (Magnesia) அவர் கப்பல்களை நாசமாக்கிற்று. இவர் கப்பற்படை மூலம் அபைடாஸ்ஸைக் (Abydos) கடந்து சென்று, அங்கிருந்து ஸார்டிஸ்ஸை அடைந்தார். இவர் ஸார்டிஸ்ஸைத் தம்முடைய தலைமையிடமாக்கிக் கொண்டார். ஸெர்க்ஸீஸ்ஸின் பாதுகாப்பிற்காகச் சென்றிருந்த 60,000 போர் வீரர்கள் தெசலியிலிருந்த இராணுவப் பெரும் பகுதியுடன் சேரத் திரும்பினார்கள். வரும் வழியில் பிற்காலத்தில் புகழை யடைந்த பல்லீனி (Pallene) பூசந்தியிலுள்ள ஒலிந்தஸ் (Olynthus), பாட்டிடியா (Potidaea) என்ற நகரங்களையும் முற்றுகையிட்டனர். பியோஷியர்களுக்குச் சொந்தமான ஒலிந்தஸ் நகரம் கைப்பற்றப்பட்டு, பாரசீகர்களிடம் பற்றுறுதி கொண்டிருந்த சால்டியர்கள் வசம் கொடுக்கப்

பட்டது. பாட்டிடியா மூன்று மாதங்கள் வெற்றியுடன் இந்த முற்றுகையை எதிர்த்து நின்றது.

இதற்கிடையில் கிரேக்கர்கள் தமது வெற்றியைத் தொடர்ந்து எதுவும் செய்யாமலிருந்தனர். பாரசீகர்கள் பியோஷியாவை அடையுமுன் அவர்களுடைய பின்வாங்கும் போர் வரிசைகளைத் தோல்வியடையச் செய்ய வேண்டுமென்ற எண்ணத்துடன் கிளியோம்ப்ரோட்டஸ் (Cleombrotus)] பூசந்தியிலிருந்து புறப்படப் போனான். அக்டோபர் மாதம் இரண்டாம் தேதி மாலை இரண்டு மணிக்குத் தாம் புறப்படுமுன் பலிகள் செலுத்திக் கொண்டிருக்கும்போது சூரியன் கிரகணத்தால் முழுவதும் மறைக்கப்பட்டது. இந்தக் கெட்ட சகுனமானது தனது திட்டத்தைப் பூர்த்தி செய்யாமல், பெலப்போனீஸஸ்ஸிற்கு இவரை அணிவகுத்துத் திரும்பும்படி செய்தது. தமக்குக் கிடைக்கப் பெற்ற அனுகூலத்தைத் தொடர்ந்து பாரசீகக் கப்பற்படையை விரட்டிக் கொண்டு சென்றால் மறுபடியும் பாரசீகர்களைத் தோல்வியடையச் செய்யவும், அங்குள்ள பாலத்தைத் தவிர்க்கவும் கூடும் என்று கிரேக்கக் கப்பற்படைத் தலைவர்களிடம் கூறி, அவர்களின் மனத்தை மாற்றும்படி தெமிஸ்டாக்கிளீஸ் முயன்றார். இவர் சொற்படி நடந்திருந்தால், அயோனிய கிரேக்கர்கள் கலகம் செய்திருப்பார்கள் என்று திடமாக நம்பியிருக்கலாம். பூசந்தியானது பாரசீகத் தரைப்படையினால் இன்னமும் அச்சுறுத்தப்பட்டிருந்ததால், தூரதேசத்திற்குச் செல்ல பெலோப்போனீஸியர்கள் மறுத்தனர். தனது அறிவுரையானது தள்ளிவிடப்பட்ட போதிலும் தமது சமகாலத்தவர்களின் மெச்சுதலைப் பெற்ற, குறிக்கப்படத்தக்க திறமையால் தெமிஸ்டாக்கிளீஸ் தமது தோல்வியை உபயோகிக்கத் தீர்மானங் கொண்டதாகக் கதையொன்று கூறுகின்றது. ஸெர்க்ஸீஸின்மேல் தெமிஸ்டாக்கிளீஸ்ஸிற்குள்ள நட்பைஉறுதிப்படுத்தவே, அவர் பாரசீகக் கப்பற்படையை விரட்டிச் செல்ல கிரேக்கர்களை விடாமல் தடுத்துவிட்டார் என்று சொல்லத் தம்மேல் விடாப்பற்றுடைய தமது அடிமையாகிய சிக்கின்னஸ்ஸை ஸெர்க்ஸீஸிடம் மறுமுறையும் அனுப்பிவைத்தார். முதல் ஒருமுறை ஏமாந்ததனால் ஸெர்க்ஸீஸ் இக் கூற்றை நம்பாமல் கிரேக்கர்கள் போகிறதற்கு முன்னமே தாம் ஹெலஸ்பாண்டை அடைய அதிகத் தீவிரமாகப் போகலாம் என்று தெமிஸ்டாக்கிளீஸ் யோசித்திருக்கலாம். ஆனால் தமது வாழ்க்கையின் பின்னொரு நாளில் தாம் நாடு கடத்தப்பட்ட போது தெமிஸ்டாக்கிளீஸ் இந்தச் சேவைக்காகப் பாரசீகர்களின் நன்றியறிவைக் கோரினார். பிற்காலத்தில் தாம் ஒருக்கால் பாரசீக உதவியை அல்லது பாதுகாவலைத் தேடவேண்டிய அவசியமிருக்கும் என்று இவர் முன்பே தமது புத்திகூர்மையினால் அல்லது நம்பிக்கைத் துரோக எண்ணத்தால் அறிந்திருந்தார் என்று சிலர் கூறுகின்றனர்.

ஆனால் இந்தக் கதையில் குணகுற்றம் கண்டுபிடிக்க வேண்டிய அவசியமேயில்லை. ஏனென்றால் இந்தப் புத்திக் கூர்மை பொருந்திய அத்தீனியனின் வாழ்க்கையில் பின்னால் நடந்த தீரச் செயல்களை இக் கதை அறிந்து சேர்த்திருப்பதாகத் தோற்றமளிக்கின்றது.

பாரசிகக் கப்பற்படைக்கு ஆன்ட்ராஸ் (Andros) தீவும், யூபியாவின் நகரமாகிய காரிஸ்டஸ்ஸும் சிறு படைக்கலங்களைக் கொடுத்துதவின. மாரத்தான் யுத்தத்திற்குப் பின் எப்படி அத்தீனியர்கள் பாராஸ் (Paros) தீவிற்கு விரோதமாகச் சென்று அதனிடமிருந்து யுத்தவரி வாங்கினார்களோ அதேவிதமாக இப்போது ஆண்டராஸ், காரிஸ்டஸ்ஸிடமும் அவர்கள் செய்தனர். எப்படி மில்டியேடிஸ் பாராஸ்ஸில் தோல்வியடைந்தாரோ அதேவிதமாக அத்தீனியர்கள் ஆண்டராஸில் தோல்வியடைந்தனர். ஆனால் இவர்கள் காரிஸ்டஸ்ஸின் நிலப்பகுதியை நாசமாக்கினார்கள்.

கனவிலும் ஒருவரும் நினைக்காத இந்தப் புகழ்பெற்ற வெற்றியைக் குறித்து கிரீஸ் நாடு முழுவதிலும் மகிழ்ச்சி ஏற்பட்டது. கொள்ளைப் பொருள்களைப் பங்கிடவும், பரிசுகளை வழங்கவும் படைத் தலைவர்கள் பூசந்தியில் கூடினார்கள். ஈடெடுப்பற்ற வீரச் செயல்களுக்காக ஈஜினீட்டர்கள் கொள்ளைப் பொருள்களில் தெரிந்தெடுக்கப்பட்ட பாகத்தைப் பெற்றனர். அப்போலோவின் வேண்டுகோளின்படி டெல்பியிலுள்ள கோயிலில் மூன்று தங்க விண்மீன்கள் பதித்த வெண்கலப் பாய்மரம் ஒன்றை இவர்கள் அர்ப்பணம் செய்தனர், வீரச் செயல்களுக்கு இரண்டாவது பரிசு அத்தீனியர்களுக்கு என்று தீர்மானிக்கப்பட்டது. வீரச் செயல்கள் செய்த அல்லது புத்திக் கூர்மையுடைய தனி மக்களுக்கும் பரிசுகள் வழங்கவேண்டும் என்று தீர்மானிக்கப்பட்டது. புத்தி கூர்மைக்குப் பரிசுகள் வழங்கத் தீர்மானிக்கும் போது ஒவ்வொரு படைத்தலைவனும் இரண்டு பெயர்களைத் தகுதிக்கு ஏற்றவாறு எழுதி வரையப்பட்ட தகட்டைப் பூசந்தியிலுள்ள போசிடொனின் கோயிலிலுள்ள பலிபீடத்தில் வைத்தனர், ஒவ்வொரு படைத்தலைவனும் தனது பெயரை முதலில் எழுதி, பின்னர் இரண்டாவதாகத் தெமிஸ்டாக்கிளீஸின் பெயரைக் குறித்தனர். எனவே ஒரு பரிசும் அளிக்கப்படவில்லை. ஏனென்றால் முதற் பரிசு அளிக்கப்படாமல் இரண்டாவது பரிசு அளிப்பது வேடிக்கையாக இருந்தது என்று கதை கூறுகின்றது. இந்த அறிவு மிகுந்த கதையானது தெமிஸ்டாக்கிளீஸ் திறமை வாய்ந்தவர் என்னும்உண்மையைத் தெளிவுப்படுத்துகின்றது.

இச் சண்டையில் மடிந்த கொரிந்தியர்கள் ஸாலமிஸ்ஸில் அடக்கம் பண்ணப்பட்டனர். அவர்களுடைய கல்லறைக்குமேல் வைக்கப்

பட்ட கல்லிலே 'கடலால் பிரிக்கப்பட்ட கொரிந்து பட்டினத்தில் ஒரு காலத்தில் வசித்த எங்களை, இப்போது அஜாக்ஸ்ஸின் தீவாகிய ஸாலமிஸ் கொண்டுள்ளது' என்பதை எளிதான ஈரடிப்பாவானது அயலார்களுக்குத் தெரிவிக்கின்றது. மேற் கூறிய கல்லானது சமீப காலத்தில் கண்டெடுக்கப்பட்டது. கிரீஸ் நாட்டின் பல பாகங்களில் மகிழ்ச்சியும் துக்கமும் நிறைந்த இந் நாட்களில், நமக்குப் பெயர் தெரியாத ஆசிரியர்கள் இயற்றிய மிகப்பல கல்லறை வாசகங்களில் இது ஒன்ருகும். இந்த வாசகங்கள் யாவும் இப் பெரிய யுகத்தின் எளிமையைக் காட்டுகின்றன. இக் காலத்தின் அடக்க ஒடுக்கமானது நாணம் என்ற தோற்றத்தின் கீழ் வலிமை மிக்கவர்கள் கொண்டுள்ள பெருமையாகும் என்று வெகு உண்மையாகக் கூறப்பட்டுள்ளது. பிற்காலத்தில் இவ் வகையான அடக்க ஒடுக்க உணர்ச்சியின்றி இக் கல்லறை வாசகங்களுடன் தற்புகழ்ச்சிப் பாக்களைக் கூட்டித் திருத்தம் செய்வது கால வண்ணமாயிற்று. இந்தத் திருத்திய வாசகங்கள் பின் மரபினர்கள்மேல் இக்காலம் வரை சுமத்தப்பட்டு வந்தன. இம்மாதிரி யான அலங்கோலப்படுத்தப்பட்ட கல்லறை வாசகங்கள் யாவும் கவிஞர் சைமனைட்டீஸ்ஸின் வேலைப்பாடுகள் என்று சொல்லப்படு கின்றன. இந்த இரண்டு ஏமாற்றங்களை எடுத்து வெளிப்படுத்திய செயலானது, படையெடுப்பின் காலத்திலுள்ள கிரேக்கர்களின்மேல் நமக்குண்டான பாராட்டுதலை அதிகரித்துள்ளது. எங்குப் பார்த் தாலும் கல்லறைகளின் மேல் எளிதானதும், பொருத்தமானதுமான வாசகங்களை எழுதக் கூடிய திறமை வாய்ந்த மக்கள் இருந்தனர். இறந்து போனவர்களின் கல்லறைகளின்மேல் வைக்கும் கற்கள் வேண்டாத வீண் பெருமைகளை எழுத உபயோகிக்கப்படவில்லை.

கிரேக்கர்களுடைய வெற்றியானது கல்லறைகளின் மேல் பொறிக் கப்பட்ட இந்த இயல்பெளிமையுடைய செய்யுள் அடிகளைத் தவிர வேறு உயர்தரமான நினைவுச் சின்னங்களையும் கொண்டிருந்தது. இந்தக் காட்டுமிராண்டியர்களின் படையெடுப்பானது கிரேக்கக் கலையையும் இலக்கியத்தையும் பாதித்தது. இது உலகத்தில் மிகச் சிறந்த நூல்களையும், சிற்ப வேலைப்பாடுகளையும் உண்டுபண்ண ஏவியது. மக்கள் தமது அனுபவமானது வரலாற்றிலேயே ஒரு முக்கியத்துவம் உடையது என்று எண்ணி, அதற்கேற்ப அச் சமயமே எழுச்சியுற்றதுபோல் தோன்றினர். தங்களுடைய பாக்களிலே தமது உணர்ச்சிகளுக்கு அக் கால மாபெரும் புலவர்கள் உருவம் கொடுத் தனர். செயற்கைக் குழைவுப் பொருளில் சிற்பங்கள் செய்யும் கலைஞர்கள் தமது சிற்பங்களில் இதனைத் தெரிவித்தனர். முந்தின காலம்போல் தண்டம் கட்டவேண்டும் என்ற பயமே இல்லாமல் செயலாற்ற பிரினிகஸ்ஸிற்கு (Phrynichus) இப்போது ஒரு கட்டுரைப் பொருள் கிடைத்தது. மீடியர்களுடன் நேரில் போர் புரிந்த ஈஸ்கைலஸ்

(Aeschylus). ஸெர்க்ஸீஸின் துயரக் கதையை ஒரு நாடகத்தின் தர்க்கப் பொருளாக்கியுள்ளார். இந்த நாடகமானது இலக்கியத்திலேயே சம காலத்தில் நடைபெற்ற பெரியதொரு வரலாற்று நாடகமாயுள்ளது. உடனடியாக இல்லாவிட்டாலும் கூடச் சிறிது காலத்திற்கெல்லாம் இந்தப் பாரசிகப் போரானது பாரசீகர்கள் என்ற நாடகத்தைக் காட்டிலும் பெரிய நூல் ஒன்றைப் பிறப்பிக்கக் காரணமாயிருந்தது. இது 'வரலாற்றிற்குத் தந்தையாகிய' ஹெரோடட்டஸ்ஸின் நூலிற்கு ஒரு பொருளை ஈந்தது—அப் பொருள்தான் ஐரோப்பா ஆசியா வுடன் கொண்ட போட்டியாகும். ட்ரோஜன் யுத்தமானது இந்த நாடகத்தின் முன்ஞெரு காட்சி என்ற கருத்து உலவி வந்தது. ட்ராய் சமவெளிப்பாகத்தில் ஹெக்டருடன் அவருடைய வீரர்கள் எந்தக் காரணத்திற்காக யுத்தம் புரிந்தனரோ அதே காரணத்திற்காகவே ஸாலமிஸ், பிளெட்டியா படை வீரர்கள் யுத்தம் புரிந்தனர் என்ற கொள்கையும் மக்களைப் பீடித்திருந்தது. அதீனியாக் கோயிலின் கதவுகளையும் பலகணிகளையும் அழகுபடுத்த ஈகைஞவின் தலைசிறந்த சிற்பிகளின் வேலைப்பாடுகளாகிய இரண்டு ட்ரோஜன் யுத்தங்களின் காட்சிகளை உற்றுநோக்கிஞல் மக்கள் இந்தக் கொள்கைகளை எடுத்து உபயோகித்திருப்பதைக் காணலாம். இந்த அத்தீனியக் கோயிலின் டோரிக் தூண்கள் முன்ஞெரு காலத்தில் கிரேக்க நாடுகளில் ஈகைஞ ஒரு முக்கியமான நாடு என்பதை நமக்கு எடுத்துக் காட்டுவதற்காக இப்பொழுதும் நிற்கின்றன. ஏனைய கோயில்களில் போதிகைச் சிற்பங்களும், பலகணிகளிலுள்ள சித்திர வேலைப்பாடுகளும் கிரேக்கர் களுக்கும் பாரசீகர்களுக்கும் இடையே நடந்த போராட்டத்தைப் புராணம்போல லாபித்தர்கள் (Lapiths), சென்டார்கள் (Centaurs), தேவர்கள், அரக்கர்கள் (Titans) முதலியவர்களின் சிற்பங்களைக் கொண்டு தெரிவிக்கின்றன.

## 6. மற்ருெரு போர் எழுச்சிக்காக முன்னேற்பாடுகள்

பாரசிகர்களின் கடற்படையின் தோல்வியானது தரைப் படையின் தோல்வியுமாகும் என்று புலவர் ஈஸ்கைலஸ் கூறிய மொழி யானது அந்த நேரத்திற்கு மிகவும் பொருத்தமான கூற்றேயாகும். ஆனுல் அந்தக் கூற்ருனது அந்த நேரத்திற்கு மாத்திரமே பொருத்த மானது என்பதை மறந்துவிடக் கூடாது. ஸாலமிஸ் சண்டைக்குப் பின் தரைப்படையானது வடக்கே பின்வாங்கி, பனிக் காலத்தில் தெசலியின் சமவெளியில் தங்கியிருந்து, கப்பற்படையின் ஆதரவு அற்ற போதிலும் இளவேனில் காலத்தில் யுத்தம் செய்ய முனைந் திருந்தது. முந்தி இருந்ததைவிட தற்போது கிரீஸின் சுதந்திரத் திற்கு அதிக ஆபத்துகள் இருந்தன. ஸாலமிஸ்ஸின் வெற்றியானது

முழுவதுமாகப் பாழாக்கப்படும் போல் தோன்றியது. முதலாவதாக, கிரேக்கர்கள் அதிலும் முக்கியமாக லாஸிடீமோனியர்களும், அதீனியர்களும் ஒற்றுமையாக ஒரு காரியத்தையும் செய்ய இயலாத வர்களாக இருந்தனர். இந்த நிலைமையானது கடந்துபோன ஆண்டில் ஸாலமிஸ் சண்டைக்கு முன்னதாகத் தெளிவாகத் தென்பட்டது. லாஸிடீமோனியர்கள் பெலோப்போனீஸஸ்ஸின் நலனையே விரும்பிய தால் இவர்களுக்கு வடக்கு கிரீஸ் பிரதேசத்திற்குச் சென்று அங்கே பகைவர்களைச் சந்திக்க விருப்பமில்லை. அதே சமயத்தில் பெலோப் போனீஸியர்களின் உதவியின்றி வடக்கு கிரீஸ் மக்கள் பாரசீகர் களுக்கு எதிராக நிற்கவே முடியாததால் அவர்கள் இந்தக் காட்டு மிராண்டியருடன் உடன்படிக்கை செய்து கொள்ளும்படி கட்டாயப் படுத்தப்பட்டனர். இரண்டாவதாக, இந்தச் சங்கடங்கள் யாவும் தீர்க்கப்பட்டு, ஓர் அகில கிரேக்கப் படையானது நிறுவப்பட்டுப் பாரசீகர்களுடன் போர் புரிந்தாலும், அப்போதுகூட கிரேக்கர்களுக்கு அனுகூலம் இருக்காது. இது படைகளின் எண்ணிக்கையின் வித்தியா சத்தினாலல்ல. ஆனால் கிரேக்கர்களிடம் சரியான குதிரைப்படைகள் இல்லாத காரணத்தாலே யாகும்.

இளவேனிற்காலத்தில் ஆர்டபேஸஸ் (Artabazus) ஹெலஸ் பாண்ட் வரை ஸெர்க்ஸீஸைக் கூட்டிச் சென்ற படையினர்களும் மார்டோனியஸ்ஸின் படையுடன் சேர்ந்தனர். மார்டோனியஸ்ஸின் கீழிருந்த படைகளின் மொத்த எண்ணிக்கை நமக்குச் சரியாகத் தெரியவில்லை. ஒருகால் இது 150,000 ஆக இருக்கலாம். இதற் கிடையில் பீனீஷியர்களின் கப்பல்கள் நீங்கலாக, பாரசீகக் கப்பற் படையைச் சேர்ந்த 400 கப்பல்கள் அயோனியாவைக் காப்பாற்றும் பொருட்டு சேமாஸ்ஸில் (Samos) கூட்டிச் சேர்க்கப்பட்டன. கிரீஸின் கடற்கரைப் பாகத்தைக் காப்பாற்றும் பொருட்டு லியோட்டிக் கைடஸ்ஸின் (Leotychidas) படைத் தலைமையின் கீழ் கிரேக்கப் படையைச் சேர்ந்த 110 கப்பல்கள் ஈகைனாவில் கூட்டுவிக்கப்பட்டன. இந்தக் கப்பல்கள் தாக்குதல் செய்யக் கொண்டு வரப்படவில்லை. இவைகள் தாக்குதலைத் தடுக்கவே கொண்டு சேகரிக்கப்பட்டன. மிகக் கஷ்டத்துடன் ஷியாஸ்ஸின் தூதர்கள் லியோட்டிக்கைடாஸ்ஸை டீலாஸ் (Delos) மட்டும் முன்னேறப் பண்ணினார்கள். ஆனால் அதற்கப்பால் இவர் தம் கப்பற்படையுடன் சென்று அயோனியாவை விடுவிக்க மறுத்து விட்டார். ஏனென்றால் 'இவருக்கு ஹெராகிள்ஸ் ஸின் தூண்கள் எவ்வளவு தூரத்திலுள்ளனவோ, அவ்வளவு தூரத் தில் தான் சேமாஸ்ஸும் இருப்பதுபோல் தோன்றியது.' அதே காலையில் பாரசீகக் கடல்களில் எண்ணிறந்த மோசங்களும், ஆபத்து களும் பதுங்கிக் கிடக்கின்றன என்றும் இவர் பயந்தார். இராணுவ விவகாரங்களில் அனுபவமேயில்லாத ஸ்பார்ட்டாவின் கப்பற்

படைத் தலைவர் மனத்தில் ஒருவேளை அத்தீனியக் கோட்பாடுகள் வேலை செய்ய ஆரம்பித்திருக்கலாம். அத்தீனியர்களின் முதல் நோக்கமானது இரண்டாவது முறையாகப் பாரசீகர்கள் தமது நாட்டைக் கைப்பற்றுமல் இருக்கப் பாதுகாக்கவேண்டும் என்பதே யாகும். எனவே, இவர்கள் தமது கடற்கரைப் பகுதிகளைக் காப் பாற்றுவதற்காகக் கப்பற்படை அங்கேயேயிருக்க விரும்பினர்கள். அதுவுமில்லாமல் மற்றெரு காரியத்திற்காகவும் இவர்கள் இதையே விரும்பினர். அதாவது கப்பற்படையானது முன்னேறிச் சென்று மறுமுறையும் ஒரு கப்பற் சண்டையில் வெற்றி பெற்ருல், பெலோப் போனீஸஸ் இந்த வெற்றியின் பயனுலும், பூசந்தியிலுள்ள மதிற் சுவர்களினுலும் பாரசீகர்களின் எதிர்ப்புகளிலிருந்து நன்ருகக் காப்பாற்றப்படுவர். இவைகளின் பயனுக, பெலோப்போனீஸியர்கள் வடக்கு கிரீஸ் பாகத்தைக் காப்பாற்ற முன்வர மறுத்து மார்டோனி யஸ்ஸின் படைகளுக்கு ஆதென்ஸை இரையாக்கி விடுவர் என்று அத்தீனியர்கள் பயந்தனர். ஆகவே, நிலத்தில் ஒரு சண்டை நடந்து, யுத்தமானது தமக்கு அனுகூலமாகத் திரும்பும்வரை தமது கப்பற்படை செயல் ஒன்றும் புரியக் கூடாது என்ற கொள்கையை அத்தீனியர்கள் கொண்டிருந்தனர். இதன் காரணமாக அவர்கள் ஒரு சில கப்பல்களுக்கே படைக்கலம் பூட்டுவித்தனர்.

அத்தீனியர்களுக்கும் பெலோப்போனீஸியர்களுக்கும் இடையே யுள்ள மரணத்திற்கு ஏதுவான இப்பெரும் சுயநல பேதத்தை அறிந்த மார்டோனியஸ், கிரேக்கக் கூட்டுக் குழுவிலிருந்து ஆதென்ஸ்ஸைப் பிரித்துவிடத் தந்திரம் மிக்க ஒரு முயற்சி செய்தார். இவர் தமது தூதனுக நற்பெயர் கொண்ட மாஸிடோனியாவின் மன்னனுகிய அலெக்ஸாண்டரையே தாராளமான விருப்பறிவிப்புகளுடன் (offers) அனுப்பிவைத்தார். பாரசீகர்கள் ஆதென்ஸைத் தம் கைவசமாக்கிய தால் உண்டான நஷ்டங்களுக்குத் தாம் ஈடு கொடுப்பதாகவும், மற்றும் ஆதென்ஸிற்குப் புதிய நிலபாகங்கள் கிடைக்கும்படி உதவியளிப்பதாகவும் இவர் கூறினர். இதற்குக் கைம்மாருக ஆதென்ஸ் ஒரு சமமான தன்னுரிமை உள்ள நாடாகப் பாரசீகத் துடன் நேச உடன்படிக்கை செய்து கொள்ளவேண்டும் என்று கேட்டுக்கொண்டார். பாழாக்கப்பட்ட நிலத்தில், தமது நகரமும் நகரத்திலுள்ள கோவில்களும் இடிக்கப்பட்டு அழிவுச் சின்னங்களாகச் சிதறிக் கிடக்கின்ற நிலையில், தமது நேச நாடுகள் அட்டிக்காவின் நிலையைப்பற்றிச் சற்றும் யோசியாமல், பூசந்தியில் சுவரைக் கட்டிக் கொண்டு இருப்பதை நன்ருக அறிந்த அத்தீனியர்கள் இந்தக் கவர்ச்சிகரமான ஒப்பந்தப் பேச்சுகளுக்கு இணங்க மிகுந்த அவாக் கொண்டிருக்கலாம். அத்தீனியர்கள் இவ்விதமாகச் செய்திருந்தால் லாஸிடிமோனியர்கள் நன்கு அறிந்ததுபோல, பெலோப்போனீஸஸ்

ஸின் ஊழ்வினையானது முத்திரையிடப்பட்டிருக்கும். ஆகையால் அலெக்ஸாண்டரின் உடன்படிக்கைக்கான பேரங்களை மாறு செய்யவும், ஆதென்ஸ் படும் பாடுகளையும் இன்னல்களையும் போக்குவதற்காகப் பொருள் உதவியளிக்கவும் ஸ்பார்ட்டா தூதர்களை அனுப்பியது. மார்டோனியஸ் கொடுக்க முன்வந்துள்ள சலுகைகள் அவாவைத் தூண்டியபோதிலும், தமது நேச நாடுகளின் உதவியும் ஒத்துழைப்பும் தமக்குக் கிடைக்காது என்று அத்தீனியர்கள் அறிந்திருந்தபோதிலும், அத்தீனியர்கள் சுதந்திர இயல்புணர்ச்சியால் கட்டுண்ட பாரசீகர்கள் தமக்குக்கொடுக்க முன்வந்த சலுகைகளை உதறித் தள்ளினார்கள். அவர்களுடைய சுதந்திர தாகமே அன்னவர்களை உலகத்தில் பெரிய மக்களாக்கிற்று. 'சூரியன் தற்போது போகும் பாதையில் போய்க் கொண்டிருக்கும் வரை நாங்கள் ஸெர்க்ஸீஸ்ஸினுடன் ஒப்பந்தப் பேச்சு நடத்த முன்வரமாட்டோம் என்று அத்தீனியர்கள் சொல்லுவதாகமார்டோனியஸ்ஸிடம் நீர்போய்ச் சொல்லும்' என்று அலெக்ஸாண்டரிடம் கூறினார்கள். இந்தப் பதிலானது கிழக்குக்கும் மேற்குக்கும் இடையேயுள்ள 'நிலையான வினாவிற்கு' ஐரோப்பாவின் எழுச்சிகரமான கூற்றாக உள்ளது. இவ் விதமான உணர்ச்சிகரமான பதிலையே ஹானிபால் ரோமாபுரியின் வாயில்கள் அருகு நெருங்கும்போது செனட் கூறியது; ரோமர்களும் கோத்தியர்களும் (Goths) காடாலோனியாவின் சமவெளியில் (Catalaunian Plain) அட்டில்லாவின் குதிரைப்படையினரைச் சந்தித்தபோதும் இவ்விதமான உணர்ச்சிகரமான பதிலையே கொடுத்தனர்.

இவ் விதமாக அலெக்ஸாண்டரின் தூதுகோஷ்டியானது கிரேக்கக் கூட்டக் குழுவைப் பலப்படுத்தியிருக்கவேண்டியதே யல்லாமல் பலவீனமாக்கியிருக்க வேண்டியதில்லை. இது லாஸிடீமோனியர்களுக்கு அத்தீனியர்களின் ஒத்துழைப்பு எவ்வளவு முக்கியமானது என்று யோசிக்கச் செய்து, அதன் பயனாக ஆதென்ஸ்ஸுடன் தாம் ஒத்துழைக்கக் காத்துக்கொண்டிருக்குமாறு செய்திருக்க வேண்டும். வடக்கு கிரீஸ் பகுதிகளைக் காப்பாற்றுவதற்காகப் பெலோப்போனீஸியர்களைக் கடுமையாக வற்புறுத்த இது உதவியது. பியோஷியாவினுள் ஒரு படையானது அணிவகுத்து அனுப்பப்படும் என்று ஸ்பார்ட்டாவின் தூதர்கள் உறுதி மொழி கூறினார்கள். ஆனாலும் பெலோப்போனீஸியர்களின் தன்னலமுள்ள கோட்பாட்டிலிருந்து அவர்களை மீட்பதற்கு இதைவிட மிகவும் மேலான வற்புறுத்துதல் தேவையாக இருந்தது. அலெக்ஸாண்டரின் தூதுகோஷ்டிக்குப் பிறகு இவர்கள் பூசந்தியில் சுவரைக் கட்டி முடித்தனர். இப்போது பகைவர்களைப் பற்றி அவ்வளவு பயமில்லாததால், தமது உறுதிமொழிகளைக் கைக்கொள்ளுவதை நினைக்கவே முற்படவில்லை. எப்படி இதற்கு முந்திய ஆண்டில் கார்னியாவின் (Carnea) விழாவைக்கொண்டு சாக்குப்

போக்குக் கூறினர்களோ அவ் விதமாகவே இப்போது ஸ்பாட்டர்கள் ஹயாசிந்தியாவின் (Hyacinthia) விழாவை முன்னிட்டுச் சாக்குப் போக்குக் கூறினர்கள். இதற்குள் அட்டிக்காவை மறுபடியும் கைப் பற்றும் நோக்கத்துடன் மார்டோனியஸ் தமது படையை முன்னேறச் செய்து பியோஷியாவினுள் புகுந்தார். மறுமுறையும் அத்தீனியர்கள் தமது நேச நாடுகளால் இரக்கமற்ற விதமாக ஏமாற்றப்பட்டனர் மறுமுறையும் அவர்கள் தங்களுடைய சொந்த நிலத்தை விட்டுவிட்டு, ஸாலமிஸ்ஸிற்குத் தங்களுடைய குடும்பங்களையும் சொத்துகளையும் எடுத்துச் செல்ல வேண்டியதாயிற்று. மார்டோனியஸ் நாட்டைத் தீக்கிரையாக்காமல், அல்லது அழித்துத் தொந்தரை செய்யாமல் ஆதென்ஸ் நகரை அடைந்தார். இப்பொழுது அத்தீனியர்களை கிரேக்கப் பிணைப்பிலிருந்து பிரிக்க அதிக நம்பிக்கை கொண்டிருந்தார். இப்படி அத்தீனியர்களைப் பிரித்தால் தமக்கு வெற்றிக்கு வாய்ப்பு உண்டு என்று நம்பினர். தாம் முன்னதாக அளித்த சலுகைகளை இவர்கள் ஏற்றுக் கொள்ளாவிட்டாலும் தாம் அவர்களுடைய நாட்டைப் பாழாக்காமல் விட்டுவிட்டுப் பின்வாங்க எண்ணம் கொண்டார். ஆனல் இந்த மோசமான நிலைமையிலும், தமது நேச நாடுகள் தங்களுடைய வார்த்தைகளைக் காப்பாற்ருமல் போன மிகவும் கசப்பான ஏமாற்றத்திலும்கூட அத்தீனியர்கள் மார்டோனியஸ்ஸின் தூதன் ஸாலமிஸ்ஸில் தமது ஐந்நூற்றுவர் கூட்டத்தின் முன் சமர்ப் பித்த வஞ்சகமான கூற்றுகளை வெறுத்துத் தள்ளினர். மீடியர்களிடம் சரணடையாத ஆதென்ஸ், மேகார, பிளெட்டியா ஆகிய மூன்று வடக்கு நாடுகளும் உடனே ஸ்பார்ட்டாவிற்குத் தூதர்களை அனுப்பி, அட்டிக்காவில் மார்டோனியஸ்ஸை எதிர்க்க ஒரு படையைக் கட் டாயம் அனுப்பி வைத்துத் தமது பழைய உறுதி மொழிகளை இப் பொழுதாவது மீட்டுக் கொள்ள வேண்டும் என்றும், இல்லாவிடில் அட்டிக்காவானது வேருென்றும் செய்ய இயலாது எதிரியுடன் உடன் படிக்கை செய்து கொள்ளும் என்றும் கூறினர். இச் சமயத்திலுங் கூட ஈபார்களின் குறுகிய பெலோப்போனீஸியக் கொள்கையானது கிரீஸ் ஸைக் கிட்டத்தட்டக் காட்டிக் கொடுத்துவிடப் பார்த்தது. இந்தத் தூதர்களுக்கு ஈபார்கள் பதில் ஏதும் அளிக்காமல் பத்து நாட்கள் காலத்தைக் கழித்ததாகக் கூறப்படுகின்றது. டெகியாவிலுள்ள (Tegea) ஸில்லியாஸ் (Chileos) என்பவர் குறிக்கிடாவிட்டால் இவர்கள் கடைசியாக ஒன்றுமே செய்திருக்க மாட்டார்களெனத் தெரிகின்றது. ஸில்லியாஸ் பாரசீகர்களுடன் அத்தீனியக் கடற்படைகள் ஒப்பந்தத் திற்கு வருமாகில், ஈபார்கள் நம்பியிருக்கும் பூசந்தியிலுள்ள கோட்டைக் கொத்தளங்கள் ஒன்றுக்குமே உதவாமல் போய்விடும் என்று அடித்துக் கூறினர். இது டெகியாவிலிருந்து ஒரு தீர்க்க தரிசி தோன்றிச் சொல்லாமலே ஈபார்களுக்கு தெரிந்திருக்க வேண்டிய காரியம் என்று யாவரும் யோசிக்கக்கூடியதேயாகும். எப்படியிருந்

தாலும் இது இவ்விதமாகவே நடந்தது. தமது கொள்கையை லாஸிடீமோனிய அரசாங்கம் திடீரென மாற்றி அமைத்து, 5000 ஸ்பார்ட்ட வீரர்களையும், ஒவ்வொரு ஸ்பார்ட்ட வீரனுக்கும் ஊழியம் செய்யப் பல ஹிலாட்டர்களையும் கொண்ட ஒரு படையையும் வடக்கு கிரீஸ்ஸிற்கு அனுப்பினது. ஒரே நேரத்தில் இவ்வளவு பெரிய எண்ணிக்கையில் ஸ்பார்ட்டாவின் குடிமக்களைக் கொண்ட படையானது போருக்கு இதுவரை இறங்கியதாகத் தெரியவில்லை; இனிமேலும் இவ்வித நிகழ்ச்சி நடைபெறுது. இதன்பின் 5000 பெரியீக்கர்களைக் கொண்ட ஒரு படையும் இவர்களைப் பின்தொடர்ந்தது. ஒவ்வொரு பெரியீக்கனும் ஒவ்வொரு ஹிலாட்டைத் தமக்கு ஊழியம் செய்ய அழைத்துச் சென்றனர். ஸ்பார்ட்டா பெலோப்போனீஸஸ்ஸின் ஆபத்தை முழுவதும் உணர்ந்து, கடைசியில் எழும்பியது மிகவும் தெளிவாயிற்று. படைகளின் தலைமையானது பாசேனியஸ்ஸிடம் (Pausanias) ஒப்புவிக்கப்பட்டது. இவர் தெர்மோப்பைலீயின் வீரரின் மகனும், தனது நெருங்கிய பந்துவுமாகிய (child-cousin) பிளியஸ்டார்க்ஸ் (Pleistarchus) என்னும் குழந்தையாகிய அரசனுடைய மன்னர் பேராட்சியாளராகச் சேவை புரிந்துவந்தார். பூசந்தியில் பெலோப்போனீஸியஸ் நேச நாடுகளின் படைகளும், யூபியா, ஈகைனு, மேற்கு கிரீஸ் துணைப்பட்டாளங்களும் இந்த லாஸிடீமோனியப் படையுடன் சேர்ந்தன[1]. மேகாரியப்படைகள் மேகாரிட்டில் மற்றப் படைகளுடன் ஒன்று சேர்ந்து அப் படையைப் பலப்படுத்தின. 8000 அத்தீனியர்களையும் 600 பிளேட்டியர்களையும் கொண்ட படையை அரிஸ்டைடிஸ் நடத்திச் சென்று எலியூஸிஸ்ஸில் (Eleusis) ஏனைய படைகளுடன் ஒன்று சேர்த்தார். இம் முழுப் படையும் காலாட்படையேயாகும். சிறுதிறமான அணிகளைச் சூடிய போர் வீரர்களையும் சேர்த்துக்கொண்டால் இந்தப் படையின் மொத்த எண்ணிக்கை 100,000 போலிருக்கலாம். இப் படையை நடத்தும் பணியானது பர்சேனியஸ்ஸின் தோள்களின் மேல் விழுந்தது.

தான் முன்னதாகவே உணவுப் பொருள்கள் முதலியவற்றை ஏக அளவில் சேர்த்துவைத்த மிகவும் வலிமை பொருந்திய தீப்ஸ் கோட்டையானது மார்டோனியஸ்ஸின் மூலதளமாயிற்று. கிரேக்கப் படைகள் யுத்தத்திற்கு ஆயத்தப்படவே, மார்டோனியஸ் கடந்த இலையுதிர்காலத்தில் பாழாக்கப்பட்டுச் சோர்வுற்றுள்ள அட்டிக்காவிலிருந்துகொண்டு தனது மூலத்தளத்துடன் போக்குவரத்துத் தடைப்

[1] (அ) டெகியா, ஆர்கோமீனஸ், கொரிந்து, சிக்கியான், பிலியஸ் (Phlius), எப்பிடாரஸ், ட்ரோஸென், ஹெர்மியானி (Hermione), லெப்ரியான் (Lepreon), மைஸீனி, டிரின்ஸ் முதலியவற்றிலிருந்து வந்த படைகள் பெலோப்போனீஸிய நேச நாட்டுப் படைகள். (ஆ) சால்ஸிஸ், எரிட்ரியா, ஸ்டைரா முதலிய நகரங்களிலிருந்து வந்த துணைப் படைகள் யூபியன் படைகள். (இ) அம்பிரேஷியா, லீயூகாஸ், அனெக்டோரியன், கெப்பலேனியாவிலுள்ள பேலீயிஸ் (Paleis) முதலியன மேற்கு கிரீஸைச் சேர்ந்த நாடுகளாகும்.

படுவதை விரும்பவில்லை. எனவே ஆதென்ஸின் அழிவை முழுவதுமாக முடித்துவிட்டும், மெகாரிட் முன்னால் ஆர்ப்பாட்டம் செய்யும்படி ஒரு சிறு படையை அனுப்பி வைத்துவிட்டும், மார்டோனியஸ் பியோஷியாவிற்குப் பின்வாங்கினார். இவர் தீப்ஸ் நகரத்திற்குச் செல்லும் நேர்வழியை உபயோகிக்காமல் வடக்காகச் சென்று டீக்லியாவை (Decelea) அடைந்து, அதன்பின் பார்னெஸ் (Parnes) மலைக்கு வடக்கிலுள்ள பாதையில் சென்று டனக்ரா (Tanagra) வையும் அஸோப்பஸ் நதியின் சமவெளித் தீரத்தையும் அடைந்தார். இந்த நதிக்கு எதிர்முகமாக மேற்கே செல்லும்போது ஆதென்ஸிலிருந்து தீப்ஸ்ஸிற்குச் செல்லும் பாதையானது சிதிரோன் மலையிலிருந்து இறங்கிவரும் இடத்தில் இதனைக் கடக்கின்றது. மார்டோனியஸ் இந்த இடத்தை அடைந்தார்.

அஸோப்பஸ் நதியானது தீப்ஸ் நிலப் பகுதிக்கும் பிளெட்டியாவிற்கும் இடையிலுள்ள எல்லையாக இருந்துவந்தது. ஒருவேளை பிளெட்டியாவை நாசம்செய்யும் நோக்கத்துடன் இங்குப் பாரசீகர்கள் வந்திருக்கலாம். ஆனால் மார்டோனியஸ் அஸோப்பஸ் நதிக்கரையில் பாளையம் இறங்கியதற்கு முக்கிய எண்ணமானது தனக்குப்பின் தீப்ஸை வைத்து யுத்தம் செய்யலாம் என்பதேயாகும். பாரசீகர்கள் முழு நம்பிக்கையுடன் இருக்கக் காரணம் இருந்தது. இவர்களுடைய படை பலமானது மிகவும் வலிமையுடையதாகவும் கிரேக்கர்களின் படைத் தலைவர்களைப் பார்க்கிலும் மிகவும் திறமையுடைய படைத்தலைவன் ஒருவனைக் கொண்டிருந்ததுமா யிருந்தது. உடனே யுத்தம் ஆரம்பமாக வேண்டும் என்று மார்டோனியஸ் அவாக் கொள்ளவில்லை. ஒன்றுமே செய்யாமலிருப்பதே தனது உண்மையான படைத்தலைமைத் திறம் என்று இவர் நன்றாக உணர்ந்தார். அதிககாலம் கிரேக்கப்படைகள் யுத்தம் புரியாது நின்றால் அதன் ஒற்றுமையானது பொறாமையினாலும், கருத்து வேறுபாட்டாலும் பாதிக்கப்படும் என்று நன்கறிந்தார்.

இச் சமயத்தில் பாரசீகப் பாசறையில் ஒருவித ஊக்கமின்மையும், கடுந்துன்பம் ஒன்று ஏற்படப்போகின்றது என்பதற்கு முன்னறிகுறிகளும் தோன்றின என்னும் பிற்காலத்தில் கிரேக்கர்கள் நம்பிய கதையை நாம் புறக்கணித்து விடலாம். தீப்ஸில்நடந்த பெரிய விருந்தொன்றில் விருந்தினர்களில் ஒருவர் கூறிய துணுக்குக் கதையானது இந்தச் சோர்வடைந்ததும் இருளடைந்ததுமான மனநிலையை நன்றாக எடுத்துக் காட்டுவதாகப் பலர் நினைக்கின்றனர். மார்டோனியஸ்ஸை கனம் பண்ணும் நோக்கத்துடன் தீபப் படைத் தலைவரான ஆட்டஜினஸ் (Attaginus) ஒரு விருந்தளித்தார். நூற்றுக்கு மேலான விருந்தாளிகள் வந்திருந்தனர். விருந்தாளிகள் இரட்டைச் சாய் விருக்கைகளில் தீபன் ஒருவர் பாரசீகர் ஒருவராக இரண்டிரண்டுபேர்

அமர்த்தப்பட்டனர். ஆர்கோமினஸ்ஸைச் சேர்ந்த தெர்ஸாண்டர் (Thersander) விருந்தாளிகளில் ஒருவர். சாய்விருக்கையி லிருந்த பாரசீகர் கீழ்வருமாறு பேசியதாகப் பிற்காலத்தில் வரலாற்று அறிஞ ராகிய ஹெரோடட்டஸ்ஸிடம் கூறினுர் : 'நாமிருவரும் ஒரே மேசை யில் சாப்பிட்டு திராட்சை ரசம் பருகியுள்ளோம். ஆகையால் எனக் குத் தெரிந்த உண்மையை உமது ஞாபகத்தில் வைத்துப் போக நினைக்கின்றேன். நீங்கள் முன்னெச்சரிக்கை செய்யப்பட்டால் உங்க ளுடைய நலத்தை ஒருவாறு பார்த்துக் கொள்ளலாம். இங்கே விருந் துண்ணும் பாரசீகர்களையும், ஆற்றின் அருகே பாசறைகளில் தங்கி யிருக்கும் சேனைகளையும் பார்த்தீர்களா ? இன்னும் சில காலத்திற் கெல்லாம் இவர்களில் ஒரு சிலர்தான் உயிரோடிருப்பார்கள்.'

இவ்விதமாகப் பேசும்போது அந்தப் பாரசீகர் கண்ணீர் வடித் தார். இதனைக் கண்ட தெர்ஸாண்டர் 'மார்டோனியஸ்ஸிடம் நீர் இதைச் சொல்லக் கடமைப்பட்டிருக்கின்றீர்' என்று பதில் உரைத் தார். ஆனுல் அந்தப் பாரசீகர் என்னைப் பார்த்து 'அன்னியனே, கடவுள் நிச்சயித்திருப்பதை மனிதன் ஒருவனும் மாற்றமுடியாது. நான் சொல்லுவதை ஒருவரும் நம்பமாட்டார்கள். பாரசீகர்க ளாகிய எங்களில் அநேகருக்கு இது தெரியும். ஆகிலும் நாங்கள் சேனையை வற்புறுத்தலோடு பின் செல்கின்ருேம். பின்னுல் நடக்கப் போவதை நன்ருக அறிந்தும், ஒன்றும் செய்ய முடியாமல் இருப்பதை விட மனிதர்களுக்கு வேறு துன்பம் தரக்கூடியது ஒன்றுமில்லை' என்று கூறினுர்.

கிரேக்கப்படையானது சிதிரோன் மலையைக் கடக்கு முன்னமே, மார்டோனியஸ் அஸோப்பஸ் நதியின் வடக்கே கரையில் ஒரு கோட் டையை எழுப்பி அங்கே பாளைய மிறங்கினுர். இவர் எதிரியை எதிர்த்துச் சென்று யுத்தம் செய்யாமல், பாதுகாப்பிலிருந்து காரி யங்களை நடத்தவேண்டும் என்பதே இவருடைய திட்டமாகும். கிரேக்கர்கள் தம்மைத் தாக்குமட்டும் காத்திருக்க யோசனை கொண் டார். ஏனென்ருல் அப்போது அவர்கள் கட்டாயமாகச் சமவெளிக்கு வந்து யுத்தம் செய்யவேண்டும். அவர்கள் அவ்விதம் செய்தால் அது தமக்கு அதிக அனுகூலம் தரும். தம்முடைய தேர்ச்சிபெற்ற குதிரைப் படையைத் தமக்கு வெற்றியளிக்கும் முறையில் உபயோகிக்கலாம். ஆனுல் இதற்கு எதிராகத் தாங்கள் சிதிரோனிலிருந்து இறங்கும் போது, குதிரைப்படைகள் உபயோகிக்க முடியாத அஸோப்பஸ் நதிக்குத் தெற்கேயுள்ள கரடுமுரடானதும் உயர்ந்ததுமான நிலப் பகுதியில் எவ்விதத்திலாவது பாரசீகர்களைச் சண்டைக்கு வரச்செய் தால் கிரேக்கர்களுடைய நலத்திற்கு ஏதுவாயிருக்கும் என்று கிரேக் கர்கள் அறிந்திருந்தனர்.

## 7. பிளெட்டியாப் போர்

கிரீஸின் ஊழ்வினைப் பயனை முடிவு செய்த யுத்த களமானது வடக்கே அஸோப்பஸ் நதியையும், தெற்கே சிதிரோன் மலையையும் எல்லையாகக் கொண்டிருந்தது. இந்தப் பரந்த நிலப்பகுதியின் தென் மேற்குப் பகுதியில் பிளெட்டியா நகரமானது மேற்குக் கோடியிலுள்ள ஆருவது மலைவரிசையின்மேல் அமைந்திருந்தது. இவ் வரிசையிலுள்ள குன்றுகளின் வழியாகச் சென்று சமவெளியை அடையலாம். கிழக்குக் கோடியில் ஆதென்ஸிலிருந்து தீப்ஸிற்குப் போகும் சாலையும், மத்தியில் ஆதென்ஸிலிருந்து பிளெட்டியாவிற்குச் செல்லும் சாலையும், மேற்கில் மேகாராவிலிருந்து பிளெட்டியாவிற்குச் செல்லும் சாலையுமாக மூன்று சாலைகள் சிதிரோன் மலையிலிருந்து பியோஷியாவினுள் புகுகின்றன. அட்டிக்காவின் பாகத்தில் படிப்படியாக மேலே எழும்பி, எலியூத்திரே (Eleutherae) கோட்டையையும், ஓக் தலைகள் (Oak's Heads) கணவாயையும் அடைந்து, பின் செங்குத்தாக பியோஷிய நிலப் பகுதியில் இறங்கும் கிழக்குக் கோடிச் சாலையைக் கிரேக்கர்கள் தெரிந்தெடுத்தனர். இவர்கள் மலையின் அடுத்த பாகத்தை அடைந்ததும், பாரசீகப் பாசறையின் ஊடாக இச் சாலையானது செல்வதை அறிந்தனர். எனவே இவர்கள் கணவாயின் அடிவாரத்தில் பாளையமிறங்கும்படிக் கட்டாயப்படுத்தப்பட்டனர். ஸ்பார்ட்டர்களையும், டெகிட்டர்களையும் கொண்ட வலது படைச் சிறகானது எரித்திரி (Erythrae) பட்டினத்திற்கு மேல் பாகத்தில் உயர்ந்து காணப்படும் மலையின் மேலுள்ள காவலரணைச் சார்ந்திருந்தது. இவர்களுடைய மத்திய சிறகானது அருகில் இப் பட்டினத்திற்குத் தாழ்வான நிலப் பகுதியைச் சார்ந்திருந்தது. அத்தீனியர்களையும், மேகாரியர்களையும் கொண்ட இடது படைச் சிறகானது மலையிலிருந்து வரும் இறக்கத்தின் முடிவு வரை முன்னேறியது. இவ்விதமாக கிரேக்கர்கள் தீப்ஸிற்குச் செல்லும் சாலையில் விரித்துப் பாளையமிறங்கினர். கிரேக்கர்களுடைய படையில் வெகு எளிதாகத் தாக்கக்கூடிய பாகம்மானது இடது படைச் சிறகாகும். இதற்கு எதிராக மார்டோனியஸ் குதிரைப் படையை மாஸிஸ்டியஸ் (Masistius) தலைமையின்கீழ் அனுப்பி வைத்தார். எதிரியின் அஸ்திரங்களாலும் அம்புகளாலும் துன்புறுத்தப்பட்டுக் குதிரைப் படையின் உதவியும் இல்லாத மேகாரியர்களுக்கு உற்றிடத் துதவி தேவையாயிற்று. இடது படைச் சிறகிலிருந்து முந்நூறு அத்தீனியர்கள் போர் நடக்குமிடத்திற்குச் சென்றனர். யாவரும் தூரத்திலிருந்து பார்க்கக்கூடிய கம்பீரமான தோற்றத்தையுடைய படைத் தலைவனை மாஸிஸ்டியஸ் தமது காயப்பட்ட குதிரையிலிருந்து கீழே விழவே, இப் போரின் மாறுகட்டமானது கிரேக்கர்களின் நலத்திற்காகத் திரும்பியது. இவருடைய போர்க் கவசத்தை ஊடுருவி ஈட்டி செல்ல முடியாததால் வெகு கஷ்டத்துடன் இவருடைய

கண்ணுக்குள் ஈட்டியைக் குத்தி இவரைக் கொன்றனர். இவருடைய சடலத்தை அடையும் நோக்கத்துடன் பாரசீகக் குதிரை வீரர்கள் கிரேக்கர்களைக் கொடூரமாகத் தாக்கினர். ஆனால் இந்தத் தாக்குதல் பயன் ஏதும் அளிக்காதபடியால் பாரசீகர்கள் இதனைக் கைவிட்டனர். மாஸிஸ்டியஸ்ஸின் மரணத்தால் பாரசீகர்களின் பாசறையானது அழுகையாலும் கூக்குரலாலும் நிரம்பியது. இந்த அழுகையின் எதிரொலியானது பியோஷியா முழுவதும் கேட்டதாக ஹெரோடட்டஸ் கூறுகின்றார்.

ஆனால் இந்த வெற்றியானது கிரேக்கர்களுக்குப் பெரியதொரு அனுகூலத்தைத் தரவுமில்லை, பாரசீகர்களுக்கு மோசமான தீங்கையும் விளைவிக்கவுமில்லை. தாம் இருந்த இடத்தில் இருக்கவே பாரசீகர்கள் விரும்பினர். இவர்களுடைய பெரிய படையானது இன்னமும் அஸோப்பஸ் நதிக்கு அப்பாலேயே இருந்து வந்தது. தற்போதுள்ள நிலையில் பாரசீகர்கள் தங்களைத் தாக்கமாட்டார்கள் என்று நன்கறிந்த கிரேக்கர்கள், தமக்குக் குடிநீர் வசதிக்காக பிளெட்டியாவின் நிலப்பகுதியில் கீழ்மட்டப் பாகத்தைக் கைப்பற்ற முடிவு செய்தனர். இதைச் செய்து முடிக்க கிரேக்கர்கள் சிதிரோனின் கிளைமலைத் தொடர்களின் வழியாக வடமேற்காக எரித்திரி, இஸ்ஸியி (Hysiae) முதலிய நகரங்களைத் தாண்டிச் சென்றனர். பின்னால் நடந்த படைச் செயல்களை நன்கு அறிய சிதிரோனுக்கும் அஸோப்பஸ்ஸிற்கும் இடையிலுள்ள நிலப்பாகமானது ஒரு பள்ளத்தினால் இரண்டு பாகங்களாகப் பிரிக்கப்பட்டிருந்தது என்பதைப் பார்த்துத் தெரிந்து கொள்ளவேண்டும். தெற்குப் பாகமானது முன்னரே நாம் கவனித்தபடி ஆறு மலை வரிசைகளாலும் அவற்றைப் பிரிக்கும் ஆறுகளாலும் குறிக்கப்பட்டுள்ளது. வட நிலப்பகுதியும் இவ்விதமாகக் குன்றுகள் நிறைந்ததாகவும், மூன்று மலை வரிசைகளுடையதாகவும் இருக்கின்றது; இவைகளுக்கிடையே அஸோப்பஸ்ஸின் உபநதிகள் பாய்கின்றன. இந்தப் பள்ளமானது மேற்குப் பாகத்தில் ஒரு பெரிய தட்டையான சமவெளியாக விரிவடைகின்றது. இப் பாகத்தில் இதுவேதான் ஒரு தட்டைச் சமவெளியாகும். இச் சமவெளியானது பிளெட்டியாவின் வடக்கிலிருந்து அஸோப்பஸ் நதிவரையில் பரவியுள்ளது. இதனூடேதான் தீப்ஸ்ஸிற்குச் செல்லும் சாலையானது ஊடுருவிச் செல்கின்றது.

இறுதியில் கிரேக்கப் படையானது தீப்ஸ்ஸிற்குப் போகும் சாலைக்கும் அஸோப்பஸ் நதியின் உபநதியான மோலோயிஸ் (Moloeis) ஆற்றிற்கும் இடையிலுள்ள நிலப் பகுதியில் போருக்காக அணிவகுத்து நின்றது குறிப்பாகச் சொல்ல வேண்டுமானால் இவர்களுடைய படையானது அதிகமான அளவில் குடிநீர் வசதியுள்ள கார்காபியா (Gar-

gaphia) ஊருணிக்கும் வீரனுகிய ஆண்ட்ரோ கிரட்டிஸ்ஸின் (Andro-crates) கோயிலிற்குமிடையில் அமைந்திருந்தது. மேற்குப் படைச் சிறகு யார் வசமிருக்க வேண்டுமென்று அத்தீனியர்களுக்கும் டெகீட்டியர்களுக்கும் ஒரு வாதம் ஏற்பட்டதாகச் சொல்லப்படுகின்றது. லாசிடீமோனியர்கள் இந்த வழக்கை (நாம் முன் கவனித்த விதமாக) அரிஸ்டைடீஸ்ஸின் தலைமையின்கீழ் உள்ள அத்தீனியர்களுக்கு அனுகூலமாகத் தீர்ப்பளித்தனர். வலப் பாகத்தில் லாஸிடீமோனியர்களுக்கு அருகில் டெகீட்டியர்கள் நிறுத்தப்பட்டனர். சிதிரோன் மலையிலுள்ள கிழக்குக்கணவாய்களைப்பாசேனியஸ் இப்போது அடக்கியாள முடியவில்லை. கிரேக்கர்கள் தாம் முதல் இருந்த இடத்தைக் காலி செய்த மாத்திரத்தில், பாரசிகப் படைத் தலைவர் அந்தச் சாலைகளைக் கைப்பற்றிக் கொண்டதுமல்லாமல், கிரேக்கப் படைகளுக்கு ஆகாரம் முதலியன எடுத்துச் செல்லும் ஒரு படைக் குழுவையும் தடுத்தனர். எந்நாளும் கிரேக்கப் படைத் தலைவர் தமது பகைவர் தம்மைத் தாக்குவர் என்று எதிர்பார்த்திருந்தார். ஆனல் மார்டோனியஸ் குதிரைப்படைகளைக்கொண்டு தூசிப் படைப்போர் (skirmish) நடத்தினுரே அல்லாது மற்றப்படி கிரேக்கர்களைத் தாக்காது அவர்களுடைய தாக்குதலை எதிர்நோக்கிப் பாதுகாப்பிலிருந்து வந்தார்.

பாரசீகக் குதிரைப் படையானது ஆற்றைக் கடந்து, மலை வரிசையில் வட்டமிட்டுக் கொண்டும், கிரேக்கப் பாசறையில் பாணங்களை விடுத்துக் கொண்டும் கடைசியில் கார்காப்பியாவின் சுனையில் நீர் வராமல் தடுத்தும் இவ்விதமாக அவர்களை வாதித்து வந்தது. இவ்விதமான மகா பலவீனமான நிலையில் கிரேக்கர்கள் இரண்டு நாட்களாக ஒன்றும் செய்யாமல் இருந்ததாகத் தெரிகின்றது. கிரேக்கர்களுக்கு மலை பாகத்திற்குத் திரும்பி ஹஸ்ஸீயிக்கும் பிளெட்டியாவிற்கும் இடையிலுள்ள மலை வரிசையில் தமது பாளையத்தை நிறுவ வேண்டும், அல்லது முக்கியமான கணவாயின் அடிவாரத்தில் தாம் இழந்துபோன பழைய இடத்தைத் திரும்பவும் அடையவேண்டும் என்பதாகிய ஒரே வழிதான் இருந்தது. ஏனென்றுல் இவர்களுக்கு அஸோப்பஸ் நதியைக் கடந்து பாரசீகக் குதிரைப் படையை எதிர்த்து நிற்பது இயலாத காரியமாயிருந்தது. பாசேனியஸ் யுத்தத்தைப் பற்றி ஆலோசிக்க ஒரு போர் அவையைக் கூட்டுவித்தார். இந்த அவையில் கிரேக்கப் படையான்து ஹிஸ்ஸியிற்கும் பிளெட்டியாவிற்கும் இடையிலுள்ள வசதியான இடத்தை அடையவேண்டுமென்றும், கிரேக்கப் படையில் ஒரு பகுதியானது மலைச் சரிவிற்குச் சென்று பிளெட்டியாவிலிருந்து ஆதென்ஸ்ஸிற்குச் செல்லும் பாதையிலுள்ள கணவாயை மறுமுறையும் தம் வசப்படுத்திக் கொள்ள வேண்டுமென்றும் தீர்மானிக்கப்பட்டது. இரவிலேயே இப் படைப் பெயர்ச்சி யாவையும் முடித்து விடவும் தீர்மானிக்கப்பட்டது. பார

சீகப் படைத்தலைவர் பொறுமையற்று கிரேக்கர்களைத் தாக்க யோசனை கொண்டிருப்பதை ஒருவேளை பாசேனியஸ் கேள்வியுற்றிருக்கலாம். மேற்படி பின்வாங்குதல் திட்டமானது எக் காரணத்தால் ஆன போதிலும், அது கிரேக்கர்களுக்கு மிகவும் அனுகூலமாயிருந்தது. இந்தத் திட்டமானது சரிநுட்பத் திறத்துடன் நிறைவேற்றப்படா விட்டாலும், ஸாலமிஸ்ஸில் நடந்தது போலப் பாரசீகர்கள் தமது பகைவர்கள் தெரிந்தெடுத்த சூழ்நிலைகளில், தமக்கு அனுகூலமில்லாத




படம் 3. பிளெட்டியா யுத்தம் கி.மு. 479

நிலையில் போரிட வேண்டியதாயிற்று. அதே காலையில் பாரசீகப் பாசறையில் ஏற்பட்டுக் கொண்டிருக்கும் சதிகளையும், பிரிவினைகளையும் நாம் அறிந்திருந்தால், ஏன் மார்டோனியஸ் இவ்வளவு காலமும் தாம் கைப்பற்றிய பாதுகாப்புத்திற முறையைக் கைவிட்டுவிடத் தீர்

மானித்தார் என்பது நமக்கு நன்கு விளங்கும். இவருக்கும் பதவியில் இவருக்கு அடுத்த படைத் தலைவரான ஆர்ட்டாபாஸஸ்ஸிற்கும் (Artabazus) ஒரு படு போட்டி எற்பட்டதாகத் தெரிகின்றது. இதற்குப் பின் ஏற்பட்ட யுத்தத்தில் ஆர்ட்டாபோஸஸ் ஒன்றுமே செய்ய வில்லை. ஒருவேளை மார்டோனியஸ் வெற்றியின் புகழ்ச்சியைப் பெறக் கூடாது என்று இவர் விரும்பினர் போலும்.

பிளெட்டியாவிற்குச் சற்றுத் தென் கிழக்கில் சிதிரோனின் கிளை மலைத்தொடர் ஒன்று நதியொன்றின் இரு கிளைகளால் சூழப்பட் டுள்ளது. இக் கிளைகள் மறுமுறையும் மலைவரிசையின் அடிவாரத்தில் ஒன்று சேர்கின்றன. இவ்வாறுகளால் சூழப்பட்ட இந்த நிலப் பகுதி தீவு என்ற பெயரால் அழைக்கப்பட்டு வந்தது. லாஸிடீமோனியர் களுக்கு அடுத்து, கிரேக்கப் படையின் மத்திய பாகத்தில் அத்தீனி யர்கள் நின்று போர் செய்ய வேண்டுமெனப் புதிதாக வகைப்படுத்தப் பட்டு, அவர்கள் மேற்கூறிய மலைவரிசைக்குப் பின் வாங்கும்படி கட்டளையிடப்பட்டனர். எவ்விதமாகத் திட்டமிடப்பட்டதோ அவ்வித மாகவே இடப்படைச் சிறகானது அத் திட்டத்தை நிறைவேற்றி, பிளெட்டியாவின் கோட்டைச் சுவர்களுக்குச் சற்று வெளியேயுள்ள ஹீராவின் (Hera) கோயிலிற்கு முன் அணிவகுத்து நின்றனர். ஆனல் அத்தீனியர்கள் ஏதோ விளங்காத ஒரு காரணத்தால் இந்தக் கட்டளைகளுக்குக் கீழ்ப்படியாது. தன்னந்தனியாக மிகவும் பயங்கர மான நிலைமையில் தாம் முந்தியிருந்த இடத்திலேயே தாமதித்து விட்டனர். லாஸிடீமோனியர்களும் குறுகிய இரவில் விலையுயர்ந்த மணி நேரங்களை வீணகச் செலவிட்டதாகத் தெரிய வருகின்றது. ஸ்பார்ட்டாவின் ஒரு படைத் தலைவனின் பிடிவாதமே அவர்களுடைய சுணக்கத்திற்குக் காரணம் என்று கூறப்படுகின்றது. இவர் யுத்த அவையின் கூட்டத்திற்குப் போகவில்லை. எனவே அங்கு நடந்தது யாது என்றறியாததனுல் பின் வாங்க மறுத்தார். அமாம்ப்பரேட்டஸ் (Amompahretus) என்பது இவருடைய பெயராகும். இவருடைய வீரத்தைப்பற்றி ஒருவருமே குறை கூறியதில்லை. எனவே பாசேனியஸ் இவரைப் பின்னுக விட்டுவிட்டுச் செல்வதற்கு இணங்கவேயில்லை. ஆனல் கதிரவன் எழும் நேரம் விரைந்து வரவே பாசேனியஸ் தமது அணிகளை வகுத்துச் செல்ல ஆரம்பித்தார். அப்பொழுது கூடத் தம் முடைய பிடிவாதமான படைத்தலைவர் தம்மை யாவரும் விட்டுச் செல்வதை அறிந்தால் தம் பின் தொடர்வார் என்ற முழு எண்ணத் துடனேதான் பாசேனியஸ் முன் செல்ல ஆரம்பித்தார். இவர் நினைத் தது மாதிரியே நடந்தது. தாங்கள் கிட்டத்தட்டப் பத்து ஸ்டேட்கள்[1] தூரத்திற்கு மேல் வந்த பிறகு, ஸ்பார்ட்டர்கள்

[1] ஸ்டேட் (stade) என்பது கிரேக்கர்கள் கணக்குப்படி 600 அடிகள் கொண்ட தூரமாகும்.

அமாம்ப்பரேட்டஸ் வருவதைக் கவனித்து அவருக்காகக் காத்துக் கொண்டிருந்தனர். ஆனுல் அதற்குள் பொழுது புலர்ந்தது. கிரேக் கர்கள் தங்கள் இடங்களே விட்டுவிட்டுச் சென்றிருப்பதைப் பாரசீகர்கள் கண்டனர். கிரேக்கர்களுடைய படைகள் பிரிந்திருப் பதைக் கண்ட மார்டோனியஸ் கிரேக்கர்களேத் தாக்குவதற்கு இதுவே நல்ல சமயம் என்று தீர்மானித்தார். இவருடைய குதிரைப் படையா னது மேல் ஏறிச் சென்று லாஸீடீமோனியர்களே முன்னேறவிடாமல் தடுத்தது. முன்னேறிவரும் பாரசீகக் குதிரை வீரர்களேயும், மிக விரை வில் அவர்களுக்கு உதவியளிக்க மார்டோனியஸ்ஸின் தலைமையின் கீழ் வந்து கொண்டிருந்த பாரசிகர்களின் முக்கியப் படையையும் பாசேனியஸ் ஹிஸ்ஸியா மலேயின் சரிவில், தற்காலத்திலுள்ள கிரீக்கௌக்கி (Kriekouki) என்னும் கிராமத்திற்கு அருகில், எதிர்த்து நின்று யுத்தம் செய்யக் கட்டாயப்படுத்தப்பட்டார். பிரம்புகளா லாகிய தங்களது கேடயங்களேக் கொண்டு பாரசீகர்கள் ஒரு தடுப்பை ஏற்படுத்தி அதன் பின் நின்று கொண்டு எண்ணிக்கைக்கு அடங்காத அம்புகளே எய்தார்கள். கிரேக்கர்களுக்குள் அநேகர் மடிவுற்றதால், கிரேக்கர்கள் சற்றுத் தயங்கினர். கடைசியில் பாசேனியஸ் ஹீராவின் கோயிலே நோக்கி அங்குள்ள தேவதையை வணங்கினுர். இந்தத் தொழுகைக்குப் பின் பலிகள் இடப்பட்டன. அப்பொழுது தீர்க்க தரிசிகள் நல்ல சகுனங்கள் பலவற்றைக் கண்ணுற்றனர். இதன்பின் லாஸிடீமோனியர்கள் எதிரிகளுக்கு அஞ்சாமல் முன்னேறினர். டெகீட்டியர்களுடன் சேர்ந்து பாரசீகக் கேடயத் தடுப்பைத் தகர்த் தெறிந்து, பாரசீகர்களுக்குப் பின்பாகத்திலிருந்த மலே உயரத்திலுள்ள டீமீட்டர் கோயிலே நோக்கி அவர்களே வற்புறுத்தினுர்கள். இந்தத் திசையில் யுத்தமானது கடுமையாக நடைபெற்றது. ஈட்டி யேந்திய கிரேக்க வீரர்களின் கட்டுப்பாடானது அவர்களே உன்னத நிலேக்குக் கொண்டு சேர்த்தது. மார்டோனியஸ் யுத்தத்தில் விழவே, யுத்த மானது கிரேக்கர்களுக்கு அனுகூலமாக முடிந்தது.

அன்று நடந்த யுத்தத்தில் மிகவும் கடுமையாக லாஸிடீமோனியர் களும், டெகீட்டியர்களுமே யுத்தம் புரிந்தனர். பாசேனியஸ் மிகவும் துரிதத்துடன் ஒரு தூதனே அத்தீனியர்களிடம் அனுப்பி வைத்தார். அத்தீனியர்கள் உடனே முன்னேறினுர்கள். ஆனுல் அவர்கள் பகைவ ராகிய பாரசீகர்களின் இடது படைச் சிறகிலுள்ள கிரேக்கர்களால் பலமாகத் தாக்கப்பட்டு, முன்னேறவிடாமல் தடைப்படுத்தப்பட் டனர். இதற்குள் பிளெட்டியாவிலுள்ள ஏனைய கிரேக்கப் படை களுக்கு யுத்தம் நடைபெறுவதாகவும் அதில் பாசேனியஸ் வெற்றி பெறும் நிலேயிலுள்ளதாகவும் செய்திகள் கிடைத்தன. யுத்தம் நிகழும் இடத்தை நோக்கி அவர்கள் ஓடினர்; ஆனுல் அவர்கள் வருமுன்னரே யுத்தம் பாசேனியஸ்ஸிற்கு அனுகூலமாக முடிவுபெற்றது. இவர்

களில் சிலர் தீபக் குதிரைப் படையால் வழியில் வெட்டுண்டனர். தோல்வியுற்ற படையானது அஸோபஸ் நதியைக் கடந்து அரண்களால் வலுப்படுத்தப்பட்ட தமது பாசறையை அடைந்தனர். கிரேக்கர்கள் இவர்களைத் துரத்திச் சென்று, இவர்களது பாசறையை வலுவாகத் தாக்கினர். மார்டோனியஸ்ஸின் கூடாரமானது டெகியாவின் மக்களால் கொள்ளையடிக்கப்பட்டது. அவர்கள் மார்டோனியஸ்ஸின் பித்தளையால் செய்யப்பட்ட குதிரை லாயத்தைத் தமது நகரத்திலுள்ள அத்தினு ஏலியா (Athena Alea) கோயிலுக்குப் படைத்தனர். மார்டோனியஸ்ஸின் வெள்ளிக் கால்களையுடைய அரியாசனமும் அவருடைய உடைவாளும், மாஸிஸ்டியஸ்ஸின் மார்க்கவசத்துடன் முக்கியத்துவம் பொருந்திய இந் நாளின் நினைவுச் சின்னங்களாக சேம அரணுகிய அக்ரோபோலீஸ்ஸில் அத்தீனியர்களால் வைக்கப்பட்டன. மார்டோனியஸ்ஸின் சடலமானது பாஸேனியஸ்ஸால் நன்கு மதிக்கப்பட்டது. ஆனுல் அது புரியாத விதமாக வீபரீதமாகத் திருடி எடுத்துச் செல்லப்பட்டது. அதனை அடக்கம் செய்தது யார் என்று ஒருவருக்குமே தெரியவில்லை. தீரமுள்ள அமாம்ப்பரேட்டஸ் (Amompharetus) போன்ற வெட்டுண்ட கிரேக்க வீரர்கள் பிளெட்டியாவின் வாயில்களுக்கு எதிரே அடக்கம் பண்ணப்பட்டனர். மாண்டோரை நினைவு கொள்ளும்படி அவர்களுக்காக ஆண்டுதோறும் பலிகளைச் செலுத்தும் கௌரவமானது பிளெட்டியர்களுக்கு வழங்கப்பட்டது. பிளெட்டியர்கள் நான்கு ஆண்டிற்கு ஒரு முறை கிரேக்கர்களின் விடுதலையைக் கொண்டாட 'விடுதலையின் பண்டிகை' ஒன்றைத் தாம் நடத்துவதாக ஏற்றுக் கொண்டனர். பாஸேனியஸ் படையனைத்தையும் கூட்டுவித்து, அங்கு ஸ்பார்ட்டாவின் பெயரிலும், ஏனைய நேச நாடுகளின் சார்பிலும் பிளெட்டியாவிற்கு அரசியல் சுதந்திரத்தை உறுதி செய்து கொடுத்து, அதன் பட்டினத்தையும், நிலப் பகுதியையும் எவரும் தாக்காமல் தடுப்பதாகவும் வாக்குக் கொடுத்தார். பிளெட்டியாவின் வெற்றியின் காலமானது தீப்ஸின் தாழ்த்தப்பட்ட நேரமாயிற்று. இந்த யுத்தத்திற்குப் பத்து நாட்களுக்குப்பின் நேச நாட்டுப்படை பியோஷியாவின் முக்கிய நகரத்திற்கு எதிராக முன்னேறிச் சென்று, பாரசீகர்களுடன் குலாவி நாட்டிற்குத் துரோகம் செய்த முக்கியமானவர்களைச் சரணமடையும்படி அதிகாரத்துடன் கேட்டது. தீப்ஸ் மறுக்கவே பாஸேனியஸ், பட்டினத்திற்கு முற்றுகையிட்டார். லஞ்சத்தின் மூலம் தண்டனையை அடையாமல் தப்பிக் கொள்ளலாம் என்று எண்ணிய தலைவர்கள் தமது சொந்த விருப்பத்துடன் தம்மை உடனே பாஸேனியஸ்ஸிடம் அளிக்கும்படி செய்தனர். ஆனுல் பாஸேனியஸ், விசாரணை ஒன்றும் நடத்தாது அவர்கள் அனைவரையும் கொரிந்து பட்டணத்தில் தூக்கிலிட்டார். கிரேக்கர்களுடைய தேசிய முயற்சியில் அனுதாபம் காட்டிய தீபக் கவிஞர் ஒருவர் இதனை அறிந்து 'மனக்கிலேசம் அடைந்திருக்கலாம்.

ஸ்பார்ட்டாவின் ஹாப்லேட்டிடர்களின் ஒழுக்கத்தினுலும் படை பலத்தினுலும் தான் இந்த பிளெட்டிய சண்டையானது கிரேக்கர் களுக்கு வெற்றியாக முடிந்தது. தன்னைவிடத் திறமை பொருந்திய படைத்தலைவனை எதிர்த்து நின்ற இந்த ஸ்பார்ட்டாவின் வலிமை பொருந்திய படைத்தலைவனது திட்டங்கள், படையில் ஒற்றுமையில் லாமையாலும், முக்கியமாக அத்தீனியர்களின் முழுமனத்தோடு கூடிய ஒத்துழைப்பில்லாமையாலும், மறுபடியும் முழுப் பயனைக் கொடுக்க முடியாமல் போயிற்று. ஆனுல் வெளியிலுள்ள மற்றவர்களுக்கு இத் திட்டங்கள் யுத்த தந்திர நடவடிக்கைகள் இல்லாததால் பயனற் றவையாகக் காட்சியளித்தன. இந்த சிதிரோன் போர் எழுச்சியில் அத்தீனியர்களின் நடவடிக்கை மிகவும் கேவலமானதா யிருந்தது. இவ் விதமாக அவர்கள் இதுவரை நடந்ததேயில்லை. ஆனுல் இவர்கள் தமது யுத்தத்திறனை உபயோகித்து வரலாற்றையே மாற்றியமைத்தனர். தமது தவறுன விவரிப்பை இவ்விதமாகத் தம் பின் சந்ததியார் நம்பும் படி வெற்றிகரமாக முடித்து வைத்தனர். இவர்களுக்கு வெற்றியில் ஒரு பாகம்கூட இல்லை. ஆனுல் இவர்கள் பிற்காலத்தில் கதையை மாற்றி, தம்மை உயர்த்தியும், ஸ்பாட்டர்களை இழிவடையும்படி தாழ்த்தியும் கூறினர். இரவில் பாஸேனியஸ் திட்டமிட்டிருந்த படைப்பெயர்ச்சியை பகைவர்களிடமிருந்து வரும் என்று எதிர் பார்த்திருந்த தாக்குதலை உணர்ந்து பின்வாங்கிய ஒரு செயல் என்று குறிப்பிட்டனர். எதிர்பார்த்திருந்த தாக்குதல் என்று காட்ட ஒரு விஸ்தாரமான கதை ஒன்றையும் புகுத்தினர். கிரேக்கர்கள் தாக்கா மல் இருப்பதை அறிந்த மார்டோனியஸ் சுணக்கத்தினுல் அமைதி யிழந்து, ஒரு யுத்த அவையைக் கூட்டுவித்துத் தாக்குதலை எதிர்த்து நிற்காமல் பாரசீகர்கள் தம் தாக்குதலை ஆரம்பிக்கவேண்டும் என்று தீர்மானித்தனர். இந்த ஆபத்துகள் நிறைந்த (critical) மாஸி டோனியாவைச் சேர்ந்த அலெக்ஸாண்டர் கிரேக்கர்களிடமில்லாமல் தமது காட்டுமிராண்டியர்களாகிய நேச நாடுகளிடம் தமது அனு தாபம் இல்லை என்பதைக் காட்டினுர். இவர் அத்தீனியர்களின் புறக் காவல்மட்டும் குதிரையில் ஏறிச்சென்று அவர்களுக்குப் பாரசீக யுத்த அவையின் தீர்மானத்தை உரக்கக்கூறினுர்—ஒருவேளை நதிக்கு அடுத்த கரையிலிருந்து இவர் அறிவித்திருக்கலாம்! பாரசீகர்கள் தம்மைத் தாக்க முனைந்துள்ளனர் என்பதை அறிந்த ஸ்பார்ட்டர்கள் பார சீகர்களுடன் மாரத்தானில் யுத்தம்செய்து அவர்களின் வழிகளை அறிந்த அத்தீனியர்கள் அவர்களை எதிர்த்துப் போரிடவும், பியோஷி யர் முதலியோரின் வழிகளை அறிந்த தாம் அவர்களுடன் போர் செய் யும்படி படைச் சிறகுகளை மாற்றியமைக்க அத்தீனியர்களிடம் தாம் யோசித்துள்ள கருத்தைத் தெரிவித்தனர். இந்த யோசனையானது அத்தீனியர்களால் ஏற்றுக்கொள்ளப்படவே, புலர்காலையில் படை யில் மாறுதல் செய்யப்பட்டது. இதனைக் கண்ட பாரசீகர்கள் தமது

படையிலும் இதற்கேற்ப மாறுதலைச் செய்தனர். தமது திட்டமானது பயனற்றுப்போவதை அறிந்த கிரேக்கர்கள் தாம் நினைத்த மாறுதலை முடிக்காமல் நின்றனர். இருதரப்பார்களும் தமது முந்திய நிலைக்குத் திரும்பினர். இதன்பின் மார்டோனியஸ் ஸ்பார்ட்டர்களுக்கு ஒரு செய்தியை அனுப்பினார். இச் செய்தியில் ஸ்பார்ட்டர்கள் தமது இடத்தைவிட்டு ஓடாமலும் அல்லது கைவிடாமலும் யுத்தம் செய்பவர்கள் என்ற பெயர் பெற்றபோதிலும், கடுமையான யுத்தம் நடக்கும் என்ற இடத்தில் அத்தீனியர்களை அவர்கள் நிறுத்த முற்பட்டதனால் தாம் அவர்களுடைய வீரத்தைக் குறித்தவரையில் ஏமாற்றமுற்றதாகக் கூறினார். இதுவுமன்றி அவர்களை அகில கிரேக்கப் படைகளின் தலைவர்கள் என்ற முறையில் பாரசீகர்களின் படையில் தம் எண்ணிக்கையில் சரிசமமான படையினருடன் போருக்கு வருமாறு ஒரு சவால் விடுத்தார். இந்த் விகிதத்திற்கு ஸ்பார்ட்டர்கள் பதில் ஒன்றும் அளிக்கவில்லை. இதன் பின்னரே மார்டோனியஸ் தனது குதிரைப்படையினரை யுத்தத்தில் ஈடுபடச் செய்தார். இதன் பயனாகவே. கிரேக்கர்கள் தமது இரண்டாவது இடத்திலிருந்து பின்வாங்க நேர்ந்தது. இந்த வன்மம் மிகுந்த கதையிலுள்ள மூன்று மனங்கவர் நிகழ்ச்சிகளாகிய அலெக்ஸாண்டரின் இரவுச் செல்கை, வலப் படைச் சிறகிலிருக்கும்போது ஸ்பார்ட்டர்கள் தமது பொறுப்பைத் தள்ளிவிட எடுத்துக்கொண்ட பயனற்ற முயற்சி, மார்டோனியஸ்ஸின் சவால் முதலியன நம்பக்கூடாதவைகள். ஆயினும் இந்தக் கதையானது பரப்பப்பட்டு, நம்பப்பட்டு, ஹெரோடட்டஸ்ஸின் நூலில் ஒரு புனித இடத்தை அடைந்துள்ளது.

## 8. மைக்கேல் (Mycale) யுத்தமும் செஸ்டாஸ்ஸைக் கைப்பற்றுதலும்

ஸாலமிஸ்ஸுடன் சிதிரோன் யுத்தமும் உலக வரலாற்றில் தீர்ப்பை உண்டு பண்ணிய யுத்தமாக விளங்குகிறது. ஆதென்ஸ், ஸ்பார்ட்டா நகரங்களின் வெற்றிச் சின்னங்களாகிய மேற்கூறிய யுத்தங்களைக் கவிஞர் பிண்டார் ஒன்றுகூட்டிப் பேசுகின்றார். இந்த யுத்தங்களினால் 'வளைந்த வில்களைக் கொண்ட மீடியர்கள் அதிகமாக அல்லற்பட்டனர்' என்று அவர் கூறுகின்றார். குதிரைப்படை இல்லாத பெரிய குறைபாடு இருந்தபோதிலும் பிளெட்டியாவில் லாஸிடீமோனியர்கள் பின்வாங்குதலை ஒருசிறந்த வெற்றியாக மாற்றினர். இச் சண்டையில் ஒரு முக்கியமான காரியம் என்னவென்றால், இரு தரப்பாரின் படைகளிலும் ஒரு சிறிய பாகமே கைகலந்தது. ஸ்பார்ட்டாவும், டெகியாவுமே உண்மையான வெற்றி வேந்தர்கள்; பாரசீகப் பக்கத்தில் 40,000 படையைக் கொண்ட ஆர்டாபேஸஸ் யுத்தத்தில்

ஒரு பாகத்தையும் பெறவில்லை. மார்டோனியஸ்ஸின் மரணத்திற்குப் பின் இந்தப் படைத் தலைவர் தொலைவிலுள்ள ஹெலஸ்பாண்ட்டிற்கு உடனே திரும்பும்படி செய்தார். இதற்குப்பின் பாரசீகமானது ஐரோப்பாவிலுள்ள கிரீஸ் நாட்டு மக்களின் சுதந்திரத்தை அழிக்க முற்படவில்லை. அக் காலத்திய தீபநாட்டுப் புலவர் ஒருவர், 'நம் தலையின்மேல் விழ ஏதுவாயிருந்த டான்டலஸ்ஸின் (Tantalus) கல்லை ஒரு கடவுள் தாமே திருப்பினர்' என்று பாடினர். வரப்போக இருக்கும் ஒன்றரை நூற்ருண்டுகளுக்கு கிரேக்கப்_ பாரசீக சம்பந்தங்கள் ஆசியாவின் மேற்குப் பாகத்தில் ஓர் ஓரத்தையே பாதிக்கும். அதன்பின் வல்லரசு சமநிலையானது முழுவதுமாக மாறுதல் அடையப் பட்டுப் பாரசீகமானது ஒரு கிரேக்கனுடைய காலடியின் கீழ் வரும். ஸெர்க்ஸீஸ் ஐரோப்பாவிலுள்ள சுதந்திர நாடுகளுக்கு எதைச் செய்ய முடியாமல் நின்ருரோ அதையே மாஸிடோனியாவைச் சேர்ந்த அலெக்ஸாண்டர் ஆசியாவின் முடி அரசிற்கு எதிராகச் செய்து முடிப்பார்.

ஆசியாவின்மேல் ஐரோப்பா கொண்ட வெற்றியைக் குறித்த ஒரு ஞாபகச் சின்னமானது இந் நாள்வரை இருந்து வருகின்றது. பித்தளையால் செய்யப்பட்ட மூன்று சர்ப்பங்களைக் கொண்ட ஒரு தூணின் மேல்பாகத்தில் பொன்னுல் செய்யப்பட்ட ஒரு முக்காலியே கிரேக்கர்கள் வெற்றியைக் கொடுத்த டெல்பியிலுள்ள தம் கடவுள் களுக்கு அளித்த காணிக்கையாகும். இத் தூணின் பாதத்தில் காணிக் கையாகக் கொடுத்த கிரேக்கர்களின் நாமங்கள் வரையப்பட்டன. இத் தூணுனது பைஸான்டியத்தில் (Byzantium) இன்றும் காணப்படு கின்றது. இந்த இடமானது இரண்டாவதாக நிறுவியவரின் நாமத் தைக் கொண்டு கான்ஸ்டான்டிநோபிள் என்ற மறு பெயரைப் பெற்ற காலையில், இத் தூணுனது இவ்விடத்திற்கு மாற்றப்பட்டது. பாரசீகப் பாசறையிலுள்ள கொள்ளைப் பொருள்களைத் தமக்குள் பிரித்தெடுக்கும் போது கிரேக்கர்கள் அவைகளில் ஒரு பங்கைக் கடவுளுக்கும் மற்றொரு பங்கைத் தம் வெற்றிக்கு மூலகாரணமா யிருந்த படைத் தலைவ ருக்கும் எடுத்துவைத்தனர்.

கிரேக்கத் தரைப்படை சிதிரோன் மலைச்சாரலில் படையெடுத்து வந்த பகைவர்களிடமிருந்து கிரேக்க ஐரோப்பாவைக் காப்பாற்றிய சில நாட்களுக்கெல்லாம் கிரேக்கர்களுடைய கப்பற் படை ஆசியாவிலுள்ள கிரேக்கர்களை அவர்களுடைய பணி முதல்வரிட மிருந்து விடுவித்தது. டீலாஸ்ஸில் கிரேக்கக் கப்பற் படை இருந் தது. நாம் முன்னர் கவனித்தபடி அத்தீனியர்கள் தரையில் ஒரு யுத்தம் நடக்குமட்டும், கடலில் ஒன்றுமே செய்யாமலிருக்க வேண்டு மென்ற கொள்கையைக் கொண்டிருந்தனர். கிரேக்கர்கள் ஒரு கப்பற்

சண்டையில் வெற்றி பெற்றிருந்தால் ஒருக்கால் ஸ்பார்ட்டர்கள் இனி மேல் பாரசீகர்கள் பெலப்போனீஸஸ்ஸைக் கப்பற் படையின் உதவி யின்றித் தாக்கவியலாது என்று வட கிரீஸ்ஸை விட்டுவிட்டுப் பின் வாங்கி யிருக்கலாம். சாமாஸ் தீவின் மக்கள் (Samians) கிரேக்கக் கூட்டுக் குழுவில் தாம் சேர முயன்று, கிரேக்கக் கப்பற் படையைப் பாரசீகர்களுக்கு விரோதமாகப் போர் புரியக் கெஞ்சியதனுல்தான், டீலாஸ்ஸிலுள்ள கப்பற்படை போரில் இறங்கியது. அவ்வமையம் பாரசீகக் கப்பற்படை சாமாஸ் தீவிலிருந்தது, அதற்குச் சிறிது தூரத்தில் மைக்கேல் முனையருகே பல அயோனியத் துருப்புகளைக் கொண்ட பாரசீகப் படையானது பாளையமிறங்கி யிருந்தது. இதனை அறிந்தே சாமியர்களின் விண்ணப்பத்திற்கு அத்தீனியர்கள் இணங் கினர். லியோட்டிகைதாஸ் (Leotychidas) தீவை நோக்கிச் செல்லவே பாரசீகர்கள் தமது கப்பல்களை மைக்கேல் முனைப் பக்கத்திற்கு எடுத் துச் சென்றனர். மைக்கேல் பக்கத்திலிருந்ததால் தமது கடற் படை யானது கூடிய உதவியளிக்கும் என்பது நோக்கமாகும். கிரேக்கர்கள் மைக்கேலில் தைரியமாக இறங்கி, கப்பல்களைத் தாக்கி, அவைகளில் பலவற்றை எரித்துச் சேதமாக்கினர். அதே காலையில் அயோனியர்கள் போர்க்களத்தைவிட்டு ஓடவே, இவர்களுடைய வெற்றி நிச்சய மாயிற்று. மைக்கேல் போரன்று அயோனியர்கள் தம்முடைய சுதந் திரத்தை முழுவதுமாக அடைந்தனர். பிளெட்டியாவின் வெற்றிக்கு அடுத்தாற்போல் இந்த மைக்கேல் வெற்றி கிடைக்கவே, இந்த இரண்டு வெற்றிகளும் ஒரே நாள் பிற்பகலில் நடந்தன என்ற கோட் பாடு நிலவி வந்தது. அத்தீனியர்களும் அவர்களுடைய சகாக்களும் மைக்கேலின் கடற்கரையிலுள்ள போர்க்காலப் பதுங்கு குழிகளைத் தாக்கும்போது, பிளெட்டியாவின் வெற்றியைக் குறித்த செய்தி அவர் களுக்குக் கிட்டி அவர்களுக்கு அதிகமான ஊக்கத்தை யளித்தது என்னும் மரபு அவ்வளவாக நம்பிக்கைக்கு ஏற்றதல்ல என்று சொல்வது மிகையாகாது.

இப் பெரிய வெற்றிக்குப்பின் அத்தீனியர்களும் அயோனியர்களும் ஸான்திப்பஸ் (Xanthippus) என்னும் கப்பல் படைத் தளபதியின் தலைமையின்கீழ் ஹெலஸ் பாண்ட் பிரதேசத்தில் மும்முரமாகப் பார சீகர்களுக்கு விரோதமான வேலையிலீடுபட்டனர். ஆனுல் பெலோப் போனீஸியர்கள், லியோட்டிகைதாஸுடன் தாம் சாதித்தது போது மென்று நிம்மதியுடன் தம்மகம் திரும்பினர். அத்தீனிய குணத்திற்கும் ஸ்பார்ட்டன் குணத்திற்குமுள்ள வேறுபாடும், ஸ்பார்ட்டாவின் விழிப் புடைமை பொருந்திய கொள்கைக்கும் அத்தீனியரின் பேரரசு நிறுவ வேண்டும் என்னும் உள்ளவாவிற்கும் உள்ள வித்தியாசமும் இங்கே தெளிவாகவும், முக்கியத்துவம் வாய்ந்த விதமாகவும் தெரிவிக்கப்பட் டுள்ளது. கிழக்கு, வடகிழக்கு ஈஜியன் பாகங்களிலிருக்கும் கிரேக்கர்

களின் காரியங்களில் இதற்குமேல் தலையிட ஆவல் கொள்ளாமல் லாஸிடீமோனியர்கள் தம் நாடு திரும்ப விரும்பினர். அத்தீனியர் களோ வென்றால் அகில கிரேக்க நோக்கத்தையும் அதே நேரத்தில் தமது செல்வாக்கை விரிவாக்கவும் எண்ணங்கொண்டனர். ஹெல்லிக் கடற்கால் ஓரத்தில் நின்ற வலிமை பொருந்திய செஸ்டாஸ் கோட் டையை முற்றுகையிட்டுப் பின் கைப்பற்றினர். இந்த நிகழ்ச்சியுடன் ஹெரோடட்டஸ் பாரசீகப் போர்களின் வரலாற்றை முடித்துக் கொள்கின்றார். மைக்கேலின் வெற்றியின் இயற்கையான விளைவானது ஹெலஸ்பாண்ட் பிரதேசங்கள் தமது சுதந்திரத்தை யடைந்ததே யாகும். வரலாற்றில் இதன் முக்கியத்துவம் என்னவென்றால் இந்தச் சிறந்த காரியம் ஆதென்ஸ்ஸின் தலைமையில் நடந்ததே யாகும். பிஸிஸ்ட்ரேடஸ், மூத்த மில்டியேடிஸ் (elder Miltiades) முதலியோர் வழி காட்டிய அத்தீனியப் பேரரசு செஸ்டாஸ்ஸின் வீழ்ச்சிக்குப் பின் ஆரம்பமாயிற்று.

## 9. கீலான் (Gelon) என்னும் ஸைரகூஸின் டைரன்ட்

கிழக்கத்திய கிரேக்கர்கள் தமது பாரசீகப் பகைவர்களுக்கு எதி ராகத் தமது வருங்கால அபிவிருத்தியைப் பாதுகாத்தும், ஈஜியக் கடல் பிரதேசத்தில் தமது உடைமைகளை உறுதிப்படுத்திக்கொண்டும் இருக்கும்போது, மேற்கிலுள்ள கிரேக்கர்கள், மேற்கு மத்தியதரைக் கடலைத் தமதாக்கி, கிரேக்கர்களின் வாழ்க்கைக்கே சதாகாலமும் ஆபத்தாயிருந்த ஆசிய வல்லரசுக்கு விரோதமாகத் தம்மைப் பாதுகாக்க நேர்ந்தது. கார்த்தேஜ் (Catrhage) நகரத்தின் விரிவுக்கும் வியாபாரத்திற்கும் கிரேக்கர்கள் ஒரு முட்டுக்கட்டையாக இருந்தனர். ஆப்பிரிக்காவிலிருந்து கால் (Gaul) வரையும், ஸ்பானியாவின் கரைகளி லிருந்து இத்தாலியாவின் கரைகள் வரையுமுள்ள மேற்கு மத்திய தரைக்கடலில் தான் இராணி மாதிரியாகக் காட்சியளிக்க வேண்டு மென்று ஊக்கம் மிகுந்த இந்த பினீஷிய அரசு முயற்சிகள் பல செய்தது. இந்த முயற்சிகள் வெற்றியடைய சிசிலியிலுள்ள ஏனைய நகரங்களுடன் தான் கூடிக் குலாவி, ஒன்றான நோக்கத்தையுடையதாய் இருக்கவேண்டும்; இரண்டாவதாக கப்பல் கொள்ளைக்குப் பெயர் போன எட்ரூரியா (Etruria)வுடன் கூடிச் சேர்ந்திருக்க வேண்டும் என்றும் அறிந்தது. டஸ்கனியுடன் (Tuscany) செய்திப் போக்கு வரத்துத் தொடர்பு கொள்வதற்கும், ஸார்டினியா, கார்சீகா, (Sardinia and Corsica) முதலிய தீவுகளின்மேல் தமது ஆக்கிரமிப்பின் திட்டங்களை நிறைவேற்றுவதற்கும் இந்த ஆப்பிரிக்காவின் நகரத்திற்கு மேற்கு சிசிலியிலுள்ள தோழமை பொருந்திய பினீஷியத் துறைமுகங் களாகிய மோட்டியா (Motya), பானோர்மஸ் (Panormus), சோலஸ்

(Solus) முதலியன மிகவும் இன்றியமையாதவைகளாக இருந்தன. கார்சிக்கா, சிசிலி முதலிய தீவுகளுக்கு அருகிலுள்ள கடல்களில் பினீஷியர்களும் கிரேக்கர்களும் அடிக்கடி மோதினர். ஆறுவது நூற்றுண்டின் முதல் கால்பாகத்தில், கினிடஸ் (Cnidus), ரோட்ஸ் முதலியஇடங்களைச்சேர்ந்த டோரிய துணிகர வீரர்கள்சிசிலியில் காட்டு மிராண்டியர் வசித்த மூக்குவில், பினீஷியர்களின் வாயிலருகே தமக்கு ஒரு கால் வைக்குமிடம் கிடைக்க முயற்சி செய்தனர். இவர்களின் தலைவன் பெயர் பென்டாத்லஸ் (Pentathlus) ஆகும். கார்த்தேஜ்ஜிற்கும் மோட்டியாவிற்கும் இடையிலுள்ள போக்குவரத்தை நேராகப் பாதிக்கும்படி மோட்டியாவிற்கு அருகில் லில்லிபீயம் (Lilybaeum) முனையில் இவர் ஒரு குடியேற்ற நாட்டை நிறுவ முயன்றுர். அருகிலுள்ள எலிமியன் (Elymian) மக்களது உதவியைப் பெற்று பினீஷியர்கள் கிரேக்கப் படைகளை வென்று, பென்டாத்லஸ்ஸையும் வெட்டி வீழ்த்தினர். லில்லிபீயம் ஒரு கிரேக்க நகரமாயிருக்க வேண்டும் என்பது அதன் ஊழன்று. ஏனென்றுல் பென்டாத்லஸ்ஸின் மரணத்தைப் பழிவாங்கும் நோக்கத்துடன் ஒரு கிரேக்க வீரன் மோத்தியாவை அழித்த பல ஆண்டுகளுக்குப் பின் லில்லிபீயமானது பினீஷியர்களின் சிறப்பு வாய்ந்த அரணுயிற்று. இந்தத் தோல்விக்குப் பின் ஒரு புதிய இருப்பிடத்தைத் தேடித் திரிந்த பென்டாத்லாஸ்ஸின் வீரர்கள் சிசிலியின் வடபாகத்திலுள்ள எரிமலைகள் அதிகமாயுள்ள ஆர்ச்சிபிலாகோ தீவுகளில் இறங்கி, அவைகளில் மிகப்பெரிய தீவில் லிப்பாரா (Lipara) என்னும் குடியேற்றத்தை நிறுவினர். இந்தச் சிறிய அரசானது பொதுவுடைமைக் கோட்பாடுகளில் அமைக்கப்பட்டது. அங்குள்ள நிலம் யாவும் பொதுச் சொத்தாகும். இந்த நிலத்தைப் பொது மக்களுக்காகச் சாகுபடி செய்ய ஒரு சில குடி மக்கள் தெரிந்தெடுக்கப்பட்டனர். ஏனையவர்கள் தமது கடற்கரையில் டஸ்கன் கப்பற்கொள்ளைக்காரர் வந்து தாக்காதபடி காவல் புரிந்தனர். இந்த முறையானது பிற்காலத்தில் மாற்றியமைக்கப்பட்டது. நிலமானது லாட்ஸ் (lots) என்ற சிறு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டு மக்களுக்குக் கொடுக்கப்பட்டது. இருபது ஆண்டுகளுக்கு ஒரு முறை இந்தப் பங்குகள் திரும்ப வெவ்வேறு மக்களுக்கு வழங்கப்பட்டன.

பென்டாத்லஸ்ஸின் முயற்சி, லிப்பாரியன் தொகுதியான தீவுகளைக் கிரேக்கர் தம் வசமாக்கியது. அக்ரேகஸ்ஸில் (Acragas) புதிதாகச் சமீபத்தில் அவர் ஒரு குடியேற்றத்தை நிறுவியது ஆகிய சம்பவங்கள் கிரேக்கர்களின் முன்னேற்றத்தைத் தடுக்க கார்தேஜ்ஜைத் தட்டி எழுப்பின. எனவே இவர்கள் சிசிலிக்கு ஒரு படையை அனுப்புவதை நாம் காண்கின்றேம். இந்தப் போர்மேல் செல்லும் படையெடுப்பின் தலைவரானவர் மால்கஸ் (Malchus) என்பவர். இவர் பின்னுல் எடுக்கப்பட்ட படையெடுப்புகளுக்கு ஒரு முன்தூதன்போல் தோன்றினர்.

இவரை எதிர்த்துப் போராடியவர் ஒருகால் அக்ரேகஸ்ஸில் டிரனியை ஏற்படுத்திய பாலாரிஸ் (Phalaris) ஆக இருக்கலாம். போரானது நீண்ட காலமாக நீடித்திருந்தது. போரில் நடந்த நிகழ்ச்சிகள் யாவை என்பது தெரியாத போதிலும், இறுதியில் கார்தேஜ்ஜின் வீரர்கள் வெற்றி பெற்றனர் என்பதும், கிரேக்க நிலப்பிரதேசம் பினீஷியர்கள் வசம் ஆனதும் விளங்குகின்றன. வடக்குக் கடல்களிலும் கார்த்தேஜ் கிரேக்கர்களின் எதிர்ப்பை நேராக அனுபவத்தில் கண்ணுற்றது. மாஸாலியாவைச் (Massalia) சேர்ந்த போக்கியர்கள் (Phocaeans) ஸ்பானியாவின் கரைகளில் குடியேற்றங்களை நிறுவித் தமது செல்வாக்கை அதிகரிக்கலாயினர். காம்பைஸிஸ்ஸின் (Cambyses) நாட்களில் 'அடிக்கடி போக்கியர்கள் கார்த்தஜீனியர்களின்மேல் கடலில் வெற்றி பெற்றதாக' நமக்குக் கூறப்பட்டுள்ளது. இதுவுமன்றி தன்னுடைய ஆதிக்கத்திலுள்ளது என்று கார்த்தேஜ் கருதிய கார்சிக்காவிலேயே (Corsica) போக்கியர்கள் அலேலியா (Alalia) என்னும் இடத்தில் ஒரு குடியேற்றத்தை நிறுவிக் கார்த்தேஜ் மக்களைப் பழித்தனர். ஆனால் ஆலேலியாவின் காலம் அதிகக் குறுகியதேயாகும். போக்கியர்களின் கடற்படையைக் கார்த்தேஜ்ஜும் அதன் வலிமை பொருந்திய இட்ரஸ்கன் நேசதேச நகரங்களும் சேர்ந்து கிட்டத்தட்ட அழித்தன. உயிர் தப்பிய மாலுமிகள் தங்களுடைய குடும்பங்களையும், அங்குமிங்கு சில பொருள்களையுமே காப்பாற்ற முடிந்தது. ஆலேலியா மனித வாழ்க்கையின்றிக் காணப்பட்டது. இட்ரஸ்கர்களின் கைகளின் கீழ் கார்சிக்கா வீழ்ந்தது. கொஞ்சம் கொஞ்சமாகக் கார்த்தேஜ் ஸார்டினியாவின் கடற்கரைப் பகுதியைத் தன் வசமாக்கியது. எனவே மாசாலியாவிற்கும் சிசிலிக்குமிடையே வரிசையாகக் கிரேக்கக் குடியேற்றங்களை நிறுவவேண்டும் என்னும் யோசனையானது முடிவு பெறாமல் போயிற்று.

சிசிலியில் பினீஷியர்களின் அரசை நிறுவிப் பரவச் செய்வதே கார்த்தேஜ்ஜின் முக்கிய எண்ணமாயிற்று. பினீஷியர்களின் வட்டாரத்திற்குள் சிசிலியில் தாம் ஓர் இடத்தை அடைய வேண்டும் என்பது கினேடஸ்ஸைச் சேர்ந்த வீரனின் எண்ணமாகும். இதே எண்ணத்தை ஸ்பார்ட்டா மன்னனின் மகனாகிய டோரியியஸ் (Dorieus) என்பவருக்கும் இருந்தது என்று நாம் முன்னரே கவனித்துள்ளோம். இவரும் தோல்வியையே அடைந்தனர். ஆனால் இவ் விதமான நிகழ்ச்சிகள், சிசிலியிலுள்ள தம்முடன் போட்டியிடும் இனத்தவரைக் கடுமையாகத் தாக்குதல் அவசியம் என்னும் உண்மையை எடுத்துக் காட்டின. தான் ஸார்டினியாவுடனும் லிபியாவினுடனும் போர் நடத்திவந்த காரணத்தால் கார்த்தேஜ் இதனை உடனே எடுத்து நடத்த முடியவில்லை. ஆனால் இந்தத் தாக்குதல் கைவிடப்படவில்லை. தக்க சமயத்தில், பாரசீக மன்னர் கிரேக்கர்களின் தாயகத்தை

ஆசியாவின் மக்கள் பலம் அனைத்துடன் தாக்கும்போது இவர்கள் குடியேற்ற கிரேக்கர்களை முழுவதுமாக அழிக்க முன்வந்தனர். இப் பெரும் நிகழ்ச்சிகள் ஏககாலத்தில் நடந்தது ஒரு தற்செயலான காரிய மாகும். இவ்விரண்டு நிகழ்ச்சிகளின் காரணங்களுக்கு ஒருவித சம்பந்தமும் இல்லை. இது இப்படி யிருந்தபோதிலும் சூஸாவிலில் உள்ள அரசவையும் கார்த்தேஜ் அரசவையும் பினீஷியர்களின் மத்தி யஸ்தத்தினல் தமக்குள் தூதுச்செய்திகளை மாற்றிக் கொண்டு தாம் இருவரும் ஒரே பகைவனைத் தாக்குகின்றோம் என்ற அறிக்கை மறுக்க முடியாத உண்மையாகும்.

ஐந்தாம் நூற்றுண்டின் இரண்டாவது பத்தாண்டுக் காலத்தில் கிரேக்க சிசிலியானது நான்கு டைரன்டுகளால் ஆதிக்கஞ் செலுத்தப் பட்டுவந்தது. ரீஜியத்தைச் (Rhegium)சேர்ந்த அனக்ஸில்லாஸ் (Anaxilas) ஸாங்கிலியைத் (Zancle) தம் வசமாக்கினுர். இக் காலத்திலிருந்து ஸாங்கிள் மெஸ்ஸாஞ (Messana) என்றழைக்கப்படலாயிற்று. இவ் விதமாக இவர் கடற்காலின் இருபுறத்தையும் அடக்கி யாண்டதால், இட்ரஸ்கர்களின் கப்பற் கொள்ளைக் காரர்களை இவ் வழியை உபயோ கிக்காதபடித் தடுத்தார். இவருடைய மாமனுராகிய டெரில்லஸ் (Terillus) ஹிமிராவின் (Himera) டைரன்டாயிருந்தார். இந்தக் குடும்ப மானது சிசிலியின் வடபாகத்தில் ஆதிக்கம் செய்து வருங்காலத்தில், தென் பாகத்தில் மற்றொரு குடும்பமிருந்து ஆட்சிபுரிந்து வந்தது. இக் குடும்பத்தைச் சேர்ந்த கிலான் (Gelon) ஸைரகூஸ்ஸையும், அவரு டைய மாமனுராகிய தீரான் (Theron) அக்ரெகஸ்ஸையும் (Acragas) ஆட்சி புரிந்து வந்தனர்.

கிலான், கிலாவின் (Gela) டைரன்டாகிய ஹிப்பாக்ரெட்டீஸ்ஸின் சேனுதிபதியாக இருந்துவந்தார். ஹிப்பாக்ரெட்டீஸ், பெருமகனு கவோ அல்லது மேலாட்சியாளராகவோ, நாக்ஸாஸ் (Naxos), ஸாங்கிள் மற்றும் ஏனைய கிரேக்க நகரங்களின்மேல் தமது ஆதிக்கத் தைப் பரப்பியதுமன்றி, சைரக்கூஸைத் தம் வசப்படுத்துவதை ஒரு நோக்கமாகக் கொண்டிருந்தார். இவர் சைரக்கூஸர்களை ஹெலோரஸ் (Helorus) நதிக்கரையில் ஒரு யுத்தத்தில் தோற்கடித்தார். கொரிந்துப் பட்டினமும், கார்ஸைராவும் சைரக்கூஸின் பொருட்டுக் குறுக்கிடா விட்டால், இவர் அந்தப் பட்டினத்தைக் கைப்பற்றியிருப்பார். ஆனுல் தன்னைச் சார்ந்திருந்த காமேரினுவை (Camarina) வெற்றி வேந்தர் களுக்கு சைரக்கூஸ் கொடுக்கவேண்டியதாயிற்று. ஹிப்லாவை (Hybla) முற்றுகையிடும்போது ஹிப்பாக்ரெட்டீஸ் உயிர் துறந்தார். இவரு டைய பிள்ளைகள் இவரைப்போல டைரன்டுகள் ஆகக்கூடாது என்று கிலாவின் மக்கள் விரும்பினர். ஆனுல் பல தடவைகளில் கிலாவிற்கு வெற்றியைக் கொண்டுவந்த குதிரைப்படைத் தலைவனும், டீயினே

மீனீஸ்ஸின் (Deinomenes) மகனுமாகிய கீலான், தனது தலைவனின் பிள்ளைகளுக்காகப் போர் தொடுத்து, இறுதியில் கீலா தம்வசமானதும் அவர்களைப் பதவியிலிருந்து விலக்கி வைத்துவிட்டுத் தன்னையே டைரன்டாக்கிக் கொண்டான். தனக்கு முன் இருந்த கீலாவின் ஆட்சியாளர்கள் யோசித்து முடிக்க முடியாமல் போன சில காரியங்களை இவர் சாதித்தார். சைரக்கூஸின் பொது மக்களால் விரட்டியடிக்கப்பட்ட காமோரி (Gamori) என்னும் பிரபுக்கள், தம்மைத் தமது நகரத்தில் திரும்பவும் சேர்த்துக் கொள்ளச் செய்ய வேண்டும் என்று இவரிடம் முறையிட்டனர். கீலான் தமக்கு எதிராகக் கொண்டுவந்த படைகளை எதிர்க்கவியலாத சைரக்கூஸின் மக்கள் இவருடன் உடன்படிக்கை செய்து கொண்டனர். இதன்பின் இவர் சில குழுவினர்கள் மேலும், பொதுமக்களின் மேலும் தமது ஆதிக்கத்தை நிறுவினர். இந்த நிகழ்ச்சி நடந்த காலத்திலோ சிறிது காலத்திற்குப் பிறகோ இவர் சைரக்கூஸின் 'சகல ஆற்றல் பொருந்திய சேனாதிபதி'யாக்கப்பட்டார். ஹிரான் (Hieron) என்ற இவருடைய சகோதரன் இவருக்குப்பின் இவருடைய பதவிக்கு வந்த போது சைரக்கூஸன் குதிரைப் பலடயின் 'சேனாதிபதி' என்று புலவர் பாக்கிலைடீஸ்ஸால் (Bacchylides) அழைக்கப்பட்டார் என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது.

கீலாவின் டைரன்டு தமது சொந்த நகரை விட்டுவிட்டு, சைரக்கூஸைத் தமது இருப்பிடமாக்கிக் கொண்டார். சைரக்கூஸ் தீவின் கிழக்குப் பாகத்தைக் கொண்ட இவருடைய ஆட்சிப் பகுதிக்கு மையமாயிற்று. சிசிலியன் நகரங்களில் முதல் நகரமாக கீலா சிறிதுகாலம் விளங்கியது. தற்போது அது தனது பதவியை சைரக்கூஸிற்கு விட்டுக்கொடுத்தது. சைரக்கூஸின் இயற்கை இடமானது இதன் வலிமைக்கும் ஆக்கிரமிப்பிற்கும் ஏதுவாயிருந்தது. சைரக்கூஸ்ஸை இரண்டாம் முறையாக நிறுவியவர் என்று நாம் கீலானை அழைக்கலாம். இவர் ஆர்டிகையா (Ortygia) என்னும் தீவை, கோட்டை மதில்களால் சூழப்பட்டு உயரத்திலிருந்து கீழே நோக்குவதுபோல் தோன்றும் அக்ரடீனாவுடன் (Achradina) சேர்த்தார். ஆறுவது நூற்றாண்டில் தீவைப் பெருநிலப் பகுதியுடன் இணைத்து ஒரு துறைமுகம் கட்டப்பட்டது. ஆனபடியால் பட்டினமானது தீவு என்றழைக்கப் பட்டபோதிலும் உண்மையில் ஒரு தீவக்குறையாயிற்று. அக்ரடீனாவிலிருந்து பெரிய துறைமுகம்வரை கீலான் ஒரு கோட்டைச் சுவரை எழுப்பினார். இவ் விதமாக அக்ரடீனாவும், ஆர்டிகையாவும் ஒரே மதிற் சுவரினால் சூழப்பட்டிருந்தன. அக்ரடீனா நகரத்தின் ஒரு பாகமாயிற்று. ஆர்டிகையாவோ சேம அரணாகவே இருந்துவந்தது. சைரக்கூஸின் முக்கிய வாயிலானது துறைமுகத்திற்கு அருகில் கீலானின் புதிய சுவரில் இப்போது அமைக்கப்பெற்றது. ஆர்டிகையாவி

லுள்ள பழைய வாணிகக்களம் மிகவும் சிறியதாயிருந்ததால் இந்த வாயிலுக்கு அருகில் புதியதொரு களம் கட்டப்பட்டது. இதற்குப் பக்கத்தில் கப்பற்படைத் தளம் ஒன்று கட்டப்பட்டது. ஏனென்றால் சைரக்கூஸ் ஒரு கப்பற்படை நாடாக விளங்கவேண்டிய அவசியமிருந்தது. இப்போது அது மேற்கிலுள்ள கிரேக்க நகரங்களில் மிகவும் பெரிய நகரமாயிற்று.

பெருமை மிக்க உயர்குடியில் பிறந்த கீலான் தனது வகுப்பைச் சேர்ந்த மக்களிடமே அனுதாபம் கொண்டு, பொது மக்களை ஏறெடுத்துக்கூட கவனிக்க மறுத்தார். மக்களை 'நன்றியற்ற அண்டை வீட்டுக்காரர்' என்று இவர் வருணித்தார். இவர் சைரக்கூஸில் தமது முறை மன்றத்தை அமைத்து உயர்குடி மக்களால் சூழப்பட்டு ஓர் அரசரைப்போல் காணப்பட்டார். இவர் சைரக்கூஸின் பொது மக்களை அவ்வளவாகக் கண்டிக்காததனால், அவர்களால் இவர் வெறுக்கப்படவில்லை. ஆனால் வெளியில் தனக்குப் பொதுமக்களின் மேலுள்ள உள்ளான உணர்ச்சியைக் காட்டினார். புதிதாகப் பெரிதாக்கப்பட்ட பட்டினத்திற்கு மக்களைச் சேகரிப்பது இவருடைய முதல் நோக்கமாயிற்று. இதற்காகத் தமது ஆட்சிப் பகுதியிலிருந்து மக்களை ஏராளமான தொகையில் இடம் பெயர்த்து இங்குக் கொண்டுவந்து சேர்த்தார். தமது சொந்த நகரான கீலாவானது இப் புதிய தலை நகரத்திற்காகத் தியாகம் செய்யப்பட்டு அங்குள்ள மக்கள் தொகையில் கிட்டத்தட்ட பாதிப்பேர்கள் சைரக்கூஸிற்குக் கொண்டு சேர்க்கப்பட்டனர். யோகமற்ற காமேரினாவின் வாழ்வினைப் பயனானது இதைவிடப் பயங்கரமாயிருந்தது. கிரேக்க நகரங்களில் ஒன்றாக இருந்த இந்த நகரம் இரண்டாவது முறையாக அழிக்கப்பட்டது. சைரக்கூஸின் குடியரசினால் இந்த நகரம் அழிக்கப்பட்டு இரண்டு தலை முறைகள்கூட ஆகவில்லை. இப்போது சைரக்கூஸின் டைரன்ட் அங்கு வசித்த எல்லா மக்களையும் இழுத்துச்சென்று அவர்களை ஆட்சிபுரியும் அரசின் நகர மக்களாக மாற்றினார். வடக்கே சைரக்கூஸின் அயலக நகரமாகிய மேகாராவும், கடற்கரையில் இதைவிட சற்று மேலே யுள்ள யூபியாவும், கீலானின் தலைநகரத்தின் மக்கள் தொகை அதிகரிக்க உதவின. மேகாராவானது சைரக்கூஸின் புறக்காவலாயிற்று. யூபியாவானது முழுவதும் அழிக்கப்பட்டு அது இருந்த இடம்கூட தெரியாமல் மறைந்துவிட்டது. இந்த இரண்டு காரியங்களிலும் உயர்குடிப் பிறந்தோரின் ஒருதலையான தப்பெண்ணத்தைக் கீலானின் கோட்பாடு தெரிவிப்பதை நாம் காண்கின்றோம். இவர் மேகாரா, யூபியா நகரங்களின் உயர்குடிப் பிறந்தோரைச் சைரக்கூஸின் குடிகளாக ஏற்றுக்கொண்டு பொதுமக்களை அடிமை விலைக் களங்களில் விற்றார். கீலான் நகரங்களை அழிப்பதிலும், மக்களை ஓரிடத்திலிருந்து மற்றொரு இடத்திற்குப் பெயர்த்துக்கொண்டு சேர்த்ததிலும் தனக்

குப்பின் தோன்றிய டைரன்டுகளுக்கு ஒரு முன் மாதிரியாக இருந்தார். தாயகமாகிய கிரீஸிலிருந்தும்கூட இவர் குடியேற்ற மக்களை வருவித்தார். இவர் 10,000 கூலிப் படையைச் சேர்ந்த வீரர்களுக்கும் குடிமையை வழங்கினர்.

கீலான் தனது அரச ஆற்றலைக் கொண்டு செலுத்த இவருடைய மூன்று சகோதரர்களாகிய ஹீரான் (Hieron), பாலிஸாலஸ்(Polyzalas), த்ரேசிபூலஸ் (Thrasybulus) மிகவும் உதவினர். அக்ரேகஸ்ஸைப் பணப் பெருக்கிலும், வலிமையிலும் சைரக்கூஸிற்கு அடுத்தபடி யாகச் செய்து வைத்த தம்மைப் போன்ற டைரன்டாகிய தீரானுடன் இவர் நெருங்கிய சினேகிதர் ஆனர். கீலானைப் போல் தீரானும் உயர் குடியிற் பிறந்தவர். இவர் இம்மென்னிடியர்கள் (Emmenids) என்னும் குடும்பத்தைச் சேர்ந்தவர். இவருடைய ஆட்சியானது அமைதி வாய்ந்ததும் நேர்மை பொருந்தியதுமா யிருந்தது. தீரானின் மகளாகிய டாமாரெட்டாவை (Damareta) கீலான் திருமணம் செய்து கொண்டார். தீரான் பாலிஸாலஸ்ஸின் மகளை மணந்தார். இவ் விதமாக நெருங்கிப் பிணைக்கப் பட்ட இந்த இரண்டு நகரங்களாகிய சைரக்கூஸ், அக்ரேகஸ்ஸின் ஒளி துளங்குகின்ற மகான்கள், கடல்கடந்த நாடுகளிலிருந்து வரும் பயங்கர விபத்திலிருந்து கிரேக்க சிசிலியை விடுவிக்கும் புகழ்ச்சி பெற்ற பணியில் ஒன்று சேர்ந்து ஈடுபட்டனர்.

## 10. சிசிலியின்மேல் கார்த்தஜீனியர்களின் படையெடுப்பும் ஹீமிரா (Himera) யுத்தமும்

அக்ரேகஸ்ஸைச் சேர்ந்த தீரானுக்கும், ஹீமிராவின் டைரன்டாகிய டெரில்லஸ்ஸிற்கும் (Terillus) ஏற்பட்ட சண்டையானது ஒரு பெரும் கேட்டில் முடிந்தது. எளிதில் இக் கேடானது சிசியிலுள்ள எல்லா கிரேக்கர்களின் சுதந்திரத்தின் முடிவாக இருந்திருக்கக்கூடும். அக்ரேகஸ்ஸின் ஆட்சியாளர் தீவைக் கடந்து சென்று டெரில்லஸ்ஸை ஹிமீராவிலிருந்து விரட்டியடித்தார். ரீஜியத்திலுள்ள டைரன்டாகிய அனக்ஸில்லஸ் நாடு கடத்தப்பட்டவரின் நண்பர் ஆவார். ஆனுல் ரீஜியமானது அக்ரேகஸ், சைரக்கூஸ்ஸாகிய இரண்டு நகரங்களின் கூட்டிற்கு முன் ஒன்றும் செய்ய இயலாததாயிற்று. எனவே டெரில்லஸ் எல்லா மக்களுக்கும் பொதுப்பகைவரான கார்த்தேஜ்ஜைத் தம் உதவிக்கு அழைத்தார்.

எப்பொழுது சமயம் கிடைக்குமென கார்த்தேஜ் காத்துக்கொண்டிருந்தது. சிசிலியின்மேல் படையெடுக்க வேண்டுமென இந்த நகரானது தயார் செய்து வந்தது. டெரில்லஸ்ஸின் வேண்டுகோளானது

தாம் எப்பொழுது, எந்த இடத்தில் தாக்கவேண்டு மென்பதை மாத்திரம் உறுதி செய்தது. பாரசீகர்களை ஆதென்ஸின்மேல் படையெடுக்கும்படி எப்படி ஹிப்பயஸ் தூண்டிக் கொண்டிருந்தாரோ, அவ்விதமே டெரில்லஸ் ஹிமீராவிற்கு விரோதமாக பினீஷியர்களைத் தூண்டினார். ஆனால் இவ் விரண்டு நிகழ்ச்சிகளிலும் ஒரு டைரன்டின் வீழ்ச்சியானது படையெடுப்பின் காரணமாக இருக்கவில்லை. இந்தக் காலத்தில் சிசிலிக்கு எதிராக எடுக்கப்பட்ட கார்த்தஜீனியப் படையெடுப்பின் நோக்கமானது ஹிமீராவின் உள்ளூருக்குரிய காரியங்களை அல்லது ஒரு சிறிய கொடுங்கோலனின் நலத்தைச் சார்ந்திருக்காமல், பெரியதொரு அரசியல் காரியத்தில் காணக்கிடக்கின்றது. பாரசீகப் பெரிய மன்னனும், கார்த்தேஜ்ஜின் குடியரசும் ஏகோபித்து வேலை நடத்தின என்பதற்குச் சந்தேகமேயில்லை. கிழக்குக் கிரீஸையும் மேற்குக் கிரீஸையும் ஏகசமயத்தில் ஆனால் ஒவ்வொருவரும் சுயேச்சையாகத் தாக்கவேண்டுமென நன்றாக யோசித்துத் திட்டமிடப்பட்டிருந்தது. கார்த்தேஜின் தாயகமான பெரிய பினீஷியாவின் படைக் கப்பல்கள் பாரசீக எஜமானின் கீழ்ப் பெரிய ஹெல்லாஸ்ஸை நசுக்குவதற்காகச் செல்லும்போது, சிறிய பினீஷியாவின் நாவாய்கள் மற்ற எவருடைய உதவியுமின்றிச் சிறிய ஹெல்லாஸை நசுக்கக் கட்டுக் கட்டும். கிரேக்கர்களை அடிமையாக்கவோ அல்லது அடியோடு அழிப்பதற்கோ ஆன திட்டத்தைக் கார்த்தேஜுடன் தீர்மானம் செய்ய ஸெர்க்ஸீஸ், டயர், சைதோன் பட்டினங்களில் வசிக்கும் பினீஷியர்களை மனம் உவந்த நடுவர்களாகக் கொண்டிருந்தார். ஸெர்க்ஸீஸ்ஸிற்கு இந்த மேற்கிலுள்ள தீவின்மேல் அக்கறை ஒன்றுமே இல்லை. ஆனால் இவருக்குத் தனது தாயகமான கிரீஸைக் காப்பாற்ற மக்களையும் நாவாய்களையும் சைரக்கூஸின் பெருமகன் அனுப்பாமல் தடுப்பது ஒரு முக்கிய நோக்கமாயிற்று. தாயகமானது கீலானை உதவியளிக்குமாறு வேண்டியதையும், சிசிலிக்கு ஏற்பட்டுள்ள ஆபத்தினால் கீலான் உதவியளிக்க மறுத்ததையும் நாம் இதற்கு முன்னமே பார்த்தோம்.

யுத்தத்திற்கு வேண்டிய ஆயத்தங்கள் யாவும் சரியான முறையில் நிறைவேற்றப்பட்டபின் கார்தேஜ்ஜின் தலைவனாகிய (shophet) ஹாமில்கார் (Hamilcar) ஒரு பெரிய கப்பல் தளவாடத்துடன் பானார்மஸ் (Panormus)ஸில் வந்து இறங்கினார். இவருடைய முதல் நோக்கமானது டெரில்லஸ் (Terillus) தம்மை அழைத்தால் தாம் ஹிமீராவை மீட்டுக் கொடுக்கவேண்டுமென்பதேயாகும். இவருடைய தரைப் படையானது 300,000 பேர்களைக் கொண்டிருந்தது என்றும், இவர்கள் 200 பெரிய கப்பல்களிலும் 3000 சிறிய கப்பல்களிலும் ஏற்றிச் செல்லப்பட்டனர் என்றும் கூறப்படுகின்றது. ஆனால் நாம் இந்த எண்ணிக்கைகளில் அதிக முக்கியத்துவம் செலுத்தவேண்டிய

தில்லை. பானுர்மஸ்ஸிலிருந்து கடற்கரையோரமாக ஹிமீராவை நோக்கிச் சென்ற இந்தத் தரைப் படையானது, கப்பற் படையால் பின்பற்றப் பட்டு இறுதியில் ஹிமீராவை முற்றுகையிட்டது. ஹிமீரா வானது பெரிய படை ஒன்றைக் கொண்ட தீரானல் காக்கப்பட்டது. இந்தப் பட்டினத்திற்கு எதிரே ஹாமில்கார் இரண்டு பாசறைகளை நிறுவினர். ஹிமீராவின் குன்றுக்கும் கடற்கரைக்குமிடையே யுள்ள தாழ்ந்த மட்டத்தில் கடற்படைக்கான பாசறையானது நிறுவப் பட்டது. தரைப் படையின் பாசறையானது பட்டினத்திற்கு மேற்குப் பாகத்திலுள்ள குன்றுகளின் மேல் ஏற்படுத்தப்பட்டது. முற்றுகை யிடப்பட்ட ஹிமீராவைத் திடீரென்று தாக்கி, ஹாமில்கார் அதிக நட்டமுற்றூர். தீரான் தனது மருமகனை உடனே வரும்படி ஒரு செய் தியைச் சைரக்கூஸிற்கு அனுப்பினர். கீலான் 50,000 காலாட்படை களையும், 5,000 குதிரைப் படைகளையும் கொண்ட சேனையுடன் தீரா னுக்கு உதவியளிக்கத் தாமதம் ஏதுமின்றி அணிவகுத்துச் சென்ருன். இவர் கிழக்குப்பாகமாக ஹிமீராவை அணுகி, அங்குள்ள நதியின் வலக் கரையில் ஒரு வலிமை பொருந்திய பாசறையை ஏற்படுத்தினர்.

நாம் சொல்லப்பட்ட கதையை நம்பினல், இந்த முக்கியத்துவ மளித்த யுத்தமானது அபூர்வமான முறையில் நடத்தப்பெற்றது. ஹாமில்கார் தனது எதிரிகளின் தேவர்களைத் தம் வசப்படுத்த முடிவு கொண்டான். கடற்கரைக்கருகில் போஸிடோனுக்குப் பெரிய பலி களைச் செலுத்த ஒரு நாளையும் குறிப்பிட்டார். எவ்விதம் கிரேக்க முறையில் பலிகளைச் செலுத்துவது என்று தமக்கு சொல்லித் தரும்படி கிரேக்கர்கள் அங்கு இருப்பது அத்தியாவசியமாயிற்று. எனவே கார்த்தேஜின் சார்பரசு நாடாகிய செலைனஸ்ஸிற்கு (Selinus) ஹாமில்கார் ஒரு லிகிதம் வரைந்து குறிப்பிட்ட ஒரு தினத்தில் பியூனிக் பாசறைக்குக் குதிரைப் படையினரை அனுப்பி வைக்கும்படி கட்டளை யிட்டார். இந்த லிகிதமானது கீலானின் கைகளில் விழவே, கீலான் துணிகரமான ஒரு சூழ்ச்சி முறையை எண்ணினர். குறிப்பிட்ட தினத்தின் காலையில் கடற்கரையிலுள்ள பாசறையின் வாயிலில் சைரக்கூஸின் குதிரைப் படையினர் தாம் தான் செலைனஸ்ஸிலிருந்து எதிர்பார்க்கப்பட்ட குதிரைப் படையினர் என்று கூறி நின்றனர். சைரக்கூஸ் ஏதிலாரையும் செலைனஸ்ஸின் ஏதிலாரையும் வித்தியாசம் கண்டு பிடிக்கத் தெரியாத கார்த்தஜீனியர்கள் சந்தேகம் எதுவும் கொள்ளாமல் இவர்களைப் பாசறையில் ஏற்றுக்கொண்டனர். இவர்கள் போஸிடோனின் பலிபீடத்தினருகே ஹாமில்காரை வெட்டிவீழ்த்தி கப்பல்களுக்கும் தீயிட்டனர். இவையாவும் தங்களுக்குச் சிறிது உயரத் திலுள்ள பட்டினத்தில் தெரியவே, அங்கு நிறுத்தப்பட்ட வீரர்கள் கீலானுக்குத் தமது திட்டத்தின் வெற்றியைச் சைகையால் தெரிவித்த னர். உடனே கிரேக்கப் படைத் தலைவர் தமது படைகளைத் தெற்குப்

பாகத்தைச் சுற்றிப் பகைவனின் நிலப்பாசறைக்கு எதிராகத் தம் படைகளை நடத்திச் சென்றார். இங்கு யுத்தம் நீடித்தது. இறுதியில் இந்தக் காட்டுமிராண்டியர்களைப் பின்புறம் தாக்கும்படி




படம் 4. ஹிமீரா யுத்தம் கி.மு.480

திரான் அனுப்பிவைத்த படை, வீரர்களால் இந்த யுத்தமானது கிரேக்கர்களுக்கு அனுகூலமாகத் திரும்பியது. நிறைவான வெற்றியைக் கிரேக்கர் அடைந்தனர். கார்தேஜின் படையெடுப்பானது முழுவதும் அழிக்கப்பட்டது. எதிரியின் தலைவனே வெட்டி வீழ்த்தவும் பட்டான்.

ஆனால் கார்த்தஜீனியர்கள் தமது தலைவனின் முடிவைப் பற்றி மற்றொரு சிறப்பான கதையைச் சொல்வர். இக் கதையானது

எப்படி யுத்தமாரம்பித்தது என்று சொல்லுகிறதில்லை. இது நமக்கு ஓர் அழகிய சித்திரத்தை அளிக்கின்றது. யுத்தமானது 'காலையிலிருந்து மாலைவரையும்' கோரமாக நடக்கின்றது. ஒவ்வொரு மணியும் ஒரு யுகமாகத் தோன்றிய அந்த நாளில் கடற்கரையிலுள்ள தனது பாசறையில் ஹாமில்கார் பால் (Baal) பலிபீடத்தின் முன் நிற்கின்முர். பலிபீடத்திலுள்ள நெருப்பானது கடவுளுக்கு அளிக்கப்பட்ட சர்வாங்க தகனப் பலிகளை விழுங்கிக் கொண்டிருக்கின்றது. ஒன்றிற்குப் பின் ஒன்ருக விலங்குகளின் சடலங்களும் ஒருவேளை மனிதர்களின் சடலங்களும் நெருப்பில் எறியப்படுகின்றன. கார்த்தேஜைப் பொறுத்தவரையில் சகுனங்கள் யாவும் அனுகூலமாகவே இருக்கின்றன. ஆனுல் மதுபானத்தைக் காணிக்கையாக இவர் ஊற்றிக் கொண்டிருக்கும்போது வெளியே நோக்குகிமுர். அங்கே தனது படையானது விரட்டியடிக்கப்படுவதைக் காண்கிமுர். மகா பெரிய பலியை அளிக்கவேண்டிய தருணம் வந்தது. தானே நெருப்பில் குதிக்கின்முர். நெருப்பின் கொழுந்துகள் இவரை அப்படியே விழுங்குகின்றன. தன்னைத் தானே தியாகம் செய்தபோதிலும் கார்த்தஜீனியர்களுக்கு வெற்றி கிடைக்கவில்லை. ஆனுல் பிற்காலத்தில் ஹிமீராவானது ஹாமில்காரின் மரணத்திற்காகப் பெரியதொரு தண்டனையை அடையும்படி ஊழ்வினைப் பயனுல் நடத்தப்பட்டது.

ஸாலமிஸ், ஹிமீரா ஆகிய இவ்விரண்டு சண்டைகளின் பொதுவான முக்கியத்துவம் அல்லது ஐரோப்பாவிலிருந்து ஆசியாவை விரட்டியடிக்கப்பட்டது அக் காலத்தில் அதிக உயர்வாக மதிக்கப்பட்டது. எனவேதான் இவ்விரண்டு போர்களும் ஒரே நாளில் நடந்தன என்று சூதற்ற விதத்தில் ஒரு கற்பனையைக் கொண்டுள்ள மரபில் தெரிவிக்கப்பட்டது. ஆனுல் ஸாலமிஸ் யுத்தத்தைப் போலன்றி, ஹிமீராவின் போருக்கு உடனடியாக ஒரு சமாதான உடன்படிக்கை ஏற்பட்டது. யுத்த இழப்பீட்டிற்காக கார்த்தேஜானது, சைரக்கூஸின் முதல்வருக்கு 2000 தாலாந்துகளைக் கொடுத்தார். ஆனுல் இந்தப் பணமானது அவர்களுடைய பாசறையில் கிடைத்த கொள்ளைப் பொருள்களுடன் ஒத்துப் பார்த்தால் ஒரு சிறிய பாகமேயாகும். இந்தக் கொள்ளைப் பொருள்களில் ஒரு பாகத்தைக் கொண்டு ஒருவகை வெள்ளி நாணயங்கள் வெளியிடப்பட்டன. இவை கீலானின் மனைவியின் பெயரைக்கொண்டு 'டாமாராட்டியன்' (Damaretean) என்றழைக்கப்பட்டன. சிசிலியின் விடுதலைச் சின்னமாகிய இந்த நாணயங்களில் சில இப்பொழுதும் அதிக பத்திரமாகக் காப்பாற்றப்பட்டுள்ளன.

## 11. ஹிரான், தீரான் கைகளின் கீழ் சைரக்கூஸும் அக்ரேகஸ்ஸும்

சிசிலியின் விடுதலையில் தீரானும் அக்ரேகஸ்ஸும் மதிப்புக்குரிய பகுதியை எடுத்திருந்தன. ஆயினும் இந்தப் பகுதியானது கீலானும் சைரக்கூஸும் எடுத்த பாகத்திற்கு இரண்டாவது இடத்தையே பெறுகின்றது. இந்த வெற்றிக்குப் பிறகு தீரான் எட்டு ஆண்டுகள் வாழ்ந்திருந்தார். அந்தக் காலத்தில் தனது கூட்டாளியான டைரன்ட் எவற்றை யெல்லாம் சைரக்கூஸிற்குச் செய்து முடித்திருந் தாரோ அவை யாவற்றையும் அக்ரேகஸ்ஸிற்குச் செய்து முடிக்கும் தொழிலில் ஈடுபட்டிருந்தார். சைரக்கூஸ் எவ்விதமாகப் பருமனில் பெரிதாகியதோ அதற்கு நேர் விதமான முறையில் அக்ரேகஸ் விரி வடைந்தது. சைரக்கூஸ் ஒரு மலையின் மேல் பரவிற்று. ஒரு மலையின் உச்சியில் கட்டப்பட்டிருந்த அக்ரேகஸ் அம் மலைச் சரிவில் பரவிற்று. விஸ்தாரமாக்கப்பட்ட நகரமானது சுவர் ஒன்றால் சூழப்பட்டது. இச் சுவரில் பாதிக்கு மேலான பாகத்தை இயற்கையே கட்டியுள்ளது. ஆறுகளுக்கிடையே நீளமாகக் கட்டப்பட்டும், அதன்பின் வரிசையாகக் கோயில்களைக் கொண்டும் உள்ள தென் சுவரானது இந்தப் புது நகரத் தின் முக்கியத் தோற்றமாகும். இச் சுவரின் உள்பக்கத்திலுள்ள கோயில் களின் கடைக்கால்களைத் தீரான் நிறுவினார். ஆனால் இக் கோயில்கள் இவருடைய மறைவிற்குப் பிறகு அநேக ஆண்டுகளுக்கப்பால்தான் கட்டப்பட்டு முடிந்தன. இந்த வரிசையான புனிதக்கட்டடங்கள் மகிமையோடு பிரகாசித்தன. இந்த வேலைக்கும், மற்றும் நீர்நெறி கள் கட்டுவிப்பதற்கும் தீரானுக்கு அடிமை வேலையாட்கள் அதிகமாக இருந்தனர். இந்த அடிமைகள் ஹிமீராவின் யுத்தத்திற்குப் பின் கைப்பற்றப்பட்ட காட்டுமிராண்டியர்களேயாவர். பகைவர்களிட மிருந்து மீட்கப்பட்ட ஹிமீராவை தீரான் தனது மகனாகிய திரேஸிடி யஸ்ஸின் (Thrasydaeus) ஆட்சியின் கீழ்க் கொண்டுவந்தார். இவர் தீரானைப் போலில்லாது மக்களை நசுக்கினார். ஆகையால் அவர்களால் வெறுக்கப்பட்டார்.

இதற்கிடையில் கீலான் மரித்துப் போகவே, அரசியல் வல்லுந ராகிய இவருடைய தீராத உழைப்பின் கனிகளை இவருடைய சகோதரர் ஹிரான் அனுபவித்தார். ஹிரான் முழுமையான அதிகாரத்தைக் கொண்டு விளங்கியபோது, தமக்குப்பின் தனது கைம் பெண்ணாகிய டாமேரெட்டாவை மணக்கவேண்டும் என்று உத்திர விடப்பட்ட பாலிசேலஸ், சைரக்கூஸின் படைகளின் தலைமைப் பதவி கொடுக்கப்பெறவேண்டும் என்று கீலான் விரும்பினார். இந்த இரட்டை முறையானது அறிவின்மைப் பாற்பட்டது. இந்த முறையானது சகோதரர்களுக்குள் பிரிவினையை அவசியம் உண்டுபண்ணியது. பாலி

சேலஸ் சைரக்கூஸ் மக்களால் அதிகமாக விரும்பப்பட்டார். அதுவுமன்றி தீரானுடன் இவர் கொண்டிருந்த இரட்டைச் சம்பந்தமானது அந்த டைரன்ட்டின் ஆதரிப்பையும் இவருக்குக் கிடைக்கச் செய்தது. ஹீரானுக்கு இவர் ஒரு பயங்கர எதிராளியாகக் காட்சியளித்தார். எனவே இவர் இறுதியில் அக்ரேஸஸிக்குச் சென்று அங்குப் புகலிடம் தேட நேர்ந்தது. இக் காரணத்தின் பொருட்டு ஹீரானுக்கும் தீரானுக்கும் பிளவு ஏற்பட்டது. இவர்களுக்குள் சரியான யுத்தம் மாத்திரம் ஏற்படவில்லை. இரண்டு அரசவைக்கும் மிக்க அன்புக்குரியவரும் உணர்ச்சிப் பாடல்கள் (lyric) பாடும் கவிஞருமாகிய சைமனிடீஸ் (Simonides) சமாதான கர்த்தாவாக விளங்கினர் என்று கூறப்படுகின்றது. தீரானின் முடிவுகாலமட்டும் இவ்விரண்டு சிசிலிய நகரங்களுக்கிடையே யுத்தமானது ஏற்படவில்லை. பிறகு அக்ரகாஸுக்கு விடுதலை ஏற்பட்டது.

இட்ரஸ்கர்களை (Etruscans) சைம்மில் (Cyme) ஹீரான் தோற்கடித்து ஹிமீராவின் வேலைப்பாடுகளை முடிவுறச் செய்ததாகச் சொல்லப்படுகிறது. கார்த்தஜீனியர்கள் நீங்கலாக, மேற்கிலுள்ள ‘பெரிய கிரீஸ்ஸை’ பயமுறுத்திய இட்ரஸ்கர்கள் இதன் மற்றொரு எதிராளியாவர். கிரேக்க மக்கள் வசிக்கும் இத்தாலியாவின் கடற்கரையின் வடபாகத்தில் புறக்காவல்போல் அமைந்துள்ள சைம் குடியேற்ற நாட்டைத் தம் கைவசமாக்கவேண்டும் என்பது இட்ரஸ்கன் அரசாங்கத்தின் ஒரு முக்கிய நோக்கமாயிற்று. இவ்விடமானது ஹீரான் பதவிக்கு வந்த மூன்று அல்லது நான்கு ஆண்டுகளுக்குப் பின்னர் டஸ்கன் (Tuscan) கப்பற்படையால் வலிமையாகத் தாக்கப்பட்டது. ஹீரான் ஒரு பெரிய அரசியல் நிபுணர். எனவே சைம் உதவியளிக்கும்படி கோரியதை இவர் உடனே ஆதரித்தார். சைரக்கூஸின் கப்பற்படையானது சைம்மை நோக்கிச்சென்று அங்கு முற்றுகையிட்டிருந்தோரைத் தோற்கடித்தது. இச் சமயமுதல் இட்ரஸ்கர்களின் வலிமையானது அதிவேகமாகக் குன்ற ஆரம்பித்து, இறுதியில் மேற்குக் கிரீஸின் வளர்ச்சிக்கு ஓர் அபாயகரமானதாக இல்லாமல் போயிற்று.

போரில் கிடைக்கப்பெற்ற கொள்ளைப் பொருள்களில் ஹீரான் ஒரு வெண்கலத் தலைச்சீராவை (helmet) ஒலிம்பியாவிற்கு அனுப்பி வைத்தார். கிரீஸின் தீரச்செயல்களைக் குறிக்கும் நினைவுச் சின்னங்களில் மிகவும் விலையுயர்ந்த இந்தச் சின்னமானது தற்போது லண்டன் மாநகரில் பழங்காலச் சின்னங்கள் சேர்க்கப்பட்ட குவியலில் ஒன்றாக உள்ளது. தீப்ஸ்ஸைச் சேர்ந்த கவிஞராகிய பிண்டார் (Pindar) இப்பெரு வெற்றியைக் குறித்து எக் காலத்திலும், எல்லா மக்களாலும் நினைக்கும்படிப் பாடிய பாடலானது இதைக்காட்டிலும் மிகவும் விலையுயர்ந்த ஞாபகச்சின்னமாகும்.

ஐந்தாம் நூற்றுண்டு சிசிலியின் பணப் பெருக்கத்தையும், பண்பையும்பற்றி நாம் பிண்டாரின் எழுச்சியுள்ள பாடல்களிலிருந்தே அறிகின்ருேம் என்பது மிகையான சொல்லாகாது. சைமனிடீஸ் (Simonides), பாக்கிலேடீஸ் (Bacchylides), ஈஸ்கைலீஸ் (Aeschylus) போன்ற பெருமை வாய்ந்த அக் காலத்துப் புலவர்களைப்போல் பிண்டாரும் சிசிலிக்குச் சென்று, அத் தீவைப் பார்வையிட்டு இந்த டைரண்டின் புன்முறுவலேயும் அன்பளிப்புகளையும் மிகுதியாகப் பெற்ருர். தன்னை மன்னன் என்று மக்கள் அழைக்கவேண்டுமென்று அவாக்கொண்டிருந்த சைரக்கூஸின் பெருமகன் தமது பந்தயக் குதிரைகளையும், இரதங்களையும் ஒலிம்பியா, டெல்பி முதலிய பெரிய விளையாட்டுப் பந்தயங்களில் பங்கெடுக்கும் பொருட்டு அனுப்பிவைத்தார். இந்தப் பந்தயங்களில் கிடைத்த வெற்றிகளை வீருர்ந்த துள்ளற் கலிப்பாடல்களில் விவரிக்கும்படி இவர் பிரசித்தி பெற்ற யாழ்ப்பாணர்களை இப் பணிக்கு அமர்த்தினுர். ஒரே வெற்றியை, சிலவேளைகளில் எதிரான தோரணைகளில் அமைப்பதற்காகப் பிண்டாரும், பாக்கிலேடீஸும் ஏற்படுத்தப்பட்டனர். அரசவைகளின் சொகுசுகளையும், அவைகளின் கண்ணைப்பறிக்கும் அழகுகளையும் இப் பெரிய வெற்றி வேந்தர்களின் தாராள குணத்தையும் இந்தப் புலவர்கள் நமக்கு நன்ருகக் காட்டுகின்றனர். கிரீஸிலிருந்து சென்று பார்வையிட்ட இவர்களுக்கு பினீஷியர்களிடமிருந்து எடுத்த கொள்ளைப் பொருள்களைக்கொண்டு டைரன்ட்டுகளால் அழகு செய்யக்கூடிய சைரக்கூஸும், மக்களின் இயல் மிகவும் பொருந்திய நகரமாகிய அக்ரேகஸ்ஸும் மிகவும் அழகாகத் தோன்றின. தங்கள் நாடுகளிலே தங்களுக்கு வேண்டிய பெயரும் புகழும் இருந்தபோதிலும், அங்கே கவனத்தைக் கவர்கின்ற அரசியல் விவாதங்களின் மத்தியிலும் இளமையான மேற்கு உலகத்திலுள்ள அரசிளங்குமாரர்கள் தமது நாமங்கள் தமது தாயகங்களில் புகழோடு விளங்கவேண்டும் என்று அவாக்கொண்டிருந்தனர். டெல்பியிலுள்ள புனித தலத்தை உலகத்தின் மையத்திலுள்ள கோயில் திருவிடமென்று இன்னமும் அவர்கள் கருதி, அதை விலையுயர்ந்த தமது படையல்களால் வளமூட்டினர்.

பியூனிக் பொருட்குவியலிலிருந்து எடுத்து கீலானும் அவருடைய சகோதரர்களும் டெல்பிக்குப் படைத்த தங்க முக்காலியானது ஏனைய தங்கச் சாமான்கள் போலவே திருடர்களால் கொள்ளையடிக்கப்பட்டு எடுத்துச் செல்லப்பட்டது. ஆனுல் இந்த சகோதரத்துவப் பிணைப்பைச் சமீபத்தில் டெல்பிக் கோயில் திருவிடத்தில் வெட்டியெடுக்கப்பெற்ற விலையுயர்ந்த வெண்கல சாரதியின் உருவம் நமக்கு நினைவூட்டுகின்றது. ஒருகால் தமது பிதியாவின் வெற்றிக்காகப் பாலிசெலஸ் இதனைப் படைத்திருக்கக்கூடும்.

பிண்டாரின் கவித்திறமையால் உயர்படியில் வைக்கப்பெற்ற இந்த அரசகுலத்தைச் சேர்ந்த டைரன்ட்டுகளின் வெளித்தோற்றத்தைக் கண்டு நாம் எளிதில் ஏமாற்றமடையக்கூடும். ஆனல் உயர் குடியில் பிறந்த பிண்டார், கடந்துபோன தலைமுறையின் எண்ணங்களையும் தப்பெண்ணங்களையும் போற்றி வளர்த்தார். தனது காலமானது முடிவுபெற்ற ஒரு வகுப்பைச் சேர்ந்த இவர் அந்த வகுப்பிற்காக எழுதினர். பொதுவான விளையாட்டுகளில் வெற்றிகளைப் பெறுவதே அந்த வகுப்பைச் சேர்ந்த பிரபுக்களின் வாழ்க்கையின் முக்கிய நோக்கமாயிருந்தது. தமது காலத்தைச் சேர்ந்த புதுக் கருத்துகளையும் அரசியல் போக்கையும் இவர்கள் விரும்பவில்லை. இவர்கள் முந்தியகால சமூகத்தின், காலம் தவறித் தோன்றிய மக்களாவர். இவர்களிடம் பிண்டார் தனது இரக்கத்தைக் காட்டியுள்ளார். எல்லா அரசியல் அமைப்பிலும் இவர் உயர்குடியாட்சியையே அதிகமாக விரும்பினர். இதற்கடுத்தபடியாகக் கொடுங்கோலாட்சியாக இருந்தாலுங்கூட முடியாட்சியை இவர் விரும்பினர். ஆனல் மக்களாட்சியை இவர் கும்பலின் மனவெழுச்சி என்று கருதினர். சிசிலியிலும், சிரேனியிலுமுள்ள கொடுங்கோலர்கள் கிரீஸ் நாட்டின் தேசிய விளையாட்டுகளை ஆதரித்தனர். இப் புலவரின் எண்ணத்தில் இது அவர்களுடைய பெரிய மதிப்பிற்குரிய செயலாகத் தோன்றியது. மகிழ்ச்சி பொங்குகிற கும்பலின் மத்தியிலிருந்து பார்க்கப்படும் தேர்களின் பந்தயம், ஓட்டப் பந்தயங்கள், இவைகளுக்குப்பின்; வெற்றிக்காகப் பாட்டுடன் கூடிய நடனங்கள், பாட்டுகள், கடைசியில் ஈகைனவைச் சேர்ந்த ஓர் உயர்குடிப் பிறந்தோரின் வீட்டில் களியாட்டம் முதலியன 'கிரீஸின் மகிழ்ச்சி தரக்கூடிய காரியங்கள்'. இவை யாவும் பிண்டாருக்கு உயிர் கொடுக்கும் மூச்சுப்போலானவை. இவர் மிகவும் சமயப் பற்றுறுதியுடையவர். எனவே மேற்கூறிய யாவற்றையும் இவர் சமயப்பற்றுல் உடுத்திவைத்தார். நாம் இதை ஒப்புக்கொண்டபோதிலும், இவர் இந்த விளையாட்டுகளை வினையியலோடு கருதினர் என்பதை உணர்கின்ருேம். ஆனல் ஈஸ்கைலஸ் பிறப்பு, இறப்பு முதலிய பிரச்சனைகளுடன் மற்போர் செய்யும்போது, ஒலிம்பிக் வெற்றியானது உலகத்திலேயே மிக மேன்மையானது என்று கருதும் நாளானது மறைந்துவிட்டது என்றறிகிருேம்.

பிண்டாரின் உன்னதக் கலைத்திறனைக் கண்டு, நாம் டைரன்டுகள் உன்னத ஒழுக்கம் சார்ந்த நோக்கம் கொண்டிருந்தனர் என்னும் தப்பான எண்ணம் கொள்ளக்கூடாது. ஒலிம்பியாவில் வெற்றி அடையவேண்டும் என்று அவர்கள் அவாக்கொள்வதும், அதற்கெனப் பணத்தைச் செலவிடுதலும், பின்னர் புலவரின் கலைத்திறத்தால் மறையாத புகழ் தேடுதலும் இயற்கையாகும். இதைத் தவிர, புலவர் வேறு மேலான நோக்கத்தைக் கோருவது சரியன்று

வெளியிலிருந்து சைரக்கூஸைச் சுற்றிப் பார்க்கவந்து, டைரண்டின் அரண்மனையில் விருந்தோம்பிய அவருடைய தனிப் பற்றுக்குரியவருக்கு சைரக்கூஸின் வெளித்தோற்றமானது அழகாகத் தோன்றும். ஆனால் உள்ளேயோவென்றால் கொடுமையும் நம்பிக்கையின்மையும் தாண்டவமாடின. தனியார்களின் நடத்தையைக் கவனிக்கும்படி ஹீரான் உண்டுபண்ணிய ஒற்றர்களின் அமைப்பானதே இவைகளை நன்றாக எடுத்துக் காட்டுகின்றது. இவர் கட்டானே (Catane) நகரத்தை நடத்திய விதமானது இவருடைய கொடுங்கோல் செயல்களில் ஒன்றாகும். இவர் இதன் குடிகள் யாவரையும் லியோன்டினிக்கு நாடு கடத்திவிட்டு, இதனைப் புதிய மக்களால் நிரப்பி இதற்கு ஈட்னா (Aetna) என்ற பெயரை ஈந்தார். இந்த நகரத்தை நிறுவியவர் என்று மக்கள் தம்மை நினைக்கவும் போற்றவும் வேண்டுமென்று விரும்பினார். ஏதாவது துன்பம் ஏற்படும்போது இந் நகரானது தனக்கும், தனது வமிசத்திற்கும் அடைக்கலத்தின் கோட்டையாக இருக்கவேண்டுமென்றும் கருதினார். இவருடைய மகனாகிய டீயினோமீனஸ் (Deionomenes) ஈட்னாவின் மன்னன் என்று பட்டத்தில் ஏற்றப்பட்டான். இரக்கமற்ற விதமாக நிறுவப்பட்ட இந்த டோரிய நகராகிய ஈட்னா, பிண்டாரின் உயரிய சொற்றொடர்களால் புகழ்ச்சி செய்யப்பட்டதுமன்றி ஈஸ்கைலஸ்ஸின் நாடகம் ஒன்றிற்குச் செயல் காரண உட்கோளாக இருந்தபோதிலும் சிறிதுகாலமே நீடித்திருந்தது. அதி சீக்கிரத்தில் இது மறுபடியும் கட்டானேவாகிற்று.

அக்ரேகஸ்ஸில் தீரானின் மென்மையான ஆட்சியானது அங்குள்ள குடிகளின் அன்பையும் ஆதரவையும் பெற்றது. ஆனால் ஹிமீராவில் ஒரு கொடுங்கோலன் என்ன செய்யக்கூடும் என்பதைத், தனது மகனுடைய ஆட்சியை எதிர்த்த மக்களை இரக்கமின்றிக் கொன்று காட்டினார். சைரக்கூஸையும், அக்ரேகஸ்ஸையும் சேர்ந்த இரு வமிசங்களும் அதிக காலம் நீடிக்கவில்லை. தீரானின் மரணத்திற்குப்பின் திரேஸிடியஸ் (Thrasydaeus) முன்பு ஹிமீராவை மோசமாக ஆட்சி புரிந்ததுபோலவே இப்போது அக்ரேகஸ்ஸையும் ஆட்சி செய்தார். நமக்குத் தெரியாத காரணம் ஒன்றின் பொருட்டு புத்தியில்லாத்தனமாக இவர் ஹீரானுடன்(Hieron) போருக்குச் சென்று, நேரிட்ட கடும்போரில் அவரால் தோற்கடிக்கப்பட்டார். இந்தத் தோல்வியானது இவருடைய வீழ்ச்சிக்குக் காரணமாயிற்று. ஹிமீரா சுயேச்சையான நாடாயிற்று. அக்ரேகஸ் தனக்கென ஒரு சுயமான அரசியலமைப்பை ஏற்படுத்திக்கொண்டது. இதற்கு ஐந்து ஆண்டுகளுக்குப்பின் சைரக்கூஸின் விடுதலையானது ஏற்பட்டது. ஹீரானின் மறைவுக்குப்பின் அவருடைய சகோதரனான திரேஸிபூலஸ் அவருடைய பதவிக்கு வந்தார். இவர் ஹீரானைவிடத் திறமையிலும் வலுவிலும் மட்டமா யிருந்தபடியால், மக்களின் சொத்துகளைப்

பறித்தும் அவர்களைத் தூக்கிலிட்டும் அந் நாட்டில் ஒரு புரட்சியைத் தூண்டுவித்தார். குடிகள் இவருக்கு விரோதமாக ஏகோபித்து எழும்பி, ஏனைய சிசிலியன் நகரங்களிலிருந்து உதவியைப்பெற்று, இவரையும் இவருடைய கூலிப்படைகளையும், சைரக்கூஸில் முற்றுகை யிட்டனர். இறுதியில் இவர் சரணடையும்படி செய்யப்பட்டார். இதன்பின் அயல் நாடொன்றிற்குச் சென்று அங்கு வசிக்க அனுமதிக் கப்பட்டார். இவ் விதமாக சைரக்கூஸில் கொடுங்கோலாட்சி முடிவு பெற்றது. இந்த விடுதலையை நினைவு கூரும்படியாக எலியூதீரியா (Eleutheria) என்னும் பண்டிகையானது ஏற்படுத்தப்பட்டது.

இக் கொடுங்கோலர்களின் ஆட்சியானது உயர்குடிப் பிறந்தோ ருக்கும், சாதாரண மக்களுக்கு மிடையேயுள்ள நீண்டநாட் பகையை ஒழித்துக்கட்டியதுபோலத்தோன்றுகிறது. ஆனல்அதற்குப் பதிலாகப் புதியதொரு சச்சரவு ஏற்பட்டது. பழைய குடிகளாகிய உயர்குடிப் பிறந்தோரும், சாதாரண மக்களும் ஒன்றுசேர்ந்து, கீலான் பல திக்கு களிலிருந்து கொண்டு சேர்த்த புதிய குடிகளை நம்ப மறுத்தனர். சமூகத்தில் ஒரு யுத்தம் மூண்டது. பழைய குடிகள் தீவிலிருந்தும் அக்ரேடினவிலிருந்தும் முதலில் துரத்தப்பட்டனர். ஆனல் பின்னர் கீலான் கொண்டுவந்த அயலார்கள் நகரத்திலிருந்து விரட்டியடிக்கப் பட்டனர். சைரக்கூஸில் மக்களாட்சி பலமாக நிறுவப்பட்டது. இந்தக் கொடுங்கோலாட்சியினர் மிகவும் நல்லதொரு பணியைச் செய்தனர். தாம் பதவிக்கு வருமுன்னிருந்த வகுப்புப் பேதங்களை அடியோடு ஒழித்தனர். எனவே இந் நிகழ்ச்சிக்குப்பின் சமத்துவம் யாவருக்கும் உரியது என்னும் கொள்கையில் நகரங்கள் புதியனவாகத் தம் அரசியல் வாழ்க்கையைத் துவங்க முடிந்தது. அடுத்த ஐம்பது ஆண்டுகள் சிசிலியின் குடியாட்சிகளுக்கு, அதிலும் முக்கியமாக அவை களில் தலைசிறந்த சைரக்கூஸிற்கும், அக்ரேகஸ்ஸிற்கும், கார்த்தே ஜின் அடிமைத்தனத்திலிருந்து மீட்கப்பட்ட செலைனஸ்ஸிற்கும் பணச் செருக்கும் செழிப்பானதுமான காலமாயிருந்தது. அக்ரேகஸ்ஸில் தன்னுரிமையுடைய மக்கள் தங்களுக்கு நலஞ்செய்த டைரன்ட் துவக்கிவைத்த வேலைகளை முடித்துவைத்தனர். தெற்கு மதில் சுவருக் குப் பக்கத்தில் கட்டப்பட்டிருக்கும் உன்னதமான கோயில்களின் வரிசை இக் காலத்தைச் சேர்ந்தவை. 'மனிதவர்க்கத்தினர் எளிதில் தாக்கக்கூடிய தெற்கு மதிற்சுவரை ஒட்டி நகரத்தைக் காக்கும் தெய் வங்களுக்கான இயல் பொருந்தியபுனிதத் தலங்களை உண்டுபண்ணியது ஒரு பெரிய கற்பனையின் பயனகும். இந்தப் புலனுணர்வு முதல் முதலில் தீரானுடையது என்று நமக்குத் தென்படுகின்றது. ஆனல் இறுதியில் மக்களாட்சி இதனை எடுத்து நல்லமுறையில் முடிவு பெறச் செய்தது'.[1] ஆனல் அக்ரேகஸ்ஸிற்கு இந்தப் புனிதமான கட்டி

1 ஃப்ரீமான் (Freeman)

டங்கள், அதன் புகழ்பெற்ற மக்களில் ஒருவருடைய பெயரைவிடக் குறைந்த புகழையே ஈந்ததாகத் தெரிகின்றது. கவிஞரும், மெய் விளக்கத்துறைப் பெரியாருமாகிய எம்பிடாகிளீஸ் (Empedocles) 'அக்ரேகஸ்ஸின் மஞ்சள் வர்ண நதிக்கு மேல் பாகத்தில்' தாம் வளர்ந்ததாகத் தாமே கூறுகின்றார். இவர் ஆழ்ந்த அறிவுள்ள மெய் விளக்கப் பெரியாராகவும், தெய்வீக ஊக்கம்கொண்ட கவிஞராகவும், திறமைபொருந்திய மருத்துவராகவும் மாத்திரமின்றி தமது நகரத்தின் அரசியல் அமைப்பையும் சீர்திருத்தம் செய்யும் அரும் தொழிலிலும் ஈடுபட்டிருந்தார். ஆனால் இவரைச் சுற்றி எழுந்த புராணக் கதைகள் காடுபோல் தோன்றி இவருடைய தனி மனிதப் பண்பையே மறைத்துவிட்டது வருத்தப்படக்கூடிய காரியமாகும். சரித்திர எம்பிடாகிளீஸ் தனது நாட்டைவிட்டு நாடு கடத்தப்பட்டு, பெலோப்போனீஸஸில் அமைதியாக இவ்வுலகத்தை நீத்தார். ஆனால் புராணத்தின்படி தீர்க்கதரிசியும், தந்திரவாதியுமான இவர் தெய்வமாக எண்ணங்கொண்டு ஈட்னுவின் கும்பாவில் குதித்தாராம். கடைசியில் டெல்பிக் மாலைகளை அணிந்து ஒரு நகரத்திலிருந்து மறு நகரத்திற்குச் சென்று எங்கும் ஆண்களாலும் பெண்களாலும் வணங்கப்பட்டு, தெய்வ நிலைக்கே உயர்த்தப்பட்டுள்ளார்.

சிசிலியிலுள்ள மக்கள், ஒரு சிறு காலத்திற்கு, ஆதிக் குடிகளாகிய சிசெல்களின் ஆக்கிரமிப்புப் புதுப்பிக்கப்பெறும் பயங்கர அபாயத்தால் அச்சுறுத்தப்பட்டனர். இந்த மீட்டெழுச்சியானது தனி மனிதன் ஒருவனின் தனித்திறமையாலே யாயிற்று. ஆனால் அவன் மறைவுக்குப்பின் இந்த அபாயமானது மறைந்தது. டூசிட்டியஸ் (Ducetius) சிசெல் பட்டினங்களை ஒரு கூட்டரசாக இணைத்தார். இவர் கிரேக்க நகரங்களைச் சிசெல் ஆட்சியின்கீழ்க் கொண்டுவர விரும்பினார். இவர் புதிய நகரங்களை நிறுவும் தமது திறமையைக் காட்டினார். இவைகள் இவருடைய திட்டம் தோல்வியடைந்த பின்பும் தொடர்ந்து வாழ்ந்தன. பாலிசியிலுள்ள (Palici) புனித ஏரியையும் கோயிலையும் மேலிருந்து பார்வையிடுவதுபோல் தோன்றும் மீனினம் (Menaenum) குன்றின்மேல் இவர் தமது முதல் குடியேற்றத்தை நிறுவினார். இவருடைய அதிகாரங்களும், பேரவாவும் நாளுக்குநாள் அதிகரிக்கவே இவர் குன்றிலிருந்து இறங்கித் தேசிய கோயில் திருவிடத்திற்கு அருகில் பாலிகாவை (Palica) ஏற்படுத்தினார். இது சிசெல்களின் அரசியல் தலைநகராயிற்று. இவர் ஈட்னுவைக் கைப்பற்றினார். இதன் பின் அக்ரேகஸ் மக்களையும் சைரக்கூஸர்களையும் வென்றார். ஆனால் இறுதியில் சைரக்கூஸால் தோற்கடிக்கப்பட்டார். இந்தத் தோல்விக்குப்பின் இவரைப் பின்பற்றியவர்கள் இவரைக் கைவிட்டனர். எனவே இவர் செய்த காரியம் யாவும் இடிந்து விழுந்தது. ஆனால் சைரக்கூஸ் விலைக்களத்திலுள்ள பலிபீடத்தில் மிகவும் தைரியமாக

அடைக்கலம் கொண்டார். சைரக்கூஸ் பேரவையானது இவரது நிலையைப்பற்றி வாதித்து, நாம் எதிர்பார்க்கமுடியாத விதத்தில் இவருக்குஇரக்கம்காட்டிக் இவரை கொரிந்து பட்டினத்திற்கு அனுப்பி வைத்தது. ஐந்து ஆண்டுகளுக்குப்பின் இவரை நாம் மறுபடியும் சிசிலியில் காண்கின்றோம். அப்பொழுது நாம் சைரக்கூஸின் ஒப்புதலுடன் இவர் வடக்குக்கரையில் காலே அக்டி (Kale Akte) அல்லது அலைவாய்க்கரை என்னும் மூன்றாவது நகரத்தைக் கட்டும் நலந்தருகின்ற வேலையில் ஈடுபட்டிருப்பதைக் காண்கின்றோம். இவர் தேசிய மீட்டெழுச்சிக்காக மறுமுறை முயற்சி செய்ய எண்ணங் கொண்டாரோ அல்லது சிசெல் மக்களின் நற்காலம் கிரேக்க நாகரிகத்துடன் ஒத்துழைப்பால் பெருகும் என்று நினைத்தாரோ என்று நாம் திட்டமாகச் சொல்லுவதற்கில்லை. ஹீரான் நிறுவிய இடங்களைக்காட்டிலும் இவர் நிறுவிய நகரங்கள் அதிக காலம் நீடித்திருந்தன. இவருடைய ஒரு நகராகிய மீனியோ (Mineo) இன்றும் காணப்படுகின்றது. சிசெல்களின் தீவில் கிரேக்கர்கள்தாம் மேம்பட்டிருக்க வேண்டும் என்னும் ஊழ்வினையின் முடிவை டூசிட்டியஸ்ஸின் வாழ்க்கைச் சரிதை எடுத்துக் காட்டுகின்றது.

## 12. ஆறும் நூற்றாண்டில் சமயச்சார்பான இயக்கங்கள்

ஆறாவது நூற்றாண்டின் பிற்பாகத்தில், கிரேக்க நாட்டின்மேல் டான்டாலஸ்ஸின் (Tantalus) கல்லொன்று தொங்கிவிட்டது போலப் பாரசீகத்தின் பெருக்கமானது காட்சியளித்தது. கிழக்கத்திய முடியாட்சி ஒன்றின்கீழ் கிரேக்க நாகரிகம் மூழ்கிவிடும் என்றும் தோன்றியது. எப்படி கிரேக்கப் படைத் தலைவர்களும், கிரேக்க ஈட்டி ஏந்திய படை வீரர்களும், கிரேக்க மாலுமிகளும் இந்தப் பெரும் இடரிலிருந்து தடுத்துக் காத்தனர் என்று நாம் கவனித்துள்ளோம். இப்பொழுது மற்றுமொரு பெரு விபத்தானது எப்படித் தடுக்கப் பட்ட்து என்பதைக் கவனிப்போம். இந்த விபத்தானது பாரசீகப் படையெடுப்பைப் போல வரலாற்றிலேயே பெரிதாகக் காணப்படா விட்டாலும், கிரேக்க நாட்டை அதைப்போலொத்த மாபெரும் பேரிழப்பால் அச்சுறுத்தியது. இந்த அபாயமானது புதிய ஒரு சமயம் பலவிடங்களில் பரவினதில் காணப்பட்டது. இந்த சமயநெறியானது ஒரு சமயத்தில் தோன்றியதுபோல கிரீஸில் மேல் கையை அடைந்திருந்தால், இது ஏனைய கிழக்கத்திய மூடநம்பிக்கைகளைப் போலவே கிரேக்க நாட்டைத் தனது உணர்ச்சியற்றதும் திக்குமுக்கடிக்கக் கூடியதுமான பாரத்தினால் அமிழ்த்தி யிருக்கலாம். ஆன்மாவைப் பொறுத்த காரியத்திலும் கிரேக்கர்கள், கிழக்கத்திய மக்களுடன் இணைக்கப் பெற்றிருக்கக்கூடும்.

சோலானது காலத்தில் கிரீஸின் பல்வேறு இடங்களில் வாழும் பொதுமக்கள் தொகுதியினர் சமூகம், அரசியல் ஆகிய துறைகளின் இயக்கத்தைக் கண்டனர். அது மட்டுமன்றி அக் காலத்தில் அறிவு நெறியிலும் சமய நெறியிலும் ஒரு புரட்சி தோன்றியது. அறிவுத் துறையில் உலகத் தோற்றத்தைப் பற்றி ஹெசியட் (Hesiod) இயற்றிய தியாகோனி (theogony) கூறும் விளக்கமானது ஏமாற்றத்தை உண்டு பண்ணியது. ஐயோனியாவில் தேல்ஸ்சும் (Thales) அவருக்குப்பின் வந்தவர்களின் இயற்கைத் தத்துவமானது தோன்றியது. ஆனால் இதிகாசப் பாணர் பரம்பரையர்க் கூறிவந்த சமயச் சார்பான புராணக் கதைகளால் மக்களது ஒழுக்கத்தில் அமைதியின்மை தோன்றியது. இவ் வுணர்ச்சியானது சமயப் புராணக் கதைகளை அவர்களது இலட்சிய நெறிக்கேற்ப மாற்றியோ, திருத்தியோ அமைப்பதில் எதிரொலித்தது. இத் துறைக்கு அடிகோலியவர் புலவர் ஸ்டெஸிகோரஸ் (Stesichorus) ஆவார். இவர்தாம் அட்ரியஸ் குடும்பத்தைப் பற்றிய (house of Atreus) புராணக் கதையில் அகமெம்னன் (Agamemnon) தம் மனைவியால் கொலையுண்டது, கிளைட்டிமெனெஸ்ட்ரா (Clytaemnestra) தன் மகனால் கொல்லப்பட்டது ஆகியவற்றை உட்புகுத்தினர். ஈஸ்கைலஸூம் (Aeschylus) அவருக்குப் பின் தோன்றிய துன்பியல் நாடகாசிரியர்களும் இக் கொடிய நீதியின் செறிவை அதிகமாகப் பழக்கத்தில் வரும்படி செய்தனர்; இது மட்டுமன்றி மக்கள் மரணத்துக்குப்பின் வாழவேண்டும் என்று பெரிதும் அவாக்கொள்ளத் தலைப்பட்டனர்; ஆவிகளின் உலகத்தைப்பற்றி அறிந்துகொள்ள வேண்டும் என்னும் ஆவலும், இயற்கைக்கு அப்பாற்பட்ட சக்தியுடன் நெருங்கிய தொடர்பு கொள்ளவேண்டும் என்ற விருப்பமும் உடையவர்களாயினர். வாழ்க்கையின் மர்மத்தை விளக்குவதுதான் அறிவியல், சமயம் ஆகிய இரு இயக்கங்களின் நோக்கமாகும். ஆனால் சமய ஆர்வமானது இதனை உடனுக்குடனும் குறுக்கு வழியிலும் அடைய விரும்பியது. இந்த ஆவல் ஆறும் நூற்றாண்டின் இடைக் காலத்தில் புதியதொரு சமயத்தைப் பற்றிய கொள்கைகளைப் பரப்புவதற்கு ஏதுவாயிற்று. இப் புதிய சமயம் எங்கு முதலில் உருவாயிற்று என்று கூறுவதற்கில்லை. ஆனால் அட்டிக்கா இவ் வியக்கத்தின் தீவிர மையமாக விளங்கிற்று. அது இங்கிருந்து கடல் தாண்டி மேற்கு ஹெல்லாஸ் வரை பரவிற்று; டையனிஸியஸை (Dionysus) வணங்கும் மூர்க்கத் தனமான திரேசிய வழிபாட்டை அடிப்படையாகக் கொண்டது. இச் சமயம் திரேஸில் தோன்றிய புலவரும் சமயத் தலைவருமான ஓர்ஃபியஸ் (Orpheus) என்பவரால் நிறுவப்பட்டதால் ஓர்ஃபிக் சமயம் எனப்பட்டது. இப் புதிய நெறி பொது மக்களிடையே மட்டுமன்றித் தத்துவ ஞானிகளிடையேயும் ஆழ்ந்ததொரு உணர்ச்சியை ஏற்படுத்தியது. ஓர்ஃபிக் சமய ஆசிரியர்கள் தாமாகவே வேதாந்தங்களை ஏற்படுத்தி விரிவுரை தந்தனர்; வருங்காலத்

தைப் பற்றிய புதிய கொள்கைகளையும் நூதன் வழிபாட்டு முறைகளையும் நூதனமான வாழ்க்கைச் சட்டங்களையும் கற்பித்தனர். ஆனால் அவர்கள் இப் புதிய நெறியில் கூடுமளவில் பொதுவாக வழக்கிலுள்ள பழங் கொள்கைகளைச் சேர்த்துக்கொண்டனர். டையனிஸியஸ்ஸின் வழிபாடு, கீழ் உலகத் தேவர்களுடன் இணைக்கப்பட்ட தெய்வீக மறை உண்மைகள், உலவிவரும் தீர்க்கதரிசிகள் ஆகிய இம் மூன்றையும் ஓர்ஃபிக் சமயமானது பெரும்பாலும் ஆதாரமாகக் கொண்டிருந்தது என்று நாம் விஸ்தரிக்கலாம். ஆகிலும் இந்த ஓர்ஃபிக் வேதாந்தத்தின்படி டையனீஸியஸ்ஸும், கீழ் உலகமும், பின் வருபவற்றை முன்கூறும் ஞானமும், தூய்மையாக்கும் கலையும் புதியதொரு சிறப்பைப் பெற்றன.

வடக்கு கிரீஸில் டையனீஸியஸ்ஸின் வழிபாடானது எட்டாம் நூற்றாண்டில் புகுத்தப்பட்டிருக்கலாம். முன்பின் தெரியாத இந்த அயலாரை வரவேற்பதை முதலில் மக்கள் எதிர்த்ததைப் பல புராணக் கதைகள் குறிக்கின்றன. இவருடைய வெறியாட்டங்கள் முக்கியமாக பியோஷியா, அட்டிக்கா முதலிய இடங்களில் பரவின. இரவு வேளைகளில் பந்தங்களின் வெளிச்சத்தில் மலைகளின்மேல் மான் தோல்களைத் தமது தோள்களில் அணிந்துகொண்டும், ஐவி என்னும் கொடிகளைக் கொண்டு சுற்றப்பட்டுள்ள நீளமான கோல்களைக் கைகளில் ஏந்திக் கொண்டும் இவரை வழிபடுவோர் கைத்தாளங்கள் புல்லாங்குழலோசைகளுக்கு ஏற்ப வெறிகொண்டு நடனமாடுவர். பலியிடப்பட்ட உயிர்களின் கைகால்களைப் பெண்களும் ஆண்களும் பிளந்து விழுங்குவர். இப்படி நடனமாடும் பொழுது, முக்கியமாகப் பெண்கள் வெறிகொண்டே பெருமகிழ்ச்சி அடைய விரும்புவர். சிலர் அடையவும் செய்வர். இப்படிச் செய்யும்போது அவர்களுடைய ஆன்மாக்கள் டையனீஸியஸ்ஸுடன் ஒருவகையான மறைமெய்ம்மை கொண்ட ஒற்றுமையை அடையும் என்று கருதப்பட்டது. இவ் விதமான டையனீஸியஸ்ஸின் வழிபாட்டால், ஒருகால் தெய்வத்தின் பெயரில் வெறிகொண்ட பெண்களின் வாயின்மூலம் தமது தீர்க்க தரிசனங்களைக் கூற டெல்பிக் கடவுள்[1] தூண்டப்பட்டிருக்கலாம்.

இயற்கையைக் கடந்த உலகுடன் தீர்க்கதரிசிகளின் மூலம் மக்கள் தொடர்பு கொள்ளக்கூடும். பாகிட்கர்கள் (bakids), சிபில்லர்கள் (sibyls) என்று அழைக்கப்படும் முறையே கூரறிவுள்ள ஆண்களும்

[1] பழங்காலத்திலிருந்தே டையனீஸியஸ் டெல்பியில் வழிபடப்பட்டு வந்தார்; இவர் அப்பல்லோவுடன் ஒன்று சேர்க்கப்பட்டார். டெல்பியில் சிறிது காலத்திற்குமுன் கண்டெடுக்கப்பட்ட ஒரு லோக்கிரியக் கவிஞரால் (338 கி.மு.) டையனீஸியஸ் பியானுக்கு (Dionysus Paean) சமர்ப்பிக்கப்பட்ட பாடல் ஒன்று இந்த ஒருவகைப் படுத்தப்பட்டதை மிகவும் அருமையாக எடுத்துக் காட்டுகின்றது.

பெண்களும் கோயில்கள் அல்லது கோயில் திருவிடங்களுடன் இணைக் கப்படாமல் எல்லாப் பக்கங்களிலும் சுற்றித் திரிந்து தீர்க்கதரிசனம் கூறியும், தூய்மை செய்தும், வியாதிகளைக் குணப்படுத்தியும் தமது அன்றாட வாழ்க்கையை நடத்திவந்தனர். நமது கண்களுக்குத் தெரியாத மறைவான ஆவிகளின் உலகத்துடன் இவர்கள் நெருங்கிய பழக்கம் கொண்டதன் காரணத்தால் இவர்கள் இந்த மூன்று கலைகளையும் திறனுடன் செய்ய முடிந்தது; வியாதிகளின் காரணங்களும் தூய்மையின்மையும் ஆவிகளினுல் ஆனவை என்று கருதப்பட்டன. இவ்விதக் கூரறிவு கொண்ட பெரியார்களில் எப்பிமினிடிஸ் (Epimenides) ஒரு பெயர் போனவரும், திறமை வாய்ந்தவருமானவர். ஆதென்ஸ் நகரைத் தூய்மை செய்ய இவரை அழைத்ததைப்பற்றி நாம் முன்பே கூறியுள்ளோம்.

கீழுலகத் தேவர் வழிபாட்டில் காணப்படும் தெய்வீக மறை உண்மைகள் இயற்கையைக் கடந்தவைகளை அறிவதற்கு மற்றுமொரு வழியைத் தருகின்றன. அயோனியாவைச் சேர்ந்த ஹோமரின் பாணர்கள் வாழ்க்கையில் காணப்படும் சகலவித ஆனந்தங்களையும் அளித்த ஒரு சமூகத்தில் வசித்ததால், இவர்கள் பெருங் காப்பியங்களில் குறிக்கப்பட்டுள்ள ஒளியற்ற வாழ்க்கையை அளிக்கும் மங்கலான பெர்ஸிபோனின் (Persephone) வாழ்க்கையில் உள்ள அமைதியோடும், கவலையின்றியும் ஈடுபட முடிந்தது. ஆனுல் ஏழாவது நூற்ருண்டில் இங்குள்ள வாழ்க்கை நிலைமைகளானவை ;தாய்நாட்டில் காணப்பட்டவைகளுடன் அதிக வித்தியாசம் உள்ளனவாயிருந்தன. அன்றாட வாழ்க்கையை நடத்துவது அதிகக் கடினமா யிருந்தது. 'நிலமும் கடலும் திங்குகளால் நிறைந்துள்ளன' என்று பியோஷியக் கவி ஒருவர் பாடும்பொழுது இவர் கஷ்டப்படும் மக்களின் பெருமூச்சுகளையே எதிரொலிக்கின்ருர் என்று கூறலாம். இப்போது கிடைக்கக்கூடாத ஒருவித நடுத்தரமான வாழ்க்கையானது வருங்கால உலகத்தில் காணப்படும் என்னும் பலவித புதிய கருத்துகளை மக்கள் உடனடியாக மனத்திற் கொள்ளும் காலமாக இருந்தது. ஏழாம் நூற்ருண்டில் காணப்பட்ட இந்தப் புதிய நம்பிக்கைகள், கீழ் உலகத் தெய்வங்களைக் கொண்ட சமயத்தில் இயற்கையாகவே இணைக்கப்பட்டன. ஆவிகளின் அரசில் பெர்ஸிபோன் ஓர் இராணியாக இருப்பதை ஹோமரில் நாம் காண்கின்ருேம். ஆனுல் அதில் அவளுடைய வழிபாட்டிற்கும், நிலத்தில் காணப்படும் பலன்களின் (fruits) விளைச்சல் பெண் தெய்வமான டிமீட்டரின் வழிபாட்டிற்கும் தொடர்பு இருப்பதாக ஒரு குறியைக்கூட நாம் காண்கிறதில்லை. ஆனுல் நிலமானது மனித வாழ்க்கைக்கு வேண்டிய பொருள்களை ஈந்தும் பின் மனிதர் இறந்த பின்னர் அவர்களைத் தன் உள்ளத்தில் ஏற்றுக் கொள்வதனுல், கிரீஸ் நாடெங்கும் காணப்படும் சிறுநிலப்

பகுதிகளின் பல வழிபாட்டு முறைகளில் டிமீட்டரும் பெர்ஸிபோனும் ஒருவரோடு ஒருவராக இணைக்கப் பெற்றனர். இதிலிருந்து தோன்றி யதே பெர்ஸிபோனின் கற்பழித்தல் என்னும் புராணக் கதையாகும். எலியுஸிஸ்ஸில் (Eleusis) இப் புராணம் முக்கியமாக வளர்ச்சி பெற்று ஏழாம் நூற்றுண்டில் உருவாக்கப்பட்ட டிமீட்டருக்கான எலியுஸி னியன் பாசுரத்தின் தனிப் பொருளாகத் தோன்றியது. எலியுஸிஸ்ஸில் இந்த சத்தோனிய வழிபாட்டு மரபானது (chthonian cult) மரணத் திற்குப் பின் ஆன்மாவின் நிலைமையைக் குறித்த ஒரு புதிய கொள் கையைக் கொண்டதன் பொருட்டு இம் மரபு ஒரு தனிப்பட்ட குண வியல்பைப் பெற்றது.

எலிஸினியாவின் சுதந்திர காலத்தில் அந் நகர அரசின் மன்னர் களே இவ்விரு தேவதைகளுக்கும் மதகுருக்களாக விளங்கினர். எலியுஸிஸ் அத்தீனிய அரசின் பகுதியாக அமைந்த காலத்தில், இந்த எலிஸினியன் வழிபாடானது அத்தீனிய அரச—சமயமாக்கப்பட்டது. இவ்விரு தேவதைகளுக்காக சேம அரணுக்குத் தெற்கே ஒரு கோயில் கட்டப்பட்டது. இதனை எலியுஸினியான் (Eleusinion) என அழைத் தனர். அட்டிக்காவின் ஆண்டில் இந்த எலிஸினியன் மறை உண்மைகள் (Mysteries) என்னும் விழாவானது மன்னரால் நடத்தப் பட்ட ஒரு முக்கியமான விழாவாயிற்று. ஏழாவது நூற்றுண்டில் மிகவும் எளிமையாகத் தோன்றிய இவ் விழாவானது, அத்தீனிய செல் வாக்கின்கீழ் முற்றிலும் மாற்றப்பட்டது. இந்த மாறுதலில் இரண்டு குறிப்புகள் முக்கியமாகும். பழங்கால எலிஸினிய மன்னராகிய ட்ரிப்டோலிமஸ் (Triptolemus) முன்னுளைவிட அதிகப் புகழ்பெற்றுச் சிறந்து தென்படுகின்றுர். வேளாண்மையை முதன்முதலில் கண்டு பிடித்த பெருமை இவருடையதாகும். பல நாடுகளுக்கு விதை விதைத்தல் முதலிய கலைகளைப் பிறருக்கு எடுத்துச் சொல்லிக்கொடுக்க டிமீட்டர் அம்மையாரே இவரை அனுப்பி வைத்ததாகச் சொல்லப் படுகின்றது. ஆனுல் இந்த எலிஸினியன் வழிபாட்டில், ஐயாக்கஸ் மரபு (cult of Iacchus) இணைக்கப்பட்டது மற்றுமொரு பெரிய நிகழ்ச்சியாகும். ஐயாக்கஸ் கீழ் உலகத்திலுள்ள ஒரு கடவுளாவார். இவருக்கு ஆதென்ஸ்ஸில் ஒரு கோவில் திருவிடமுண்டு. எலியுஸினியன் மறை உண்மைகள் (Mysteries) என்னும் விழாவின்போது இவர் எலியுஸிஸ்ஸிற்கு (Eleusis) ஒவ்வோர் ஆண்டும் எடுத்துச் செல்லப்பட்டு அங்கே மிகவும் பயபக்தியுடன் ஏற்றுக் கொள்ளப்பட்டார். முதலில் மறை மெய்ம்மை சார்ந்த (mystic) டையனீஸியஸ்ஸும் இவரும் தனிப் பட்டவர்களாகக் காணப்பட்டனர். ஆனுல் பிற்காலத்தில் இவ் விரு வரும் ஒன்றே என்று கொள்ளப்பட்டனர்.

பெர்ஸிபோன், டிமீட்டர் இவர்களின் கதையானது இந்த விழா வின்போது நடக்கும் ஊமைக்கூத்தில் ஒரு முக்கிய பாகமாயிற்று.

இந்தக் கூத்து நடக்கும் காலத்தில் அவ்வப்போது சில மறை மெய்ம்மை சார்ந்த மந்திரங்கள் ஓதப்பட்டதுமன்றிப் புனித உடைகளும் (sacred gear) மக்களுக்குக் காட்டப்பட்டன. கோட்பாடுகளைப்பற்றி விவரிப்பு ஒன்றுமே இங்கு இல்லை. இந்த இயக்கத்தில் சேர்த்துக்கொள்ளப்பட்ட யாவரும் தீர்க்கதரிசிகளே தவிரக் கேட்டு அறிய வந்தவர்கள் யாவருமில்லை. இம் மறை உண்மைகளைக் கொண்ட விழாவானது முதிர்ச்சிபெற்று, செப்டம்பர் மாதத்தில் நடைபெறும் பொழுது பின்வரும் அட்டவணைப்படி நிகழ்ச்சிகள் நடந்தன.[1] 'மறை மெய்ம்மை சார்ந்த எல்லோரும் கடலை நோக்கிச் செல்க செல்க' என்னும் தொனியானது முதல் நாளில் ஆதென்ஸ் நகரத்தின் தெருக்களில் தொனிக்கும். இச் சப்தத்தைக் கேட்டவுடன் இயக்கத்தில் சேர்க்கப்பட்ட யாவரும் கடற்கரையை நோக்கிச் சென்று அங்கே கடல் நீரில் தம்மைச் சுத்தம் செய்துகொள்வர். இதற்கு அடுத்த இரு நாட்களிலும் ஆசாரங்களும் பலிகளும் இடப்பட்டன. நான்காவது நாளன்று ஐயாக்கஸ்ஸின் சிலையானது ஆதென்ஸிலுள்ள கோயில் திருவிடத்திலிருந்து மிகவும் பயபக்தியுடன் ஈகாலியோஸ் (Aegaleos) மலைமேல் புனித பாதையின் வழியாக (Sacred Way) எலியூஸிஸ்ஸிற்குக் கொண்டுபோகப்படும். தாங்கள் முன்னேறிப் போகும்பொழுது இந்த அடியார்க் குழுவானது ஐயாகஸ்ஸின் பாடல்களைப் பாடிக் கொண்டு, எலியூஸினியன் சேமஅரண் அண்டையிலிருக்கும் கோயிலை இரவில் பந்தங்களின் வெளிச்சத்துடன் அடைவர். அங்குள்ள சமய முறையுட் சேர்க்கும் கூடத்தில் (Hall of Initiation) படிகள் போன்ற கல் இருக்கைகளில் இவர்கள் அமரும் நாளைப் பெரியதொரு நாளாகக் கருதினர். இந்தக் கூடத்தில் எலியூஸினிய அரச குடும்பமாகிய ஈயூமோல்பிட்ஸ் (Eumolpids) சேர்ந்த ஹைரேப்பான்ட் (Hierophant) வழிபாட்டின் மறைவான காரியங்களை எடுத்துக்காட்டுவார். இவருக்கு அருகில் தீப்பந்தத்தை ஏந்தியிருப்பவர், பறையறிவிப்போன், சமய குரு முதலியோர் மறைமெய்ம்மை சார்ந்த ஆசாரங்களை நடத்துவர். இத்த விழாவின் ஆசார விவரங்கள் இன்றுவரை நமக்குப் புரியாதவைகளாகவே யிருக்கின்றன. ஆயினும் இங்கு சித்தாந்தங்கள் எவையும் கற்றுக்கொடுக்கப்படவில்லை என்றும், புராணங்களும் ஒழுங்கு முறையாக விளக்கிப் பொருள் கூறப்படவில்லை என்றும் நாம் சொல்ல இடமிருக்கின்றது ஆனல் இங்கு நடைபெறும் 'செயல்கள்' (acts) யாவும் புரியாதவைகளாக இருந்தபோதிலும் அங்குக் கூடியிருக்கும் மக்களின் கற்பனைகளைத் தூண்டுவிக்கக் கூடியவைகளாகவும், அவை தெளிவற்றவைகளாக இருப்பினும் வெவ்வேறு மனத்திற்கு வெவ்வேறு உட்பொருளைத் தோற்றுவித்து இவ்விதமாக மக்களின்

[1] இங்கே குறிக்கப்பட்டுள்ளது பெருமறை உண்மைகளின் விழாவாகும். சிறு மறை உண்மைகளின் விழாவானது ஆண்டுத் துவக்கத்தில் ஆதென்ஸ் நகருக்குப் பக்கத்திலுள்ள அக்ரீ (Agrae) யில் நடத்தப்பட்டு வந்தது.

நம்பிக்கைகளைத் தூண்டவும் இவை செய்யப்பட்டன. அநேகருக்கு இந்த ஆசாரங்கள் பிற்கால வாழ்வு நலத்தைக் குறித்தன. எதையும் தர்க்கிக்கும் மக்கள்கூட இவைகளின் மூலம் தெரியாத வருங் காலத்தை ஒருவகையில் அறிந்தவர்போல் காணப்பட்டனர். இவ் வுலகில் மாத்திரமின்றி மறு உலகிலும் இச் சமய முறையுட் சேர்க்கப் பட்ட மக்கள் மற்றவர்களைப் பார்க்கிலும் தாம் அடுத்த உலகத்தின் சக்திகளை அறிவதனுல் பெருநலன் கொண்டவர்கள் எனக் கருதப்பட்ட னர். இச் சத்தியத்தைத்தான் பழைய எலியூஸினியன் பாடல் ஒன்று பின்வருமாறு குறிப்பிடுகின்றது: இங்கு நடைபெறும் எல்லாக் காரி யங்களையும் யார் பார்க்கின்றனரோ அவர்கள் இந்த உலகத்தில் வாழும் எல்லா மக்களுள் மிகவும் ஆசீர்வதிக்கப்பட்டவர்கள். ஆனுல் இந்தக் காட்சிகளை விளங்கிக் கொள்ளாதவர்கள் இவ்வுலகத்தின் இன்பங்களை மாத்திரமல்லாமல் துன்பங்களையும் அடைவார்கள், மரித்தவர்கள்கூட கீழேயுள்ள இருட்டில் தம்மை மூடிக்கொள்வர்.

இந்த எலியூஸினியன் மறை உண்மைகள் என்றழைக்கப்படும் விழாவானது அகில கிரேக்கர்களுக்கும் சொந்தமாயிற்று. தீட்டுப் படாத எல்லா கிரேக்கர்களும் இந்தச் சமயமுறையுட் சேர்க்கும் ஆசாரங்களில் சேரும்படி அழைக்கப்பட்டனர். பெண்கள் இக் கூட் டத்திலிருந்து விலக்கப்படவில்லை. அடிமைகள்கூட இதிலிருந்து தள்ளப்படவில்லை. பிஸிஸ்ட்ரேட்டர்களால் இந்த விழாவானது முக்கிய பதவிக்குக் கொண்டுவரப் பட்டிருக்கலாம். இவர்கள் காலத் தில் கட்டப்பட்ட சடங்குக் கூடத்தின் தரைப்படமானது எலியூஸிஸ் தரைப்படத்தைப் போன்றதாகவே இருப்பது இங்குக் குறிப்பிடத் தக்கதாகும்.

## 13. ஓர்ஃபிக் சமயத்தின் பரவுதல்

ஓர்ஃபிக் மத ஆகிரியர்கள் உலகத்தின் படைப்பைக் குறித்துப் புதியதொரு கொள்கையை அறிக்கையிட்டனர். இந்தக் கொள்கை யானது பாபிலோனியாவிலிருந்து சில குறிப்புகளைப் பெற்றிருக்கக் கூடும் என்று தெரிய வருகின்றது. இவர்கள் காலமானது (Time) மூல தத்துவம் என்று கற்பித்தனர். அதற்குப்பின் வானவெளியும் குழப்ப மும் தோன்றின. இவ்விரண்டு பூதங்களைக் கொண்டு காலமானது ஒரு வெள்ளி முட்டையை உண்டுபண்ணியது. இம் முட்டையிலிருந்து தோன்றிய தேவர்களில் முதற் பேருன வெளிச்சத்தின் தேவர் பேனஸ் (Phanes) ஆவார். இவ்வித அண்டப்படைப்பை கிரேக்க சமய சித்தாந்தத்தில் கொண்டுவர வேண்டியது முக்கியமாயிற்று. எனவே, ஸியூஸ் பேனஸ்ஸை விழுங்கி மூல ஆற்றலாகிவிடுகிருர். இதிலிருந்தே

உலகம் மீண்டும் வளர்ச்சி பெற்றது. திரேஸிய தேவராகிய டையோனீஸியஸ் ஸாக்ரியஸ் (Dionysus Zagreus) ஸ்யூஸிற்கும் பெர்ஸிபோனிற்கும் (Persephone) மகனுவர். எனவே அவர் பாதாள உலகத்துடன் நெருங்கிய தொடர்புடையவர். இவர் சிறுவராக இருக்கும் போதே ஸ்யூஸ் இவரை அண்டசராசரங்களுக்கும் கடவுளாக்கினுர். ஆனுல் இவர் டைட்டன்களால் (Titans) விரட்டப்படவே, இவர் ஒரு காளையின் சொரூபத்தை எடுத்தார். டைட்டன்கள் இவரை விடாது துரத்திப் பிடித்து இவரைத் துண்டு துண்டாகக் கிழித்தனர். அத்தீனு இரக்கங் கொண்டு இவருடைய இருதயத்தைக் காப்பாற்றினுர். இந்த இருதயத்தை ஸ்யூஸ் விழுங்கிவிட்டுப் பின்னுல் மற்றுமொரு புதிய டையோனீஸியஸ்ஸை ஈன்ருர். கொலையுண்டவரின் இரத்தத்தைத் தம்மேல் கொண்டுள்ள டைட்டன்களை இவர் மின்னலால் பொசுக்கினுர். இவர்களுடைய சாம்பலிலிருந்து மனிதவர்க்கம் தோன்றிற்று. எனவேதான் மனிதத்தன்மையானது நல்லவை பொல்லாதவையாகிய டைட்டனிக், டையோனிஸியக் கருப்பொருள்களைக் கொண்டு விளங்குகின்றது. மனித ஆன்மாவானது தான் தெய்வீகத் தன்மையிலிருந்து உருவாகியுள்ளது என்பதை அறியவும், தெய்வத்தையே தன் குறியாக வைத்துக்கொண்டு முன்னேற வேண்டும் என்பதே இந்தப் புராணக் கதையின் நோக்கமாகும். காவற்கூடம் அல்லது கல்லறைபோன்ற இந்த உடலாகிய கூட்டிலிருந்து தப்பி, டைட்டானியக் கருப்பொருள்களிலிருந்து மீட்சியடையப் பல தண்டனைகளை அடைந்து தூய்மையாக்கப்பட வேண்டியது அவசியமாகும். எனவே ஆன்மாவானது சக்கரம் போன்று மாறி மாறித் தோன்றும் பல திருப்பிறவி யெடுக்கும் நிலையை அடைவது அவசியமாகின்றது. குறிப்பிட்ட காலங்களில் தோன்றும் இந்தத் திருஉருக் கொள்ளும் நிகழ்ச்சிகளுக்கிடையே ஆன்மாவானது ஹெடிஸ் (Hades) என்னும் அரசில் குடியிருக்கும். முற்றுமாக மீட்சியடைய மனிதன் ஓர்ஃபிக் சமயத்தில் குறிப்பிட்டுள்ள சகல விதிகளின்படி துறவுபூண்டு டையோனீஸியஸ்ஸின் வெறியாட்டங்களில் சமய முறைப்படி சேர்வது அவசியமாகும். ஆகவே இவர்கள் மிருகங்களின் இறைச்சி முதலியவற்றை உண்ணுமலும், தூய்மையடையப் பல ஆசாரங்களையும் கைக் கொண்டனர். மரணத்திற்குப்பின் நியாயத் தீர்ப்பு உண்டு என்ற சித்தாந்தத்தையும் இம் மனித உடலில் செய்த நன்மை தீமைகளுக்கு ஏற்பப் பரிசுகளையும் தண்டனைகளையும் ஹெடிஸ் என்ற பாதாள உலகத்தில் பெறுவார்கள் என்ற கோட்பாட்டையும் போதித்தனர்.

இவ்விதம் ஓர்ஃபிக்கர்கள் மறுமுறை திரேஸிய டையோனீஸியஸை கிரீஸினுள் புகுத்தினர். இந்த டையோனீஸியஸ், ஒலிம்பஸ் மலையிலுள்ள கிரேக்கத் தேவர்களாகிய சமுதாயத்தில் சேர்க்கப்பட்டு,

தம் உணர்ச்சிகள் அனைத்தையும் அடக்கி முற்றிலுமாக கிரேக்கராக்கப் பட்ட டையோனீஸியஸ்ஸிற்கு முன் நேர் நேராக நிற்கும்போது, புதியதொரு தெய்வம் போலக் காணப்படுகின்றார். ஓர்ஃபியர்கள் எலியூஸினியன் தெய்வீக மறை உண்மைகளின் கருத்துகளை எடுத்துத் தமதாக்கிக்கொண்டு அவைகளை முதிர்ச்சிபெறச் செய்தனர். இவர்கள் ஹெடிஸ் பாதாள உலகத்தில் ஓர்ஃபியஸ் இறங்குதல் (Descent of Orpheus into Hades) என்ற செய்யுளில் கீழ் உலகத்தின் பூவியலை விவரித்துள்ளனர். மேலும் இவர்கள் பழங்கால தீர்க்க தரிசிகள், பரிசுத்தம் செய்வோர் முதலியோரின் பதவியை ஏற்கவும் ஆசிபெற்றனர். மேற்படி தீர்க்கதரிசிகள் பரப்பிய தெய்வமொழி களைத் தேடிப் பொறுக்கி எடுத்துத் 'திரட்டித் தொகுதியாக அமைத் தனர். இவர்களுடைய கோட்பாடுகள் அனைத்தும் செய்யுள்களாக வெளியிடப்பட்டன. இறுதியில் இச் செய்யுள் திரட்டுகள் ஹெஸி யட்டின் தியோகனிக்குப் (Theogony of Hesiod) பதிலாக ஏற்றுக் கொள்ளப்படவேண்டும் என்பது இவர்களின் எண்ணம். காலத்தினால் அழிக்கப்படாமல் தப்பிய இச் செய்யுள் திரட்டின் பாகங்கள் ஹோமரு ருக்குப் பின் தோன்றிய புலவர்களின் செய்யுள் திரட்டுகளைக் காட்டி லும் திறமையான வேலைப்பாடுகள் நிரம்பியனவாகக் காணப்படு கின்றன.

இந்த ஓர்ஃபிக் சமயமானது ஆதென்ஸ் நகரில் நல்லதொரு வரவேற்பைக் கண்டதுமன்றி பிஸிஸ்ட்ரேட்டஸ்ஸாலும் அவருடைய மக்களாலும் பெரிய ஊக்கத்தையும் பெற்றது. ஓர்ஃபிக் சமய ஆசிரியர்களில் பெயர் பெற்றவரும் 'சமய முறையுட் சேர்க்கும் ஆசாரங்கள்' என்ற நூலை இயற்றியவருமான ஆனோமாக்ரிட்டஸ் (Onomacritus) டைரண்டுகளின் சபையில் மதிப்பையும் செல்வாக்கை யும் கொண்டு திகழ்ந்தார். இவர் ஹோமரின் திரட்டுப்பதிப்பு ஒன்றை வெளியிடுவதற்கான முயற்சிகளைச் செய்தார் என்றும், இவரும் இவ ருடன்கூட வேலை புரிந்தவர்களும் வேறு சில பகுதிகளை உள்ளே நுழைத்தனர் என்றும், முஸியஸ் (Musaeus) என்னும் பழங்காலப் புலவர் தொகுத்த பழங்காலத் தெய்வ வாக்குகள் கொண்ட திரட்டில் இவர் வாக்கை நுழைக்கும் போது பிடிக்கப்பட்டு, நாட்டைவிட்டுக் கடத்தப்பட்டதைப் பற்றியும் நாம் முன்னரே அறிந்துள்ளோம்.

ஸாமாஸைச் சேர்ந்த பித்தகோரஸ் என்னும் கூரறிவுள்ள மனிதர் ஒருவர் இந்த ஓர்ஃபிக் கோட்பாடுகளைத் தம் அனுபவத்தில் ஏற்றுக்கொண்டார். இவர் இத்தாலி நாட்டிற்குச் சென்று அங்கே க்ரோட்டான் (Croton) என்ற இடத்தில் குடியேறினர். அங்கே இவர் மக்களின் மதிப்பைப் பெற்றார். இவருடைய தத்துவம், தத்துவம் —சமயம் என்ற இரண்டு பகுதிகளைக் கொண்டிருந்தது. இவர் கணித

நூலியலிலும், இசையியலிலும் பல உண்மைகளைக் கண்டுபிடித்தார். பூலோகமானது உருண்டை வடிவத்தையுடையது என்று இவர் ஏற்றுக் கொண்டார். இவர் வானநூலில் எடுத்துக்கொண்ட புத்தாராய்ச்சிகள், இவருடைய மாணவர்கள் கோப்பர்நீக்கன் அமைப்பை நோக்கிச் செல்ல ஏதுவாயிருந்தன—இவருடைய புத்தாராய்ச்சியானது உண்மையான அசைவுக்கும் போலியான அசைவுக்கும் உள்ள வேற்றுமையைச் சார்ந்திருந்தது. பித்தகோரஸ்ஸும் அவரைச் சார்ந்தவர்களும் சூரியன் பூமியைச் சுற்றுவது போல் காணப்படுவது போலியான அசைவு என்று அறிந்திருந்த போதிலும், பூமியானது அதன் அச்சின் மேல் சுழல்கின்றது என்பதை அறியாதிருந்தனர். அண்டசராசரங்களின் (universe) மத்தியில் ஒருபெரு நெருப்புக் குவியல் இருப்பதாக இவர்கள் எண்ணிக்கொண்டனர். இக் குவியலைச் சுற்றி பூமியானது இருபத்து நான்கு மணிநேரத்திற்கு ஒரு முறை சுற்றி வருகிறதென்றும், மனிதருக்குத் தெரிந்த மற்ற ஐந்து கோளங்களும் (planets) அதனைச் சுற்றி வருகின்றன எனவும், நிலாவானது அதனை மாதத்திற்கு ஒரு முறையும், சூரியன் ஆண்டிற்கு ஒரு முறையும் சுற்றி வருகின்றன என்றும் நினைத்தார்கள். நாம் பூமியின் மேற் பாகத்தில் வசிப்பதினால் இந் நெருப்புக் குவியலைக் காண்பதில்லை என்றும் கருதினர். உலகமனைத்தும் இந்நெருப்பினால் சூடாக்கப்பட்டும் வெளிச்சமடைந்தும் வருகின்றது—எனவே இது 'அண்டசராசரத்தின் அடுக்களை' எனப்பட்டது. பித்தாகோரஸ் எண்களின் மூலம் ஆன்மீக உலகத்தையும் விளக்க முயன்றார். இவர் பொதுவாக இந்தக் கருத்தை ஆதரித்த போதிலும், இம் முறையை நுட்பமாக ஆராயும்போது அதன் முட்டாள்தனம் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் தோன்றலாயிற்று. இவர் கணித நூலைப் பிறப்பித்ததே இவருடைய மகத்தான செயலாகும்.

க்ரோட்டானில் கண்டிப்பான விதிகள் கொண்ட ஒரு மத உட்பிரிவு அல்லது சகோதரக் கூட்டத்தை இவர் ஏற்படுத்தினார். ஆன்மாவானது கூடுவிட்டுக் கூடுபாய்வதே இம் மதத்தின் முக்கிய கோட்பாடாகும். இவர்களுடைய துறவற வாழ்க்கையானது ஓர்ஃபிக் பிரிவுகளின் வாழ்க்கையை ஒத்திருக்கின்றது. சொல்லப் போனால் இந்த பித்தாகோரஸ் கூட்டத்தினர் பலவிதத்தில் ஓர்ஃபிக் சமூகத்தைச் சார்ந்தவர்களே. பெண்களை விலக்கி வைக்காத இவர்களுடைய சகோதரத்துவமானது க்ரோட்டானில் மாத்திரமின்றி அக்கம் பக்கத்திலுள்ள நகரங்களிலும் பல கோட்பாட்டு மாணவர்களைக் கொண்டு திகழ்ந்தது. இத்தாலியாவிலுள்ள கிரேக்க சமுதாயத்தில் இக் கூட்டமானது ஒரு தனி அரசியல் செல்வாக்கைப் பெற்றிருந்தது. ஆனால் இந்தச் செல்வாக்கானது சில குழு ஆட்சிக்காகவேதான் உபயோகிக்கப்பட்டது. பிரபுக்கள் இந்த சகோதரத்துவத்தை அரசியல் துறையில்

ஓர் ஆற்றலாக உபயோகிக்க எண்ணி, இதில் உறுப்பினராயினர் என்று தெரிய வருகின்றது. பித்தகோரியர்கள் (Pythagoreans) உச்ச நிலையை அடைந்த காலத்தில் க்ரோட்டானுக்கும், அதன் அருகில் இருந்து கொடுங்கோலாட்சிக்குட்பட்ட சிபேரிஸ்ஸுக்கும் (Sybaris) ஒரு போர் மூண்டது. சிபேரிஸ் கொடுங்கோலனுகிய டெலிஸ் (Telys) நாடு கடத்திய மக்களுக்கு க்ரோட்டானியர் அபயம் அளித்தனர். டெலிஸ் அவர்களைத் திருப்பி அனுப்பும்படி வேண்டிக் கொண்டதற்கு க்ரோட்டானியர் உத்தரவு எதுவும் அளியாதிருந்ததே இப் போருக்குக் காரணமாகும். டெலிஸ் ஒரு பெரும் படையை நடத்திச் சென்றுர். பலத்த போர் மூண்டது. ஆனுல் இறுதியில் சிபேரிஸ் படையானது முறியடிக்கப்பட்டது. வெற்றிவேந்தர்கள் சிபேரிஸ்ஸைக் கைப்பற்றி, அங்கு ஒரு செங்கல்லின்மேல் மற்றொரு செங்கல் நிற்காதபடி அந்த நகரை நாசமாக்கினர். பல புதிய நகரங்கள் பழைய சிபேரிஸ்ஸின் பக்கத்தில் தோன்றின. ஒரு நகரமானது அதன் பெயரைக் கொண்டு சில மாதங்கள் காணப்பட்டது. ஆனுல் கிரீஸ் நாடு முழுவதும் செல்வத்திற்கும் இன்ப வாழ்விற்கும் பெயர் பெற்றது. பழைய சிபேரிஸ் முழுவதும் மறைந்து போயிற்று. அது நின்ற இடமும் அறியாதபடி போயிற்று. தம்முடன் போட்டியிட்ட நகரத்தை நாச மாக்கியதே க்ரோட்டானிலுள்ள பித்தகோரிய சிலகுழு ஆட்சியின் முக்கிய தீரச் செயலாகும். ஆனுல் க்ரோட்டானில் அரசாங்கத்திற்கு எதிராகவும், பித்தகோரிய ஒழுங்கிற்கு விரோதமாகவும் பலத்த எதிர்ப்பு ஏற்பட்டது. பித்தகோரஸ் தாம் க்ரோட்டனிலிருந்து தப்பி யோடிவிடுவதே நலம் என்று எண்ணி அந் நகரத்தை விட்டுச் சென்று தம் கடைசி காலம் வரை மெட்டபான்டியன் (Metapontion) என்ற இடத்தில் வசித்து வந்தார். குடியாட்சிக் கட்சியானது கைலோன் (Cylon) என்பவரின் தலைமையின்கீழ் செயல் புரிந்து வந்தது. ஆயினும் இக் கட்சியானது முதலிடத்தைப் பெற இன்னமும் கிட்டத்தட்ட அரை நூற்றுண்டுக் காலம் செல்ல வேண்டியிருந்தது. இக் காலத்தில் க்ரோட்டானிலும் அதன் அருகிலும் உள்ள நகரங்களில் பித்தகோரிய முறை செழித்தோங்கியது. இறுதியில் திடீரென்று ஒரு பேரடி அவர் களது ஆற்றலைக் கலைத்தது.

ஒரு நாள் க்ரோட்டானில் மில்லோன் (Milon) என்பவருடைய வீட்டில் பித்தகோரிய ஒழுக்கத்தைச்சேர்ந்த நாற்பது சகோதரர்கள் கூடியிருந்தனர். அப்போது அவர்களுடைய எதிரிகள் அந்த வீட்டிற் குத் தீயிட்டனர். இதன் விளைவாக இருவர் தவிர மற்றெல்லாரும் தீக்கிரையாயினர். இத்தாலியா முழுவதிலும் இவ்வொழுக்கத்தைத் துன்பப்படுத்துவதற்கு இச் செயலானது ஓர் அறிகுறியாயிற்று. எங்குப் பார்த்தாலும் பித்தகோரிய சமூகத்து உறுப்பினர்கள் கொல்லப்பட்டனர் அல்லது நாட்டை விட்டுத் துரத்தப் பட்டனர்.

பித்தகோரியர்களின் வீழ்ச்சிக் காலத்தின் போது, ஓர்ஃபிக் சமயமானது கிரீஸ் நாட்டிற்கு ஆபத்து விளைவிக்கும் நிலையிலில்லை. பித்தகோரஸ் உயிரோடிருக்கும் காலையில் இதற்கு நேர்மாறாக இருந்தது. அவர் காலத்தில் இந்த ஓர்ஃபிக் கொள்கைகள் மனிதர்கள் விரும்பிய முக்தியை அல்லது பேரின்பத்தை வெளிப்படுத்துவது போலக் காணப்பட்டன. இந்தக் கொள்கைகள் கிரீஸில் வேர் ஊன்றியிருந்தால், தேசியக் கோயில்களிலுள்ள மதகுருக்கள் இந்தப் புது சமயத்தை அவைகளில் புகுத்தியிருப்பர்; பின்னும் அவர்கள் இம் மதத்தின் குருக்களாகவும் விளங்கியிருப்பர். அதுவுமன்றி அவர்கள் புரோகிதனுக்குரிய பெரிய அதிகாரங்களையும் கையாண்டிருப்பர். இவர்களுடைய மறைபொருள் அடங்கிய சத்தியங்களை எதிர்க்க, சக்தி மிகுந்த மாற்று ஒன்று (antidote) இல்லாமலிருந்தால் இவர்களுடைய ஆசிரியர்கள் தோல்வியுற்றிருந்திருக்கமாட்டார்கள். அவர்கள் நலிவுற்றுப் போயிருந்த போதிலும் ஈஸ்கைலஸ் (Aeschylus), பிண்டார் (Pindar) ஆகிய புலவர் பெருமான்களை ஊக்கமூட்டியும், பிற்கால இலக்கியங்களில் ஹெடிஸ் என்ற கீழ் உலகத்தைப் பற்றிய அறிவைப் பரப்பியும் பித்தகோரியர்கள் நிலையான செல்வாக்கை நிலை நாட்டினர்.

## 14. ஐயோனியாவின் பகுத்தறிவாராய்ச்சி

ஐயோனியாவின் தத்துவ ஞானமானது ஓர்ஃபிக் சமயத்திற்கு ஒரு மாற்றாக இருந்தது. ஆசியாவைச் சேர்ந்த கிரீஸ் நாட்டில் இந்தச் சமயமானது வேர் ஊன்றவேயில்லை. நல்ல காலமாகத் தத்துவ இயக்கமானது (philosophic movement) அதாவது சமய தத்துவத்திலிருந்து அல்லது தியோகனியிலிருந்து (theogony) அறிவியல் அல்லது காஸ்மோகனி (cosmogony) பிரிக்கப்படுவதானது, ஓர்ஃபிக் சமயம் பரவுவதற்கு முன்னமே துவங்கியது. ஐரோப்பாவானது ஒரு தத்துவஞானத்தை ஏற்படுத்தியதற்காக ஐயோனியாவிற்கு மிகவும் கடன்பட்டுள்ளது. மதகுருக்களால் விளக்கிப் பொருள் கூறப்பட்டுள்ள சமயத்தின் கொடுங்கோலாட்சியிலிருந்து ஐயோனியா கிரீஸ்ஸைக் காப்பாற்றியதனுல் ஐரோப்பாவின் கடனுனது அதிகமாகவேயிருந்தது. நாம் முன்னதாகவே தேல்ஸையும் (Thales) அனெக்ஸிமாண்டரையும் (Anaximander) சந்தித்துள்ளோம். பித்தகோரஸ்ஸும், அவரைப் பின்பற்றியவர்களும் அறிவியல் துறையில் மிகவும் முன்னேறிய போதிலும், பித்தகோரஸ் மறைமெய்வழியில் (mysticism) அதிக ஆர்வம் கொண்டிருந்தார். சமய இயக்கத்தாலும் தத்துவ இயக்கத்தாலும் தாக்கப்பட்ட இவர், இவை இரண்டையும் ஒன்று சேர்க்க முனைந்தார். இப்படிப்பட்ட சேர்ப்புகளில், எப்

பொழுதும் மறைமெய் கருப்பொருள் (mystic element) ஒரு முக்கியத் துவத்தை அடைகின்றது. ஆனுல் அதே நேரத்தில் ஸெனேபேனஸ் (Xenophanes), ஹெராக்லிட்டஸ் (Heraclitus) போன்ற பெரியார்கள் கவனத்தைத் திருப்பும் இடையூறு ஒன்றையும் பொருட்படுத்தாது பகுத்தறிவாராய்ச்சியின் வழிகளில் செல்லலாயினர்.

பகுத்தறிவாராய்ச்சியில் மற்றெல்லாரையும் விட அதிக மிக்க தீவிரமுடையவர் கோலோபோனைச் (Colophon) சேர்ந்த ஸெனே பேனஸ் ஆவார். இவர் ஐயோனியா பாரசீகர்களின் கையில் வீழ்ந்த வுடன், ஈலியாவிற்குச் (Elea) சென்று, அங்கே தம் கிழவயதில் இவ் வுலகை நீத்தார். ஆனுல் தமது வாழ்க்கையின் பெரியதொரு பகுதியை உலகத்தைச் சுற்றிப் பார்ப்பதில் செலவிட்டார். இவரைக் காட்டிலும் வேறு எவரும் இவ் விதமாகப் பல இடங்களைக் கண்ணுற்றதுமில்லை; கேட்டதுமில்லை. பாரசீகர்களுக்கு எதிராக ஐயோனியா பலங்குன்றிப் போரிட்டு இறுதியில் தோல்வியடைந்தது, இவருக்குக் கிரேக்கர்களின் மேல் ஒரு வெறுப்பை ஏற்படுத்தியது. கிரேக்கர்களுடைய சமயம், உயர்குறிகள் முதலியவற்றைப் பற்றிக்கூட இவருடைய மனத்தில் வேறு எண்ணங்கள் தோன்றலாயின. பல நாடுகளில் இவர் கண்ட அனுபவங்கள் இவரைத் தமது தேசியத் தப்பெண்ணங்களை உதறிப் போட உதவின. பிறரிடமிருந்து பெற்ற கருத்துகளுக்கு (received opinions) விரோதமாக யுத்தம் செய்வதில் தமது பலத்தைச் செலவழித்தார். இவர் முதலாவதாக வைதீக சமயத்தைத் தாக்கி மனிதனின் சாயலில் தேவர்கள் உருவாக்கப்படுவது பகுத்தறிவுக்கு மாறுனது என்று காட்டினுர். எருதுகளுக்கும் குதிரைகளுக்கும் சிங்கங் களுக்கும் நம்மைப்போல் கைகளிருந்தால் அவைகளும் தமது உருவங் களில் தேவர்களை உருவாக்கியிருக்கும் என்ருர். அடுத்தபடியாக, கிரேக்கர்களால் ஏற்றுக் கொள்ளப்பட்டு, தெய்வீக ஊக்கம் பெற்ற வர்கள் என்று கருதப்பட்ட ஹோமர், ஹெஸியட் (Hesiod) என்ப வர்களை இவர் கண்டனம் செய்தார். திருடு, விபசாரம், ஒருவரை ஒருவர் ஏமாற்றுதல் முதலியன தாம் இவர்கள் மக்களுக்குப் போதித் தவை என்று கூறினுர். மற்றும் உடற்பயிற்சி வல்லுநரின் உயர்குறிகள் (ideals) போன்ற கிரேக்கர்களுடைய மரபு ஒழுங்கான பல உயர் குறிகளை இவர் தாக்கி ஏளனம் செய்தார். ஓர் ஓட்டப்பந்தயத் தில் அல்லது போட்டியில் வெற்றி பெற்ருேருக்குப் புகழ்ப் பட்டங் களையும் நன்மதிப்புகளையும் அளிப்பது மடமை என்று இவர் கருதினுர். 'நம்முடைய மெய்யறிவு மிருகங்களைப் போன்ற மனிதர்களின் அல்லது குதிரைகளின் பலத்தைக் காட்டிலும் அதிக மேன்மை பொருந்தியது' என்று இவர் கூறினுர். ஒரு பாணர்போலத் தம்மை அலங்கரித்துக் கொண்டும், சிதோன் (cithern) வீணைபோன்ற வாத்தியத்தை ஏந்திய அடிமை ஒருவனைத் தன்னுடன் கூட்டிக் கொண்டும் இவர் நகரம் நகர

மாகச் சென்று தம்முடைய புரட்சிகரமான கருத்துகளைப் போதித்தும் பரப்பியும் வந்தார். ஆனால் இவர் அழிப்பதில் மாத்திரம் ஆத்திரம் கொள்ளவில்லை. தான் வெறுத்துத் தள்ளிய நம்பிக்கைகளின் இடத்தில் புதிய கோட்பாடுகளை நிறுத்த முற்பட்டார். இவர் ஒரு புதிய தத்துவ ஞானத்தை ஏற்படுத்தினார். இதன் மூலமெய்ம்மை கடவுள் என்பதேயாகும். இவருடைய கடவுள் இறக்கும் தன்மையுள்ள மானிட உருவத்தையும், மானிட எண்ணங்களையும் கொண்டிராமல் அகண்ட சராசரத்தையும் தன்னகத்தே கொண்டதாய்ப் பரந்த வெளியில் வசிக்கும் பரம்பொருளாகக் கருதப்பட்டார். இவர் பாவித்த கடவுள் இயற்கைக்கு உயிரையூட்டும், தனித்தனி தாழ்ந்த படியிலுள்ள வேறு தேவர்களை விலக்கி வைக்கவில்லை. ஸெனோபேனஸ் மண்ணூல் (geology) அல்லது பார் இயலிலும் வல்லுநர்; புதையுயிர்த் தடங்களை மிகவும் ஆராய்ச்சி செய்து அவைகளின் உதவியால் பழங் காலத்து வரலாற்றைக் குறிப்பிட்டார். தேசியத் தப்பெண்ணங்களைத் தகர்த்தெறிய முன்வந்த தீரம் பொருந்திய ஆராய்ச்சியாளராகிய இவர், முதல் முதல் தோன்றிய கிரேக்க அறிவாராய்ச்சியாளர்களில் தலை சிறந்தவராவர்.

ஸெனோபேனஸ் எப்படி முழுவதுமாக ஹெஸியட்டைத் தள்ளினாரோ அவ் விதமாகவே ஓர்ஃபியஸ்ஸையும் தள்ளினார் என்பது நாம் கவனிக்கக்கூடிய முக்கியக் குறிப்பாகும். மறை பொருள் ஞானத்திலும் (mysticism) தெய்வீக வெளிப்பாட்டிலும் இவருக்குப் பிடித்தமே இல்லை. இவர் ஓர்ஃபிக் மதகுருக்களை வஞ்சகர்கள் என்று கருதினார். இவர் பித்தகோரஸ்ஸை இடித்துக் கேவலமாகவே பேசினார். பகுத்தறிவாராய்ச்சியின் யுத்தத்தில் தீவிரமாகக் கலந்துகொண்டு, நாகரிகமில்லாத கீழானவர்கள் கொண்டுள்ள தீங்குகளை விளைவிக்கக் கூடாத மூட நம்பிக்கைகளுக்கு மாறாகப் புதிய கருத்துகளைப் பரப்பியதுமன்றி, அதிக தீங்கு விளைவிக்கக் கூடியதும் சூழ்ச்சித் திறமுடையதுமான ஓர்ஃபிக் சமயத்திற்கு விரோதமாகவும் கருத்துகளை இவர் பரப்பினார். இவருடைய மறைவுக்குப் பல ஆண்டுகளுக்கு முன்னரே கிரேக்கத் தத்துவ ஞானமானது ஒரு புது பலத்துடன் காணப்பட்டது. இதனை ஒரு மதமாவது திக்குமுக்காடச் செய்யமுடியாத நிலையை அடைந்தது. அக் காலையிலிருந்து இந்தத் தத்துவ ஞானமானது சமூகம் முன்னேறிச் செல்வதற்கு முட்டுக்கட்டை யிடும் ஆசாரங்களைத் தடுக்கக்கூடிய வளர்ச்சிபெற்ற ஆற்றலாகத் தோன்றியது.

ஸெனோபேனஸ்ஸின் பகுத்தறிவு ஞானமானது முற்றிலும் வேறுபாடான குணத்தையுடைய எபிஸ்ஸஸ் (Ephesus) நகரத்து ஹெராக்கிளிட்டஸ்ஸைப் பாதித்தது. ஹெராக்கிளிட்டஸ் கீழானவர்களை முழு மனத்துடன் வெறுத்தார். அரசியலில் இவர் ஓர் உயர்குடி மகன்.

இவர் ஓர் எழுத்தாளர். ஆனல் இவருடைய நடையானது உயர் குடிப் பிறந்தோருக்கு உரிய முறையில் கடினமாக இருந்தது. தனது முதிர்ந்த காலத்தில் தாம் இயற்றிய தத்துவநூலை ஆர்டிமியஸ் (Artemis) கோயிலில் பத்திரமாக ஒப்படைத்துவிட்டு, தமது வாழ்க்கையை முடித்துக்கொள்ளக் காட்டில் சஞ்சரித்தார். தமக்கு முன்னுலிருந்த எல்லா ஐயோனியத் தத்துவ ஞானிகளிலும் மிகவும் திறமை வாய்ந்த இவர் 'மாறுதலின் கோட்பாடு' (doctrine of the flux) என்பதை யோசித்து உருவகமாக்கினர். இக் கோட்பாடானது இவருடைய பின் சந்ததியார்களாகிய தத்துவ ஞானிகளை மிகவும் பாதித்தது. எல்லாப் பொருள்களிலும் இடைவிடாது மாறுதல் இருந்து கொண்டே யிருக்கிறது என்பதே இதன் முக்கியக் கொள்கை அல்லது மூல மெய்ம்மையாகும். நாம் உயிருடன் வாழ்வதே மாறுதலைப் பொறுத்ததாகும். 'நாம் இருக்கின்ருேம். அதேகாலையில் நாம் இல்லை.' ஆனல் இந்த மாறுதல் செய் முறையானது ஒரு விதியைப் பின்பற்றியேயுள்ளது. இயற்கையானது தனக்கென ஒரு முறையைக் கொண்டிருக்கின்றது. இவ்விதமாக இவர் கால இடப் பொதுத் தொடர்புத் தத்துவத்தை (doctrine of relativity) ஏற்படுத்தி வளரச் செய்தபோதிலும், 'நன்மையும் தீமையும் ஒன்றே' என்று இவர் கூறியதால் இவர் ஒழுக்க நூலிற்கும் ஓர் அடிப்படை வைத்திருந்தார் என்று அறிகின்ருேம். இவருடைய 'மாறுதலின் கோட்பாட்டையும்' 'உலகத்தின் மாருத விதிகளையும்' நோக்குங்கால், இவருடைய செல்வாக்கு, கவிழ்க்கக்கூடியதும் அதே நேரத்தில் பழைமையைப் பேணும் குணதிசயங்களை யுடையதுமாகும் என்று அறிகின்ருேம்.

ஸெனேபேனஸ்ஸின் உலகே கடவுள் என்னும் கொள்கையை ஈலியாவிலுள்ள (Elea) பார்மினிடிஸ் (Parmenides) எடுத்துக் கையாண்டு அதற்கு ஒரு புதிய அகப்பொருள் (metaphysical) கருத்தை ஈன்றனர். இப் புதிய கருத்தின் வளர்ச்சியைப்பற்றி இங்கே நாம் படிக்கப்போவதில்லை. ஆனல் கிரேக்க வரலாற்றில் தத்துவ ஞானத்தை மக்கள் பயின்றனர் என்னும் சிறந்த உண்மையை அறிவதற்கே இஃது இங்கே குறிப்பிடப்பட்டுள்ளது. இப் புதிய முறையானது புரியாத மறை செய்தியின்மேல் ஆராய்ச்சி அறிவின் வெற்றியைக் காட்டுகின்றது. இது ஓர்ஃபிக் சமயத்தை மக்கள் நம்பாதிருக்கச் செய்தது. மேலும் கிரேக்கர்கள் அரசியலிலும், சமூகத்திலும் கட்டுப்பாடில்லாமல் முன்னேறும்படியும் இது உதவியது. ஒரே ஒரு கண்டத்தில் (crisis) மாத்திரமில்லாமல், பல ஆண்டுகளுக்கிடையில் கலவரமும் குருதி சிந்துதலுமில்லாமல் ஓர் அபாயமானது தடுக்கப்படுமானல், அந்த அபாயமானது கூடிய சீக்கிரத்தில் அனுபவத்தில் மறந்துவிடப்படுகின்றது. பிஸிஸ்ட்ரேட்டஸ் காலத்தில் கிரீஸ்ஸிலும் முக்கியமாக அட்டிக்காவிலும் காணப்பட்ட இந்தச் சமயமானது

உன்னதச் செல்வாக்கு அடையவும், சமய குருக்களுக்கு சாவுக்குரிய அதிகாரத்தைக் கொடுக்கவும் முன்வந்தது என்பதைச் சிந்திக்கக்கூட முடியவில்லே. இந்த ஓர்ஃபிக் சமயமானது பரவுவது கடைசியில் தன்னுடைய சுயநலத்திற்கே பலனையளிக்கும் என்று டெல்பிக் குருக்கள் தம் இயல்புணர்ச்சியால் அறிந்தனர். உயர்குடியாட்சி மறையும் தறுவாயில் இந்த சமயமானது தோன்றி, பொது மக்களுக்கு ஊழியம் செய்வதாகக் கூறியபோதிலும், இது உயர்குடியாட்சிக்கும், கொடுங்கோலாட்சிக்கும் தனது உதவியை அளித்திருக்கும். அத்தீனியக் கொடுங்கோலர்கள் ஓர்ஃபிக் சமய குருக்களைத் தம் அச்சத்தைப் (terror) பரப்புதற்கு உபயோகமான கருவிகளாகச் செய்திருக்கலாம். ஒரு சமய சங்கமானது என்ன செய்யக்கூடும் என்பதைக் கிரீஸ்ஸிற்குக் காண்பிக்க பித்தோகோரஸ்ஸின் சகோதரக் குழுவானது ஒரு தெளிவான நீதியாகும்.

ஐயோனியாவின் வாடாத புகழ்பெற்ற ஆராய்ச்சியாளர்களின் நலனை விளைவிக்கின்ற பெரும் செல்வாக்கினுல் கிரீஸ்ஸிற்கு ஏற்படவிருந்த பெரிய அபாயமானது தடுக்கப்பட்டது என்று நாம் கூறுவது மிகையாகாது. ஆனுல் இப்படிக் கூறுவது உண்மையை மேலீடாகச் சொல்வதேயாகும். ஆனுல் நாம் சிறிது ஆழமாக நோக்குவோமானுல், மத குருக்களின் கொள்கைகளின்மேல் தத்துவ ஞானமானது கொண்ட வெற்றியானது கிரேக்க ஊக்கத்தின் கபடில்லாத வெளியீடாகும். இந்த கிரேக்க ஊக்கமானது தனது ஆற்றல் முழு விரிவடைதலேக் கட்டுப்பாடில்லாத ஆராய்ச்சியின்மூலம் அபிவிருத்தி செய்வதே தனது உயர்ந்த மனநிறைவு என்று எப்பொழுதும் கொண்டிருந்தது.

கிரேக்கர்களுடைய மனநிலேயின் முன்னேற்றத்தின் மிகவும் முக்கிய காலமாகிய ஆருவது நூற்றுண்டானது ஏழு ஞானிகளின் காலம் என்று இதன்பின் அழைக்கப்பட்டது.[1] புராணக் கதைகளே உண்டுபண்ணுவதில் கைதேர்ந்த கிரேக்க மக்களின் தேசீய உணர்ச்சியானது· நீதியான வழியில் நடந்து தமது ஞானத்தினுல் ஒருவித மதிப்பையும் புகழையும் ஏற்படுத்திக் கொண்ட பல மக்களே அவர்கள் வெவ்வேறு காலங்களில் வசித்து வந்த போதிலும் அவர்களே ஒரே காலத்தவர்கள் போலக் காட்டி, ஒரு சிறந்த குறிக்கோளேக் கொண்ட ஒரு குழுவாக அமைத்ததுமன்றி அவர்களே லிடியானின் மன்னர்கள் போன்ற பெருமக்களுடன் இணைக்கவும் செய்தது. சோலான், தேல்ஸ் முதலியோரின் பெயர்களேக் கொண்ட பட்டியலில் கொரிந்துவின் கொடுங் கோலனுகிய பெரியாண்டரின் பெயரும் விஞேதமான வகை

[1] சோலான் (Solon), பெரியாண்டர் (Periander), ஸ்பார்ட்டாவின் சில்லான் (Chilon of Sparta), பிட்டாக்கஸ் (Pittacus), பையஸ் (Bias), தேல்ஸ் (Thales), லின்டஸ்ஸின் கிளியோபூலஸ் (Cleobulus of Lindus).

யில் சேர்க்கப்பட்டுள்ளது. 'உன்னை நீ அறிந்து கொள்,' 'தகாத செயல்களை அகற்று,' 'நன்னெறியில் நடப்பது கடினம்' - போன்ற கூரறிவுள்ள பழமொழிகள் இப் பெரியார்கள் மேல் சார்த்தப் பெற்றன. மனிதன் தனக்குக் குறிக்கோளாகக் கொண்ட நீதிக்கும், உலகத்தில் அந்நீதி காணப்படுவதற்குமுள்ள வித்தியாசமானது, சதாகாலத்திலுமுள்ள ஒரு பிரச்சினையாக இருக்கின்றது. இப் புராணக்கதை இந்த சான்றோர்களின் மேல் சாற்றிய ஊக்கமும் (spirit), சோலான் (Solon), பிட்டாக்கஸ் (Pittacus) ஆகியோர் தமது வாழ்க்கையில் காட்டிய ஊக்கமும் மேலே கூறிய பிரச்சினையைச் சிக்கறுக்கவோ அல்லது அதிலிருந்து தந்திரமாகத் தப்பிக் கொள்ளவோ மக்கள் வரம்பைத் தாண்டாமல் எதிலும் மட்டாக நடந்துகொள்ள வேண்டும் என்று கூறியது அவர்களுடைய கூரறிவை வெளிப்படுத்துகின்றது. ஓர்ஃபிக் சமயத்தின் கிளர்ச்சியானது குறைந்த காலையில், மறை மெய்ம்மையின் உணர்ச்சியூக்கங்களில் ஈடுபடாமலும், வெளிப்படுதல்களில் விருப்புக் கொள்ளாமலுமிருந்த பெரியார்களின் உலக ஞானத்தை எடுத்துக்காட்ட கிரீஸ் இந்த ஏழு ஞானிகளின் கதையையுண்டு பண்ணியதில் ஒரு விந்தையுமில்லை.

# 8. அத்தீனியப் பேரரசு நிலைநாட்டப்படுதல்

## 1. ஸ்பார்ட்டாவின் நிலைமையும் பாசேனியஸ்ஸின் வாழ்க்கை நெறியும்

ஒரு நாட்டு மக்களின் மேலாவது அல்லது மரபினத்தின் மேலாவது வெளியிலிருந்து நெருக்கம் ஏற்படும்பொழுது அவர்களிடம் ஒருவித ஒற்றுமைப்பாடும் இணைப்பும் காணப்படும் என்னும் உண்மையைப் பாரசீகர்கள் கிரேக்க நாட்டின்மேல் படையெடுத்த காலத்தில் நாம் நன்ருகக் காண்கிருேம். ஒரு நாட்டைப் பொறுத்தவரையில் அயல் நாட்டு ஆக்கிரமிப்பானது அங்குள்ள தனிப்பட்ட மக்கள் யாவரும் ஒற்றுமைப்படும்படியும், மத்திய அரசாங்கத்தை உறுதிப் படுத்தவும் தூண்டுகிறது. மரபினத்தைப் பொறுத்தவரையில் இவ்வாருன படையெடுப்பு, தனி மக்கள் கூட்டங்களை அல்லது சமுதாயத்தை நாட்டுணர்ச்சி கொண்ட மக்களாகவும் அல்லது கூட்டாட்சியை விரும்பும் மக்களாகவும் மாற்றுகின்றது. ஆயினும் மேலாகச் சொல்லப்பட்ட இரண்டாவது காரியத்தில் முழுமையான ஒற்றுமை அல்லது நீடித்த ஒற்றுமையை அடையும் வாய்ப்பு ஓரளவு வெளிநாட்டு அழுத்தத்தின் நிகழ்ச்சிக் காலத்தின் நீடிப்பையும் பலத்தையும் பொறுத்திருக்கும்; மற்ருேரளவில் இவ்வளவு காலமும் ஒற்றுமையைத் தடை செய்துவந்த சுயேச்சைக்கான இயல்புணர்ச்சியின் வலிமையையும் பொறுத்திருக்கும். பாரசீகத் தீங்கானது ஒற்றுமையை ஒருவிதமாக வளரச் செய்யக்கூடிய தூண்டுகோலாகத் தான்றியது. ஆனுல் இந்த வெளிநாட்டின் அழுத்தமானது சில ஆண்டுகளுக்கே வலிவு பெற்றிருந்ததால் ஒற்றுமைக்கான எண்ணம் வளர்ச்சியடையத் தடைப்பட்டதுமன்றி, அகில கிரேக்கக் கூட்டரசு ஏற்படுவதற்கான திட்டங்கள் எதுவும் ஏற்படுத்தப்படுமுன் சுயேச்சைக்கான இயல்புணர்ச்சி முன்போலவே ஒருவராலும் கட்டுப்படாத வண்ணம் தாண்டவமாட ஆரம்பித்தது. சதாகாலத்திலும் இவ்வித வெளிநாட்டு ஆக்கிரப்பு இருந்துவந்த ஆசியாவின் கடற்கரையில் ஒரு கூட்டரசு நிறுவப்பட்டது.

இவ்விதக் கோட்பாடுகளை அறிந்த தத்துவ ஞானி ஒருவர் ஒரு நிறைவான அல்லது அரைகுறையான அல்லது நீடிக்கக்கூடிய அல்லது சிறிது காலமே இருக்கக்கூடிய ஒரு கிரேக்கக் கூட்டரசு பாரசிகர்களை விரட்டியடித்தபின்பு ஏற்படலாம் என்று கூறியிருக்கலாம். அதே காலத்தில் இந்தக் கூட்டரசு வெற்றிபெற்ற மக்களின் உள்நாட்டு வாழ்க்கையை எவ்விதம் பாதிக்கக்கூடும் என்றும் கூறியிருக்கலாம். ஆனால் இந்தக் கூட்டரசானது எவ்வித உருவத்தைப் பெறும் அல்லது இதற்கான எதிர்ப்பானது எவ்விதம் நடத்தப்படும் என்று சொல்ல இயலாதவர்களாயிருந்தனர். கிரேக்க நிகழ்ச்சிகள் ஒரு புதுமையானதும், எதிர்பார்க்காத விதத்தையுடையதுமான வழியிலே செல்ல முற்பட்டன. தீவுகள் நீங்கலாகவுள்ள கிரேக்கப் பகுதியில் கடந்த நாற்பது ஆண்டுகளாக ஸ்பார்ட்டாவானது திறமை பெற்ற தலைசிறந்த நாடாயிருந்தது. பெலப்போனீஸஸ் கூட்டரசின் தலையாக அமைக்கப்பட்ட ஸ்பார்ட்டா, பெலப்போனீயஸ்ஸின் எல்லைகளுக்கு வெளியிலுள்ள நாடுகளிலும் குறுக்கிடவும் செய்தது பாரசீகத்தை எதிர்த்து நின்ற கிரேக்க நாடுகளுக்கு ஸ்பார்ட்டாவானது தலையாக ஏற்படுத்தப்பட்டதை வடக்கு கிரீஸிலுள்ள நேச நாடுகள் முணுமுணுக்காமலும், எதிர்த்துப் போராடாமலும் ஏற்றுக்கொண்டன. தீபகற்பத்திலுள்ள இவர்களுடைய கூட்டரசானது பூசந்தியிலுள்ள அகில கிரேக்க நேசக் குழுவாக (confederacy) ஓங்கி வளர்ந்தது என்று நினைக்கக்கூட இடமிருக்கின்றது. ஸ்பார்ட்டாவின் கப்பற்படைத் தலைவர்களே சாலமிஸ் சண்டையிலும், மைக்கேல் சண்டையிலும் தளகர்த்தர்களாக இருந்தனர். கப்பற்படை வெற்றிகளில் லாஸிடீமோனியர்களின் வீரமும் தீரமும் அவ்வளவாகத் தென்படவில்லை என்பார்களேயானால், ஸ்பார்ட்டாவானது தான் மிகவும் வீரத்துடன் போர் செய்து தோற்கடிக்கப்பட்ட தெர்மோப்பைலீயைச் சுட்டிக்காட்டக் கூடும். அதுவுமன்றி அவர்கள் சிதிரானையும் (Cithaeron) காட்டக்கூடும். இந்த இடத்தில் ஸ்பார்ட்டர்களின் படைத்தலைவரும், ஈட்டியைக் கையில் ஏந்திய வீரர்களும் போரில் முக்கியமான கட்டத்தில் வெற்றியைப் பெற்றனர். பாரசீகப் போருக்குமுன் மிகவும் முக்கியமான நாடு என்று கருதப்பட்ட ஸ்பார்ட்டாவானது, இந்தப் போருக்குப்பின் ஒரு பேரரசின் தலையாக விளங்கும் என்று அரசியல் தீர்க்கதரிசி ஒருவன் கூறியிருந்தால் அது மிகையாகாது. இந்தத் துணிவு பொருந்திய தேசீய முயற்சியைத் தனது தலைமையின் கீழ் ஓர் அழகான முடிவிற்குக் கொண்டு சேர்த்தமையால் ஸ்பார்ட்டாவின் ஒழுக்க நிலையானது ஒரு கௌரவத்துடன் தோன்றியிருந்திருக்க இடமிருந்தது. அதே காலையில் இப் பெருஞ் செயலானது அதன் பேரவாவையும் தூண்டியிருக்கலாம். ஒழுக்கத்தின் பயனாகிய இச் சக்தியைத் திறமைப்படக் கையாண்டிருந்தால் இதனைச் செய்முதற் பொருளாகவே மாற்றியுமிருக்கலாம். சுருங்கச் சொன்னால் ப்ளெட்டியாவின் (Plataea) போருக்குப்பின்

கிரேக்க உலகமே ஸ்பார்ட்டாவின் காலடியில் கிடப்பதுபோலத் தோன்றியது. மேற்படித் திட்டம் யாராகிலும் வகுத்திருப்பார்களேயாயின் அவர்கள் ஏமாற்றமடைவது திண்ணம். ஏனென்ருல் ஸ்பார்ட்டாவானது இப் பதவியை ஏற்றுக்கொள்ள வகைதுறை இல்லாதிருந்தது. அதுவுமன்றி ஸ்பார்ட்டாவின் அரசாங்கமானது இம் மாதிரியான பேரரசுக் கோட்பாட்டை எடுத்து நடத்தக்கூடிய வகைதுறையை உண்டாக்கும் மூளையையும், ஊக்கத்தையும் உடையதாக இருக்கவில்லை.

கிரேக்க நாட்டில் ஏதாவது ஒரு அரசு, பேரரசை ஏற்படுத்த மனமுடையதாயிருந்தால் அதற்குக் கப்பற்படை அத்தியாவசியம். கிரேக்க உலகத்தின் பூவியலும் வர்த்தக நிலையும் கப்பற்படையை முக்கியமாக்கியுள்ளன. ஆசிய கிரேக்கர்கள் பாரசீகத்தின் ஆட்சியில் இருந்தவரையிலும், ஈஜியப் பிரதேசத்தின் கிழக்குக் கடல் பாகம் பாரசீகக் கடலாகக் கருதப்பட்டவரையிலும் ஸ்பார்ட்டா, கிரேக்க உலகத்தில் முதலிடத்தில் இருக்க முடிந்தது. ஆனுல் சுயேச்சையான கிரேக்க அரசுகளின் உலகமானது மறுபடியும் ஈஜியனுக்கு அப்பாலுள்ள மேற்கு ஆசியாவின் கரைகளுக்கும், திரேஸ் தீரத்திற்கும் பரவியபோது, பெரும் கடல்களால் சூழப்பட்ட இந்த கிரேக்க உலகத்தில் ஸ்பார்ட்டா கப்பற்படையையுடைய நாடாயில்லாவிட்டால் அதன் செல்வாக்குப் பரவமுடியாது. நிலப்பகுதியில் தனது நிலையைப் பத்திரப்படுத்திக்கொண்டாலும், இறுதியில் அதன் பிரசித்தியானது குறைவுபட்டு, அதன் வலிமையும் அதிகாரமும் ஈஜியத் தீவுகளிலும், கரையோரங்களிலும் பேரரசை நிறுவும் எந்த நகரரசாலும் பாதிக்கப்படும். உண்மையில் இவ்விதமே நடைபெற்றது.

ஸ்பார்ட்டாவின் மக்கள் புதிய சூழ்நிலைகளுக்குத் தங்களை மாற்றி அமைக்கக்கூடாதவர்கள். அவர்களுடைய நகரமும், அரசியல் அமைப்பும், ஊக்கமும் இடைக் காலத்திலிருந்து தொடர்ந்து வாழ்ந்தவை. மரபு வழக்கப்படி அவர்களுடைய அரசாங்கமானது பழைமைப் பற்றுள்ள கட்சியைச் சார்ந்தது. அங்கே சீர்திருத்தங்கள் வரவேற்கப் படுவதேயில்லை. அதுவுமன்றி அங்கே மற்றவர்களைக் காட்டிலும் மிகவும் திறமையுடைய ஒருவனைச் சந்தேகிப்பதே வழக்கமாகும்; எந்த விதமாக ஆருவது நூற்ருண்டில் தமது ஹாப்லைட்டியர்களைப் பயிற்றுவித்தனரோ அவ் விதமாகவே ஐந்தாம் நூற்ருண்டிலும் பயிற்றுவித்துவந்தனர். பாரசீகத்தின் தலைநகரத்தில் தாம் படையெடுத்துச் செல்வது எவ்வளவு செய்முறைக்கு ஒவ்வாத கருத்தோ அவ் விதமாகவே தாம் ஒரு கடற்படையை அமைப்பதும் அவர்களுக்குக் காட்சியளித்தது. கடந்த யுத்தத்தில் அவர்களுடைய நடத்தையை நாம் உற்று நோக்கினுல் அவர்களுடைய கோட்பாடானது அற்பமான

தும், குறுகிய நோக்கமுடையதும் என்பது நன்கு புலப்படும். பொதுவாக அவர்கள் எந்தக் காரியத்தையும் துவக்கிவைக்கும் ஆற்றல் இல்லாதவர்களாகவும் கடைசி நேரத்தில்தான் காரியங்களை மேற்கொண்டனர் என்பதையும் காண்கின்றோம். அவர்களுடைய குறுகிய நோக்கமானது பெலப்போனீஸஸ்ஸுக்கான சிறிய காரியங்களையே கண்ணுற்றிருந்ததால், பல தடவைகளில் அவர்கள் சமூகத்தைக் கிட்டத்தட்ட கைவிட்டதுபோலாயிற்று. கிரீஸ் நாட்டின் முற்போக்கில் பங்கொன்றும் எடுத்துக்கொள்ளாமலும், பேரரசை ஆளும் திறமையில்லாமலும், இக் குணத்தைத் தழுவியிருக்கும் புனைவாற்றல் சிறிதளவில்லாமலும் இருந்த இந்த லாஸிடீமன் நகரமானது கிரேக்க அரசுகளை ஒன்று சேர்த்துத் தேசீய ஒற்றுமை அடையச் செய்வதற்கு இயற்கையினால் உண்டாக்கப் படவில்லை. அதே நேரத்தில் இப்படிப்பட்ட ஒற்றுமையைத் தனது எதிராளி யாராகிலும் செய்யாதிருக்கும்படி தடைசெய்து வந்தது. ஆனால் எதிராளியான நகரம் இதனை முழுமையாகத் தூக்கி எறிந்த பிறகே, அதனால் இச் சாதனையைச் செய்ய முடிந்தது.

ப்ளெட்டியா யுத்தத்திற்குப்பின் நடந்த சம்பவங்கள் துர்அதிர்ஷ்டமாக நமக்கு முழுவதும் தெரியவில்லை. அரை நூற்றாண்டிற்குப்பின் கதைகளையும் வரலாற்றையும் கொண்ட தனது பாரசீக யுத்தத்தின் கதையை ஹெரோடட்டஸ் (Herodotus) ஸெஸ்டாஸின் (Sestos) கைப்பற்றுதலுடன் முடித்துக் கொள்கின்றார். இதற்கிடையில் இந்த முக்கியமான அரை நூற்றாண்டின் நிகழ்ச்சிகள் அங்குமிங்குமாகச் சரியானபடி தொகுக்கப்படாமல் விட்டுவிடப்பட்டன. தேதிகள் குழப்பப்பட்டன. சில நிகழ்ச்சிகளின் விவரங்களும் மறக்கப்பட்டன. ஹெரோடட்டஸ்ஸின் காலத்திற்குச் சில ஆண்டுகளுக்குப்பின் தூஸிடைடிஸ் (Thucydides) புத்தாராய்ச்சியின் பயனாக இக் காலத்தின் வரலாறானது உறுதியற்ற தேதிகளின் மேல் சார்ந்த வளமற்ற கதையாகக் காணப்படுகின்றது. இக் காலத்தின் முக்கிய நிகழ்ச்சியானது அத்தீனியப் பேரரசின் வளர்ச்சியேயாகும். ஆயினும், அதனைப்பற்றி வரையுமுன் ஸ்பார்ட்டாவின் வாய்ப்புக் கேடுகளைப் பற்றிச் சற்றுக் கவனிப்போமாக.

கிளியோம்ப்ரோட்டஸ்ஸின் (Cleombrotus) மகனாகிய பாஸேனியஸ் ப்ளெட்டியா போரில் தனது ஒப்பற்ற படைத் திறமையைத் தெளிவாக எடுத்துக்காட்டினார். ஆனால் இவருடைய அரசியல்வாதிகள் தாலந்துகள், படைத்தலைவரின் தாலந்துகளைக் காட்டிலும் மட்டானவைகளாகவே காணப்பட்டன. வெற்றியினால் திடீரெனப் புகழ் பெற்ற இவர், தம்மால் இயலாத ஒரு காரியத்தைச் செய்யத் தூண்டப்பட்டார். தமது நேசநாடுகளால் கொடுக்கப்பட்ட ஒரு

கப்பற்படையின் தலைவனாகக் கிழக்கு நாடுகளின் கிரேக்கர்களை அடிமைத்தனத்திலிருந்து விடுவிக்க ஸ்பார்ட்டா இவரை அனுப்பி வைத்தது. இவர் முதலில் சைப்ரஸ்ஸிற்குச் (Cyprus) சென்று அத் தீவின் பெரியதொரு பகுதியைப் பாரசீகத்திலிருந்து மீட்டார். இதன்பின் பைஸான்டியத்திற்குச் (Byzantium) சென்று அங்குள்ள பாரசிகப் படையைத் துரத்தியடித்தார். ஆனால் இக் கட்டத்தில் இவருடைய நடத்தையானது மயக்கமாகக் காட்சியளிக்கின்றது. இவர் தனது சுய களியாட்டத்தையாட ஆரம்பித்தார். இந் நகரிலிருந்து ஸெர்க்ஸீஸ்ஸின் இனத்தவர்கள் சிலர் தப்பிப் போவதற்கு இவர் மறைவாகக் காரணமாயிருந்ததல்லாமல், கிரேக்கர்களை அவமதித்தும், கொடுமையாக நடத்தியும் வந்தார். இவர் கொடுங்கோலராகவே நடந்தாரேயன்றி ஒரு படைத் தலைவனைப்போல் காணப்படவில்லை. பாரசிகப் படையெடுப்பின் காரணத்தால் ஏற்படுத்தப்பட்ட கூட்டாட்சியின் (confederey) தலைமைப் பதவியைத் தம் நகர அரசாகிய ஸ்பார்ட்டா ஏற்றுக்கொள்ளக்கூடிய வாய்ப்பை இவர் தமது நடத்தையால் கெடுத்துக் கொண்டார். கிழக்கத்திய கிரேக்கர்கள் தம்மை ஆதென்ஸ் நகரத்தின் தலைமையின் கீழும் காப்புக்குள்ளும் வைத்துக் கொண்டனர். இந்தச் செயல் தவிர்க்க முடியாததாயிருந்தது. கடற்படையைக் கொண்ட ஆதென்ஸ் கடலைத்தாண்டி போர் புரியும் நிலையில் இருந்ததால் இவ் வகையாகத் தலைமை தாங்கத் திறம் பெற்றிருந்தது. பைஸான்டியத்தில் பாஸேனியஸின் நடத்தையானது ஆசாரத்தின் படி தலைமைப் பதவியை ஸ்பார்ட்டாவின் மடியிலிருந்து ஆதென்ஸ்ஸிற்கு மாற்றும்படி செய்தது. இந்தப் படை வீரனின் செய்கைகளைப் பற்றிய செய்திகள் ஸ்பார்ட்டாவில் கூட பயத்தையும் கவலையையும் உண்டு பண்ணின; அவர் மேல் சாற்றப்பட்ட குற்றங்களை விசாரிக்கும்படி இவர் ஸ்பார்ட்டாவிற்கு அழைக்கப்பட்டார். ஸ்பார்ட்டாவிற்குத் திரும்பிச் செல்லுங் கால் இவர் பாரசிக உடைகளை அணிந்திருந்ததாகவும், திரேஸின் வழியாகச் செல்லும் போது ஆசிய மக்களைக் கொண்ட மெய்க்காவலர் அணி ஒன்றையும் கொண்டிருந்ததாகவும் சொல்லப்படுகின்றது. இவர் பாரசிகர்களுடன் சதியாலோசனை நடத்தியது உண்மையே ஆகும். ப்ளெட்டியாவின் வெற்றி வேந்தர் தமது நகரரசையும் கிரேக்கர்களையும் ஸெர்க்ஸீஸின் பாதப்படியில் வைக்க ஒப்புக்கொண்டதுமன்றி, தானும் ஸெர்க்ஸீஸின் மகளைத் திருமணம் செய்து கொள்ளவும் ஒப்பந்தம் செய்ய முன்வந்தார். இவருடைய சதி ஆலோசனைகளைப் பாரசிக மன்னர் வரவேற்றார். பகட்டுப்பிரியனும் சிறிய மனப்பான்மையுடையவனுமாகிய பாஸேனியஸ், தனது சிறிய செயல்களில் தான் நம்பிக்கைக் கேடாகச் செய்யும் செயலைக் காட்டிக்கொடுக்காமல் இருக்க முடியவில்லை. ஆனபோதிலும் அப்பொழுது இவர் பாரசீகர்களுடன் நடத்திய சதியை நிரூபிக்க முடியவில்லை. ஆகையால் இவர்

சில நபர்களுக்குச் செய்த தீங்கான செயல்களுக்காகவே தண்டிக்கப் பட்டார். இவர் ஸ்பார்ட்டாவை விட்டு வெளியே அனுப்பப்பட வில்லை. ஆனால் இவர் காலப்போக்கில் ஒரு ட்ரையரீம் படகை வாடகைக்கு அமர்த்தி, தான் முன்னால் சதி நடத்திய இடத்திற்குப் போய்ச் சேர்ந்தார். அங்கு மறுபடியும் கருங்கடலுக்குச் செல்லும் உள் பாதையின் வாயிலாகவுள்ள பைஸான்டியத்தைத் தம் வசமாக்கினர். இதற்கு அடுத்தாற்போல் வெளி வாயிலுள்ள செஸ்டாஸ்ஸையும் தம் வசப்படுத்தினர். இப் பாகங்களில் தமது அரசியல் நிறுவனங்களையும் வியாபார நிலையங்களையும் விரிவுபடுத்திக்கொண்டிருந்த அத்தீனியர்களுக்கு இவ்விரு செயல்களும் கோபத்தைத் தூண்டின. எனவே அவர்கள் மில்டியேடிஸ்ஸின் (Miltiades) மகனுகிய கைமானின் (Cimon) கீழ்ஒரு கப்பற்படையை அனுப்பி செஸ்டாஸைத் திரும்பவும் தம் கைவசப்படுத்திக்கொண்டு, பாஸேனியஸ்ஸை பைஸான்டியத்திலிருந்து துரத்தியடித்தனர். ட்ரோட்டிலிருந்து (Troad) மறுமுறையும் இவர் சதி ஆலோசனைகளைப் பாரசீகர்களுடன் நடத்துவதைக் கேள்வியுற்ற ஸ்பார்ட்டாவின் அரசாங்கம் ஒரு தூதனை அனுப்பி இவரைத் திரும்பவும் நகரத்திற்கு அழைத்தது. இலஞ்சம் கொடுத்துத் தண்டனைகளிலிருந்து தப்பிக்கொள்ளலாம் என்று யோசனை கொண்ட பாஸேனியாஸ் நாடு திரும்பினர். ஆனால் இதற்கிடையில் தனது நகரத்தின் அரசியல் அமைப்பையே மாற்றியமைக்கத் துணிவு பொருந்தியதும் தீங்கு நிறைந்ததுமான திட்டம் ஒன்றை அமைத்ததாகத் தெரிகின்றது. ஈபார்கள் இவரைச் சிறையிலிட்டனர். ஆனால் மறுமுறையும் தகுந்த சாட்சியில்லாமல் திண்டாடினர். எனவே இவர் சிறையிலிருந்து விடுதலை செய்யப்பட்டார். பாஸேனியஸ் தம்மேல் பொய்யான குற்றம் சாட்டப்பட்டது என்று அரசாங்கத்தையே தாக்கினர். மக்கள் யாவரும் இவர் பாரசீகத்துடன் சதி செய்ததையும், ஹீலாட்டர்களுக்குச் சுதந்திரம் தருவதாகக் கூறி ஒரு கலகத்தை ஏற்படுத்த இவர் முன்வந்ததையும் நன்கு அறிந்தனர் இவர் ஸ்பார்ட்டாவை ஒரு முடியரசாக்க அவாக்கொண்டார். இவைகளை நிரூபிக்க, சரியான சாட்சியங்கள் இல்லாமையால் மக்கள் திணறினர்கள். ஆனால் கடைசியில் இவர் நம்பிய வேலையாள் ஒருவனே இவருக்கு விரோதமாகச் சாட்சி கூற முன்வந்தான். ஆர்டாபேஸஸ்ஸிடம் (Artabazus) கொடுக்கும்படி ஒரு லிகிதத்தை இவனிடம் பாஸேனியஸ் ஒப்படைத்தார். இம் மாதிரியான தொழிலில் அனுப்பப்பட்ட தூதர்கள் ஒருவராகிலும் திரும்பி வராததையுணர்ந்த இவன் லிகிதத்தின் முத்திரையை உடைத்து, கடிதத்தை வாசிக்கலானன். அதில் தன் மரணத்தைக் குறித்த கட்டளையைக் கண்டு, ஈபார்களிடம் அதனைச் சமர்ப்பித்தான். ஈபார்கள் பாஸேனியஸ்ஸின் வாயிலிருந்தே உண்மையைப் பிடுங்க நினைத்து ஒரு சூழ்ச்சியைச் செய்தனர். டீனரஸ்ஸிலுள்ள (Taenarus) கோயில் திருவிடத்தில் பிரிவினையுடைய குடிசை

ஒன்று எழுப்பப்பட்டது. இக் குடிசையின் பிரிவினையில் மறைவான ஓர் அறையில் ஈபார்கள் இருந்தனர்; மற்ற பாகத்தில் கெஞ்சிக் கேட்பவன் போல் அவ் வேலையாள் இருந்தான். பாஸேனியஸ் ஏன் அந்த ஆள் அங்கு உள்ளான் என அறிய வந்தார். அப்பொழுது அந்த மனிதன் பாஸேனியஸ் வரைந்த கடிதத்தைப்பற்றிக் கூறி அவரைக் கடிந்து கொண்டான். நடந்த உரையாடலில் பாஸேனியஸ் முழு உண்மையையும் ஒப்புக்கொண்டார்.[1] ஆனால் பாஸேனியஸ் மறைந்திருக்கும் அபாயத்தைப் பற்றிக் குறிப்புத்தெரிந்து, 'பித்தளை இல்லத்து அதீனாவின் கோயிலுக்கு' (Athena of the Brazen House) ஓட்டம் பிடித்தார். கோயில் மூலத்தானத்திற்கு அருகிலுள்ள ஒரு சிறு கட்டடத்தில் அபயம் புகுந்தார். ஈபார்கள் அக் கட்டடத்தின் கதவுகளைக் கற்களால் கட்டுவித்துப் பாஸேனியஸ்ஸைப் பசியினால் மடியச் செய்தனர். இறக்கும் தறுவாயில் இவர் வெளியே கொண்டு வரப்பட்டு, டெல்பிக் கடவுளின் ஆணைக்கொப்பக் கோயில் திருவிடத்தின் வாயிலுக்கருகே புதைக்கப்பட்டார். ஆனால் கோயில் பிராகாரத்தில் ஒரு மனிதனைப் பட்டினியாகக் கிடக்க வைத்தது தேவதைக்கு ஏற்காத பாபமாகும். இதன் பயனாக ஸ்பார்ட்டர்கள் ஒரு சாபத்திற்குள்ளானார்கள். இச் சாபத்தைத் தீர்ப்பதற்காக ஸ்பார்ட்டர்கள் இரண்டு பித்தளை உருவங்களை 'பித்தளை இல்லத்து அத்தீனாவுக்கு வழங்கினார்கள்'.

பாஸேனியஸ்ஸின் துணிகரச் செயல்கள் பெரும் பயனுள்ளவைகளான போதிலும், இவருடைய வாழ்க்கை நெறியானது வெளி நாடுகளில் ஸ்பார்ட்டா மக்களின் வாழ்க்கையைக் குறிப்பிடுகிறது. அதே சமயத்தில் இவருடைய வாழ்க்கை வரலாறு நமக்குச் சிறிதும் தெரியாத இந்த ஆண்டுகளின் வரலாற்றை அறிய உதவுகின்றது. பாஸேனியஸ்ஸின் பதவிக்கு ஸ்பார்ட்டா டார்சிஸ் (Dorcis) என்ற மற்றொரு படைத் தலைவனை அனுப்பிவைத்தது. ஆனால் நேசதேச நாடுகள் ஸ்பார்ட்டாவின் படைத் தலைவர்களுடன் கூடிக் குலாவியிருக்க அவாக் கொள்ளவில்லை. ஸ்பார்ட்டாவும் தம்மை விட்டுவிட்டு ஆதென்ஸுடன் மேலுரிமைப் பற்றுக் கொண்டுள்ள ஈஜியப் பிரதேசத்திலும், ஆசியாவிலுமுள்ள கிரேக்கர்களைத் தம்வசம் திருப்பவும் முயலவில்லை. இதற்குப் பதிலாகப் பெரு நிலப் பகுதியிலே தனது அதிகாரத்தைப் பெருக்கவும், பெருநிலப் பிரதேசங்களைக் கொண்ட கூட்டரசு ஏற்படுத்தவும் ஸ்பார்ட்டா பல தடவை முயன்றது. ஸ்பார்ட்டா தெசலியைத் (Thessaly) தன் கையின் கீழ்க் கொண்டுவர விரும்பியது. தெசலியைத்

[1] இந்தச் செய்தித் துணுக்கானது பொருத்த மற்ற பல நிகழ்ச்சிகளைக் கொண்டுள்ளது. ஸ்பார்ட்டாவிலிருந்து டீனாரஸ் வெகுதூரத்திலுள்ளதால் இந்தச் சூழ்ச்சியானது எளிதில் செய்யக்கூடாததாகும். மேலும் ஈபார்கள் ஏன் கடிதத்தில் கண்டவைகளைக் கொண்டு மேல் நடவடிக்கைகள் எடுக்க யோசித்தனர் என்பதுவும் புலப்படவில்லை.

தன் கையின் கீழ்க் கொண்டுவந்தால் படிப்படியாகத் தெற்கேயுள்ள கிரிஸியாவின் வளைகுடா (Crisaean gulf) வரையில் தனது செல்வாக் கைப் பெருக்கிப் பின்பு வடக்கு கிரீஸிலுள்ள ஆம்பிக்டியானிக் சங் கத்தை (Amphictionic leagme) ஒரு லாஸிடீமோனியன் பேரரசாக மாற்றியமைக்க எண்ணம் கொண்டது. ஸ்பார்ட்டா லியோட்டி கைடாஸ் (Leotychidas) மன்னரை ஒரு படையுடன் அனுப்பியது. அவர் பாகாஸியன் விரிகுடாவின் (Pagasaean bay) கரைகளில் இறங் கினர். எளிதில் தெசலிய நாடுகளைத் தம் கைவசப்படுத்தும் பல முடையவர் என்பதைத் தமது வீரச் செயல்களால் விளங்கவைத்தார். ஆனல் பல ஸ்பார்ட்டப் படைத் தலைவர்களைப் போலவே இவருக்கும் வெள்ளியையும் பொன்னையும் உதறித் தள்ளும் சக்தி இல்லை. எனவே அலியுயட் (Aleuad) அரசிளங் குமாரர்கள் தம்மேல் படையெடுத்து வந்த இவருக்குப் பொன்னையும் வெள்ளியையும் வாரி இறைத்துத் தமது பதவிகளைக் காப்பாற்றிக் கொண்டனர். இவருடைய குற்றமானது பலருக்குத் தெரிந்த காரியமானதால், இவர் நாடு திரும்பியதும் இவ ருக்கு மரணதண்டனை விதிக்கப்பட்டது. ஆனல் இவர் டெகியா விற்கு (Tegea) ஓடித் தப்பித்துக் கொண்டார். டெகியாவிலுள்ள அதீ னுவின் கோயில் திருவிடமானது அக் காலத்தில் ஆபத்திலிருந்த பல ஸ்பார்ட்ட மன்னர்களுக்குப் புகலிடமாயிருந்தது. லியோட்டிக் கைடாஸின் வீரச் செயல்களால், ஸ்பார்ட்டாவின் செல்வாக்குத் தெசலியில் அதிகரித்தது; ஆனல் ஸ்பார்ட்டா ஒரு பாகத்தையும் தனக்குக் கீழ்க் கொண்டுவர முடியவில்லை. பெலப்போனீஸியஸ்ஸின் கப்பற்படை இங்கு லியோட்டிக்கைடாஸால் உபயோகிக்கப்பட்டது. ஆம்பிக்டியானிக் கூட்டரசை மாற்றியமைக்க லியோட்டிக் கைடாஸ் எடுத்த முயற்சியும் வீணுயிற்று. மீடியர்களுடன் சேர்ந்த தீப்ஸ், தெசலி முதலிய நாடுகளையும், மீடியர்களுடன் சேராமலிருந்த ஆர்காஸ் முதலிய நாடுகளையும் ஸ்பார்ட்டா இந்தச் சங்கத்திலிருந்து துரத்த முன்வந்தது. ஆனல் ஆதென்ஸ்ஸின் நபரான தெமிஸ்டாக் கிளீஸ்ஸின் (Themistocles) செல்வாக்கினுல் இந்தத் திட்டமானது தள்ளப்பட்டது. ஸ்பார்ட்டாவின் திட்டங்களை தெமிஸ்டாக்கிளீஸ் நிறைவேறவொட்டாமல் செய்ததை தெசலியின் கடலிலிருந்த பெலோப்போனீஸியக் கப்பற்படைக்குத் தீ வைக்கும்படி அவர் அத் தீனியர்களைத் தூண்டினுர் என்னும் கதை நமக்குத் தெரிவிக்கின்றது.

தமது தீபகற்பத்திற்கு வெளியே பேரரசை நிறுவ ஸ்பார்ட்டா விற்கு வேறு திட்டங்கள் ஏற்படுத்த முடியாமல் போயிற்று. பெலப் போனீஸஸ்ஸில்கூட தனது பதவியைப் பலப்படுத்தப் பாடுபட வேண்டியதாயிற்று. கிளியோமீனஸ் (Cleomenes) மன்னரால் கடுமை யாகத் தோற்கடிக்கப்பட்ட ஆர்காஸ் தற்போது தலைநிமிர்ந்து நிற்க முற்பட்டது. ஆர்காஸ் தனது அரசியல் அமைப்பை மாற்றியமைத்

தது. இதன் பயனுக அதன் அரசியல் அமைப்பு இறுதியாக மக்கள் ஆட்சியாக மாறியது. ஆர்காஸ்ஸின் கடுமையான தோல்வியின் போது இஸ்ஸி (Hysiae), ஆர்னி (Orneae) போன்ற சிறு நகரங்கள் ஆர்காஸின் நுகத்தடியைத் தூக்கி எறிந்துவிட்டுத் தமது சுதந்திரத்தை அடைந்தன. அந் நகரங்கள் யாவும் மறுபடியும் ஆர்காஸின் குடையின்கீழ்க் கொண்டுவரப்பட்டன. டிரின்ஸ் நகரத்திலுள்ள அடிமைப் பெருமக்களை அவர்களது சைக்ளோப்பியன் கோட்டைகளிலிருந்து வெளியேற்றுவது ஒரு முடியாத காரியமா யிருந்திருக்கும். ஆனுல் அப்பொழுது பிகேலியாவிலிருந்து (Phigalia) ஒரு தீர்க்கதரிசி அங்கே தோன்றி, அம் மக்களை ஆர்காஸிற்கு விரோதமாகக் கிளர்ச்சி செய்யத் தூண்டினுர். அதற்கேற்ப அவர்கள் தமது கோட்டைகளை விட்டு வெளியேறி ஆர்காஸை முன்னேறித் தாக்கினர். அப்படிச் செய்யுங்கால் அவர்கள் தோற்கடிக்கப்பட்டு, டிரின்ஸை இழந்தனர். மீண்டும் தனது தலையை நிமிர்த்தி நின்ற ஆர்காஸ், ஸ்பார்ட்டாவின் அதிகாரத்திற்கு விரோதமாக ஆர்கேடியன் நகரங்களை ஒன்றுசேர்த்துக் கிளர்ச்சி செய்யத் தூண்டியது. டெகியாவினுடன் ஸ்பார்ட்டா நேச உடன்படிக்கை ஒன்றை உண்டுபண்ணியது; ஆனுல் டெகியாவின் மதில்களுக்கு வெளியே இவ்விரு நேச நாடுகளும் லாஸிடீமோனிய ஹாப்லிட்டீஸ்களால் தோற்கடிக்கப்பட்டனர். ஆனுல் டெகியா அவர்கள் வசம் விழவில்லை. 'டெகியாவில் கொழுந்துவிட்டு எரிந்துகொண்டிருந்த நெருப்பின் புகையை வானபரியந்தம் எட்டாமல் இவ் வீரர்கள் தடுத்தனர்' என்று மரித்துப்போன வீரர்களின் கல்லறைகளின்மேல் காணப்பட்ட வாசகம் கூறுகின்றது. இந் நிகழ்ச்சிக்கு அடுத்தாற்போல் டெகியாவுடன் சேர மனமில்லாத மான்டினியாவைத் (Mantineans) தவிர மற்றெல்லா ஆர்கேடிய நகரங்களும் ஸ்பார்ட்டாவிற்கு விரோதமாகக் கூடிக் கொண்டன. இச் சமயம் ஆர்காஸ் உதவியளிக்கவில்லை. எனவே ஆர்கேடியன் சங்கமானது டிப்பியா (Dipaea) என்னுமிடத்தில் ஒரு பயங்கரத் தோல்வியுற்றது. டெகியா சரணடைந்தது. இவ் விதமாக ஸ்பார்ட்டா தனது இளைஞுன ஆர்கிடேமஸ் (Archidamus) மன்னரின் திறமையாலும் பராக்கிரமத்தாலும் தனது நிலையைப் பாதுகாக்க முடிந்தாலும் அதன் வருங்காலமானது கவலைக்கிடமா யிருந்தது. ஈலிஸ்ஸின் (Elis) கிராமங்கள் ஒன்றுசேர்ந்து (synoecism) ஒரு நகராகுவதையும், அங்கு மக்களாட்சி நிறுவப்படுவதையும் ஸ்பார்ட்டா கண்ணுற்றது. இந் நிகழ்ச்சி மேற்கில் தனக்குத் தோன்றிய ஓர் அபாயமாகும். புத்துயிர் பெற்ற ஆர்காஸ் இதற்குக் கிழக்கில் உதித்த அபாயமாகும். ஆர்கேடியாவில் கூட மான்டினிய கிராமங்கள் ஒன்றுசேர்வதை ஸ்பார்ட்டா தனது அவாவிற்கு விரோதமாக ஏற்றுக்கொள்ள வேண்டியதாயிற்று. ஆர்கேடியன் சங்கத்தில் சேராமல் தனிமையாக மான்டினியர்கள் நின்றதற்கு நன்றியறிவு தெரிவிக்கும்படி ஸ்பார்ட்டா இவ்விதம் செய்யவேண்டிய தாயிற்று.

மேலே கூறியபடி ஸ்பார்ட்டாவிற்கு ஒரு புதிய பாதையை ஏற்படுத்தும் அனுகூலம் கிட்டாமல் போயிற்று. அவள் எந்த இடத்தில் இருந்தாளோ அதே இடத்தில் பாரசீக யுத்தங்களும் அவளை விட்டுச் சென்றன. சொல்லப் போனுல் தனது செல்வாக்கை அதிகப்படுத்திக் கொள்ளாமல், ஸ்பார்ட்டா அதனைக் குறைத்துக்கொண்டது. பழைய பெலப்போனீஸியப் பள்ளத்திலேயே தான் இருக்கவேண்டியது தனது விதிப்பயன் என்று ஸ்பார்ட்டா உலகத்திற்கு எடுத்துக் காட்டியது. இதற்கிடையில் வேறொரு நகரமானது பெரிய மனத்திட்ப முயற்சிகள் பல செய்தும், ஒரு பெரிய பேரரசை ஏற்படுத்தியும், புதியதோர் பாதையில் வெகு விரைவாக முன்னேறிக் கொண்டிருந்தது.

## 2. டீலஸின் கூட்டம்

ஸ்பார்ட்டாவின் நடுத்தரப் பண்பு, மைக்கேல் சண்டையைத் தொடர்ந்து அடைந்த தோல்வியின் மூலமும், ஐயோனியர்களையும், ஆசிய கிரேக்கர்களையும் ஏதென்ஸின் ஆட்சியின்கீழ்க் கொண்டு வைத்ததன்மூலமும் வெளிப்படுகிறது. அந்த வகையில் ஓர் அத்தீனியப் பேரரசை எழுப்புவதற்கான, அறிந்து செயல்புரியும் கூட்டம் உருவாக்கப்பட்டது. இதனுடைய நோக்கம் விடுவிக்கப்பட்ட நகரங்களை அந்நியர்கள் பிடித்துக்கொள்ளாமலிருப்பதுமட்டுமல்லாது, சண்டையினுல் ஏற்படும் செலவு, மற்றும் நஷ்டம் முதலியவைகளைக் கொள்ளையடித்து ஈடு செய்யும்பொருட்டுப் பெரிய அரசனுடைய நாட்டைப் பாழடையச் செய்வதுமாகும். இந்தக் கூட்டத்தின் பொக்கிஷசாலை, ஐயோனியர்களின், கடவுள் பூசை செய்யும் பழங்கால மத்திய இடமான புனிதமான டீலாஸ் என்னும் தீவில் நிறுவப்பட்டிருந்தது. மற்றும் இதனுல் இது டீலாஸின் கூட்டம் என்று அழைக்கப்பட்டது. செஸ்டாசை மீட்டியதுதான் இதன் முதல் செயலாகும்.

ஆசியாவின் நகரங்களான ஐயோனியா, மற்றும் இயோலின் இந்தக் கூட்டத்தில் அடங்கியிருந்தன. இந்தத் தீவுகள் லெஸ்பாசிலிருந்து ரோட்ஸுக்குச் செல்லும் கடற்கரையின் அருகிலிருந்தது; ப்ரொபன்டிஸ்ஸின் அதிகமான சிறிய நகரங்களைக் கொண்டதாயுமிருந்தது. மற்றும் த்ரேஸில் சில, சைக்ளேட்ஸில் பல, மற்றும் யூபோயா; இதன் தென் திசையிலுள்ள நகரமான காரிஸ்டஸ்ஸைத் தவிர மற்றவைகளைக் கொண்டதாயுமிருந்தது. இது கடல் நகரங்களைக்கொண்ட கூட்டமாக இருந்தது. மற்றும் இதனுல் ஒவ்வொரு நகரமும் பொதுக் கடற்படைக்குக் கப்பல்களைக் கொடுப்பது அடிப்படையாக இருந்தது. ஆனுல் அதிகமான அங்கத்தினர்கள் சிறியவர்களாகவும் ஏழ்மையாளராகவும் இருந்தார்கள். மற்றும் பலர்

ஒன்று அல்லது இரண்டு கப்பல்களுக்குமேல் கொடுக்க முடியாமலிருந் தார்கள். இராணுவத்தின் ஒரு பகுதியைச் சேர்ந்த சிலரையும், மற்றும் பல திசைகளிலிருக்கும் சிலரையும் ஒரு குறிப்பிட்ட நேரத்தில் ஒன்று கூட்டுவதற்கு வேண்டிய ஓர் இடத்தைக் குறிப்பது மிகவும் கடினமாக இருந்தது. அல்லது பலவகைப்பட்ட படைகளைச் சுலபமாக நடத்துவது ஆகிய இவ்விரண்டும் முடியாமலிருந்தது. ஆதலால் சிறிய நகரங்கள், கப்பல்களைக் கொடுப்பதற்குப் பதில், ஆண்டிற்கு ஒரு குறிப்பிட்ட தொகையைப் பொது பொக்கிஷதாரிடம் கொடுக்க வேண்டுமென்று ஏற்பாடு செய்யப்பட்டது. இவ்வாறு கொடுக்கப் பட்ட பணம் ஒரு குறிப்பிட்ட அளவாக நியமனம் செய்வது நிச்சய மில்லாமலிருந்தது. அநேகமாக எந்த நகரங்கள் பணம் கொடுப்ப தாக ஒப்புக்கொண்டனவோ, அவைகள் 100 கப்பல்களுக்கு வேண்டிய பணத்தைத் தங்களுக்குள் பங்கு போட்டுக்கொண்டு கொடுக்க வேண்டுமெனக் கணக்கெடுக்கப்பட்டது. மற்றும், ஓர் ஆண்டின் தொகையான 460 டாலன்ட்ஸுக்குச் சமமாக இவர்கள் கொடுப்பது இருக்கவேண்டுமெனவும் கணக்கிடப்பட்டது. பின்பு ஒவ்வொரு நகரத்தின் வருவாய்க்கும் சக்திக்கும் ஏற்ற அளவான ஒரு மதிப் பீட்டை ஜாக்கிரதையாக அமைத்தது. மற்றும் அந்தத் தொகை சமபாகமாக அவைகளுக்குள் பிரிக்கப்பட்டன. கூட்டத்தின் நகரங் களின் பொருள் மதிப்பீடும், கொடுக்கும் தொகையைத் தீர்மானிக் கும்; ஒவ்வொன்றின் வேலையும் மிகவும் கடினமாகவும் பொறுப்புள்ள தாகவுமிருந்தது. இவருடைய போதனை மற்றும் அவர் பெற்றிருந்த பொறுப்பினாலான மதிப்பு ஆகியவை இந்த வேலைக்குத் தகுந்த ஆளாக ஆக்கிவிட்டது. அவருடைய மதிப்பு ஐம்பது ஆண்டுகளுக்கு மேலாக நடைமுறையில் இருந்தது. அப்படி ஆரம்ப முதற்கொண்டே இந்தக் கூட்டம் இரண்டு வகையான அங்கத்தினர்களைக் கொண்டதா யிருந்தது. அதாவது யார் கப்பல்களைக் கொடுக்கிறார்களோ, அவர்கள் ஒரு ப்போராஸ் என்றும், யார் பணமாகக் கொடுக்கிறார்களோ அவர்கள் மிகவும் பெரியவர்கள் என்றும் அழைக்கப்பட்டனர். ஒன்று அல்லது இரண்டு கப்பல்களைக் கொடுப்பவர்களுடனும், அல்லது ஒரு கப்பலின் பகுதிக்கு வேண்டியதைக் கொடுப்பவர்களுடனும், பல பெரிய நகரங்கள் பணமாகக் கொடுப்பதையே விரும்பின. இவ்வாறு இருந்தது நகர வாசிகளைத் தங்கள் இடத்தை விட்டுச் செல்ல விரும்ப வில்லை. இவ்வாறு கட்டப்பட்ட கப்பம் பத்து அத்தீனிய அதிகாரி களால் வசூலிக்கப்பட்டது. இவர்கள் ஹெலனோடம்யே என்று கூறப் பட்டார்கள்—அதாவது 'கிரேக்க பொக்கிஷதாரர்கள்' என்பதாகும். இந்தக் கூட்டத்தின் சபை டீலாஸில் சந்தித்தது. அங்குதான் இதன் பொக்கிஷசாலை இருந்தது. மற்றும் ஒவ்வொரு அங்கத்தினர்களுக்கும் சமமான பேச்சுரிமை இருந்தது. அதிகமான வாக்குகள், ஏதென்ஸை சபையின் செயல்களைச் சுலபமாகக் கட்டுப்படுத்த சாத்தியமாயிருந்

தது. அது சிறிய நகரங்களைச் செல்வாக்குள்ளதாகச் செய்யவும், மற்றும் இந்த எண்ணிக்கைகளைக் கொண்டு வாக்குகள் பெரிய நகரங்களில் அளிக்கும் எதிர்ப்பை முறியடிக்கவும் முடிந்தது. கூட்டத்தின் தலைமையைத் தாங்கிய ஏதென்ஸ் தீர்மானங்களை நிறைவேற்றும் அதிகாரம் முழுவதும் தன்னிடமே கொண்டிருந்தது. மற்றும் இந்தக் கூட்டத்தின் பொக்கிஷதாரர்கள், முழுவதும் இந்தக் கூட்டத்திலுள்ளவர்களிலிருந்து தேர்ந்தெடுக்கப்படாமல் அத்தீனியக் குடிமக்களுள்ளும் சிலரைத் தேர்ந்தெடுத்தது. அப்படியாக ஏதென்ஸ் முரட்டுத்தனமான புரட்சி இல்லாமல், முதலிலிருந்தே கடற்படையைக் கொண்ட கூட்டத்தை, நிதானமாகக் கடற்படை இராச்சியமாக மாற்றியது.

இந்தக் கூட்டத்தின் நிறுவனத்திற்குக் காரணமாயிருந்த அரிஸ்டைடிசின் பெயர் எப்படியிருந்ததோ, அவருக்குப் போட்டியாக ஏதென்ஸின் அதிர்ஷ்டத்திற்கு தெமிஸ்டாக்ளிஸ் ஆகும் என்பதை சந்தேகமறக் கூறலாம். தெமிஸ்டாக்ளிஸ் தன் நகரத்தை ஒரு கடல் அதிகாரம் கொண்ட நகரமாக்கினான். மற்றும் இந்த முயற்சியினால் இவரை எல்லோரையும் விடப் பெரிய அரச தந்திரியாக ஒப்புக் கொண்டது. அவர் ஒரு இயற்கைத் திறமை வாய்ந்தவராவர். எல்லாச் சரித்திர ஆசிரியர்களிலும் மிகவும் மேலாகக் கருதப்பட்ட த்யூஸிடிடீஸ் என்பவர் தெமிஸ்டாக்ளிஸின் இயற்கைத் திறமையைப் பாராட்ட ஆரம்பித்தான். மற்றும் என்ன நடக்கும் என்பதை முன் கூட்டியே அறியும் அவருடைய கடவுளின் தன்மையையும், மற்றும் கடினமான காலங்களில் அவைகளைச் சமாளிக்கப் பெற்றிருந்த திறமையைப்பற்றியும் புகழ்ந்தார். ஏதென்ஸின் கொள்கைக்கு வழிகாட்டல், புதுக்கூட்டத்தை அமைத்தல், ஆகிய இவ் வேலைகள் தெமிஸ்டாக்ளிஸினிடம் தரப்பட்டிருந்தன என்பது நாம் எதிர் பார்த்ததாகும். அரை நூற்றுண்டுக்குப் பின்பு, ஏதென்ஸின் ஜனநாயகம் மேலும் வளர்ச்சியடைந்தபொழுது, இது மாதிரியாகத்தான் அநேகமாக இருந்திருக்கவேண்டும். ஆனல் அந்த சமயத்தில் ஒரு மனிதன் அதிகாரம் பெற்றவனாக இருந்தால், தன் செல்வாக்கை மக்களிடம் செலுத்த முடியாது. தெமிஸ்டாக்ளிஸ் எந்தக் கட்சியிலும் இல்லை. அப்படி இருந்தும்கூட இது ஒரு குறையாக இல்லாமல், தன்னுடைய தனிப்பட்ட புத்தி நுட்பத்தினல் ஒரு பெரிய பதவியை வகித்தார். இவருக்குப் போட்டியாக, அரிஸ்டைடிஸ் மற்றும் ஸான்திப்பஸ், கரையிலுள்ள வளமையான கட்சியின் பிரதிநிதிகளாக இருந்தார்கள். இந்தக் கட்சி மெகாக்ளிஸ் மற்றும் கிளைஸ்தீனிஸ் ஆகிய இந்த இரண்டு குடும்பத்திலும் தொடர்பு கொண்டிருந்தது. ஸான்திப்பஸ்ஸின் மனைவியும் இதனுடன் சொந்தம் உள்ளவளாக இருந்தாள். அவர்கள் ப்ளெட்டியா மற்றும் மைக்கேல் ஆகிய இரண்டிற்கும் தலைவர்கள.ரக இருந்தார்கள். தெமிஸ்டாக்ளிஸ்ஸின் பெயர், பெர்ஸியாவின்

இரண்டாமாண்டு சண்டையின்பொழுது தெரியாமலிருந்தது. தெமிஸ்டாக்ளிஸ் ஒரு கட்சித் தலைவர் இல்லை என்ற சூழ்நிலையும், ஏதென்ஸின் செல்வாக்கு காலதாமதமான நிலைமையிலிருந்தது என்பதன் மூலம் நாம் அவருடைய முக்கியத்துவத்தை அலட்சியமாகக் கூற சுலபமாக முடிகிறது. அவர் பெயருக்கோ அல்லது ஆட்சியின்படியோ இந்தக் கூட்டத்தின் நிறுவனராக இல்லாமலிருந்தபோதிலும், இன்னும் ஏதென்ஸ் தலைமைப் பதவியை ஏற்றபொழுதும், மற்றும் புதிய பாதையில் புகுந்தபொழுதும், எது பின்பு அந் நாட்டில் திறந்துவிட்டதோ, அப்பொழுது ஒரு சமய வேறுபாடு இருந்தது. அந்த சமயத்தில் இவர் அதில் தெளிவாகவும், ஆரம்பத்திலும் அதன் பொருளைக் கூறுபவராகவும் இருந்தார். ஆனல் அவருடைய செல்வாக்கு இன்னும் மறையவில்லை. மற்றும் ஒரு கடற்படையைக் கொண்ட அரசு ஒன்று கிழக்குத்திசையில் நிறுவப்பட்டு வரும்பொழுது, அவருக்கு, ஏதென்ஸ்ஸில் பாழடைந்த பகுதியின் நடுவில் வேலை இருந்தது.

## 3. ஏதென்ஸ், மற்றும் பைரஸினுடைய (அரண்) பாதுகாப்பு.

தெமிஸ்டாக்ளிஸ், நாம் பார்த்தபடி ஏதென்ஸைக் கடற்படை அதிகாரம் கொண்டதாக ஆக்கினன். அவருடைய புத்திமதியின் மூலம் ஏதென்ஸ் தன்னுடைய சிறந்த சக்தியைக் கடற்படையை வளர்ப்பதற்கு உபயோகப்படுத்தியது. ஆனல் இன்னும் அதிக கவனத்துடன் அது இந்த வழியைப் பின்பற்றியிருந்தால், மிகவும் தைரியத்துடன் காலத்தின் கோலத்தின்படி நடக்க வேண்டிய நிலையில் இருக்கும் கண்டத்துடன் இணைக்கப்பட்டிருப்பதை அறுத்திருக்க முடியும். அத்தீனியர்களுக்கு, ஏதென்ஸ் ஒரு தீவு இல்லை என்பதை அடிக்கடி கேட்க வருத்தமாயிருந்தது. 'நாங்கள் தீவைச் சேர்ந்தவர்களாக இருந்தால், நாங்கள் உலகையே எதிர்ப்போம்' என்று அவர்கள் நினைத்தார்கள். அங்கு எப்பொழுதும், பியோஷியா மற்றும் மெகேரியா ஆகிய இவைகளின் எல்லைகள் இருந்து வரும். ஆனல் இந்த எல்லைகளில் ஒரு வரிசையான அரண்களை ஒழுங்காக வைத்துக் காத்து வந்திருந்தால், மற்றும் அத்தீனிய அரசியல்வாதிகள் சஞ்சலமில்லாமல் ஒரு கண்டத்தின் கொள்கையை விலக்கத் தன்னுடைய எல்லாக் கப்பல்களையும் உபயோகித்துத் தன் பலத்தைக்காட்ட முடிந்திருக்கும். எப்படியும் ஏதென்ஸ் ஒரு புதிய வழியைப் பின்பற்றத் தீர்மானித்த பொழுது, அதன் உண்மையான கொள்கையை, பைரஸ்வரை கொண்டு வர வேண்டுமென்பதுமாகும். இது அக்ரோபாலிஸைச் சுற்றியுள்ள தன்னுடைய பழைய நகரத்தை விட்டு நீங்கி இதன் பின்பு எது தன் சரித்திரம் உருவாக்கக் காரணமாயிருந்ததோ அங்குக் குடியேறியது.

அக்ரோபாலிஸின் நிலைமை ஏதென்ஸை நாசமாக்குவதாக இருந்தது. அது கடற்கரையிலிருந்து வெகு தொலைவிலும், அதே சமயத்தில் இதற்கு வெகு அருகிலும் இருந்தது. இது அகர்னே கடற்கரையைப் போலாவது இருந்திருந்தால். இந்தக் காலத்திலிருந்த நகரவாசிகள் நிச்சயமாக முடிந்தவரை தங்கள் அடுப்பெரிக்கும் இடங்களையும் மற்றும் கோயில்களையும், முனீஷியா என்ற மலைப்பகுதிக்கும் பைரஸ் என்ற கடற்கரைப் பகுதிக்கும் மாற்றியிருப்பார்கள். ஆனால் இது விரைவில் செய்திகளைக் கப்பல்கள் தங்குமிடத்திற்கு அனுப்புவதற்குப் போதுமான இடமாக இருந்தது ; மற்றும் இந்தப் பூகோள சம்பந்தப் பட்ட சூழ்நிலை ஒருசமயத்தில் பழைய நகரத்தைக் காப்பாற்றியதுடன், புதிய நகரத்தை வலுக்குன்றவைத்தது. சந்தர்ப்பவாதம் ஒரு பேரரசனைத் தூண்டிவிடும். ஆனால் தேவை ஒன்றுதான் சுதந்திர மனிதர்களை, எங்குப் பல நூற்றாண்டுகளாகக் கோயில்களும், சந்ததி களும் இருந்தனவோ, அங்கிருந்து வெளியேற மும்முரமான முடிவுகளை எடுத்துக்கொள்ள அறிவுறுத்தும். அந்த இடம் தங்களுடைய சிறந்த ஞாபகார்த்தத்திற்கும், அவர்களுடைய நம்பிக்கைக்கும் பயத்திற்கும் தொடர்புள்ளதாயிருக்கும்.

தெமிஸ்டாக்ளிஸ் ஒரு கொடுங்கோலனாக இருந்திருந்தால், நாம் அவன் ஏதென்ஸை அரண்களேதும் அமைக்காமல் விட்டு விட்டு, தன்னுடைய இருக்கையை முனீஷியாவில் கட்டியிருப்பான்; மற்றும் பைரஸைத் தன் ஆட்சியின் மத்திய அரசாகக் கொண்ட நகரமாகவும் ஆக்கியிருப்பான் என்பதை நினைத்துப் பார்த்திருக்கக் கூடும். ஆதலால் ஒரு சில ஆண்டுகளில் பழைய நகரம் பாழடைந்து போய் இருக்கும். ஆனால், இன்னும் ஏதென்ஸ் முதலில் இருந்ததைப் போலவே இருக்க வேண்டும். மற்றும் இந்தப் புதிய வளர்ச்சி பைரஸ்ஸை ஒரு சண்டைக்கும் முக்கியத்துவம் வாய்ந்த இடமாகவும் ஆக்க இந்த இரண்டு நகரங்களைக் காக்க ஐந்து மைல் தொலைவுக்குள் ஓர் அரண் அமைத்துப் பாதுகாக்க வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது.

அத்தீனியர்கள், பிளெட்டியாவிற்குப் பிறகு தங்களுடைய குடும் பங்களையும் சாமான்களையும் திரும்பவும் அவர்களுடைய பாழான குடி யிருப்புக்குக் கொண்டு சென்றார்கள். பழைய சிறிய நகரத்தின் சுவர் இன்னும் நின்றுகொண்டிருந்தபோதிலும், அவர்கள் ஒருபுதிய சுவரைக் கட்டமுன் சென்றார்கள்; அந்த வேலையை விரைவாகச் செய்தார்கள். பழைய கட்டடத்தின் சாதனங்களையும், சவக்குழியிலிருந்த கற்களையும், புதிய சுவர் எழுப்ப உபயோகித்தார்கள். இவ்வாறு அவர்கள் அவசரத்துடன் சுவர் கட்டியதன் அடையாளங்களை, நகரத்தின் வட மேற்குப் பகுதியிலிருக்கும் டிபிலான் கேட்டிற்கு அருகிலுள்ள தெமிஸ் டாக்ளிஸ் கட்டிய சுவரின் மீதிருக்கும் பகுதிகளிலிருந்து கண்டு பிடிக்

கலாம். ஏனெனில் இந்த வேலை தெமிஸ்டாக்ளிஸ் ஊக்கத்தினுலும், அவனுடைய அறவுரையின் பேரிலும்தான் நடத்தப்பட்டது. இது பிஸிஸ்ட்ராடஸ் பாழாக்கிய இடத்தைவிட ஒரு பெரிய இடத்தை அடக்கியாண்டது. தென்பகுதியில் இது தொடர்ந்தது. பெலபொனீஸியர்கள் அதீனியர்களின் அரண்களைக் கண்டு பொருமை கொண்டார்கள். மேலும் ஏதென்ஸின் பெர்ஷிய சண்டையில் எடுத்துக் கொண்ட பங்கு, மற்றும் பலம் பொருந்திய கடற்படையையும் கண்டு அதன் அவாக்களில் சந்தேகம் கொண்டார்கள். ஆனுல் அவர்கள் அது தன் நகரத்தைப் பலம் பொருந்தியதாக்கச் செய்யும் முயற்சியை இதனுல் தடுக்க முடியவில்லை. லேஸிடோமினியர்கள் பாதுகாப்பான அரண்களைக் கட்டுவதைத் தடுக்க ஒரு தூதுகோஷ்டியை அனுப்பினுர்கள். மற்றும் அவர்கள் அதீனர்களைச் சீர்ப்படுத்துவதற்குப் பதிலாகத் தங்களுடன் கூடி கிரீஸின் அரண்கள் முழுவதையும் சீர்ப்படுத்த அழைத்தார்கள். ஆனுல் அவர் ஆட்சேபணை செய்வதைத்தவிர ஒன்றும் செய்ய முடியாத நிலையிலிருந்தார்கள். தெமிஸ்டாக்ளிஸின் பெயர் அந்தச் சுவர் எழுப்பத் தொடர்பு கொண்டிருந்ததால், அட்டிக் ஓடீஸியஸின் பொருளாதார நிலைமை, தந்திரம் முதலியவைகளை எடுத்துக்காட்ட ஒரு குறிப்பு ஒன்றை வெளியிடவேண்டிய அவசியம் ஏற்பட்டது. அவனுடைய யோசனையின் பேரில் அத்தீனியர்கள் ஒரு தூதுகோஷ்டியைப் பதிலுக்கு அனுப்புவார்கள் என்று கூறி ஸ்பார்ட்டாவின் தூதுகோஷ்டி திருப்பி அனுப்பப்பட்டது. அவர்கள் சென்ற பிறகு, அவர் தம்மையே தூதர்களில் ஒருவராக்கினுர். ஆனுல் அவருடைய கூட்டாளிகள், அந்த சுவர் தாழ்ந்த அளவான உயரத்தை அடையும் வரை பின் தங்கியிருந்தார்கள். இதற்கிடையில், மக்கள் எல்லோரும், ஆண்கள், பெண்கள் மற்றும் குழந்தைகள் ஆகியவர்கள் இந்த வேலை செய்யக் கட்டாயப்படுத்தப் பட்டார்கள். ஸ்பார்ட்டாவை அடைந்ததும், அவர் (திமஸ்டாக்களிஸ்) சபைக்குச் செல்லத் தாமதம் செய்தார். மற்றும் ஏன் தாமதம் என்று கேட்டதற்கு, அவருடைய கூட்டாளிகள் அவரைத் தங்கவைத்து விட்டதாலும், அவர் அவர்களை ஒவ்வொரு நாளும் எதிர் பார்த்ததாலும் தாமதமாகிவிட்டது என்று கூறினுர். இந்த நேரத்தில் ஏதென்ஸிலிருந்து வந்த மக்கள் ஸ்பார்ட்டர்களிடம் சுவர் கட்டப்படுவதை உறுதிப்படுத்திக் கூறினுர்கள். தெமிஸ்டாக்ளிஸின் பொய்யுரைகளைக் கேட்டு ஏமாற வேண்டா மென்று கூறினுர்கள். மற்றும் சிலரை அனுப்பி அது உண்மையா என்பதைக் கண்டு பிடிக்க வேண்டுமென்றும் எடுத்துரைத்தார்கள். அதே சமயத்தில் ஏதென்ஸிற்கு, தானும் தன் கூட்டாளியும் வரும் வரை, ஸ்பார்ட்டாவிலிருந்து வரும் தூதுகோஷ்டியைத் தங்க வைக்கும்படி அறிவுரை அனுப்பினுன். அந்த சுவர் இப்பொழுது போதுமான உயரத்தை அடைந்தது. மற்றும், மற்றத்தூதர்கள் வந்து சேர்ந்த பொழுது தெமிஸ்டாக்ளிஸ் தன் மக்கள் முன்பு தோன்றினுன். பிற்காலத்தில்

லேஸிடோமினியர்களோ அல்லது அவர்களுடைய ஆட்களோ ஏதாவது ஓர் அறிக்கை அனுப்ப வேண்டுமெனில், அவர்கள் தங்களுடன் தொடர்பு கொண்டு அனுப்ப வேண்டு மென்று கூறினர். மேலும் அவர்கள் கிரீஸின் நன்மைகளை அறிந்து நடக்கத்தகுந்தவர்களென்றும் கூறினர். லேஸிடோமினியர்கள் இந்த விஷயத்தில் தன்னால் முடிந்த வரை ஒரு நல்ல கருத்துடன் கவனிக்க வேண்டிய நிலை இருந்தது. இப்பொழுது பெயருக்கு ஏதென்ஸை, ஸ்பார்ட்டாவுக்குச் சமமாகக் கூறியது ஒரு முக்கியத்துவம் வாய்ந்த கதையாகும்.

இதேபோல் பைரஸின் அரண்களைச் சீர்ப்படுத்தும் வேலை எடுத்துக் கொள்ளப்பட்டது. முனீஷிய தீவைச் சுற்றிக் கடற்கரைக்கு அருகில் ஒரு கடினமான சுவர் கட்டப்பட்டது. மற்றும் இது கேந்தாரஸ் துறைமுகத்தின் வடக்குப் பகுதியின் வழியாகக் கொண்டுசெல்லப் பட்டது. கேந்தாரஸ் துறைமுகம் அல்லது இது ஒரு துறைமுகம் என்று எளிய முறையில் கூறப்பட்டது. மற்றும் இது ஈடியோனியா என்னும் கவிந்த பாறைக்கு வெளிவரை இந்த சுவர் கொண்டு செல்லப் பட்டது. இந்த முக்கியமான துறைமுகத்தின் வழிகளிலும், மற்றும் இந்தத் தீவின் கிழக்குப் பகுதியிலிருக்கும் முனீஷியா, ஜியா ஆகிய இந்த இரண்டு இடங்களிலும் இருக்கும் சிறிய கப்பல்துறைகளைப் பெரியதாக்கச் சீர்ப்படுத்தியது.

அடுத்த இருபது ஆண்டுக் காலத்தில் அத்தீனியர்கள், ஒரு நகரமாக இருந்திருக்கவேண்டிய அந்த இரண்டு சிறிய நகரங்களின் குறைகளையும் பார்க்க நேரிடும், அட்டிக்காவைப் பலம் பொருந்திய படையைக் கொண்டு ஒரு பகைவன் முற்றுகையிட்டால், ஏதென்ஸிற்கும் பைரஸ்ஸிற்கும் இடையில் அனுப்பப்படும் செய்திகள் முழுமையும் துண்டிக்கப்படும். மற்றும் அந்த நகர மக்கள் கப்பல்கள் இருக்குமிடத்திற்குச் செல்வதும் தடுக்கப்படும். ஏதென்ஸின் மிகவும் எளிய முறையில் எது எதிர்கொள்ளப்பட்டிருக்குமோ, அந்த அபாயத்தை எதிர்கொள்ள, ஒரு புதிய உபாயம் கற்பனை செய்யப்பட்டது. அந்த இரண்டு சிறிய நகரங்களையும் இரட்டிப்பாக, சுற்றிலும் தொடர்ந்து வரிசையாகப் பாதுகாப்பு அரண்களை அமைத்தல் தீர்மானிக்கப் பட்டது. இரண்டு திருப்பம் கொண்ட சுவர்கள் ஏதென்ஸைக் கடலுடன் இணைத்துக் கட்டப்பட்டன. இது வடக்கில் துறைமுகத்தின் அருகிலிருந்த பைரஸுடனும், தெற்கில் பாதைக்கு அருகிலிருந்த பெலிரான் வரையிலும் கட்டப்பட்டது. அதிகச் செலவு செய்து கட்டப்பட்ட, மற்றும் பாதுகாக்கப்பட்ட இந்த இரண்டு நீண்ட சுவர்களாலும், ஏதென்ஸ் தன்னுடைய கடற்படையில் சிறந்து விளங்கிய ஸ்தல அமைப்பைப் பின்பற்றி அதனுடைய தவறைத் திருத்தியது.

ஏதென்ஸ் தன்னுடைய கடந்த சரித்திரத்தைப் பிற்காலச் சரித்திரத்துடன் இணைத்துச் சமமாக ஒன்று சேர்த்து பார்ப்பதற்குச் சரியான நிலையில் இல்லாமல்போயினும், அது தன்னுடைய நோக்கத்தை நன்ருக விளக்கும் வகையில் பதில் அளித்தது. அதனுடைய கடல் அதிகாரம், அதனுடைய கடல் வாணிபத்தின் அடிப்படையில்தான் சிறந்து விளங்கியது. இதனுல் இது அட்டிக்கிலுள்ள தொழிற்சாலைகளை அதிகரிக்க ஒரு திருப்பத்தைக் கொடுத்தது. இதை நாம் ஏதென்ஸிலும், பைரஸிலும் பொருள்களை உற்பத்தி செய்வதற்கு வியாபாரத்தின் பொருட்டுக் குடியேறிய பல அயல் நாட்டவர்களின் மூலம் அறியலாம். இந்த மக்கள் விரைவில் 10,000 வரை சேர்ந்துவிட்டார்கள். இவர்களுக்கும் அந் நாட்டு மக்களுக்குக் கொடுத்த உரிமைகளே கொடுக்கப்பட்டன. ஆனல் சொத்துவரி மட்டும், சண்டை சமயத்தில் இவர்களுக்கு அவர்களைவிட அதிகமாக விதிக்கப்பட்டது. தெமிஸ்டாக்ளிஸ் பொதுமக்களுக்கு நேரடியாகவோ மறைமுகமாகவோ பலன் தரக்கூடிய, குடியேறிய ஒரு வகுப்பு மக்களின் வளர்ச்சிக்கு உதவினன் என்பதை நம்மால் நம்ப முடிகிறது. இந்த முக்கியமான நேரத்தில், இந்த சொற்பமான, மற்றும் தெளிவில்லாத ஏடுகளிலிருந்து தெமிஸ்டாக்ளிஸின் நடவடிக்கைகளை நிச்சயமாக விவரிக்க முடியாது.

ஒவ்வோர் ஆண்டும் ஒரு சில எண்ணிக்கையான மூன்று வரிசை துடுப்புகளுடன் கூடிய கப்பல்களைக் கடற்படையுடன் சேர்க்க வேண்டுமென்ற ஒரு முறையை தெமிஸ்டாக்ளிஸ் கொண்டுவர வேண்டுமென விரும்பினன் என்பது நன்கு தெரிகிறது. ஆனல் இந்த யோசனை மேற்கொள்ளப்படவில்லை. புதிய கப்பல்கள் தேவைக்கு ஏற்றபடி அவ்வப்பொழுது கட்டப்பட்டன. ஆனல் அவைகளைக் கொடுப்பதில் ஒரு புதிய முறை வகுக்கப்பட்டது. கப்பலின் அடிப்பாகம், கட்டுவதற்கு வேண்டிய சங்கிலி ஆகிய இவைகள் மட்டும் அரசாங்கத்தாரால் கொடுக்கப்பட்டன. மரக்கலத்தைப் பொருத்துவதற்கான கடமை—செலவு, எல்லாவற்றையும் கட்டி முடித்தபின்பு நீரில் மிதக்கவிடுவது, அதை ஓட்டுபவர்களுக்குப் பயிற்சி கொடுப்பது ஆகிய இவைகள் அயல் நாட்டிலிருந்து குடியேறிய மக்கள் தங்கள் முறை வரும்பொழுது செய்ய வேண்டிய கடமைகளாக இருந்தன. இந்தப் பொதுமக்களின் சுமை டிரைரார்க்கி (trierarchy) என்று அழைக்கப்பட்டது. மற்றும் யார் தங்கள் கப்பலில் பிரயாணம் செய்கிறுர்களோ, அவர்கள் காரியாலயத்தில் அவர்கள் இருக்கும்வரை ஏதாவது புதுமுறைகளைக் கண்டுபிடிக்கக் கடமைப்பட்டிருந்தார்கள். கப்பலிலுள்ள படகுகளை ஓட்டுபவர்கள் கூலிக்கு வேலைசெய்யும் அயல் நாட்டவர்களும், அடிமைகளும், மற்றும் நகர வாசிகளில் மிகவும் ஏழ்மையானவர்களில் சில பகுதியும் ஆகமொத்தம் 170 பேர்களும், ஒவ்வொரு படகை ஓட்டவும்,

20 கப்பல் ஒட்டுபவர்களும், படகை எப்பொழுது செலுத்த வேண்டுமென்ற நேரத்தைப் படகோட்டிகளுக்குக் குறிக்க கெலூஸ்டர் (keleustes) என்பவர்களும், மற்றும் இவர்களைத் தவிர 10 சிப்பாய்களும் ஒவ்வொரு சண்டைக் கப்பலிலும் இருந்தார்கள்.

இனி கடற்படைதான் தன்னுடைய இராணுவத்தின் அதிகாரங்களில் முக்கியத்துவம் வாய்ந்திருந்ததினுல் ஏதென்ஸ் தன்னுடைய இராணுவ அதிகாரத்தில் மாற்றம் ஏற்படுத்த வேண்டிய நிலைமை ஏற்பட்டது. அவர்களுக்கு இரண்டு வழிகள் இருந்தன. கப்பல் தலைவர்களாக இருப்பவர்கள் அவைகளை விட்டுவிட்டு ஒவ்வொருவரும் தங்கள் ஜாதியைச் சேர்ந்த பலம் பொருந்திய காலாட்படைக்குத் தலைவராகவும், மற்றும் தளபதிகளைக் கொண்ட ஒரு கூட்டத்தை ஏற்படுத்துவதும்தான் இதனுடைய முதல் வழியாகும். இந்த ஏற்பாடுகள் செய்யப்பட்டால் தரை மற்றும் கடல் ஆகிய இரண்டு படைகளும் ஒன்று சேர்த்து நடத்துவதற்குத் தளபதிகளுக்கு உயர்ந்த அதிகாரங்களைக் கொடுக்கவேண்டிய அவசியம் ஏற்படும். அதனுல் படைத் தலைவர்களைக் கீழ் அதிகாரிகளாகக் கொண்டுவரும் ஒரு நிலை ஏற்படும். மற்றவழி, காலாட்படை, கடற்படை ஆகிய இந்த இரண்டு தலைவர்களையும் ஒரேமாதிரி சமபலம் பொருந்தியவர்களாக ஆக்குவதாகும். பெர்ஷியாவின் படையெடுப்பின்பொழுது இவர்கள் நிலைமை இவ்வாறுதான் இருந்தது. இந்த இரண்டாவது திட்டம்தான் பின்பற்றப்பட்டது. இதன் பலனுகத் தலைவர்க்ள் ஒவ்வொரு குலத்திலிருந்தும் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். ஆனுல் உண்மையாக வழக்கத்தில் ஒவ்வொரு குலமும் இதில் பங்கு கொள்ளவேண்டுமென்ற முயற்சி எடுத்திருந்த போதிலும் மூன்று படைகளுக்குத் தலைவர்களாக இருந்தவர்களின் பழைய கடமைகளை, டாக்ஸியார்க் என்று வழங்கப்பட்ட காலாட் படையைச் சேர்ந்த அதிகாரிகளும், பிளார்க்ஸ் என்று வழங்கப்பட்ட குதிரைப் படை அதிகாரிகளும் பின்பற்றினுர்கள்.

அத்தீனியமேஸ்திரிகளின்வேலை, நகரத்தையும் துறைமுகத்தையும் பழுதுபார்ப்பது. இது முக்கியமானதாக இருந்தது. ஆனுல் இது ஒன்று மட்டுமல்ல. அத்தீனுவின் வீடுகளைப் பெர்ஷியர்கள் உடைத்தெறிந்தார்கள். இந்த அபாயத்தை அறிந்த அத்தீனியர்கள் தங்கள் (அத்தீனு) கடவுளுக்கு ஒரு இடத்தைக் கண்டுபிடிக்கும் வேலையைத் தவிர மற்ற ஒரு வேலையும் முக்கியமாக இல்லை. அத்தீனியர்கள் தங்கள் கடவுளின் மிகப் பழமையான உயர்ந்த கோயிலைக் காப்பாற்ற வேண்டுமென்று நினைத்தார்கள் என்பதில் சிறு சந்தேகம் எழுகிறது. இது, எரெக்தியஸ் என்பதுடன் பங்கு கொண்ட வீடான கோயிலாகும். அந்த இடத்தில் ஆலிவ் மரம் மற்றும் உப்பு நீரூற்று ஆகிய இவை இருந்த சின்னங்கள் இருந்தன. ஏதென்ஸ் இவ்வாறு செய்தது ஏனெனில் பழங்கால மர

விக்கிரகத்தைச் சிலகாலம் வைத்திருப்பதற்காகும். இந்த விக்கிரகம் அநேகமாக யாருக்கும் தெரியாத இடத்தில் வைக்கப்பட்டிருந்த தாகும். அவர்கள் நூறடியுள்ள சிறிய கோயிலை முழுமையாகவோ பாதியாகவோ காப்பாற்ற முயற்சி எடுத்தார்கள் என்பது தெளிவாக வில்லை. அநேகமாக அவர்கள் பாழானவைகளை நன்றாகப் பார்த்திருக்க மாட்டார்கள். அநேகமாக அந்தச் சுவர்களும் தூண்களும் பாதியாக நின்றிருக்கும். ஆனால் கூரையும், மரவேலைப்பாடுகளும் பாழாக்கப் பட்டிருக்கும். மற்றும் மேடைகளைச் சார்ந்திருந்த சிற்பங்கள் கீழே தூக்கி எறியப்பட்டுச் சிதறவிடப்பட்டிருக்கும். பாழானவற்றில் தெளிக்கப்பட்டிருந்த பலசாலிகளின் கை கால்களும், முண்டங்களும் குப்பைக் குவியலில் எறியப்பட்டிருந்தன. இவற்றிலிருந்து அவைகளை எடுத்து கிரேக்கர்களின் முற்காலக் கலையின் சின்னமாக, புது மரியாதை கொடுத்து வைத்திருந்தார்கள். எப்படி அவர் பாழடைந்த கோயிலைத் திரும்பக் கட்டினாலும், ஏதென்ஸின் நகரவாசிகளுக்குப் போதுமென்ற நிலை ஏற்படாது. அவர்கள் தங்கள் நகரத்தின் பெண்ணிற்குக் (அதாவது அவளுக்கு) குடியிருக்கச் சிறந்த வீடு ஒன்று இருக்க வேண்டுமென்று தீர்மானித்தார்கள். இது அநேகமாக தெமிஸ்டாக்ளிஸ் இன்னும் தங்களது ராஜதந்திரியாக இருந்த பொழுது ஒரு இரண்டாவது கோயில், குன்றின் தென் பகுதியிலுள்ள செங்குத்தான இடத்தில் அமைக்கவேண்டுமென்ற திட்டம் உருவாக் கப்பட்டது. இந்தப் புதிய கோயிலின் அஸ்திவாரத்தை இன்னும் பார்க்கலாம். ஆனால் திட்டம் வகுத்ததைப்போல் இந்த வேலை நடைபெறவில்லை. சுவர்களை உயரமாக்க வேண்டிய நேரம் வந்த பொழுது, இந்தத் திட்டம் முற்றிலும் மாற்றப்பட்டது. முழுவதும் பலவகையான பாகங்களைக் கொண்ட ஒரு கட்டடம் அமைக்கத் திட்டமிட்ட அதே அஸ்திவாரத்தில், பார்த்தினன் எழுந்ததை நாம் இனிமேல் காணலாம்.

## 4. நாடு கடத்துதலும், தெமிஸ்டாக்ளிஸின் இறப்பும்

தெமிஸ்டாக்ளிஸ் சில ஆண்டுகள் பொது மக்களின் காரியங் களுக்கு வழிகாட்ட அரிஸ்டைடிஸ் மற்றும் ஸான்திப்பஸ் ஆகிய இவர் களிடையே கொடுத்தான். அவர் அந்தச் சுவர்களின் கட்டடத்தை மேற்பார்வை பார்த்து வந்தான். நாம் அவர் ஸ்பார்ட்டா எதிர்த் ததை எவ்வாறு சமாளித்தான் என்பதை முன்பே பார்த்தோம். ஆனால் இயற்கையான திறமை வாய்ந்திருந்த மனிதனாக இருந்த பொழுதிலும் அவனிடம் ஒரு சில குறைகளும் இருந்தன. பல கிரேக்க இராஜ தந்திரிகளைப் போலத்தான் லஞ்சம் வாங்கினான். அநேகமாக, தான் எப்படி ஒரு செல்வந்தனாக ஆனான் என்பதைச் சொல்வதற்குச்

சிறிதும் தயங்கவில்லை, அவனுடைய தற்பெருமை அவனை ஏமாற்றி மக்களிடம் அதிருப்தியை ஏற்படுத்தி விட்டது. அவன் தன்னுடைய வீட்டிற்கு அருகில் 'சபையில் புத்திசாலியான ஆர்டிமிஸ்' என்பவருக்கு ஒரு புண்ணிய ஸ்தலம் கட்டினான். அவன் தன் நாட்டிற்கு அளித்த வாதாடுபவர்களில் புத்திசாலியாக இருந்ததனால் அப்படிச் செய்தான். அவைகளுக்குள் இதுமாதிரி காரியங்கள் சிறிதளவே முக்கியமானவையாக இருந்தன. ஆனால் அவைகள் மக்களிடம் மதிப் பிழக்கச் செய்ததுடன் எதிரிகளுக்கு ஒரு சந்தர்ப்பத்தைக் கொடுக்கச் செய்தது. தெமிஸ்டாக்ளிஸை நாடு கடத்திய காலமும் மற்றும் நெருக்கிய காரணமும் நம்ப முடியாதவையாகும். அநேகமாக இவன் முயன்று கைக்கொண்ட முறைகள், அரிஸ்டைடிஸ் என்பவன் தீர்மானிக்கப்பட்ட ஒரு ஜனநாயகத் தலைவனாக இருந்தபோதிலும், ஒரு புரட்சியாக இருந்திருக்கும். அரிஸ்டைடிஸும் ஸான்திப்பஸ்ஸும் ஒன்றுசேர்வதற்கு இணங்கினர். மேலும் சேனையின் வெற்றியால் பிரபலம் அடைந்த கைமன் என்பவனாலும் இதற்கு உதவி செய்யப்பட்டது. நாடு கடத்தும் செயலை நடத்தவேண்டு மென்ற விண்ணப்பம் செய்யப்பட்டது. இதில் 6000 ஓட்டுச் சில்லுகள் தெமிஸ்டாக்ளிஸின் பெயரைக் கொண்டிருந்தன இவற்றில் ஒன்று பாழடைந்த நிலையில் இன்றும் நிலைபெற்றிருக்கிறது. இந்த நாடு கடத்தப்பட்ட இராஜ தந்திரி ஆர்காஸில் தங்கினான். ஸ்பார்ட்டர்கள், அவ்வாறு காரியபுத்தியுள்ள மற்றும் சுறுசுறுப்புள்ள ஒரு பகைவன் அங்குத் தங்கியிருப்பதைச் சம்மதிக்கவில்லை. அதனால் அங்கு அவன் நிம்மதியாக நீண்டநாள் வாழவில்லை. பாஸேனியஸின் சதியாலோசகர்கள் வெளிப்பட்ட பொழுது லேஸிடோமினியர்கள் தெமிஸ்டாக்ளிஸ் அந்தச் சதியில் பங்கு கொண்டிருந்தான் என்று கண்டுபிடித்தார்கள். தெமிஸ்டாக்ளிஸ் பாஸேனியர்களுடன் தொடர்பு கொண்டிருந்தாலும், அந்தத் தொடர்பு சமாதானம் செய்யும் வழியில் இருந்ததே யொழிய அது கிரீஸைப் பெர்ஷியாவிற்குக் காட்டிக்கொடுக்கும் வழியில் இருந்ததாக ஒரு தவறாக அது இல்லை. இவ்வாறு அனுப்பிய செய்திகள் ஸ்பார்ட்டாவின் அரசியலுக்கு எதிரே இருந்திருக்க வேண்டுமென ஊகிக்கப்படுகிறது. அவன் தன் தேசத்திற்குத் துரோகம் செய்தான் என்று பழி சுமத்தப் பட்டான். மக்கள் அவனைத் தண்டனைக்கு உள்ளாக்கப் பிடித்து வருமாறு அனுப்பப்பட்டார்கள். அவன் கார்கைராவுக்குச் சென்றுவிட்டான். கார்க்கைரர்கள் இவனைத் தம்மிடம் வைத்துக் கொள்ள மறுத்து விட்டதன் பேரில் இவன் எபைரஸைத் தாண்டிச் சென்று விட்டான். ம்ற்றும் அவன் லேஸிடோமோனியன், அத்தீனியன் ஆகிய அதிகாரிகளால் துரத்திச் செல்லப்பட்டான். மொலோஷியர்களின் அரசரான அட்மிடஸிடம், முன்பு இவனுக்கு நட்பு இல்லாமலிருந்த போதிலும் இவன் அவனுடைய வீட்டிற்கு முன்பு பாதுகாப்பிற்காக நின்றுவிட்டான். இந்த மேற்குப் பகுதிகளில்

பழைய காலமான ஹோமர் வாழ்ந்த காலத்திலிருந்த அரசர்கள் காலத்திற்கு நம்மை மாற்றி விடுகிறது. இந்தச் சமயத்தில் அரசன் வீட்டில் இல்லை. ஆனால் தெமிஸ்டாக்ளிஸ் அங்கு தங்குவதற்கு இராணியிடம் கெஞ்சிக் கேட்டுக்கொண்டான். தெமிஸ்டாக்ளிஸை அவள் குழந்தையுடன் அடுப்புப் பக்கத்தில் சென்று தங்கச் சொன்னாள். அரசன் திரும்பி வந்ததும், அவன் தனக்குப் பாதுகாப்பு அளிக்கும்படிக் கேட்டுக்கொண்டான். அட்மிடஸ் நற்பண்புடன் அவனைத் தேடி அலைந்தவர்களிடம் பிடித்துக் கொடுக்க மறுத்துவிட்டான். ஏமாற்றமடைந்த அத்தீனியர்கள் அவனைத் துரோகி என்றும், நாடு கடத்தப்பட்டவன் என்றும் கூறி அவனுடைய சொத்தைக் கைப்பற்றியதுடன் அவனுடைய குடியில் பிறந்தவர்களின் பிரஜா உரிமையை அழித்தார்கள். அட்மிடஸ் புகலிடம் தேடி வந்தவனை மேஸிடோனியாவிலுள்ள பிட்னு என்னும் இடத்திற்கு அனுப்பினான். ஒரு கப்பல் அவனை அயோனியக் கடற்கரைக்கு எடுத்துச் சென்றது. சில ஆண்டுகள் அட்டிக் கரையிலுள்ள சிறிய நகரங்களில் தலைமறைவாக இருந்துவந்தான். ஸெர்க்ஸீஸ் இறந்ததும் ஆர்டா ஸெர்க்ஸீஸ் அரசாட்சியை அடைந்ததும் இவன் சூசாவரை சென்று பெர்ஷியாவின் நீதிமன்றத்தில் சதியாலோசனை செய்துவந்தான். அதனால் சந்தர்ப்ப நிலை அவனை பாஸேனியஸைப் போலத் துரத்தியது. மற்றும் ஆவலுள்ள வஞ்சப் புகழ்ச்சியினால் கிரீஸைக் காப்பாற்றியவர்களாகக் கருதப்படும் இரண்டு மனிதர்கள், சாலமிஸ் வீரன், மற்றும் பிளெட்டியாவின் வீரன், அவர்களுடைய சொந்த காரியத்தைச் செய்யும் திட்டத்தை மேற்கொள்ளாமல் திருப்பப்பட்டார்கள். மற்றும் அவர்கள் வெளியிட்டபடி கிரீஸை அடிமை யாக்கவும் திருப்பப்பட்டார்கள். முயற்சியுள்ள மற்றும் கூர்மையான பார்வை கொண்ட தெமிஸ்டாக்ளிஸ், பெரிய அரசனின் மூலம் தன்னுடைய நன்மைக்கு வேண்டிய வழியில் செல்ல சூழ்ச்சி செய்தான். ஆனால் கிரீஸிற்கு எதிராக எந்த சதியும் செய்ய நினைக்கவில்லை. நாம் எதிர்பார்க்கும் அளவிற்கு, ஸ்பார்ட்டாவின் திட்டுமிட்டு வெற்றி பெறுபவர்களைவிட இவன் அதிக வெற்றியடைந்தான். பெர்ஷியாஸில் இவனுக்கு அதிக மதிப்புக் கொடுத்ததுடன், மாக்னீஷியாவிலுள்ள ஜில்லாவின் அரசாட்சியைக் கொடுத்தார்கள். அங்கு இவனுக்கு உணவு, லாம்ப்சாகஸ் (Lampsacus) மதுவுடன் மற்றும் இறைச்சியோடு மையசும் (Myus) கொடுக்கப்பட்டது.

தெமிஸ்டாக்ளிஸ் மாக்னீஷியாவில் இறந்தான். மற்றும் மாக்னீஷியர் அவனுடைய சொந்த நாட்டில் கொடுக்க மறுத்த மதிப்பை இவர்கள் கொடுத்து, அவர்களுடைய சுவர்களின் வெளியே இவனை அடக்கம் செய்தார்கள். இவர்கள் இதனுடன் திருப்தி அடையவில்லை. அவர்கள் தங்கள் நகரத்துடன் இணைத்து இவனுடைய புகழை நன்ருகப் பரப்பினார்கள். அவர்கள் அவனுக்கு ஒரு வீரனுக்குரிய மதிப்

பைக் கொடுத்தார்கள். மற்றும் சந்தை நடக்கும் இடத்தில் கிரிஸைப் பாதுகாத்தவன் என்று கூறி அவனுக்கு ஒரு சிலை அமைத்தார்கள். இந்தச் சிலை நிர்வாணமாக நின்றுகொண்டு மதுவை ஒரு விக்கிரகத்தின் மேல் ஊற்றுவதாகவும், அதற்குக் கீழ், வெட்டப்பட்ட ஒரு எருது நிற்கின்ற நிலையிலும் இருந்தது. இந்தக் காட்சி சில காலங்களாக வேண்டுமென்றோ அல்லது தெரியாத்தனமாகவோ ஒரு பொய்யான கதையை உண்டு பண்ணும் அளவுக்குத் தவறுதலாக அர்த்தம் செய்யப்பட்டது. தெமிஸ்டாக்ளிஸின் இறப்பிற்கு அரை நூற்றாண்டிற்குப் பின்பு, அவன் எருதின் இரத்தத்தினால் தன்னை மரணத்திற்குள்ளாக்கிக் கொண்டான் என்று பொது மக்கள் நினைத்தார்கள். மற்றும் பெர்ஷிய அரசனுக்கு அளித்த வாக்குகளை நிறைவேற்ற முடியாமல் போன, நம்பிக்கை இழந்த பயனில்லாத நடத்தையே அவனுடைய இறப்பிற்குக் காரணம் எனக் கூறப்பட்டது. இந்தக் கதை ஏதென்ஸில் இவனுடைய விரோதிகளால் முதலில் அநேகமாகப் பரப்பப்பட்டதால், மாக்னீஷியாவின் சந்தை நடக்கும் இடத்தில் கட்டப்பட்ட சிலையில் ஒரு எருதும், மற்றும் அதனருகில் மதுபானங்களைக் கொண்ட ஒரு சிறு தொட்டியும் கட்ட மறைமுகமாகத் தெரிவிக்கப் பட்டதன்பேரில் அது கட்டப்பட்டது.

## 5. டிலாஸ் நாடுகளின் கூட்டிணைப்பு அத்தேனியன் இராச்சியமாயிற்று

டிலாஸ் நாடுகளின் கூட்டிணைப்பினால் பாரஸீக நாட்டிற்கு எதிராகத் தொடுத்த போரை நடத்த வேண்டிய பொறுப்பு மில்டியாடிஸின் குமாரனாகிய கைமானுடையதாயிற்று (Cimon). அவன் எவ்வாறு பாஸேனியஸ்ஸை செஸ்டாஸ், பைசான்டியம் என்னும் நாடுகளிலிருந்து விரட்டியடித்தான் என்பதை முன்பே நாம் பாத்தோம். அவனது அடுத்த படையெடுப்பு ஸ்ட்ரைமான் (Strymon) வாயிலுக்கு அருகிலுள்ளதும், ஹெலஸ்பான்ட்டிற்கும் கிழக்கிலுள்ளதுமான பாரஸீகரது மிக்க முக்கியமான அரணுமான இயான் (Eion) என்னும் நகரமாகும். அந்தப் பட்டணம் போஜெஸ் (Boges) எனப்படும் வீரத் தலைவனால் அதிபத்திரமாகப் பாதுகாக்கப்பட்டுவந்தது. அவன் எல்லா சமாதான பேச்சுக்களையும் மறுத்துவிட்டான். அவனிடமிருந்த உணவெல்லாம் செலவழிந்தபின் அவன் ஒரு பெரிய மயானத் தீயை உண்டாக்கினான். அவனது மனைவி, மக்கள், வைப்பாட்டிகள், அடிமைகள் எல்லோரையும் வெட்டி அந்தத் தீயில் போட்டுவிட்டுப் பின் அவனிடமிருந்த பொன்னையும் வெள்ளியையும் மதில் மீதேறி ஸ்ட்ரைமன் என்னும் ஆற்றில் எறிந்துவிட்டு அவனும் அத் தீயில் குதித்துவிட்டான். இவ்வாறு அத்தேனியர்கள் கடற்கரையிலுள்ள

ஒரு வலிய கோட்டையைக் கைப்பற்றினர்கள். அங்குள்ள செழிப்பான வயல்களையும் அருகிலுள்ள மூங்கிற் காடுகளையும் கண்டு இயான் நகரத்திலேயே நிரந்தரமாகக் குடியேறிவிட விரும்பினர்கள். ஆனல் அவர்கள் அனுப்பிய குடியேற்ற மக்களை திரேஸியன் (Thracian) ஆதிக் குடிகள் அழித்து விட்டார்கள். ஸ்ட்ரைமான் கீழ் நாடுகளில் அத்தேனியரின் ஆதிக்கத்தை நிலைநாட்டும் நாள் இன்னும் வரவில்லை.

ஹெப்ரஸ் (Hebrus) வாயிலை ஆண்டுவந்த டோரிஸ்கஸ் (Doriscus) இன்னும் பாரசிகர் கையில் இருந்தது. அதைக் கைப்பற்ற அத்தேனியரது கப்பல் படைகளால் செய்யப்பட்ட முயற்சிகளெல்லாம் வெற்றிகரமாக எதிர்க்கப்பட்டன. முடிவு என்ன என்பது நமக்குத் தெரியாது. ஒருவேளை அது திரேஸியர்களின் கைவசப் பட்டிருக்கலாம். கைமானது அடுத்த செயல் ஸ்கைரஸ் (Scyrus) என்னும் மலைப் பாங்கான தீவிலுள்ள கடற் கொள்ளைக்காரருடைய கோட்டையை அழிப்பதாகும். அத்தேனியர்கள், ஏஜியன் கரையிலுள்ள இடங்களைக் கைப்பற்றினலும் அவர்கள் இடையிலுள்ள இடங்களைப் பிடிப்பதும் அவசியமாயிற்று. ஸ்கைரஸ் தீவின் முக்கியத்துவம் அது ஆத்தென்ஸ் பட்டணத்திற்கும் மேற்குத் திரேஸிற்கும் இடையிலுள்ள கடல் மார்க்கத்தில் அமைந்திருந்ததுதான். அதில் குடியிருந்த முரடர்கள் அடிமைகளாக்கப்பட்டு அதில் அட்டிக்காவின் மக்கள் குடியேற்றப்பட்டனர். அந்தத் தீவு அட்டிக்காவுடன் இணைக்கப்பட்டது. ஆனல் கைமானுக்கு தீஸியஸ்ஸின் (Theseus) எலும்புகளைக் கண்டுபிடித்ததை விடக் குறைவான புகழே இந்த வெற்றியில் கிடைத்தது. டெல்பிக் கோயிலின் தெய்வக் கூற்றுனது அத்தேனியர்கள் தீஸியஸ்ஸின் எலும்புகளை எடுத்து ஒரு மரியாதைக்குரிய இடத்தில் வைக்க வேண்டியது என்பதாகும். ஒரு வேளை அந்த வீரனைப் புதைத்த இடம் ஸ்கைரஸ் தீவில் உள்ளது என்று ஒரு புராணமும் இருந்திருக்கலாம். எப்படி இருந்தாலும், தற்செயலாகவோ அல்லது தேடியதாலோ அந்தத் தீவில் மிகப் பெரிய அளவிலுள்ள ஒரு போர்வீரனது உடலைக் கொண்ட ஒரு கல்லறை கண்டுபிடிக்கப் பட்டது. அது தீசஸுடைய உடல். கைமான் அதை ஆதென்ஸ் பட்டணத்திற்குத் திரும்பக் கொண்டுவந்தான். ஒருவேளை இதுவே அவனுக்கு மற்ற எல்லாத் தீரச் செயல்களையும்விட அதிகப் புகழைத் தேடித் தந்திருக்கலாம்.

சில ஆண்டுகளுக்குப் பின் கைமான் தன் வாழ் நாட்களிலேயே அடைந்திராத கீர்த்திமிக்க வெற்றியடைந்தான். இதுவரை அவன் ஈஜியக் கடலின் வடகரையிலுள்ள நாடுகளிலேயே படை எடுத்து வந்தான். அவனது கடற்படை தெற்கு நோக்கி முன்னேறிச் சென்று ரோட்ஸ், சைப்ரஸ் கடல்களிலுள்ள பாரஸிக ஆதிக்கத்திலிருந்த நாடுகளைத் தாக்க வேண்டிய காலமாயிற்று. அது மிக அவசியமானதும் கூட. ஏனென்றல் ஸெர்க்ஸீஸ், கிரேக்க சேனையைக் கடைசி முறை

யாக எதிர்ப்பதற்காக இங்கே ஒரு பெரிய படை திரட்டி இருந்தான். கைமான் கிரேக்கரின் நாடுகளையும், கேரியா கடற்கரையிலுள்ள ஆதிக் குடிகளின் நாடுகளையும் பாரசீகரின் ஆட்சியிலிருந்து விடுவித்தான். லிசியன் (Lycian) சமூகத்தினரை டிலாஸ் நாடுகளின் கூட்டிணைப்பில் கட்டாயப் படுத்திச் சேர்த்துவிட்டான். பின் பாம்பிலியாவிலுள்ள யூரிமிடான் (Eurymedon) ஆற்றில் அவன் பாரசீகச் சேனையையும் பாரசீகக் கடற்படையையும் சந்தித்து, நிலத்திலும் நீரிலும் அவர்களுடன் போரிட்டு, 200 பினீஷியக் கப்பல்களை அழித்து அவர்களை மேற்கொண்டான். இந்த வெற்றி அத்தேனியன் கூட்டாட்சிக்கு, சிறிய ஆசியாவின் தென் பகுதியில் கேரியா முதல் பாம்பிலியா வரையில் உள்ள நாடுகளை அத்தீனியக் கூட்டாட்சியில் சேர்க்கும் வாய்ப்பை ஈன்றது.

இந்தப் போரில் கொள்ளையடிக்கப்பட்ட பொருள்கள் பாரசீகரால் தகர்க்கப்பட்ட அத்தேனியரின் அரண்களை வலுப்படுத்துவதற்கு உபயோகப்படுத்தப்பட்டது. பிரியேஸ்மீது (Piraeus) தன் நம்பிக்கையை வைத்திருந்த தெமிஸ்டோக்கிளிஸ், அத்தீனிய சேமஅரணாகிய அக்ரோபோலிஸின் மதில்கள் இல்லாமலிருந்தாலும் திருப்தி யடைந்திருப்பான். ஆனால் பழமையையே விரும்பும் கைமான் அக்ரோபோலிஸ் மறுபடியும் அத்தீனியரின் அரணாக வேண்டுமென்று தீர்மானித்தான். யூரிமீடானிலிருந்து கொண்டுவந்த கொள்ளைப் பொருள்கள் தெற்கு மதில்களைக் கட்ட உதவியது.

டிலாஸ் நாடுகளின் கூட்டிணைப்பு தன்னுடைய வேலையைச் செய்யவில்லை என்று சொல்லமுடியாது. பாம்பிலியன் ஆற்றில்கிடைத்த வெற்றி கிரேக்க நாட்டைப் பாரசீக ஆட்சியால் ஏற்படக்கூடிய எல்லா ஆபத்துக்களிலிருந்தும் விடுவித்தது. கைமான் மீண்டும் த்ரேஸியன் செர்சுனீஸிலுள்ள (Thracian Chersonese) சில இடங்களை அங்குள்ள நாகரிகமற்ற மனிதரிடமிருந்து மீட்டான். ஆனால் ஸ்கைரஸ் வெற்றிக்கும் யூரிமிடான் போருக்குமுள்ள இடைக்காலத்தில் அந்த கூட்டிணைப்பின் கடற்படை மற்றொரு வேலை செய்ய வேண்டியிருந்தது. அந்த வேலையாவது இந்தக் கூட்டிணைப்பில் சேர விரும்பாத கிரேக்க நாடுகளுடன் போர் தொடுக்க வேண்டியதேயாகும். இந்தத் தொழிலில் முதல் முதலில் நேர்ந்த நிகழ்ச்சி தனக்கு ஆசையில்லாத ஒரு அயல் நாட்டை வலுக்கட்டாயப்படுத்தி இந்தக் கூட்டரசில் சேர்த்ததேயாகும். காரிஸ்டஸ் அந்தத் தீவிலுள்ள மற்ற நாடுகளைப்போலல்லாமல் இக் கூட்டரசில் சேராமலேயே இருந்தது. இந்த நாடு அட்டிக்கா கடற்கரையின் வெகு அருகில் இருந்ததால் அத்தேனியரால் இதைச் சகிக்க முடியவில்லை. காரிஸ்டஸ் அதன் விருப்பத்திற்கு மாறாக இக் கூட்டுறவில் சேர்க்கப்பட்டது. இரண்டாவது நிகழ்ச்சியானது கூட்டிணைப்பில் இம்மட்டுமிருந்து இப்போது பிரிந்துபோக வேண்டுமென்றிருந்த ஓர் உறுப்பினரைக் குறிக்கும்.

நாக்ஸாஸ் (Naxos) மேற்படி சங்கத்திலிருந்து விலகியது. இதை விரும்பாத நேச நாடுகள் தமது கப்பற்படையினால் அதனை முற்றுகை செய்து தம் ஆதிக்கத்திற்கு உட்படுத்தின. காரிடஸைப் பொறுத்த வரையில் இது அரசியலுக்கு இன்றியமையாதது என்ற ஒரே காரணத்தைக் காட்டித் தமது செய்கையைத் தடுத்தாதரிக்கலாம். எல்லா உறுப்பினர்களும் ஒன்றுசேர்ந்து இச் சங்கத்தைக் கலைக்கு மட்டும் ஒவ்வோர் உறுப்பினரும் தங்களுடைய கடமைப் பொறுப்புகளை நிறைவேற்ற வற்புறுத்தப்படலாம் என்று நாக்ஸாஸைப் பொறுத்த வரையில் தனது உரிமையை மெய்ப்பித்து நிலைநிறுத்தியிருக்கலாம். ஆனால் இவ்விரண்டு செய்கைகளும் தம்முரிமையுடைய சுதந்தர நாடுகளின்மேல் தமது கொடுங்கோலாட்சியை நிறுவியது போல் காட்சியளித்தன. மேலும் இவ்விரண்டு செய்கைகளும் கிரேக்க நாட்டுப் பொது மக்களின் கருத்துரைக்கு நேர் விரோதமாக இருந்தன. இக் கொடுமையானது நாக்ஸாஸும் காரிஸ்டஸ்ஸும் தமது தன்னாட்சி உரிமையை இழந்தபோது தாங்கொணாத் துன்ப நிலையை அடைந்தது. உண்மையில் இவ்விரண்டு நாடுகளும் ஆதென்ஸ்ஸின் அடிமை நாடுகளாயின. எப்படி அத்தீனியப் பேரரசு படிப்படியாக நிறுவப்பட்டது என்பதற்கு இவ்விரண்டும் முக்கிய எடுத்துக்காட்டுகளாகும். தமது நேச நாடுகளைக் கட்டுவதற்காக ஆதென்ஸ் தனது கொல்லுலையில் விலங்குகளைச் செய்யும் தொழிலில் இறங்கியது.

நாடுகளின் கூட்டிணைப்பை ஒரு பேரரசாக மாற்றியமைக்கும் இந்தத் தவிர்க்கமுடியாத கோட்பாட்டை ஆதென்ஸ் கைக்கொண்டு நடத்த யூரிமிடானின் வெற்றியானது அடிகோலியது. த்ரேஸியன் கடற்கரையிலுள்ள தீவைச் சேர்ந்த தேஸாஸ் (Thasos) பட்டணம் கூட்டிணைப்பு நாடுகளில் ஒரு வலிமையுற்ற நகராகும். பெரியதொரு கப்பற் படையைக்கொண்ட இந் நகரம் கப்பல்களைச் சந்தாவாகக் கொடுத்த நகரங்களில் ஒன்றாகும். ஸ்ட்ரைமான் (Strymon) நதியின் மேல் ஒரு குடியேற்ற நாட்டை நிறுவி, அப் பிரதேசங்களின் போக்குவரவைத் தம் வசப்படுத்த ஆதென்ஸ் புதிய முயற்சிகளைச் செய்ய முற்பட்டது. அத்தீனியர்களின் சுயநலமானது, திரேஸில் தனது வியாபாரத் தொடர்புகளினால் வளமை பெற்றுவந்த தேஸியர்களின் (Thasians) நலத்துடன் முட்டியது. மாஸிதோனியாவும், திரேஸ்ஸும் வடக்குக் கரையிலிருந்து ஆதென்ஸ்ஸை ஒதுக்கிவைக்க ஆர்வம் கொண்டிருந்தபடியால், இவ்விரண்டு நாடுகளிடமிருந்தும் தேஸாஸ் மக்கள் ஒத்தாசையை எதிர்பார்த்தனர். ஸ்பார்ட்டாவினிடமிருந்தும் இவர்கள் உதவியை நோக்கினர். ஆனால் லாஸிடிமோனியர்கள், ஹிலாட்டியர்களின் கலகத்தின் பொருட்டு உதவிசெய்ய இயலாதவர்களானார்கள். கைமானால் தேஸியர்களின் கப்பற்படையானது தோற்கடிக்கப்பட்டது. இதன்பின் அப் படையானது முற்றுகையிடப்

படவே, அது சரணுகதி யடைந்தது. அவர்களுடைய அரண்கள் தரை மட்டமாக்கப்பட்டன. அவர்களுடைய கப்பல்கள் ஆதென்ஸ்ஸிற்குக் கொடுக்கப்பட்டன. அவர்கள் சுரங்கத்தின் மேலும், பெருநிலப் பகுதி யின் மேலும் தமக்குள்ள பாத்தியத்தை விட்டுவிட்டனர். இதுவுமன்றி என்ன கப்பம் கேட்டாலும் தருவதாகவும் அவர்கள் கூறினுர்கள்.

இங்கே கூறியில்லாத பல நகரங்களுடன் அத்தீனியக் கோட்பாடு கையாண்ட முறைகளை கேரிஸ்டஸ், நாக்ஸாஸ், தேஸாஸ் என்ற சிறந்த உதாரணங்களிலிருந்து நன்ருகக் கணித்துக்கொள்ளலாம். இப்போதிருந்து டீலாஸ் நாடுகள் கூட்டிணைப்பில் மூவித அங்கத்தி னர்கள் காணப்பட்டனர்: (1) கப்பல்களை அளித்துக் கப்பம் கட்டாத நேச நாடுகள்; (2) சுதந்திரத்துடன் வாழ்ந்து கப்பம் கட்டிய நேச நாடுகள்; (3) அடிமையாக இருந்து கப்பம் கட்டிய நேச நாடுகள். ஆசிய நகரங்கள் தங்கள் வலிமையில் குறைவுபட்டமையாலும், இராணுவத்தொண்டை வெறுத்ததாலும், தமது வீட்டையும் நாட் டையும் விட்டு வெளியே செல்ல ஆர்வமில்லாததாலும், தமது பணிகளுக்குப் பதிலாகக் கப்பத்தைக் கட்டிவிட முன்வந்தனர். அதிக மான உறுப்பினர்கள் கப்பல்களைக் கொடாமல் கப்பப் பணத்தையே கொடுப்பது அத்தீனிய நலனுக்கு அதிக அனுகூலமாயிருந்தது. ஏனென்ருல் கப்பப் பணத்தைக்கொண்டு கட்டப்பட்ட கப்பல்கள் அத்தீனியர்களுடையன ஆயின. மேலும் இவை யாவும் அத்தீனியர்க ளுடைய நேரடிக் கட்டுப்பாட்டுக்குள் இருந்தும் வந்தன. எனவே ஆதென்ஸ் முதல் வகுப்பு அங்கத்தினர்களைக் குறைக்க முற்பட்டது. அதி சீக்கிரத்தில் இந்த வகுப்பில் உள்ள அங்கத்தினர்களின் எண்ணிக்கை குறைந்து பெரியனவும் வளமை பெற்றனவுமான லெஸ்பாஸ் (Lesbos), ஷியாஸ் (Chios), சாமாஸ் (Samos) என்ற மூன்று தீவுகளை மாத்திரமே கொண்டு விளங்கியது. மேலும் இரண்டாவது வகுப்பு அங்கத்தினர் களை மூன்ரும் வகுப்பிற்குக் குறைத்து, அந் நகர்களின் உள்நாட்டு விவகாரங்களையும் தம் கைக்குள் கொண்டுவருவது ஆதென்ஸ் நகரத் தின் நலத்திற்கு ஏதுவாயிருந்தது. பலாத்காரத்துடன் புதிதாகச் சேர்க்கப்பட்ட அங்கத்தினர்கள் தங்களுடைய முழுத் தன்னுட்சி உரிமையை அனுபவிக்க விடப்படவில்லை. கலகம் செய்த நகரங் களோவென்ருல் அடிமையின் பதவிக்குக் குறைக்கப்பட்டனர். ஆனுல் இந்த அடிமைத்தனத்தின் தரமானது பொதுவானதல்ல. ஒவ்வொரு நகரத்தின் இடமானது, அது ஆதென்ஸ் நகரத்துடன் கொண்டிருந்த உடன்பாட்டைப் பொறுத்திருந்தது. இந்த உடன்படிக்கைகளில் காணப்பட்ட பிரிவுகள் வேறுபட்டே காணப்பட்டன. பொதுவாக அடிமைப் பதவியிலிருந்த நாடுகளின் அரசியல்களின் அமைப்பை ஆதென்ஸ் வரையறை செய்தது. இந்த அரசியல்கள் எப்பொழு தும் மக்களாட்சியைத் தழுவியிருந்தன என்பதைக் கூறவேண்டிய

தில்லை. எரித்திரி (Erythrae) இந்தச் சங்கத்தில் சேரும்படி பலாத்காரம் செய்யப்பட்டபொழுது, அதற்கு ஒரு புதிய அரசியல் அமைப்புக் கொடுக்கப்பட்டது. ஒரு கல்லின்மேல் பொறிக்கப்பெற்ற அந்த அரசியல் அமைப்பின் ஒரு பாகமானது இன்றும் பேணி வைக்கப்பட்டுள்ளது. ஆனால் முன்பே கூறியபடி விதிகள் வகையில் கண்டிப்பான ஒரு பொதுவான ஒழுங்கமைப்பைக் காண்பதற்கில்லை. ஒவ்வொரு நகரமும் அதற்கான தனி வசதிகளையும், தனக்கான கட்டுப்பாட்டைக் கொண்ட தன்னாட்சி உரிமையையும் கொண்டு விளங்கியது. ஆதென்ஸ் நகருடன் இந்தக் கப்பம் கட்டும் நாடுகளில் பல சார்ந்திருப்பதை அந் நாடுகளில் காணப்படும் அத்தீனியச் சிறு படையிலிருந்தும், அத்தீனிய அமைதிக்கால அரச ஊழியர்களிலிருந்தும் அறிந்து கொள்ளலாம். போர் மூளுங் காலங்களில் எல்லா நாடுகளும் இந்தக் கூட்டிணைப்பிகுப் போர் வீரர்களை அனுப்பவேண்டிய தேவையானது ஒரு பொதுவாகக் காணப்படும் சுமையாகும். சில குறிப்பிட்ட நிபந்தனைகளின் படிதான் இந்தக் கடமையை வற்புறுத்த முடியும். ஆனாலும் இந்தப் புதிய புனைதலானது கடலைச் சார்ந்த நாடுகளின் இணைப்பு என்ற மூலப்பண்பை முழுவதுமாக மாற்றியமைத்தது. தன்னாட்சி உரிமைகளுடைய நேச நாடுகளையும், ஆதென்ஸ் இராணுவப்பணி யாற்றவேண்டும் என்று வற்புறுத்த முன்வந்தது. இந்தக் கோட்பாடு கலகங்களை உண்டுபண்ணியது. இந்த 'விளைவை ஆதென்ஸ் முழுவதுமாக வரவேற்றது. ஏனென்றால், இவைகளைச் சாக்காகக் கொண்டு அவர்களுடைய தன்னாட்சி உரிமையைப் பறித்துக்கொள்ள ஆதென்ஸ்ஸிற்கு வாய்ப்புகள் கிடைத்தன. கடைசியில் கப்பல்களை அளித்த ஷியாஸ், லெஸ்பாஸ், சாமாஸ் ஆகிய மூன்று நாடுகளைத் தவிர, மற்றெல்லா நேச நாடுகளும் இராணுவப் பணியாற்றவேண்டியதாயிற்று எனத் தெரிகின்றது.

இவ்வகையாக நட்புத் தொடர்பானது பேரரசாக மாற்றப்பட்டுக்கொண்டிருக்கும் காலையில், ஆதென்ஸ் டீலாஸ் தீவில் கூடும் நாடுகளின் கூட்டிணைப்புக் கூட்டங்களை நிறுத்திவிட முடிந்தது. ஆதென்ஸ் இந்தக் கூட்டிணைப்புக் கூட்டத்தைக் கூட்டி ஆலோசிக்காமலே தான் நினைத்தபடி எதையும் செய்யக்கூடிய நிலையிலிருந்தது. ஏனென்றால் இந்தக் கூட்டத்திலுள்ள பெரும்பான்மையான அங்கத்தினர்கள் ஆதென்ஸ்ஸின் அடிமை நாடுகளாகும். எனவே அவர்களுடைய தீர்மானங்கள் யாவும் ஆதென்ஸ்ஸின் தீர்மானங்களேயாகும். தேஸாஸ்ஸின் போர் முடிந்த பத்து ஆண்டுகளுக்குப்பின் இந்தப் பேரரசு நடைமுறைக்கு வந்தது என்று நாம் கூறலாம். ஏனென்றால் அப்பொழுது தான் இந்தக் கூட்டிணைப்பின் கருவூலமானது டீலாஸிலிருந்து ஆதென்ஸ் நகரத்திற்கு மாற்றப்பட்டது. அத்தீனியப் பேரரசின் தோற்றத்திற்கு இதுவே அடையாளமாயிற்று. டீலாஸின் கூட்

டிணைப்பு இதனுடன் மறைந்தது. அதிகாரப் பூர்வமாக ஒப்பந்தம் என்னும் தொடர் இந்தக் கூட்டிணைப்பைக் காட்ட உபயோகிக்கப் பட்டபோதிலும், மனிதர் தமது பேச்சுகளில் பேரரசு என்னும் வார்த்தையை உபயோகிக்கத் தயங்கவில்லை. ஐயோனிய அப்போலோவின் (Ionian Apollo) பாதுகாப்பில் இவ்வளவு காலமும் இருந்துவந்த கப்பத் தொகையானது, அத்தீனியச் சேம அரணாகிய அக்ரோப் பாலிஸ்ஸிலுள்ள தேவதையின் கவனிப்புக்குள் வந்தது. இப் பாது காப்புக்காக ஒவ்வோர் ஆண்டுக் கப்பப் பணத்தொகையில் ஒரு தாலந்திற்கு (talent) ஒரு மைஞ (mina) அத்தீனக் கருவூலத்தில் சேர்க்கப் பட்டது.

இந்த அத்தீனியப் பேரரசானது ஈஜியக் கடற் பிரதேசத்தின் வட மேற்கிலுள்ள மெத்தோனிலிருந்து (Methone) தென் கிழக்கிலுள்ள லிசியன் பேசிலிஸ் (Lycian, Phaselis) வரை பரவியிருந்தது[1]. இந்தப் பேரரசு உன்னத நிலையை அடைந்தபோது இதில் 200-க்கு மேலாக நகரங்கள் இருந்தன. அரசாங்கப் பூர்வமான கப்பப்பட்டியல்களிலிருந்து நாம் 260 பெயர்களுக்குமேல் எண்ணிக்கையிடலாம்.[2] சில பட்டியல்களின் பெரிய பாகங்கள் நமக்கு நம்பக்கூடிய விதத்தில் கிடைத்துள்ளன—அவைகள் பொறிக்கப்பட்ட மூல கற்களேயாகும். இவைகள் அத்தீனிய ஆட்சிக்குட்பட்ட நகரங்களின் பெயர்களை மாத்திரமன்றி, அவை ஒவ்வொன்றும் கொடுக்கவேண்டுமென்று தீர்மானிக்கப்பட்ட கப்பத் தொகையையும் நமக்குத் தெளிவாக எடுத்துக் காட்டுகின்றன. ஒவ்வொரு நான்காண்டுக் காலம் முடிவு

[1]காலப் போக்கில் (கி. மு. 443...2) கப்பம் கட்டும் நகரங்கள் பின் வரும் ஐந்து நில நூல் பிரதேசங்களாகப் பிரிக்கப்பட்டன: (1) **திரேஸியன்** (Thracian), அதாவது மேற்கிலுள்ள மெதோனிலிருந்து கிழக்கிலுள்ள ஈனஸ் வரையும்; (2) **ஹெலஸ்பாண்டேயின்**, செர்சானிஸ்ஸையும் ப்ரேபான்டிஸ் (Propontis), பாஸ்பரஸ் (Bosphorus) கரையிலுள்ள நகரங்களையும் தன்னகத்தே கொண்டிருந்தது; (3) **ஐயோனியன்**. அதாவது ஆஸாஸ்ஸிலிருந்து (Assos) மைலீட்டஸ் (Miletus) வரையும். (4) **கேரியன்**, இப் பிரதேசம் ரோட்ஸ் (Rhodes), காஸ் (Cos) மற்றும் தீவுகளைக் கொண்ட கேரியாவையும் (Caria) புறக்கோடியிலுள்ள பேசிலிஸ் (Phaselis) வரை பரவியுள்ள லிஸியா (Lycia) வையும் கொண்டிருந்தது; (5) **தீவுகள் பிரதேசம்**, இது ஈகைஞ (Aegina), யூபியா (Euboea), மீலாஸ்ஸைத்தவிர (Melos) கைக்கிளேட்ஸ் (Cyclades), வடக்கே லெம்ஞஸ் (Lemnos), இம்பராஸ் (Imbros) முதலியவைகளைத் தன்னகத்தே கொண்டிருந்தது. ஆனல் கேரியப் பிரதேசமானது சில ஆண்டுகளுக்கே இப் பேரரசில் இருந்தது. கீழே 9 ஆம் அத்தியாயம் 5 ஆம் பிரிவைப் பார்க்கவும்.

[2]மேற் கூறிய பட்டியல்கள் ஒவ்வொரு நகரமும் கட்டிய முழு கப்பத்தொகையைக் காட்டும் ஹெலனிக் கருவூலக்காப்பாளர்கள் அனுப்பி வைத்த பட்டியல்கள் அல்ல. ஆனல் இங்குக் கூறப்படும் பட்டியல்கள் தேவதையின் பாகத்தைக் குறிப்பிடும் பட்டியல்களாகும். உதாரணமாக கி. மு. 443இல் பெரிந்தஸ் (Perinthus) கட்டிய கப்பமானது தேவதைக்கு 1000 ட்ராக்மாக்களை (drachmae) கொண்டு சேர்த்தது. ஆகவே அந்தக் கப்பத்தொகையானது 60,000 ட்ராக்மாக்கள் அல்லது 10 தாலந்துகளாகும்.

பெற்றதும் ஒவ்வொரு நாடும் கட்டவேண்டிய கப்பத் தொகை யானது மீண்டும் தக்கவாறு திருப்பி அமைக்கப்பட்டு, வரியின் பளு வானது மாற்றிப் பகிர்ந்தளிக்கப்பட்டது. இப்படிச் செய்யப்பட்ட போதிலும், பட்டியல்களின் சாட்சியத்திலிருந்து நாம் அறிகிற தென்னவென்ருல், நாடுகளிலிருந்து திரட்டப்பட்ட கப்பத்தின் தொகையானது முதலில் அரிஸ்டைடிஸ் (Aristides) தீர்மானித்த படியே 460 தாலந்துகளாகவே எப்பொழுதும் இருந்து வந்தது என்பதாகும். சில ஆண்டுகளில் தேவையானது பொது நிலையை மீறிய பொழுது தாற்காலிகமாக இந்தக் கப்பத் தொகையானது உயர்த்தப் பட்டது. ஆனுல் சாதாரணமாக இத் தொகையானது 460 தாலந்து களாகவேயிருந்து வந்தது. புதிதாக அங்கத்தினர்கள் சேர்க்கப்பட்ட பொழுது, அவர்கள் கொடுக்க வேண்டிய தொகையானது மொத்தக் கப்பத்தொகையை உயர்த்துவதற்கு உபயோகிக்காமல், அத் தொகையை அதே நிலையில் வைத்து மற்ற அங்கத்தினர்கள் கொடுக்க வேண்டும் என்று தீர்மானித்துள்ள தொகையைச் சரிசம வீத அளவுப் படி குறைத்து வந்தனர். இதுவுமன்றி, ஒவ்வோர் அங்கத்தினரும் தாம் கப்பங்கட்டும் தொகையைக் குறித்துப் பேச உரிமை பெற்றிருந்தனர். கப்பத் தொகையானது அதிகமாக இருக்கும் பட்சத்தில் அங்கத் தினர்கள் ஆதென்ஸ்ஸின் பொது மக்களைக் கொண்ட நீதி மன்றங் களுக்கு மேல் முறையிடும் உரிமையையும் கொண்டிருந்தனர்.

குற்றத்துறை சார்ந்த வழக்குகளில் அத்தீனியர்கள் கொண் டிருந்த சட்ட ஆட்சி எல்லையானது நகரங்களின் சுதந்திரத்தில் பெரிய தொரு கட்டுப்பாட்டை ஏற்படுத்தியது. ஆதென்ஸ்ஸிற்கும், அதற்குக் கீழ்ப்பட்ட நாடுகளுக்கும் இடையிலுள்ள வழக்குகள் ஆதென்ஸ்ஸில் விசாரிக்கப்பட வேண்டும் என்பது பொதுநடைமுறை. அவ்வண்ணமே நேசநாடுகளில் உள்ள ஒரு தனிமனிதன் பேரரசிற்கு விரோதமாகச் சதி அல்லது இராசத் துரோகம் (treason) செய்திருப்பானுனுல் அவன் அத்தினிய நீதிமன்றங்களில் விசாரிக்கப்பட வேண்டும் என்பதும் நியாயமாகும். ஆனுல் சில வேளைகளில் ஆதென்ஸ் தனது சட்ட ஆட்சி நிலையை (jurisdiction) விஸ்தரித்து வந்தது. சால்ஸிஸ் ஸைப் (Chalcis) பொறுத்த வரையில் மரண தண்டனை நாடு கடத்துதல் அல்லது குடியுரிமை இழத்தலாகிய தண்டனைகளைப் பெறக்கூடிய வழக்குகள் யாவும் ஆதென்ஸ்ஸில்தான் விசாரிக்கப்படவேண்டும் என்று ஒரு சட்டத்தை ஆதென்ஸ் பிறப்பித்தது. இதிலும், மற்றக் காரியங்களைப்போலவே வெவ்வேறு நகரங்களுடன் வெவ்வேறு ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தன. சில நகரங்கள் மற்றவைகளைக் காட்டிலும் அதிக சுதந்திரம் அடைந்திருந்ததும் உண்மையே. அத்தீனியக் குடிமக்களுக்கும், நேசதேசங்களைச் சேர்ந்த மக்களுக்கு மிடையே ஒப்பந்தங்களை மீறுதலால் (breach of contract) ஏற்படும்

வழக்குகள்போன்றவை தனிப் பன்னுடு சார்ந்த உடன்படிக்கைகளின் கீழ்க் கொண்டுவரப்பட்டு, பிரதிவாதியின் நகரத்திலுள்ள நீதிமன்றங் களில் விசாரிக்கப்பட்டு வந்தன. இவ்வகை வழக்குகளில் ஆதென்ஸ் தனது அதிகாரங்களைத் தனது சுயநலத்திற்காக உபயோகிக்கவில்லை என்பது பாராட்டத்தக்க காரியமாகும். அத்தீனியர்களுக்குக் கீழ்ப் பட்ட நகரத்திலுள்ள ஒருவன் பேச்சுத்திறமை யுற்றவனுயிருந்தால் சில வேளைகளில் அவனை எதிர்த்து வழக்காடிய அத்தீனியன் நடுவுநிலை பெறுமல் இருப்பதையும் நாம் காண்கின்ருேம்.

டீலாஸிலிருந்து ஆதென்ஸ் நகரத்திற்குக் கருவூலம் மாற்றப்பட்ட அரை நூற்ருண்டுக் காலத்திற்குப்பின் இந்த அத்தீனியப்பேரரசானது மறைந்துபோயிற்று. நாம் கவனிக்கப் போவதுபோல் இந்தப் பேரரசானது தான் உச்சநிலையை அடைந்த சில காலத்திற்கெல்லாம் நலிவுற ஆரம்பித்தது. இவ்விதமான கூட்டிணைப்பிற்கு, கிரேக்க அரசியல் ஆழ்ந்தாய்வும் அரசியல் வாழ்க்கையின் ஆத்திச்சூடியும் எதிர்த்து நின்றன என்பதை நாம் மறக்கக்கூடாது. நாகரிகமடைந்த ஹெலனின் உலகத்தின் அடிப்படையானது தலைமையுரிமையுடைய (sovereign) நகர அரசாகும். ஒரு நகர அரசானது தனது ஆதிபத்தி யத்தையாவது (sovereignty) அல்லது அதில் ஒரு பாகத்தையாவது தம்மால் இயன்றவரை விட்டுக்கொடுக்க ஆயத்தமாயிருக்கவில்லை. பொதுவான ஆபத்துக்காலத்தில் நகரத்தில் ஒரு கூட்டிணைப்பில் சேர ஆயத்தமாயிருக்கலாம். இங்கே ஒவ்வொரு நகரமும் தனது தலைமை யுரிமையின் சில அதிகாரங்களை ஒரு பொதுவான கூட்டிணைப்பு அவைக்குக் கொடுக்க முன்வந்தபோதும், அக் கூட்டிணைப்பிலிருந்து விலகக் கூடிய உரிமையைத் தம் காப்பில் வைத்திருந்தது. இதே எண்ணத்தைத் தான் டீலாஸ் நாடுகள் கூட்டிணைப்பின் துவக்கத்தில் நாம் காண்கின்ருேம். இவ்விதமாகத் தன் சொந்த விருப்பத்தால் ஆதிபத்தியத்தில் ஒரு பகுதி விட்டுவிடுவதைக்கூட ஒரு நகர அரசானது தனது துர்ப்பாக்கியம் என்றே கொண்டது. இந்தக் கூட்டிணைப்பில் சேருவதற்கான உட்கோள்கள் நாளடைவில் வலு வின்மையின்றியும் அழுத்தமின்றியும் காணப்படும்போது ஒவ்வோர் அங்கத்தினரும் தமது பூரண சுதந்திரத்தை மீண்டும் அடையவும், தாம் விட்டுக்கொடுத்த ஆதிபத்தியத்தைத் திரும்பவும் மேற்கொள்ள வும் முற்பட்டனர். கிரீஸ் நாட்டு மக்களை இம் மாதிரியான சுதந்திரப் போக்குகள் ஆட்டிவைத்ததனுல், தனது கூட்டிணைப்பையோ அல்லது பேரரசையோ காப்பாற்ற ஆட்சிபுரியும் அரசானது அதிக புஜ பலத்தையும், அதிக விழிப்பையும்கொண்டிருக்க வேண்டியது மிகவும் அவசியமாயிற்று. எவ்வளவு மறைமுகமாக இருந்தபோதிலும், ஒரு பேரரசானது எப்பொழுதும் ஓர் அநீதி என்றே கிரேக்கர்கள் கருதினர். ஹெல்லாஸின் அரசியல் நெறிக்கு, பேரரசானது ஒரு முரண்பாடான

காரியமாகவே இருந்தது. ஒரு சுதந்திரம் பொருந்திய தலைமையுரிமை உடைய நகரில் தான் குடியாக இல்லாதது ஒரு கிரேக்கனுக்கு மிகவும் இழிந்த காரியமாகும். அவன் அதைத் தனது மதிப்பிற்குக் கீழான தென்றும், தன்னுடைய சுதந்திரத்தில் சட்டவரம்பு கடப்பென்றும் கருதினன். அதிலும் முக்கியமாக அவன் ஆதென்ஸிற்குக் கீழ்ப்பட்ட ஒரு நேசதேச நாட்டைச் சேர்ந்தவனுனல் இம் மாதிரிப் பல கட்டங்களில் எண்ணவேண்டியதாயிருந்தது. ஏனென்ருல் இவ்வித நேச தேச நாடுகளின் சுதந்திரம் உள்நாட்டு விவகாரங்களிலும், வெளிநாட்டு விவகாரங்களிலும் கட்டுப்படுத்தப்பட்டிருந்தது. ஆட்சி வல்லவரின் மேற்பார்வையானது எவ்வளவு கண்டிப்பற்றதாய் இருந்தபோதிலும் அந்த ஆட்சி வல்லவருடன் கொண்டிருந்த இணைப்பானது எல்லாப் பொருள்களைவிட மிகவும் உன்னதமான சுதந்திரத்தை இழந்ததற்கு ஈடாகும். ஏனென்ருல் சுதந்திரத்திற்கு, தன்னைத்தானே ஆட்சி புரிந்து கொள்ளும் உரிமை என்பது பொருளாகும். ரோமாபுரியானது வெற்றியுடன் கைக்கொண்ட கோட்பாட்டை ஆதென்ஸ் கைக்கொண்டு ரோமாபுரிபோல் தானும் சிறிய அரசுகளின் குடிகளுக்குத் தம்முடைய சொந்தக் குடிமை உரிமைகளை வழங்கியிருந்தால், ரோமாபுரியைவிட அதிககாலம் நீடிக்கும் ஒரு பேரரசை ஆதென்ஸ் நிறுவியிருக்கக்கூடும். ஆனல் அவ்வகைத் திட்டமானது கிரேக்கர்களுடைய அரசியல் எண்ணங்களுக்கு நேர்விரோதமானது.

## 6. கைமானின் கோட்பாடும் அவர் நாடு கடத்தப்படுதலும்

பாரசீகப் போரானது கிரேக்கர்களுக்கும் காட்டுமிராண்டியர்களுக்குமுள்ள வித்தியாசத்தைத் தெளிவாக எடுத்துக்காட்டி, கிரேக்கர்கள் தமது இன மரபிலுள்ள ஒற்றுமையைச் சிறப்பாகக் கொள்ள வேண்டும் என்று கற்பித்தது. ஆனல் டீலாஸ் நாடுகளின் கூட்டிணைப்பானது கிரேக்க இனமரபிலுள்ள பிரிவுகளை—முக்கியமாக டோரியர்களுக்கும் அயோனியர்களுக்கும் உள்ள பேதத்தை எடுத்துக் காட்டிற்று. இப் பிரிவினை பெரும்பாலும் செயற்கைப் பிரிவினையாகும். இது பழைய கிரேக்க வரலாற்றைப்பற்றிய சில தப்பெண்ணங்களால் ஏற்பட்டதாகும். ஹெலனிக் இனமரபில் இப் பிரிவானது ஒரு சில இடத்தில் மாத்திரமே இயற்கையாகத் தென்படுகின்றது. ஆனல் இப் பிரிவானது பழங்காலத்திலிருந்தே இருக்கின்றது என்று மக்களால் ஒரு பழமொழிபோல் கருதப்பட்டுவரும் நிலையை அடைந்துள்ளது. பெலோப்போனீஸியஸ்ஸின் ஒற்றுமையிலிருந்து டோரியர்களுக்கும் அயோனியர்களுக்கும் இடையே உள்ள இந்த எதிர்ப்பானது, ஒரு தேசீய கோட்பாடாவதன் துவக்கத்தை நாம் ஊகிக்கலாம். இந்த நில நூல் இயல் ஒற்றுமையானது, ஆரும் நூற்ருண்டில் ஸ்பார்ட்டாவின் அதி

காரம் விஞ்சி நின்றபோது, அரசியல் ஒற்றுமையை உண்டுபண்ணியது. இந்த ஒற்றுமையானது, பெலோப்போனீஸியஸ் ஒரு டோரிய நாடானதால், மனித இனப்பிரிவு சார்ந்த ஒற்றுமையாலும் (ethnic unity) பலப்படுத்தப்பட்டது. பாரசீகப் படையெடுப்பின் காலத்தில் பெலோப்போனீஸியர்கள் தன்னந்தனிமையாகவும், மற்றவர்களுடன் கலக்காமலும் இருந்தது மிகவும் தெளிவாகத் தெரிந்ததே. பெலோப்போனீஸியஸ் தன்னந்தனியாக மாத்திரம் இல்லாமல் அத்தீனியக் கூட்டிணைப்பின் வளர்ச்சிக்கு விரோதமாகவும் கண்டனம் செய்தது. இந்தக் கூட்டிணைப்பும் முதலிலிருந்தே தான் அயோனியர்களுக்காக உழைப்பதுபோலக் காட்டிற்று. தான் ஒரு அயோனிய நகரம் என்றும் ஆசியாவிலுள்ள எல்லா அயோனியர்களுக்கும் தாய் என்றும் நம்பிய ஆதென்ஸ் நகரம் தன் குழந்தைகளை ஒன்று சேர்க்க முற்பட்டது. அயோனியர்களின் வழிபாட்டிற்கு முக்கிய இடமாகிய டீலியன் அப்பல்லோவின் கோயில் திருவிடமானது இப் புதிய அயோனியக் கூட்டிணைப்பிற்கு முக்கிய இடமாகத் தேர்ந்தெடுக்கப்பட்டது. அயோனிய அப்பல்லோவின் கைகளிலே இந்தக் கூட்டணியின் கருவூலங்கள் பாதுகாப்பிற்காகக் கொடுக்கப்பட்டிருந்தன. மறுபடியும் இந்த அப்பல்லோவின் தீவில்தான் நேச நாடுகள் யாவும் ஆலோசனைக்காகக் கூடிச் சேர்ந்தன. இவ்விதமாக ஸ்பார்ட்டாவின் தலைமையின்கீழ் பெலோப்போனீஸியஸ்ஸின் டோரியக் கூட்டாட்சியானது, ஆதென்ஸ்ஸின் தலைமையின் கீழுள்ள ஈஜியப் பிரதேசத்து அயோனியக் கூட்டாட்சியை எதிர்த்து நின்றது.

சில ஆண்டுகள்வரை இது உட்பகையாகவே இருந்துவந்தது. பாரசீகத்தின் அபாயம் முற்றும் மறையவில்லை. ஆதலால் ஸ்பார்ட்டா மீதியர்களுக்கு விரோதமாக இன்னமும் ஆதென்ஸின் நேச நாடாயிருந்தது. ஆனால் ஒருவகையில் சமாதானமானது காப்பாற்றப்பட்டதற்கு ஆதென்ஸ்ஸின் தேசிய வாழ்க்கையை நடத்திவந்த அரிஸ்டைடீஸ், கைமான் முதலிய பெரியோர்களின் கோட்பாடும் காரணமாகும். முதலில் மில்டியேடிஸ்ஸின் மகனாகிய கைமான் ஒன்றிற்கும் உதவாதவன் என்று கருதப்பட்டான். இவனுடைய பாட்டனார் 'முட்டாள்' என்ற சாட்டுப்பெயர் கொண்டிருந்தார். இவர் மற்றப் பொதுவான அத்தீனியர்களைவிட மந்தபுத்தியை யுடையவராகக் கருதப்பட்டார். மதுவையும் முறைகெட்ட வாழ்க்கையையும் விரும்பிய இவர் படிப்பில் பெரிய சூரன் அல்லர். இவரை அறிந்த, வாழ்க்கை நிகழ்ச்சிக் கோவை (memoirs) வரையும் ஒரு பெரியார், இவரிடம் அத்தீனியக் குணங்களைவிட, பண்பற்றதும், நேர்மை, ஒளிவு மறைவற்றதும் போன்ற பெலப்போனீஸியக் குணங்கள் காணப்படுகின்றன என்று கூறினார். இவர் தமது மாற்றாந்தாயின் மகளாகிய எல்பினிஸியுடன் (Elpinice) வசித்துவந்தார். இவர்கள்

இருவரும் லாஸிடீமோனியர்களின் பழக்க வழக்கங்களைக் கையாண்டு வந்தனர். இவருடைய இராணுவத்திறனை அறிவுற்ற அரிஸ்டைடிஸ், இவரை அத்தீனியப் பொதுநல வாழ்க்கைக்கு அறிமுகப்படுத்திவைத்தார். இவருடைய எளிமையும் ஆர்வமாகப் பழகும் தன்மையும், தாராளமாக விருந்தோம்பும் பண்பும் இவரை மக்கள் பாராட்டிற்குரியவராக்கிவிட்டன. இவருடைய இராணுவ வெற்றிகள் இவருடைய செல்வாக்கை உறுதிப்படுத்தின. பாரசீகர்களுக்கு விரோதமாகப் போரை நடத்துவதும், லாஸிடீமோனியர்களுடன் நல்ல உறவுகொள்வதும்—என்பவைகளே கைமானின் கொள்கையில் காணப்பட்ட இரு அடிப்படை மெய்ம்மைகளாகும். கடற்பிரதேசத்தில் ஆதென்ஸ் ஆட்சி வல்லவராகவும், பெருநிலப்பகுதியில் ஆதென்ஸ் ஸ்பார்ட்டாவை ஆட்சி வல்லவராக ஏற்றுக்கொள்ள வேண்டும் என்ற இரட்டைத் தலைமைக் கோட்பாட்டை இவர் ஆதரித்தார். ஸ்பார்ட்டாவின்மேல் கைமான் கொண்டிருந்த அனுதாபமும், ஸ்பார்ட்டாவுடன் இவர் கொண்டிருந்த தொடர்பும் ஒரு முக்கிய அரசியல் நிகழ்ச்சியாகும். இந் நிகழ்ச்சியானது ஸ்பார்ட்டாவிற்கும், ஆதென்ஸிற்கும் இடையில் உள்ள பிளவை உண்மையில் தள்ளிப்போட்டது என்று சொல்வது மிகையாகாது.

மக்களாட்சியின் தலைவனாகிய அரிஸ்டைடிஸ்ஸும் மக்களாட்சியைச் சார்ந்த அரசமைப்பின் வளர்ச்சியில் அனுதாபமில்லாத கைமானும் இந்தக் கொள்கையில் ஒருமனப்பட்டிருந்தனர். தெமிஸ்டாக்கிளீஸ்ஸின் மறைவிற்குப் பின் இவர்கள் இருவரும் எல்லா அதிகாரங்களையும் தம்மிடத்தே கொண்டிருந்தனர். கைமான் ஒவ்வொரு ஆண்டும் ஸ்ட்ரடிகஸ் (Strategos) என்றழைக்கப்பட்ட இராணுவத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். ஆனால் அரிஸ்டைடிஸ்ஸோ எல்லாம் வல்ல சபையின்மேல் தமது தூய்மையான நடத்தையினால் ஓர் ஆட்சி அதிகாரம் பெற்றிருந்தார். அரிஸ்டைடிஸ்ஸின் மறைவுக்குப் பின்னும் ஆதென்ஸ்ஸில் கைமான் ஆற்றல் மிகுந்த அரசியல் வல்லுநராக இருந்து வந்தார். ஆனால் இவருக்கு மக்களாட்சியின் மீது அனுதாபமில்லாததால், மக்களாட்சியில் முன்னேறி வரும் அந்த அரசில் இவர் அதிகாரத்தைத் தம் கைகளில் வைத்திருப்பது இயலாத காரியமாயிருந்தது. இளமையான அரசியல் வல்லுநர்கள் தோன்றி கைமானுக்கும் அவரைச் சுற்றியுள்ள சிறு குழு ஆட்சியினர்களுக்கும் விரோதமாக ஒரு புதிய கட்சியை ஆரம்பித்து வைத்தனர். நேர்மையும் நாணயமுமுடையவனும், சிறு குழுவினர்கள் கண்டு அஞ்சுதற்குரியவனும், அவர்களால் வெறுக்கப்படுகின்றவனுமான எபியல்டீஸ் (Ephialtes) என்பவரும்; சபை நடவடிக்கையில் ஒரு முக்கிய பாகத்தை எடுத்துக் கொண்டவரும் ஸாந்திப்பஸ் (Xanthippus) என்பவரின் குமாரனுமாகிய பெரிக்கிளீஸ் (Pericles) என்

பவரும் இந்தப்புதிய மக்களாட்சிக் கட்சியின் தலைசிறந்த இரு அரசியல் வாதிகளானார்கள். தேஸாஸ் கைக் கொள்ளப்பட்ட பின்பு, தேஸி யர்களை ஆதரித்த மாஸிடோனிய மன்னராகிய அலெக்ஸாண்டரிட மிருந்து கைமான் கைக்கூலி வாங்கினார் என்றும், மாஸிடோனியாவை எதிர்த்துப் போர் புரிவதான தமது கடமையை இவர் செய்யவில்லை யென்றும் இவர்கள் கைமானின் மேல் பழி சுமத்தினார்கள். கைமான் விடுவிக்கப்பட்டதிலிருந்து இந்தப் பழியானது வற்புறுத்தப் பட வில்லையெனத் தெரியவருகிறது. ஆனால் இது அதி சீக்கிரத்தில் இவ ருடைய வீழ்ச்சியைக் கொண்டுவரக் கூடிய எதிர்க் கட்சியின் முதல் இயக்கமாகும்.

இதற்கிடையில் ஸ்பார்ட்டாவே இவருடைய கொள்கைக்கு எதி ராக ஒரு பேரடியைக் கொடுத்தது. இதுவரை கிரீஸ் நாடு முழுவதும் பாரசீகர்களுடைய வலிமைக்குப் பயந்து கிடந்தது. ஆனால் அப் பய மானது யூரிமிடானில் கிரேக்கர்கள் பெற்ற வெற்றியினால் மறைந்தது. ஸ்பார்ட்டா இதுவரை தன் மனத்திலே ஆதென்ஸ்ஸின்மேல் வைத் திருந்த பகைமையை வெளியேற்ற அவாக் கொண்டது. தேஸாஸ் போரானது அதற்கு ஒரு தகுந்த வாய்ப்பை அளித்தது ஆனால் நாம் முன்பே கவனித்தது போல், தனது உள் நாட்டில் ஏற்பட்ட சில எதிர் பாராத நிகழ்ச்சிகள் ஸ்பார்ட்டாவை ஆதென்ஸ்ஸிற்கு விரோதமாக எதையும் செய்யத் தடுத்தன. ஸ்பார்ட்டாவின் ஆட்சிக்குட்பட்ட பெரியீக்கை (Perioeci) ஹீலாட்டியார் என்ற மக்கள் சதா காலமும் புகைந்து கொண்டிருக்கும் எரிமலையைப் போல் காட்சியளித்தனர். எனவே ஸ்பார்ட்டாவின் குடிகள் எப்பொழுதும் ஓர் எரிமலையின்மேல் வசித்தனர் என்றே நாம் சொல்லலாம். பாஸேனியஸ் (Pausanias) தூண்ட வேண்டும் என்று எண்ணிய தீயானது, அவருடைய மறை வுக்குப் பின் எட்டு ஆண்டுகளுக்கப்பால் திடீரென்று பிடித்து எரிய ஆரம்பித்தது. தாம் ஒருமைப்பட்டு ஸ்பார்ட்டா நகரைப் பிறப் பித்த கிராமங்கள் திடீரென்று பூகம்பத்தால் தாக்கப்பட்டு அழிவுச் சின்னங்களாகின. அவைகளில் வசித்த மக்களில் பெரும்பாலானோர் அப் பூகம்பத்தால் ஆங்காங்கே அடக்கம் பண்ணப் பட்டனர். தாம் வெறுத்த மேலாட்சியாளர்களின் நுகத்தடியைத் தூக்கி எறிய மிகவும் நல்ல சமயம் என்று மெஸீனிய அடிமைகள் இச் சமயத்தைத் தேர்ந் தெடுத்தனர். நடந்த போரில் இவர்கள் 300 ஸ்பார்ட்ட வீரர்களைச் சின்னாபின்ன மாக்கினர். ஆனால் இதற்குப் பின் இவர்கள் மெஸீனி யாவிலுள்ள பலர் அறியாத இஸ்துமஸ் (Isthumus) என்ற இடத்தில் தோற்கடிக்கப்பட்டு இத்தோம் என்ற இயற்கைக் கோட்டையில் புக லிடம் அடைந்தனர். முன்னுள் நிகழ்ச்சிகளை மனத்திற்குக் கொண்டு வரும் அந்தச் செங்குத்தான மலையிலிருந்து பல ஆண்டுகள் எதிர்த்துப் போராடினர். ஸ்பார்ட்டர்கள் தமது நேச நாடுகளிலிருந்து உதவி

யைக் கேட்கும் நிலைக்குக் கொண்டுவரப் பட்டனர். ப்ளெட்டியா (Plataea), ஈகைனு (Aegina) மான்டினியா (Mantinea) முதலிய நாடுகள் இத்தோமை முற்றுகையிடப் படைகளை அனுப்பி வைத்தன. அவர்கள் அத்தீனியர்களைக் கூட தமக்குத் தம் ஆபத்துக் காலத்தில் உதவியளிக்கும்படி வேண்டிக் கொண்டனர்.

மக்களாட்சியைச் சார்ந்த அரசியல்வாதிகள் உதவியை அளிக்கக் கூடாது என்று உரத்துக் கூறினர்கள். பின்னுல் நடந்த நிகழ்ச்சி யானது அவர்கள் சொன்னது சரி என்று நிரூபித்தது. ஆனுல் அத் தீனிய மக்கள் கைமானின் யோசனைகளுக்குச் செவி கொடுத்தனர். அவர் இரண்டு உருவகங்களின் உதவியால் தமது இரட்டைத் தலைமை என்னும் கொள்கையை எடுத்துக் காட்டினுர். அவ்விரு உருவகங் களாவன: ‘நாம் ஹெல்லாஸ் என்றழைக்கும் கிரேக்க நாட்டை முடமாக்கக் கூடாது; 'நாம் ஆதென்ஸ்ஸுடன் பூட்டப்பட்டிருக்கும் மற்றக் காளையாகிய ஸ்பார்ட்டாவை இழக்கக் கூடாது’ என்பவையே. 4000 ஆப்லிட்டர்களைக் (hoplites) கூட்டிக்கொண்டு கைமான் மெஸீ னியாவிற்குச் சென்ருர். ஆனுல் கோட்டைகளை முற்றுகையிட்டுக் கைப்பற்றுவதில் கைதேர்ந்த அத்தீனியர்களின் சாதனைகள் இத் தோமின் முன் பலிக்கவில்லை. அப்பொழுது ஸ்பார்ட்டா திரும்பி ஆதென்ஸ்ஸின் முகத்தில் அடிப்பதற்கொப்பான ஒரு காரியத்தைச் செய்தது. அங்கு அநேக நேசநாடுகளின் படைகள் இருந்தபோதிலும், அவர்கள் அத்தீனியர்களை மாத்திரம் அணுகி, அவர்களுடைய உதவி தேவையில்லை என்று சொல்லி அனுப்பிவிட்டனர். லாஸிடீமோனி யர்கள் அத்தீனியர்களின் ‘வீரத்தையும் புரட்சியையும் கொண்ட ஊக்கத்தையும்’ கண்டு அஞ்சினர் என்று சொல்லப்படுகின்றது. ஆனுல் கைமானைப் போன்ற ஓர் அன்பர் கூட்டிச் சேர்த்து, நடத்தி வந்த படைக்கு அவர்கள் இவ் வண்ணம் செய்தது வியப்பைக் கொடுக்கின்றது.

இந்த நிகழ்ச்சியானது கைமானின் லாக்கோனியன் கொள்கைக்கு வெடி வைத்தது. ஸ்பார்ட்டாவின் நட்பை நாடித் தியாகங்கள் செய் வதன் புத்தியின்மையை இது தெளிவாக உலகத்திற்கு எடுத்துக் காட் டியது. அதே சமயத்தில் இது ஸ்பார்ட்டாவின் பொருமையையும் நன்ருக வெளிப் படுத்தியது. எபியெல்டீஸ்ஸும் அவருடைய கட்சியும் மெஸீனியாவிற்குப் படையை அனுப்புவது சரியல்ல என்று எதிர்த்தது சரியென்று மெய்ப்பிக்கப்பட்டது. இதற்கிடையில் எபியெல்டீஸ்ஸும், பெரிக்கிளீஸ்ஸும் பழைமை விரும்பும் கட்சியின் தலைவன் அங்கு இல்லாததை உணர்ந்து ஒரு மக்களாட்சியின் அரசியல் அமைப்பை நிறைவாக்க அடிப்படையான சீர்திருத்தங்களைச் செயல் முறைக்குக் கொண்டு வந்தனர். இந்தச் சீர்திருத்தங்கள் மக்களால் அதிகமாக

விரும்பப்பட்டு, இவைகளைக் கொண்டு செலுத்திய அரசியல் வல்லுநர் களின் செல்வாக்கை அதிகரித்தன. எனவே தனது கொள்கையானது அவமானப்பட்டுக் கைமான் திரும்பியபோது, இவர்கள் அவனை 'லாக் கோனியர்களின் நண்பன்' (Philo-Laconian) என்று கேலியாக அழைத் தனர். அதுவுமன்றி அவனை நாடு கடத்துதல் (ostracize) மிகவும் எளிதென்றும் உணர்ந்தனர். அதற்காக ஒரு கூட்டம் நடத்தப் பட்டது. அதன் விளைவாகக் கைமான் நாடு கடத்தப்பட்டார். இது நடந்த சில காலத்திற் கெல்லாம் ஒரு பழிச் செயலானது விளங்காத விதமாக நடைபெற்றது. கைமானின் முக்கிய எதிராளியாகிய எபி யெல்டீஸ் கொலை செய்யப்பட்டார். யார் இந்தக் கொலையாளிகள் என்று ஒருவருமே முன்வந்து உறுதியாகக் கண்டுபிடிக்கவில்லை. ஏரியோபேகஸ் சபையில் (Areopagites) அநேக அங்கத்தினர்கள் இவ ருடைய கொடிய எதிரிகள். இவர் அவர்களைத் தனித்தனியாகவும் மொத்தமாகவும் பல தடவைகளில் எதிர்த்துப் பேசியுள்ளார். ஒரு கால் அவர்களில் சிலர் இவ் விதமாகப் பழிவாங்கத் தயங்கி இருக்க மாட்டார்கள்.

ஸ்பார்ட்டாவின் ஆணவமிக்க நடத்தைக்காகப் பழிக்குப் பழி வாங்க அத்தீனியர்களுக்கு ஒரு சந்தர்ப்பம் ஏற்பட்டது. இத்தோம் கோட்டையானது முற்றுகை யிடப்பட்டு வந்தது. கடைசியில் கலகக் காரர்கள் சரணடைந்தனர். அவர்கள் திரும்பவும் பெலோப்போனீ ஸஸ்ஸிற்குத் திரும்பமாட்டோம் என்ற நிபந்தனைக்கு உட்பட்டதால், அவர்கள் தீங்கொன்றும் அடையாமல் பெலோப்போனீஸஸ்ஸை விட்டுப்போக அனுமதிக்கப்பட்டனர். அவர்களை முற்றுகையிட உதவிய அத்தீனியர்கள் இப்பொழுது அவர்களுக்கு ஒரு தஞ்சம் கண்டு பிடித்துக் கொடுத்தனர். நாபாக்டஸ்(Naupactus) என்னும் இடத்தில் இவர்கள் மெஸ்ஸீனியர்களைக் குடியேற்றி அவர்களுக்கு ஒரு புதிய மனையை ஈந்தனர். நாபாக்டஸ் கொரிந்திய வளைகுடாவில் உள்ளது. இங்கேதான் சிறிது காலத்திற்கு முன் அத்தீனியர்கள் ஒரு கப்பல் தள வாடத்தை ஏற்படுத்தினார்கள். ஒலிம்பியாவிலுள்ள ஆல்டிஸ்ஸில் (Altis of Olympia) இந்த 'மூன்றாவது மெஸீனிய யுத்தத்தின்' ஒரு நினைவுச் சின்னத்தை நாம் இன்றும் காணலாம். இது ஸீயூஸ் கட வுளின் சிலையின் வட்டமான அடிப் பாகமாகும். இந்தச் சிலையானது தமது வெற்றியின் நன்றிக்கு அறிகுறியாக லாஸிடீமோனியர்களால் படைக்கப்பட்டது. அதில் காணப்படும் செய்யுள் அடிகளிலிருந்து, அவர்கள் ஒலிம்பஸ்ஸிலுள்ள ஸீயூஸ் கடவுளைத் தாம் அளித்துள்ள உருவச் சிலையை அன்பாக ஏற்றுக் கொள்ளும்படி கெஞ்சிக் கேட்டுள் ளனர்.

லாஸிடீமோனியர்கள் இந்த மெஸ்ஸீனியக் கோட்டையின் நீண்ட முற்றுகையில் ஈடுபட்டிருக்கும்போது, அப் பக்கத்திலிருந்து தாக்குத

லுக்குப் பயப்படாத ஆர்கைவ் (Argives) மக்கள் இத் தறுவாயை உபயோகித்துக்கொண்டு மைஸினிக்கு (Mycenae) முற்றுகையிட்டனர். ஆர்காஸ் முக்கியத்துவம் அடைந்த காலையில் இந்தக் கோட்டையானது ஓர் ஆர்கைவ் கோட்டையாகத்தான் இருந்தது. ஒருவேளை கிளியோமீனஸ்ஸின் பெரிய வெற்றிக்குப்பின் மைஸீனியர்கள் ஸ்பார்ட்டாவின் உதவியால் சிறியதொரு காலத்திற்குத் தமது பழைய சுதந்திரத்தை அடைந்திருக்கலாம். அந்தக் குறுகிய காலத்தில் கிரீஸ் நாட்டின் விடுதலைக்காகத் தானும் உழைத்து மிக்க புகழ் தேடிக் கொண்டது. தம்முடைய பழமையான சேம அரணின் உச்சியில், முந்தி அரண்மனை இருந்த இடத்தில் இவர்கள் ஒரு கோயிலைக் கட்டினதுமன்றி, கீழேயுள்ள தமது நகரைச் சுற்றி ஓர் அரணை எழுப்பினார்கள். அவர்கள் இப்பொழுது தமது கோட்டையைச் சிறிது காலம் எதிரிகளின் தாக்குதலுக்கு எதிர்த்துப் பாதுகாத்தனர். ஆனால் இவர்களுடைய உணவுப் பொருள்கள் முதலியன எதிரிகளால் தடுக்கப் படவே இவர்கள் கடைசியில் சரணடைய வேண்டியதாயிற்று. ஆர்கைவ் மக்கள் இவர்களை எங்கு வேண்டுமானாலும் போகும்படி அனுமதித்தனர். சிலர் மாஸிடோனியாவிற்குச் சென்றனர். ஆனால் தாக்கியவர்களுடைய பலத்தைவிட அதிக பலமுள்ளதாயிருந்த அவர்களுடைய அரண்களைத்தவிர, அவர்களுடைய பழைய பட்டினமானது முழுவதுமாக அழிக்கப்பட்டது. மறு முறையும் ஆர்காஸ் சமவெளியின் ஆட்சியாளராயிற்று.

# 9. பெரிக்கிளீஸின் (தலைமைப்பொறுப்பின்) கீழ் அத்தீனியப் பேரரசு

## 1. அத்தீனிய மக்களாட்சி நிறைவு பெறுதல்

கைமானின் காலத்துக் கிரேக்க மக்களுக்கு கிளீஸ்தீனிஸ் (Cleisthenes) உருவாக்கி, மாரத்தான் (Marathon) யுத்தத்திற்குப்பின் சீர்திருத்தப்பட்ட அத்தினிய அரசியல் அமைப்பானது எவ்வளவு தூரம் மக்களாட்சி செல்லக்கூடுமோ அவ்வளவு தூரம் சென்றதாகக் காணப்பட்டது. தனது வாழ்க்கையின் சக்கரம் திடீரென்று முடிவுறப் பெற்ற எபியெல்டீஸ் தலைமையின் கீழும், வரப்போகும் முப்பது ஆண்டுகளுக்குக் கிரீஸில் முக்கியமான மனிதனும் ஸான்திப்பஸ்ஸின் குமாரனுமாகிய பெரிக்கிளீஸ்ஸின் தலைமையின் கீழும் யாவருக்கும் மேலான மக்கள் தம்முடைய இல்லத்திலேயே அதற்கு மேலும் நிரம்பிய விதத்தில் பெருமக்களாகக் காணப்பட்டனர். பெரிக்கிளீஸின் தாயானவர் சிக்கியானின் கொடுங்கோலரின் குடும்பத்தைச் சேர்ந்தவர். அவருடைய நாமமும் உலகப் பிரசித்தி பெற்ற விதத்தில் தன் கணவனைத் தேடியவரும், சிக்கியானின் மகளுமாகிய அகரிஸ்டா என்னும் நாமம் பெற்றார். அவர் சட்ட மீன்ற கிளீஸ்தீனஸ்ஸின் சகோதரனின் மகளும், பிஸிஸ்ட்ரேட்டர்களின் சகாவென்று கருதப்பட்டு நாடு கடத்தப்பட்ட மேகாக்கிளீஸின் (Megacles) தங்கையுமாவார். இந்த இளமை பொருந்திய அரசியல் வல்லுநர் முதலில் இராணுவப் பயிற்சி பெற்றார். ஆனல் பின்பு இரு பிரசித்தி பெற்ற குருக்களின் காலடியில் பயின்றார். இவ்விருவருக்கும் பெரிக்கிளீஸ் மிகவும் கடமைப் பட்டுள்ளார். இதில் ஒருவர் பெரிக்கிளீஸைப் போலவே அத்தீனிய நாட்டைச் சேர்ந்த ஓவ (Oa) நகரத்து டேமன் ஆவார். இவர் அத்தினியர்களில் மிகவும் அறிவாற்றலுள்ளவர்; அதுவுமன்றி சங்கீதக் கொள்கைத் துறையில் இணையற்ற நிபுணரும் ஆவார். மற்றவர் ஏனைய நாட்டைச் சேர்ந்தவரும், தத்துவ ஞானியுமாகிய க்ளாஸோமீனியைச் (Clazomenae) சேர்ந்த அனெக்ஸகோரஸ்

(Anaxagoras) ஆவார். எவர் ஒருவராலும் மாற்றக்கூடாத மனநிலை யானது பஞ்சப் பொருள் அண்ட சராசரங்களையும் (material universe) யந்திரம்போல் இயக்கி வைக்கின்றது என்ற கொள்கையை இவர் உண்டு பண்ணினர். இந்தக் கொள்கையானது பெரிக்கிளீஸைத் தாம் நடத்தப் போகும் மூட நம்பிக்கையுடைய மக்களிலிருந்து தம்மைப் பிரித்துக்கொள்ள உதவியது. இவ்விரண்டு பேராசிரியர்களும் பெரிக்கிளீஸ் தமது ஒட்டில்லா அறிவுத்திறத்துக்குக் intellectual aloofness) கடன்பட்டிருந்தார். ஆனல் தமது அரசியல் எண்ணங்களுக்கோ அல்லது தனது வெற்றிக்கு அதி முக்கியமான பேச்சுத்திறமைக்கோ இவர் இந்த இருபேராசிரியர்களுக்கும் சிறிதேனும் கடமைப்பட்டில்லை. கட்டுப்பாடற்ற, மகிழ்ச்சிதருகின்ற இன்பத்தோழராகிய கைமானுக்கும் இவருக்கும் அதிக பேதமுண்டு. பெரிக்கிளீஸ் வெளியில் நடப்பதைப் பார்ப்பது மிகவும் அரிது. அவர் தமது வீட்டை மிகவும் சிக்கன முறையில்தான் நடத்துவார். மேலும் கும்மாளம் போடும் கூட்டங்களையும் அவர் வெறுத்தார். கடைசியில் தம்முடைய அடக்க ஒடுக்கமான நடத்தையின் மதிப்பை நன்ருகப் பேணினர். க்ரெஸ்ஸிலாஸ் ஸால் (Cresilas) இவருடைய உருவப்படம் செதுக்கப்பட்டது. இப்படமானது உருண்டையான ஒரு பீடத்தின் மேல் வைக்கப்பட்டுள்ளது. அதே நேரத்தில் நம்மிடம் மற்ருெரு உருவப்பட ஓவியமும் உள்ளது. இது 'ஒலிம்பிய மலையைப் போன்று' உயர்ந்த அரசியல் வல்லுநரைக் காட்டாமல், அனெக்ஸகோரஸ்ஸின் நண்பனின் காம மற்றதும் சிந்தனையில் முழ்கிக்கிடக்கின்றதுமான முகத்தைக் காட்டுகின்றது.

ஆதென்ஸ்ஸில் மிகவும் பழைமையை விரும்பும் நிறுவனம் ஏரியோபேகஸ் அவையாகும். ஏனென்ருல் இது அரசிலுள்ள இரு செல்வச் செருக்கு மிகுந்த வகுப்புகளிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்ட ஆர்கன்களால் நிரப்பப்பட்டுள்ள நிறுவனமாகும். இந்த நிறுவனத்திற்கும் மக்களாட்சி வளர்ச்சிக்கும் எட்டாப் பொருத்தமாகும். இது சீர்திருத்தப்படவேண்டும், இல்லையேல் சீர்குலைக்கப்படவேண்டும் என்பது ஒரு தகர்க்கமுடியாத எண்ணமாகும். தனித்தனி ஏரியோபேகஸ் உறுப்பினர்களைக் கைக்கூலி வாங்கினவர் என்றும் மக்களை ஏமாற்றும் தொழிலில் ஈடுபட்டிருந்தவர் என்றும் குற்றம் சாட்டி எபியெல்டீஸ் பாதையை உண்டுபண்ணி வைத்திருந்தார். பின்பு கைமான் மெஸ்ஸீனியாவில் இருக்கும் வாய்ப்பைக் கைவிட்டுவிடாமல் பல சட்டங்களை இயற்றி அரசியல் சார்பான முக்கிய அதிகாரங்களை இந்தப் பழைய அவையிலிருந்து நீக்கிவிட்டார். சட்டத்திற்கு விரோதமாக நடக்கும் மந்திரிமார்களையும், பணி முதல்வர்களையும் தண்டிக்கும் உரிமையையும், ஆட்சி முறையை மேற்பார்வையிடுவதும் சட்டங்கள் மக்களால் கீழ்ப்படியப்படுகின்றனவா என்று கவனிக்கும் கடமைகளும் இவ்வவையிலிருந்து எடுக்கப்பட்டு மக்களிடம் மாற்றிக்

கொடுக்கப்பட்டன. தனிக்குடிகளின் வாழ்க்கையில் தலையிட உதவிய பொதுமக்கள் ஒழுகலாறுகளைச் சீர்ப்படுத்துவதற்குரிய அதிகாரங்கள் (censorial powers) அனைத்தும் நீக்கப்பட்டன. மனிதக்கொலை சார்ந்த வழக்குகளை விசாரிக்கும் அதிகாரமும், அத்தீனுவின் புனித ஆலிவ் மரங்களைப் பேணும் உரிமையும், எலியூஸினியன் கடவுள்களின் சொத்துகளை மேற்பார்வை இடும் அதிகாரத்தையும் தவிர மற்றெல்லா உரிமைகளும் இந்த மதிப்புக்குரிய அவையிலிருந்து நீக்கப்பட்டன. ஏரியோபேகஸ்ஸிலிருந்து எடுக்கப்பட்ட கடமைகள் ஐந்நூற்றுவர் அவைக்கும், மக்கள் சபைக்கும், பொதுமக்களால் நடத்தப்பெற்ற நீதிமன்றங்களுக்கும் மாற்றப்பட்டன. பொதுநலத்தைப் பாதிக்கும் குற்றங்களைப் பொறுத்த எல்லா அரசியல் குற்றச்சாட்டுகளும் (impeachments) இதற்குப்பின் அவைக்கும் அல்லது சபைக்கும் மாற்றப்பட்டன. இதற்குப்பின் மக்கள் தங்களுடைய நீதிமன்றங்களிலேயே நிர்வாகத்தைப்பற்றிய கணக்குகள் சரிவரக்கொடுக்காத பதவியாளர்களை விசாரித்து வந்தார்கள்.

ஆதென்ஸ்ஸில் இந்த அடிப்படையான மாறுதல் உண்டாக்கிய கிளர்ச்சியைக் காட்ட நமக்குக் குறிப்பிடத்தக்க சின்னம் ஒன்றுள்ளது அதுவே சில ஆண்டுகளுக்குப்பின் நடத்தப்பட்ட ஈஸ்கைலஸ் (Aeschylus) என்பவரின் நாடகமாகும். தனது தாயாரைக் கொன்றதற்காக ஓரிஸ்டெஸ் (Orestes) ஏரிஸ் (Ares) மலையில் நியாயம் விசாரிக்கப்படுவதையும், ஏரியோபேகஸ் நீதிமன்றம் ஏற்படுத்தப்படுவதையும் ஈயூமினிடீஸ் (Eumenides) என்ற இந்த நாடகம் விரித்துரைக்கின்றது. இந்த நாடகத்தின் முக்கியத்துவம் அநேக தடவைகளில் தவருகப் பொருள் கொள்ளப்பட்டுள்ளது. இது நிகழ்ச்சி முடிந்தபிறகு செய்த கண்டனமன்று; அதேநேரத்தில் இது செய்து முடிக்கப்பட்டதை அழித்துப் பழைய நிலைக்குத் திரும்பவேண்டும் என்ற கூக்குரலுமன்று. ஆனுல் அதற்கு நேர் விரோதமாக, தமது கவிதை சார்ந்த உட்கூறு (poetical motive) அண்மைக்காலத்திய நிகழ்ச்சிகளைப் பற்றிய கருத்துகளைத் தோற்றுவிக்கக்கூடிய அளவில் ஈஸ்கைலஸ் இந்தச் சீர்திருத்தத்தை ஏற்றுக் கொண்டிருக்கிருர். ஏரியோபேகஸ் முதலில் ஒரு நீதிமன்றமாகவேயன்றி அவைக்களமாக அமைக்கப்படவில்லை என்றும், இதன் உண்மையான நோக்கம் ஓரிஸ்டெஸ் போன்ற கொலையாளிகள் மேல் தண்டனை விதிப்பதுதான் என்றும் தம் கருத்தைத் தெரிவித்துள்ளார். ஏரிஸ் (Ares) மலையைச் சுற்றி ஊசலாடிக்கொண்டிருந்த இருட்டானதும் பயபக்தியை யுண்டுபண்ணுகின்றதுமான தொடர்புகளினுல் அச்சம் கொண்டவர்கள் ஏரியோபேகஸ்ஸைத் தாக்கியதை சமயத்துறை அவமதிப்பு என்று கருதினுர்கள். அன்னுரை அமைதியடையச் செய்யவே ஈயூமினிடீஸ் நாடகம் எழுதப்பட்டது.

ஏரியோபேகஸ் சின்னுபின்னமாக்கப்பட்டது ஆர்கன்களின் மதிப்பிற்கு மறைமுகமான (indirect) ஒரு பெரிய இடர் ஆகும். ஏனென்றுல் இவர்கள் தம் பதவியின் பயனுக ஏரியோபேகைட்ஸ் என்று அழைக்கப்படும் ஏரியோபேகஸ்ஸின் அங்கங்கள் ஆயினர். அதே நேரத்தில் மக்களாட்சி வளர்ச்சிப் பாதையில் ஆர்கன் பதவியை ஊதியம் பெறும் தொழிலாக மாற்றியமைத்தது மற்ருெரு படியாகும். இவ்விதமாக அமைத்தவுடன், இந்தப் பதவியைச் செல்வாக்கு மிகுந்த இரு வகுப்பினர்களுக்கு மாத்திரம் திறந்து வைக்கவேண்டிய அவசியம் இல்லாமல் போயிற்று. உடனடியாக மூன்ருவது வகுப்பினர்களாகிய ஸ்யூஜிட்டே (Zeugitae) என்பவர்கள் இப் பதவிக்குத் தகுதியுடையவர்களாக்கப்பட்டனர். ஆண்டு தோறும் தீட்டிஸ் (Thetes) வகுப்பினர்களுக்கும் மூன்ருவது வகுப்பினர்களுக்குமுள்ள வித்தியாசங்கள் மங்கலாகிக் கொண்டே வந்ததால், தீட்டிஸ் வகுப்பினர்களும் இப் பதவிக்குச் சில காலத்திற்கெல்லாம் அனுமதிக்கப்பட்டனர்.

சிட்டுக்குலுக்குத்தேர்வும் (lot) ஊதியமும் மக்களாட்சியின் வளர்ச்சிக்கு இரு சூழ்ச்சிப் பொறிகளாகும். சிட்டுக்குலுக்குத் தேர்வானது முன்னரே புகுத்தப்பட்ட போதிலும், அது அதன் தூய்மையான உருவத்தில் புகுத்தப்படவில்லை. ஆர்கன்களும், வேறு சில சிறிய பதவியாளர்களும், அவைக்களத்து அங்கத்தினர்களும் தேர்ந்தெடுக்கப்பட்ட பல வேட்பாளர் கூட்டத்திலிருந்து சிட்டுக்குலுக்குத் தேர்வு மூலம் தேர்ந்தெடுக்கப்பட்டனர். ஆனுல் மேற்கூறிய வேட்பாளர் யாவரும் வேண்டுமென்று செய்த தேர்தல் மூலம் தேர்ந்தெடுக்கப்பட்டனர். இந்தக் கலப்பு முறையானது இப்போது ஒழிக்கப்பட்டது. முதலில் நடக்கும் தேர்வும் நீக்கப்பட்டது. ஐந்நூற்றுவர் அவை அங்கத்தினரும், ஆர்கன்களும் எல்லாத் தகுதிகளையும்பெற்ற குடிகளிலிருந்து சிட்டுக் குலுக்குத் தேர்வு மூலம் தேர்ந்தெடுக்கப்பெற்றனர். இவ் வித முறையினுல் எல்லாக் குடிகளும் அரசியல் பதவியை ஏற்றுக் கொள்ளவும், பொதுவிவகாரங்களில் சரிசமமாக ஈடுபடவும் இயன்றது.

இம் முறையானது எல்லாப் பதவிகளுக்கும் ஊதியம் அளிக்காவிட்டால் இயங்காது என்பது தெளிவு. ஏனென்றுல் ஏழைக் குடிகள் தமது நேரம் யாவற்றையும் அரசின் தொண்டிற்கென்றே தத்தம் செய்ய முடியாது என்ற காரணத்தாலேதான். எனவே ஆர்கன் பதவிக்கு மாத்திரமின்றி, அவைக்கள உறுப்பினர்களுக்கும் ஊதியம் கொடுக்கும் முறை புகுத்தப்பட்டது. பெரிக்கிளீஸ்ஸின் மக்களாட்சியைச் சார்ந்த சீர்திருத்தங்களில் அரசின் பதவிகளுக்கு ஊதியம் வழங்குவது கண்ணையும் கருத்தையும் கவரும் பகுதியாகும்.

இத் தோற்றமானது பொது மக்களுக்கிடையே இவருக்குப் பெரு மதிப்பையும் புகழையும் ஈன்றது. முக்கியமாகப் பொது மக்களின் நீதிமன்றங்களுக்கும் ஊதியம் கொடுக்க இவர் முன்வந்தது இவருக்குத் தீராப்புகழை வருவித்தது. ஏரியோபேகஸ்ஸைத் தாக்கிக் கொண்டிருக்கும்போது, பெரிக்கிளீஸ் நீதிபதிகள் நாளொன்றிற்கு ஒரு ஓபோல் ஊதியம் பெறவேண்டும் என்னும் சட்டத்தைப் பிறப்பித்தார்.[1] இந்தச் சட்ட நடவடிக்கையானது உடனடியாக ஏரியோபேகஸ்ஸைத் தாக்குவதற்குப் பொதுமக்களின் உதவி தேவை என்ற அரசியல் நோக்கத்தை நிறைவேற்ற உதவியதென்ருலும், இந்த நடவடிக்கை யானது கடைசியில் உறுதியாக நடந்தே தீரவேண்டிய சட்டமாகும். நீதிமன்றங்களைச் சார்ந்த வேலைகள் நாளுக்கு நாள் அதிகரித்துக் கொண்டேயிருந்ததால், நீதிமன்றங்களில் நாள்தோறும் ஊதிய மின்றிப் பணியாற்ற நீதிபதிகளைத் தேடிப்பிடிப்பது மிகவும் அரிதா யிருந்திருக்கும். ஆனல் இந்த எளிதான முறையில் ஊதியம் பெறுவது ஏழைகளையும் காலத்தை வீணுக்குகின்றவர்களையும் கவர்ந்தது. இவர்கள் நீதிமன்றத்தில் உட்கார்ந்து புதுமையான வழக்குகளைத் தம் காதால் கேட்பதையும், வழக்குரைஞர்களால் புகழப்படுவதால் தம் தற்பெருமை உயர்வதையும் விரும்பினர்கள். தான் நீதிபதியாக வேண்டும் என விரும்பிய ஒவ்வொரு குடிமகனும் அங்குள்ள பட்டிய லில் தன் பெயரைச் சேர்க்கலாம். இந்தப் பட்டியலிலிருந்து ஒவ் வொரு கோத்திரத்திற்கு இவ்வளவு நீதிபதிகள் என்று சீட்டுக்குலுக் குத் தேர்வு மூலம் நீதிபதிகள் தேர்ந்தெடுக்கப்பட்டனர். நீதிமன்றங் களில் இந்தப் பட்டியலில் உள்ளவர்களே நீதிபதிகளாக அமர்த்தப் பட்டனர்.

குடிமையின் பயனுகக் கிடைத்துள்ள புதிய உரிமைகளையும் இலா பங்களையும் அடையக் குறைந்த எண்ணிக்கையில் குடிமக்கள் இருக்க வேண்டும் என்பது இப்பொழுது ஒவ்வோர் அத்தீனியனுடைய சுய நலனுயிற்று. எனவே, கிட்டத்தட்டப் பத்து ஆண்டுகளுக்குப்பின் உரிமைபெற்ற குடிகளின் பட்டியல் திருத்தப்பட்டது. முறைப்படி திருமணம் செய்யாத அத்தீனியக் குடிகள் அல்லாத தாய் தகப்பன்மார் களுக்குப் பிறந்த பிள்ளைகள் குடிமக்களாகக்கூடாது என்று ஒரு சட்டத்தைப் பிறப்பித்தனர். இந்தச் சட்டமானது வெளிநாட்டவர் களைத் தாய்மார்களாகக் கொண்ட தெமிஸ்டாக்கிளீஸையும், சட்டம் வழங்கிய கிளைஸ்த்தீனீயஸ்ஸையும் குடிமக்களின் பட்டியலிலிருந்து தள்ளிவைத்திருக்கும்.

ஹீலியா கோர்ட்டுகளிலுள்ள நீதிபதிகள் அரசியல் சம்பந்தப் பட்ட வழக்குகளில் தமது சொந்த அரசியல் கருத்துகளாலும், மற்றும்

[1] இத் தொகையானது ஒரு ஓபோலா இரண்டு ஓபோல்களா என்று சந்தேகம் இருக்கின்றது. அது ஒன்ருகத்தான் இருந்திருக்கக்கூடும் என்பது பலரின் எண்ணமாகும்

அங்குத் தமது மனவெழுச்சியை மாற்றக்கூடிய வகையில் தம் வழக்கைத் தாமே வழக்காடுபவர்களின் சொல்வன்மையாலும் இயக்கப்பெற்றனர். ஆனபடியால் இவ் வழக்குகளில் சட்டம் சார்ந்த படிவங்கள் முற்றிலுமாக மறக்கப் பெற்றும், உண்மை நிகழ்ச்சிகள் தவருக மதிப்பிடப்பட்டும் வந்தன. தலைமையுரிமை யுடைய மக்களின் கோபமானது வெளிப்படையாகக் காணப்பட வேண்டும் என்பது மக்கள் ஆட்சியின் ஒரு முக்கிய பாகமாகும். ஆனால் மன்னர்களின் கோபத்தைப்போல் சில சமயங்களில் இவர்களுடைய கோபமானது நேர்மையற்றதா யிருந்தால் அதனை ஒருவரும் பொருட்படுத்தக் கூடாது. ஆனால் தனியார்களின் வழக்குகளில் எண்ணத்தினாலன்றி அறியாமையால் நீதி வழங்கப்படுவது தடைப்படுவது மிகவும் துயரார்ந்த செயலாகும். மக்களின் நீதிமன்றங்களின் நீதிபதிகளின் முடிவுகளை வசப்படுத்த வழக்காடுபவர்கள் ஆற்றிய சொற்பொழிவுகளே தக்க சான்றுகள். ஆதென்ஸ் நகரத்தில் வழக்குத் தொடுப்பவர்கள் தமது வழக்கைத் தாமே வழக்காட வேண்டும். அங்கே நீதிமன்ற வழக்கறிஞர்கள் என்ற நிறுவனம் இல்லை. ஆனால் ஒரு மனிதன் தனக்கென்று எழுதிக் கொடுத்த சொற்பொழிவை மனப்பாடம் பண்ணி, அதனை நீதிமன்றத்தில் ஒப்புவிக்கலாம். ஆகையால் இந் நகரத்தில் சொற்பொழிவுகளை எழுதும் திறம்பெற்ற ஊதியப் பணியாளர்கள் தோன்றினர். இவர்களுடைய சொற்பொழிவுகளில் அநேகம் பேணி வைக்கப் பட்டுள்ளன. வழக்காடுபவர்கள் தீர்ப்புத் தமக்கு அனுகூலமாக யாவன செய்தனர் என்பதை, பேணிவைக்கப் பட்டுள்ள சொற்பொழிவுகள் நமக்குத் தெளிவாக எடுத்துக் காட்டுகின்றன. இவர்கள் தமது வழக்குகளுக்குப் பொருத்தமில்லாத மிகப் பல தர்க்கங்களை உபயோகித்தனர். எடுத்துக்காட்டாக, ஒரு வாதியானவன் தான் இராச்சியத்திற்குப் பலவிதங்களில் பணியாற்றி வந்திருப்பதாகவும் பிரதிவாதியானவன் ஒரு தொண்டுமே புரியாதவன் என்றும் கூறுவான். எனவே சட்டத்தை வழங்கவேண்டும் என்பது மாத்திரம் அல்ல. இரு தரப்பாரும் சட்டத்தைத் தம் கருத்திற்கேற்ப விளக்கிப் பொருள் கூறுவதை, சட்டம் என்ன என்பதை அறியாத நீதிபதிகள் கூர்ந்து கேட்பர். ஆகையால் அவர்கள் எவ்வளவு நடுவு நிலைமையுடன் இருக்க வேண்டும் என்று அவாக் கொண்டிருந்த போதும் அவர்களுடைய தீர்ப்பானது சொல்வன்மை வாய்ந்த வழக்காடுபவரின் பேச்சுத் திறமையாலும், வழக்கின் போக்கிற்கு வேண்டாத ஆராய்ச்சிகளாலும் பாதிக்கப்பட்டன. மேலும் இவர்களுடைய தீர்ப்பிற்கு மேல் முறையீடு இல்லை.

பொதுவான பொறுப்புகள் ஏழைகளின்மேல் அல்லாமல் செல்வர்களின் மேல் சுமத்தப்பட்டு வந்தது அத்தீனிய மக்களாட்சியில் மறக்க முடியாத ஒரு சிறப்புக் கூருகும். வருவாயின் மேலோ அல்லது

மூலதனத்தின் மேலோ அக் காலத்தில் வரிகள் விதிக்கப் படவில்லை. ஆனால் பழைய சமூகத்தின் குணவியல்பான பொறுப்புகள் சில இருந்தன. இவை ஒரு மனிதனின் வாழ்க்கைக் காலத்தில் ஒரு முறையோ அல்லது இரு முறையோ தான் ஒருவனைப் பாதிக்கும். மூன்று அடுக்குகள் கொண்ட ட்ரைரீம்கள் (triremes) என்றழைக்கப் பட்ட போர்க் கப்பல்களுக்கு தளபதிகளாக ட்ரையர் ஆர்க்கர்கள் (trierarchs) என்பவர்கள் செல்வர்களின் வகுப்புகளிலிருந்தே பொறுக்கி எடுக்கப்படுவதை நாம் முன்னரே கவனித்துள்ளோம். இந்தத் தளபதிகள், மேற்கூறிய போர்க் கப்பல்களுக்கு வேண்டிய பொருள்களையும் மாலுமிகளையும் கொடுப்பதுமின்றித் தாமே அவை களைக் கடல்களில் கொண்டு செல்லவும் அவைகளுக்குப் பொறுப்பாளி களுமாக்கப் பட்டனர். இப் பணியைச் சரிவரச் செய்ய ஒருவன் அதிக பணத்தையும் நேரத்தையும் தானம் செய்வதுடன், அதிக சங் கடங்களையும் அனுபவிக்க வேண்டும். இதைத் தவிர வேறு பல பொறுப்புகளும் இருந்தன. எடுத்துக்காட்டாக, ஒருநகரமானது சமயச் சார்பாக ஒவ்வோர் ஆண்டும் டீலாஸில் நடைபெறும் அப்போ லோவின் விழாவிற்கு, அல்லது ஏதாகினும் ஓர் அகில கிரேக்க விழா விற்கு, அல்லது டெல்பிக் தெய்வ மொழி கூறும் இடத்திற்குப் புனித தூதுக் குழுக்களை அனுப்பும்போது பொதுவான அரசியல் கருவூலத்தி லிருந்து செல்வமானது கொடுக்கப்படும். ஆனால் இந்தப் பொதுச் செல்வத்தை அரசியல் கருவூலத்திற்குத் திருப்பிக் கொடுக்கவும், இந்தத் தூதுக் குழுக்களைக் கூட்டிச் செல்லவும், அவைகளைத் தறுவாய்க் கேற்றபடி சிறப்பிக்கவும் செல்வராகிய ஒரு குடியுரிமையாளர் தேர்ந் தெடுக்கப்படுவார். ஆனாலும் மேற்படி கூறிய லிட்டர்கிஸ் (liturgies) என்று கூறப்படும் பொதுப் பொறுப்புகள் யாவும், டயோனிஸியஸ் விழாக்களில் பல்லவிகள் பாடும் பாடகர்களின் கூட்டங்களைத் திரட்டிக் கொடுக்கும் பணியைவிடச் சிறந்தவையும், அத்தீனிய வாழ்க்கையின் தனிப்பட்ட இயல்பையும் கொண்டுள்ளமையுமல்ல. ஒவ்வோர் ஆண் டும் தம்மில் அத்தீனியக் கோத்திரம் ஒவ்வொன்றும் மிகவும் பெரிய செல்வரைப் பாடகர் கூட்டத்திற்குத் தலைமைதாங்கும் கோரிகோஸ் (choregos) ஆகத் தேர்ந்தெடுப்பர். அவர் அந்தப் பாடகர் கூட்டத் திற்கு வேண்டிய துணிமணிகளையும், அழகு சாதனங்களையும், உணவை யும் கொடுப்பதுமன்றி, திறமை வாய்ந்த ஒருவரை அவர்கள் நடிக்க இருக்கும் நாடகங்களில் வரும் நடனம், பாட்டுகள் முதலியனவற்றை அக் கூட்டத்திற்குப் பயிற்றுவிக்க நியமிப்பதும் அவருடைய முக்கியப் பணிகளாகும். இந்தக் கோரிகோஸ்களுக்குள் ஏற்படும் போட்டி யானது ஒவ்வொருவரையும் எண்ணுக்கடங்காத செல்வத்தைச் செல விடச் செய்தது. துன்பியல் அல்லது இன்பியல் போட்டியில் வெற்றி பெற்ற பாட்டு அணியின் தலைவன் முடிசூடப்பட்டு வெண்கல முக் காலி ஒன்று பெறுவது வழக்கம். வெற்றி பெற்ற இவர் ஒரு தூணில்

தமது பெயரையும் தமது கோத்திரத்தின் பெயரையும் பொறித்து அல்லது சில வேளைகளில் ஒரு சிறிய அளவில் கட்டப்பட்ட கோயிலின் மேல் இந்த முக்காலியை வைப்பதுண்டு. அக்ராப்போலீஸ் என்றழைக்கப்படும் சேம அரணுக்குக் கிழக்கில் நாடக அரங்கத்திற்குச் செல்லும் நீண்ட தெருவில் காணப்படும் இந்த முக்காலிகளைக் கொண்ட சின்னங்கள் மக்களின் பொதுநல ஆர்வத்தைக் காட்டுகின்றன. நாடக அரங்கத்தின் மேலும், டையோனிஸியஸ்ஸின் வழிபாட்டிலும் அரசு எவ்வளவு ஆர்வங் கொண்டிருந்தது என்பதற்கு முக்காலிகளின் தெருவைவிட வேறு சான்றுகளே தேவையில்லை. கடவுட் பற்றே ஞானத்தின் அடிப்படை என்பது இவ்விதமாக வேறு எங்கும் விளங்குகிறதில்லை. சமயத்திற்காக அரசு செய்த அறக் கொடையானது மிகுந்த அறிவு படைத்த மேதைகளுக்காகக் கொடுக்கப்பட்ட அறக் கொடையாக மாறிற்று. நடனக் கலைஞர்களை ஊட்டிவளர்க்கச் செல்வர்கள் செலவிட்ட நேரமும் பணமும் துன்பியல், இன்பியல் நாடகங்களை இயற்றும் பெரும் தேர்ச்சியாளர்களுக்குப் பணி செய்து கிடந்தன. இவ் வகையில் அச் செல்வர்கள் அகில உலகினுக்கே தொண்டாற்றினர்கள் என்று சொல்வது மிகையாகாது.

## 2. பெலோப்போனீஸியர்களுடன் ஆதென்ஸின் போர்

கைமான் நாடு கடத்தப்பட்டது ஆதென்ஸ் நகரத்து அயல்நாட்டு விவகாரக் கொள்கையின் மாறுதலுக்கு ஓர் அறிகுறியாக இருந்தது. ஆதென்ஸ் லாஸிடீமோனியர்களுடன் கொண்டிருந்த நேச உடன் படிக்கையைக் கைவிட்டுவிட்டு, அவர்களுடைய பகைவர்களான ஆர்காஸுடனும் தெசலியுடனும் புதிய நேச உடன்படிக்கை செய்து கொண்டது. அகமெம்னனின் கொலையையும் ஓரிஸ்டெஸ்ஸின் (Orestes) பழி வாங்குதலையும்பற்றி ஈஸ்கைலஸ் கிட்டத்தட்ட இச் சமயத்தில் இயற்றிய முந் நாடகத் தொகுதி (trilogy) அத்தீனியர்களுக்கும் ஆர்காஸ் மக்களுக்கும் இடையே ஏற்பட்ட புதிய தோழமையைக் குறிப்பிட்டுக் காட்டுகின்றது. இந்த நேச உடன்படிக்கையை நாடகாசிரியர் குறிப்பிட்டுக் காட்டியுள்ளார். அவர் அகமெம்னனை அணிமையில் நாசமாக்கப்பட்ட மைஸீனியின் தலைவனுகக் காட்டாமல் ஆர்க்காஸின் தலைவனுகக் காட்டுவது தமது புதிய நட்பு நாட்டிற்கு இவர் அளித்த இன்புகழ்ச்சியுரையாகும். இதுவரை ஆதென்ஸ்ஸின் முக்கிய நலன்கள் பாதிக்கப்படாமலிருக்க வேண்டி, ஆதென்ஸ் ஸ்பார்ட்டாவுடன் நேருக்கு நேராக மோதவில்லை; ஆனல் இந்தச் சுயநலன்கள், அதனை ஸ்பார்ட்டாவின் இரு நேச நாடுகளுடன் வலுத்த போட்டியிடச் செய்தது. ஆதென்ஸின் கடலைச் சார்ந்த பேரரசும், அதன் கடல் வலிமையின் வளர்ச்சியும் அதன் வியா

பாரத்தை அதிவேகமாக விரிவாக்கினதுமன்றி, கிரேக்க உலகத்தின் எல்லாப் பாகங்களிலும் வியாபாரத்தில் முன்னேறவேண்டும் என்னும் பேரவாவையும் உண்டுபண்ணின. கொரிந்து, ஈகைனு என்ற இரு பெரிய வியாபார நகரங்களுடன் ஆதென்ஸ் போட்டியிட்டு வந்தது. இப் போட்டியில் ஆதென்ஸ் அவ்விரு நகரங்களையும் விஞ்சும்போல் தோன்றியது. இதற்கு முன்பே ஈகைனுவுடன் ஒரு போராட்டம் நடந்தது தெரிந்ததே. இப்போது ஆதென்ஸ் வலிமையிலும் செல்வத்திலும் அதிக வளர்ச்சி அடைந்ததால், இவ்விரண்டு நாடுகளுக்கிடையே மற்றொரு போராட்டம் ஏற்படுவது நிச்சயமாயிற்று. மேற்கில் அத்தீனிய வியாபாரிகளுக்கும் கொரிந்தியர்களுக்குமிடையே போட்டி மும்முரமாக இருந்தது. இப்படியிருக்கும்போதுதான் ஓர் அத்தீனியச் சேனைத்தலைவர் ஓஸாலியன் லோக்கிரியர்களிடமிருந்து (Ozolian Locrians) நாபாக்ட்டஸ்ஸையும் (Naupactus) அதன் கப்பல் தளவாடத்தையும் தம் கைவசப்படுத்தினர். இந்தக் கப்பல் தளவாடமானது கொரிந்திய வளைகுடாவின் நுழை வாயிலைத் தம் கட்டுப்பாட்டிற்குள் கொண்டு சேர்த்தது. இச் செயலானது கொரிந்தியர்களுக்கு ஒருவித பயத்தை ஏற்படுத்தியது. ஏனென்றால், அதி தூரத்திலுள்ள மேற்குப் பிரதேசங்களுக்குக் கொரிந்தியர் அனுப்பும் வாணிகச் சரக்குகள் நிரம்பிய பெரிய கப்பல்களை இப்பொழுது ஆதென்ஸ் வழிமறிச்செய்யவும், தொந்தரவு செய்யவும் கூடிய நிலையில் இருந்தது. சில மாதங்களுக்கெல்லாம் யுத்தம் மூண்டுவிடக்கூடிய நிலையை அடைந்தது. அண்மையில் அதற்கான தறுவாயும் ஏற்பட்டது.

கொரிந்துவிடம் ஏற்பட்ட ஒரு எல்லைப்புற வழக்கினால், மேகாரியர்கள் பெலோப்போனீஸியக் கூட்டிணைப்பை விட்டுவிட்டு அத்தீனியப் பாதுகாப்பிற்குள் வந்தனர். மேகாராவானது தன்னுடன் இணைந்துகொண்டதை ஆதென்ஸ் முற்றிலும் வரவேற்றது. மேகாராவைத் தம் ஆதிக்கத்தின்கீழ் வைப்பதால் பெலோப்போனீஸியஸ்ஸிற்கு எதிராக ஆதென்ஸ் ஒரு வலுவான எல்லையைக் கொண்டது. ஆதென்ஸ் இப்பொழுது மேற்கில் கொரிந்து வளைகுடாவின் கரையில் உள்ள பாகிக்கும் (Pagae) கிழக்கில் ஸாரோனிக் (Saronic) விரிகுடாவில் உள்ள நிசியாவிற்கும் (Nisaea) இடையிலுள்ள நில இணைப்பை (isthmus) முழுவதுமாகத் தன் ஆதிக்கத்திற்குள் கொண்டு சேர்த்தது. நேரத்தை வீணாக்காமல் மேகாராவின் குன்றிலிருந்து ஸாலமிஸ்ஸை (Salamis) எதிர்நோக்கியுள்ள நிசியா துறைமுகம் வரைக்கும் இரு வரிசைகள் கொண்ட அரணைக் கட்டி, இந்த 'நீண்ட அரண்களை' (Long Walls) தன்னுடைய சொந்தப் படைகளைக் கொண்டு காவல் செய்ய முன்வந்தது. இவ்விதமாகக் கிழக்குக் கரையோரத்திலுள்ள பாதையை ஆதென்ஸ் தன் கட்டுப்பாட்டின்கீழ் கொண்டு சேர்த்ததுமன்றி, நிலத்தின்மூலம் வரும் படையெடுப்பைத்

தடுக்க அட்டிக்கா ஒரு வலிமையான கொத்தளத்தைக் கொண்டிருந்தது.

மேகாராவை ஆதென்ஸ் தம் வசப்படுத்தியது கொரிந்து பட்டினத்திற்கு விரோதமாக ஒரு புதிய குற்றமாகும். பெலோப் போனீஸியக் கூட்டிணைப்பின் தலையாகிய ஸ்பார்ட்டாவிற்கும் இது ஒரு பெரிய குற்றமாகும். சீக்கிரத்திலேயே போர் மூண்டது. ஸ்பார்ட்டா முதலில் ஒரு முயற்சிகரமான பகுதியை ஏற்றுக் கொள்ளவில்லை. இப் போரில் நடந்த நிகழ்ச்சிகளைப் பற்றி நாம் சரியாகத் தெரியப் படுத்தப்படாமலிருக்கின்றோம். ஹாலீஸ்ஸை (Halieis) முதலில் ஒரு சிறிய அத்தீனியக் கப்பற்படையானது தாக்கி அங்குள்ள கொரிந்தியப் படையின் மேலும் எப்பிடாரியப் (Epidaurian) படையின் மேலும் சின்னஞ்சிறு அளவில் அனுகூலத்தைப் பெற்றது. அதன்பின் ஈகைனு விற்கும் ஆர்காஸின் கடற்கரைக்கு மிடையேயுள்ள சிறிய தீவாகிய கெக்ரைபேலியாவில் (Cecryphalea) பெலோப்போனீஸியக் கப்பற் படைக்கும் அத்தீனியப் படைக்கும் ஒரு கடற் சண்டை ஏற்பட்டது. இதில் அத்தீனியர்கள் வெற்றி பெற்றனர். இக் கட்டத்தில் ஈகினீட் டர்கள் (Aeginetans) இந்தப் போரில் இறங்கினர். இந்தப் போரில் கொரிந்து நகரம் பயங்கரமான தோல்வியை அடைந்தால், தமக்குப் பேராபத்து ஏற்படும் என்று இவர்கள் அறிந்தனர். ஸரோனிக் கடல் தீரத்தில் அத்தீனியர்கள் மேலாட்சியாளராகத் தோன்றுவார்கள் என்றும் அறிந்தனர். ஈகைனுவிற்கு அருகில் ஒரு கப்பல் சண்டை நிகழ்ந்தது. இதில் ஈகைனுவின் நேச நாடுகளும், ஆதென்ஸ்ஸின் நேச நாடுகளும் ஈடுபட்டன. எழுபது கப்பல்களை எடுத்துக் கொண்டு அத்தீனியர்கள் இத் தீவைத்தாக்கி நகரத்தை முற்றுகை யிட்டனர். இதைக் கண்டவுடன் ஈகினீட்டர்களுக்கு உதவியளிக்கும் பொருட்டுப் பெலோப்போனீஸியர்கள் ஹாப்லிட்டீஸ்களைக்கொண்ட ஒரு சேனையை அனுப்பி வைத்தார்கள். இச் சமயத்தில் கொரிந்தியர் கள், ஒரே நேரத்தில் மேகாராவைப் பாதுகாக்கவும் ஈகைனுவை முற்றுகையிடவும் அத்தீனியர்களால் கூடாத காரியம் என்று நினைத்து ஜெரானியாவின் (Geranea) உச்சியிருந்து மெகாரரிட் நகரை நோக்கி முன்னேறினார்கள். ஆனால் இவர்கள் அத்தீனிய ஊக்கத்தின் திறனை அறியாமல் இவ் விதமாகத் திட்டமிட்டனர். அத்தீனியப் படையில் சேரக்கூடாத வயோதிகர்களும் இளைஞர்களும் கூடி ஒரு வியப்பான சேனையை உண்டுபண்ணித் தமது சேனைத்தலைவனாகிய ஸ்ட்ராடிகோஸ் (strategos) மிரோனீடிஸ்ஸின் (Myronides) தலைமையின் கீழ் மேகாரிட்டை நோக்கி முன்னேறினார்கள். ஒரு போர் மூண்டது. இப் போரில் இரு தரப்பினரும் வெற்றி தங்களுடைய தென்றனர். ஆனால் கொரிந்தியர்கள் போர்க்களத்தை விட்டு நீங்கியதும் அத்தீனியர்கள் அங்கு ஒரு வெற்றிச் சின்னத்தை நிறுவினார்கள். தங்களுடைய சகாக்

கள் இழித்துக்கூறவே, பன்னிரண்டு நாட்கள் கழிந்த பிறகு கொரிந்தியப்படைவீரர்கள் போர்க்களத்திற்குத் திரும்பித்தாமும் ஒருவெற்றிச் சின்னத்தை நிறுவும் வேலையில் ஈடுபட்டனர். அவர்கள் இவ் வேலையில் மூழ்கியிருக்கும்போது மேகாராவிலிருந்து அத்தீனியர் வீராவேசத்துடன் முன் சென்று, அவர்களைக்கடுமையாகத்தோல்வியடைவித்தனர்.

சரோனிக் விரிகுடாவிலும் அதனைச் சார்ந்த கடல் ஓரங்களிலும் ஏற்பட்ட இந்த யுத்தமானது, கிரீஸ் நாட்டின் இதர பாகங்களில் நடக்க இருக்கும் யுத்தத்திற்கு ஒரு பீடிகையாகும். ஆனால் இந்தப் பீடிகையில் அதற்கான ஓர் ஒற்றுமை காணக் கிடக்கின்றது. பெலோப்போனீஸிய நேச நாடுகளுக்கு ஆதென்ஸ் எதிர்த்து நிற்பது உண்மையாகும்; ஆனாலும் இதுவரை இந்த யுத்தமானது சரோனிக் விரிகுடாவைச் சுற்றியுள்ள பிரதேசத்தில் தனி நலம் கொண்ட மூன்று முக்கிய நாடுகளான கொரிந்து (Corinth, எப்பிடாரஸ் (Epidaurus), ஈகைனு (Aegina) முதலியவையால் நடத்தப்பட்டு வந்தது. இந் நாடுகளைப் பெலோப்போனீஸியக் கூட்டுக் குழு ஆதரித்து வந்தது. இந் நாடுகள் பெலோப்போனீஸியக் கப்பல்களாலும், பெலோப்போனீஸிய ஹாப்லிட்டீஸ்களாலும் உதவியளிக்கப் பெற்றன; ஆயினும் அதே காலையில் இந்த யுத்தமானது முழுவதுமாக பெலோப்போனீஸிய யுத்தம் என்னும் குணவியலைப் பெறவில்லை.

வெற்றிகளைக் கொண்ட இந்த ஆண்டானது ஆதென்ஸிற்கு ஒரு தீவிர பரபரப்பும், மனத்தாங்கல் கொண்ட ஆண்டுமாயிருந்தது. அத்தீனிய வரலாற்றில் இந்த ஆண்டை வியப்பு மிகுந்த ஆண்டு என்று கூறினால் அக் கூற்று மிகையாகாது. அவர்களுடைய கப்பற்படையில் ஒரு பகுதியைக் கொண்டேதான் ஆதென்ஸ் கெக்ரைபேலியா (Cecryphalea), ஈகைனு முதலிய வெற்றிகளைப் பெற்றது. ஏனென்றால் தன் பேரரசின் வளர்ச்சிக்கும், தன் வியாபாரத்தின் பெருக்கிற்கும் எதிர்த்து நிற்கும் ஏனைய கிரேக்க அதிகாரங்களுடன் நேருக்கு நேர் மல்லுக்கு நிற்கும் தருணத்தில் ஆதென்ஸ் கிரேக்க உலகத்தின் வரம்பிற்கு அப்பால் புதியதோர் முயற்சியில் ஈடுபட்டது. இதுதான் எகிப்தின்மேல் எடுத்த படையெடுப்பாகும். இந்தப் படையெடுப்பானது ஆதென்ஸ் எடுத்த துணிகரச் செயல்களில் தலைசிறந்ததாகும்.

சைப்ரஸ் (Cyprus) தீவிற்கு அருகிலுள்ள கடல்களில் பாரசீகத்திற்கு எதிராக 200 அத்தீனியர்களுடையதும், நாடுகளின் நேசக் குழுவினர்களுடையதுமான (Confederate) தட்டையான போர்க் கப்பல்கள் (galleys) போர்த்திற நடவடிக்கைகள் எடுத்துவந்தன.

இவைகள் எகிப்து நாட்டிற்கு வரும்படி அழைக்கப்பட்டன. இவ்வழைப்பானது லிபியப் பெருமகனாகிய (Libyan potentate) ஈனாராஸ் (Inaros) என்பவரிடமிருந்து வந்தது. மேற்படியார் பாரசீக எசமானர்களுக்கு விரோதமாகக் கீழ் நீல நதித்தீரத்தில் வசிப்பவர்களைத் தூண்டி விட்டார். ஸெர்க்ஸீஸ் கொலைக்குப்பின் பாரசீக அரச மன்றத்தில் பல குழப்பங்கள் ஏற்பட்டன. ஆர்ட்டா ஸெர்க்ஸீஸ் பதவிக்கு வருவது தாமதமானது. இந்தக் கால நிலையே எகிப்தில் புரட்சி ஏற்பட்டதற்கு ஒரு காரணமாகும். ஈனாராஸ் விடுத்த அழைப்பானது மிகவும் கவர்ச்சிகரமாயிருந்தது. எகிப்தைப் பாரசீகர்களின் நுகத்திலிருந்து ஆதென்ஸ் விடுவித்து விட்டால், நீல நதியின் பள்ளத்தாக்கின் வெளிநாட்டு வியாபாரத்தை ஆதென்ஸ் அடையலாம் ; அதுவுமின்றி எகிப்துக் கரையில் ஒரு போர்க்கப்பல் தளவாடத்தையும் நிறுவலாம். ஒரே அடியில் ஆதென்ஸ் மற்றெல்லா கிரேக்க வாணிப நாடுகளைவிடத் தலைசிறந்து விளங்கலாம். இதுவே இந்த அழைப்பில் மறைந்துகிடந்த கவர்ச்சிகரமான பொருளாகும். நாம் பெயரறியாப் பல அத்தீனிய தளகர்த்தர்கள் இந்த லிபிய அரசிளங்குமாரன் கொடுத்த அழைப்பைப் பெற்று எகிப்து நோக்கி விரைந்தனர். பழைமையான காலத்தில் நடந்தது போலவே ‘ வடக்கிலுள்ள மக்கள்’ எகிப்திலுள்ள பெருமக்களை லிபியர்கள் உதறித்தள்ளும் முயற்சியில் அவர்களுக்கு உதவியளிக்க முற்பட்டனர். பழைய காலத்தில் நடந்த ரசமான நிகழ்ச்சிகளைக் கிரேக்கர்கள் மறந்திருக்கலாம். ஆனால் எப்படி கேரியாவையும் ஐயோனியாவையும் சேர்ந்த துணிகர வீரர்கள் அரியணையின்மீது ஒரு எகிப்தியனை ஏற்றினார்கள் என்பதை நினைவுபடுத்தக்கூடும். மற்றும் ஒரு வழியில் கூட இந்த எகிப்தியப் படையெடுப்பு ஒரு புதிய ஏட்டைத் திருப்பியதற்குச் சமானம். இதற்கு முன் கூட்டிணைப்பு நாடுகளின் கப்பல்கள் முழுவதும் கிரேக்கக் கடல்களில் அல்லது கிரேக்கர்களுக்குக் கொஞ்சம் சொந்தமான கடல்களில் சென்று அங்கு கிரேக்க நகரங்களையும் அல்லது கிரேக்க நாகரிகத்தில் தொடர்பு கொண்ட கேரிய, லிசிய நாடுகளில் உள்ள நகரங்களையும் விடுதலை செய்து காப்பாற்றும் தொழிலில் ஈடுபட்டுவந்தன. கிரேக்கர்களும் பினீஷியர்களும் பக்கத்துப் பக்கத்தில் வசித்துவந்த சைப்ரஸ் தீவின் கடலோரங்கள் கிரேக்க வீரர்களைக் கொண்ட கப்பல்களை விடுதலைப் போராட்டத்தில் இறங்கும்படி அழைத்தன. ஆனால் கிரேக்கக் கப்பற்படை எகிப்திற்குச் சென்றவுடன் அது ஒரு புதிய எல்லையில் புகுந்ததுமன்றிப் புதியதொரு தொழிலிலும் ஈடுபட்டது. இந்த எகிப்துப் படையெடுப்பானது பாரசீகத்துடன் கொண்டுள்ள போராட்டத்தை மற்றொரு கட்டத்திற்கு எடுத்துச் செல்லும் ஒரு முயற்சியாயிற்று. கிரீஸ் நாடு வலுச்சண்டைக்குச் செல்பவராகவும் பாரசீகத்தின் மீது படையெடுப்பவராகக் காணப்படுவதுமான காட்சியே அந்தப் புதிய கட்டமாகும். இந்த முயற்சியானது பயனற்ற

தாகப் போயிற்று. ஸெர்க்ஸீஸின் படையெடுப்பைப் பழிவாங்க மற்றுமொரு நூற்றுண்டுக்காலம் கழிய வேண்டும். ஆனல் எகிப்தின்மீது படை யெடுத்ததில் அத்தீனியர்கள் மகா அலெக்ஸாண்டருக்கு முன் தூதர்களாக விளங்கினுர்கள் என்பதை மறந்துவிடக்கூடாது. மேலும் கைமான் இவர்களுடைய படைத்தலைவனுயிருந்தால் வெற்றி இவர்களுடையதாயிருக்கும் என்பதையும் நாம் மறக்கக்கூடாது.

நீல நதியில் கப்பலில் சென்ற அத்தீனியர்கள், தனக்கு விரோதமாக அனுப்பப்பட்ட பாரசீகப் படையை ஈனுராஸ் நீல நதியின் முகத்துவாரப் பகுதியில் தோற்கடித்ததைக் கண்ணுற்றனர். முன் சென்ற அத்தீனியர்கள் மெம்பிஸ் (Memphis) நகரத்தின் சேம அரணுகிய வெள்ளைக் கோட்டையைத் (White Castle) தவிர, மற்ற பாகங்களைத் தம் கைவசமாக்கினர். வெள்ளைக் கோட்டையில் பாரசீகத் துருப்புகள் கடூரமாகப் போரிட்டன. இந் நிகழ்ச்சிக்குப் பின் ஏறத்தாழ இரண்டு ஆண்டுகளுக்கு எகிப்தில் என்ன நடந்தது என்று நாம் அறிகிலோம். வெள்ளைக் கோட்டையை அத்தீனியர் நீடித்து முற்றுகையிட்டதைத் தவிர அவர்கள் வேறு எவ்விதம் உபயோகிக்கப்பட்டனர் என்பதையும் நாம் அறியோம். ஆனல் இந்தக் காலத்தில் அத்தீனியப் படைகள் இரண்டாகப் பிரிக்கப்பட்டது அந் நகருக்கு அழிவையே விளைவிக்கக் கூடியதாயிருந்திருக்கலாம். தன்னுடைய படைகள் பிரிக்கப்படாமல் ஒன்று சேர்ந்திருந்தால் ஆதென்ஸ் பெலோப்போனீஸஸ்ஸை நசுக்கியிருக்கலாம்; அதே விதமாகத் தன் படைகள் ஒன்று சேர்ந்திருந்தால் ஆதென்ஸ் எகிப்தில் நன்ருக முன்னேறியிருக்கலாம். அத்தீனியக் கப்பற்படையில் ஒரு சரிபாதியானது நீல நதிக்கரையில் இருக்கும்போதுகூட, ஆதென்ஸ் கொரிந்து, ஈகைனு, மேலும் அந் நகரங்களின் நண்பர்கள் முதலியோரை மிகவும் தைரியமாக விரட்டியது கைமானை நாடு கடத்திய அரசியல் கட்சிக்கு ஒரு பெரிய வெற்றியாகும். இந்த மறக்கக்கூடாத ஆண்டில் மரித்துப் போன ஒரு கோத்திரத்தைச் சேர்ந்த மக்களின் பெயர்கள் பொறிக்கப்பட்ட ஒரு கல்லானது மற்றெல்லாச் சின்னங்களைக் காட்டிலும் இப் பெரும் சிக்கலில் அத்தீனியர்கள் கொண்டிருந்த ஊக்கத்தை எடுத்துக் காட்டுகின்றது:

இதே ஆண்டில் இந்த யுத்தத்தில் சைப்ரஸ் (Cyprus), எகிப்து, பீனீஷியா (Phoenice), ஹாலீஸ் (Halieis), ஈகைனு, மேகாரா முதலிய போர்க்களங்களில் மாண்டவர்களில் ஏரிக்தியிட் (Erechtheid) கோத்திரத்தைச் சேர்ந்தவர்கள் இவர்கள் என்று அவர்களுடைய நாமங்கள் அந்தக் கல்லில் பொறிக்கப்பட்டுள்ளன.

ஈகைனுவானது முற்றுகையிடப்பட்டுவந்தது. போர் நடந்து இரண்டு ஆண்டுகளுக்குப்பின் ஈகைனு மக்கள் சரணடைந்தார்கள்.

அவர்கள் தமது கப்பற் படையை அத்தீனியர்களிடம் ஒப்படைக்கவும் ஆதென்ஸ்ஸிற்குக் கப்பம் கட்டவும் ஒப்புக் கொண்டார்கள். அத்தீனியர்களுக்கு இந்த வெற்றியைக் காட்டிலும் மற்ற எந்த வெற்றியும் இவ்வளவு மகிழ்ச்சி தருவதாகவும், இலாபகரமாயுமில்லை. தமது நகரத்திலுள்ள குன்றிலிருந்து பார்க்கும்போது தண்ணீருக்கு அப்பாலுள்ளதும், தங்கள் கண்களைப் புண்படுத்தியதும், தங்கள் விருப்பங்களைக் கவர்ந்ததுமான அந்தத் தீவானது கடைசியில் தமது கைகளில் ஆற்றல் குன்றிச் சிக்கியிருப்பதை மகிழ்ச்சியுடன் கண்ணுறலாயினர். வாணிபத்திலே வெல்ல முடியாத ஓர் எதிரியை இவர்கள் முடமாக்கினர். டோரிய குலத்தைச் சேர்ந்த முக்கிய நகரங்களில் ஒன்றைக் கிழே தள்ளித் தோற்கடித்தனர். கூட்டுக் கழக இணைப்பில் செல்வச் செருக்கு மிகுந்த தேஸாஸ்ஸிற்கு (Thasos) ஈடான ஈகைனுவும் அத்தீனிய ஆட்சிக்குக் கீழ்ப்பட்ட நாடாக விளங்கியது. இவ்விரண்டு தீவு நகரங்களும் கப்பமாகக் கட்டவேண்டிய தொகை ஆண்டு தோறும் முப்பது தாலந்துகளாம். நமக்குத் தெரிந்த இதர கப்பம் கட்டும் நாடுகளில் இவை இரண்டுமே அதிகத் தொகையைக் கட்டி வந்தன.

இதற்கிடையில் கிரீஸின் மற்றொரு பகுதியில் ஏற்பட்ட நிகழ்ச்சிகள் இந்தப் போரில் லாஸிடீமோனியர்களும் பங்கு எடுக்கும் படி செய்தன. இந்தப் போராட்டத்தின் முக்கிய கவனமானது இதனுடன் சரோனிக் வளைகுடாவிலிருந்து பியோஷியாவிற்கு மாற்றப்பட்டது. லாஸிடீமோனியர்களின் சிறுதிறப் பயணமானது கடவுட் பக்தியை மேற்கொண்ட பயணமாகும். வடக்கிலுள்ள தமது தாயினத்தைச் சேர்ந்த டோரியர்களுக்கு உதவியளிக்கவே இவர்கள் சென்றனர். டோரியர்களுடைய மூன்று சிறு நகரங்களில் ஒன்றைப் போக்கியர்கள் (Phocians) தம் கைவசப் படுத்தியதே இவர்கள் பயணத்திற்குக் காரணமாகும். 1500 லாஸிடீமோனிய ஹாப்லிட்டர்களையும் 10,000 நேச தேசப் படைகளையும் கொண்ட அணிக்கு, படையெடுத்து ஆக்கிரமித்தவர்களைத் தாம் கைவசப்படுத்திய இடத்தைத் திருப்பிக் கொடுக்கச் செய்வது ஒரு எளிதான காரியமாகும். லாஸிடீமோனியாவின் உண்மையான படையெடுப்பு பியோஷியாவின் மேலாகும்.

ஆதென்ஸ்ஸை அடக்கிவைக்கப் பியோஷியாவில் ஓர் அரசைப் பலப்படுத்தி வைத்தல் மிகவும் அவசியம் என்பதே ஸ்பார்ட்டாவின் கோட்பாடாகும். தீப்ஸ்ஸைப் பலப்படுத்தி அதனைப் பியோஷியாவின் கூட்டுக்குழுவிற்குத் தலைமை வகிக்கச் செய்வதே ஸ்பார்ட்டாவின் எண்ணமும் சிந்தனையுமாயிற்று. எனவே இப்போது ஸ்பார்ட்டா பழைய கூட்டுக்குழுவை மறுபடியும் இயக்கி வைத்து, பியோஷிய நகரங்களை அதில் உறுப்பினர்களாகச் சேரச் செய்து தீப்ஸ்ஸைப்

பியோஷிய நகரங்களின் தலையாக்கிற்று. இப் பணியை ஆற்றியபின் சேனையானது தெற்கே பெலோப்பேர்னீஸியஸ்ஸிற்குச் செல்ல முடியாது திகைத்தது. மேகாரிட் (Megarid) வழியாகச் செல்வது பயங்கரமான காரியமாகும். ஏனென்ருல் அங்குள்ள கணவாய்கள் அனைத்தும் அத்தீனியர் வசம் இருந்தன. மேலும் அத்தீனியர்கள் முன் எச்சரிக்கைகள் பலவும் கைக்கொண்டிருந்தனர். கொரிந்தியன் வளைகுடா வழியாக (ஒருவேளை இந்த வழியாகத்தான் இவர்கள் வடக்கே சென்றிருக்கலாம், செல்லவும் இவர்கள் அஞ்சினர். காரணம் அங்கே அத்தீனியக் கப்பல்கள் இடைவிடாது ரோந்து செய்து வந்ததேயாகும். அத்தீனியர்கள் தம் நகரத்திலிருந்து துறைமுகம் வரை நீண்ட சுவர்கள் (Long Walls) எழுப்பும் வேலையில் ஈடுபட்டிருந்ததால், இவர்கள் தம்முடைய மலைப்பில் ஆதென்ஸ் நகரை நேரடியாகத் தாக்கத் திட்டமிட்டனர். எவ்விதத்திலாவது மக்கள் ஆட்சியை உதறித்தள்ளவேண்டும் என்று அவாக்கொண்ட சில சிறுகுழு ஆட்சியினருடைய ஏவுதலினுல் இத் திட்டம் ஒருகால் உருவாக்கப்பட்டிருக்கலாம். அட்டிக்காவின் எல்லையிலுள்ள டானுக்ராவை (Tanagra) நோக்கிப் பெலோப்போனீஸிய அணியானது முன்னேறியது. ஆனுல் அவர்கள் எல்லையைக் கடக்குமுன், 14,000 போர் வீரர்கள் கொண்ட சேனையின் பலத்துடன் அத்தீனியர்கள் அவர்களைச் சந்திக்க முன் ஏறினுர்கள். இந்த 14,000 போர் வீரர்களில் 1000 பேர் ஆர்காஸ் நாட்டுக்காரர்; சிலர் தெசலிக் குதிரைவீரர்கள் ஆவர். பியோஷிய நிலப் பகுதியில் ஏற்படுத்தப்பட்ட அத்தீனிய முகாமிற்கு நாடு கடத்தப்பட்ட கைமான் தோன்றி ஸ்பார்ட்டாவிற்கு விரோதமாகத் தான் யுத்தம் புரிய ஆதென்ஸ் உத்தரவு கொடுக்க வேண்டினுன். இந்த வேண்டுகோள் ஆதென்ஸ்ஸில் அவசரம் அவசரமாக அழைக்கப்பட்ட ஐந்நூற்றுவர் சபைமுன் சமர்ப்பிக்கப்பட்டது. சபை உத்தரவு பிறப்பிக்க மறுத்துவிட்டது. ஆயினும் கைமான் மனம்தளராது, தனது கட்சியாளர்களை ஸ்பார்ட்டாவிற்கு எதிராக ஊக்கமாக யுத்தம் புரிய அறிவிப்பு விடுவித்தான். கைமானின் இந்தச் செயலானது அவரைப் பின்னுல் திருப்பி அழைப்பதற்கு ஒரு தூண்டு கோலாயிருந்தது. நடந்த சண்டையில் இவருடைய எல்லா சகாக்களும் மும்முரமாக யுத்தம் புரிந்து தம் உயிரை நாட்டிற்காகத் தியாகம் செய்தனர். அவர்களில் ஒருவரும் உயிர் தப்பவில்லை. இருதரப்பிலும் பலர் வாளுக்கு இரையானுர்கள். ஆனுல் சண்டை நடக்கும்போது தெசலியக் குதிரை வீரர்கள் கைவிட்டு விட்டு ஓடவே, லாஸிடீமோனியர்கள் வெற்றி அடைந்தனர். ஆனுல் இந்தச் சண்டையானது ஆதென்ஸ்ஸைக் காப்பாற்றியது. தமக்குக் கிடைத்த வெற்றியினுல், வெற்றி வேந்தர்கள் பூசந்திக்கு எளிதில் போக முடிந்தது. இவர்கள் வழியில் மேகாரிட்டில் உள்ள பழமரங்கள் அனைத்தையும் வெட்டி எறிந்ததாகக் கூறப்படுகின்றது.

காலத்தைப் பாதுகாக்க எண்ணி ஆதென்ஸ் ஸ்பார்ட்டாவுடன் தாற்காலிகமாகப் போர் நிறுத்தம் செய்ய அவாக் கொண்டது. ஆதென்ஸ்ஸின் எதிரிகள் ஸ்பார்ட்டர்களா யிருந்தாலும்கூட அவர்கள் தம் எதிரிகள் என்று கடந்த சண்டையில் எடுத்துக் காட்டிய நாடு கடத்தப்பட்ட கைமான்தான் தாற்காலிகமாகப் போர் நிறுத்தம் செய்யக் கூடியவர் என்று பெரிக்கிளீஸ் (Pericles) போன்ற பெரியார்கள் அறிந்தனர். பெரிக்கிளீஸ்ஸின் தூண்டுகோலால் மக்கள் கைமானை நாடு திரும்பும்படி ஒரு தீர்மானத்தை நிறைவேற்றினர். கைமான் தாற்காலிகப் போர் நிறுத்தத்திற்கு ஆவன செய்து வெற்றியும் அடைந்தார். பின் மக்கள் எதிர்பாராத விதமாக மிகவும் நுண்திறனுடன் கைமான் ஆதென்ஸ்ஸிலிருந்து தூரமாக விலகிக் கொண்டார்.

ஒலிம்பியாவின் உச்சியிலுள்ள ஸ்யூஸ்ஸின் புதிய கோயில் முகட்டிற்கு மேல் ஒரு தங்கக் கேடயத்தை ஏற்றி லாஸிடீமோனியர்கள் தங்களது வெற்றியைக் கொண்டாடினார்கள். இந்தக் கேடயமானது டானக்ராவில் கிடைத்த கொள்ளைப் பொருள்களால் செய்யப்பட்ட அன்பளிப்பாகும். ஆனால் இந்த ஸ்பார்ட்டாவின் வெற்றியானது, பியோஷியாவைக் கூடத் தம் கையில் பத்திரமாக வைக்க இடமளிக்கவில்லை. இந்தச் சண்டைக்கு இரண்டு மாதங்கள் கழித்து ஆதென்ஸ் மைரோனிடீஸ் (Myronides) என்னும் தளகர்த்தரின் கீழ் ஒரு படையைப் பியோஷியாவிற்கு அனுப்பி வைத்தது. அங்கே ஈனோபைடா (Oenophyta) என்ற இடத்தில் ஒரு மும்முர சண்டை மூண்டது. இதன் விளைவாக ஆதென்ஸ் தீப்ஸ்ஸைத் தவிர மற்ற எல்லா பாகங்களுக்கும் தலைமை பூண்டது. கடல் சார்ந்த டீலாஸ் கூட்டுக் கழக இணைப்பில் பியோஷிய நகரங்கள் உறுப்பினராகச் சேர்த்துக் கொள்ளப்படவில்லை. ஆனாலும் அவைகள் ஆதென்ஸ் நகரத்தின்மேல் சார்ந்திருந்தன என்பது அவர்கள் தமது படைகளில் சிலவற்றை ஆதென்ஸ்ஸிற்குக் கொடுத்து வழங்கவேண்டும் என்னும் திட்டத்திலிருந்து தெரிய வருகின்றது. அதே நேரத்தில் போக்கியர்கள் (Phocians) ஆதென்ஸ்ஸுடன் ஒரு நேச உடன்படிக்கை செய்துகொண்டனர். ஆதென்ஸ்ஸின் மேலாண்மையை லோக்ரியர்கள் (Locrians) ஒப்புக்கொள்ள வற்புறுத்தப் பட்டனர். மேல் கூறியவைகள் ஈனோபைடா, டானக்ராவின் விளைவுகள். ஒருவரும் தம்மைத் தடை செய்யாது அமைதியுடன் ஆதென்ஸ் இப்போது நீண்ட சுவர்களைக் கட்ட முடிந்தது.

இவ் வெற்றிகளுக்கு முடிபோல் அமைந்தது ஈகைனவின் கைப்பற்றுதல் என்று நாம் முன்பே கவனித்துள்ளோம். ஏறத்தாழ அதே சமயத்தில் ட்ரீஸென் (Troezen) கைப்பற்றப் பட்டது. இது ஆர்

காலிக் கடற்கரையோரம் அத்தினியர்களுக்கு ஒரு முக்கிய களமாயிற்று. ஆனல் தூரத் தெற்கில் இவர்களுடைய படைகள் அவ் வளவாகச் செழிப்படையவில்லை. மெம்பிஸ் கைப்பற்றப்பட்ட பின் இவர்கள் வேறு வெற்றி எதுவும்காணவில்லை.வெள்ளைக்கோட்டையோ வென்ருல் இன்னமும் விடாப் பிடியாக எதிர்த்து நின்றது. அட்டிக்காவைப் படையெடுத்து ஆதென்ஸ்ஸிற்கு ஒரு நிர்ப்பந்த நிலையை ஏற்படுத்த ஸ்பார்ட்டாவைக் கேட்டு, அந்த முயற்சி தோல்வி யடைந்தபின் ஆர்ட்டாஸெர்க்ஸிஸ் மன்னன், மேகபைஸஸ் (Megabyzus) என்னும் தளகர்த்தரின் கீழ் ஒரு பெரும்படையை எகிப்திற்கு அனுப்பி வைத்தான். மேகபைஸஸ் பினீஷியக் கப்பல் படையால் ஆதரிக்கப்பட்டு வந்தார். ஏற்பட்ட ஒரு சண்டையில் வெற்றி பெற்று மேகபைஸஸ், மெம்பிஸ்ஸிலிருந்து கிரேக்கர்களை விரட்டியடித்து அவர் களை ப்ரோசோபிட்டிஸ் (Prosopitis) என்ற தீவில் முற்றுகையிட்டான். கனேபிக் (Canopic), செபின்னிடிக் (Sebennytic) என்ற இரண்டு நீல நதிக் கால்வாய்களைச் சேர்ந்த ஒரு கால்வாயினுல் இந்தத் தீவு ஏற்பட லாயிற்று. இந்தத் தீவில் பாரசீகத் தளகர்த்தர் கிரேக்கர்களைப் பதி னெட்டு மாதங்கள் முற்றுகையிட்டனர். கடைசியில் இவர் கால்வாய் களுக்கு நீர் செல்லவிடாமல் தடுத்ததன்பேரில் கிரேக்கக் கப்பல்கள் தரையின்மேல் நிற்கவேண்டிய நிலை வந்தது; தீவும் மறைந்து போயிற்று. எனவே பாரசீகர்கள் முன்னுல் தீவாயிருந்த பிரதேசத்தில் விரைந்து செல்ல ஏதுவாயிற்று. கிரேக்கர்கள் தங்களுடைய கப்பல்கள் களைத் தீக்கிரையாக்கிவிட்டு பிப்லாஸ்ஸை (Byblos) அடைந்தனர். அங்கே மேகபைஸஸ்ஸின் உத்தரவிற் கேற்பச் சரணடைந்தனர். மேகபைஸஸ் அவர்களைத் தம் நாடு திரும்ப அனுமதி யளித்தார். இவர்கள் மிகவும் சோர்வான பயணத்திற்குப் பின் உதவும் ஆர்வ முள்ள சிரேனியை (Cyrene) அடைந்தனர். அங்குத் தம் நாடு திரும்பு வதற்கான சாதனங்களைப் பெற்றனர். சரணுகதியின் நிபந்தனைகளின் படி இந்தப் புரட்சியைத் தூண்டின ஈனராஸ்ஸின் உயிருக்கு ஆபத்து நேரிடக் கூடாது என்றிருந்த போதிலும், அவர் சிலுவையில் அறையப் பட்டார். இந்த நிகழ்ச்சிக்குச் சிறிது காலத்திற்குப் பின் ஆதென்ஸ் ஸிலிருந்து இடர் உதவிக்காக ஐம்பது ட்ரையரீம்கள் கொண்ட கப்பற் படை ஒன்று எகிப்தின் கரைகளைச் சேர்ந்தது. நீல நதியின் கிளை நதி யாகிய மெண்டீஸியாவின் (Mendesia) முகத்துவாரத்தின் பக்கத்தில் இப் படையானது பினீஷியக் கப்பற்படையால் தாக்கப்பட்டது. இதன் விளைவாக சில அத்தீனியக் கப்பல்கள்தாம் தப்ப முடிந்தன. எகிப்தில் பாரசீகத்தின் அதிகாரம் மறுபடியும் நிறுவப்பட்டது. எகிப் தைக் கிரேக்கர்கள் அடக்கியாளும் நாள் இன்னமும் தோன்றவில்லை.

வீரம் பொருந்தியதும், அழிவு நோக்கியதுமான இந்த முயற்சியில் அத்தீனியர்கள் தமது கப்பல்களையும் செல்வத்தையும் இழந்த

போதிலும் அவர்களுடைய பேரரசு மிகவும் உன்னத நிலையில் காணப் பட்டது. இவர்கள் எகிப்தில் நடந்த துன்ப நிகழ்ச்சிகளை ஒரு காரண மாகக் கொண்டு டீலியக் கூட்டுக் கழக ஆட்சியை வெளிப்படையாக ஓர் அத்தீனியப் பேரரசாக மாற்றி அமைத்தனர். வெற்றி மாலை அணிந்த பாரசிகக் கப்பல்படை என்றும் ஈஜியக் கடலில் புகக் கூடும்; ஆகையால் டீலாஸ் கருவூலம் இருப்பதற்கு ஏற்ற தீவு அல்ல. எனவே இந்தக் கூட்டுக் குழுவின் நிதிகள் யாவும் அத்தீனிய சேம அரணாகிய அக்ரோப்போலஸ்ஸில் இருக்க வேண்டும் எனக் கூறினதுமன்றிச் செய்கையிலும் காட்டினர்.

ஆதென்ஸ் பேரரசானது இப்போது பெருநிலப் பகுதியையும், கடல் சார்ந்த பகுதியையும் தன்னிடத்தே கொண்டிருந்தது. அடிக் கடித் தமது எல்லைக்குள் முன்னேறிக் கொண்டிருந்த பியோஷியா, மேகாரா ஆகிய இரு நாடுகளும் ஆதென்ஸ்ஸின் அடிமை நாடுக ளாயின. பியோஷியாவிற்கு அப்பால் இதன் மேலாட்சி போஸிஸ் (Phocis) மேலும், தெர்மோப்பைலி (Thermophylae) கணவாய் மட்டும் லோக்ரிஸ் (Locris) வரையும் பரவிற்று. தனது ஈஜியப் பேரரசுக்குள் ஈகைனு சேர்க்கப்பட்டதுமன்றி ஈகைனுவின் கப்பல்கள் தனது கப்பல் படைக்குள் சேர்க்கப்பட்டன. மேகாராவை அடிமைப்படுத்திய தாலும், ஈகைனுவை வென்றதாலும், ட்ரோஸனேக் (Troezen) கைப் பற்றியதாலும் சாரோனிக் விரிகுடாவானது அட்டிக்காவின் ஓர் ஏரி யாக மாற்றப்பட்டது.

பூசந்தியிலுள்ள வாணிப நகரானது ஆதென்ஸ்ஸின் முக்கிய மானதும், மிகவும் ஆபத்தானதுமான பகைமை நாடாகும். கொரிந்தி யன் வளைகுடாவையும் மற்றொரு அட்டிக்காவின் ஏரியாக்க வேண்டு மென்பது பெரிக்கிளீஸின் கோட்பாட்டின் அடுத்த நோக்கமாகும். இதில் வெற்றியடைந்தால் கொரிந்துவை இருபுறத்திலிருந்தும் நசுக்க ஏதுவாயிருக்கும். மேகாரிட், பியோஷியா, மேலும் விசேஷமாகக் கப்பல் தளவாடமான நாபாக்டஸ் (Naupactus) முதலியன ஆதென்ஸ் ஸின் கைவசத்திலிருந்ததால் வளைகுடாவின் வாயிலிலிருந்து பூசந்தி வரையிலுமுள்ள வடக்குக் கடற்கரைப் பாகங்களை ஆதென்ஸ் கட்டுப்படுத்த இயன்றது. ஆனால் தெற்குக் கடற்கரையானது முழு வதுமாகப் பெலோப்போனிஸியர் கைவசமேயிருந்து வந்தது. அதே காலையில் வளைகுடாவின் வாயிலுக்கு வெளியேயுள்ள அக்கார்னேனியா வின் (Acarnania) கரையிலுள்ள சில முக்கியப் படைத்துறைக் களங் களையும் ஆதென்ஸ் தன்வசம் கொண்டுவரவேண்டியது மிகவும் அவசியம். பாட்ரிக்கு (Patrae) எதிரிலுள்ள கொரிந்தியக் குடியேற்ற நாடாகிய சால்ஸிஸ்ஸைத் (Chalcis) தளகர்த்தர் டால்மைடிஸ் (Tolmides) கைப்பற்றி இப் புதிய கோட்பாட்டைத் துவக்கிவைத்

தார். டால்மைடிஸ்ஸின் பணியை நீடிப்பதற்காகப் பெரிக்கிளீஸ்ஸே மற்றெரு படையெடுப்பில் ஈடுபட்டார். சிக்கியானை (Sicyon) தன் ஆதிக்கத்துக்கு உட்படுத்த இயலாததால், இவர் அக்கார்னே னியாவின் (Acarnania) கடற்கரையிலுள்ள முக்கியமானதும், சுவர் களால் சூழப்பட்டதுமான வாணிப நகராகிய ஈனியடேவிற்கு (Oeniadae) முற்றுகையிட்டார். ஆனுல் இதையும் இவரால் கைப் பற்ற இயலவில்லை. இப் படையெடுப்புப் படைத்துறையில் வெற்றி எதையும் அளிக்காவிட்டாலும், இது ஒரு மன எழுச்சியை உண்டு பண்ணியது. இந்தப் படையெடுப்பு அக்கிய நகரங்களை அத்தீனிய நட்புத்தொடர்பில் பற்றியிருக்கும்படி செய்தது. சிறிது காலத்திற்குப் பின் அக்கியா அத்தீனிய சார்பரசாயிருக்கலாம் என்பது திண்ணம். கொரிந்து வளைகுடாவிலும், சரோனிக் விரிகுடாவிலும் சில ஆண்டு களுக்கேனும் அத்தீனியக் கப்பல்கள் மேலாட்சியுரிமையுடன் செல்ல இயன்றது.

## 3. பாரசீகத்துடன் சமாதானம் ஏற்படுதல்

கடந்த ஆண்டுகளில் நடந்தபோரானது ஆதென்ஸ்ஸின் கைவளத் தின்மேல் ஒரு பெரிய பளுவாக இருந்தது. ஆதென்ஸ் நேச தேச நாடுகள் கட்டிவந்த கப்பத் தொகையைக்கூட அதிகரிக்க வேண்டிய தாயிற்று. இந்தப் பெரும் பளுவிலிருந்து மீட்சி பெற அவாக்கொண் டிருந்தபோதிலும், பெரிக்கிளீஸ்ஸின் படையெடுப்பிற்கு மூன்று அல்லது நான்கு ஆண்டுகளுக்குப் பின்னரேதான் சமாதானம் செய் யப்பட்டது. இதற்கிடையில் இரு தரப்பார்களுக்குள்ளும் சண்டை நிறுத்தம் செய்யவேண்டும் எனத் தங்களுக்குள்ளே ஒப்பந்தம் ஏற்பட் டதுபோல் காணப்படுகின்றது. லாஸிடீமனும் ஆர்காஸும் முப்பது ஆண்டுகளுக்கான ஒரு சமாதான உடன்படிக்கையை முதன்முதலாகச் செய்துகொண்டன. இதன்பின் நாடு திரும்பிய கைமான் அத்தீனி யர்களுக்கும் பெலோப்போனீஸியர்களுக்குமிடையே ஐந்து ஆண்டு களுக்குத் தாற்காலிகப் போர் நிறுத்த (truce) உடன்படிக்கை ஏற் பாடு செய்தார்.

சமாதானம் உண்டாகியவுடனே, பாரசீகத்திற்கு எதிராக ஆதென்ஸ்ஸும் அதன் நேச நாடுகளும் போரை மறுமுறையும் துவங்க முன்வர முடிந்தது. யூரிமீடான் (Eurymedon) நதிக் கரையில் வெற்றி வேந்தராகித் திகழ்ந்தவரைவிட வேறு எவரும் இந்தப் பணிக்குத் தகுதியற்றவராக இருந்தனர். பெரிக்கிளீஸிற்கும் கைமா னுக்குமிடையே நட்பிணக்கமான ஓர் ஒப்பந்தம் ஏற்பட்டுள்ளது போலத் தெரிகின்றது. கைமானின் போர் அனுபவத்தை அறிந்து

பெரிக்கிளீஸ் மனநிறைவு கொண்டார்: கைமானேவென்றால் பெரிக்கிளீஸின் கோட்பாட்டில் தலையிடாமல் இருப்பதை மேற்கொண்டார். இவ் விருவருக்கும் உள்ள மனப் பேதம் மாறுவதற்குக் கைமானின் உடன்பிறந்தாள் காரணம் என்று வம்புப் பேச்சு கூறுகின்றது. 'அத்தீனிய வாழ்க்கை வரலாற்று ஆசிரியர்களின் நூல்களில் எல்பினிஸியின் (Elpinice) வனப்பும், சதியாலோசனைகளும் மிகவும் முக்கிய இடம் பெற்றிருக்கின்றன. ஒரு கட்சியினர் இவைகளைக் கைமானை அவதூறு கூற உபயோகித்துள்ளனர்; மற்றொரு சாரார் பெரிக்கிளீஸை இழிவாகக் கூற உபயோகித்திருக்கின்றனர்.'[1] ஆனால் நாம் இந்த வம்புப் பேச்சைக் கவனிக்க வேண்டியதில்லை. அத்தீனா நகரின் வரலாற்றிலேயே பெண்கள் ஒரு பாகத்தையும் எடுத்துக் கொள்ளவில்லை.

எகிப்துப் புரட்சியை அடக்கிய பினீஷியக் கப்பற் படையானது ஆர்ட்டாஸெர்க்ஸீஸின் அதிகாரத்தை மறுபடியும் சைப்ரஸ் தீவில் நிறுவும்படி அனுப்பப்பட்டது. இதையறிந்த கைமான் 200 யுத்தக் கப்பல்களுடன் சைப்ரஸ்ஸிற்குச் சென்றான். பேரிழப்பு அடைந்த போதிலும் எகிப்தைக் கைப்பற்ற வேண்டும் என்னும் நினைவை முழுவதுமாக அத்தீனியர்கள் மறக்கவில்லை என்பது, பாரசீகர்களை எதிர்த்து நீல நதி முகத்துவாரத்திலுள்ள சதுப்பு நிலத்தில் போராடி வந்த ஒரு சிற்றரசனுக்குத் தமது கப்பற் படையில் அறுபது கப்பல்களைப் பிரித்துக் கைமான் அனுப்பியதிலிருந்து நன்கு விளங்குகின்றது. இதன்பின் இவர் சிட்டியான் (Cition) என்னுமிடத்தை முற்றுகையிட்டார். இதுவே மைக்கேல் (Mycale) யுத்தத்திலிருந்து பாரசீகப்போரை முன் நின்று நடத்திய வீரனின் கடைசித் தீரச் செயலாகும். இவர் இந்த முற்றுகையின் மத்தியில் உயிர் துறந்தார். அவருடைய மறைவு, கிரேக்கர்களுக்கும் பாரசீகர்களுக்கும் இடையே நடந்த யுத்தமானது உறங்கும் ஒரு புதிய கட்டத்தின் துவக்கத்தைக் காட்டுகின்றது. இந்த முற்றுகையினால் ஒரு முடிவான வெற்றி கிடைத்தது. சரியாக உணவில்லாததால் சிட்டியானின் முற்றுகையை நிறுத்திவிட்டுக் கப்பல் படை ஸாலமிஸ்ஸிற்கு (Salamis) வந்து சேர்ந்தது. அங்கே பினீஷிய, சைலிஷிய (Cilician) கப்பற் படைகளின்மேல் கிரேக்கர்கள் ஓர் இரட்டை வெற்றியைக் கடலிலும் நிலத்திலும் அடைந்தனர்.

அத்தீனியர்கள் இப் போரை நீடிப்பதற்கு இந்த வெற்றியானது ஊக்கம் அளிக்கவில்லை. இச் சமயத்தில் அரசியல் வல்லுநர்கள் ஈன்ற அறிவுரைகள் நமக்கு மறைந்து கிடக்கின்றன. ஆனால் பெரிய மன்னனுடன் (பாரசிக மன்னருடன்) சமாதானம் செய்து கொள்ளவேண்டும்

[1] க்ரோட் (Grote)

என்று அவர்கள் தீர்மானித்ததைப் புரிந்துகொள்ள அங்குக் காணப் பெற்ற நிலைமையின் உண்மைகள் நமக்கு உதவுகின்றன. அகில கிரேக்கர்களுக்கும் பகைவரான பாரசீகர்களுடனும், அதே நேரத்தில் கிரேக்கர்களுள் தனது போட்டியாளருடனும் ஆதென்ஸ் முழு பலத் துடனும் போர் புரியக் கூடாத நிலையில் இருக்கின்றது என்பதை அண்மைக் காலத்தில் நடந்த நிகழ்ச்சிகள் அத்தீனியர்களுக்கு உணர்த் தின. எனவே பாரசீகத்துடனாவது அல்லது கிரீஸினுடனாவது சமா தானம் செய்துகொள்ள வேண்டும் என்பதைத் தேர்ந்தெடுக்க வேண் டிய அவசியம்ஏற்பட்டது. கிரீஸ்ஸில் நிலவரமான சமாதானம் வேண்டு மென்றால், அண்மையில் ஆதென்ஸ் பெற்ற வெற்றிகளின் மூலம் கிடைத்த எல்லா இடங்களையும் கொடுத்துத் தான் சமாதானத்தை விலைக்குப் பெறவேண்டும். மேற்கு வளைகுடாவில் தான் தனது முந்திய பதவியை அடையும்வரை கொரிந்து பணியவே பணியாது. இப் பொழுது ஆதென்ஸ் தன்னை நாலா பக்கங்களிலும் சூழ்ந்து நசுக்கிக் கொண்டிருப்பது போல எப்பொழுதும் இருந்தால் கொரிந்து தன்னை விடுதலை செய்யத் தனக்கு அனுகூலமான நேரத்தில் தாக்கும் என் பதில் சந்தேகமே இல்லை. அத்தீனியர்கள் அண்மையில் தங்களுடன் இணைத்துக்கொண்ட கொரிந்துவின் பாகங்கள் கொரிந்துவிற்குக் கசப்பைக் கொடுப்பது போல் தோன்றுமாதலினால், அவைகளிலிருந்து திரும்பி வந்து விடுவது நல்லது என்று சில அத்தீனிய அரசியல்வாதி கள் கருதினர். ஆனால் இந்த இடங்களைக் கைப்பற்றிய பெரிக்கிளீஸ் ஒரு பெரும் பேரரசுக்கோட்பாட்டு ஆதரவாளர் (imperialist). அத் தீனியப் பேரரசைப் பெருக்குதலும், அதன் அரசியல் செல்வாக்கை கிரீஸின் எல்லைகள் மட்டும் பரப்புதலும் இவருடைய அரசியல் தத்து வத்தின் நோக்கங்களாகும். காட்டுமிராண்டியர்களிடம் பல புதிய வெற்றிகளைப் பெறுவதற்காக இவர் பேரரசில் ஏதொரு சிறு பாகத் தையும் விட்டுக் கொடுக்க விரும்பவில்லை. பாரசீக யுத்தத்திற்கு உயிர்நிலை (soul) போன்றவர் கைமான் ஆவார். அவருடைய மரண மானது பாரசீக யுத்தத்தை நிறுத்தவேண்டும் என்னும் பெரிக் கிளீஸ்ஸின் தீர்மானத்தைச் செயலுக்குக் கொண்டுவர உதவியிருக் கலாம். பாரசீகப் பெரிய மன்னனும் சமாதானத்திற்காகக் கூடி பேரம் செய்ய மனமுடையவனாய் இருந்தார். ஏனென்றால் சைப்ரஸ்ஸி லுள்ள சாலமிஸ்ஸில் (Cyprian Salamis) கிரேக்கர்கள் வெற்றி யடைந்தபின், எகிப்தில் நடந்த கலகத்தை அடக்கிய படைத் தலைவ ராகிய மேகபைஸஸ் திடீரென்று அரசாங்க எதிர்ப்புக் கிளர்ச்சி செய்தார்.

அப்படியே பாரசீகத்துடன் சமாதானம் ஏற்பட்டது. சமா தானத்திற்காக நடந்த பேரங்கள் ஒருவருக்குமே தெரியாமல் இருண்ட மூடுபனிபோல் காணப்படுவதால், விதிமுறைப்படி உடன்

படிக்கை நடந்ததா என்றுகூட பலர் சந்தேகிக்கின்றனர். ஆனால் ஆர்ட்டாஸெர்க்ஸீஸ்ஸுடன் ஆதென்ஸ் தொடர்பு கொண்டது; அதன் விளைவால் சமாதானம் தோன்றியது என்பதைக் குறித்துச் சந்தேகப்பட வேண்டியதேயில்லை. ஈஜியப் பிரதேசத்திற்குப் போர்க் கப்பல்களைப் பாரசிகம் அனுப்பாது என்று வாக்குறுதி கொடுத்ததும், பாரசிகப் பேரரசின் கடற்கரையோரங்களைத் தாக்க மாட்டேன் என்று ஆதென்ஸ் உறுதிமொழி கொடுத்து ஒப்பந்தம் பண்ணிக்கொண்டதும் உண்மையே. சூசாவில் (Susa) பெரிய மன்னனிடத்திற்கு ஆதென்ஸ், அதன் நேச நாடுகள் இவைகளிலிருந்து ஒரு தூதுக்குழு அனுப்பப்பட்டிருக்கலாம். அப்போது இந்த ஒப்பந்தத்தின் கட்டுப்பாடுகள் எழுத்தினால் எழுதப்பெற்றிருக்கலாம். ஆனால் இரண்டு கிரேக்க அரசுகளுக்குள் ஏற்படும் உடன்படிக்கைபோல் இந்த உடன்படிக்கை இருக்கவில்லை. ஒரு கிரேக்க அரசவையையாவது அல்லது பல கிரேக்க அரசுகள் சேர்ந்த கூட்டுக் குழுவையாவது பெரிய மன்னன் தனக்குச் சமம் என்று கருத ஒருநாளும் இணங்கி இருக்கவேமாட்டார். ஆசியாவிலுள்ள கிரேக்க நகரங்கள் தனியுரிமை பெற்றுவிட்டன என்பதையும் இவர் விதிமுறைப்படி ஒப்புக்கொண்டு தன்னை இழிவுபடுத்தவும் இல்லை. தான் சில சலுகைகளைத் தருவதாக இவர் பெருந்தன்மையுடன் உறுதிமொழி கூறினாலே போதுமானதாகும். ஒப்பந்தம் செய்வதில் அரசியல் செயலாட்சி நயத்தின் முறைகள் (diplomatic forms) யாதாயிருந்தாலும் சரி இரு தரப்பாரும் சமாதானத்தையே எண்ணினர், சமாதானமும் நிலை பெற்றது என்பதை நாம் உணரவேண்டும். இந்த உடன்படிக்கையானது காலியஸ்ஸின் உடன்படிக்கை (Peace of Callias) என்றழைக்கப்படுகின்றது. காலியஸ் முக்கியத் தூதுவராய் இருந்திருக்கக்கூடும் என்று நாம் கருத நம்மிடமுள்ள பதிவேடு ஒன்று உதவியாயிருக்கின்றது. இவர் ஆதென்ஸ் நகரத்திலேயே மிகவும் தனவந்தர். மேலும் இவர் கைமானின் உடன்பிறந்தவளின் கணவருமாவர்.

இதனுடன் கிரீஸ்ஸிற்கும் பாரசிகத்திற்கும் ஏற்பட்ட சண்டையின் முதல் பாகமானது முற்றுப் பெறுகின்றது. தூரத்தில் ஒரு மூலையிலுள்ள கிரேக்க நகரங்களைத்தவிர, காட்டுமிராண்டியர்களின் கீழிருந்த மற்றெல்லா ஹெல்லாஸ் நகரங்களும் சுதந்திரமுள்ள கிரேக்க அரசுகளுடன் திரும்பவும் இணைக்கப்பெற்றன. தங்களால் கூடியவரை பினீஷியர்களுடன் சண்டையிடும்படியாக சைப்பிரஸ்ஸிலுள்ள கிரேக்க நகரங்கள் விடப்பட்டன. அதிசீக்கிரத்தில் பினீஷியர்கள் இவர்களைத் தம் கைகளின்கீழ்க் கொண்டுவந்ததுமன்றி, பல ஆண்டுகளுக்கு இவர்கள்மேல் ஆட்சிபுரிந்தும் வந்தனர். இவர்கள் இந்தத் தீவிலிருந்தே கிரேக்க நாகரிகத்தை ஒழிக்க முன்வந்தனர். ஆனால் கிரேக்க நாகரிகமானது மிகவும் கெட்டியான வளர்ச்சியுடை

யது. எனவே நாம் மறுபடியும் கிரேக்க அரச மரபுகள் அதிகாரத்தில் வீற்றிருப்பதைக் காண்போம்.

## 4. அத்தீனியர்களின் இடர்ப்பாடுகள்: முப்பதாண்டு சமாதானம்

பாரசீகத்துடன் செய்துகொண்ட உடன்படிக்கையானது, குறிப்பிட்ட எல்லைக்குள் அத்தினிய வளர்ச்சியைத் தோற்றுவிக்கவில்லை. ஆனால் அதற்கு நேர்மாருக அண்மையில் அத்தீனியப் பேரரசு தன்னுடன் சேர்த்துக்கொண்ட சில இடங்கள், அதிலிருந்து பிரிந்துபோக முன்வந்தன. நாடு கடத்தப்பட்ட சிறு குழு ஆட்சியினரால் ஆர்கோமீனஸ் (Orchomenus), கிரோனியா (Chaeronea) மற்றும் சில மேற்குப் பியோஷிய நகரங்களும் கைப்பற்றப்பட்டன. இதில் உடனடியாக ஆதென்ஸ் குறுக்கிடவேண்டியிருந்தது. தனது பணிக்கு வேண்டியதிலும் குறைவான துருப்புகளைக்கொண்ட அணியுடன் தளகர்த்தர் டால்மைடிஸ் (Tolmides) பீயோஷியா சென்ருர். அவர் கிரோனியாவைக் கைவசப்படுத்தி, அதை அத்தீனியத் துருப்புகளால் நிரப்பினுர். ஆனுல் ஆர்கோமீனஸ்ஸை ஒன்றுமே செய்யவில்லை. இவர் வீடு திரும்பும்போது கோரோனியாவின் (Coronea) அருகில் ஆர்க்கோமீனஸ்ஸிலிருந்து நாடு கடத்தப்பட்டவரும், மற்றவரும் பதிவிருந்து இவரைத் தோற்கடித்தனர். அவரும் கொல்லப்பட்டார். அநேக அத்தீனியர்கள் கைதிகளாக்கப்பட்டனர். அவர்களை விடுவிப்பதற்காக அத்தீனியர்கள் பியோஷியாவைச் சுயேச்சையாக விட்டுவிட்டனர். எனவே ஈஞேபைடாவின் வேலையைக் கோரோனியா யுத்தமானது பாழாக்கியது.

இந்த நட்டத்தைக் குறித்து வருந்த ஆதென்ஸ்ஸிற்கு ஒரு காரணமும் இல்லை. ஏனென்ருல் தனது பேரரசின் வலுப்படுத்தலுக்கு பியோஷியாவின் மேல் ஆதிக்கம் அவ்வளவாகப் பொருத்தமற்றதாகும். பியோஷியா நாட்டிலுள்ள எண்ணிறந்த நகர அரசுகளை அடக்கித் தம் கையின் கீழ் வைப்பதான காரியம் தனது இராணுவ மூல வளங்களுக்கு ஒரு பெரிய பளுவாகும். அதே சமயத்தில் இந்த இராணுவ நடவடிக்கைகள் இலாபகரமாயுமிரா. பியோஷியாவை இழந்தபின் ஆதென்ஸ் போஸிஸ்ஸையும் லோக்ரிஸ்ஸையும் இழந்தது. போஸிஸ் இப் பேரரசிலிருந்து விலகியது ஒரு வியப்பான நிகழ்ச்சியாகும். சில ஆண்டுகளுக்குமுன் டெல்பியைப் போக்கியர்கள் கைப்பற்றினர். அவர்களுடைய கைகளிலிருந்து இந்தப் புனித கோயில் திருவிடத்தை எடுத்து டெல்பியர்கள் வசம் கொடுக்கும்படி ஸ்பார்ட்டர்கள் ஓர் இராணுவத்தை அனுப்பினுர்கள். ஆனுல் ஸ்பார்ட்டர்கள் திரும்பிய

வுடன், பெரிக்கிளீஸ்ஸின் தலைமையின் கீழ் ஓர் அத்தீனிய இராணுவம் அங்குச் சென்று, அத் திருவிடத்தைப் போக்கியர்கள் வசம் திரும்பிக் கொடுத்தது. இது ஒரு புனித யுத்தமாகும். ஆயினும் இது அந்த ஐந்து ஆண்டுகள் தாற்காலிகமாகப் போர் நிறுத்தும் திட்டத்தை அழிக்காதவண்ணம் நடத்தப்பட்டது. அவர்கள் டெல்பியைத் தம் வசம் வைத்திருப்பதற்கு அத்தீனியர்கள்மேல் சார்ந்திருப்பதுபோல் தோன்றினாலும், போக்கியர்கள் அவர்களுடைய நேச நாட்டுக் குழுவிலிருந்து விலகிக்கொண்டனர். போக்கிய நகரங்களில் ஏற்பட்ட சிறு குழு ஆட்சியினரின் மாறெதிர் செய்கைகளே இந்த மாறுதலுக்குக் காரணமாகும். பியோஷியாவில் சிறு குழு ஆட்சியினரின் கிளர்ச்சி போஸிஸ்ஸையும் பாதித்தது குறிப்பிடத்தக்கதாகும்.

கோரோனியாவில் ஏற்பட்ட தோல்வியானது அத்தீனிய இராணுவத்தின் மதிப்பை மங்கலாக்கியது. மேற்கூறிய நிகழ்ச்சிகளைவிட மிகவும் துயரார்ந்த விளைவுகளும் தோன்றின. ஒரே சமயத்தில் யூபியாவும் (Eubeoa) மேகராவும் ஆதென்ஸ்ஸை எதிர்த்துக் கிளர்ச்சி செய்தன. இங்கேயும் சிறு குழு ஆட்சியினரது கட்சிகள் மும்முரமாக வேலை செய்துவந்தன. ஏழு கோத்திரங்களின் படைகளைக் கூட்டிக் கொண்டு தளகர்த்தரான பெரிக்கிளீஸ் உடனடியாக யூபியாவிற்குச் சென்றார். எஞ்சிய மூன்று கோத்திரங்களின் படைகள் மேகாரிட்டுக்குள் புகுந்தன. பெரிக்கிளீஸ் யூபியாவை அடைந்த உடன் மேகராவிலுள்ள கோட்டைப் பாதுகாப்புப் படையானது மொத்தமாகக் கொலை செய்யப்பட்டுவிட்டதென்றும், பெலோப்போனீஸியப் படையொன்று அட்டிக்காவை பயமுறுத்திக்கொண்டிருக்கின்றது என்ற செய்தியையும் அறிந்தார். இவர் உடனே ஆதென்ஸ்ஸிற்குத் திரும்பினார். ஆண்டோஸைடிஸ் (Andocides) தலைமையின்கீழ் மேகாரிட்டிற்குச் சென்ற படையுடன் தம் படையைச் சேர்க்கவேண்டும் என்பது இவருடைய முதல் நோக்கமாயிற்று. ஆனால் கிழக்குக் கடற்கரையோரமாயுள்ள சாலையில் பிளிஸ்டோயனக்ஸ் (Pleistoanax) மன்னரும் அவருடைய லாஸிடீமோனியர்களும் பாளைய மிறங்கியிருந்ததால் ஆண்டோஸைடிஸ்ஸும் பெரிக்கிளீஸும் பிரிக்கப்பட்டனர். எனவே, ஆண்டோஸைடீஸ் ஈகோஸ்தீனி (Aegosthenae) என்னும் இடத்தில், கொரிந்திய வளைகுடாவின் ஒரு மூலையில் பதுங்கியும் ஊர்ந்தும் சென்று பியோஷியாவின் வழியாக அட்டிக்காவிற்குத் திரும்பிச் செல்லும்படிக் கட்டாயப்படுத்தப்பட்டார். பித்தியோன் (Pytthion) என்ற மேகராவின் மனிதன் ஒருவனால் இந்தப் படையானது வழிகாட்டி நடத்தப்பட்டது. "பாகீயிலிருந்து (Pagae) பியோஷியாவின் வழியாக ஆதென்ஸ்ஸிற்குத் தம்மைப் பாதுகாத்து நடத்திய" பிதியோனுக்கு இந்த மூன்று கோத்திரங்கள் காட்டிய நன்றியானது அவனுடைய மரணத்திற்குப்பின் நிறுத்தப்பட்ட ஞாப

கார்த்தச் சின்னத்தில் பொறிக்கப்பட்டுள்ளது. இன்றுவரை அந்தக் கல்லானது இருந்து வருகின்றது; அதில் பொறிக்கப்பட்ட அடிகள் அப் பெரிய இடுக்கண் வந்தபோது நடந்த நிகழ்ச்சிகளை மனத்தை உருக்கும் வகையில் நினைப்பூட்டுகின்றன. ஆனால் அட்டிக்காவில் இரண்டு படைகளும் இணைந்தவுடன் இந்த இடுக்கண்ணானது வெயில் முன் பனிபோல் மறைந்தது. பெரிக்கிளீஸ் திடீரென்று திரும்பியது லாஸிடீமோனியர்களை நடத்திவந்த பிளிஸ்டோயனக்ஸ்ஸைச் சற்றுத் திகிலுறச்செய்தது. திரியேசியன் (Thriasian) சமவெளி மட்டும் முன்னேறிய இவர் ஆதென்ஸ்ஸைத் தாக்குவது பயனற்ற செய்கை என எண்ணித் தம் அடிகளைத் திரும்பி எடுக்க ஆரம்பித்தார். இவ் விதமாக பெரிக்கிளீஸ் யூபியாவை அடக்குவதற்கு விடுதலை செய்யப் பெற்றார். தீவின் வடக்குப் பாகத்திலுள்ள ஹிஸ்டியா (Histiaea) அதிகப் பிடிவாதமாக யுத்தம் புரிந்ததால் மிகவும் கொடூரமாக நடத் தப்பட்டது. அந் நகரவாசிகள் அங்கிருந்து துரத்தப்பட்டனர். அவர்களுடைய நிலப்பகுதிகள் ஆதென்ஸ்ஸுடன் இணைக்கப்பெற் றன. ஓரியோஸ் (Oreos) என்ற புதிய குடியேற்றம் ஹிஸ்டியாவின் இடத்தை எடுத்துக்கொண்டது. மற்ற அரசுகளைப் பொறுத்தவரை யில் ஒவ்வொரு அரசுடனும் ஆதென்ஸ் உடன்படிக்கை செய்துகொண் டது. சால்ஸிஸ்ஸுடன் (Chalcis) செய்த உடன்படிக்கைகள் இன்றும் கல்லில் பொறித்துள்ளதை நாம் காண்கின்றோம். யூபியாவின் எடுத் துக்காட்டு மற்ற நாடுகளுக்கும் பரவும் என்று பயந்த அத்தீனியர்கள் தங்களுக்குக் கீழ்ப்பட்ட நாடுகள் செலுத்தவேண்டிய கப்பத்தொகை யைக் குறைத்தனர். ஐந்தாண்டு தாற்காலிகப் போர் நிறுத்தக் கால மானது முடிவுக்கு வந்துகொண்டிருந்தது. சமாதானம் எவ் வகையா லும் நிலவ வேண்டும் என்று முழு நம்பிக்கை கொண்ட அத்தீனி யர்கள் எண்ணிறந்த சலுகைகளைக் கொடுத்து நீடிக்கக்கூடிய உடன் படிக்கையைச் செய்ய வேண்டா வெறுப்புடன் முன்வந்தனர். மேகா ராவை அவர்கள் இழந்தபோதிலும் நிசியா (Nisaea), பாகி (Pagae) என்ற இரண்டு துறைமுகப்பட்டினங்களைத் தம்வசம் வைத்திருந்த னர். இவைகளையும், இதற்கு மேலாக அக்கியாவையும் (Achaea) விட்டுக்கொடுக்கவும் ஒப்புக்கொண்டனர். இதை அடிப்படையாகக் கொண்டு அத்தீனியர்களுக்கும் பெலோப்போனீஸியர்களுக்கு மிடையே முப்பது ஆண்டுகளுக்கு ஓர் உடன்படிக்கை செய்யப்பட் டது. இந்த உடன்படிக்கையில் இரு தரப்பாரின் நேச நாடுகள் யாவும் வரிசைக்கிரமமாகக் கூறப்பெற்றன. ஆதென்ஸ் லாஸிடீம னின் நேச நாடுகளையும், லாஸிடீமன் ஆதென்ஸ்ஸின் நேச நாடுகளை யும் தம்முடைய நேச உடன்படிக்கையில் சேர்க்கக்கூடாதென்று முனைப்பாக ஒரு கட்டுப்பாடு ஏற்படுத்தப்பட்டது. ஆனால் நடுநிலை அரசுகள் எக் கூட்டத்தையும் சேரலாம் என்று அனுமதிக்கப்பட் டனர்.

ஆதென்ஸ்ஸைப் பொறுத்த வரையில் இந்த சமாதான உடன்படிக்கையானது மிகவும் ஊறுபாடு செய்வதாயிருந்தது. அட்டிக்காவின் நிலப்பாகத்தில் பெலோப்போனீஸியர்கள் அடிவைத்ததன் விளைவால் ஏற்பட்ட கிலியினுல்தான் இந்த உடன்படிக்கை கையொப்பமிடப்பட்டது. மற்றப்படி ஒருவேளை இந்த உடன்படிக்கை ஏற்பட்டிருக்கவே இருக்காது. பியோஷியாவை இழந்தது ஒருவகையில் ஆதென்ஸ்ஸிற்கு இலாபமேயாகும். அத்தீனியர் அக்கியாவை விட்டு வெளியேறியதையும் அசட்டுத்தனமாக எண்ணித் தாங்கிக் கொள்ளலாம். ஆனுல் மேகாரிட்டை இவர்கள் இழந்தது ஒரு பெரும் பேரடியாகும். ஏனென்ருல் நீண்ட சுவர்களையும், ஜேரேனியாவின் (Geranea) கணவாய்களையும் ஆதென்ஸ் தன்வசம் கொண்டிருக்குமட்டும், தன் நிலப்பாகத்தில் பெலோப்போனீஸியர்களின் படையெடுப்புகளிலிருந்து அத்தீனியர்கள் காப்பாற்றப்பட்டு வந்தனர். இனிமேல் அவ்விதப் படையெடுப்புகளுக்கு அட்டிக்கா ஒரு திறந்த வழியாயிற்று. இதைத்தவிர கிரிஸியன் வளைகுடாவிலும் (Crisaean Gulf) அதன் நிலைமை மிகவும் வலுவற்றதாய் விட்டது. ஒரு நிலத்தைச் சார்ந்த பேரரசை நிறுவுவதற்காக அது செய்த முயற்சியானது சிறிது காலத்திற்குத்தான் வெற்றியுடன் காட்சியளித்தது. தனது முழு பலத்தையும் தனது கடலைச் சார்ந்த பேரரசைக் காப்பாற்றுவதில் செலவழிக்கவேண்டும் என்பதே ஆதென்ஸ் இதிலிருந்து படித்த படிப்பினையாகும். அத்தீனியர்களுக்கு இது மிகவும் இருளடைந்த நேரமாகும். கிட்டத்தட்ட இழந்து போன நம்பிக்கையை மீண்டும் அளிக்கவும் சோர்வடைந்த மனநிலையைப் புதுப்பிக்கவும் பெரிக்கிளீஸ்ஸின் செயல் நலமும், பேச்சுத்திறமும் அதிகமாகச் செலவிடப்பட்டிருக்க வேண்டும். எல்லா முறையிலும் யூபியா பத்திரமாக அத்தீனியர் வசம் இருந்து வந்தது. அறுபது ஆண்டுகளுக்கு முன் பியோஷியர்களும் சால்ஸிடியர்களும் ஒன்று சேர்ந்து தாக்கிய அந்த நெருக்கடியான நேரத்தில் தமது மூதாதையர்கள் கொண்ட வெற்றியை மக்கள் தமது நினைவிற்குக் கொண்டு வந்திருக்கலாம். அந்த வேளையில் கொள்ளைப் பொருளில் பத்தில் ஒரு பாகமானது அத்தீனு (Athena) தேவதைக்கு அர்ப்பணம் செய்யப்பட்டது. பெரிக்கிளீஸ் இப்போது கிடைத்த கொள்ளைப் பொருள்களில் பத்தில் ஒரு பாகத்தில் ஒரு வெண்கலத் தேரைச் செய்தார். இப்படிச் செய்ததன் மூலம் பழைய வெற்றியையும் தனது வெற்றியையும் ஒன்ருக இணைத்தார். இது ஒரு நெருங்கிய ஒருபோகு ஆகும் (parallel). ஏனென்ருல் தமது நாட்டை அத்தீனியக் கட்டுப்பாட்டிலிருந்து விடுவித்த பியோஷிய சிறு குழு ஆட்சியினர், யூபியாக் கலகத்தைத் தூண்டி விட்டனர். சேமஅரணுகிய அக்ராபோலீஸ்ஸின்மேல் தேர் நின்ற பளிங்குக்கல் அடிப்பகுதியானது இப்போது கிடைக்கப்பெற்றுள்ளது. இதில் பொறிக்கப்பட்டும், ஹெரோடட்டஸ் (Herodotus) படித்தும், அதைப் பார்த்து

எழுதியதுமான அடிகளின் சில எழுத்துகளை நாம் காண முடிகின்றது. அந்த அடிகள் கூறுவதுபோல் அத்தீனியர்களின் பிள்ளைகள் பியோஷியர்களின் 'திமிரை அடக்கினர்' என்ற நினைவுதான் கோரோனியா தோல்விக்கு இங்கு அளிக்கப்பட்ட ஒரே ஆறுதலாகும். யூபியாவை அடக்கியதைப்பற்றி பெரிக்கிளீஸ் சொற்பொழிவு ஆற்றியிருக்கும் போது, அத்தீனியக் கடல் பேரரசின் எதிர்காலத்தைக் குறித்தும் கூறியிருக்கலாம். பின் ஒரு காலத்தில் மனம் நொந்து கிடக்கும் சமயம் இவர் கூறியதாகக் கூறப்படும் வார்த்தைகளைக்கொண்டு இவர் அத்தீனிய மக்களைத் தூக்கிப் பேசியிருக்கலாம். 'உலகில் மக்கள் அணுகக்கூடிய நிலம், நீர் என்ற இரண்டு பகுதிகளில், ஒரு பகுதியில் நீங்களே ஒருவராலும் தடுக்க முடியாத முதல்வர்கள்; இதில் நீங்கள் விரும்பிய எல்லைக்கு உங்கள் பேரரசைப் பரப்பலாம்; எங்கே வேண்டுமானாலும் நுழைந்து போகக்கூடிய உங்கள் கப்பற்படையைப் பெரிய மன்னராலாவது அல்லது வேறு எந்த அரசராலாவது தடுக்கமுடியவே முடியாது.'[1]

## 5. பெரிக்கிளீஸ்ஸின் பேரரசுக் கோட்பாடும் அந்தக் கோட்பாட்டிற்கு எதிர்ப்பும்

பாரசீகப் போரானது முடிவு பெற்றதும் அத்தீனிய நேச உடன்படிக்கையைச் சேர்ந்த நகரங்கள் இந்தக் கூட்டுக் கழக இணைப்புக் கலைக்கப்படவேண்டும் என்றும், அதில் உள்ள நகரங்கள் தமது பழையதும் நேர்மையானதுமான சுதந்திரத்தைத் தாம் மறுபடியும் மேற்கொள்ள வேண்டுமென்றும் உரிமை கொண்டாடியிருக்கலாம். சமாதானம் நிறுவப்பட்டுவிட்டது; ஆனால் அந்த சமாதானமானது நிலைப்பட வேண்டுமானால் பாரசீகத்தின் வலிமைக்கு எதிராக எல்லா நகரமும் ஒன்று சேர்ந்தால்தான் முடியும் என்பது இந்த உரிமைக் கொண்டாட்டத்திற்கு ஏற்ற மறு உத்திரவாகும். கூட்டுக் கழகம் கலைக்கப்பட்டால் நகரங்கள் தனித்தனியாகவும் உடனடியாகவும் காட்டுமிராண்டியர்களுக்கு இரையாகிவிடும். ஆனால் இப்போது கூட்டுக் கழகமானது ஒரு பேரரசாயிற்று. ஆதென்ஸ் 'பேரரசின் ஆதரவாளரான' அரசாகப் பேரவாக் கொண்ட புதிய வாழ்க்கையில் ஈடுபட்டுள்ளது. தனக்குக் கீழ்ப்பட்ட நகரங்களின்மேல் இது சுமத்திய கப்பமானது அவ்வளவு கொடுமையானதன்று. அதுவுமன்றி, கப்பத்தொகையானது அடிக்கடி மாற்றி அமைக்கப்பட்டது. போரின் நெருக்கடியால் உயர்த்தப்பட்ட கப்பத் தொகையானது, ஐந்தாண்டுத் தாற்காலிகப் போர் நிறுத்தத்திற்குச் சற்றுமுன் அதன் பழைய தொகைக்குக்

[1] த்யூஸிடிடிஸ் (Thucydides), ii, 62—மொழிபெயர்த்தவர் ஜோவட் (Jowett)

குறைக்கப்பட்டது. மற்ற நகரங்களை ஆதென்ஸ் தனது நாணய முறையை உபயோகிக்கக் கட்டாயப்படுத்தவில்லை ஒவ்வொரு நகரமும் தம் தம் தங்கச்சாலைகளை வைத்திருக்கலாம். நாம் அறிந்தபடி அநேகம் தங்கச் சாலைகளைக் கொண்டிருந்தன. சுதந்திர விருப்பம் ஏகமாக வளர்ச்சியடைந்த இந்தச் சமூகங்களுக்கு, பேரரசில் காணப்பட்ட சில நிகழ்ச்சிகள் கசப்பைக் கொடுத்தன. யூபியாவின் கலகமும், அது அடக்கப்பட்ட முறையும் வலிமையின் ஆட்சியை ஒளிவு மறைவின்றி எடுத்துக் காட்டிற்று. தமது ஆட்சிவல்லவரின்மேல் நகரங்கள் கொண்டுள்ள மன உணர்ச்சிகளை நன்ருக அறியவேண்டுமானுல் ஒவ்வொரு நகரத்திலும் ஒரு சிறுகுழு ஆட்சிக் கட்சியும் மக்களாட்சிக் கட்சியும் இருந்தன என்பதை நாம் நினைவில் வைத்துக்கொள்ளவேண்டும். மக்களாட்சியினர் ஆதென்ஸ்ஸால் ஆதரிக்கப்பட்டுவந்தனர். அவர்கள் சாதாரணமாக ஆதென்ஸினுடன் நட்புக்கொண்டிருந்தனர். சிறுகுழு ஆட்சியினர் கலகம் செய்வதற்கு வாய்ப்பைத் தேடிக் கொண்டிருந்தனர். எனவே கலகம் ஏற்படும்போதெல்லாம் ஆதென்ஸ் தனது நேச நாடுகளின் வெறுப்பைப் பெற்றுள்ளது என்பது முறையாகாது. பாரசீகத்துடன் சமாதானம் ஏற்பட்ட உடனே கேரியாவிலும் (Caria) லிசியாவிலும் (Lycia) உள்ள நகரங்கள் அத்தீனியப் பேரரசிலிருந்து விலகிக் கொண்டன.[1] ஆனுல் இவைகளில் அநேகம் மேலீடாகவே கிரேக்க நாகரிகத்தைக் கொண்டிருந்தன. இவைகளைத் தன் ஆட்சிக்குள் வைப்பதற்கான வழிகளை எடுத்துக் கொள்வது வீண் என்று கருதி, ஆதென்ஸ் தனது பேரரசிலிருந்து இவைகள் விலக விட்டுவிட்டது.

அண்மையில் நடந்த யுத்தத்திலே பெரிக்கிளீஸ் அத்தீனிய மக்களின் வழிகாட்டியாயிருந்தார். இவருடைய யோசனைகளே அம் மக்களின் பேரரசுக் கோட்பாட்டை நடத்திவந்தது. ஆனுல் அந்தக் கோட்பாடானது மறுக்கப்படாமலில்லை. அவருடைய தலைமையும் எதிர்க்கப்படாமலுமில்லை. ஆதென்ஸிலிருந்த வலிமை பொருந்திய சிறுகுழு ஆட்சியின் கட்சி தங்களுடைய நகரத்திலுள்ள மக்களாட்சியை வெறுத்ததுமன்றி, அத்தீனியப் பேரரசையும் குற்றஞ்சாட்டிப் பழித்தது. இந்தக் கட்சியில் அந்நகர், தம் கட்சியின் உட்கோளுக்காகவும், பெரிக்கிளீஸை எதிர்க்கவேண்டும் என்னும் அவாவினுலும், பெரிக்கிளீஸின் பேரரசுக் கோட்பாட்டை எதிர்த்தனர். ஆனுல் பொல்லாப்பு நிறைந்த தன்னயம் பொருந்திய தனது சொந்த நகராகிய ஆதென்ஸ்ஸிற்கு விரோதமாக உடன்படிக்கையைச் சேர்ந்த நேச நகரங்களின் நலத்தை உண்மையில் தனதாகப் பாவித்த

[1] கேரியாவின் கப்பங்கட்டும் மாவட்டமானது கி. மு. 443-2 முதல் 439-8 வரை நான்காண்டுகளே உளதாயிருந்தது. இதன்பின் எஞ்சிய கேரிய நகரங்கள் அயோனிய மாவட்டத்துடன் இணைக்கப்பெற்றன.

நற்பெயர் ஒரே ஒரு மனிதருக்குத்தான் சேரவேண்டும். அவர்தாம் மீலிஸியாஸ்ஸின் (Melesias) மகனுகிய தூஸிடைடிஸ் (Thucydides) ஆவார். இவர் பல நேச நாடுகளுடன் தொடர்பு கொண்டிருந்தார். பாரசீகத்திற்கு விரோதமாகக் கிரீஸ் பாதுகாக்கப் படவேண்டும் என்ற காரணத்திற்கே கப்பப்பணம் வசூலிக்கப்பட்டது; ஆகவே அதே காரணத்திற்கு மாத்திரம் அப் பணம் உபயோகிக்கப்படவேண்டும் என்று வற்புறுத்தினுர். மேலும் நேச நகரங்களுக்கு உதவாமல் ஆதென்ஸ் தன்னைப் பொறுத்தவரையில் தன்மேலேயே மற்றக் காரியங்களுக்காக இப் பணத்தைச் செலவிட உரிமையற்றது என்றும் கூறினுர். பியோஷியாவில் ஆதென்ஸ் யுத்தம் நடத்துவதற்கு அல்லது ஆதென்ஸில் ஒரு புதிய கோயில் கட்டுவதற்கு நேச நகரங்கள் பணம் கட்டவேண்டும் என்பது அநீதி என்றும் கருதினுர். இவை யாவும் நீதியான கருத்துகளேயாகும். ஆனுல் ஒரு நாட்டின் அரசியல் மேன்மையின் வளர்ச்சிக்கு நீதியானது முழுவதும் உகந்ததன்று. எம்முறையைக் கைக்கொண்டாவது தனது நாட்டைப் பெரியதொரு நாடாக்கப் பெரிக்கிளீஸ் தீர்மானங்கொண்டார். அத் தீர்மானத்தை நிறைவேற்ற 'நேச நாடுகளைத் தம் கையின் கீழ்ச் சரியாக வைக்க வேண்டும்'—இச் சொற்ருெடர் இவருடைய சொந்தமானதாகவே தோன்றுகிறது—என்ற கோட்பாட்டை பெரிக்கிளீஸ் கைக் கொண்டார். இந்தப் பொல்லாத பேரரசுக் கோட்பாட்டிற்கு விரோதமாகப் பல குரல்கள் எழும்பின என்பதை அறிவது மிகவும் இனிமையாக இருக்கின்றது.

தூஸிடைடீஸ்ஸை (Thucydides) ஆதரித்த கட்சியின் தீவிர வாதிகள் மக்களாட்சியை ஒழிப்பதற்காக ஆதென்ஸை அதன் பகைவர்களிடம் காட்டிக் கொடுக்கவும் தயங்கியிருக்கமாட்டார்கள். டானுக்ரா (Tanagra) யுத்தத்தின் போதும் இவர்கள் இம்மாதிரி செய்ய முயன்றனர். எனவே இவர்கள் ஆதென்ஸ் கையின் கீழுள்ள நகரங்களில், ஆதென்ஸ்ஸின் ஆட்சியை ஒழிக்க வேண்டும் என்று பாடுபட்டுக் கொண்டிருந்த சிறு குழு ஆட்சிக் கட்சிகளுக்கு மறைமுகமாக உதவியளிக்க எத்தனித்திருக்கமாட்டார்கள். ஐந்தாண்டு தாற்காலிகப் போர் நிறுத்தக் காலத்தில் பல இடங்களில் சிறுகுழு ஆட்சி தனது தலையைத் தூக்கியது. பியோஷியா இழந்து போவதற்குச் சிறுகுழு ஆட்சி இயக்கங்களே காரணமாகும். மேகாராவிலும், யூபியாவிலும் ஏற்பட்ட கலகங்களும் சிறுகுழு ஆட்சி இயக்கங்களாலேயே உண்டாக்கப் பட்டவை. போஸிஸ்ஸிலும் (Phocis)கூட சிறுகுழு ஆட்சி ஏற்படுத்தப் பட்டது. இவ் விதமாக எல்லா இடங்களிலும் காணப்பட்ட சிறுகுழு ஆட்சியின் நடவடிக்கைகளின் எதிரொலி ஆதென்ஸ்ஸிலும் காணப் பட்டிருக்கும் என்பதில் சந்தேகம் இல்லை. இந்த ஆண்டுகளில் எதிர்க் கட்சியானது பெரிக்கிளீஸை மிகவும் உரக்கவும், வலிமையாகவும்

தாக்க முற்பட்டது. இந்த எதிர்ப்பைப் பெரிக்கிளீஸ் மிகவும் திறமை யுடன் சமாளித்தார். முழுவதும் பேரரசை ஆதரிப்பதும் அதே நேரத்தில் ஆதென்ஸ்ஸில் மிகவும் விரும்பப் பட்டதுமான ஒரு புதுக் கோட்பாட்டை இவர் புகுவித்தார். இதன் விளைவால் இவருடைய எதிரிகள் வாயடைக்கப் பெற்றனர்.

தன்னுடைய நகரத்தின் பேரரசை வலிவு படுத்துவதற்கு பெரிக் கிளீஸ் கையாண்ட முறைகளில் மிகவும் நல்ல விளைவுகளை உண்டாக் கியது. அத்தீனிய மக்களை வெளி நாடுகளில் குடியேற வைக்கும் ஏற் பாட்டு முறையேயாகும். பல பெரிய அரசியல் வல்லுநர்களின் முறை களைப் போலவே இந்தக் கோட்பாடும் இரண்டு மிகவும் வித்தியாச மான பிரச்சினைகளுக்கு விடையளித்தது. பேரரசின் பல பாகங்களுக்கு அனுப்பப்பட்ட குடியேற்றக்காரர்கள், ஆதென்ஸ்ஸின் கையின்கீழ் இருந்த நேச நாடுகளில் கோட்டைப் படைகளாக நடந்து கொண் டனர். அதே நேரத்தில் இவர்கள் ஆதென்ஸ்ஸில் மிதமிஞ்சிய மக்கள் தொகையைக் குறைப்பதற்கும் உதவினார்கள். பெரிக்கிளீஸ்ஸின் கிளெருக்கிகள் (Periclean cleruchies) என்று அழைக்கப்படும் இக் குடி யேற்றங்களில் முதலாவது குடியேற்றமானது பெரிக்கிளீஸின் மேற் பார்வையிலேயே திரேஸியன் செர்சானிஸ்ஸில் (Thracian Chersonese) நிறுவப்பட்டது. தீபகற்பத்திலுள்ள உடன்படிக்கையில் ஈடுபட்ட நகரங்களிலிருந்து நிலங்கள் வாங்கப்பட்டுப் பெரும் பண்ணைகளாகப் பிரிக்கப்பட்டன. ஒவ்வொரு பண்ணைக்கும் முக்கியமாக ஏழைகளும், வேலையில்லாமல் திண்டாடுபவர்களுமாகிய ஆயிரம் அத்தீனியக் குடி மக்கள் அனுப்பப்பட்டனர். இவர்கள் அங்குள்ள நகரங்களில் சட்டப் படி உடைமை உரிமைகளைப் பெற்றனர். நிலத்திற்கு விலை கொடுப் பதற்குப் பதிலாக நகரங்கள் கட்டவேண்டிய கப்பப் பணமானது குறைக்கப்பட்டது. திரேஸியர்களுக்கு விரோதமாக நாட்டைக் காப்பாற்றுவதற்காக, அதே சமயத்தில் பெரிக்கிளீஸ் முற்காலத்தில் மில்டியேடிஸ் (Miltiades) கட்டிய சுவர்களைப் பழுது பார்த்தார். தெரிஸ் (Teres) என்ற திரேஸிய இளவரசன் தன் வலிமையைப் பெருக்கிக்கொண்டிருப்பதை நாம் பார்க்கும்போது பெரிக்கிளீஸ் செய்த இவ் வேலையானது மிகவும் கூரறிவுள்ளதாகும்.

செர்சானிஸில் ஏற்படுத்தப்பட்ட குடியேற்றங்கள் மற்றெல்லா வற்றைக் காட்டிலும் மிகவும் முக்கியமானவை. இதற்குப் பின் ஒரு கால், ப்ரோபாண்டிஸ்ஸின் (Propntis) வாயிலில் வாயில்காப்போர் போல அமைந்துள்ள லெம்னஸ் (Lemnos), இம்ப்ராஸ் (Imbros) தீவு களில் குடியேற்றங்கள் நிறுவப்பட்டிருக்கலாம். இதே கோட் பாடானது யூபியாவிலும், ஈஜியப் பிரதேசத்திலுள்ள சில தீவுகளிலும், ஸ்ட்ரைமான் நதியின் மேற்குக் கரையில் ஒருவேளை இருந்திருக்கக்

கூடிய மறைவடக்கமான (mysterious) திரேஸியப் பிரியாவிலும் (Brea) கைக்கொள்ளப்பட்டது. பிரியாவில் குடியேற்றம் அமைப்பதற்காக இயற்றப்பட்ட சட்டமானது இன்றைக்கும் அழியாமல் இருக்கின்றது. சோலானின் முறைப்படிப் பிரிக்கப்பட்ட வகுப்புகளில் இரண்டு மிகவும் எளிய வகுப்புகளே இந்தக் குடியேற்ற மக்கள் சேர்ந்ருக்க வேண்டும் என்ற நியமனம் பெரிக்கிளீயக்ளெருக்கிகளின் குணவியல்புகளை எடுத்துக் காட்டுகின்றது. வேலையில்லாமல் தெருக்களில் கூடிக் கொண்டிருந்த ஆயிரக் கணக்கான மக்களுக்கு வேலையீன்றதால் இந்தக் கோட்பாடானது ஆதென்ஸ்ஸில் மிகவும் விரும்பப்பட்டு வந்தது. தன்னுடைய ஆதிக்கத்தைப் பெருக்கவும், எதிரிகளைக் குழப்பித் திகைக்க வைக்கவும் பெரிக்கிளீஸ் கையாண்ட முறைகளில் இது மிகவும் சிறப்பானது என்று கூறலாம். ஆனால் எந்தெந்த நேச நாடுகளில் இந்தக் குடியேற்றங்கள் நிறுவப்பட்டனவோ அந்த நாடுகளில் இந்தக் கோட்பாடானது வெறுக்கப்பட்டது. அத்தீனிய ஆட்சியில் மற்றெல்லாத் தோற்றங்களைக் காட்டிலும் இதுவே மிகுந்த மனக்குறையை உண்டு பண்ணியதாகத் தெரிகின்றது.

தங்களிடம் பெரும் தியாகங்களை எதிர்நோக்காது, தமது நகரத்தைப் பெரியதாகவும் வலிமையுள்ளதாகவும் செய்ய முற்பட்ட கோட்பாட்டில் அநேக அத்தீனியர்கள் மோகங் கொண்டனர். நாங்கள் இராணுவப்பணி ஆற்றமாட்டோம் என்று கூறும் அந்த நாள் இன்னமும் வரவில்லை. பேரரசையைப் பாதுகாப்பதற்கான செலவானது தமது கைகளைப் பிடிக்காதவரை அவர்கள் மனநிறைவுடன் காணப்பட்டனர். ஏனென்றால் அவர்களுடைய வாணிபத்தைப் பரப்பினதுமன்றி, பேரரசானது அவர்களுடைய செழிப்பையும் அதிகரித்தது. தனது நகரத்தின் நுகத்தடியை ஆதென்ஸ்ஸின் கைகளுக்குக்கீழ் உள்ள சமுதாயங்களின் கழுத்துகளில் வைத்து, ஒன்றிற்கும் அஞ்சாத டைரண்டுகள் போல, அழுத்துவதற்குத் தனது முழு சுதந்தரத்தையடைந்த பொதுப்படையான அத்தீனிய நகரவாசியானவன் தடுக்கப்படவில்லை. பேரரசால் கிடைக்கும் இலாபங்கள் அதிகமாகவும், அதனால் ஏற்படும் பளுவானது இலகுவாயும் இருக்குமட்டும் பெரிக்கிளீஸின் பேரரசுக் கோட்பாட்டை மேற்கொள்ள அத்தீனிய மக்களாட்சி தயங்கவே தயங்கியிருக்காது.

இந்தப் பேரரசுக் கோட்பாடானது ஓர் உயர்ந்த ரகத்தைச் சேர்ந்தது. ஆதென்ஸ்ஸின் விதிப்பயன்களை அதன் மிகச் சிறந்த நாள்களில் முன்னின்று நடத்திய அரசியல் வல்லுநருடைய நோக்கமானது அது 'ஹெல்லாஸின் அரசியாகத் தோன்ற வேண்டும்; கடல்களுக்கும் அவைகளுக்கும் அப்பாலுள்ள பெருநிலப்பகுதியிலும் அதன் பேரரசு பெருகவேண்டும்; மேலும் தனது பேரரசின் எல்லைக்குள்

அதைச் சேர்ப்பது அறிவின்மை அல்லது கூடாது என்ற அரசுகளில் ஆதென்ஸ்ஸின் செல்வாக்குப் பரவவேண்டும்' என்பதேயாகும். இந்த உயர்குறிக்கோள் முழுவதுமாக நிறைவேற்றப்பட்டிருந்தால் அது கிரேக்கர்கள் யாவரும் ஒன்று கூடி கூட்டிய சங்கமாயிருக்கும். இச் சங்கமானது ஆதென்ஸ்ஸின் அதிகாரத்தால் ஒன்ருக இணைக்கப்பட்ட போதிலும் இது பொதுவான சமயம், பொதுவான மரபுப்பண்புகள், பொதுவான பழக்க வழக்கங்கள், பொதுவான மொழி முதலியவைகளாலும் இயற்கையாகவே ஆதரிக்கப்பட்டுமிருக்கும்.

கோரோனியாவின் தோல்வியால் பியோஷியா இழக்கப்படு முன்னரே ஆதென்ஸ் தனது அகில கிரேக்கப் பேரவாவைக் கிரேக்க நாடுகளுக்குப் பகிரங்கமாகச் சாற்றுவித்தது. எல்லாருக்கும் பொதுவான காரியங்களைக் குறித்துக் கலந்து பேச, ஆதென்ஸ் எல்லாக் கிரேக்க நாடுகளையும் ஆதென்ஸ்ஸில் நடக்கவிருக்கும் ஹெலனிக் பொதுமன்றத்திற்கு (Hellenic congress) பிரதிநிதிகள் (representatives) அனுப்பும்படி அழைத்தது. பாரசீகர்களால் எரிக்கப்பட்ட கோயில்களை மறுபடியும் கட்டவும், பாரசீகப் படையெடுப்பிலிருந்து தம்மைக் காத்த கடவுள்களுக்குக் காணிக்கைகளை வழங்கவும், யாவரும் ஒன்று சேர்ந்து கடல்களில் காணப்பட்ட கப்பற்கொள்ளைக்காரர்களை அழிக்க வழிகள் அமைப்பதுவுமே கிரேக்கர்கள் ஆராயும்படி ஆதென்ஸ் கூறிய நிகழ்ச்சி நிரலாகும். இத்தாலியரும் சிசிலியரும் பாரசீகப்போரில் நேர் முகமாகச் சம்பந்தப்படாததனுல் இந்த அழைப்பானது மேற்கு நாட்டு கிரேக்கர்களுக்கு வழங்கப்படவில்லை. ஆனுல் பழைய கிரீஸிலுள்ள நகரங்கள் எல்லாவற்றிற்கும், அத்தீனியப் பேரரசைச் சேர்ந்த நகரங்களுக்கும் தீவுகளுக்கும் இவ்வழைப்பானது அனுப்பப்பட்டது. இந்தப் பொதுமன்றமானது கூடியிருக்குமானுல் இது அகில ஹெல்லாஸ் ஆம்பிக்டியானி ஒன்றைத் துவக்கிவைத்திருக்கும். இந்தப் பெரிய சமயக் கூட்டத்திற்கு ஆதென்ஸ் ஒரு மையமாகவும் விளங்கியிருக்கும். இது ஓர் உயரிய கருத்துக்கொண்ட திட்டமாயிருந்திருக்கும். ஆனுல் இந்தத் திட்டமானது அமுலுக்கு வர முடியவில்லை. எவ்வளவு உயர்ந்த கருத்துகளைக் கொண்டிருந்தாலும் அல்லது எவ்வளவு கடவுட் பற்றுள்ளதாயிருந்தாலும் அந்தத் திட்டமானது புதியதும் இடருடையதுமான பாதையில் ஆதென்ஸ்ஸை உயர்வுபடச் செய்யும் நோக்கம் கொண்டிருக்குமாகில் ஸ்பார்ட்டா அத்திட்டத்தை ஆதரிப்பதை நாம் எதிர் பார்க்க முடியாது. பெலோப்போனீஸஸ்ஸில் அத்தீனியத் தூதர்கள் பழிக்கப்பட்டனர். எனவே திட்டம் கைவிடப்பட்டது. இது நடந்து சில நாட்களுக்கெல்லாம் பியோஷியாவில் நடந்த புரட்சியானது பெருநிலப்பகுதியில் ஆதென்ஸ்ஸிற்கு இருந்த பேரரசை அழித்தது.

## 6. கோயில்கள் திருப்பி அமைக்கப்படுதல் (கட்டப்படுதல்)

தன் நகரத்திலும் தன்னுடைய நிலப்பாகத்திலும் உள்ள கோயில்களை முன்னுலைக் காட்டிலும் அதிகச் சிறப்பாகத் திரும்பவும் கட்ட வேண்டும் என்று நிகழ்ச்சி நிரலில் குறிப்பிடப்பட்ட தன்னைக் குறித்த பகுதியை ஆதென்ஸ் எடுத்துச் செய்யவேண்டியதாயிற்று. கட்டடக் கலையைச் சார்ந்த இச் சின்னங்களின் வரலாற்று நோக்கத்தையும், பாரசீகப் போருடன் அவைகள் இணைக்கப்பட்டிருந்ததையும் நாம் சரிவர அறியாவிட்டால், பெரிக்கிளீஸின் தலைமையிலும், அவர் செல்வாக்கின் மூலமாகவும் இப்போது கட்டப்பட்டுவந்த சின்னங்களின் முக்கியத்துவத்தைத் தெரிந்துகொள்ள மாட்டோம். தெய்வங்கள் வசிக்கும் இல்லங்களில் காட்டுமிராண்டியர் இழைத்த தீங்குகளை நீக்குவதும், மீதியர்களைத் (Medes) தோற்கடிப்பதற்குத் தெய்வங்கள் செய்த உதவிகளுக்கு அவர்களுக்குத் தம் நன்றியைக் காட்டுவதும் இந் நகரத்தின் மேல் சமயப் பணிபோல் இந்தப் பொறுப்புகள் விழுந்தன. இந்த மீதியர்களைத் தோற்கடித்ததன் பயனாக ஆதென்ஸ் ஒரு விசாலமான பேரரசை அடைந்ததால், ஆதென்ஸ் இந்தப் பணியைக் கஞ்சத்தனம் கொஞ்சம் கூடக் காட்டாமல் பெரியதொரு முறையில் ஏற்று நடத்துமெனத் தெய்வங்கள் எதிர்பார்த்திருக்கக் கூடும். இப் பணியைப் பிரமாண்டமான முறையில் செய்யப் பெரிக்கிளீஸ் முன்வந்தது, அவருடைய பெருந் தன்மையை நன்ருக விளக்குகின்றது. தெய்வங்களின் இல்லங்களை மேம்படுத்துவதனுல் ஆதென்ஸ் தன்னையே மற்றவர்களின் பார்வையில் உயர்த்திக் கொள்ளும் என்பதை இவர் அறிந்தார். அழகிய கோயில்களைக் கட்டுவிப்பதனுல் தனது வலிமையையும், தனது மிகச் சிறந்த கற்பனைகளையும் உலகத்திற்கு எடுத்துக் காட்டுவதற்கு இது ஒரு தலைசிறந்த வழி என்றும் இவர் அறிந்தார். இவருடைய கட்டடம் கட்டும் திட்டங்கள் இதைவிடப் பரந்த நோக்கத்தையே கொண்டிருந்தன. இதில் பிஸிஸ்ட்ரேட்டிர்களின் (Pisistratids) முன் மாதிரியை இவர் மேற்கொண்டார். பெரிக்கிளீயக் காலத்துக் கட்டடங்கள், அத்தீனியப் பேரரசைப் போலவே பாரசீகப் படையெடுப்பின் நேரடியான விளைவுகள் என்பதை நாம் எப்பொழுதும் மறக்கக்கூடாது.

இருபது ஆண்டுக் காலத்தில் அக்ரோபோலிஸ்ஸின் தோற்றத்தை மாற்றிய நினைவுச் சின்னங்களில் முதல் இடம் பெறுவதானது வெண்கலத்தால் செய்யப்பட்ட மிகப் பெரிய அத்தீனு சிலையாகும். தேவதையானவர் தமது குன்றின் மேலேயே, மேற்குத் திடல் பக்கத்தில் தென் மேற்குப் பாகத்தைப் பார்த்து நிற்கின்ருர். அவருடைய தலைச் சீராவும், ஈட்டியின் முனைப் பாகமும் வெயிலில் பிரதிபிம்பிப்பதைக் கடலில் அதிதூரத்திலிருந்து காணலாம். தெமிஸ்டாகிளீஸ் காலத்தில்

துவக்கி முடிவடையாமல் நின்ற தேவதையின் புதிய இல்லமானது கட்டி முடிவடைய வேண்டும் என்பது ஒரு நெருக்கடியான பணியாகும். இப் பணியானது அதே இடத்தில் அதே அடித்தளத்தின் மேல் ஆரம்பிக்கப்பட்டதானாலும் அது ஒரு புதிய திட்டத்தில் தொடங்கப்பட்டது. இந்தப் புதிய திட்டமானது மிகவும் திறமையுடைய இக்டைனஸ்ஸால் (Ictinus) வகுக்கப்பட்டது. பழைய திட்டத்தைவிட இந்தத் திட்டத்தில் காணப்பட்ட கோயிலானது சிறிது அகலமாகவும், மிகவும் குட்டையாகவும் இருந்தது. இப் புதிய திட்டத்தின்படி பென்டெலிக்கஸ் (Pentelicus) சுரங்கங்களில் கிடைக்கப் பெறும் அட்டிக்காவின் சலவைக் கற்கள் தாம் உபயோகிக்கப்பட வேண்டும்; பழைய திட்டத்தின்படி வெளிநாட்டுப் பாரியன் (Parian) சலவைக் கற்கள் உபயோகிக்கக் கூடாதென்றனர். இக்டைனஸ் வரைந்த திட்டத்தைக் காலிக்கிரேட்டிஸ் (Callicrates) என்னும் மற்ருெரு சிற்பக் கலைஞர் நடைமுறையில் கொண்டு சேர்த்தார். பிற்காலத்தில் பொதுவாகப் பார்த்தினுன் (Parthenon) என்றழைக்கப்பட்ட இந்த டோரியக் கோயிலின் சிற்ப வேலைகளின் அழகுகளைப் பற்றி இங்கு வாதம் செய்வது நமது எல்லைக்குள் அடங்காதது ஆகும். இந்தக் கட்டடமானது இரண்டு அறைகளைக் கொண்டிருந்தது. அவைகளுக்கிடையே திறப்பு யாதும் இல்லை. ப்ரோனுவஸ் (pronaos) மூலமாக உட்செல்லும் கிழக்கு அறையே முறையான கோயிலாகும். தேவதையின் சிலை இங்குதான் உள்ளது. இவ் வறையானது நூறு அடி நீளம். எனவே இந்த அறையானது சட்டத்தின்படி (officially) ஹெகட்டோம்பிடோஸ் (Hecatompedos) என்றழைக்கப்பட்டது. மேற்கிலுள்ள சிறிய அறையின் கதவானது கோயிலின் மேற்குப் பாகத்திலுள்ளது. இவ் வறையானது தேவ கன்னிகையைச் சேவித்து வந்த கண்களுக்குத் தென்படாத கன்னிகைகளின் இருப்பிடமாகத் திட்டமிடப்பட்டிருக்கலாம் எனத் தெரிகின்றது. இதைக் குறித்தே தான் இவ்விடம் பார்த்தினுன் என அழைக்கப் பெற்றது. தேவ கன்னிகையின் இல்லத்தில், கன்னிகைகள் வசிக்கும் ஒரு அறையைக் குறிக்கும் பெயர் எவ்விதம் பாமர மக்களால் அந்தக் கட்டடத்திற்கே வழங்கப்பட்டது என்பதை நாம் எளிதில் அறிந்து கொள்ளலாம். சாதாரண மக்களின் செவியில், பணிமுறை வழக்கத்திற்கு மாருக, பார்த்தினுன் என்னும் பெயர் அத்தீனு பார்த்தினுஸ்ஸின் (Athena Parthenos) கோயிலைக் குறித்ததே யொழிய அவளுடைய கன்னிகைகளின் இருப்பிடத்தை யன்று என்பதைக் காண்க.

கம்பீரத் தோற்றத்துடனும் புன்முறுவல் பூத்த முகத்துடனும், தம் பிரம்மாண்டமான தேகத்தைப் பொன்னுல் போர்த்துக்கொண்டும், தலையில் தலைச்சிராவுடனும், பொன்னுலாகிய வெற்றி அடையாளத்தை வலக்கையில் ஏந்திக்கொண்டும், இடக்கையைக் கேடயத்தின்

THE ATHENIAN ACROPOLIS.

Scale of Yards
0 50 100

Spring of Clepsydra
Temple of Athena and Erectheus
Statue of Athena Promachos
HECATOMPEDON
(Old Temple of Athena Polias)
Propylaea
Temple of Victory
Parthenon
Remains of Pelasgian Walls
Sanctuary of Asclepius
Theatre of Dionysus
Approximate Site of Odeum of Pericles
OLD ORCHESTRA

OLD TEMPLE OF DIONYSUS (probably Pisistratean)
Later Temple of Dionysus (post-Periclean)

படம் 5: அத்தீனிய அக்ரோபாலிஸ்

மேல் வைத்துக்கொண்டும், தன் காலை எரிக்தொனியஸ் (Erichthonius) என்னும் பாம்பு சுற்றிக்கொள்ளத் தேவதை தனது இல்லத்தில் காட்சியளிக்கின்றாள். இது தந்தத்தாலும் பொன்னாலும் மூடப்பட்ட மரத்தால் செய்யப்பட்ட சிலையாகும். தந்தமானது வெளியே தெரியக்கூடிய மாமிசத்தைக் காட்டவும், பொன்னானது ஆடைபோலும் உபயோகிக்கப்பட்டுள்ளன. எனவே இது க்ரைஸ்எலெப்பென்டைன் (chryselephantine) என்று அழைக்கப்பட்டது. பெரிக்கிளீஸ் காலத்தில் செயற்கைக் குழைவுப் பொருளினால் (plastic) உண்டாக்கப்பட்ட கலைக்குத் தன் பெயரைக் கொடுத்த பிடியஸ்ஸால் (Phidias) இந்தச் சிலை செதுக்கப்பட்டது. பிடியஸ் ஒரு தலைசிறந்த அத்தீனியச் சிற்பி. இவர் சார்மைடிஸ்ஸின் (Charmides) மகனாவார். இவர் நகரத்தில் தேவதையின் மற்றொரு அழகு மிகுந்த சிலையைச் செதுக்கித் தம் புகழை இதற்கு முன்னமே நிறுவியுள்ளார். லெம்னாஸ்ஸில் (Lemnos) குடியேறச் சென்ற மக்கள் இந்தச் சிலையை அக்ரோப்பாலிஸ்ஸில் அர்ப்பணம் செய்தனர். இந்த லெம்னியன் அத்தீனாவானது வெண்கலத்தால் செய்யப்பட்டுள்ளது. இச் சிலையானது அத்தீனாவை மக்களுக்கு ஒரு நண்பராகக் காட்டுகின்றது. ஆனால் பார்த்தினானிலுள்ள உருவச்சிலையானது மக்களின் இராணியாகக் காட்டுகின்றது. இவ்விரண்டு சிலைகளும் அழிந்துவிட்டன. ஆனால் இவைகளின் படிகள் (copies) பாதுகாக்கப்பட்டுவந்துள்ளன. இவைகளின்மூலம் நாம் சிற்பியின் வேலைத்திறத்தை ஒருவிதமாக ஊகித்துக்கொள்ளலாம்.

இப் பெருங் கோயிலானது பூர்த்தியாக்கப்படுவதற்கான குழைவுப் பொருள்களைக் கொண்ட அணிகலன்களைத் திட்டமிடவும் செய்யவும் பிடியஸ் கேட்டுக்கொள்ளப்பட்டார். உயர்ந்த தூண்களின் தலைப்பிலுள்ள நடு முகப்புக் கூறுகளில் காணப்படும் பாதி குதிரையும் பாதி மனித உருவமும் பெற்ற சென்டார்களும் அரக்கர்களும் இப் பெருங் கலைஞரால் தீட்டப்படாதவை. ஆனால் அங்குள்ள இரண்டு வில்முகப்பு முகடுகளிலும் தூண்கள் வரிசையாக நிறுத்தப்பட்டிருக்கும் இடத்திற்கு உள்ள பாகத்திலுள்ள கோயில் சுவரில் சுற்றியும் காணப்படும் அகன்ற பட்டையுள்ள சிற்பத்திலும் (frieze) இவர் மக்கள் தம்மையும் தமது சிறந்த திறனையும் போற்றும் நினைவுச் சின்னங்களை விட்டுச் சென்றிருக்கின்றார். கிழக்குப் பாகத்திலுள்ள கதவிற்கு மேலேயுள்ள முக்கோண முகட்டில் நிலவானது மறைந்து சூரியன் உதிக்கத் துவங்கும் போது ஸ்ஸியூஸ் (Zeus) தலையிலிருந்து வெளியேவரும் அத்தீனாவின் பிறப்புக் காட்சியைக்கொண்டு இவர் அலங்கரித்துள்ளார். மேலும் ஐரிஸ் என்னும் தேவலோகத் தூதன் உலகத்தின் எல்லாப் பாகங்களுக்கும் இந் நற்செய்தியைக் கொண்டு செல்லும் காட்சியை இங்கு நாம் காணலாம். மேற்குப் பாகத்திலுள்ள முகட்டில் தேவதையின் வாழ்க்கையில், அதிலும் முக்கியமாக அட்டிக்காவைக் குறிக்கும் ஒரு

பாகம் காணப்படுகிறது. அட்டிக்காவின் நிலப்பகுதி பாஸிடோனின் கைவசமிருக்க வேண்டுமா அல்லது தனது கைவசமிருக்க வேண்டுமா என்று நடந்த போட்டியில் அத்தீனு அக்ரோப்பாலிஸ்ஸில் வெற்றிகாண் பதைக் குறிப்பதே இப் பாகமாகும். இங்கு இவருடைய வசியத்தினுல் பூமியிலிருந்து வந்த ஒலிவக் கிளையும் காட்டப்பட்டுள்ளது. முகட்டின் வடக்குப் பாகமும் தெற்குப் பாகமும் எரிடேனஸ் (Eridanus), இலிஸஸ் (Ilisus) என்ற இரு நதித் தேவர்களை நோக்கிச் சாய்ந்திருப்பதுபோல நாம் ஊகித்துக்கொள்ளவேண்டும். இவ்விரு தேவர்களும் தமதுசொந்த நதிகள் காணப்படும் திசைக்கருகே காட்டப்பட்டுள்ளனர். அத்தீனி யர்கள் தமது இராணிக்குச் செய்த ஆசாரங்களில் முழுப் பற்று நிறை வுடைய ஆசாரமானது கோயில் சுவரில் சுற்றிக் காணப்படும் அகன்ற பட்டையுள்ள சிற்பத்தில் காட்டப்பட்டுள்ளது. நான்காண்டுகளுக்கு ஒரு முறை நடைபெறும் இந்த அகில அத்தீனியப் பண்டிகைகளில் (Panathenaic festival) மக்கள் நீண்ட ஊர்வலமாகக் கோயிலுக்கு வந்து தேவதைக்குப் புதிய அங்கியை அன்பளிப்பாகக் கொடுப்பது வழக்கம். மேற்குப் பாகத்தில் துவங்கி வடக்குத் தெற்குவழியாகச் சென்று இறுதி யில் கிழக்கிலுள்ள வாயிலை இந்த ஊர்வலம் அடைவதைப் பார்த்தினு னில் உள்ள அகன்ற பட்டையுள்ள சிற்பம் வெகு விளக்கமாகக் காட்டி யுள்ளது. கோவிலைச் சுற்றிலும் உள்ள தூண்வரிசைகளின் வழியாகக் காட்சியாளர் நடந்து மேலே நோக்கிப் பார்த்தால் குதிரையின்மேல் செல்லும் அழகிய அத்தீனிய வீரர்கள், தேர் வீரர்கள், நடந்து செல்லும் வாக்குரிமையுடைய நகர மக்கள், பாடகர்கள், பலியிடப் படுவதற்காகக் கொண்டுபோகப்படும் ஆடு மாடுகள், புனித பாத்திரங் களை ஏந்திய கம்பீரமான கன்னிகைகள், நகரத்தின் ஒன்பது ஆர் கன்கள் முதலியவை அத்தீனுவின் இல்லத்தை நோக்கிச் செல்வதை அவர் காண்பார். தனது பண்டிகைத் தினத்தன்று அத்தீனு வான லோகத்தில் சஞ்சரிப்பவர்களுக்குத் தனது இல்லத்தில் .விருந்தோம்பி மகிழச் செய்வதை இச் சித்திரம் குறிக்கின்றது. பெரிய தேவர்கள் தமது அரியணைகளில் வீற்றிருப்பதைக் காணலாம். அத்தீனுவின் ஒரு பக்கத்தில் ஸ்ஸீயூஸ் தேவரும், மற்றொரு பக்கத்தில் ஹெப்பிஸ்டஸ் ஸூம் (Hephaestus) வீற்றிருக்கின்றனர். தேவதைக்குப் பக்கத்தில் மாதர்கள் அணியும் மேலாடையை— ஒரு கால் பழைய மேலாடை யாக இருக்கலாம்—ஒரு பூசாரியின் கைகளில் காண்கின்றோம். மேற்குப் பாகத்திலுள்ள இந்த அகன்ற தட்டைச் சிற்பம் இன்றும் அதன் இடத்தில் காணப்படுகிறது. ஆனல் மற்றவை அவைகளின் இடத்தி லிருந்து நீக்கப் பெற்றுள்ளன—இவைகளில் பெரியதொரு பாகமானது இங்கிலாந்து நாட்டிற்கு எடுத்துச் செல்லப்பட்டது.

தனது குன்றின்மேல் இப்பொழுது அத்தீனு பாலியஸ் (Athena Polias) இரண்டு இல்லங்களைக் கொண்டிருந்தார். ஏனென்றல் பழுது

பார்க்கப்பட்ட பழைய கோயிலானது அழிக்கப்பட வில்லை. மேலும் அதனுள்ளிருந்த பழைய சிலையும் எடுக்கப்படவில்லை. கிட்டத்தட்ட இதே காலத்தில்[1] குன்றின் காவல் அரணைப்போல் காணப்படும் தென்மேற்குப் பாகத்தில் வெற்றிக் குணவியல்பு கொண்ட இத் தேவதைக்கு ஆதென்ஸ் காலிக்கிரேட்ஸ்ஸைக் (Callicrates) கொண்டு மற்றுமொரு சிறிய இல்லத்தைக் கட்டுவித்தது. வெற்றியின் இல்லம் நிறுவப்பட்டதற்கு இதுவே ஒரு தகுந்த இடமாகும். இந்த மேடையின் மேல் ஓர் அத்தீனியன் நின்று நோக்குவானேயானால் அவனுக்குச் சிறிது தூரத்தில் ஸாலமிஸ்ஸையும் (Salamis), ஈகைனுவையையும் (Aegina) காண்பான்; அதே நேரத்தில் சற்றுத் தூரத்தில், ஆர்காலிக் கடற்கரை யோரத்தையும், கொரிந்து நகரின் சேம அரணையும், மேக ரிட் பிரதேச மலைகளையும் அவன் காண்பான். இந்தவெற்றியின் இல்லம் அமைக்கப்பட்ட மேடைக்குப் பின்புறம் ஓர் அத்தீனியன் நிற்பானே யாகில் அவன் பழைய காலத்தில் ஏற்பட்ட நிகழ்ச்சிகளைக் குறித்து ஆழ்ந்த சிந்தனைகளில் இறங்குவதுமன்றி, வருங்காலத்தைக் குறித்து நம்பிக்கைகள் நிரம்பிய கனவுகளைக் காண்பான். பாரசீகப் போரின் நினைவுச் சின்னமாக இக் கோயில் ஏற்படுத்தப்பட்டது என்பதை போதிகைச் சிற்பங்கள் தெளிவாகக் காட்டுகின்றன. கிரேக்கர்களும் ஆமேஸான்களும் அல்லது லாப்பித்தியர்களும் (Lapiths) பாதி குதிரையையும் பாதி மனித தேகத்தையும் உடைய சென்டார்களும் அல்லது கடவுள்களும் அரக்கர்களும் போரிடுவதாகவே மறைமுகமாக இப் பெரும் பாரசீகப் போரானது இக் காலத்து மற்றக் கோயில்களி லுள்ள ஏனைய சிற்பங்களில் காட்டப்பட்டுள்ளன. அத்தீனு நிக்கேயின் (Athena Nike) போதிகைச் சிற்பத்தில் கிரேக்கர்களுக்கும் பாரசீகர் களுக்கும் ஏற்பட்ட ஒரு சண்டையானது காட்டப்பட்டுள்ளது. இது ப்ளெட்டியாவில் (Plataea) நடந்த சண்டையாகும். ஏனென்றால் இதில் கிரேக்கர்களும் பாரசீக அணியில் சேர்ந்து சண்டையிடுவதாகக் காட்டப்பட்டுள்ளது.

ஆனால் பாரசீகர்களால் உடைக்கப்பட்டு, இன்று பழுதுபார்க் கப்பட வேண்டிய பல கோயில் திருவிடங்கள் அட்டிக்காவிலும் ஆதென்ஸ்ஸிலும் இருந்தன. அக்ரோபாலிஸ்ஸிலிருந்து மேற்கே ஒருவன் நகரத்தின் மேற்குப்பகுதியைநோக்குவானுனல், கோலோனஸ் (Colonus) குன்றின் சிகரத்தில் மேல் பென்டெலிக் (Pentelic) சலவைக் கற்களால் கட்டப்பட்ட ஒரு டோரியக் கோயிலைக் காண்பான். இந் தக் கட்டடமானது மற்றெல்லாக் கட்டடங்களைக் காட்டிலும் தலை சிறந்து விளங்குகின்றது. பிரேயஸ்ஸிலிருந்து (Piraeus) கொண்டு

[1] கோயிலையும், பலிபீடத்தையும் கட்டுவதற்கான சாதனங்களை அளிப்பதற்காக கி.மு. 450 ஆண்டு பொறிக்கப்பட்ட சாசனம் சமீப காலத்தில் கண்டுபிடிக்கப்பட்டது.

வந்த சுண்ணும்புக் கற்களால் கட்டப்பட்ட ஒரு பழைய கோயிலுக்குப் பதிலாக இக் கோயில் முன்னரே கட்டப்பட்டது. இது கைவினைக் கலைஞர்களின் தெய்வமாகிய ஹெப்பிஸ்டஸ்ஸிற்கு (Hephaestus) அவருடைய 'மக்கள்' (sons) கட்டிய கோயிலாகும். ஹெப்பிஸ்டஸ் ஆதென்ஸ்ஸில் ஒரு தனிப்பட்ட முறையில் வணங்கப்பட்டு வந்தார். பார்த்தினுனிலுள்ள போதிகைச் சிற்பத்தில் இவர் நாட்டின் தேவிக்கு அருகில் வீற்றிருப்பது கவனிக்கத்தக்கது. கிரேக்கக் கோயில்களில் அழிவு படாத ஒரே கோயில் எப்பிஸ்டஸ்ஸின் இல்லம்தான். இதே காலத்தில் அட்டிக்காவின் தெற்கு முனையாகிய சூனியம் (Sunium) உந்துநிலத்தில் (promontory) பாஸிடோனுக்கு (Paseidon) ஒரு கோயில் சலவைக் கற்களால் கட்டப்பட்டது. போரஸ் கற்களால் (poros-stone) கட்டப்பட்ட பழைய கோயில் பாரசீக யுத்தத்தின் போது ஒரு வேளை நாசமாக்கப்பட்டிருக்கலாம். 'சூனியத்தில் மக்கள் ஜெபிக்கும்' இந்தக் கடல் தேவதை இங்கே தனக்கென்று ஒரு இல்லத்தை யுடையவளாய் இருந்தாள். இந்த இல்லத்திலிருந்து தமது ஆட்சிப் பகுதியை இவர் பார்வையிட வசதியாயிருந்தது. அக்ரோப் பாலிஸ்ஸில் போல் அத்தீனுவுடன் ஒரே கோயிலைப் பங்கிட்டுக் கொள்ள வேண்டாமல், இவர் இங்குத் தனி இல்லம் பெற்றிருந்தார் இக் கோயிலுக்குப் பக்கத்தில், தேவதையானவள் ஒரு தனிக் கோயிலைக் கொண்டிருந்தாள்.

அட்டிக்காவின் நிலப்பகுதியின் அடுத்த கோடியில் உள்ள எலியூஸிஸ் தேவதைகளின் கோயிலும் காட்டுமிராண்டியர்களால் அழிக்கப்பட்டது. இக் கோயிலை மறுபடியுங் கட்டும் பணியானது உடனே ஆரம்பிக்கப்பட்டது. ஆனுல் அக்ரோப்பாலிஸ்ஸில் அத்தீனுவின் புதிய கோயில் கட்டடம், போருக்காக அரசாங்க வருமானம் திருப்பப்பட்டதால், பாதியில் நிறுத்தப்பட்டது போலவே இக் கட்டடம் கட்டும் வேலையும் பணம் பற்ருக்குறையால் நின்றது. பெரிக்கிளீஸின் காலத்தில் இப் பணியானது மீண்டும் எடுக்கப்பட்டு, முடிக்கப்பெற்றது. கோயிலின் தரைப்படத்தை இக்டைனஸ் வரைந்தார். கோரிபஸ் (Coroebus) அதன்படிக் கோயிலைக் கட்டினுர். தெய்வீக மறை உண்மைகளின் கூடமானது (Hall of Mysteries) எலியூஸிஸ்ஸின் இருண்ட கற்களால் கட்டப்பட்டது. இதன் ஒரு பாகமானது இது கட்டப்பட்ட குன்றிலுள்ள பாறையாலே ஆயிற்று. சுவர்களில் அமைக்கப்பட்ட படிகளில் ஏறக்குறைய 3000 மக்கள் அமர இடம் இருந்தது. இந்தக் கோயில் இருந்த இடமானது மேகாராவின் எல்லைக்குச் சமீபத்திலிருந்ததால் இந்தக் கோயில் திருவிடத்தைச் சுற்றிக் கோபுரங்கள் கொண்ட ஒரு திடமான மதில்சுவர் கட்டப்பட்டது. இதன் விளைவாக இந்தத் திருவிடமானது ஒரு கோட்டையைப்போல் காட்சியளித்தது.

இவ்வளவு அழகு சிறந்த கட்டடங்களைக் கட்டுவதற்கு அதிகமான மூலதனம் வேண்டியிருந்தது. இக் காரியமானது பெரிக்கிளீஸ்ஸின் எதிரிகளுக்கு அவரைத் தாக்குவதற்கு ஒரு வாய்ப்பை அளித்தது. இக் கூக்குரலுக்குத் தியூஸிடைடிஸ் ஒரு தலைவர். பெரிக்கிளீஸ் போருக்காகப் பணத்தைச் சேமித்து வைக்காமல் வீணுகச் செலவு செய்தார் என்றும், கூட்டுக்குழுவின் பணத்தை எடுத்து அத்தீனியக் காரியங்களிலேயே தப்பிதமாக உபயோகித்தார் என்றும் இவர் குற்றம் சாட்டினர். 'தற்பெருமையுடைய மாதொருத்தி விலையுயர்ந்த கற்களைக் கொண்ட பதக்கங்களை அணிந்துகொள்வதுபோல, ஆதென்ஸ் தன்னை ஆயிரம் தாலந்துகள் செலவில் சிலைகளாலும் கோயில்களாலும் அலங்கரித்திருக்கின்றது' என்று கூறப்பட்டது. இப் புதிய கட்டடங்களைக் கட்டுவதற்காக ஹெலனேடமியின் கருவூலத்திலிருந்து (treasury of the Hellenotamiae) கொஞ்சம் பணம் எடுத்தது உண்மைதான். ஆனல் இந்தப் பணமானது மொத்தச் செலவில் ஒரு சிறு பாகமேயாகும். செலவில் பெரும்பாகம் அத்தீனவின் கருவூலத்திலிருந்தும், ஆதென்ஸின் பொதுக் கருவூலத்திலிருந்தும் மேற்கொள்ளப்பட்டது. கொள்கையையும் நியாயத்தையும் பொறுத்தவரையில் பெரிக்கிளீஸ்ஸை நாம் குற்றம் சாட்டுவதற்கில்லை. பாரசீகர்களால் அழிக்கப்பட்ட கோயில்களைப் பழுதுபார்ப்பதும் மறுபடியும் கட்டுவதும் கிரேக்க மக்கள் யாவரும் செய்யவேண்டிய திருப்பணியேயாகும். எனவே கப்பத் தொகையிலிருந்து (ஒருவேளை அறுபதில் ஒன்று—அத்தினவிற்காக எடுத்து வைக்கப்பட்ட மற்றெரு அறுபதில் ஒன்றைத்தவிர) ஒரு பாகத்தை எடுத்தது தவறன்று என்பதுதான் கோரிக்கை. தங்களைச் சரியான முறையில் ஆதென்ஸ் பாதுகாக்கும் காலம்வரை, நேச நாடுகள் குறை கூறுவது நியாயமல்ல என்று பெரிக்கிளீஸ் குதர்க்கமாக வாதாடினர். அவர்களைப் பாதுகாக்க வேண்டும் என்பதே ஒப்பந்தம். ஆகையால் அவர் பணத்தைச் செலவிடுவதில் தலையிடக்கூடாது என்றும் கூறினர். முப்பது ஆண்டுகள் உடன்படிக்கையின் காலம் நிறைவேறியது. மூன்று ஆண்டுகளுக்குப் பின், இந்தச் சிக்கலான கேள்வியில் தீர்ப்பளிக்க தியூஸிடைடிஸ் மக்களைக் கூட்டிவரச்செய்து பானை ஓட்டின் முறையைக் கையாளும்படி கூறினன். ஆனல் கூட்டத்தில் தியூஸிடைடிஸ் நாட்டைவிட்டுச் செல்லும்படி மக்கள் தீர்ப்பளித்தனர். இதன் பிறகு பெரிக்கிளீஸின் கோட்பாட்டையோ பெரிக்கிளீஸையோ எதிர்க்கச் செல்வாக்குப் பொருந்திய எதிரி இல்லை. முதலிலே ஆரம்பிக்கப்பட்ட கட்டடங்கள் இப்பொழுது ஒருவருடைய எதிர்ப்புமில்லாமல் முடிக்கப்படலாம். அதுவுமன்றிப் புதிய வேலைகளையும் ஏற்றுக்கொள்ளலாம் என்ற நிலைமை ஏற்பட்டது. சமீபகாலத்தில் அகில அத்தீனியக் கொண்டாட்டங்களில் புதிதாகச் சேர்க்கப்பட்ட சங்கீதப் போட்டிகள் நடத்தப்படுவதற்காக ஓடியோன் (Odeon) என்ற பெரிய சங்கீதக்

கூடம் ஒன்று டையோனீஸியஸ்ஸின் கொட்டகைக்குக் கிழக்குப்பாகத்தில் அமைக்கப்பட்டது. கைப்பற்றப்பட்ட பாரசீகக் கப்பல்களின் பாய்மரக் கம்பங்களாலும், கப்பல்களின் பாதி பாகங்களாலும் செய்யப்பட்ட இதன் கூரையானது ஒரு கூடாரம்போல் காட்சியளித்தது. நகைச்சுவையாளர் பலர் இதனைத் தளகர்த்தராகிய பெரிக்கிளீஸ்ஸின் தலைச்சீராவிற்கு ஒப்பிட்டனர். நகைச்சுவைப் புலவர் கிராட்டினஸ்(Cratinus) இக் காலத்தில்இயற்றிய நாடகம் ஒன்றில், அதிலுள்ள பாத்திரமான ஒருவர் 'பானை ஓடுகளால் நடத்தப்பட்ட வழக்கானது முடிவுபெற்றது. எனவே இதோ வருகிறார் பெரிக்கிளீஸ், தனது கிரீடத்தில் ஓடியோனை வைத்துள்ள குன்றைப்போன்ற தலையையுடைய நமது ஸ்யூஸ்' என்று கூறுகின்றார்.

அக்ரோப்பாலிஸ்ஸின் தெற்குச் சுவரைக் கட்டும்போது கைமான் தென் மேற்காக நோக்கியுள்ள ஒரு புதிய நுழைவாயிலைக் கட்டியிருந்தபோதிலும், அது மிகவும் சிறியதாயும், சுவர்களால் சூழப்பட்டுக் கடுகடுப்பாகக் காணப்பட்ட இம் மலையின் தோற்றத்தை மாற்றக் கூடாத பார்வையற்றதுமான வாயிலாகவேயிருந்தது. பார்தினனுக்குத் தகுதியான, ஒரு பெரிய வாயிலானது நீசிக்கிளீஸ் (Mnesicles) சிற்பியால் திட்டமிடப்பட்டது. இத் திட்டமானது பெரிக்கிளீஸ்ஸால் அங்கீகரிக்கப்பட்டது. நீசிக்கிளீஸ் திட்டமிட்ட கட்டடங்கள் யாவும் மலையின் மேற்குப் பாகத்தைப் பூர்த்தி செய்தன. மத்தியபாகத்தில் குன்றின் உச்சி ஓரத்தில் (brow) மேற்கு நோக்கி ஐந்து வாயில்களைக் கொண்ட இந்தப் புகுவழியானது (entrance) திட்டமிடப்பட்டது. இதற்கு இருபுறமும்—வடக்கேயும் தெற்கேயுமுள்ள செங்குத்தான ஓரங்கள் வரையிலும்—அத்தீனியர்கள் வெயிலிலும் மழையிலும் கஷ்டப்படாமல் நடப்பதற்காகப் பல தூண்களைக்கொண்ட இரண்டு பெரிய கூடங்களும் திட்டமிடப்பட்டன. சிகரங்களின் மேலுள்ள இவ்விரண்டு கூடங்களுக்கு எதிராக இக் கூடங்களுடன் இணைக்கப்பட்ட இரு சிறு கூடங்கள் (wings) மத்திய வாயிலுக்குச் செல்லும் வழியின் இரு பாகத்திலும் கட்டவும் திட்டமிருந்தது. ஆனால் நீசிக்கிளீஸ்ஸின் திட்டமானது அக்ரோபாலிஸ்ஸிற்குத் தென் மேற்கு பாகத்தில் தனது புதிய கட்டிடங்கள் எல்லை மீறித் தோன்றும் இடத்தில் ஏற்கெனவே இருக்கும் கோயில் திருவிடங்களைப்பற்றி யோசிக்கவே இல்லை தெற்கேயுள்ள தூண்வரிசையானது ஆர்டிமிஸ் ப்ரௌரோனியாவின் (Artemis Brauronia) கோயிலின் எல்லையைப் பார்த்திருக்கும்; அவ்விதமே தெற்கேயுள்ள சிறிய கூடமானது அத்தீனா நிக்கேயியின் (Athena Nike) கோயிலின் எல்லையைப் பாதித்திருக்கும். வட பாகத்தில் இவ்விதமான தடைகள் எவையும் இல்லை. மேற்படி தேவதைகளின் மத குருக்கள், நீசிக்ளீஸின் திட்டம் செயல் முறைக்கு வருமாயின் தமது திருவிடங்களின் எல்லைகள் பாதிக்கப்

படும் என்று தடைக்காரணம் கூறவே, நீசிக்கிளீஸின் திட்டம் முழுவதும் அமலுக்கு வரவில்லை. இக் கட்டடமானது கட்ட ஆரம்பித்தபோதிலும் பெரிக்கிளீஸும் அவருடைய சிற்பியும் .மதகுருக்களின் எதிர்ப்பு இறுதியில் மறைந்துபோகும் என்ற நம்பிக்கை கொண்டிருந்தனர்; இவர்கள் தெற்குத் தூண்வரிசை முழுவதையும் விட்டு விட்டு, சிறிய கூடத்தையும் திட்டத்தில் காட்டியதைவிடச் சிறிய அளவில் கட்டிய போதிலும், பிற்காலத்தில் தொடக்கத்திலிருந்துள்ள திட்டப்படி இக் கட்டடங்களைப் பெரிதாக்க முடியும் முறையில் இவைகளைக் கட்டினார்கள். வட பாகத்திலும், மற்றொரு காரணத்தின் பொருட்டு நீசிக்கிளீஸின் எண்ணம் நிறைவேறவில்லை. கூரையைக்கொண்ட தூண் வரிசையானது கட்டப்படவில்லை. முதலிலேயே இதனைக் கட்டாது கடைசிமட்டும் விட்டுவைத்தனர். இதைக் கட்டவேண்டிய நேரத்தில் ஆதென்ஸ் ஒரு பெரும் போரை எதிர்பார்த்துக் கொண்டிருந்தது. எனவே இக் கட்டடங்களின் மேல் மேலும் மூலதனம் செலவழிப்பது புத்தியீனமானது என்று உணர்ந்தது. ஆனால் வடக்கிலுள்ள சிறிய கூடமானது கட்டப்பட்டு ஓவியங்களால் அலங்கரிக்கப்பட்டது. ஆதென்ஸ் கொண்டிருந்த உன்னத ஓவியங்கள் மலையின் மேல் அல்லது மலையின் கீழ் உள்ள கட்டடங்களில் காணப்பட்டன. பெரிக்கிளீஸ் ஸின் காலத்திற்கு முன்னொரு காலத்திற்கே இவைகள் உரியனவாகும். தேஸாஸ்ஸைச் சேர்ந்த பாலிக்னோட்டஸ்ஸை (Polygnotus) ஆதென்ஸ் நகரத்திற்குக் கைமான் கொண்டு வந்தார். இந்தக் கைமான் ஆட்சி புரியும் போதுதான், மற்றொரு சிறந்த ஓவியக் கலைஞராகிய ,மைக்கான் (Micon) என்பவருடன் சேர்ந்து பாலிக்னோட்டஸ், விலைக்களத்திலுள்ள 'வண்ணம் பூசிய புகு முக மண்டபத்தின்' (Painted Portico) சுவர்களையும், அக்ரோப்பாலிஸ்ஸின் வடபாகத்திலுள்ள புதிய தீஸியம் (Theseum), அனஸியம் (Anaceum) என்ற இரு கோயில்களையும் இயற்கை வடிவளவினதான போதிகைச் சித்திரங்களால் அலங்கரித்தார். நாம் இதற்கு முன்னதாகவே மாரத்தான் போரின் சித்திரத்தைக் கண்டுள்ளோம். இவர் ஆதென்ஸ்ஸை விட்டுச் சென்ற பின்னரே தான் இத் தேசிய தேர்ச்சியாளரின் மிக்க புகழ்ச்சி பெற்ற ஓவியங்களில் ஒன்றுவது திட்டப்பட்டது. இவ்வோவியம் டெல்பியிலுள்ள (Delphi) நைடியர்களின் (Cnidians) சொற்பொழிவு ஆற்றும் கூடத்தில் (speech-hall) உள்ளது. ஒடிஸியஸ் (Odysseus) சுற்றுப் பிரயாணம் செய்த பாதாள உலகம் என்பதே இதன் தலைப்பு ஆகும்.

தன் மேலாட்சியை நடைமுறை ஆசாரப்படி கிரீஸ் நாடானது ஏற்றுக்கொள்ளும் என்று ஆதென்ஸ் நினைத்திருந்தால் அது ஒரு வீணான சிந்தனையாகும். ஆனால் தன் கோரிக்கை உரிமைகளை ஏற்றுக் கொள்ள மனமில்லாத நாடுகளிலும் தனது அறிவாற்றலுள்ள செல்வாக்கைப் புகுத்திய வெற்றியானது எவ்விதத்திலும் ஆதென்ஸ்ஸி

னுடையதாகும். கலையைப் பொறுத்தவரையில் ஆதென்ஸ் பெரிக்கிளீஸின் பேரவாவை ஓரளவிற்கு நிறைவேற்றியது. இவர் ஆதென்ஸைக் கிரேக்க நாடுகளின் இராணி என்ற பதவிக்குக் கொண்டுவர முடியாதவுடன், அவள் கிரேக்கர்களுக்கு அறிவூட்டுகிறவளாக இருக்கவேண்டும் என விரும்பினர். தங்கத்தாலும், தந்தத்தாலும் அத்தீனுவின் பெரிய சிலையைச் செதுக்கி முடித்து, அதனைப் புதிய கோயிலில் வைத்ததைப் பார்த்தபின், பிடியஸ் (Phidias) ஒலிம்பியாவிலுள்ள ஸ்யூஸ் கோயிலுக்கு ஒரு சிலை செய்வதற்கு என்று ஈலிஸ் (Elis) மக்களால் அழைக்கப்பட்டு அங்குச் சென்றார். ஆல்டிஸ் (Altis) என்ற இடத்திலுள்ள இவருடைய பட்டறையில் இப் பெரிய சிற்பி ஐந்து ஆண்டுகள் உழைத்துப் 'பெரியதொரு கிரிஸ்ஸெலப்பன்டைன் (chryselephantine) கடவுளை' உண்டுபண்ணினர். இவர் கைகளால் செய்யப்பட்ட இந்த பிரமாண்டமான சிலையானது, கிரீஸின் குழைவுப் பொருட் கலை உலகத்தில் பிறப்பித்த உயர்ந்த படைப்பாக இருக்கலாம். இந்த அகில கிரேக்கக் கடவுள் பொன்னுடை தரித்து ஓர் உயர்ந்த அரியணையில் அமர்ந்து தனது வலக்கையில் வெற்றியையும் தனது இடக்கையில் செங்கோலையும் பிடித்திருக்கின்றதைக் காண்கின்றோம். தாடியை உடைய இவரின் தலைமயிர் ஓர் ஓவிய தோரணத்தால் சூட்டப்பட்டிருந்தது. அமைதி நிலவியுள்ள இச் சிலையின் வெளிப்படையான தெய்வத்தன்மையானது இச் சிலையைப் பார்க்கும் ஒரு மனிதனுடைய இருதயத்தில் உண்டாக்கும் எண்ணங்களைக் குறித்துப் பலர் சாட்சியங்கள் கூறியுள்ளனர். அவைகளில் ஒன்று பின் வருவதாகும்: 'தன் வாழ்க்கையில் இடர்களையும், இன்னல்களையும் அனுபவித்து, நல்ல நித்திரை என்பதையே கண்டறியாது, ஆத்துமா துயரால் நலிந்துள்ள ஒருவன் இந்தச் சிலைமுன்வந்து நிற்பானேயாகில், மனித வாழ்க்கையின் பயங்கரங்களும் இன்னல்களும் அவன் நினைவிலிருந்து அகன்றுபோம் என்று நான் கருதுகிறேன்'. தெய்வத்தன்மையைக் குறித்துக் கிரேக்கர்கள் கொண்டுள்ள உயர்குறியை மதிப்பார்வ முண்டுபண்ணுகிற முறையில் ஹெலனிக் சமயத்தின் இரு பெரு மையங்களில் ஒன்றில் ஒரு அத்தீனியனே தனது செயல் விளைவில் காண்பித்துள்ளார். வெளி உலகத்திற்குச் சென்று அங்குச் சிற்பக்கலையில் ஈடுபட்டவர்களில் அத்தீனியக் கலைஞர் பிடியஸ் மாத்திரம் ஒருவர் அல்லர்; நாம் பெலோப்பொனீஸஸ்ஸில் இக்டைனஸ் (Ictinus) சிற்பி கோயில்களுக்குத் திட்டங்கள் அமைக்கும் தொழிலில் ஈடுபட்டிருப்பதைக் காண்கின்றோம்.

## 7. பிரியேஸ்ஸும் (Piraeus) அத்தீனிய வாணிப வளர்ச்சியும்

தெமிஸ்டோக்ளீஸ் மதிற் சுவர்களைக் கட்டியதிலிருந்து பிரியேஸ் அதிகமாக வளர்ச்சியடைந்துள்ளது. கிரேக்க உலகத்தில் இது ஒரு பெரிய துறைமுகமாகவும், குறைந்த விலைவாசியுடைய நகரமாகவும் தோன்றியது. பெரிக்கிளீஸ் இதனை முந்தின நாட்களைவிட அதிகப் பெரியதும், அழகானதுமான இடமாக்க முற்பட்டார். பிரியேஸ், ஆதென்ஸ் இவைகளுடைய பொதுவான பாதுகாப்புத் திட்டத்தில் ஒரு குறைபாடு காணப்பட்டது. ம்யூனீச்சியாவிற்கும் (Munychia) பேலெரொன் (Phaleron) திட்டுவரை கட்டப்பட்டுள்ள தெற்குச் சுவருக்கும் இடையே அரண்களால் பாதுகாக்கப்படாத சதுப்பு நிலப் பகுதி இருந்தது. இங்கு இரவில் பகைவர்கள் எளிதாகக் கப்பல் மூலம் இறங்கலாம். இந்தக் குறைபாட்டைக் குறுக்காக ஒரு சுவர் எழுப்பித் தீர்த்திருக்கலாம். ஆனல் முழுவதும் வேறுன மற்றொரு திட்டம் அமுலுக்குக் கொண்டுவரப்பட்டது. வடக்குச் சுவருக்கு அருகில் இணைதொலையில் ஒரு நீண்ட சுவர் கட்டப்பட்டது. இந்தச் சுவர் பழைய சுவரைப் போலவே பிரியேஸ்ஸின் அரண்களையும், 'மேல் நகரம்' என்று உள்ளூர் மக்களால் அழைக்கப்பட்ட ஆதென்ஸ்ஸையும் ஒன்று சேர்த்தது. எனவே தெற்குச் சுவர் அல்லது பெலெரோன் சுவரானது பாதுகாப்புத் திட்டத்தில் பாகம் பெறவில்லை. அந்தச் சுவர் ஒருவரும் கவனிப்பார் இன்றி அழியத்தொடங்கியது. இம் மூன்று துறைமுகங்களைச் சுற்றிலும் கப்பல் தங்க இடங்கள் கட்டப் பட்டன. இந்த இடங்களில் கப்பல்கள் தண்ணீரில் அல்லாமல் உலர்ந்த தரையின்மேல் தங்கக்கூடும். கப்பல்துறைகளின் மேல் புதிய கிடங்கு களும், இதர சிறிய கட்டடங்களும் கப்பல்களின் வசதிகளுக்காகவும், வாணிபத்தின் வசதிக்காகவும் எழும்பின. பெரிய துறைமுகத்திற்குக் கிழக்குப் பாகத்தில் வியாபாரமானது வாணிப நிலையத்தில் (Place of Commerec) நடைபெற்றது. இந்த வாணிபத் தலமானது எல்லைக் கற்களால் குறிக்கப்பட்டுள்ளது. அப்பொழுது நாட்டிய சில எல்லைக் கற்கள் இன்றும் பாதுகாக்கப்பட்டு வருகின்றன. இந்தத் தலமானது உயர்பணியாளர் கொண்ட ஒரு மன்றத்தால் ஆட்சி புரியப்பட்டு வந்தது. இந்த வாணிப நிலையத்தில் உள்ள மிகவும் முக்கியமான இடமானது தூண்வரிசைகள் கொண்ட டீக்மா (Deigma) அல்லது பார்வையிடும் இடமாகும். இந்த இடத்தில் வியாபாரிகள் தமது வாணிபப் பொருள்களை மக்களுக்குக் காட்டினர். பெரிக்கிளீஸ் பல புதிய கட்டடங்களை எழுப்புவதில் மாத்திரம் மனத்திருப்தி கொள்ள வில்லை. பெரிய துறைமுகத்திலிருந்து ம்யூனீச்சியாவின் (Munychia) மலைச்சரிவுவரை பரவிவந்த இந் நகரமானது ஒரு புதிய திட்டத்தின் படி கட்டப்பட்டது. இத் திட்டமானது கிரீஸில் நாடெங்கும் விரும்பப் பட்டது. இது ஒரு நீண்ட சதுரமான தோற்றத்தை உடைய திட்ட

மாகும். இதில் முக்கியத் தெருக்கள் இணை தொலைதூரத்தில் உள்ளன. இத் தெருக்கள் குறுக்கே வரும் தெருக்களைச் செங்கோணத்தில் சந்திக்கின்றன. ஐரோப்பாவிலேயே பிரியேஸ்தான் இவ்வகையான திட்டப்படி கட்டப்பட்ட முதல் நகரமாகும். இதே திட்டத்தை இப்போது நாம் பல நவீன நகரங்களில் உபயோகித்துள்ளதைக் காண்கின்றோம். மைலிட்டஸின் சிற்பியாகிய ஹிப்போடேமஸ் (Hippdopamus) இந்தப் புது எண்ணத்தை உருவாக்கினர். இவர் கோட்பாட்டாராய்ச்சியிலும் செயல் வகையிலும் வல்லுநர். இவர் இருசிறை இசைவு முறைகளை (principles of symmetry) அரசியலில் புகுத்த முயன்று வெற்றியைக் காணவில்லை. எப்படித் தமது மேற்காட்டான நகரின் தெருக்களானவை ஒன்றுடன் ஒன்று இணைக்கப்பெற்றுள்ளனவோ அவ்விதமாகவே தனது மேற்காட்டான அரசியல் நிறுவனங்களும் இருக்கவேண்டும் என்பதே இவருடைய திட்டமாகும்.

அயோனியாவின் வாணிப நகரங்கள் நலிவுற்றதும், பாரசீகத்தின்மேல் கிரீஸ் கொண்ட வெற்றியின் பயனுகப் பினீஷிய வாணிபம் குலைவுபட்டதுமே அத்தீனிய வாணிபம் பெருகியதற்குக் காரணங்களாகும்; அத்தீனியக் கூட்டுக்குழுக் கப்பப்பதிவேடுகள் (tribute records) அயோனிய வாணிபத்தின் நலிவை நன்முக எடுத்துக்காட்டுகின்றன. அயோனியர்கள் கொடுத்துவந்த சிறிய கப்பத்தொகைகள் ப்ரோபான்டிஸ் கடற்கரையோரம் இருக்கும் நகரங்கள் கொடுத்த மிகுதியான கப்பத் தொகைகளுக்கு நேர் விரோதமாக இருப்பதை நாம் காண்கின்றோம். எபிஸஸ் (Ephesus) நகரத்தைக் காட்டிலும் லாம்ப்சேக்கஸ் (Lampsacus) நகரமானது இரண்டு மடங்குக்கு அதிகமான கப்பத்தைச் செலுத்தியது. ஈஜியனுடைய கிழக்குக்கரையிலிருந்து வாணிபமும் கைத்தொழிலும் மேற்குக் கரையோரத்திற்கும் வடக்குக் கரையோரத்திற்கும் இடம் பெயர்ந்து சென்றன. இந்த மாறுதலானது அத்தீனியப் பேரரசின் எழுச்சியுடன் காணப்படவே அப் பேரரசின் முக்கிய நகராகிய ஆதென்ஸ் அதிக இலாபத்தையடைந்தது. ஆதென்ஸ்ஸின் மக்கள் தொகையும், அதன் துறைமுகங்களும் அதிகரித்தன. ஏறத்தாழ இக் காலத்தில் அட்டிக்காவின் மக்கள் தொகையானது 250,000 ஆகும். இந்த எண்ணிக்கையானது கொரிந்திய அரசின் மக்கள் தொகையைக் காட்டிலும் கிட்டத்தட்ட இரண்டு மடங்கு அதிகமாகும். ஆனுல் இந்த எண்ணிக்கையில் ஏறக்குறைய பாதிப்பேர் அடிமைகள் ஆவர். ஏனென்முல் செய்தொழில் வளர்ச்சியின் ஒரு விளைவானது செய்தொழில் நகரங்களுக்குள் அடிமைத்தொழிலாளிகள் புகுவதேயாகும். விவசாயத் தொழில் சார்ந்திருக்கும் நகரங்களில் அடிமைகளின் தேவை (demand for slaves) குறைவாகவே இருந்து வந்தது. கிரீஸ் நாடும் அதிலும் முக்கியமாக ஆதென்ஸ் நகரமும் கடல்களுக்கு அப்பாலுள்ள பிரதேசங்களிலிருந்து




படம் 6: ஆதென்ஸ்ஸும் பிரியேஸ்ஸும்

கொண்டுவரப்பட்ட தானியங்களை ஏராளமாகப் புசித்து வந்த போதிலும், கிரீஸின் விவசாயமானது அழிந்து போகவில்லை என்பதை நாம் காண்கின்றோம். தானியங்களைத் தூர இடங்களிலிருந்து கொண்டு வரும் செலவானது மிகவும் அதிகமாயிருந்தபடியால் கிரீஸில் தானியங்களை விவசாயம் செய்வது இன்னமும் (still) இலாப கரமாகவேயிருந்தது.

அதிக தூரத்திலுள்ள அல்லது பழமைபேணும் பற்றுடைய பிரதேசங்களைத்தவிர மற்றெல்லா இடங்களிலும் பழங்காலக் கொடுக்கல் வாங்கல் முறைகளும் மதிப்பிடும் முறைகளும் கைவிடப் பட்டு நாணயமுறையானது கையாளப்பட்டு வந்தது. சிறியதும் பெரியதுமான எல்லா கிரேக்க நகரங்களும் தங்களுடைய நாணயங் களையே வெளியிட்டன. இவர்களுடைய நாணயங்கள் பெரும்பாலும் வெள்ளியிலானவை. வெள்ளியானது அதிகமாகக் கிடைக்கவே, விலைகள் ஏற ஆரம்பித்தன. எனவே நூறு ஆண்டுகளுக்கு முன் இருந்ததைவிட இப்போது பார்லி, கோதுமை முதலிய தானியங்களின் விலையானது இரண்டு அல்லது மூன்று மடங்கு அதிகமாயிருந்தது. இதைவிட வியப்பைத் தருவது கால் நடைகளின் விலையின் உயர்வே யாகும். சோலானின் காலத்தில் ஒரு செம்மறியாட்டை ஒரு டிராக்மா விற்கு (drachma) வாங்கலாம்: பெரிக்கிளீஸின் காலத்திலே அதன் விலையானது கிட்டத்தட்ட ஐம்பது டிராக்மாக்கள் எனத் தெரிகின்றது. நாணயங்கள் மலிவாகக் கிடைக்கப் பெற்றதால், வட்டியானது மிகவும் குறைவாக இருந்திருக்க வேண்டும். ஆனால் வாணிபம் மிகவும் சுறுசுறுப்பாய் இருக்கவே, மூலதனம் அதிகமாகத் தேவைப்பட்டது. மூலதனம் கிடைப்பதற்கான பிணைப்புப் போதாததாக இருந்ததால், கடனுக்குக் கொடுக்க வேண்டிய வட்டியானது எப்போதும் நூற்றிற் குப் பன்னிரண்டு விகிதமாகும்.

## 8. இத்தாலியில் அத்தீனியத் துணிவுச் செயல்

ஆதென்ஸ் தூர மேற்கில் தனது செல்வாக்கைப் பரப்பியும், தனது வாணிபத்தை முன்னேறச் செய்தும் வந்தது. எட்ரூரியாவிற்கு (Etruria) கருஞ் சிவப்பு நிறமுடைய உருவங்களைக் கொண்ட மண் பாண்டங்களை ஆதென்ஸ் அனுப்பிவந்தது. இந்த அத்தீனியத் தொழில் பொருள்களுக்குத் தூரத்திலுள்ள போ (Po) நதி பள்ளத் தாக்கிலும் விலைக்களம் இருந்தது. அத்தீனியக் கப்பல்கள் டஸ்கனியி லிருந்து (Tuscany) உலோகப் பொருள் வேலைப்பாடுகளையும், கார்த்

தேஜிலிருந்து கம்பளங்களையும் திண்டுகளையும் (cushions), சிசிலியி லிருந்து சோளத்தையும் பால் கட்டிகளையும் பன்றி இறைச்சியை யும் கிரீஸ்ஸிற்குத் தூக்கி வந்தன. சிசிலியிலுள்ள கிரேக்க நக ரங்கள் படிப்படியாகத் தங்களுடைய நடப்பு நாணயமுறையை அட்டிக்கா முறைப்படி அமைக்கலாயினர். பிற்காலத்தில் உலகம் முழுவதற்கும் சட்டங்களை அமைக்கும் ஆற்றல்பெற்றதும், டைபர் (Tiber) நதியின்மேல் கட்டப்பட்டதுமான சிறு இத்தாலியக் குடி யரசில் சோலானின் சட்டங்களின் புகழ் ஓங்கியிருக்கவே, அக் குடி யரசு இச் சட்டத் தொகுப்பின் பதிப்பைக் கொண்டுவரத் தூதர்களை ஆதென்ஸுக்கு அனுப்பியது. இவ்விதமாக சால்சிஸ்ஸின் இடத்தை ஆதென்ஸ் எடுத்துக் கொண்டது. ஆதென்ஸ், இத்தாலிய சிசிலி நிலப் பகுதிகளுடன் வாணிபம் செய்யும் முக்கிய அயோனிய நகராயிற்று. இந்த மேற்குப் பகுதியில் ஆதென்ஸ்ஸின் எதிரியானது கொரிந்துப் பட்டணமாகும். ஆனால் ஆதென்ஸ் இந்த டோரிய வாணிப நகரத் தைத் தோற்கடிக்கும் நிலைக்கு வந்துவிட்டது. இந்தப் போட்டியில் ஆதென்ஸ் ஒரு அனுகூலத்தைக் கொண்டிருந்தது. நாபாக்டஸ்ஸை (Naupactus) தம் வசம் வைத்திருந்ததால் கொரிந்திய வளைகுடாவின் வாயிலை ஆதென்ஸ் கட்டுப்படுத்த முடிந்தது. இது கொரிந்துவிற்கு ஒரு இடைவிடாத இடராகும். கொரிந்துவுக்கும் அதன் குடியேற்ற நாடாகிய கார்கைராவிற்கும் (Corcyra) இடையேயுள்ள பகைமை யானது மேற்கில் கொரிந்தியாவின் வாணிபத்திற்கு இந்தத் தீவானது உபயோகப்படாமல் தடுத்தது. அதே நேரத்தில் கொரிந்துப் பட் டணம் ஆதென்ஸ்ஸிற்குமேல் ஒரு அனுகூலத்தைக் கொண்டிருந்தது. மேற்கில் கொரிந்து பல குடியேற்ற நாடுகளைக் கொண்டிருந்தது. இவைகளுடன் கொரிந்து மிகவும் நல்ல தொடர்புகளையும் கொண் டிருந்தது. முக்கியமாக ஸைரக்கூஸ் (Syracuse) போன்ற கடலைச் சார்ந்த நகரங்கள் கொரிந்திய வாணிபத்திற்கும் செல்வாக்கைப் பெருக்குவதற்கும் ஏற்ற இடங்களாக இருந்தன. கிரேக்க உலகத்தி லேயே ஆதென்ஸ்ஸிற்கு அடுத்தாற்போல் பெரியதும் அதிக மக்கள் தொகையைக் கொண்டதும் ஸைரக்கூஸேயாகும். ஆதென்ஸ் இம் மாதிரியான குடியேற்றங்களையும், வாணிப மையங்களையும் கொண் டிருக்கவில்லை. தெமிஸ்டோகிளீஸ் (Themistocles) இந்தக் குறை பாட்டை அறிந்தார். பக்கத்திலுள்ளவர்களால் நாசமாக்கப்பட்ட சிரிஸ் (Siris) என்ற இடத்தில் ஒரு குடியேற்றத்தை நிறுவ இவருடைய சுறுசுறுப்புள்ள அறிவானது திட்டமிட்டது. ஆனால் இந்தத் திட்ட மானது செயல் முறையில் வெற்றியைக் காணவில்லை. கடைசியில் பெரிக்கிளீஸ் நகர விவகாரங்களின் தலைவரானபோது வாய்ப்பு ஒன்று கிட்டியது; இங்கேயும் மற்றக் காரியங்களில் ஆனது போலவே, தெமிஸ்டோக்கிளீஸின் திட்டங்களை செயல்முறைக்கு இவர் கொண்டு வரவேண்டியதாயிற்று.

தமது நகரமாகிய சிபேரிஸ் (Sybaris) அழிக்கப்பட்டதிலிருந்து பக்கத்து நகரங்களில் வசித்து வந்த அதன் மக்கள் அந்தப் பழைய இடத்தில் ஒரு புதிய சிபேரிஸ்ஸைக் கட்ட முன்வந்தனர். நகரம் கட்டிய ஐந்து ஆண்டுகளுக்கெல்லாம் அவர்களுடைய பழைய பகைவர்களாகிய க்ரோட்டானின் (Croton) மக்கள் அங்கிருந்து இவர்களைத் துரத்தியடித்தனர். ஆயினும் இவர்கள் நம்பிக்கையை இழக்கவில்லை. தங்களால் செய்துமுடிக்கக் கூடாததை மற்றவர்களின் உதவியால் செய்துமுடிக்க முன்வந்தனர். ஒரு புதிய நகரத்தை நிறுவுவதற்காக ஆதென்ஸ்ஸையும் ஸ்பார்ட்டாவையும் இவர்கள் அழைத்தனர். இந்த அழைப்பு ஸ்பார்ட்டாவிற்கு ஒருவித கவர்ச்சியையும் உண்டுபண்ணவில்லை. ஆனால் இது ஆதென்ஸ்ஸிற்குத் தாம் விரும்பிய ஒரு வாய்ப்பை ஈன்றது. ஸிபேரிஸ்ஸின் நிலப் பகுதியானது மிகவும் செழுமை வாய்ந்ததுமன்றி அதன் இருப்பிடம் அத்தீனிய வாணிபத்திற்கும் ஒரு சிறந்த இடமாயிருந்தது. ஆனால் பெரிக்கிளீஸ் இந்த முயற்சிக்கு ஒரு சர்வதேசத் தோற்றத்தைக் கொடுக்க உறுதிகொண்டார். இது அத்தீனியர்களுடைய முயற்சியாக மட்டும் இருக்க இவர் எண்ணங்கொள்ளவில்லை. பெலோப்போனீஸஸ் முழுவதிலும் இப் புதிய குடியேற்றம் நிறுவுவதில் விருப்பம் உள்ளவர்கள் யாவரும் முன்னுக்கு வரலாம் என்று பறைசாற்றப்பட்டது. டாரென்டைன் (Tarentine) வளைகுடாவைச் சுற்றிக் காணப்படும் கிரேக்கக் குடியேற்றங்களுக்கு பெலோப்போனீஸஸ்—அதிலும் முக்கியமாக சமீப ஆண்டுகளில் ஆதென்ஸ் நெருங்கிப் பழகிவரும் அக்கிய நகரங்கள்—தாய் நாடாக இருந்தது இந்தத் தாய்நாடு, ஆதென்ஸ்ஸின் தலைமையின்கீழ் இப் புதிய நகரத்தை நிறுவவேண்டும் என்பது பெரிக்கிளீஸின் எண்ணமாகும். அக்கியா, ஆர்கேடியா, ஈலிஸ் முதலிய நாடுகள் இந்த வேண்டுகோளுக்கு இணங்கின. புதிய சிபேரிஸ் ஏற்படுத்தப்பட்டது. இந்தப் புதிய நகரில் அத்தீனியருடைய மேம்பட்ட நிலையானது அட்டிக்கா தலைச்சீராவுடன் (helmet) அத்தீனா தேவதை நாணயங்களில் பொறிக்கப்பட்டிருப்பது நமக்குத் தெளிவாகக் காட்டுகின்றது.

ஆனால் தமது தாய்நாட்டிலிருந்து தமக்கு உதவி அளிக்கவந்த குடியேற்ற மக்களுடன் பழைய சிபேரிஸ் மக்கள் சமமாக இருப்பதை விரும்பவில்லை; தாம் அதிக ஆண்டுகளாக அவ்விடமே வசித்துவந்ததால் அவர்களுக்கு அதிகமான சலுகைகள் இருக்கவேண்டுமென்று கருதினர். அரசின் முக்கியப் பதவிகளைத் தாமே அனுபவிக்க வேண்டும் என்ற உரிமையையும் கொண்டாடினர். மேற்கூறிய உரிமைகளைக் கொண்டாடுவதை மற்றவர்கள் எதிர்த்தனர். யுத்தம் மூண்டது. சிபேரிய மக்கள் நாட்டைவிட்டுத் துரத்தப்பட்டனர். நகரத்தின் மக்கள் தொகையானது இவ்விதமாகக் குறைக்கப்படவே, அங்கு மக்கள் தேவை அதிகமாக ஏற்பட்டது. எனவே இரண்டாவது முறை

யாக ஆதென்ஸ்ஸிற்கு ஒரு விண்ணப்பம் விடப்பட்டது ; ஆனால் இம் முறை இந்த விண்ணப்பமானது தனது மக்களிடமிருந்தே வந்தது.

இந்த இரண்டாவது விண்ணப்பத்திற்கு, பெரிக்கிளீஸின் நடத்துதலுக்குக்கீழ் ஆதென்ஸ், முந்தின தடவையைவிட மிகப் பெரிய திட்டத்துடன் முன்வந்தது. ஓர் அகில கிரேக்கக் குடியேற்றத்தை நிறுவ எல்லா கிரேக்க நாடுகளும் அழைக்கப்பட்டன. இந்தத் திட்டத்தைச் செயல்முறைக்குக் கொண்டு வருவதற்கு பெரிக்கிளீஸின் வலக்கைபோலிருந்தவர் லாம்பன் (Lampon) என்னும் தீர்க்கதரிசியும், சகலத்தையும் விளக்கிப் பொருள் கூறுபவருமாவர். இவர் எலியூஸியன் வழிபாட்டில் மிகவும் நெருங்கிய சம்பந்தமுள்ளவர். ஆதென்ஸ்ஸில் சமயச்சார்பான எல்லாக் காரியங்களுக்கும் இவர் ஒரு பெரிய நிபுணர். இப் புதிய குடியேற்றத்தைக் குறித்து இவர் டெல்பிக் கடவுளிடமிருந்து ஒரு தெய்வ மொழியைப் பெற்றார். இந்தக் குடியேற்றமானது மக்கள் எங்கே நீரை அளவுப்படி பருகவும், ரொட்டியை அளவில்லாமல் சாப்பிடவும் கூடுமோ அங்கே நிறுவப்படவேண்டும் என்று தெய்வமொழி கூறிற்று. ஆதென்ஸில் இந்தத் திட்டத்தைப் பெரிக்கிளீஸின் பகைவர்கள் எதிர்த்தனர். முக்கியமாகப் பெரிக்கிளீஸ் இந்தத் திட்டத்திற்கு அகில கிரேக்க நோக்கத்தைக் கொடுத்ததை அவர்கள் விரும்பவில்லை. கிராடினஸ் (Cratinus) ஒரு நாடகத்தை இயற்றினார். இந்த நாடகத்தில் இவர் லாம்பனைக் கேலி செய்துள்ளார். அதுவுமன்றி கிரீஸ் நாடு முழுவதையும் ஒன்று சேர்க்க வந்த இரண்டாவது தியூஸியஸ்ஸாவென்றும் அதில் வினவுகின்றார். ஆனால் கிரீஸ் நாடானது அத்தீனியக் கருத்திற்கு இணைந்து லாம்பனின் நடத்துதலின் கீழ்க் குடியேற்றத்தை நிறுவியது. சிபேரிஸ் நகரத்திற்குச் சற்று அண்மையில் ஒரு வெண்கலக் குழாயின் வழியாக ஆற்று நீரானது பீறிட்டு வருவதை இவர்கள் கண்டனர். இந்த இடமானது அங்குள்ள மக்களால் புஷல் (Bushel) அல்லது படி என்றழைக்கப்பட்டு வந்தது. தெய்வமொழி கூறிய அளவிடப்பட்ட நீர் இதுவேயாகும்; இங்குள்ள நிலப்பகுதி அதிக செழிப்புள்ளதாக விளங்கியதால் மக்கள் குறைவின்றி அளவிற்குமேலும் ஆகாரம் உண்ணலாம். இந்த இடமானது த்தீயூரை (Thurii) என்றழைக்கப்பட்டது. இந்தப் புதிய நகரானது ஹிப்போடேமஸ் (Hippodamus) என்னும் சிற்பியால் வரையப்பட்டது. இவர் பிரியேஸ்ஸை (Piraeus) நீண்ட சதுரமாகச் செல்லும் தெருக்களைக்கொண்டு அமைத்தார். த்தியூரையின் அரசியல் அமைப்பானது மக்களாட்சியாக அமைந்தது இயற்கையே. இதில் அத்தீனிய மாதிரியின் செல்வாக்கை நாம் கண்டாலுங்கூட இந்தக் குடியேற்றமானது சோலானின் சட்டங்களை ஏற்றுக்கொள்ளாமல், லோக்ரியின் (Locri) சட்டம் ஈன்றவராகிய ஸேலியூகஸ்ஸின் (Zaleucus) சட்டங்களை அடிப்படையாக எடுத்துக்

கொண்டது. இக் குடியேற்றம் நிறுவப்பட்ட பல ஆண்டுகளுக்குப் பின் இந்தக் குடியேற்றத்தை நிறுவியவர் யார் என்ற கேள்வி கேட்கப் பட்டது. டெல்பிக் கடவுள்தான் இந்தப் புகழுக்குரியவர் என்று கூறியதாகத் தெரிகின்றது. த்தீயூரையின் நாணயங்களில் அத்தீனு வின் தலையும், ஒலிவக் கிளையும் பொறித்துள்ளதை நாம் காண்கின் றோம். மக்கள் தொகையைப் பொறுத்தவரையில் அத்தீனியர்க ளுடைய எண்ணிக்கையானது காலப்போக்கில் குறைவுபட்டபோதி லும், இந்த இடமானது, பெரிக்கிளீஸ் எண்ணியதுபோலவே, இத் தாலியில் அத்தீனியச் செல்வாக்கைப் பெருக்கும் மையமாயிற்று.

## 9. த்திரேஸிலும் (Thrace), ஈயூக்ஸைன் (Euxine) என்னும் கருங்கடல் பிரதேசத்திலும் அத்தீனியக் கோட்பாடு

தான் சால்ஸிஸைப் பின்தொடர்ந்த மேற்குக் கடற்கரையோரப் பிரதேசங்களைக் காட்டிலும், மைலீட்டஸ்ஸைப் (Miletus) பின் தொடர்ந்த கிழக்குக் கடற் பிரதேசங்களில் ஆதென்ஸ்ஸிற்கு மிகவும் பெரிய, அதிகம் நெருங்கிய தன் நலங்கள் (interests) இருந்தன. மேற்கி லிருந்து தான் இறக்குமதி செய்த சரக்குகளைக் காட்டிலும் கருங்கடல் பிரதேசத்திலிருந்து இந் நகரம் இறக்குமதி செய்த சோளம், மீன், மரங்கள் முதலியன அதிக முக்கியமானவைகள். எனவே கருங்கடல் பகுதிக்கும் ஆதென்ஸ்ஸிற்குமிடையே போக்குவரவு சாதனம் சரியாய் இருக்கவேண்டும் என்பதையும், கருங்கடல் தீரத்தில் மிகவும் முக்கிய நகரங்களை ஆதென்ஸ் தன் கையின்கீழ்க் கொண்டு வரவேண்டும் என்ப தையும்விட வேறு உயரிய எண்ணங்கள் தெளிவான நோக்கமுடைய அரசியல் வல்லுநர் மனத்தில் இருக்க முடியாது. கருங்கடல் பிரதேசத் திற்கு வெளிவாயில் போன்ற ஸெர்ஸானிஸ்ஸை (Chersonese) அத்தீனி யர்கள் தம் வசமாக்கினர். இதனைப் பெரிக்கிளீஸ் வலுப்படுத்தினர். பைஸாண்டியமும் (Byzantium) சால்சிடனும் (Chalcedon) அத்தீனியக் கூட்டுக் குழுவைச் சேர்ந்த அங்கத்தினர்களாக இருந்ததால் மேற்படிப் பிரதேசத்தின் உள்வாயிலும் ஆதென்ஸ் வசமே இருந்தது. கருங்கடல் கரையில் ஆங்காங்கேயுள்ள கிரேக்க நகரங்கள் காட்டுமிராண்டியர் களுக்கு விரோதமாக ஆதென்ஸ்ஸின் உதவியை அடிக்கடி நாடியதால் ஆதென்ஸ் அவைகளை அதிகமாகச் சார்ந்திருந்தது. திரேஸ்ஸிலும் (Thracc) சிதியாவிலும் (Scythia) ஏற்படும் ஒவ்வோர் அரசியல் மாறுதலும் அத்தீனிய அகோராவிலுள்ள தானியவிலைக்களத்தைப் பாதித்தது. ஆகையால் வாணிபக் கப்பல்களைப் பாதுகாக்க எப் பொழுதும் போர்க்கப்பல்களை ஆயத்தமாக வைக்க வேண்டியது அவசியமாயிற்று. தேரேஸ்ஸும் (Teres) அவர் மைந்தன் ஸிட்டல்செஸ் ஸின் (Sitalces) காலத்தில் பெரிய திரேசிய நாடானது மேலும் பரவு

வதைக் கண்ட அத்தீனிய அரசியல்வல்லுநர் இப் பிரதேசத்தை முந்தி யதைவிட மிகவும் முக்கியமாகக் கவனிக்க நேரிட்டது. அண்மையி லுள்ள சிதியர்களின் மன்னருக்குத் தன் மகளை மணம் செய்து கொடுத்ததனுல் தேரேஸ்ஸின் அதிகாரம் டான்யூப் (Danube) நதி வரையிலும், அவருடைய செல்வாக்கு டினீபர் (Dnieper) நதிவரை யிலும் பரவியது.

கருங்கடற் பிரதேசங்களிலுள்ள காட்டுமிராண்டியர்களுக்கு ஒரு வித அச்சத்தை உண்டுபண்ணவும், அத்தீனியக் கப்பற்படையின் பலத்தை அறியும்படியும் பெரிக்கிளீஸ் ஒரு பெரும் போர்க் கப்பற் படையுடன் பான்டஸ்ஸை (Pontus) அடைந்தார். அந்தக் கப்பல் செலவைப் பற்றி நாம் அறிந்துள்ளது மிகவும் குறைவேயாகும். இவர் சினேப்பை (Sinope} பார்வையிட்டதாகவும், அ் தன் பயனக அவ் விடத்தில் அத்தீனியர்களுக்கு ஒரு நிலையான இடம் கிடைத்ததாகவும் தெரியவருகின்றது. இவர் சிம்மெரியன் பாஸ்பரஸ் (Cimmerian Bosphorus) கப்பல் செலவு செய்து அங்கு பான்டிகாப்பியத்திலுள்ள (Panticapaeum)ஆர்கியானக்டிட்(Archaeanactid) பிரபுக்களையும் சந்தித் திருக்கலாம். ஏனென்ருல் பிரபுக்கள், ஆதென்ஸ்ஸின் நல்ல காலங்களி லும், கெட்டகாலங்களிலும் அநேக ஆண்டுகளுக்கு, ஆதென்ஸ்ஸுடன் நிலையான நட்புக் கொண்டிருந்தனர். பான்டிகாப்பியம் கருங்கடல் தானிய விலைக்களத்தின் மையமாக இருந்ததால், இந்த நட்பானது மிகவும் முக்கிய மானதாயிற்று.

ஒரு வலிமை மிகுந்த மன்னரின் கீழ் திரேஸிய கோத்திரங்கள் இணைக்கப்பட்ட நிகழ்ச்சியானது ஆதென்ஸ்ஸை ஈஜியக் கடலின் வடக்குக் கரையையும் மாஸிடோனியாவின் கிழக்கு எல்லையையும் மிகவும் விழிப்பாகப் பாதுகாக்கச் செய்தது. வாணிபத்தையும் போரையும் குறித்த வரையில் இந்தக் கடற்கரையில் முக்கிய இட மானது ஸ்ட்ரைமான் (Strymon) நதியின் முகத்துவாரமாகும். இங்கே அத்தீனியர்கள் ஈயானில் (Eion) ஒரு கோட்டையைப் பெற்றிருந் தனர். முகத்துவாரத்திற்குப் பக்கத்திலுள்ள பாலத்தின் வழியாகத் தான் திரேஸிற்கும் (Thrace) மாஸிடோனியாவிற்கும் வாணிபம் நடைபெற்றது. ஸ்ட்ரைமான் நதியின் பள்ளத்தாக்கின் வழியாகப் பின்னணி மண்டலத்திற்குச் செல்லும் பாதைகள் அமைக்கப்பெற் றிருந்தன. அதன் அருகிலுள்ள மலைகளில் தங்கமும் வெள்ளியும் கிடைக்கப் பெற்றன. ப்ராஸியஸ் (Prasias) ஏரிப் பக்கத்தில் மாஸி டோனியாவின் அலெக்ஸாண்டர் மன்னன் ஒரு வெள்ளிச் சுரங்கத்தை ஏற்படுத்தினர். இச் சுரங்கத்திலிருந்து தினமும் ஒரு தாலந்து வெள்ளி எடுக்கப்பட்டதாகத் தெரிகின்றது. கைமானின் காலத்தில் ஸ்ட்ரை மான் பாலத்திற்கு அருகில் ஒன்பது வழிகள் சேருமிடத்தில் ஈயானைப்

பலப்படுத்த ஒரு குடியேற்றத்தை நிறுவ ஆதென்ஸ் முயன்றது. இது தேஸாஸ்ஸின் (Thasos) நலத்தைப் பாதிக்கவே தேஸாஸ் இந்த முயற்சியைப் பலமாக எதிர்த்தது. தேஸாஸ் தோற்கடிக்கப்பட்ட போதிலும், இந்த ஒன்பது வழிகளின்மேல் கட்டப்பட்ட குடியேற்றமானது காட்டுமிராண்டியர்களால் நாசமாக்கப்பட்டதை நாம் முன்பே கவனித்துள்ளோம். முப்பது ஆண்டுகளுக்குப்பின் அதே திட்டத்தை பெரிக்கிளீஸ் எடுத்து அதனை வெற்றியுடன் முடித்தார். அத்தீனியர்களையும் ஏனையவர்களையும் கொண்ட ஒரு குடியேற்றத் தொகுதியை நிக்கையஸ்ஸின் (Nicias) மகனாகிய ஹாக்னன் (Hagnon) வழி நடத்தி, ஸ்ட்ரைமான் நதியானது மூன்று பக்கத்தில் சூழ்ந்து வருமிடத்தில் ஒரு புதிய நகரத்தை நிறுவினர். இதற்கு ஆம்பிபாலிஸ் (Amphipolis) என்ற பெயர் இடப்பட்டது. தடுக்க முடியா முறையில் இந்த இடமானது வளர்ச்சியடைந்து, இந்தக்கடற்கரையில் ஒரு முக்கிய இடமாயிற்று. ஆனால் இந்தக் குடியேற்ற நாட்டில் தாய்நாட்டிற்கு விரோதமாக உணர்ச்சி ஏற்பட்டு, நாம் பின்னல் கவனிக்கப் போவது போல, பதினைந்து ஆண்டுகளுக் கெல்லாம் இந்த இடம் ஆதென்ஸ்ஸின் கையிலிருந்து விலகிப் போயிற்று.

## 10. ஸாமாஸின் கலகம்

தீயூஸிடைடிஸ்ஸின் நாடு கடத்தலுக்குப்பின் (ostracism) கிட்டத்தட்டப் பதினைந்து ஆண்டுகளுக்குப் பெரிக்கிளீஸ் அத்தீனியக் கோட்பாட்டின் நிகரற்ற தலைவராக விளங்கினர். இவர் எப்படி டைரண்டுகள் ஆட்சி புரிந்தனரோ அவ்விதமாகவே ஆட்சி புரிந்தார். மக்களில் அநேகர் இவருடைய ஆட்சியானது பிஸிஸ்ட்ரேட்டர்களின் ஆட்சியின் தொடர்ச்சி என்றுகூடக் கருதியிருக்கலாம் ஆனால் இவருடைய பதவியானது சட்டத்திற்கு உட்பட்டதாகவே இருந்தது. எல்லா அதிகாரங்களுக்கும் இருப்பிடமான மக்களினிடம் இவர் செல்வாக்குப் பெற்றிருந்ததால் இவருடைய பதவியானது மிகவும் உறுதியான அடித்தளம் கொண்டிருந்தது. தான் எதை நன்மை என்று கருதினரோ அதை மக்கள் செய்துமுடிக்கும்படி அவர்களை இணங்கச் செய்யும் சக்தி இவருக்கு இருந்தது. தனது எதிரியின் நாடுகடத்தலுக்குப் பின் ஒவ்வொரு ஆண்டாகப் பதினைந்து ஆண்டுகளுக்கு இவர் ஒரு தளகர்த்தராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். இந்தப் பத்துத் தளகர்த்தர்களும் பெயரளவில் சமமான அதிகாரங்களை உடையவர்களாக இருந்தபோதிலும், மக்களின் நம்பிக்கையை யுடையவரும் உயரிய அரசியல் செல்வாக்குடையவருமே இப் பதின்மரின் தலையாக விளங்கினதுமன்றி, வெளி விவகாரங்களைத் தம் கையிலே வைத்திருப்பார். பெரிக்கிளீஸ் பொறுப்புணர்ச்சியற்

றவர் அல்லர். ஏனென்றால் யாதொரு பணித்துறை ஆண்டின் இறுதியிலும் மக்கள் அவரைத் திரும்பவும் தேர்ந்தெடுக்காமல் விட்டு விடக்கூடும்; அதுவுமன்றி அவர்கள் அவர் செய்த பணிகளுக்காகவும், அவைகளில் காணப்பட்ட தப்பிதங்களுக்காகவும் அவரை விசாரிக்கக்கூடக் கூடும். ஒருவரும் தன்னை நெருங்கக் கூடாத தலைமைப் பதவிக்கு வந்தவுடன், தன்னை அந்தப் பதவியில் நீடிக்க இவர் சிறந்த அறிவையும், பேச்சுத் திறனையுமே தவிர வேறு எந்த வழிகளையும் உபயோகிக்கவில்லை. தனது அரசியல் வாழ்க்கையின் துவக்கத்தில் தனது கட்சிக்காக இவர் பல சூழ்ச்சி முறைகளைக் கைக் கொண்டிருந்தாலும், இப்போதுதான் புகழ்ச்சியைப் பெறுவதற்கே அல்லது மக்களின் வாக்குகளைப் பெறுவதற்கே இவர் இழிவான முறைகளை கைக் கொள்ளாமல் அவ் வழிகளை வெறுத்துத் தள்ளி விட்டார். இவர் தன்னம்பிக்கை கொண்டிருந்ததால், மக்களைத் தமது அறிவின் உயரத்திற்கு உயர்த்த முயன்றாரே அல்லாமல் தம்மை அவர்களுடைய முட்டாள்தனத்திற்குத் தாழ்த்த எண்ணங் கொள்ளவில்லை. உண்மையிலேயே ஏகாதிபத்திய அதிகாரங்கள் தம்மிடமிருக்க வேண்டும் என்பது இவருடைய இயற்கையான விருப்பம். ஆனாலும் பேச்சினால் தான் நம்பவைக்கக் கூடிய சுதந்திரம் பொருந்திய மக்களின் தலைவனாய் இருப்பது, ஒரு தலை அசைவினால் அவர்களைக் கீழ்ப் படியவைக்கும் கொடுங்கோலனாக இருப்பதைவிட மிகவும் உன்னதமானது என்று இவருடைய கூரறிவுடைய மனநிலை எண்ணியது. ஆனாலும் இந்த மக்களாட்சியின் தலைவர், கீழான எண்ணமுடைய மக்களின் தொகுதியை வெறுத்தார். மேலும் இவருக்கு நுட்பமாகத் தெரிந்ததுபோல் மற்ற மக்களாட்சியின் அரசியல் நிறுவனத்தில் உள்ள குறைபாடுகள் தெரியா என்றே கூறலாம். உயரிய அரசியல் வல்லுநரின் பதவிக்கு முக்கியமாக வேண்டிய குணங்கள் பொது மக்களுடன் பட்டும் படாததுமான மனநிலையும், தங்களுக்கு நேர் விரோதமாக மக்கள் அடித்துப் பேசிய போதும் அவைகளைப் பொருட்படுத்தாத மாதிரி காட்டிக் கொள்ளுதலுமேயாகும். பெரிக்கிளீஸின் மனநிலையிலுள்ள இந்த குணங்களானவை அவர் வெற்றி பெறவும், தனது தலைமையைப் பேணிக் கொள்ளவும் உதவின.

தெமிஸ்டேக்கிளீஸ்ஸுடன் ஒத்துப்பார்க்கும்போது பெரிக்கிளீஸ் மிகவும் நல்ல குணம் வாய்ந்தவர். ஆனால் தெமிஸ்டேக்கிளீஸ்ஸைப் போன்று இவர் பிறப்பிக்கும் ஆற்றல் கொண்ட அரசியல் வல்லுநர் அல்லர். இவர் பிறப்பித்தது மிகவும் குறைவேயாகும். ஆனால் மற்றவர்களுடைய கருத்துகளை இவர் விரிவுபடுத்தினார். அதிக காலத்திற்கு முன்னேற தத்துவமுறையில் காணப்பட்ட மக்களின் தலைமையுரிமையை (sovereignty) இவர் நிறைவுடன் நடைமுறையில் திகழச் செய்தார். முன்னவரே நிறுவப்பட்ட பேரரசை இவர் ஓர் உன்னத

நிலேக்கு உயர்த்தினுர். சொற்பொழிவு ஆற்றுவதில் இவர் இயல்பா யமைந்த தனி சிறப்புத்தன்மை (genius) கொண்டிருக்கலாம். அதைப் பற்றி நாம் ஒரு முடிவு கூறுவதற்கில்லே. தன்னுடைய நகர வரலாற்றி லேயே மாத்திரமன்றி கிரீஸ் நாட்டு வரலாற்றிலும், மக்கள் குலத் தின் வரலாற்றிலும் புகழ்பெற்ற புலவர்களும் கலேஞர்களும் வசித்த காலத்தில் தன் நாட்டின் கொள்கைகளேத் தான் வழி நடத்தியது ஒரு பெரிய சிலாக்கியமாகும். ஸொபோகிளீஸ் (Sophocles), யூரிபையடிஸ் (Euripides), இக்டைனஸ் (Ictinius), பிடியஸ் (Phidias) வாழ்ந்த கால மானது பெரிக்கிளீய காலம் என்றழைக்கப்படுகின்றது ஆனுல் இக் காலமானது பெரிக்கிளீஸ்ஸால் உண்டாக்கப்படவில்லே இவர் கிரீஸ் ஸிற்குச் செய்த மிகச் சீரிய தொண்டானது அடிக்கடி மக்களால் மறந்து போகப்படுகின்றது. ஆதென்ஸ்ஸிற்கும் அதன்மேல் பொருமை கொண்ட அண்மை வாசிகளுக்குமிடையே பன்னிரண்டு ஆண்டுக் காலம் சமாதானத்தை நிலேப்படுத்தியதே அப் பெரும் தொண்டா கும். இதைச் செய்துமுடிக்க மிகச் சிறந்த அரசியல் வல்லுநரின் ஞானம் தேவைப்பட்டது என்று கூறுவது மிகையாகாது.

போர்த்துறைப் பணிகளில் இவர் தகுதியுள்ளவராகக் காணப்படு கின்ருர். இவருடைய போர் முறைகளேக் குறித்துக் குற்றங் காணப் போதிய விவரங்கள் இல்லாதபோதிலும், இவர் பொதுவாக வெற்றி பெற்ருர் என்று கூற இடமுள்ளது. முப்பது ஆண்டுச் சமாதானம் ஏற்பட்ட ஐந்து ஆண்டுகளுக்குப்பின், இவர் தமது தளகர்த்தரின் திறனேக் காட்டச் சந்தர்ப்பம் ஏற்பட்டது. அத்தீனியக் கூட்டுக் கழக இணைப்பில் மிகவும் வலிமைபொருந்திய அங்கத்தினரான சாமாஸ் தீவுடன் ஆதென்ஸ் போரில் மூழ்கியது. ஸாமாஸ்ஸூம், மைலீட்டஸ் (Miletus) என்னும் மற்ருெரு கூட்டிணேப்பு நாடும் ப்ரியீன் (Priene) நகரத்தின் உடமையைக் குறித்துப் போராடியதே இந்த யுத்தத்திற்குக் காரணமாகும். சில ஆண்டுகளுக்கு முன் ஆதென்ஸ் மைலீட்டஸ்ஸின் அரசியல் அமைப்பை ஏற்படுத்தி, அதில் ஒரு கோட்டைப் படையையும் வைத்திருந்ததாகத் தெரிகின்றது. ஆனுல் இப்போது கப்பம் கட்டாத ஒரு நேச நாட்டுடன் போருக்குப் போய், அதனுல் தோற்கடிக்கப்பட்டதும், ஆதென்ஸ்ஸினிடம் முறை யிடுவதையும் நாம் காண்கின்ருேம். இந்த உதாரணத்திலிருந்து ஆதென்ஸ்ஸிற்கும், அதன் நேச நாடுகளுக்கும், அதன் ஆதீனத்திற் குள்ள நாடுகளுக்குமிடையேயுள்ள உறவுகளேப்பற்றி நமக்குத் தெரி வது மிகவும் குறைவு என்பது வெளிப்படையாகின்றது. மேற்படி வழக்கில் ஆதென்ஸ்ஸிடம் முதலிலிருந்தே முடிவு கூறும் உரிமை இருந் திருக்கும் என்று யாவரும் நினேக்கக்கூடும். ஆனுல் அப்பீல் செய்த போது ஆதென்ஸ் மைலீட்டஸ்ஸூடன் சேர்ந்துகொண்டது. பெரிக் கிளீஸ் நாற்பத்துநான்கு ட்ரைரீம்களுடன் ஸாமாஸ்ஸிற்குச் சென்று,

சிறு குழு ஆட்சியைக் கவிழ்த்துவிட்டு, பலரைப் பிணைகளாகக் கூட்டிக் கொண்டு நாடு திரும்பினர். மேலும் இவர் ஸாமாஸ்ஸிற்கு ஒரு மக்க ளாட்சி அரசியல் அமைப்பை ஈன்று அதைப் பாதுகாக்க ஒரு கோட் டைப் படையை அங்கே நிறுவினர். பெருநிலப் பகுதியிலிருந்து ஓட்டம்பிடித்த பிரபுக்கள், ஒரு நள்ளிரவில் திரும்பி, கோட்டைப் படையினரைப் பிடித்து, தாம் கூடி சதியாலோசனை நடத்திய ஸார் டிஸ் (Sardis) பிரதேச பாரசீக ஸாட்ராபிடம் (satrap) ஒப்படைத்த னர். லெம்னுஸ் (Lemnos) தீவில் விட்டுவிடப்பட்டிருந்த பிணைகளையும் இவர்கள் கைப்பற்றினர். ஆதென்ஸ் இக் காலத்தில் மற்றுமொரு பேரடியையும் அடைந்தது; அதுவேதான் பைஸான்டியத்தில் ஏற் பட்ட கலகமாகும்.

பெரிக்கிளீஸ் உடனே ஸாமாஸிற்குச் சென்று அதனைத் தமது பெரிய கப்பல்படையினுல் முற்றுகையிட்டார். அவ்வமயம் பினீஷியக் கப்பற்படை யொன்று ஸாமியர்களுக்கு உதவிபுரிய வருவதாக இவர் கேள்விப்பட்டு, முற்றுகையிடுவதை நிறுத்திக்கொண்டு, சில போர்க் கப்பல்களுடன் அதனைச் சந்திக்க முன்சென்முர். பெரிக்கிளீஸ் அங்கு இல்லாதபோது ஸாமியர்கள் துறைமுகத்தினருகே நங்கூரம் பாய்ச்சிய அத்தீனியக் கப்பல்களைத் தாக்கிச் சில வெற்றிகள் பெற்றனர். இரண்டு வாரங்களுக்குப்பின் பெரிக்கிளீஸ் ஸாமாஸிற்குத் திரும்பினர். இவர் பினீஷியர்களைச் சந்தித்ததாகத் தெரியவில்லை. ஒரு வேளை அவர்கள் வந்திருக்க மாட்டார்கள். அல்லது அவர்கள் தம் நாட் டிற்குத் திரும்பிப் போகும்படி ஏவப்பட்டிருக்கலாம். ஏறத்தாழ 200 போர்க் கப்பல்கள் ஸாமாஸை இப்பொழுது முற்றுகையிட்டன. ஒன்பது மாதங்களுக்குப் பின் இந் நகரானது சரணடைந்தது. தமது சுவர்களை இடித்துப் போடவும் தமது போர்க் கப்பல்களை ஒப்படைக்க வும், யுத்த இழப்பீடாக (indemnity) ஏறக்குறைய 1500 தாலந்துகளைத் தரவும் ஸாமியர்கள் ஒப்புக்கொண்டனர். இவர்கள் ஆதென்ஸின் அடிமைகளாகி, அத்தீனியப் படைகளுக்குப் போர்வீரர்களை அனுப்ப வும் ஒப்புக்கொண்டனர். ஆனுல் இவர்கள் கப்பம் மாத்திரம் கட்ட வேண்டாதபடித் தடுக்கப்பட்டனர்.

இப் போரில் விழுந்த அத்தீனியக் குடியுரிமை யுடையோர் ஆதென்ஸ்ஸில் வெளிப்படையாக அடக்கம் பண்ணப்பட்டனர். அச் சமயத்தில் பெரிக்கிளீஸ் ஒரு சொற்பொழிவாற்றினுர். அதில் ஆண்டின் இளவேனில் எடுபட்டுவிட்டது என்று இளம் காளைகளின் மரணத்தைக் குறிப்பிட்டார்.

மறுபடியும் பைஸான்டியம் (Byzantium) இந்தக் கூட்டுக்குழு இணைப்புக்குள் வந்தது. இச் சமயமானது ஆதென்ஸ்ஸிற்கு மிகவும்

மனக்கலக்கத்தை உண்டு பண்ணியது. ஏனென்றால் பெலோப் போனீஸஸ் அத்தீனியக் காரியங்களில் தலையிடும் என்று இவர்கள் அஞ்சினர். ஸ்பார்ட்டாவும் அதன் நேச நாடுகளும் நிலைமையை ஆராய்வதற்காகக் கூடினர். இக் கூட்டத்தில் ஒவ்வோர் அரசும் கிளர்ச்சி செய்யும் தனது நேச நாடுகளின் மேல் தான் நினைக்கும் நடவடிக்கைகளை எடுக்க விட்டுவிட வேண்டும் என்ற பொதுக் கொள்கையைப் பின்பற்றிக் கொரிந்தியர்கள் பெலோப்போனீஸஸ் தலையிடுவதை மறுத்ததாகக் கொரிந்தியர்களே பின்னொரு காலத்தில் கூறினர். எவ்வளவு தூரம் இது மெய் அல்லது பொய் என்று சொல்வதற்கில்லை. இச் சமயத்தில் கொரிந்தியர்கள் எவ்விதம் நடந்து கொண்டாலும் சரி, ஆதென்ஸ்ஸிற்கும் கொரிந்துவுக்குமிடையே யுள்ள வாணிபப் பொருமையே முக்கியமாக அத்தீனியர்களுக்கும் பெலோப்போனீஸியர்களுக்கும் இடையே இறுதியில் ஏற்பட்ட யுத்தத்திற்கு மூலகாரணமாயிருந்தது. இந்த யுத்தம் அத்தீனியப் பேரரசை அழிவடையச் செய்தது.

ஸாமிய யுத்தம் பரபரப்புடன் நடக்கும்போது நகைச்சுவை நாடகங்களின் மேல் சில தடைகளை விதிப்பது அவசியம் என்று பெரிக்கிளீஸ் உணர்ந்ததாகத் தெரிகின்றது. தனது கொள்கைகளைக் குறித்து நகைச்சுவைப் புலவர்கள் கூறும் தடையில்லாத திறனாய்வுகளின் (criticisms) விளைவுகள் அத்தீனியர்களைப் பாதிப்பதைவிட கொட்டகைகளிலிருக்கும் வெளிநாட்ட்வர்களையும் அதிலும் குறிப்பாக ஆதென்ஸ் நாட்டு ஆதிக்கத்திற்குள் இருக்கும் அடிமை நாடடார்களையும் பாதிக்கும் எனப் பெரிக்கிளீஸ் அஞ்சினர். நிலைமையானது சற்றுக் கவலைக்கிடமாக இருந்தது என்பதை இந்த முன் ஏற்பாடு தெளிவாகக் காட்டுகின்றது. சில காலத்திற்கெல்லாம் இந்தத் தடைகள் நீக்கப்பட்டன. ஏனென்றால் இவை நாள்களின் மனநிலைக்கு எதிர்மாறானவைகளாயிருந்தன. இதன்பின் நகைச்சுவைக் கவிஞர்களின்மேல் ஒரே ஒரு தடைதான் இருந்தது. அது யாதெனில் ஒரு நகைச்சுவைப் புலவர் மக்களின் பணியாளர்களுக்கு விரோதமாகக் கொடூரமான கேலிகள் செய்தால், அவரை 'மக்களுக்கு விரோதமான தப்புச் செய்தார்' என்று ஐந்நூற்றுவர் அடங்கிய சபைமுன் குற்றஞ்சாட்டக் கூடும் என்பதேயாகும்.

இலிங்கத்திற்கான பாடல்களைப் பாடியும், கூடி வந்திருப்போர் மேல் கொடூரமான கேலிகள் கூறியும் தமது முகத்தில் முகமூடி அணிந்துகொண்டு டையோனீஸியஸ்ஸின் பண்டிகைகளைக் கேலிக் கூத்துகளைக்கொண்டு நடத்தி வந்த கும்மாளக்கூட்டத்தாரால் தான் ஆதென்ஸ்ஸில் நகைச்சுவை நாடகம் வளர ஆரம்பித்தது. பாரசீக யுத்தத்திற்குப் பின்னர்தான் இவ்வகை நாடகங்கள் அரசாங்கத்தால்

அங்கீகரிக்கப்பட்டன. இதற்கப்பால் டையோனீஸியஸ் பண்டிகைகள் தோறும் நகைச் சுவைப் போட்டிகளுக்கு ஓர் இடம் அளிக்கப்பட்டது. துன்பியல் நாடகப் போட்டிகளுக்காக ஒதுக்கி வைக்கப்பட்ட மூன்று நாள்களுடன், இப்போது இப் புதிய போட்டிக்காக ஒரு நாள் சேர்க்கப் பட்டது. அப்பொழுதுதான் இன்பியல் நாடகங்கள் ஒருவகை உருவத்தைப் பெற்றன. இவ்வகை நாடகத்தின் முதற் பெரியோர்கள் மாக்னஸ் (Magnes) என்போரும் ஷியோனிடிஸ்ஸூம் (Chionides) ஆவர். இவர்களுடைய திறமையைப் பெரிக்கிளீஸ் காலத்தில் தோன்றிய மிக்க திறம் பெற்ற க்ராட்டினஸ் (Cratinus) மறைத்து விட்டார்.

பூமியிலும் வானத்திலுமுள்ள யாவையும் பார்த்துச் சிரிக் கவும், நகரத்திலுள்ள எல்லா நிறுவனங்களைக் குறித்துக் கேலி பேச வும், நாள்தோறும் நடக்கும் இயக்கங்களை நையாண்டி செய்யவும், அரசியல் வல்லுநரை இழித்துப் பேசவும், கடைசியாகக் கடவுள்களை யும் கேலி செய்யவும் நகைச்சுவைப் பாத்திரங்களுக்கு நாடக மேடை யில் கொடுக்கப்பட்ட சுதந்தரமானது அத்தீனிய அரசியல், சமூகம் முதலியவைகளில் அடைந்திருந்த நலனை வெகு நேர்த்தியாய்க் காட்டு கின்றது. இவ்விதமான சுதந்தரம் ஒரு நாடானது நலிவு பெறும் போது கொடுக்கப்படமாட்டாது. எங்கே மக்கள் தமது வலிமையிலும், புண்ணியச் செயல்களிலும், தமது சீரிய மேம்பாடடைந்த நிறு வனங்கள், உயர்குறிக்கோள்கள் இவைகள் மேலும் உண்மையானதும், ஆழமானதும், திடமானதுமான நம்பிக்கைகள் வைத்திருக்கின்றனரோ அந்த சுதந்திர நாட்டில்தான் இவ்விதம் நடக்கக்கூடும். அப்படிப் பட்ட நிலையில்தான் மக்கள் தம்மைப் பார்த்துத் தாமே சிரிக்கமுடியும். ஆதென்ஸ்ஸின் மேம்பாட்டிற்கு இந்தப் பழைய இன்பியல் நாடகங் களே சாட்சிகளாகும்.

## 11. உயர்தரக்கல்வி: சோபிஸ்டுகள் (Sophiols)

நெஸ்டார் (Nestor), ஒடீஸியஸ் (Odysseus) காலத்திலிருந்தே பேச்சுத்திறனால் மற்றவர்களை இணங்கவைக்கும் கலையைக் கிரேக் கர்கள் மிகவும் மதித்தனர். மக்களாட்சிக் கூட்டரசுகள் தோன்றிய காலத்தில் பேசும் கலையானது அதிக முக்கியத்துவம் பெற்றது. சொற்பொழிவாற்றும் திறனை வளர்த்ததை இக் காலத்தில் காண லாம். இடுகுறிப்பெயர்களான (proper names) பித்தகோரஸ் (Pythagoras), அனெக்ஸகோரஸ் (Anaxagoros) முதலியவற்றிலிருந்தும் நாம் அறிந்து கொள்ளலாம். இப்பெரியார்கள் மக்கள் சபைகளுக்குச் சொற் பொழிவு ஆற்றும் திறமை படைத்திருந்தனர். குடியுரிமை பெற்ற

வர்களில், ஒரு பொதுப்படையானவன், பேசுந்திறனை உடையவனாக இருக்கவேண்டும் என்பதை மக்களாட்சியைக் கொண்ட கிரேக்க நிறுவனங்கள் முன்னதாகவே எண்ணியிருந்தன எனத் தெரிய வருகின்றது. இந்தக் கலையானது பேரவாக்கொண்ட அரசியல்வாதிக்கு அதிக முக்கியமானது. ஒருவன் தனது பகைவர்களால் நீதிமன்றத்தின் முன் இழுத்துச் செல்லப்பட்டு, அங்கு அவன் பேசுவது எப்படி என்று தெரியாமல் திகைத்தால் இவன், படைத்துறை சாராப் பொது மகன் பாதுகாப்புப் பட்டயம் ஏதுமின்றி யிருக்கும்போது அணிவகுத்த போர் வீரர்களால் தாக்கப்பட்டவன் போல் காட்சியளிப்பான். தமது கருத்துகளைத் தெளிவாக எடுத்துக்கூறிக் குழுமியிருப்பவர்களைத் தம் வசம் கவரும் கலையானது அவசியம் படிக்கப்படவேண்டுவது மன்றி, சொல்லியும் கொடுக்கப்படவேண்டும். வார்த்தைகளை மாத்திரம் சம்பாதித்துக் கொள்வது மட்டும் போதாது. அவன் எப்படி வாதாடுவது என்பதையும் கற்றுக்கொள்வது அவசியம். அதுவுமன்றி அரசியல், நன்னெறி முதலியவைகளைக் குறித்து உரையாடவும் தெரிந்துகொள்ள வேண்டும். எனவே இங்கு உயர்தரக் கல்விக்குத் தேவை ஏற்பட்டது.

மக்களாட்சியில் காணப்பட்ட இந்த இயல்பானது முதலில் அயோனியாவில் இயற்பியலாய்வில் காணப்பட்ட ஆராய்ச்சி மன நிலையின் வளர்ச்சிக்கு ஒப்பாயிருக்கின்றது. கூர்மதியுடைய இரு மேதாவிகளினால் இயற்கையைக் குறித்த அறிவானது ஓர் உயர்ந்த கட்டத்தைச் சேர்ந்தது. இவர்களுடைய ஆழ்ந்த ஆராய்வுகள் இயல் நூலின்மேல் நிலையான விளைவுகளை உண்டுபண்ணின. எம்பிடாக்கிளீஸ் நான்கு பூதப் பொருள்களை வேறுபடுத்திக் காட்டினார். இதுவுமன்றி உலகம் (universe) கவர்ச்சி, எதிர்த்துத் தள்ளுதல் ஆகிய இரண்டு ஆற்றல்களால் பாதிக்கப்பட்டு வளர்ச்சி பெற்றுள்ளது என்றும் கூறினார். இந்தக் கூற்றானது இன்றைய நூலியல் தத்துவத்திலும் பெரியதொரு பங்கைப் பெற்றுள்ளது எனலாம். பலம் பொருந்தியவர்களே கடந்து வாழ்வர் (survival of the fittest) என்ற கோட்பாட்டையும் இவர் துவக்கியதுபோல் தெரிய வருகின்றது. அப்டீராவைச் (Abdera) சேர்ந்த டெமாகிரிட்டஸ் (Democritus) மிகவும் புலமை சான்றவர். இவர் அணு இயக்கத்திற்குரிய தத்துவத்தைத் துவக்கி வைத்தார். இந்தத் தத்துவமானது பிற்காலத்தில் எப்பிக்கூரஸாலும் (Epicurus), அதற்கும் பிந்திய ரோமராகிய லூக்கிரிஷியஸாலும் (Lucretius) பொது வழக்கத்திற்குக் கொண்டுவரப் பட்டது. வெறுமையான பரந்த வெளியில் காணப்படும், ஆனால் அளவிலும் நிறையிலும் வேறுபட்டும், குணத்தில் ஒன்று போலிருக்கும் அணுகளால் உலகமானது ஆற்றல் பெறுகின்றது என்று டெமாகிரிட்டஸின் நூலியல் புனைவாற்றல் இவரைத் தூண்டிற்று. இயற்கை

யைக் குறித்த விளக்கத்தில் ஏற்பட்ட இவ்வித முன்னேற்றங்கள் புதிய கருத்தைத் தம்மகத்தே கொண்டிருந்தது மல்லாமல், அதை வளரவும் செய்தன. இதனைத் தொகைவகைப் படுத்தி ஒழுங்கு செய்யப்பட்ட அறிவுத்தொகுதி என அழைக்கலாம். இம்முறையானது எல்லாவித இயல்களுக்கும் கையாளப்பட்டது. ஐந்தாம் நூற்றுண்டின் இரண்டாவது பாகமானது தொழில்துறையைச் சார்ந்த நூல்களின் காலம் எனலாம். சொற்பொழிவாற்றும் திறன், சமையல் செய்யும் திறன் முதலியன கூட ஒழுங்கு முறைகளாகத் தொகுக்கப்பட்டன. அரசியல் நிறுவனங்கள், நீதி முறைமைகள் ஆகியவையும் நூலியல் முறைகளைக் கொண்டு ஆராயப்பட்டன. அறிவை வளர்க்கவேண்டும் என்னும் அவாவானது கிரேக்கர்களை வெளிநாடுகளையும் அங்குள்ள மக்களையும் பற்றி அதிகம் அதிகமான தகவல்களைச் சேகரிக்கச் செய்தது. அவர்கள் உலகத்தைப் பற்றி அதிகமாக அறியத் தொடங்கியதுமன்றி அதனை ஆராய்ச்சி செய்யும் நுண்ணறிவுடன் பார்க்கவும் ஆரம்பித்தனர். ஆகையால் அறிவானது வளர்ச்சி யடையவும், தப்பெண்ணங்கள் நீக்கப்படவும் நேர்ந்தது. ஹெரோடட்டஸ் (Herodotus) நம்பிக்கை யுறுதி யற்றவராகக் காணப்படாமல் தாம் சொல்லும் கதைகளின் கற்பனைகளை அறிந்தவராகக் காணப்படுகின்றார். வழக்கமானது இவ் வுலகத்தின் மன்னன் என்று பிண்டார் (Pindar) கூறியதை இவர் எதிரொலிக்கின்றார். பழக்கத்தைக் குறித்து இவர் கூறிய கதையொன்று பின்வருமாறு:—பாரசீகப் போரின்போது டேரியஸ் சில கிரேக்கர்களை அழைத்து, அவர்கள் தமது முன்னோர்களைச் சாப்பிட எவ்வளவு கூலி கேட்கின்றனர் என்று வினவினர். அப்படிச் செய்ய ஒன்றுமே அவர்களைத் தூண்டாது என்று அவர்கள் கூறவே, டேரியஸ் தமது மூதாதையர்களை உண்ணும் ஒரு இந்தியக் கோத்திரத்தை அழைத்துத் தங்களுடைய மூதாதையர்களின் சடலங்களை நெருப்பிற்கு இரையாக்க எவ்வளவு கூலிவேண்டும் என்று வினவினர். அதனைக் கேட்ட இந்தியர்கள் வீராவேசம் கொண்டனர். படிப்படியாக மக்கள் பழக்கத்தையும் இயற்கையையும் வேறுபடுத்த முற்பட்டனர். நேர்மை எனக் காட்டுதற்குரிய அடிப்படை நியாயம் தமது மரபொழுங்குகளுக்கும் நிறுவனங்களுக்கும் இல்லை என்று இவர்கள் உணர்ந்தனர். இவை வழக்கில் பல ஆண்டுகள் இருப்பதும், பழையனவா யிருத்தலும் போதாது என்று உணர்ந்தனர். இவர்கள் மனித சமுதாயத்தை இயற்கையுடன் ஒப்பிட்டனர். இவர்கள் இயற்கையை நோக்கியதால் இரண்டு மாறுபாடான விளைவுகள் தோன்றின. இயற்கையின் கண்களில் யாவரும் சமம்; பிறப்பும், செல்வமும் பெரிய காரியங்கள் ஆகா; எனவே அரசானது முழுமையாகச் சமம் என்ற அடிப்படையான நோக்கத்துடன் கட்டப்பட வேண்டும் என்று ஒரு தரப்பார் கூறினர். இயற்கை நிலையில் வலுவுள்ள மக்கள் பலமில்லாதவரைக் கீழ்ப்படுத்தி அவர்கள்மேல் ஆட்சி புரிகின்றனர்.

ஆகவே மன்னன் ஆட்சியே சரியான அரசியல் முறை என்று மறு தரப்பார் கூறினர். எவ்விதமான கருத்துகளை நாம் ஊகித்துக் கொண்டாலும் சரி, அவைகளால் ஆவது ஒன்றுமில்லை. ஏனென்றால் இவ்விரு அனுமானங்களும் செயல் முறைக்குக் கொண்டு வரப்பட வில்லை. ஆனல் இவைகளிலிருந்து நாம் கவனிப்பது, எதையும் வினவும் தன்மையானது மிகவும் சுறுசுறுப்பாய் இருப்பதையே. எங்குப் பார்த் தாலும் திறமையுள்ள மக்கள் காணப்பட்டனர். இவர்கள் உதையும் சான்று வலிமை என்பதால் ஏற்றுக்கொள்ள மறுத்தனர். எதற்கும் உனக்கு எப்படித் தெரியும் என்ற கேள்வியைக் கேட்டனர். அதுவு மன்றி வானலோகம், பூலோகம் இவைகளிலுள்ள யாவற்றையும்பற்றி உரையாடும் உரிமையைக் கொண்டாடினர்.

எவற்றையும் மிகவும் ஆராய்ச்சியுடன் வினவுகின்றதும், எதையும் நம்பாததுமான இந்தச் சூழ்நிலையில், தன் இளைஞர்களுக்கு கிரீஸ் உயர் தரக் கல்வியை அளிக்க வேண்டியிருந்தது. இவ்விதக் கல்வியை மக்களாட்சியின் சில செயற் பழக்கங்கள் கோரின. இந்தக் கோரிக்கை யானது ஒருவகை ஆசிரியர்களால் திருப்தி செய்யப்பட்டது. இவர்கள் இடம் விட்டு இடம் சென்று சொற்பொழிவு ஆற்றும் கலையிலும், தர்க்கம் செய்யும் கலையிலும் மக்களுக்குப் பொதுவான போதனைகளைக் கற்பித்தனர். மேலும் இவர்கள் தம் பல்பொருள் அறிவிலிருந்து பல பொருள்கள் மேலும் சொற்பொழிவுகளும் ஆற்றுவார்கள். தமது பணிக்கு ஏற்ப இவர்கள் ஊதியம் பெற்று வந்தனர். இவர்கள் சோபிஸ்டுகள் (Sophists) என்றழைக்கப்பட்டனர். இப் பதத்திற்குத் தற்காலத்து 'பேராசிரியர்' (Professors) என்பது தகுதியாகும். சோபிஸ்ட் என்ற பதத்திற்கு ஏதாவது ஒரு கலையில்—உதாரணமாகச் செய்யுள் அல்லது சமையல் கலை—மிக்க திறமுள்ளவர் என்பது கருத் தாகும். ஊதியம் கொடுத்துக் கற்றுக் கொள்ளும் இளைஞர்களுக்கு ஆசிரியர்களாக இந்த சோபிஸ்டுகள் விளங்கியதால் இந்தப் பெய ரானது நாளடைவில் மோசமான அர்த்தத்தைக்கொண்டு விளங்கியது. இதற்குக் காரணங்கள் பல. முதலாவதாக கிரீஸ் நாட்டில் அதிகம் தெரிந்த மேதைகளை மக்கள் நம்புவது அரிது. இரண்டாவதாக இங்கு ஊதியத்திற்காக யாராகிலும் உழைப்பார்களானல் அவர்களைத் தப்பாக எண்ணுவது வழக்கமாகும். கடைசியாகப் பணம் கொடுத் துப் பயில முடியாத ஏழைகள், சோபிஸ்டுகள் பயிற்சியளித்த மக்களை விடப் பொது மக்கள் சேவையில் சற்றுக் கீழ்ப்படியில் இருந்தமையால் அவர்கள் மிகவும் பொறாமை கொண்டதும் மற்றொரு காரணமாகும். ஊதியப் பணியாளர்களாகிய சோபிஸ்டுகளைக் குறித்துப் பொது மக்கள் கொண்ட வெறுப்பிலிருந்து, நாம் அவர்களை, வஞ்சகர்கள் என்றும், அவர்கள் பொதுமக்களைத் தாம் நம்பாதவைகளையும் தர்க் கங்கள் மூலம் நம்புவதுபோல் பாவனை செய்து மக்கள் கண்களில்

மண்ணைத் தூவினர்கள் என்றும் கொள்ளக்கூடாது. அவர்கள் வஞ்சகர்கள் என்ற கருத்தை நாம் அறிஞர் ப்ளேட்டோவின் (Plato) நூல்களில் காண்கின்றோம். இது வரலாற்றிற்கே நேர் விரோதமாகும். ப்ளேட்டோவின் கருத்தைச் சார்ந்தே 'சோபிஸ்ட்' (sophist) 'சோபிஸ்ட்ரி' (sophistry) என்ற பதங்களுக்குத் தற்காலத்தில் மோசமான கருத்துகள் வழங்கப்பட்டு வருகின்றன.

கல்வியைக் கற்பிப்பதில் மாத்திரமே சோபிஸ்டுகள் ஈடுபடவில்லை. இவர்கள் அநேக பொருள்களின்மேல் கட்டுரைகள் வரைந்தனர்; நிகழ்ச்சித் தலைப்புகளைப்பற்றி உரையாடினர்; அரசியல் விவகாரங்களின் குணங்குறை விளக்கங்கண்டு வாதாடினர்; புதிய கருத்துகளைப் பரப்பினர். இப் பணிகள் யாவையும் ஒன்று சேர்த்தால் இவர்கள் இக் காலத்தில் பத்திரிகைகள் ஏற்கும் பணியை அக் காலம் செய்தனர் என்று நாம் கூறலாம். ஆனால் இப் பேராசிரியர்களில் திறம்படைத்தோர் ஆசிரியர்களையும், பத்திரிகாசிரியர்களையும் விட மேலானவர்கள். அவர்கள் புதிய கருத்துகளைப் பரப்பினது மாத்திரமன்றி, புதிய கருத்துகளையும் பிறப்பித்தனர். இவர்கள் உலகத்தின் அறிவையே தமது துணைப்பணியால் வளமூட்டினர். இவர்கள் யாவரும் பகுத்தறிவை அடிப்படையாகக் கொண்ட கோட்பாடுடையவர்கள் (rationalists). இதுவுமன்றி இவர்கள் அறிவொளியைப் பரப்புவதிலும் ஆர்வம் கொண்டு திகழ்ந்தனர். ஆனால் அவர்கள் தம் தம் சித்தாந்தத்திலும், நோக்கத்திலும் வேறுபட்டே காணப்பட்டனர். லியோன்டினியைச் (Leontini) சேர்ந்த கார்கியஸ் (Gorgias of Leontini), அப்திராவைச் சேர்ந்த ப்ரோட்டாகோரஸ் (Protagoras of Abdera), சியாஸ்ஸைச் சேர்ந்த ப்ரோடிகஸ் (Prodicus of Ceos), ஈலிஸ்ஸைச் சேர்ந்த ஹிப்பையஸ் (Hippias of Elis), ஆதென்ஸ்ஸைச் சேர்ந்த சாக்ரோட்டீஸ் (Socrates of Athens) ஆகிய ஒவ்வொருவரும் சிறந்த தனித் தன்மையைக் கொண்டு விளங்கினர். மற்றவர்களைக் காட்டிலும் முக்கியத்துவம் பெற்ற சாக்ரோட்டீஸ்ஸைப்பற்றிப் பின்வரும் ஓர் அத்தியாயத்தில் காண்போம். சியாஸ்ஸைச் சேர்ந்த ப்ரோடிகஸ் துன்ப இயற்கைக் கோட்பாட்டாளர். இவரைத்தான் புலவர் யூரிபைடிஸ் (Euripides), மனிதர்களின் இன்பங்களைக்காட்டிலும் எண்ணிக்கையில் அவர்களுடைய துன்பங்கள்தான் அதிகம் என்று சிந்தித்தவர் என்று குறிப்பிட்டுள்ளார். ஹெராகிளீஸ் (Heracles) பாதைகள் குறுக்கிடுமிடத்தில் உட்கார்ந்துகொண்டு நன்மையையும் தீமையையும் சேகரிக்கும் நீதிக் கதையை ப்ரோடிகஸ் உண்டாக்கினர். எல்லா சோபிஸ்டுகளைக் காட்டிலும் ப்ரோட்டாகோரஸ் (Protagoras) மிகவும் சிறந்தவராயிருக்கலாம். முதலில் இவர்தாம் சொல்லின் வகைகளைப் பிரித்துக்காட்டி ஐரோப்பாவிலேயே முதல்முதலாக இலக்கண இயலை உண்டுபண்ணினர். இவர் ஆசிரியராக முக்கியமாக

ஆதென்ஸ்ஸில் தான் பணியாற்றியதாகத் தெரிகின்றது. அங்கே அவர் பெரிக்கிளீஸ்ஸினிடம் மிகவும் நெருங்கிப் பழகினர். பெரிக்கிளீஸ் ப்ரோட்டாகோரஸ்ஸுடன் ஒருநாள் முழுவதும் தண்டனையைப்பற்றிய தத்துவத்தைக் குறித்து உரையாடினர் என்னும் கதையானது, கோட்பாட்டாராய்ச்சிக்கு சோபிஸ்டுகள் அளித்த சேவையைக் குறிக்கின்றது.—இந்தக் கேள்வியானது இக் காலத்திலும்கூட முடிவு செய்யப்படாமல் இருக்கின்றது. பதிலுக்குப் பதில் செய்ய வேண்டும் என்னும் நீதியின் தத்துவத்தை (retributive theory of justice) கடைசிவரை எடுத்துச் செல்வோமாகில் உயிருள்ளவையும், உயிரற்றவையும் விசாரிக்கப்பட்டுத் தீர்ப்புப் பெறவேண்டும் என்னும் நிலையை அடைவோம். இதனைப் பலர் வாதித்தனர். இதற்கு எதிரான தத்துவமானது தண்டனையின் நோக்கமானது அச்சத்தினல் பின்வாங்கச் செய்வதே என்பதாகும். அத்தீனியர்கள் சமயத்தின் மேல் கொண்ட தப்பெண்ணங்களுக்கு இவர் பலியானர். இவர் ஒரு சமய சித்தாந்த நூலை இயற்றினர். தமது நண்பராகிய யூரிபைடிஸ்ஸின் (Euripides) இல்லத்தில் தெரிந்தெடுக்கப்பட்ட அவையோர்முன் தம் நூலை உரக்க வாசித்து இந் நூலை வெளியிட்டார். இவருடைய கட்டுரையின் ஆராய்ச்சியானது முதல் வாக்கியத்திலேயே அடங்கியுள்ளது. இவர் கூறியுள்ளதாவது: ‘தேவர்களைப் பொறுத்தவரையில் அவர்கள் இருக்கின்றனரோ அல்லது இருக்கவில்லையோ என்பதை நான் அறியேன். இதை அறிவதற்குப் பல தடைகள் இருக்கின்றன; அவையாவன:— இப்பொருளானது நமக்குப் புலப்படாததாயிருக்கின்றது; இரண்டாவதாக மனிதனுடைய வாழ்க்கையானது மிகவும் சுருக்கமானதாக இருக்கின்றது.’ ப்ரோட்டாகோரஸ் தேவர்களின் மேல் நம்பிக்கை கொண்டிருக்கலாம். ஆனல் அவர் கூறியதென்னவென்றால் அவர்களுடைய உளதாம் தன்மையை நாம் அறியமுடியாது என்பதே. துர்ப்பாக்கியமாக இந்த நூலே அழிந்துவிட்டது. இராச்சிய சமயத்தின் (state religion) கொடியை உயர்த்திப் பிடிக்க, பித்தாடோரஸ் (Pythodorus) என்போர் தோன்றினர். ப்ரோட்டகோரஸ் மேல் இவர் தெய்வ பக்தியற்றவர் என்ற குற்றத்தைச் சாட்டினர். இதையறிந்த அறிஞர் தாம் நாட்டைவிட்டு ஓடிப்போவதே நலம் என்று கருதி, சிசிலிக்குக் (Sicily) கப்பலில் சென்றார். வழியில் இவர் கடலில் காணமல் போய்விட்டார். ‘ஒரு குற்றமும் செய்யாத மாயக்காரக் குருவியை, கலைத்தெய்வங்களின் குயிலை (nightingale of the Muses) கிரேக்கர்களே நீங்கள் கொன்றுவிட்டீர்கள். கொன்றுவிட்டீர்கள்’ என்று தனது நாடகமான பாலாமீடீஸில் (Palamedes) யூரிப்பிடீஸ் த்ரேசியப் பெண்மணிகளைக் கொண்ட பாடக அணியை மனங்கசிந்து பாடச்செய்யும்போது, அவர் த்ரேஷியன் நகரத்திலிருந்து வந்த தமது இறந்துபோன நண்பனை நினைக்கின்றார் என்பது தெரிய வருகின்றது. ஆதென்ஸில் ப்ரோட்டகோரஸ்ஸின் நூலானது விற்ப

னேக்கு அனுமதிக்கப்படவில்லை; மேலும் கிடைக்கப்பெற்ற எல்லா நூல்களும் பகிரங்கமாக எரிக்கப்பட்டன.

ப்ரோட்டகோரஸ் மாத்திரமே இவ்வண்ணமாகக் கடவுள்பற்றில் லாத குற்றத்திற்காகத் துன்பப்படவில்லை. பல ஆண்டுகளுக்குமுன் கடவுள் பற்றில்லாத குற்றத்திற்காக அனக்ஸகோரஸ் (Anaxagoras) தண்டிக்கப்பட்டார்; சில ஆண்டுகளுக்குப்பின் சோக்ரிட்டீஸ் (Socrates) அதே குற்றத்திற்காகத் தண்டிக்கப்படுவார். மற்ற மக்களைக் காட்டிலும் அத்தீனியர்கள் அதிகமான அறிவொளியைப் பெற்றிருந்தனர் அல்லது அவர்களைக் காட்டிலும் குறைவாகத் தப்பெண்ணங்களைக் கொண்டிருந்தவர் அல்லர் என்பதை இந்த உதாரணங்கள் எடுத்துக் கூறுகின்றன. ப்ரோட்டகோரஸ் சமய சித்தாந்தத்தின்மேல் கொண்டிருந்த மனப்பான்மையானது, அரசியல் சமயத்தின் மேலுள்ள ஆழ்ந்த பற்றிற்கு உகந்ததாகவேயிருந்தது; ஆனால் அத்தீனியத் தீர்ப்புச் சான்றோர் குழுவானது (jury) இதனை அறியும் அளவிற்குக் கல்வி கற்கவில்லை. ஐந்தாம் நூற்றாண்டில் அறிவும், தர்க்கம் செய்யும் ஆற்றலும் பரவியிருந்தது என்று நாம் பாராட்டும்போது, பொது மக்கள் இந்த ஒளியின் கீழ் வரவில்லை என்பதை நாம் நினைவுபடுத்திக் கொள்ளவேண்டும். அவர்கள் அறியாமை, ஐயப்பாடு முதலியவைகளால் பீடிக்கப்பட்டுப் பணவசதியுள்ளவர்களின் பிள்ளைகளே பெறக்கூடிய பயிற்சியைக் கண்டும் அவர்களில் மிகவும் அறிவாற்றலுள்ளவர்களைக் கண்டும் பொறாமை கொண்டனர்.

கார்கியாஸ் (Gorgias) ஒரு மெய்விளக்கியல் சிந்தனையாளரும் (philosophical thinker) அரசியல் அறிஞருமாவர். ஆனால் இவர் சொற்பொழிவாற்றுவதிலும், பகட்டாகக் கட்டுரைகள் வரைவதிலும் பெயர் பெற்றார். கிரீஸ் நாட்டிற்கே எவ்வாறு புதிய முறையில் கட்டுரைகள் எழுதுவது என்று போதித்தார். பழைய நடையானது உணர்ச்சியற்றதும், அறிவுடையோரன்றி மற்றவர் புரிந்துகொள்ளக் கூடாததுமாயிருந்தது. ஆனால் இவருடைய நடையோவென்றால் ஒளிதுளங்குகிறதும், சந்தம் பொருந்தியதும் (rhythmic), பூப்போன்ற சொல்வண்ண முடையதாகவும், உவமை நிறைந்ததாயும், பகுத்தறிவையும் கற்பனையையும் தூண்டுவிக்கின்றதாகவும் இருந்தது. ஒலிம்பியாவில் இவருக்காக இவருடைய உடன் பிறந்தாரின் மகனுடைய மகன் (grand-nephcw) ஒரு சிலையை நிறுத்தியபோது, அச் சிலையில் 'ஆத்துமாவை வீரத்திற்கும், தூய்மைக்கும் பக்குவப்படுத்துவதற்காக வேறு எந்த இறக்கும் தன்மையுள்ள மனிதனும் இதைவிட அழகான கலையைப் புதிதாக அமைக்கவில்லை'. என்று பொறித்துள்ளார். அவர் எங்கெங்கே சென்றாலும், ஆர்வத்துடன் வரவேற்கப்

ப்ட்டார். நாம் அதிசீக்கிரத்தில் இவரை ஆதென்ஸ் நகரத்தில் ஒரு தூதரராகச் சந்திப்போம்.

அறிவாற்றல் சார்ந்த இந்த இயக்கத்திற்கு ஊதியம் பெற்று முக்கியமாக விரிவுரை கூறியவர்கள் சோபிஸ்டுகள் ஆவர். ஆனால் இந்த மெய்யுணர்வைப் புகழ்ந்து பேசியவர்களில் ஒருவர் வலிமை மிகுந்த யூரிப்பைடிஸ் (Euripides) புலவராவர். பகுத்தறிவை அடிப் படையாகக் கொண்ட கோட்பாட்டைப் பரப்புவதற்காக இவர் துன்பியல் நாடகமேடையை உபயோகித்தார். பெருவழக்கிலுள்ள சமயத்தின் அடிப்படையை இவர் பலிபீடத்தின் பக்கத்திலிருந்து கொண்டே அரித்தார். இப் பணியானது மென்மையானதாயி ருந்ததால் இவர் மறைமுகமான வழியிலே இதனைச் செய்து முடித்தார். ஆனால் இப் பணியில் தமது திறனை மிகவும் அருமையாகக் காட்டியுள்ளார். ஈஸ்கைலஸ்ஸும் (Aeschylus) சோபோகிளீஸ்ஸும் (Sophocles) சமயச்சார்பான பழங்கதைகளை எடுத்து, அவைகளைத் தமது உயர்குறிகளுக்கு ஏற்றவாறு மாற்றி அமைத்து, தமது ஒழுக்கத் துறைக்குரிய படித்தரத்திற்கு (moral standard) ஏற்றவாறு விளக்கிப் பொருள் கூறினர்கள். யூரிப்பைடிஸ் தாம் காண்கின்றவாறே இப் பழங் கதைகளை எடுத்து, இவைகளிலுள்ள அறிவுக்கு ஒவ்வாமையான காரியங்களை மக்கள் எளிதில் காணும்படி தமது நாடகங்களை அமைத் தார். ஏனைய துன்பியல் நாடகப் புவவர்களைப் போலல்லாமல் இவர் மனிதருடைய வாழ்க்கையில் தேவர்களின் வழிகளுக்கு இணங்கவில்லை. வேண்டாவெறுப்பான துன்ப இயற்கைக் கோட்பாட்டாளராகத் தாம் இருப்பதில் இவருக்கு மனநிறைவு இல்லை. அதிகாரத்துடன் சொல்லும் எதையும் இவர் ஏற்றுக் கொள்ளமாட்டார். அடிமைத் தனம் அல்லது சமுதாயத்தில் பெண்களின் இடம் ஆகிய காரியங் களில் தமது மதிப்பிற்குரிய தம் நாட்டுமக்களின் வைதீகமான கருத்து களுக்கு இணங்க இவர் மறுத்து விட்டார். உயர்குடிப்பிறப்பைப் பற்றி ஆதென்ஸிலும்கூடக் காணப்பட்ட தப்பெண்ணங்களை இவர் ஆதரிக்க மறுத்தார். தங்களுடைய இனத்தைத் தவிர மற்றெல்லா இனங்களையும் எல்லா கிரேக்கர்களும் இழிவாகக் கூறுவது வழக்கம். மேற்படி வழக்கத்திற்கு இவருடைய மனப்பான்மையானது மிகவும் குறிப்பிடத்தக்கது. யூரிப்பைடிஸ் எழுதிய மீடியா (Medea) என்னும் நூலில் ஜேசன் யாருமறியாத வேற்றூரிலிருந்து ஒரு பெண்ணை கிரீஸிற்குக் கொண்டுவந்து, கிரீஸின் உரிமைகளை அனுபவிக்க இடமளித்து, அவளுக்குக் காப்பாக நடித்ததையே அவளுக்கு அவன் இழைத்த துரோகத்திற்குச் சாக்காகக் கொள்ளும் இடத்தைக் காட்டிலும் வஞ்சமான வேறு கூற்றைக் காணமுடியாது.

இக் காலத்துக் கருத்தாராய்ச்சி நயத்தைக் காண்பதற்கு நாம் யூரிப்பைடிஸ், சோபிஸ்டுகள் முதலிய துணிவு மிகுந்த ஆசிரியரை

மாத்திரமே நாடிச் செல்லவேண்டியதில்லை. நமக்கு ஒரு தலை சிறந்ததும், மிகவும் அழகானதுமான சின்னத்தை இந்த பெரிக்கிளீஸியக் காலமானது விட்டுச் சென்றுள்ளது. இதுதான் முப்பது ஆண்டு உடன் படிக்கைக்குச் சில ஆண்டுகளுக்குப் பின் டையோனீஸியப் பண்டிகையில் முதற் பரிசு பெற்ற துன்பியல் நாடகமாகும். சோபோக்கிளீஸ்ஸின் ஆன்மாவானது முன்னோர்களிடமிருந்து பெற்ற சமயத்தின் மேல் இணக்கம் கொண்டிருந்தது. ஆனாலும் கருத்தாராய்ச்சியும் ஆழ்ந்த ஆராய்ச்சியும் நிறைந்து தோன்றிய இக் காலத்தில் வசித்த இவர் தம் காலத்துச் சிந்தனை பொருந்திய பெரியோர்களால் சொற்போரிடப்படும் கேள்விகளிலிருந்து தம்மைப் பிரித்துக் கொள்ள இயலாதவராக இருந்தார். அரசியல், நன்னெறி இயல்களில் மிகவும் தந்திரமானதும், கடினமானதுமான கேள்வியாகிய, அரசுக்கும் குடியுரிமையுடைய தனியாருக்கும் உள்ள சம்பந்தத்தை இவர் தமது நாடகமாகிய ஆன்டிகோனியின் (Antigone) உட்கோளாகக் கொண்டுள்ளார். தமது நாட்டின் அரசாங்கத்திற்குக் கீழ்ப்படியும் கடமையானது இதரக் கடமைகளுடன் மோதுமாகில் ஒரு மனிதன் என்ன செய்யவேண்டும் ? தனது நகரத்தின் சட்டங்களுக்கு ஒருவன் கொண்டுள்ள பற்றுறுதியைக் காட்டிலும் மேலான கடமை யாதேனும் உண்டா? சமயச் சார்பான கடமைகள் போன்ற சில கடமைகள் இருக்கின்றன என்று புலவர் இக் கேள்விகளுக்குப் பதில் அளிக்கின்றார். ஆன்டிகோனி மன்னனின் ஆணையைக் கீழ்ப்படியாததை இவர் நேர்மை என்று காட்டுகின்றார். இப் பொருளானது நாடகமாகத் தீட்டப்படுவதற்கு நன்றாக உதவியுள்ளது. முதல் முதலாக இக் கேள்வியை நாடகத்தில் இணைக்கக்கூடும் என்று அறிந்த இவர், திறனுடன் செய்ததுமாதிரி வேறு எவராலும் செய்ய முடியவில்லை. நாடகச் செய்யுள் வரலாற்றில் ஆன்டிகோனி முக்கியத்துவம் பெற்றதுமன்றி, ஐரோப்பிய அறிவாராய்ச்சி வளர்ச்சியிலும் இது சிறந்த இடம் பெற்றுள்ளது கவனிக்கத்தக்கது. அன்றாடச் செயலில் நன்னெறிக் கோட்பாட்டிலிலும் விடைகாணவிடாது கூப்பாடிட்டுக் கொண்டிருக்கும் பிரச்சினையை, முதல் முதலில் நாடக முறையில் முன்னிலைப் படுத்தியதே இதன் சீரிய சிறப்பாகும்.

# 10. பெலப்போனிசியா-ஏதென்ஸ் போர் (கி.மு. 431—421)

ஏதென்சின் சாம்ராஜ்யப் பெருமையும் சக்திவாய்ந்த வாணிகமும் ஏதென்சிலும் கிரேக்க நாட்டிலும் விரைவில் ஒரு போர் ஏற்படுவதற்குக் காரணமாக இருந்தன என்பதை அறிந்தோம். அது ஒரு முற்றுப் பெருத போரே. அதனுல் ஏதென்சு சில படிப்பினைகளைப் பெற்றது. ஆனுல் ஏதென்சின் பேரவர்வைத் தடுத்து நிறுத்தவோ அதனுடைய வாணிக வளர்ச்சியைக் கட்டுப்படுத்தவோ அது உதவவில்லை. ஆகையினுல் அந்த நாடு மறுபடி போரில் ஈடுபடவேண்டிய தவிர்க்கமுடியாத நிலை ஏற்பட்டது. நாம் இப்பொழுது அப் போராட்டத்தின் இரண்டாம் பகுதியைத் தொடர்ந்து டோரியர்களுக்கும் ஐயோனியர்களுக்கும் இடையே ஏற்பட்ட பகைமை உச்சநிலை அடைந்ததுவரை நிகழ்ந்த சம்பவங்களைக் கவனிக்கவேண்டி இருக்கிறது. அக் காலத்துக் கிரேக்கர்கள் அதிலேயே மிகவும் கவனமாக இருந்தனர். அதை ஒருபோதும் மறக்கவில்லை.

## 1. போரின் தோற்றுவாய்

பெலப்போனிசியப் போர் ஏற்பட இருந்த சம்பவங்கள், கொரிந்தியாவின் இரு குடியேற்ற நாடுகளாகிய கார்சிராவுடனும் போட்டிடேயாவுடனும் தொடர்புள்ளனவாகும். கார்சிரா எப்பொழுதும் தாய்நாட்டுடன் தொடர்பற்றிருந்தது. போட்டிடேயா கொரிந்தியாவுடன் நேசவுறவு கொண்டிருந்த போதிலும் அத்தீனியக் கூட்டமைப்பில் அங்கமாக இருந்தது.

(1) எப்பிடாம்னஸ் (Epidamnus) என்பது கார்சிராவின் குடியேற்ற நாடு. முக்கியத்துவமில்லாத சிறிய நகரில் ஏற்படும் கட்சிப் பூசல்,அடிக்கடி கிரேக்கநாட்டிலிருந்த பெரிய நாடுகளுக்கிடையே யுத்தங்களைக் கொண்டு வந்தது. அத்தகைய நிகழ்ச்சி எப்பிடாம்னஸ்

காலனியிலும் ஏற்பட்டது. அந்தக் காலனி மக்கள், நாடு கடத்தப்பட்ட பிரபுக்களாலும் அவர்களுடைய அநாகரீக நட்பு நாடுகளாலும் அடிக்கடி பல துன்பங்களுக்காளாயினர். அத் தொல்லைகளைத் தவிர்க்க எப்பிடாம்னஸ் தன் தாய்நாட்டின் உதவியை நாடிற்று. தாய்நாடாகிய கார்சிரா உதவியளிக்க மறுத்தது. ஆகவே கொரிந்தியாவின் உதவியை நாடலாயிற்று. கொரிந்தியா போர் வீரர்களையும் புதிய குடியேற்ற நாட்டு மக்களையும் எப்பிடாம்னசுக்குக் கொடுத்துதவிற்று. கார்சிரா கொரிந்தியாவின் தலையீட்டிற்கு எதிர்ப்பைத் தெரிவித்தது. கொரிந்தியா அந் நாட்டிற்கு அனுப்பிய போர் வீரர்களைத் திரும்பி அழைக்குமாறும் வேண்டிக்கொண்டது. கொரிந்தியா அதை மறுக்கவே கார்சிரா எப்பிடாம்னசை முற்றுகை யிட்டது. கார்சிரா மீது படையெடுக்கக் கொரிந்து ஆயத்தம் செய்தது. அதிர்ச்சியுற்ற கார்சிரா கொரிந்தியாவுக்குத் தூதுவர்களை அனுப்பி, தங்களிடையேயுள்ள தகராறையும் பெலப்போனிசிய நாடுகளைக் கொண்ட அவையில் பேசி இரு சாராரும் ஏற்றுக்கொள்ளும் வகையில் மத்தியஸ்தம் செய்து கொள்ளலாமென அறிவித்தது. ஆனால் கொரிந்தியர்கள் மத்தியஸ்தத் தீர்ப்புக்கு இணங்கவில்லை. அன்றியும் உடனே கொரிந்தியா 2000 போர்வீரர்களுடன் எழுபத்தைந்து போர்க் கப்பல்களைக் கார்சிராவைத் தாக்க அனுப்பியது. கார்சிராவிடம் வலுவான கடற்படையில் 120 போர்க் கலங்கள் மட்டுமே இருந்தன. அவற்றில் நாற்பது கப்பல்கள் எப்பிடாம்னஸ் நாட்டை முற்றுகையிட்டுக் கொண்டிருந்தன. எஞ்சியிருந்த எண்பது கப்பல்களைக்கொண்டு அம்ப்ரேஷியன் குடாவில் கொரிந்தியக் கப்பற்படையைத் தாக்கிப் பெரும் வெற்றியை அடைந்தது. அதே நாளில் எப்பிடாம்னஸ் சரணடைந்தது. அவ்வாண்டில் அன்று முதல் கார்சிரா ஐயோனிக் கடலில் தன் ஆதிக்கத்தை நிலைநாட்டியதோடு தன்னுடைய மரக்கலங்களைக் கொண்டு கொரிந்தியாவின் நேச நாடுகளைத் தாக்கிச் சேதம் விளைவித்துக்கொண்டிருந்தது.

கொரிந்தியா தன்னை வெறுத்துவந்த பலமுள்ள தன் காலனி நாட்டுடன் மறுபடியும் யுத்தம் தொடுப்பதற்கு ஈராண்டுக் காலமாகப் பெருமளவு ஆயத்தம் செய்துவந்தது. கொரிந்தியர் மரக்கலங்களைக் கட்டுவதும் வாடகைக்கு இதர நாடுகளிடமிருந்து போர்க்கப்பல்களைப் பெறுவதையும் கேட்டு கார்சிரா அஞ்சத்தொடங்கியது. ஏனென்றால் கார்சிரா அத்தீனியன் கூட்டமைப்பிலோ அல்லது ஸ்பார்ட்டன் கூட்டமைப்பிலோ சேர்ந்துள்ள நாடன்று; மேலும் அதற்கு உதவும் நேச நாடுகள் எவையும் இல்லை. அதேசமயத்தில் கொரிந்தியா பெலப்போனிஸியன் நாடுகளின் கூட்டமைப்பில் சேர்ந்திருந்தது. ஆகவே கார்சிரா அத்தீனியாவுடன் சேர்ந்துகொள்ளத் தீர்மானித்தது. அத் திட்டத்தைத் தகர்க்கக் கொரிந்தியா முயன்றது. அவ்விரு நாடுகளின் கடற்படைகளும் ஒன்று சேர்ந்துவிடக் கூடாதே

என்ற அச்சத்தின் காரணமாகத்தான் கொரிந்தியா அதைத் தடை செய்ய முனைந்தது. அவ்விரு நாடுகளும் தங்கள் அரசியல் தூதுவர் களை ஏதென்சுக்கு அனுப்பின; அத் தூதுவர்கள் ஏதென்ஸ் அவைமுன் நின்று தங்கள் வழக்குகளை அவர்கள் கூறியதாக தூஸிடைடிஸ் கூறும் மொழிகள் அக்காலச் சூழ்நிலையைத் தெளிவாக விளக்குகின் றன; அவை ஏதென்ஸ் தீர்ப்பின் முக்கியத்துவத்தையும் எடுத்துக் காட்டுகின்றன. கார்சிராவுக்குத் துணையாக இருக்கவேண்டுமென்ற பிரதான கருத்து போர் தவிர்க்க முடியாததென்ற கருத்தின் அடிப் படையில் வெளியிடப்பட்டது. 'உங்களுடைய பேரரசின் வளர்ச்சி யைக் கண்டு அஞ்சிய லாசிடோமினியர்கள் உங்களுடன் போர் தொடுக்க முனைந்து நிற்கின்றனர். உங்கள் பகைவர்களான கொரிந்தி யர்கள் அவர்களுடன் சேர்ந்து வலிமை பெற்றவர்களாக இருக்கின் றனர்; நமது நாட்டையும் நாடுகின்றனர். பிறகு உங்களோடும் நட்பா யிருப்பார்கள். ஆனல் நமக்குப் பகைவராய் மாறிவிடுவர். நாம் ஒன்று சேர்ந்து உறுதியோடு நமது பொதுவான பகைவனை வெல்லுவதைத் தடுப்பதே அவர்களுடைய நோக்கம். நாம் அவர்களை முதலில் தாக்க வேண்டும். அவர்கள் மேற்கொள்ளும் நடவடிக்கையைப் பார்த்துப் பதில் நடவடிக்கை எடுப்பதற்காகக் காத்திருக்கவேண்டியதில்லை. முதலில் அவர்களைத் தாக்கி அவர்களுடைய திட்டங்களை அழித்து விடவேண்டும்.' இந்த அடிப்படையில் பார்த்தால் கார்சிராவுடன் நேச உறவு கொள்வதால் மிகுந்த நலமே பிறக்கும். அந் நாடு சிசிலிக்குச் செல்லும் பாதையில் இருக்கின்றது. அது கிரீசில் கப்பல் பலம் படைத்த மூன்று நாடுகளில் ஒன்ருகும். 'கொரிந்தியர்கள் நமது போர்க் கப்பல்களைக் கைப்பற்றிஞலும், அவை இரண்டும் ஒன்று சேரும்படி நீங்கள் அனுமதித்தாலும் நீங்கள் கார்சிரா பெலப்போனிசியா ஆகிய நாடுகளின் கடற்படையுடன் போரிட நேரிடும். ஆனல் எங்களை உங்களுடைய நேச நாடாக்கிக்கொண்டு எங்களிடமிருந்து போர்க் கப்பல்களைப் பெற்ருல் நிகழப்போகும் யுத்தத்தில் உங்களிடமுள்ள கப்பல்களுடன் இவைகளையும் சேர்த்து வலுப்படுத்திக்கொள்ளலாம்.' இதற்குக் கொரிந்தியாவின் தூதுவர்கள் அளித்த மறுமொழி சாரமற்றதாக இருந்தது. கடந்த காலத்தில் கொரிந்தியர்கள் ஏதென்சுக்குச் செய்த உதவியை எடுத்துக்காட்டியதும் மனதில் பதியவில்லை. அவ்விரு நகர நாடுகளுக்கிடையே பொருமை தவிர வேறெதுவுமில்லை. ஏதென்சு விரைவில் பெலப்போனிசி யர்களுடன் போரில் இறங்கக்கூடுமென்பதைக் கொரிந்தியர்கள் மறுத் தார்களே தவிர, அப்படி நடக்காது என்று உறுதியாகக் கூற அவர்க ளால் முடியவில்லை. நேர்மையின் கண்கொண்டு நோக்குங்கால் அவ் விரு நாடுகளின் தன்மையும் ஒன்றுதான். ஏதென்சு கார்சிராவுக்கு உதவியளித்தால் அதனுல் முப்பதாண்டுச் சமாதான உடன்படிக்கை மீறப்படுவதற்கு வழி ஏற்படும்.

ஏதென்ஸ் சபை இப் பிரச்சினையைப் பற்றி ஆராய்ந்து பார்த்து இறுதியில் கார்சிராவுக்கு உதவிசெய்ய, தற்காப்புக்கு வேண்டிய உதவிகளைச் செய்ய முடிவு செய்தது. கார்சிராவுக்கு யுத்த அபாயம் ஏற்பட்டால்தான் ஏதென்சு அதற்கு ராணுவ உதவியளிப்பதென்று முடிவுசெய்து, இதன்மூலம் முப்பதாண்டுச் சமாதான உடன் படிக்கையை நேர்முகமாக மீறுவதைத் தவிர்த்தது. கார்சிராவுக்கு உதவியளிக்கப் பத்துக் கப்பல்கள் அனுப்பப்பட்டன. கார்சிராவை அல்லது கார்சிராவுக்கு உரிமையான இடம் ஏதேனுமொன்றைக் கொரிந்தியா தாக்கினுல் அத்தீனிய வீரர்கள் கார்சிராவுக்கு உதவி புரிய வேண்டும்; மற்றப்படி அவர்கள் போரில் ஈடுபடக் கூடா தென்று ஏதென்ஸ் சபை தன்னுடைய போர் வீரர்களுக்கு உத்தர விட்டது. சிபோட்டா (Sybota) என்ற சிறிய தீவின் அருகில் கார் சிராவின் தென்கிழக்கு மூலையிலுள்ள லேவ்சிம்மிக்கும் (Leucimme), தெஸ்ப்ரோஷியன் (Thesprotian) பெருநிலப் பகுதிக்குமிடையே கடற்படைகள் மோதிக்கொண்டன. கொரிந்தியா தான் இரண்டு ஆண்டுக் காலமாகப் பெருமுயற்சியுடன் கட்டிய 150 போர்க் கப்பல்களைக்கொண்டு கார்சிராவின் 110 போர்க் கப்பல்களைத் தாக் கிற்று. முதலில் கார்சிராவின் போர்க்கப்பல்களின் வலது அணி முறியடிக்கப்பட்டது. இதுவரையில் அப் போரில் ஈடுபடாமல் ஒதுங்கி யிருந்த அத்தீனியர்களின் கடற்படை கார்சிராவுக்கு ஏற்பட இருந்த தோல்வியைத் தவிர்க்கும்பொருட்டு உடனே அச் சண்டையில் ஈடு பட்டது. அன்று மாலை அத்தீனியர்களின் 20 போர்க்கப்பல்கள் அவ்விடத்தை நோக்கி வந்துகொண்டிருந்தன. அவைகளைக் கண்ட கொரிந்தியர்கள் பின் வாங்கிவிட்டனர்; மறுநாள் போர் செய்யவும் மறுத்தனர். அது தோல்வியை ஒப்புக்கொண்டது போலாயிற்று. அதனுல் கார்சியர்கள் வெற்றிக்கொடியை உயர்த்தினர். கொரிந்தி யர்களும் அவர்களைப்போலவே தங்கள் வெற்றிக்கொடியை உயர்த்தி ஞர்கள். ஏனெனில் அவர்கள் கார்சிரா நாட்டினரைவிடச் சிறப்பாகப் போர் செய்தனர். அவர்கள் திரும்பிச் செல்லுகையில் அனக்ட் டோரியன் (Anactorion) என்ற இடத்தைக் கைப்பற்றினர். அது கொரிந்தியாவுக்கும் கார்சிராவுக்கும் சொந்தமானதாகும். கொரிந் தியா தன்னிடமுள்ள கார்சிரா நாட்டுக் கைதிகளை மதிப்புடன் நடத் திற்று. அக் கைதிகளில் பெரும்பாலோர் கார்சிராவில் செல்வாக் குடையவர்களாக இருந்தார்கள். அவர்கள் மூலமாகக் கார்சிராவுடன் மறுபடியும் நேசவுறவு ஏற்படுத்திவிடலாமென்று கொரிந்தியா நம் பிற்று. அந் நம்பிக்கை வீணுகவில்லை என்பதை பின்னர்க் காண் போம்.[1]

[1] கார்சிரா படையெடுப்பில் ஏதென்ஸுக்கு ஏற்பட்ட பணச்செலவு ஒரு கல்லில் எழுதப்பட்டுப் பாதுகாக்கப்பட்டிருக்கின்றது. முதலில் சென்ற போர்க்கப்பலையும், அதைத்தொடர்ந்து சென்ற போர்க்கப்பல்களைப்பற்றியும் விவரம் தரப்பட்டிருக்கிறது.

(2)கொரிந்தியாவுடன் பகை ஏற்பட்டதால் ஏதென்சு சால்சிடிக் தீபகற்பத்தில் அதன் நலன்களுக்கு ஆபத்து வராமல் பாதுகாக்க வேண்டிய நிலை ஏற்பட்டது. ஏனெனில் அங்கு கோரிந்துக்கு நல்ல செல்வாக்கிருந்தது. பள்ளினே (Pallene) இணைப்பு முனையை அதைப் பாதுகாக்கும் பணியை மேற்கொண்டு வந்த போட்டிடே நகரம் (The city of Potidaea) ஏதென்சுக்குத் திறை செலுத்தும் நகரமாக இருந்த போதிலும் ஒவ்வொரு ஆண்டும் அதனுடைய தாய் நாடாகிய கொரிந்தியாவிலிருந்து (நீதிபதிகள்) அனுப்பப்பட்டு வந்தார்கள். சிபோட்டா (Sybota) யுத்தம் முடிந்தவுடனே, மாசிடோனியாவிடமிருந்து பாதுகாத்துக்கொள்ளத் தேவைப்படாத தென்பகுதியிலுள்ள கோட்டைச் சுவர்களை இடித்துத் தரை மட்டமாக்கும்படி ஏதென்சு போட்டிடே நாட்டுக்கு ஆணையிட்டது.

அன்றியும் ஆண்டுதோறும் நீதிபதிகளைத் தாய் நாடாகிய கொரிந்தியாவிடமிருந்து பெற்று வரும் வழக்கத்தையும் விட்டுவிடுமாறு சொல்லிற்று. போட்டிடேமக்கள் அதற்கு மறுத்தனர்; போட்டிடே நகரை ஏதென்ஸ்தாக்கினுல் ஸ்பார்ட்டாபோட்டிடேவுக்கு உதவியாக அட்டிகாவின் மீது படையெடுக்கும் என்ற ஸ்பார்ட்டன் உறுதிமொழி அவர்களுக்கு ஊக்கமளித்தது. முன்னுள் ஏதென்ஸ் நகர நண்பனுகவும் இப்போது அதன் பகைவனுகவும் உள்ள மாசிடோனிய மன்னன் பெரிடிக்காஸின் (Peridiccas) கொள்கை நிலைமையை மேலும் சிக்கலாக்கிற்று. அம் மன்னனுக்கு விரோதமாக ஒன்று சேர்ந்த அவன் சகோதர்களோடு ஏதென்ஸ் நட்பாயிருந்தபடியால் பகையுண்டாயிற்று; அவன் ஏதென்சுக்கு எதிராக சால்சீடியர்களைக் (Chalcidians) கலகம் செய்யும்படி தூண்டினுன். கடற்கரைப் பக்கமுள்ள நகரங்களை அழிக்கவும், பாதுகாப்பான திவாகிய ஒலின்தஸ் (Olynthus) தீவில் போய்க் குடியேறவும் அவர்களைத் தூண்டினுன். போட்டிடேயின் கலகம் ஏதென்சுக்கும் கொரிந்தியாவுக்குமுள்ள பகைக்கு விசேஷ காரணமாக இருந்தாலும் ஏதென்ஸின் ஆதிக்கத்துக்கெதிராக எழுந்த இயக்கத்தின் அம்சமாகவும் அது இருந்தது.

ஏதென்ஸ், மாசிடோனியாவில் போர் நடவடிக்கையை ஆரம்பித்தது, அவர்கள் விரைவில் போட்டிடே நாட்டை நோக்கிமுன்னேறினுர்கள். பெலப்போனீசியப் படைகளுடன் அங்கு வந்துசேர்ந்த கொரிந்தியப் படைத்தலைவன் அரிஸ்ட்டியஸ் (Aristeus) என்பவனை அத்தீனியர்கள் தாக்கித் தங்களுக்குச் சாதகமான வெற்றியைப் பெற்றனர். அப் போருக்கு ஒரு தனிச்சிறப்புண்டு. போட்டிடே மதிற் சுவர்களுக்கு எதிரே முன்னணியில் நின்று போரிட்டு உயிர் நீத்த ஏதென்ஸ் போர் விரர்களின் துயரத்தை அங்குள்ள நடுகல் இன்றும் கூறுகின்றது: 'அவர்கள் தங்கள் உயிரை வழங்கி உயர் புகழைப் பெற்றனர். அதன் வாயிலாக தங்களுடைய நாட்டை மேன்மைப்

படுத்தினர்கள்'.[1] அத்தீனியர்கள் நகரத்தைை முற்றுகையிட்டனர். அதுகாறும் கொரிந்தியர்கள் தனித்து நின்று போரிட்டனர். இப் பொழுது, அவர்கள் போட்டிடே நகரத்துக்கு ஏற்பட்டுள்ள நெருக் கடியை அறிந்து, லாசிடோமோனியர்களை ஏதென்சுக்கு எதிராகப் போர் தொடுக்குமாறு தூண்டி விடுவதில் ஈடுபட்டனர்.

பெரிக்கிளீஸ் யுத்தம் நெருங்கிக் கொண்டிருப்பதை அறிந்து கொண்டான். அவன் கொரிந்தியாவை வாளாலோ ஈட்டியாலோ தாக்காமல் மிக அஞ்சத்தக்கதும் கொடுமை வாய்ந்ததுமான ஆயுதங் களைக் கொண்டு தாக்கினான். மெகாரா நாடு சிபோட்டா (Sybota) சண்டையில் கொரிந்தியாவுக்கு உதவிபுரிந்ததுண்டு. ஆதென்ஸ் அந் நாட்டைத் தண்டிப்பதற்கு ஓர் ஆணை பிறப்பித்தது. அவ்வாணைப்படி மெகாரியர்கள் ஏதென்சு நாட்டின் துறைமுகங்கள், அதன் சந்தைகள் முதலியவற்றைவிட்டு வெளியேற வேண்டும். அவைகளுடன் வாணிபத் தொடர்பு கொள்ளக் கூடாது என்றும் அவ்வுத்தரவு வலியுறுத்திற்று. அக் கட்டளை மெகாராவின் பொருளாதாரத்தைப் பெரிதும் பாதித் தது. மெகாரா பெலப்போனிசியாக் கூட்டில் முக்கிய அங்கமாக விளங்கி வந்தது. எப்போது தாக்க வேண்டுமென்று அத்தீனியர்களுக் குத் தெரியும். நகைச்சுவைப் புலவர்கள் இது குறித்துப் பாடல்கள் புனைந்துள்ளனர். பெரிக்கிளீஸ் எவ்வளவு கோபமடைந்துள்ளான் என்றும், மெகாரியர்கள் ஏதென்ஸ் துறைமுகங்களிலோ, சந்தை களிலோ காலடி எடுத்துவைக்கக் கூடாது என்றும் அவர்கள் நகைச் சுவையுடன் பாக்கள் இயற்றினர்.

நேச நாடுகளின் பிரதிநிதிகள், ஸ்பார்ட்டாவில் கூடி ஏதென்ஸ், முப்பது ஆண்டுச் சமாதான உடன்படிக்கையை மீறியது என்றும், வேறு பல அநீதிகளை இழைத்ததென்றும் குற்றம் சாட்டினர். வேறு வேலையாக அங்கு வந்ததாகக் காட்டிக்கொண்ட அத்தீனியத் தூதுவர் களில் சிலருக்கு அக் குற்றச்சாட்டுகளுக்குப் பதிலளிக்கும் வாய்ப்பு தரப்பட்டது. அங்கு வெளியிடப்பட்ட வாதப் பிரதிவாதங்கள் இங்கு தேவையற்றவையே. ஏனெனில் ஏதென்ஸ் தனது செயலைச் சரியானது என்று நிரூபிப்பதன் மூலமாகவோ, கொரிந்தியா அதன் குற்றச் சாட்டுகளை நிரூபிக்கப் பலமான ஆதாரங்களைக் காட்டுவதாலோ போரைத் தவிர்த்துவிட முடியாது. தவிர்க்க முடியாத போர்களின் போது வெளிப்படையாகக் கூறப்படுகிற காரணங்களுக்கும் உண்மை நிகழ்ச்சிகளுக்கும் சம்பந்தமிருக்காது. கார்சிரா சம்பவங்களோ போட்டிடே முற்றுகையோ மெக்காரியன் ஆணையோ போருக்குக் காரணமல்ல; ஆனால் அவை போரைத் துரிதமாகத் தூண்டின. அதற்கு

[1] இந்தக் கல்வெட்டு பிரிட்டிஷ் பொருட்காட்சிச் சாலையில் பாதுகாத்து வைக்கப்பட் டிருக்கிறது.

மூலகாரணங்கள் அத்தீனியர்களின் சக்தியின் மீதுள்ள பொருமையும் அச்சமும் ஆகும். தவிர்க்க முடியாத அப்போரில் ஈடுபடுவதற்கு உரிய நேரம் அதுதாஞ என்பதுதான் கேள்வி. ஸ்பார்ட்டன் மன்னன் ஆர்ச்சிடாமஸ் அவசரப்படவேண்டாமென்று எச்சரித்தான்: 'இப்போது போரில் ஈடுபடவேண்டாம். போர்க்கருவிகளை மட்டும் வைத்துக்கொண்டு போர் செய்துவிட முடியாது; அது பணத்தைப் பொறுத்தது; ஆயுதங்களுக்கு அதுதான் வாய்ப்பளிக்கிறது. ஒரு தரையாதிக்க நாடு கடலாதிக்க நாட்டுடன் போரிடும்போது பணம்தான் எல்லாவற்றிலும் மேலானதாகின்றது. முதலில் பணத்துக்குரிய வழியைத் தேடுவோம். பிறகு நமது உணர்ச்சியைத் தூண்டிவிடுகிற நேசநாட்டின் பேச்சுகளுக்குச் செவி சாய்ப்போம்.' ஆனுல் நிர்வாகத் தலைவர்களாகிய ஐந்து நடுவர்களும் போரை ஆதரித்தார்கள். ஸ்தெனிலேய்டாஸ் (Sthenelaidas) குறிப்பிட்ட காரசாரமான சிறிய சொற்பொழிவுக்குப் பின் சில வினுக்களை யெழுப்பினுன். 'நாம் யுத்தப்பிரகடனம் செய்யவில்லையா? அந்த உடன்படிக்கை மீறப்படவில்லையா? தவறிழைத்தவர் அத்தீனியர்கள் அல்லவா?' அத்தீனியர்கள் செய்தது தவறென்று முடிவு செய்தனர்; அத் தீர்மானம் யுத்தப் பிரகடனம் செய்ய ஏதுவாயிற்று. யுத்தப் பிரகடனம் செய்வதற்கு முன் டெல்பிக் தெய்வ வாக்கு பெறப்பட்டது. நேசவுறவு நாடுகளின் பொதுச் சபைக் கூட்டம் நடைபெற்றது. நேச உறவு நாட்டினர் யாவரும் போருக்கு இசைந்தனர்.

ஹெலனிக் வரலாற்றில் போருக்குத் தயாராகி எதிரெதிரே நிற்கிற இரு பெரும் நாட்டு மக்களின் குணவியல்பு, மனநிலை, நோக்கங்கள் முதலியவற்றின் ஒற்றுமை வேற்றுமைகளை அலசி ஆராய்வதற்கேற்ற சந்தர்ப்பத்தையே துஸிடைடிஸூம் தெரிந்தெடுத்திருக்கிருர். ஸ்பார்ட்டாவில் நடைபெற்ற முதல் கூட்டத்தில் பேசிய கொரிந்தியத் தூதுவன் வாயிலாக ஒற்றுமை வேற்றுமைகளைவிளக்குகிருர்; 'லாசிடோமோனியர்களே, நீங்கள் போர் புரிய விருக்கிற அத்தீனியர்கள் எத்தகையவர்கள் என்பதைச் சிந்தித்துப் பார்க்கவில்லை. நீங்கள் அவர்களினின்றும்முற்றிலும் மாறுபட்டவர்கள். அவர்கள்புரட்சிகரமானவர்கள் புதிய திட்டங்களை உருவாக்குவதிலும் அவற்றை நிறைவேற்றுவதிலும் வேகமிக்கவர். நீங்கள் பழமைப் பிரியர்கள். உள்ளதைக் காத்துக்கொள்வதில்தான் வல்லவர்கள்; புதிதாக எதையும் தொடங்குவதில்லை. செயலாற்றவேண்டிய இன்றியமையாத நேரத்திலும் செயலாற்றுவதில்லை. அவர்கள் தங்கள் ஆற்றலுக்கும் மேற்பட்ட துணிவுள்ளவர்கள். முன் யோசனையின்றி எவ்விதமான அபாயங்களிலும் ஈடுபடுவார்கள். துரதிருஷ்டங்களுக்கு நடுவிலும் அவர்கள் நம்பிக்கையுடன் இருக்கின்ருர்கள். ஆனுல் நீங்களோவெனில் பலமிருந்தும் பயந்து நிற்பீர்கள்; உங்கள் திட்டங்கள் முன் யோசனையுடன் தயாரிக்கப்பட்டிருப்பினும்

அவற்றை நீங்கள் நம்புவதில்லை. கஷ்டம் வரும்போது அதைவிட்டுக் கரை ஏற முடியாது என்று கலங்குவீர்கள். அவர்கள் மிக விரைந்து முன்னேறுகிறவர்கள். நீங்கள் வீண் காலம் கழிப்பவர்கள், அவர்கள் எப்போதும் வெளிநாடுசுளில் இருக்கின்றார்கள். நீங்கள் உங்கள் வீட்டினுள் அடைந்து கிடக்கின்றீர்கள். அயல் நாடுகளுக்குப் போவதனால் பயனடையலாமென்று அவர்கள் நம்புகிறார்கள்; புதிய முயற்சிகள் பழையனவற்றைக் கொன்றுவிடக் கூடாதே என்று அஞ்சுகிறீர்கள்; அவர்கள் வெற்றி பெறும்பேது அதைத் தொடர்ந்து நிலைபெறச் செய்கின்றனர்; தோல்வியிலும் அவர்கள் துவண்டுவிடுவதில்லை. அவர்கள் தங்கள் உடலை நாட்டுக்காக அர்ப்பணிக்கின்றனர்; சொந்த உடலென்று கருதுவதில்லை. அவர்களுக்குச் சொந்தமானது அவர்களுடைய மனமே. நாட்டுக்காகச் சேவையிலீடுபடும்போது இவ்வுண்மையைச் செயல்படுத்துகின்றனர். அவர்கள் வகுத்த திட்டத்தை நிறைவேற்றாத போது அதைச் சொந்த இழப்பாகக் கருதி வருந்திப் புலம்புகின்றார்கள். முயற்சி பலனளித்தால் எதிர்பார்த்ததில் ஒரு பகுதி மட்டும் கிடைத்ததாகவே கருதுகின்றார்கள். தோல்வியடையும்போது மனம் சோர்வடையாமல் புது முயற்சியில் மனதைச் செலுத்தி ஈடுசெய்கின்றனர்; நம்பிக்கை வெற்றிதரும் என்பது அவர்களைப் பொறுத்த வரையில் உண்மை; ஏனெனில் சிந்தனையைச் செயலாக்குவதில் ஒரு வினாடியைக்கூட வீணாக்கமாட்டார்கள். அபாயமும் உழைப்பும் நிறைந்த பணியை வாழ்நாள் முழுதும் விரும்பி ஏற்றுக் கொண்டிருக்கின்றனர். அவர்களுடைய நல்ல பொருள்களை இவ்வளவு சிறிய அளவில் வேறு எவரும் அனுபவிப்பதில்லை ஏனெனில் எப்போதும் அவற்றைப் பெருக்கிக் கொள்வதிலேயே கருத்தாக இருக்கின்றனர். பணி செய்வதை அவர்கள் ஒரு பொழுது போக்காகக் கருதுகிறார்கள். செயல் புரியா நிலை, அவர்களுக்கு ஒவ்வாத நிலையாக, மிக்க சோர்வு தரும் நிலையாகக் கருதுகின்றனர். அவர்கள் தாங்களும் அமைதியாக இருப்பதில்லை, மற்றவர்களையும் அமைதியாக இருக்க அனுமதிப்பதில்லை, அதற்கென்றே அவர்கள் பிறந்துள்ளனர் என்று யாராவது சொன்னால், அவர் சொல்லுவது நூற்றுக்கு நூறு உண்மையாகும்.'

ஸ்பார்ட்டாயுத்தம் வராமல் தடுப்பதற்காக அரசியல் தூதுவர்களை அனுப்பவில்லை. யுத்தத்திற்கான ஆயத்தங்கள் செய்யப் போதுமான காலத்தை விரும்பியே தூதுவர்களை அனுப்பியது. அவர்கள் மிகவும் அற்ப விஷயங்களுக்காக அனுப்பப்பட்டனர்; முதலாவதாக ஏதென்சுக்குத் தேவதையின் சாபக்கேட்டைத் துடைத் தெறிய வேண்டுமென்று ஸ்பார்ட்டா ஏதென்ஸ்ஸைக் கேட்டது. இது இருநூறு ஆண்டுகளுக்குமுன் நடந்த ஒரு சம்பவத்தை மறுபடியும் கிளறிவிடும் செயலாக இருந்தது. அது ஸைலானுடைய சதித் திட்டச் சம்பவத்தைக் குறிப்பிடுகிறது. பெரிக்கிளீஸ் சாபத்துக்குள்ளான குடும்பத்தைத்

தன் தாய் வழியில் சேர்ந்தவன். ஸ்பார்ட்டன் இதனைக் குறிப்பிடவே, அதற்குச் சமமான அற்ப கோரிக்கைகளை ஏதென்ஸ் தெரிவித்தது. பிரேசன் குடும்பத்துக்கு (Brazen House) ஏற்பட்ட 'அத்தேனே' சாபத்தையும் போசிடேன் (Poseidon) கோவிலில் சில ஹெலாட்ஸ்கள் கொல்லப்பட்டதனுல் ஏற்பட்ட டெய்னரஸ் (Taenarus) சாபத்தையும் தீர்க்க ஸ்பார்ட்டாவில் சாபவிமோசனச் சடங்கு நடைபெற வேண்டு மென ஏதென்ஸ் கூறியது. இந்த வாய்ப்புகள் ஸ்பார்ட்டா விரும்பியது போல, போதுமான அவகாசத்தை அளித்தன அதனுடன் தொடர்ந்து ஸ்பார்ட்டா ஓர் இறுதி எச்சரிக்கையையும் ஏதென்சுக்கு அனுப்பியது. ஹெலன்களுக்கு அவர்களுடைய சுதந்திரத்தைத் திருப்பிக் கொடுத்துவிடின் ஏதென்ஸ் அமைதியோடு வாழ முடியு மென்பது அந்த எச்சரிக்கையில் அடங்கியிருந்தது. ஏதென்ஸில் சமாதான வாதிகளின் கட்சி ஒன்றிருந்தது. ஆனுல் பெரிக்கிளீஸின் நோக்கத்தை அன்று சபை ஆதரித்தது. 'தூதுவர்களுக்கு இம் மறு மொழியைத் தந்து அனுப்பி விடுவோம். அதாவது, லாசிடோ மோனியர்கள் அயல் நாட்டினரான நம்மையோ நமது நேச நாடு களையோ, ஸ்பார்ட்டாவை விட்டு வெளியேற்ருமலிருந்தால் நாமும் மெகாரியர்களை நம்முடைய சந்தைகள், துறைமுகங்கள் முதலி யவைகளிலிருந்து வெளியேற்றமாட்டோம். ஏனெனில் உடன்படிக்கை ஒரு கட்சியை மட்டும் கட்டுப்படுத்தவில்லை. லாஸிடோமோன் தன்னுடைய சுயநலனை மறந்து தன் ஆட்சிக்குள்ளான நாடுகளின் நல னைக் கருதி அவைகளுக்குச் சுதந்திரத்தை உடனடியாகக் கொடுத்தால், நாமும் உடன்படிக்கை ஏற்பட்ட போது சுதந்திர நாடுகளாக இருந்து இப்போது நமது ஆட்சிக்குட்பட்ட நாடுகளுக்கும் சுதந்தரம் அளிப் போம். உடன்படிக்கைக்கு ஏற்ப மத்தியஸ்தம் செய்வதை நாங்கள் விரும்புகிருேம். நாங்கள் யுத்தத்தைத் துவங்க விரும்பவில்லை. ஆனுல் எங்கள் மீது யுத்தம் திணிக்கப்பட்டால் நாங்கள் தற்காப்புக்கான நட வடிக்கைகளை எடுக்க ஆயத்தமாக இருக்கிருேம். இம் மறுமொழி நியாயமானதும் நாட்டின் மதிப்புக்கு ஏற்றதுமாகும். எனினும் போர் மூளலாம். எனவே, நாம் விழிப்புடன் இருக்கவேண்டும். இந்த நிலை மையை நாம் எவ்வளவுக் கெவ்வளவு ஒப்புக்கொள்ள விரும்பு கிருேமோ அவ்வளவுக் கவ்வளவு பகைவன் நம்மீது தன் கை நீட்டத் தயங்குவான். பெரிக்கிளீஸ் அவசரப்பட்டு யுத்தத்தை ஆரம்பித்து விடவில்லை. அவன் ஏற்கெனவே மெகாரியரின் ஆணைக்கு பலத்த அடி கொடுத்து விட்டான்.

கிரீஸ் நாட்டு மக்கள் கீழ்க் கண்டவாறு இரு பகை நாடுகளின் கட்சியில் சேர்ந்திருந்தார்கள். ஸ்பார்ட்டாவுடன் பகைமை கொண்ட ஆர்கோஸ் (Argos), அச்சேயே (Achaca ) என்ற இரு நாடு களைத் தவிர மற்ற பெலப்போனிஸிய நாடுகள் யாவும் அதன் கட்சியில்

சேர்ந்திருந்தன. நிலமுனை (Isthmus) அதனுடைய ஆதிக்கத்தி விருந்தது. ஏனென்றால் கொரிந்தியா, மெகாரா ஆகிய இரு நாடு களும் அதன் ஆட்சியில் இணைந்திருந்தன. வடகிரீஸில் போஷிஸியா (Boeotia), போஸிஸ் (Phocis), லோக்கிரிஸ் (Locris).நாடுகளும், மேற்கு கிரீஸில் அம்பிரேசியா, அனக்டோரியன் நாடுகளும், இலியுக்காஸ் தீவும் ஸ்பார்ட்டா பக்கம் சேர்ந்திருந்தன. மேற்கு கிரீஸில் அகார்ன னியன்ஸ் (Acarnanians), கார்சிரா (Corcyra), சாசிந்தஸ் (Zacynthus) நாடுகளும் நௌபாக்டஸ் நாட்டினுடைய (Naupactus) மெஸானியர் களும் (Messenians) ஏதென்ஸ் கட்சியில் இருந்தார்கள். வடகிரீஸில் பிளெட்டியா ஏதென்ஸ் நாட்டுடன் சேர்ந்திருந்தது. ஏதென்ஸ் தன் னுடைய கூட்டமைப்பில் இணைந்த நாடுகளைத் தவிர மேல் குறிப் பிட்ட நாடுகளையும் தன் கட்சியில் சேர்த்துக்கொண்டது. கூட் டமைப்பில் ஸியாஸ் (Chios), லெஸ்பாஸ் (Lesbos) என்ற நாடுகள் மட்டும் சுதந்திர நாடுகளாக இருந்தன. லெஸ்பாஸ், சியாஸ், கார் சிரா நாடுகள் கொடுத்த கப்பல்களைத் தவிர ஏதென்ஸ்ஸிடம் அத னுடைய சொந்தக் கப்பல்கள் 300 இருந்தன.[1]

## 2. யுத்தத்தின் பொதுநோக்கு ' தூசிடைடிஸ்

முப்பதாண்டுச் சமாதான உடன்படிக்கையின்மூலம் நிறுத்திவைக் கப்பட்டிருந்த பழைய யுத்தம் மறுபடியும் ஒரு பெரிய யுத்தமாக மூண்டது. இங்கும் ஏதென்ஸ்ஸுக்கு எதிர்ப்பை உண்டு பண்ணுவ தற்குக் கொரிந்தியர்களே தூண்டுகோலாக இருக்கின்றார்கள் முழு மனத்துடன் போரை விரும்பாத ஸ்பார்ட்டர்களை அதனுடைய நேச நாடுகள் அடிக்கடி ஊக்கமூட்ட வேண்டியதாயிற்று. இந்த யுத்தம் பத்தாண்டுக் காலம் தொடர்ந்து நடந்து, நிக்கியாஸ் உடன் படிக்கை (Peace of Nicias) மூலம் நிறுத்தப்பட்டது. பகை மறுபடியும் மூளுகிறது. சிசிலித் தீவில் ஒரு புதிய யுத்தக்களம் ஏற்படுகிறது. எத்தீனியப் பேரரசின் விதியைத் தீர்மானிக்கும் எக்கோஸ்பொட் டாமி (Aegospotami) யுத்தத்தினால் அப் போர் முடிவடைகிறது. இவ் விதமாக 55 ஆண்டுக் காலம் ஏதென்ஸ் தன் பேரரசைக் காப்பாற்றப் பெலப்போனிஸியர்களுடன் போராடிக் கொண்டிருந்தது. இந்த யுத்தம் மூன்று பிரிவுகளாகப் பிரிக்கப்படுகிறது. முதல் கட்டம் 30 ஆண்டு உடன்படிக்கையில் முடிவடைகிறது, இரண்டாம் பகுதி நிக்கி யாஸ் உடன்படிக்கையின்மூலம் சமாதானமாக முடிவடைகிறது. மூன்

[1] ஆதென்ஸுக்கு வில்வீரர்கள் உள்பட 1200 குதிரை வீரர்களும், 1800 தரைப் படை வில்லாளிகள், போர்க்களத்திற்கு 13000 ஆயுதங்கள் தாங்கிய வீரர்கள், காவல் நிலையங்களுக்கு 16,000 போர் வீரர்களை வைத்திருந்தார்கள். (வயோதிகர், இளைஞர், மெட்டிக்ஸ் முதலியோரும் படையிலிருந்தார்கள்.)




பெலப்பொனீசிய யுத்தத்தின் தொடக்கத்தில் கிரீஸ்

ருவது கட்டம் எக்கோஸ்பொட்டாமி யுத்தத்தோடு முடிகிறது. முதல் யுத்தத்திற்கும் இரண்டாவது யுத்தத்திற்குமிடையில் ஓய்வே இல்லை. தூசிடைடீஸ் என்பவனின் வரலாற்ருேடு இணைக்கப்பட்ட இந்த இரண்டாம் மூன்ரும் யுத்தங்களைப் பொதுவாக ஒன்றுபடுத்தி ‘பெலப் போனிஸிய யுத்தம்’ என அழைக்கின்றனர். இந்தப் பெயரைத் தூசி டைட்டீஸ் ஒருபோதும் உபயோகித்ததில்லை. இது வரலாற்று ஆசிரியர் அத்தீனியர்களிடம் கொண்டுள்ள அனுதாபத்தைக் காட்டுகிறது. பெலப்போனிசியர்களின் நோக்கப்படி இது அட்டிக் யுத்தம் என்றும் அழைக்கப்படலாம்.

இந்த யுத்தத்திற்கான காரணங்களை மறுபடியும் கூறுவது தவ ருகாது. ஏதென்ஸ் தனக்குக் கிரீஸில் எதிர்ப்பிருந்தபோதிலும் தன் னுடைய கடல் ஆதிக்கப் பேரரசைப் பாதுகாப்பதென்று உறுதி கொண்டுவிட்டது. ஆகையால் ஏதென்ஸ் யுத்தத்திற்குப் பொறுப் பாளியாயிற்று. பேரரசை விரிவடையும்படி செய்ய அதற்கு ஒரு திட்டம் இருந்தது என்று ஊகிப்பதற்கு ஒரு காரணமும் இல்லை. ஹெல்லாஸ் மீது ஆதிக்கம் செலுத்தப் பெரிக்கிளீஸ் யுத்தத்தைத் துவக்கினுன் எனத் தற்கால வரலாற்று ஆசிரியர்கள் கூறுவது அதன் உண்மைக்கு முரணுனதாக அமைந்திருக்கிறது.

யுத்தத்தின் முயற்சிகளும் அந்த நிகழ்ச்சிகளும் விளைவுகளும் அதன் சிறப்பின்மையைக் காட்டியபோதிலும், அது உலக வரலாற்றில் ஒரு சிறப்பான இடத்தைப் பெற்றிருக்கிறது. பெர்சியாவுக்கும் கிரீ ஸுக்கும் நடந்த யுத்தத்தோடு இந்த யுத்தத்தை ஒப்பிட்டால், இது கிரீஸில் சிறிய நாடுகள் தங்களுக்குள் நிகழ்த்திய ஒரு குடும்பச் சண்டையென எண்ணத் தோன்றுகிறது. ஹெல்லாஸின் வரலாற்றில் எந்தச் சம்பவங்களுக்கும் ஏற்படாத தனிச்சிறப்பு பெலப்போனிசியா யுத்தத்திற்குண்டு. வரலாற்று ஆசிரியர்களுள் மிகச் சிறந்தவர்களால் இந்த யுத்தம் எழுதப்பட்டிருக்கிறது. ஓலோரஸ் (Olorus) மகன் தூசி டைடிஸ் எதிர்கால மக்களுக்காக எழுதிய கிரேக்க வரலாறு ஓர் அரிய போதனை. அரசியலுக்கும் வரலாற்றுக்கும் அது ஒரு பாடமாக இருக் கிறது. அதை எக்காலத்துக்கும் பொருந்தும் அரிய நூலாகத் திகழும் என்ற நோக்கத்தோடு அவன் எழுதி இருக்கிருன். ஹெரோடட்டஸ் வரலாற்றை எழுதி முடித்த காலத்திற்கும் தூஸிடைடிஸ் வரலாற்றை எழுத ஆரம்பித்த காலத்திற்குமிடையே யுள்ள ஓய்வுக்காலம் மிகவும் குறைவானதாக இருந்தது. அவர்களிருவருக்குமிடையே சில வேற் றுமைகளுண்டு. அரசியல் சம்பவங்கள் உணர்ச்சியூட்டும் கதைகளாக ஹெரோடட்டஸின் (Herodotus) கருத்திலிருந்து வெளிவந்தன. எதையும் ஆராய்ந்து உற்று நோக்கும் பண்புடையவராக இருந்த போதிலும் அவருடைய அரசியல் நுண்ணறிவு போற்றத் தக்கதன்று.

அவரிடம் இலக்கியக் கலைஞனுக்குரிய பிறவிப் பண்பிருந்தது. அவருடைய வரலாற்று முறைகள் ஆரம்ப நிலையிலேயே இருக்கின்றன. அவர் எழுதிய வரலாறு அவருக்குப்பின் வந்தவர்கள் எழுதிய வரலாறுகளைப் போலில்லை. அவருடைய முறை இதிகாசக் கவிஞர்கள் முறைக்கு ஒத்திருக்கிறது. அவர் சரித்திரம் எழுதுவதற்கு ஆதாரங்களைச் சேகரித்துக் கொண்டிருந்தபோது பாரசீகப் படையெடுப்பு நடந்தது. அந்தப் படையெடுப்பில் சுவையூட்டும் பல கதைகளுண்டு. அக் கதைகளை ஆதாரமாகக் கொண்டு அவன் வரலாற்றை எழுதியுள்ளான். ஹலிக்கார்னஸஸைச் சார்ந்த ஆராய்ச்சியற்ற, கவர்ச்சியான கதை சொல்லும் ஹெரோடட்டஸ் எழுதிய வரலாற்றைப் படித்துவிட்டு ஏதென்சு நகரத்தானுகிய தூசிடைடிஸ் எழுதிய வரலாற்றைப் படிக்கும்போது ஒரு வியப்பு உணர்ச்சி ஏற்படுகிறது. சியஸின் மூளையிலிருந்து அதனோடு வெளிப்பட்டதைப் போல் முதல் வரலாறு வெளிப்பட்டு முழுமைபெற்றது. இது வரையில் அதற்கு நிகரான வரலாற்று நூல் ஒன்றுமே இல்லை. அந் நூல் அறிவாற்றலுக்கொத்த முறையில் எழுதப்பட்டிருக்கிறது. வறட்டு வாதங்கள், நீதித் தீர்ப்புகள் முதலியவைகளால் இடர்ப்பாடு அடையா வகையில் எழுதப்பட்டிருக்கிறது. அவர் எழுதிய வரலாறு அவரது நாடகக் கலைத் திறமையைக் காட்டுகிறது. இவ்வாறு தூசிடைடிஸின் நூல் ஹெரோடட்டஸ் எழுதிய நூலினின்றும் முற்றிலும் வேறுபட்ட சிறப்பைக் கொண்டுள்ளது. திறனாய்வுக்கலை தூசிடைடிஸின் காலத்திற்குப் பிறகு வளர்ச்சிபெற்று இருந்தால் மனித சமுதாயம் வருந்த நேரும். இருவருக்குமிடையே யுள்ள வேற்றுமைகள் பல. தூசிடைடிஸ் தன் நூலில் தன்னுடைய மக்களாட்சிக் கோட்பாட்டைப் பலவிடங்களில் விளக்கிக் காட்டியிருக்கிறான். அத்துடன் அவன் பெரிக்கிளீஸின்மீது தனக்குள்ள மதிப்பையும் வெளிப்படுத்துகிறான்.

தூசிடைடிஸ் அந்த வரலாற்றை எழுதியிராவிட்டால் அந்த யுத்தத்தில் ஏற்பட்ட சம்பவங்கள் சிறப்பற்ற சாதாரண சம்பவங்களாகவே காணப்படும். அவ் வரலாறு ஒரு சிறிய மதிப்பற்றகட்டுரைப் பொருளன்று. அது அத்தீனியப் பேரரசின் வளர்ச்சியையும் வீழ்ச்சியையும் பற்றிய வரலாறு. அந் நாட்களில் ஏதென்ஸ், சமயச் சார்புடைய வரலாற்றுக் கேந்திரமாக விளங்கிற்று. போரிலீடுபட்ட நாடுகள் சிறியவைகள் என எண்ணி யாரும் அந்த யுத்தத்தின் முக்கியத்துவத்தைக் குறைத்துக் கூறிவிட முடியாது. பரப்பால் பெரியவைகளாக இருந்திருந்த அநாகரீக நாடுகளைவிட, அச்சிறிய அத்தீனிய நாடுகளில்தான் மனித வர்க்கத்தின் முன்னேற்றத்திற்குத் தேவையான அரசியல்கோட்பாடுகளும் நிறுவனங்களும் வளர்ந்தன.

இப்போது ஆரம்பித்த பத்தாண்டு யுத்தம் தொடர்பற்ற ஒழுங்கீனமான பல சம்பவங்கள் மலிந்தனவாகத் தோன்றலாம். ஆனால் இந்த யுத்தத்திற்கு அத்தீனியர்கள், பெலப்போனிசியர்களாகிய இரு நாட்டு மக்களுக்கும் திட்டமான பல நோக்கங்களிருந்தன. அவர்களுடைய திட்டங்கள் அவர்களுடைய பொருள் வளத்தையும் பகை நாட்டின் புவியியல் அமைப்பையும் பொறுத்திருந்தன.

ஏனென்றால் அச் சண்டை நில ஆதிக்கம் பெற்ற வல்லரசுக்கும் கடலாதிக்கம் பெற்ற வல்லரசுக்குமிடையே நடந்த ஒரு போர். இவ்வடிப்படை உண்மையே அந்த யுத்தத்தின் திறவுகோலாகும். நில ஆதிக்க நாட்டிற்குக் கடலாதிக்க நாட்டின் நிலப்பகுதிகளைத் தாக்குவதே முதன்மையான வேலையாக யிருந்தது. அதைப்போலவே கடலாதிக்க நாடு, நில ஆதிக்க நாட்டிற்குச் சொந்தமான தீவுகளையும் கடற்கரையோரமான பட்டினங்களையும் தாக்குவது இயல்பு. கடலாதிக்க நாட்டின் சிறிய தரைப் படையும் புவியாதிக்க நாட்டின் எளிய கடற்படையும் தற்காப்புக்காகவே செயலாற்றின. சில சமயங்களில் அப் படைகள் முன்னேறித் தாக்குவதும் உண்டு. கடலாதிக்க வல்லரசின் கடல் உடைமைகளும், நில ஆதிக்க வல்லரசின் உள் நாட்டுப் பகுதிகளும் இந்த யுத்தத்தின் போர்க்களங்களாக அமையவில்லை. இதனால் யுத்த முறை எளிதாயிருக்கின்றது. பெலப்போனிசியர்களின் தரைப்படை ஏதென்ஸ் வசமிருந்த அட்டிகாவின்மீது ஆண்டுதோறும் படையெடுத்தது. திரேசிலும் அடிக்கடி போர் நடந்தது. ஆனால் அந்த யுத்தம் அவ்வளவாக எஜியன் பகுதியிலும் ஆசியக் கடற்கரைப் பகுதிகளிலும் பரவவில்லை. அத்தீனியா நேச நாட்டின் கலகத்தில் ஏற்பட்ட விளைவைத் தவிர அப் பகுதிகளில் யுத்தம் பரவவில்லை. கிரேக்க நாட்டின் மேற்குப் பகுதியே ஏதென்சின் தாக்குதல்களுக்கு உட்பட்டது. ஐயோனிக் கடற்பகுதிகளிலுள்ள தீவுகளும் கொரிந்திய வளைகுடாவுக்கு அருகிலுள்ள நாடுகளும் தாக்குதலுக்காளாயின. இதன் மூலமாக பொலப்பேனிசியாவுடன் சேர்ந்த நாடுகளைப் பிரித்துவிடக் கூடிய வாய்ப்பு இருந்தது. ஆகையினால் திரேஸ், அட்டிகா, கிரேக்க நாட்டின் மேற்குப் பாகத்திலுள்ள கடல் சார்ந்த நாடுகள் அடிக்கடி போர்க்களங்களாயின. பிறவிடங்களில் அல்ல.

முப்பதாண்டுச் சமாதான உடன்படிக்கையின்படி ஏதென்சு பின்பற்றி வந்த நாடு பிடிக்கும் கொள்கையை, பெரிக்கிளீஸ் அறவே கைவிட்டான். தெமிஸ்ட்டோகிளிசினால் உருவாக்கப்பட்ட கொள்கையின்படி கடற்பலத்தை வலுவடையச் செய்யும் பணியில் ஏதென்ஸ் முழுக் கவனத்தையும் செலுத்தவேண்டும். அதே கொள்கையைப் பெரிக்கிளீஸ் மீண்டும் பின்பற்றினான். யுத்த ஆரம்பத்தில் பெரிக்கிளீஸ் சலாமீனியன் உள்ளுணர்வால் ஊக்குவிக்கப்பட்டவனாகக்

காணப்படுகின்றான். மீதியர்கள் ஏதென்சு எல்லையில் கால் வைத்த பொழுது அவர்கள் தங்கள் நாட்டின் சுதந்திரத்தைப் பாதுகாக்கக் காட்டிய சுதந்திர உணர்ச்சியையும், கடற்படையின் மீது தங்களுக்கு இருந்த நம்பிக்கையையும் இந்த யுத்தத்திலும் அவர்கள் காண்பிக்க நேர்ந்தது. " நாம் நமது நிலங்களையும் வீடுகளையும் விட்டு விட்டு நமது நகரத்தின் மீதும், கடலின் மீதும் நமது கவனத்தைச் செலுத்துவோமாக. நம்முடைய சொத்துகளை இழப்பதனால் நாம் சோர்வடையக் கூடாது. எண்ணிக்கையில் நம்மைவிட அதிகமான பெலப்போனீசியர்களுடன் போரிடுங்கள். வீடுகளுக்காகவும் நிலங்களுக்காகவும் ஏங்கி அழாதீர்கள்; மனிதர்களுக்காக மட்டும் அழுங்கள். மனிதர்கள் இச் செல்வத்தைக் கொடுக்கக்கூடும். ஆனால் இச்செல்வத்தால் மனிதர்களைக் கொடுக்க முடியாது. நான் சொல்வதை நீங்கள் செவிசாய்க்கின்றீர்கள் என்று நான் நினைத்தால் மட்டுமே உங்களுக்கு இதனைச் சொல்லுவேன். நீங்களே போய் அவர்களை அழியுங்கள். எப் பொருள்களின் அழிவும் உங்களை அசைக்காதென்பதை பெலப்போனீசியர்களுக்கு நிரூபித்துக் காட்டுங்கள். ஏனென்றால் கடல்மீது ஆணை செலுத்தும் பேரரசு மட்டுமே அத்தகைய ஆற்றலைக் கொடுக்கும்.' இந்த மன வுணர்ச்சி ஒன்றுதான் பெரிக்கிளீஸை யுத்தத்தில் ஈடுபடச் செய்தது.

ஆத்திரத்தாலோ, சிதறிய எண்ணத்தாலோ, அட்டிகாவைத் தியாகம் செய்யும் கொள்கை உருவாகவில்லை. அது போர்முறைத் திறனுடையதும் நன்றாக ஆராயப்பட்டதுமான திட்டத்தின் ஓர் பகுதியே ஆகும். ஆனால் இக் கொள்கையின் காரணமாகவே பெரிக்கிளீஸைக் குறை கூறுவார்கள். எதிரியைக் களைப்புறச் செய்வதே அவனுடைய நோக்கமாக இருந்ததே தவிர, அவனை அடிமைப்படுத்தவோ, அறவே தோற்கடிப்பதோ அவனது நோக்கமாக இருந்ததில்லை. ஒரு மாபெரும் யுத்தத்தை உண்டாக்கிவிடக் கூடாதென்பதே அவனுடைய தீர்மானமாகும். ஏனென்றால் அப்படிப்பட்ட ஒரு பெரிய போருக்கு ஏற்ற வன்மை உடையதாக அத்தீனியர்களின் தரைப்படை இருக்கவில்லை. போஷியா மட்டுமே அதனுடன் தரையில் சமபலம் கொண்டதாக இருந்தது. எதிரியைச் சோர்வடையச் செய்யும் போர்முறைச் சூழ்ச்சியையே அவன் கடைப்பிடித்தான். தன் பலத்தை எதிரியின் பலத்தோடு சீர் தூக்கிப் பார்த்தல், தனக்குச் சாதகமான சந்தர்ப்பம் கிடைக்க விழிப்புடன் காத்திருத்தல், பெரிய அபாயங்களைத் தவிர்த்தல் முதலியவை அவன் கொள்கையில் அடங்கியுள்ளன. போராட்டத்தின் நிலைமைகளையும் அத்தீனியர்களுடைய பொருள் வளத்தையும் நோக்குவோமானால் பெரிக்கிளீஸின் திட்டம் அந்தச் சூழ்நிலைக்கேற்றவாறு இருந்ததென்பதை உணர்வோம். அட்டிகாவுக்குத் தரைப் பாதுகாப்பளிக்கப்படவில்லை. படையெடுப்

புக்கு எதிராகத் தற்காப்பு அரண்களைப் பலப்படுத்தவில்லையெனப் பெரிக்கிளீசின் மீது சுமத்திய குறைகள் ஆராய்ச்சிக்குரியவை. ஏனென்றால் பெகாரியன் (Begarian) எல்லைகளையும் போஷியாவின் (Boeotian) எல்லைகளையும் பலப்படுத்த முற்பட்டால் அத்தீனியாவின் தரைப்படையாவும் அப் பிரதேசங்களில் நிறுத்தி வைக்கவேண்டியிருந்திருக்கும். அப்போது மற்றப் பகுதிகளில் பகைவனோடு போர்புரியப் படையே யில்லாமல் போயிருந்திருக்கும். அந்நாட்டுப்படையைப் பல மாதங்கள் யுத்தப்பணியில் ஈடுபடச்செய்வது எளிதல்ல. பெரிக்கிளீஸ் போர் தொடுக்கத் தீர்மானித்த பின்னும் அதற்கான ஆயத்தங்களைச் செய்யாத பகைவனைத் தாக்கும் எண்ணம் பெர்க்கிளீசுக்கு இல்லை. மெகாராவுக்கு எதிராகப் பிறப்பித்த ஆணை அவன் விடுத்த சக்தி வாய்ந்த அடி எதிரிக்கு வாணிகத்துறையில் நாசமிழைப்பதே அவனது திட்டம். மிகச்சொற்ப காலத்துக்குள் இத் திட்டம் சந்தேகமில்லாமல் வெற்றியையும் ஏதென்சுக்கு அனுகூலமான சமாதானத்தையும் கொண்டுவந்திருக்கக்கூடும்; ஆனால் அவன் எதிர்பாராத சில சம்பவங்கள் அவனுடைய திட்டங்களுக்கு நேர்மாறாக நடந்து விட்டன.

## 3. பிளெட்டியாமீது தீப்ஸ் தாக்குதல்

கிரேக்க நாட்டின் இருபெரு நாடுகள் யுத்தப் பிரகடனம் விடுத்ததே, மிகச் சிறிய நாடுகள் தங்களிடையே இருந்துவந்த பகையைத் தீர்த்துக்கொள்வதற்கான அரிய வாய்ப்பு எனக் கருதின. ஓர் இருண்ட இரவில் முந்நூறு தீபர்கள்(300) தீப்பந்தங்களுடன் பிளெட்டியாவுக்குள் புகுந்தார்கள். அவர்களை அந் நகரிலுள்ள ஒரு சிறிய சதிக்கும்பல் அழைத்து நகருக்குள் பிரவேசிக்க அனுமதித்தது. தீபர்கள் அத்தீனியன் நேசவுறவை ஆதரித்த கட்சியின் தலைவர்களைத் தாக்குவதற்குப் பதிலாக பிளெட்டியர்களைப் போஷியாவுடன் சேருமாறு பிரகடனம் செய்தார்கள். சில கிளர்ச்சியாளர்களைத் தவிர, ஏனைய பிளெட்டியர்கள் ஏதென்சுடன் நெருங்கிய நட்புரிமை கொண்டிருந்தார்கள். ஆனால் அவர்கள் சதிகாரர்களின் செயலைக்கண்டு வியப்படைந்தார்கள். தீபர்களின் கோரிக்கைக்கு இசைந்தனர். சமாதானப்பேச்சு நடந்துகொண்டிருந்த சமயத்தில், அங்கு வந்துள்ள தீபர்கள் எண்ணிக்கையில் மிகக் குறைவானவர்கள் என்பதைப் பிளெட்டியர்கள் அறிந்துகொண்டார்கள். பிறகு அவர்களைத் தாக்குவதற்கான திட்டங்களை ரகசியமாக வகுத்தார்கள். நகர மன்றத்திற்குச் செல்லும் தெருக்களை வண்டிகளைக்கொண்டு அடைத்துவிட்டார்கள். பொழுது விடிவதற்குள் பிளெட்டியர்கள் தங்கள் எதிரிகளைத் தாக்கினார்கள். தீபர்கள் கலைந்து சிதறிச்சென்றனர். அவர்கள் தங்களுக்குப் பழக்கமில்லாத அப் பட்டணத்தில் வழி தடுமாறி

அலைந்துகொண்டிருந்தார்கள். அன்றிரவு பெருமழை பெய்தபடியால் தெருக்கள் சகதியாகியிருந்தன. வீட்டு மாடிகளிலிருந்த பெண்கள் அவர்கள்மீது கற்களை விசினார்கள். சில தீபர்கள் நகரத்து மதில் சுவர்மீது ஏறி வெளியே குதித்தார்கள். அவர்களில் பெரும்பகுதி யினர் ஒரு பெரு மாளிகையின் வாயிலருகே வந்து, அதுதான் அந் நகரத்தின் வாயிலெனக் கருதி அதன் வழியே ஓடினார்கள். அங்கு அவர்கள் உயிருடன் சிறைபிடிக்கப்பட்டனர். மிகச் சிலர் பாதுகாவ லற்ற வாயிலில் வந்தபொழுது ஒரு பெண் கொடுத்த கோடரியால் அந்த வாயிலின் மரத்தாழ்ப்பாளை உடைத்துக் கதவைத் திறந்து வெளியேறித் தப்பினார்கள்.

அங்கு வந்த 300 தீபன் போர்வீரர்களும் பின்னால் வந்துகொண் டிருந்த தீபன் படையின் முன்னணிப் படையினராவார்கள். தீபன் நாட்டிற்கும் பிளெட்டியாவுக்குமிடையில் எட்டு மைல் தூரமுள்ள சாலையில் அப் படை மழையில் மெதுவாக முன்னேறி வந்துகொண் டிருந்தது. அவர்களுடைய பிரயாணம் அசோபஸ் (Asopus) ஆற்றில் ஏற்பட்டிருந்த வெள்ளப்பெருக்கின் காரணமாக மேலும் தாமதித் தது. ஆகையினால் அவர்கள் மிகவும் காலம் தாழ்த்து வந்து சேர்ந் தார்கள். பிளெட்டியர்கள் ஒரு தூதுவனைத் தீபன் போர்வீரர்களிடம் அனுப்பினார்கள். பிளெட்டியர்களிடமுள்ள தீபன் கைதிகளின் உயிரை மதிப்பதாக இருந்தால், தீபர்கள் வெளியிலுள்ள தங்கள் உடைமை களுக்கு எவ்விதத் தீங்கும் இழைத்தல் கூடாதெனப் பிளெட்டியர்கள் அவர்கள் வாயிலாக அறிவித்தார்கள். தீபர்களினுடைய கூற்றின் படியே தீபன் போர் வீரர்கள் பிளெட்டியர் எல்லையை விட்டுப் போகும்போது தீபன் கைதிகள் விடுதலை செய்யப்படுவார்கள் என்ற திடமான வாக்குறுதி யளிக்கப்பட்டது. பின்னால் அவர்கள் தங்கள் வாக்குறுதியை மீறிவிட்டார்கள். அதற்கு அவர்கள் தங்களுடைய வாக்குறுதி அங்கிகாரம் பெறாத வாய்மொழியென்று விளக்கம் கூறி னார்கள். பிளெட்டியர்கள் வெளியிலுள்ள தங்கள் உடைமைகளை நகரத்துக்குக் கொண்டுவந்து சேர்த்தவுடனே தங்கள் வசமுள்ள 180 தீபன் கைதிகளைக் கொலை செய்துவிட்டார்கள். இரு நாடுகளுக்கும் இடையே ஏற்பட்ட பகைமையை அப் படுகொலை விளக்கிக் காட்டு கிறது. ஏதென்சுக்கு உடனே செய்தியனுப்பப்பட்டது. அட்டிகாவி லுள்ள எல்லாப் போஷியர்களையும் அத்தினியர்கள் கைது செய் தனர். அவர்கள் ஒரு தூதுவன் மூலமாக தீபன் கைதிகளுக்கு எவ்வி தத் தீங்கும் செய்யக்கூடாது எனப் பிளெட்டியர்களுக்குச் செய்தி அனுப்பினார்கள். ஏதென்சிலிருந்து வந்த தூதுவன் தீபன் கைதிகள் கொலை செய்யப்பட்டதைக் கேள்வியுற்றான். அத்தினியர்கள் உடனே பிளெட்டியாவை முற்றுகையிட ஆயத்தமாயினர்.; உணவுப் பொருள் களை அனுப்பினார்கள்; பெண்களையும் குழந்தைகளையும் வயோதிகர்

களையும் நகரத்தைவிட்டு அப்புறப்படுத்தினுர்கள்; எண்பது அத்தீனியக் காவல் வீரர்களையும் அந் நகருக்கு அனுப்பினுர்கள்,

பிளெட்டியாவின்மீது தீபன் தாக்குதல், 30 ஆண்டுச் சமாதான உடன்படிக்கையை வெளிப்படையாக மீறியதாகவும், போரைத் துரிதப்படுத்துவதுமாக இருந்தது. அப்போழுது தலைமையான இரு நாடுகளுக்குமிடையே ஏற்படப்போகின்ற போராட்டத்தினுல் கிரேக்க நாட்டில் அதிர்ச்சி மிகுந்திருந்தது. குறிகேட்கும் முறை மிகுதியாயிற்று. தற்பொழுது டிலாசில் ஏற்பட்ட பூகம்பம் முக்கிய முன்னறிவிப்பு என்று கருதப்பட்டது. பொதுமக்களுடைய அனுதாபம் லாசிடிமோனியர்களுக்கு ஆதரவாக இருந்தது. ஏனென்ருல் அவர்கள் நேர்மையற்ற ஏதென்ஸ் நகரத்துக்கு விரோதமாக எழுப்பிய விடுதலை வீரர்களாகக் காட்சியளித்தார்கள்.

இருநாடுகளும் பெர்சியாவின் உதவியை நாடின. அத்தீனியர்களை முறியடிக்க, ஒரு கடற்படையைப் பெறும் பொருட்டு லாசிடோமினியர்கள், இத்தாலிய நாடுகளுடனும் சிசிலியுடனும் உடன்படிக்கை செய்ய முனைந்தனர். அந்த ஏற்பாடுகள் அறவே தோல்வியுற்றன. ஏனென்ருல் மேற்கத்திய நகரங்கள் லாசிடோமினியர்களுக்கு உதவி புரிய முடியாத அளவில் தங்கள் சொந்த அரசியல் விவகாரங்களில் ஈடுபட்டிருந்தன. ஏதென்சும் மேற்கத்திய நகரங்களின் உதவியை நாடிற்று. அதற்குக் கார்சிராவின் நேச உதவி கிடைத்தபடியால் சிசிலியோடும் தொடர்பு கொள்ளும் வாய்ப்பேற்பட்டது. அவ்வாண்டு எல்லாச் சம்பவங்களிலும் ரீஜியம், லியோன்டினி முதலிய நாடுகளின் அரசியல் தூதுவர்கள் ஏதென்சில் காணப்பட்டார்கள். கல்லியாஸ் கொண்டுவந்த தீர்மானத்தின்படியே இரு நாடுகளுக்குமிடையே மக்கள் சபையின் கூட்டத்தில் கூட்டுறவு உடன்படிக்கை ஏற்பட்டது. கொரிந்தியன் சைரக்கூசுக்கு எதிராக சால்சிடியன் லியோன்டினி உதவிபெறுவதன் நோக்கம் ஐயப்பாடற்றதாக இருந்தது. அதே சமயத்தில் ரீஜியத்தின் நோக்கமும், ஏதென்சின் குடியேற்ற நாடாகிய தூரியாவின் விவகாரங்களைச் சார்ந்திருந்தது. ஆனுல் இந்தக் கூட்டுறவுகள் ஆருண்டுக் காலமாக மேற்கில் ஏதென்சை எவ்விதச் செயலிலும் ஈடுபட முடியாத வண்ணம் செய்துவிட்டன.

## 4. கொள்ளை நோய்

மே மாதத்தின் இறுதி நாட்களில் பயிர் முற்றி அறுவடைக்குப் பக்குவமாக இருந்தபோது, ஆர்ச்சிடாமஸ் அரசன், பெலப்பொனீசியப் படையின் மூன்றில் இரண்டு பங்குடன் அட்டிகாவின்மீது படை

யெடுத்தான். கடைசி நேரத்திலாவது ஏதென்ஸின் மக்கள் பணிந்து வருவார்கள் என்ற நோக்குடன் மெலிசிப்பஸ் என்பவனை நிலமுனைப் (isthmus) பகுதியிலிருந்து ஏதென்சை நோக்கி முன்னேறும்படி அனுப்பினான். பகைவன் நாட்டில் பிரவேசித்து விட்டபடியால் அவன் அனுப்பும் அரசியல் தூதுவர்களை வரவேற்கக் கூடாதென அத்தீனியர் களுக்குப் பெரிக்கிளீஸ் உத்தரவிட்டான். அரசியல் தூதுவர்கள் சூரியன் மறைவதற்கு முன் அட்டிகாவின் எல்லையை விட்டுச் செல்ல வேண்டு மெனவும் அவன் கட்டளையிட்டான். ஹெரோடட்டஸைப் போல, துசிடைடிஸ், ஆழப்பதியும் மொழிகளால் மெலிசிப்பஸ் வாயிலாகப் போர்த்துவக்க நிலையைக் குறிப்பிடுகிறான்:

'இந்த நாள் கிரேக்கர்களுக்குப் பல துயரங்களைக் கொண்டு வரும் ஆரம்ப நாளாகும்.' அப்பொழுது ஆர்ச்சிடாமஸ் சித்தாரேன் (Cithaeron) குன்றின் மேலிருந்த ஒய்நோயி (Oenoe) கோட்டையை முற்றுகையிட்டான். ஆனால் அவனால் அக் கோட்டையைக் கைப்பற்ற முடியவில்லை. அங்கு அவனால் ஏற்பட்ட காலதாமதம் அத்தீனியர்க ளுக்கு யுத்த ஆயுத்தப் பணியைப் பூர்த்தி செய்து கொள்வதற்கு வாய்ப்பளித்தது. அத்தீனியர்கள் தங்கள் குடும்பங்களையும் உடைமை களையும் நகரத்தினுள் கொண்டு வந்தார்கள். ஆடு மாடுகளை யூபோயி (Euboea) தீவுக்கு அனுப்பிவிட்டார்கள். நகரத்தில் சனத்தொகை பெருகிவிட்டது. மிகச் சிலர் தங்களுடைய நண்பர்களுடைய வீடு களில் தங்கினார்கள். பெரும்பகுதியினர் காலியான திறந்த வெளி களில் கூடாரங்கள் அமைத்துக் கொண்டு அவைகளில் வசித்தார்கள். பீப்பாய்களிலும் கழுகுகளின் கூடுகளிலும் அவர்கள் தங்கியுள்ளதாக சமாதானக் கட்சி பழித்துக் கூறிற்று. மற்றவர்கள் கோயில்களிலும் புனிதமான இடங்களிலும் குடியிருக்கத் தலைப்பட்டனர், சிலர் அக்ரோபோலிசுக்கு (Acropolis) வடமேற்குப் பகுதியிலிருந்த பெலார்ஜிகானிலும் (Pelargicon) குடியேறினார்கள். அங்கே குடியேறி யது தவறானது என்பதைக் குறி சொல்லுபவர்கள் அறிவித்தார்கள். பிரேயசுக்கும் நீண்ட சுவர்களுக்கு இடையேயுள்ள நிலவெளிக்குங் கூட மக்கள் குடியேற ஆரம்பித்தபடியால் சனத்தொகைப் பெருக் கத்தின் தொல்லை சற்றுத் தளர்ந்தது.

எலியூசிஸ்க்கும் (Eleusis) திரியாவுக்கும் (Thria) இடையிலிருந்த சமவெளிப் பகுதியை முதன் முதலில் ஆர்க்கிடாமஸ் பாழாக்கினான். பின் அவன் ஏஜாலியாஸ் (Aegaleos) குன்றுக்கும் பார்னசுக்கும் (Parnes) மத்தியிலுள்ள கணவாய் வழியாக செபிசியன் (Cephisian) சமவெளிக்குள் பிரவேசித்தான். ஆச்சார்நோயின் (Acharnae) பார்னெஸ் என்னுமிடத்தில் தங்கினான். அங்கிருந்து அவன் நக ரைக் காக்கும் நடுஅரணைப் பார்க்க முடிந்தது. எதிரிகள் அண்மையில்

வந்துவிட்டதைக் கண்ட ஏதென்சு மக்கள் அதிர்ச்சியடைந்தார்கள். அவர்களை எதிர்த்துப் போரிடுவதற்கு அத்தீனியப் படைகளைப் பெரிக்கிளீஸ் அனுப்பவில்லையே என்று அத்தீனியர்கள் குறை கூறினார்கள். சில குதிரைப் படை வீரர்கள் மட்டும் எதிரிக்குத் தொல்லைகள் கொடுப்பதற்காக அனுப்பப்பட்டனர். ஆர்ச்சிடாமஸ் பெரிக்கிளீசின் நெருங்கிய நண்பன் ஆகையால் நட்புக் காரணமாகவோ, அல்லது அரசியல் தந்திரத்தின் காரணமாகவோ, தன்னுடைய சொத்துகளுக்குச் சேதம் விளைவிக்காமல் ஆர்ச்சிடாமஸ் விட்டு விடுவானே என்று பெரிக்கிளீஸ் பயந்தான். அதைத் தவிர்க்கவும் முன் வந்தான். தன் நிலங்களுக்கு நாசம் ஏற்படாமலிருந்தால் அவைகளைத் தன் நாட்டு மக்களுக்குப் பகிர்ந்து கொடுத்து விடுவதாக அறிவித்தான். பார்னெசுக்கும் (Parnes) பென்டிலிகஸ்ஸுக்கும் (Pentelicus) இடையிலிருந்த டெசிலேயை நோக்கி வேகமாக ஆர்ச்சிடாமஸ் முன்னேறி வந்தான். அப்பொழுது அவன் ஒரப்பஸ் (Oropus) நாட்டுக்கும் போஷியாவினுடைய நிலப்பகுதிக்குமிடையேயுள்ள வழியே முன்னேறிக்கொண்டிருந்தான்.

அதே சமயத்தில் அத்தீனியர்கள் கடலில் தங்கள் நடவடிக்கைகளை ஆரம்பித்தார்கள். நூறு கப்பல்கள் பெலப்போனிசியாவுக்கு அனுப்பப்பட்டன. மெசானியன் கடற்கரையிலிருந்து மெத்தோன் தாக்கப்பட்டது. அத் தாக்குதல் தோல்வியுற்றது. பிராசிடாஸ் என்ற ஸ்பார்ட்டன் அரசாங்க அதிகாரியின் தீரச்செயலால் அந்த இடம் பாதுகாக்கப்பட்டது. அத் தீரச்செயல் அவன் வாழ்க்கையை உயர்த்திற்று. வடக்கில் அத்தீனியக் கப்பல்களின் நடவடிக்கை வெற்றியளித்தது. செப்பலெனியா (Cephallenia) தீவு கைப்பற்றப்பட்டது, ஆகார்னனியன் (Acarnanian) கடற்கரையிலிருந்த சில பட்டணங்களும் பிடிக்கப்பட்டன. யூபேயாவை லோகாரியர்களிடமிருந்து பாதுகாப்பதற்கு வேண்டிய முயற்சிகள் செய்யப்பட்டன. தொரோனியன் (Thronion) பட்டணமாகிய எப்பிக்னேமிடியா (Epicnemidia) பிடிக்கப்பட்டது. அட்டலாண்டாவின் (Atalanta) பாலைவனத்தீவு ஒப்பசுக்கு (Opus) எதிரான காவல் நிலையமாக்கப்பட்டது. ஏஜினாவின் டோரியர்களுக்கு விரோதமாகக் கடுமையான நடவடிக்கை எடுக்கப்பட்டது. சாரோனிக் குடாவில் தங்களுடைய அமைதிக் காப்புக்குப் பாதுகாப்பு நிலையம் நிறுவப்பட்டது தங்களுடைய குடிமக்களான அஜினாவின் டோரியர்கள்மீது அத்தீனியர்கள் அவநம்பிக்கை கொண்டார்கள். ஆகையினால் ஏஜிநேட்டர்களைத் துரத்திவிட்டு அவர்களுக்குப் பதிலாகத் தங்கள் சொந்த இனத்தைச் சேர்ந்த குடிமக்களை அங்குக் குடியேற்றினார்கள். இவ்விதமாக ஏஜீனா சாலாமிசைப்போலவே அட்டிகாவுடன் இணைக்கப்பட்டது. மெசினியாவின் அகதிகள் ஏதென்சுடன் நட்புரிமை பூண்டு, புதிய இருப்பிடங்களை அடைந்ததைப் போலவே

ஏஜிநேட்டன் அகதிகளும் ஸ்பார்ட்டாவுடன் நட்புரிமை பூண்டு லாகோனியாவின் வடபகுதியிலுள்ள தைராட்டிஸ் என்ற இடத்தில் குடியேறினர்கள். தைராட்டிஸ் ஆக்கிரமிப்பு நௌபாக்ட்டசுக்கு லாசிடேமோனியா அளித்த விடையாகும்.

எதிர்கால நெருக்கடிகளுக்காக ஒரு குறிப்பிட்ட பணத் தொகை யையும் குறிப்பிட்ட போர்க் கப்பல்களையும் ஒதுக்கிவைக்க பெரிக்கி ளீஸ் சபையைக் கலந்து ஆலோசித்தான். அரசியல் களஞ்சியத்தில் (treasury) 9700 தாலந்துகள்தாம் (talents) இருந்தன. ஆனல் அக்ரபோலிசில் எழுப்பிய கட்டடச் செலவும் போட்டிடேயில் நடந்த யுத்தச்செலவும் அத் தொகையை 6000 தாலந்துகளாக்கிவிட்டன. இந்தத் தொகையில் 1000 தாலந்துகளை நெருக்கடிக்காக ஒதுக்கி வைத்துவிடுவதென்றும், ஏதென்சு கடல் மூலமாகத் தாக்கப்பட்டா லொழிய இத் தொகையில் கைவைத்தல் கூடாதென்றும், ஆண்டு தோறும் மூன்று வரிசைத் துடுப்புகளையுடைய 100 கப்பல்களைக் கையிருப்புக்காக ஒதுக்கி வைத்துவிடுவதென்றும் ஏதென்ஸ் சபையால் சட்ட பூர்வமாக ஒப்புக்கொள்ளப்பட்டது.

இலையுதிர் காலத்தில் அத்தீனியர்கள் பழைய வழக்கத்தைப் பின் பற்றி, யுத்தத்தில் மாண்டவர்களுக்காக ஈமச்சடங்குகளைச் செய் தார்கள். இறந்தவர்களின் எலும்புகளைத் தேவதாரு மரத்தால் செய்யப்பெற்ற பத்துச் சவப் பெட்டிகளில் வைத்து, நகரத்தின் மதிற்சுவர்களுக்கு வெளியிலிருந்த சேராமிகஸ் (Ceramicus) என்ற இடத்தில் புதைத்தார்கள். மாண்டவர்களில் காணமற்போன சட லங்களுக்காக சவச்சீலையால் (pall) மூடப்பெற்ற ஒரு காலிப் பெட்டி யும் மற்றச் சவப்பெட்டிகளுடன் சுமந்து செல்லப்பட்டது. அந்தத் துக்கக் கூட்டத்தில் பெரிக்கிளீஸ் நீத்தவர்களைப்பற்றியும் அவர்க ளுடைய தீரச் செயல்களைப்பற்றியும் புகழ்ந்து ஒரு சொற்பொழி வாற்றினன். அச் சொற்பொழிவு பாதுகாத்து வைக்கப்படவில்லை. ஆனல் தூசிடைடிஸ் அங்குக் கூடியிருந்தவர்களில் ஒருவனனபடியால் பெரிக்கிளீசின் சொற்பொழிவில் காணப்பெற்ற பொதுவான கருத்து களையும் அவனுடைய மனநிலையையும் தன் சொந்த வார்த்தையில் கூறுகிறன். பெரிக்கிளீசினலும் தூசிடைடிசினலும் சித்திரிக்கப்பட்ட ஏதென்சு மக்களின் கருத்தோவியம், அருஞ் செல்வமாகப் பேணப்பட் டது ஒரு அரிய வாய்ப்பென்றே கருத வேண்டும்.

பெரிக்கிளீஸ் சொன்னதாவது: 'நம்முடைய பொது வாழ்வையும் தனிப்பட்ட வாழ்வையும் நாம் வேறுபடுத்தி பார்ப்பதே இல்லை. நம்மில் ஒருவர் மற்றவரிடம் சந்தேகம் கொள்வதில்லை. நம்முடைய அயலான் தான் விரும்பிய செயலைச் செய்யுங்கால் நாம் அவனிடம்

கோபப்படுவதில்லை. முகங் கறுத்து அவனைப் பார்க்கமாட்டோம். கடுமையான முகத்தோற்றம் தீங்கற்றதாயினும் விரும்பத் தக்க தன்று. கடினமான உழைப்புக்குப்பின், களைத்த நமது உள்ளுணர்ச் சிக்கு ஊக்கமூட்டும் சாதனங்களைப் படைக்க நாம் மறந்து விடவில்லை. ஆண்டு முழுவதும் மகிழ்வூட்டும் விளையாட்டுகளும், விழாக்களும் நமக்குண்டு. வீட்டில் நமது வாழ்க்கை நற்பண்புகளுடையது. இவை களில் காணும் இன்பம் நம்மிடமிருந்து பயத்தை விலக்கிவிட உதவி புரிகிறது. நம் நகரச் சிறப்பின் காரணமாக உலகத்தில் பொருள்கள் இங்கு வந்து குவிகின்றபடியால் இதர நாட்டு உடைமைகளை நாம் நம் முடைய சொந்த உடைமைகளைப்போல் தாராளமாக அனுபவிக்க முடிகின்றது.

'நம்முடைய போர்முறைப் பயிற்சி பல வகைகளில் நமது பகைவர் களுடையதைவிட சிறந்தது. நமது நகரமும் உலகமக்களுக்குத் திறந்து விடப்பட்டிருக்கின்றது. நாம் அன்னியர்களை நம்முடைய நகரை விட்டு வெளியேற்றுவதில்லை. எதையும் பார்க்கக்கூடாது, அறிந்து கொள்ளவும் கூடாது என்று நாம் அன்னியரைத் தடுத்ததில்லை. அன்னியர்கள் நம்முடைய இரகசியங்களை அறிந்து நம்முடைய பகை வர்களுக்குச் சொல்லுவதனுல், பகைவர்கள் பயனடைவார்களென்று அஞ்சுவதுமில்லை. நாம் நம்முடைய நிர்வாகத் திறமையையோ, தந்திரங்களையோ நம்பி வாழவில்லை. ஆனுல் நம்முடைய இதயங் களையும் கரங்களையுமே நம்பி வாழ்கின்றோம். கல்வியைப் பொறுத்த மட்டில் மற்றவர்கள், வீரத்தை உண்டாக்க இளமைப் பருவ முதல் கடுமையான உடற்பயிற்சியில் ஈடுபடுகிருர்கள். நாமோ சமா தானத்தை விரும்புகிறவர்கள். என்றுலும் இடுக்கண் வருங்கால் அதை அவர்களைப் போலவே வீரத்துடன் எதிர்க்கின்றோம்.

'இடர்களை இன்முகத்துடன்கடக்கவே விரும்புகின்றோம். கடினப் பயிற்சியில்லாமலும், பழக்கத்தால் ஏற்பட்ட தளராத மனவுறுதியி னுலும், சட்டத்தாலன்றி வீரத்தோடு இன்னல்களைச் சமாளிப்பதனுல் நாம் மிகச் சிறந்தவர்களல்லவா? நாம் என்றும் உழைத்து வருகின்ற வர்களைப் போல் திறனுள்ளவர்களாக இருந்தபொழுதும் ஆபத்தை எதிர்நோக்கி வாழ்பவர்களல்லர். நமது நகரம் யுத்த காலத்திலும் சமாதான காலத்திலும் புகழ் மலிந்து விளங்குகின்றது. நாம் அழகை விரும்புகின்றவர்கள். நம் விருப்பம் எளிமை நிறைந்தது. நாம் நமது வீரத்தையிழந்து போகாமல் நம் மனவலிமையை வளர்க்கின்றோம். நமது செல்வத்தைப் பேச்சுக்காகவோ அல்லது வீண் பகட்டுக் காகவோ வீணுக்குவதில்லை. உண்மையான பயன் விளையுமாயின் அப் போது நாம் செல்வத்தைச் செலவழிக்கின்றோம். வறுமையை வெளிப் படையாகக் கூறுவது இழிவன்று. வறுமையைத் தடுக்க ஒன்றும்

செய்யாதிருப்பதே உண்மையான இழிவாகும். ஒரு அத்தீனியக் குடிமகன் தன் நாட்டைப் புறக்கணிப்பதில்லை. ஏனென்றால் அவன் தன் சொந்தக் குடும்பத்தைப் பேணுகின்றான். நம்மில் வாணிகத்தில் ஈடுபட்டிருக்கின்றவர்கள் கூட அரசியலைப் பற்றிய போதுமான அறிவு பெற்றிருக்கிறார்கள். பொது விவகாரங்களில் ஆர்வம் காட்டாதவனைக் கொடுமையற்றவனாகக் கருதுவதில்லை. பயனற்றவன் என்று மட்டுமே நாம் கருதுகின்றோம். நம்மில் சிலர் சுயமாகச் சிந்தனை செய்பவர்கள்; நாம் எல்லோரும் கொள்கைகளைச் சீர் தூக்கி நோக்கும் நீதிபதிகளாக இருக்கின்றோம். எச் செயல்களிலும் ஈடுபடுவதற்கு முன் சிந்திக்கிறோம். நாம் செயலில் ஈடுபடுவதற்குமுன் ஆலோசிக்கிறோம். ஆனால் மற்றவர்கள் அறியாமையின் காரணமாக வீரத்தைக் காண்பிக்கின்றார்கள். மனத்தில் தோன்றியதை உடனே செயலில் காட்ட ஆரம்பித்து விடுகின்றனர்'.

ஏதென்ஸ் ஹெலனிக் கலைகளுக்கு உறைவிடமென்று பெரிக்கிளீஸ் குறிப்பிடும்போது ஓர் அத்தீனியக் குடிமகனின் சிறந்த பண்பையும் குறிப்பிடுகிறான். 'அத்தீனியன் சூழ்நிலைகளுக் கேற்றவாறு வாழ்வதற்கான பலதரப்பட்ட பயிற்சிகளையும், பண்பையும் பெற்றிருக்கிறான்.' மேலும் அவன் கூறியதாவது: 'நம்மைப் பற்றிச் சான்றுகாட்ட ஆதாரங்களுண்டு. இந்தக் காலத்திலும் எதிர்காலத்திலும் நம்முடைய ஆற்றலைப் பற்றி வியப்படையச் செய்யக்கூடிய சிறப்பு வாய்ந்த சின்னங்கள் பல இருக்கின்றன. ஹோமர் அல்லது வேறொரு கவிஞன் நம்மைப் புகழத் தேவை இல்லை. அவர்களது கவிதை சிறிது நேர மட்டும் மகிழ்ச்சிதரும். அவர்களுடைய காவியங்களில் உண்மையில்லை. நம்முடைய வெற்றிக்கு ஒவ்வொரு நாட்டிலும் ஒவ்வொரு கடலிலும் வழி வகுக்கப்பட்டிருக்கிறது. நமது பகைமையையும் நட்பையும் நாம் நீங்காத நினைவுச் சின்னங்களாக எங்கும் விட்டு வந்திருக்கிறோம். நம்முடைய நகரத்திற்காக இவர்கள் போராடி உயிர் துறந்திருக்கிறார்கள். இந்த நகரத்தைப் பிடித்துக் கொள்வார்களென்ற எண்ணத்தை அவர்களால் பொறுத்துக் கொண்டிருக்க முடியவில்லை. உயிர் தப்பிப் பிழைத்திருக்கிற நாம் ஒவ்வொருவரும் இந்த நகரத்துக்காகப் போராடுவோம். நாள்தோறும் ஆதென்ஸ் நகரின் புகழிலே உங்கள் பார்வையைச் செலுத்துங்கள். இந்த நகரத்தைப் பற்றிய பாசம் உங்கள் உள்ளத்தை நிரப்பும் வரையில் அப்படிச் செய்யுங்கள். இந்த நகரத்தின் புகழ் உங்கள் உள்ளத்தைக் கிளறச் செய்கிறபோது, இந்தப் பேரரசானது, கடமையுணர்ச்சியும் அதை நிறைவேற்றுகிற துணிச்சலும் நிறைந்த மனிதர்களால் கட்டப்பட்டதென்பதைச் சிந்தியுங்கள். போராட்டக் காலத்தில் அவமானம் ஏற்படக் கூடாதென்ற அச்சம் இவர்கள் உள்ளத்திலிருந்தது. எப்பொழுதாவது அவர்கள் தங்கள் முயற்சியில் தோற்றுப்போனால், தங்கள் உயர்

பண்புகளை அவர்கள் இழந்து விடாமல் தங்கள் உயிரையே அருமை யான காணிக்கையாகத் தங்கள் நாட்டிற்கு அர்ப்பணம் பண்ணினார்கள். அவர்கள் கூட்டாகச் செய்த இத் தியாகம் தனித்தனியாகத் திருப்பித் தரப்பட்டது. ஒவ்வொருவனைப் பற்றியும் அடிக்கடி புகழுரை கூறப் பட்டது. இந்தப் புகழுரை என்றும் மங்காமல் நிலைத்திருக்கும். இந்தக் கல்லறைகள் உயர்சிறப்புப் பெற்றவை. நான் இங்கே புதைக் கப்பட்டிருப்பவர்களைப் பற்றிப் பேசாமல் அவர்கள் புகழ் மண்டிக் கிடக்கும் நினைவுச் சின்னங்களைப்பற்றிப் பேசுகிறேன். எப்போதும் எத்தருணத்திலும் சொல்லாலும் செயலாலும் இந்தப் புகழ் பிர கடனம் செய்யப்படும். இவ்வுலக முழுவதும் புகழ்மிக்கது இம் மனிதர் களின் கல்லறையே. தூண்களாலும் கல்வெட்டுகளாலும் சொந்த நாட்டிலே மாத்திரமல்லாமல் வெளிநாடுகளிலும் அவர்கள் நினைவு கூரப்படுகிறார்கள். கல்லால் எழுந்த நினைவுச் சின்னங்களோடு மனித உள்ளங்களிலும் அவர்கள் பதிக்கப்பட்டிருக்கின்றார்கள். நீங்கள் அவர்களை உங்கள் வாழ்க்கைக்கு வழிகாட்டிகளாகக் கொள்ளுங்கள்.'

ஒருவேளை நமக்கு மற்றொரு நினைவுச் சின்னம் இருக்கலாம். முதல் ஆண்டிலே போரில் மாண்ட அத்தீனியர்களுக்குச் செதுக்கப்பட்ட சின்னம் அதுவாக இருக்கும். அக்ரோபோலிசில் காணப்படும் அழகிய சிற்பம் தலைக் கவசமணிந்த அந் நாட்டு மங்கையினுடையது. தலையைக் கீழே தொங்கவிட்டுக் கொண்டும், ஒரு கற்பலகையை உற்றுப் பார்த் துக்கொண் டிருப்பதையும் நாம் காண்கிறோம். அண்மையில் நகரத் தைப் பாதுகாக்கப் போர்க்களத்திலே மாண்டு போனவர்களின் பெயர்களை அவ்வுருவம் அந்தக் கற்பலகையில் படித்துக் கொண்டிருக் கிறது என்று ஓர் கவர்ச்சியான விளக்கம் தரலாம்.

அடுத்த ஆண்டு பெலப்போனிசியர்கள் மறுபடியும் அட்டிக்காவின் மீது படையெடுத்தார்கள். அவர்கள் தங்கள் நாசவேலையைத் தீப கற்பத்தின் தென்பகுதியில் லொரியான் வரையில் செய்துவந்தார்கள். ஆனால் அத்தீனியர்கள் இந்தப் படையெடுப்பில் அதிக கவனம் செலுத்தவில்லை. ஏனென்றால் நாட்டினுள் ஏற்பட்ட கொடிய கொள்ளை நோயோடு அவர்கள் போராட நேர்ந்தது. அந்தக் கொள்ளை நோயினால் ஏற்பட்ட அழிவையும் கட்டுப்பாட்டுக் குலைவையும் தூசி டைடிஸ் விவரமாக விளக்குகின்றார். அப்போது மருத்துவக்கலை ஆரம்ப நிலையில் இருந்தது. அனுபவமற்ற வைத்தியர்கள் புதிதாக வந்த வியாதியைத் தடுக்கும் முறை தெரியாதவர்களாக இருந்தனர். அந்த நோயைத் தடுப்பு நடவடிக்கைகளால் போக்கிவிட முடிய வில்லை. கோடை வெயிலும் நகரத்தில் மக்கள் பெருக்கமும், அந் நோய் வேகமாகப் பரவுவதற்குச் சாதகமாக இருந்தன. இறந்தவர் களைப் புதைக்க முடியவில்லை. கோயில்கள் பிணக் குவியல்களால்

நிரம்பியிருந்தன. ஈமச் சடங்கு முறைகள் மீறப்பட்டன, அல்லது மறக்கப்பட்டன. தணிக்க முடியாத தாகத்தைத் தீர்த்துக் கொள்ள இறந்து கொண்டிருந்த நோயாளிகள் நீர்நிலைகளைச் சுற்றிச் சூழ்ந்து கொண்டார்கள். 'டோரியர்கள் வருவார்கள். அவர்களுடன் கொள்ளை நோயும் வரும்' என்ற பழைய தெய்வவாக்கு மக்கள் ஞாபகத்திற்கு வந்தது. கொள்ளை நோய் என்ற பொருள் தரும் கிரேக்கச் சொல்லுக்கு (loimos) பஞ்சம் என்ற பொருள்தரும் (limos) சொல் ஒத்திருக்கின்றது. தற்காலத்தில் அவ்விரு சொற்களின் ஒலியும் ஒரே விதமாயிருக்கிறது. எது சரியான உச்சரிப்பு என்றறிய மக்களால் முடியவில்லை. மற்றொரு டோரியன் போர் மூளுமேயானால் அதோடு பஞ்சமும் தொடர்ந்து வருமென தூசிடைடிஸ் கூறுகிறான்

இவ் வரலாற்று ஆசிரியர் கூறுவதைப்போலவே பிரோகோபியஸ், பொக்காசியோ (Boccaccio), டேபோ போன்ற வரலாற்று அறிஞர்களும் இது போன்ற கொள்ளை நோயை விவரித்து எழுதியுள்ளனர். அந்த நோய் ஆதியில் எத்தியோப்பியாவில் தோன்றியது. அங்கிருந்து எகிப்து, பாரசிகம் போன்ற பேரரசு நாடுகளில் பரவிற்று. பிறகு அது ஏஜியானுக்கு வந்தது. அதே சமயத்தில் இத்தாலியின் ஒரு நகரத்திலிருந்துகிரேக்க நகரத்திலும் அந்நோய் பரவிற்று. ரோமிலும் ஏதென்சிலும் ஏற்பட்ட அக் கொள்ளை நோய் கார்த்தேஜின் வியாபார மார்க்கமாக வந்திருக்க வேண்டுமென யூகிக்கப்படுகிறது. பெலப்பொனீசில் அந் நோய் பரவவில்லை. ஏதென்சில் அந் நோயினால் மக்கள் பெருக்கம் குறைந்துவிட்டது. ஐந்தாம் நூற்றாண்டின் முதல் கால் பகுதியிலே ஏதென்சில் ஆண்கள், பெண்கள், முதியோர், குழந்தைகள், பெரியோர் உள்பட 80,000 பேர் இருந்தனர். யுத்த ஆரம்பத்தில் அந் நாட்டின் மக்கள் தொகை 100,000 மாக இருந்தது. ஆனால் அங்கு ஏற்பட்ட கொள்ளை நோயின் காரணமாக சனத்தொகை ஆரம்பத்தில் இருந்ததை விட மிகவும் குறைந்து விட்டது. அதிலிருந்து மக்கட் பெருக்கம் முந்தைய நிலையை அடையவில்லை.

கடந்த ஆண்டைப்போலவே அத்தினியர்களின் கடற்படை பெலப்போனிஸிசைத் தாக்கிற்று. ஆனால் இவ்வாண்டு அது ஆர்காலிஸ் கடற்கரைப் பட்டினங்களாகிய எபிதாரஸ், ட்ரோயிஸன், ஹெர்மியோன், ஹெலியிஸ் முதலியவைகளின் மீது தாக்குதல் நடத்தியது. ஈட்டி வீரர்கள் 4000, குதிரை வீரர்கள் 3000 கொண்ட ஒரு படை அத்தினியர்களிடமிருந்தது. அப் படை பெர்க்கிளீசின் தலைமையிலிருந்தது அப் படை எப்பிடௌரசைக் கைப்பற்றும் நோக்கத்துடனிருந்தது. அப்போது எப்பிடாரியன் படை அட்டிக்காவிலுள்ள தன்னுடைய நேசவுறவு நாடுகளுடன் இருந்தது. ஏதென்சின் முயற்சி தோல்வியுற்றது. ஏன் தோல்வியுற்றதென்று தெரியவில்லை.

இத் திரச் செயலின் விவரங்களைக் கூருமல் விட்டுவிட்ட வரலாற்று ஆசிரியனை எளிதில் நாம் மன்னித்து விட முடியாது. ஏனென்ருல் அம் முயற்சி வெற்றி பெறுமேயானுல் இது அந்த யுத்தத்தினுடைய மிகச் சிறப்பான தீரச் செயல்களில் ஒன்ருகக் கருதப்பட்டிருக்கும்.

கிரேக்க நாட்டிற்கு மேற்கில் இலையுதிர் காலம் வரையில் யுத்த நடவடிக்கைகள் மறுபடியும் தொடங்கப்படவில்லை. அம்ப்ரேசியன் குடாக் கடற்கரையிலுள்ள ஆம்பிலோச்சியன் ஆர்காஸ் மக்களுக்கு உதவி புரியக் கடற்படை வரவழைக்கப்பட்டது. அவர்கள் தங்களுடைய நாட்டுக்கு வடக்கிலுள்ள அம்ப்ரேசிய நாட்டினரால் தங்கள் சொந்த நகரத்திலிருந்து துரத்தப்பட்டார்கள்; அவர்களுடைய நாட்டுக்குத் தெற்கிலுள்ள அகர்னுனியர்களின் உதவியை நாடினுர்கள். ஏதென்சு தளபதி போர்மியோவை முப்பது கப்பல்களோடு அனுப்பியது. அவன் ஆர்காசைத் தாக்கினுன். கைதிகளாகப் பிடிப்பட்ட அம்ப்ரேசிய நாட்டினர்களை அடிமைகளாக விற்று விட்டான்; ஆம்பிலோச்சியர்களை மறுபடியும் அவர்களுடைய நகரத்தில் போய்க் குடியேறும்படி செய்தான். அப் பகுதியில் அப் பட்டினம் சிறப்பு வாய்ந்தது. ஆர்காசுக்கும் அம்ப்ரேசியாவுக்கும் இடையே ஏற்பட்ட நீண்ட நாட்பகைக்கு இதுவே காரணமாக இருந்தது. குளிர்காலத்தில் போர்மியோ மேற்குப் பகுதிக்குத் திரும்பி வந்து விட்டான். நாபாக்டசைப் போர்மியோ தங்குமிடமாக்கிக் கொண்டு கிரிசியான் குடாவின் வாயிலைக் காவல் புரிந்து வந்தான்.

அதே சமயத்தில் திரெசில் போட்டிடே முற்றுகை அவ்வாண்டு முழுவதும் தொடர்ந்து நடந்துவந்தது. முற்றுகையின் கோரத் தன்மை அவர்களை மனித மாமிசத்தையும் சாப்பிடும் நிலைக்குக் கொண்டுவந்தது. குளிர்காலத்தில் அவர்கள் சரணடைந்தார்கள். அங்கு ஏற்பட்ட உடன்படிக்கையின்படியே போட்டிடேயர்களும் அவர்கள் வசமுள்ள அயல் நாட்டுப் போர்வீரர்களும் நகரத்தை விட்டு வெளியேற வேண்டும். ஆண் ஓர் உடையோடும், பெண் இரண்டு உடைகளுடனும் சிறிது பணத்துடனும் வெளியே அனுமதிக்கப்பட்டார்கள். ஏதென்சுகள் அவ்விடத்தில் குடியேறினுர்கள். அம் முற்றுகையில் ஏதென்சுக்கு 2000 தாலந்துகள் செலவாயின.

கொள்ளை நோயினுல் மனமுடைந்த அத்தீனியர்கள், சமாதானத்தை விரும்பி வெளியே ஸ்பார்ட்டாவை அணுகினுர்கள். சமாதானத்திற்கு வர ஸ்பார்ட்டா மறுத்துவிட்டது. எபிடாரசிலிருந்து தோல்வியோடு திரும்பி வந்த பெரிக்கிளீஸின் மீது அவர்கள் கோபம் திரும்பிற்று. முக்கிய தலைமைப் பதவியிலிருந்து (strategos) விலக்கிவிட்டார்கள். வரவு செலவுக் கணக்குகள் அவனிடமிருந்து

வரவழைக்கப்பட்டு ஆராயப்பட்டன. அவன் பொதுப் பணத்தை மோசடி செய்ததற்காக விசாரணை நடத்த 1501 நீதிபதிகளைக் கொண்ட ஒரு நீதிமன்றம் அமைக்கப்பட்டது. ஒரு சிறிய தொகை யாகிய ஐந்து தாலந்திற்காக அவன்மீது திருட்டுக் குற்றம் சுமத்தப் பட்டது. அவன் ஐந்து தாலந்திற்குப் பதிலாகப் பதின்மடங்கு ஐந்து தாலந்து அபராதமாகச் செலுத்தவேண்டி யிருந்தது. நீதிமன்றம் அவன் குற்றவாளி அல்லன் எனத் தீர்ப்பு கூறிற்று. மறுபடியும் அதே பதவிக்கு அவன் தேர்ந்தெடுக்கப்பட்டான். உண்மையில் அவன் இன்றியமையாத ஆளாக இருந்தான். வீரம், பொறுமை, நாவன்மை ஆகிய அருங்குணம் படைத்த ஒரு மிகச் சிறந்த அரசியல் அறிஞன் அன்றைய நெருக்கடிக்கு மிகத் தேவையாக இருந்தது. பேரரசின் உரிமைகள் தொல்லைகளுக்கும் நெருக்கடிக்கும் ஆளாகிவிட்டன என் பதையும், அவைகளிலிருந்து பின் வாங்குவது மிகவும் அபாயகர மானது என்பதையும் அவன் எடுத்துக் காட்டி மக்களை நம்ப வைக்க வேண்டியதாயிற்று. ஏதென்சின் பேரரசு நேர்மையற்ற முறையில் ஏற்பட்ட தென்பது கிரேக்க நாட்டின் பொது அபிப்பிராயமாகக் கருதப்பட்டால், அதை தைரியமாக எதிர்க்க வேண்டும். அதை அலட்சியமாக விட்டுவிடக்கூடாது. ஒழுக்கத்தின் பெயரால் பேரரசுக் கொள்கைவாதி பழிப்புக்கு இடமாகின்றான். ஏதென்சிலுள்ள சமா தானப் பிரியர்களின் கட்சியினால் பெரிக்கிளீசுக்குப் பல தொல்லைகள் ஏற்பட்டன. ஆனால் ஏகாதிபத்திய உணர்ச்சியுடைய அந் நாட்டு மக்கள் பெரிக்கிளீசை ஆதரித்தனர். விதி வேறுவிதமாக இருந்தது. அவன் நீண்டநாள் உயிருடனிருந்து அவனது தலைமையின் வழி நடக்கும் நல்வாய்ப்பு ஏதென்சுக்கு இல்லாமற் போயிற்று. கொள்ளை நோயில் அவனுடைய இரண்டு புதல்வர்கள் இறந்தார்கள். சுமார் ஓராண்டிற்குப் பின் அவனும் இறந்தான். அவனுடைய வாழ்க்கையின் கடைசிக் காலத்திலே அவனுடைய விரோதிகளின் மறைமுகத் தாக்கு தலால் அவன் துன்புற்றான். அக்ராபோலிசில் நடைபெற்ற பணி களுக்காகக் கொடுக்கப்பட்ட பணத்தின் ஒரு பகுதியை பிடியஸ் கையாண்டான் என்றும், அச் செயலுக்குப் பெரிக்கிளீசும் உடந்தை யாக இருந்தான் எனவும் குற்றம் சாற்றப்பட்டது. பிடியஸ் அக் குற்றத்திற்காகத் தண்டிக்கப்பட்டான். சமயத்திற்கு விரோதமான கோட்பாட்டைப் போதித்து வருவதாக அனக்ஸகோரஸ் என்ற தத் துவ ஞானியின் மீது குற்றம் சுமத்தப்பெற்றது. அவன் பெரிக்கிளீசின் நண்பன். பெரிக்கிளீஸ் தன் நண்பனுக்காகப் பரிந்து பேசினான். ஆனால் அனக்ஸகோராஸ் ஐந்து தாலந்து அபராதப் பணமாகக் கட்ட வேண்டுமெனத் தீர்ப்பளிக்கப்பட்டது. அனக்ஸகோராஸ் அரசியலி லிருந்து விலகித் தத்துவ ஆராய்ச்சி நடத்த லாம்ப்சகஸ் என்னு மிடத்திற்குச் சென்று விட்டான். அடுத்தபடியாக பெரிக்கிளீஸின் விரோதிகள் அவனுடைய மனைவி அஸ்பாசியாவின் மீது பல குற்றங்

களைச் சுமத்தினார்கள். ஹர்மிப்பஸ் என்ற நகைச்சுவைக் கவிஞன், அஸ்பாசியா தெய்வபக்தி அற்றவள் எனவும், அவளுடைய வீடு கீழ்த்தரமான செயல்களுக்கு உறைவிடமெனவும் குற்றங்களைச் சுமத்தினான். பெரிக்கிளீஸ் அவளுக்காகப் பரிந்து பேசி அவள் குற்ற வாளி அல்லள் என விடுதலை செய்தான். பெரிக்கிளீஸின் கடைசி நாட் களில் ஏதென்சு மக்கள் அஸ்பாஸியாவின் மகனை முறைப்படிப் பிறந்த மகனெனச் சட்டபூர்வமாக அங்கீகரித்தார்கள். பெரிக்கிளீஸ் கடைசி யாகச் சொன்ன வார்த்தைகள், நாகரிக வரலாற்று மாணவனுக்கு அவன் நடத்தையின் மேம்பாட்டை விளக்கிக் காட்டுகின்றன: "என்னுடைய நடத்தை, அத்தீனியன் எவனுக்கும் அவமானத்தைக் கொண்டுவரவில்லை."

## 5. பிளெட்டியாவின் முற்றுகையும் கைப்பற்றலும்

அடுத்த கோடையில் அட்டிக்காவின் மீது படை யெடுப்பதற்குப் பதிலாக, சித்தாயிரோனைக் கடந்து வந்து பிளெட்டியாவை முற்றுகை யிடும்படி தீபன்கள் ஆர்ச்சிடாமஸைத் தூண்டினார்கள். எல்லிஸைப் போலவே பிளெட்டியன் நாடு புனித நாடாகக் கருதப்பட்டது. ஹெல்லாசுக்கு அது விடுதலையைக் கொண்டு வந்த படியால் புண்ணிய பூமியாகக் கருதப்பட்டது. ஸ்பார்ட்டாவின் அரசன் அப் புண்ணிய பூமியில் அடி வைத்த பொழுது பிளெட்டியா நாட்டு மக்கள் முதன் முதலில் தீங்கு இழைத்ததாகக் கூறுமாறு தெய்வங்களை வேண்டினான். அவன் அந்த பிளெட்டியர்களுக்கு போர் முடிவதற்குள் அங்கிருந்து வெளியேறி விட வேண்டுமென ஆணையிட்டான். பிளெட்டியா நாட்டு மக்கள் அங்கிருந்த மரங்களையும் அவர்களுடைய உடைமைகளை யும் கணக்கிட்டு வைத்துக்கொள்ள வேண்டுமென்றும், அவை யாவும் அவர்களுக்குத் திருப்பிக் கொடுக்கப்படும் என்றும் அவ்வரசன் அறிவித் தான். அந் நாட்டு மக்கள் ஏதென்சு நாட்டு மக்களுடன் கலந் தாலோசித்தார்கள். ஏதென்சு அவர்களுக்குப் பாதுகாப்பளிக்க வாக் குக் கொடுத்தபடியால் அவர்கள் வெளியேற மறுத்து விட்டார்கள். உடனே ஆர்ச்சிடாமஸ் அவர்களுடைய நகரத்தை முற்றுகையிட்டான். அத்தீனியர்கள் தரைச் சண்டையை விரும்பாதவர்கள். கொடுத்த வார்த்தையை நிறைவேற்ற இயலாத நிலையில் எவ்வித உதவியும் பிளெட்டியாவுக்கு அனுப்பவில்லை. பெலப்போனேசியர்கள் பிளெட்டி யாவைக் கைப்பற்றுவதனால் அவர்களுக்கு நன்மையே. ஏனென்றால் அது ஒரு சிறப்பு வாய்ந்த இடம். மெஹாராவிலிருந்து தீப்சுக்குச் செல்லும் பாதை பிளெட்டியாவின் ஆதிக்கத்திலிருந்தது. அச் சாலை யின் மூலமாக அட்டிக்காவில் நுழையாமலே, பிலப்போனேசுக்கும்

போஷியாவுக்குமிடையில் எளிதில் தொடர்பு வைத்துக்கொள்ள முடியும்.

ஆர்ச்சிடாமஸ் முற்றுகையிட்ட பிளெட்டியா வேறு. தற்பொழுதுள்ள பிளெட்டியா வேறு. பழங்கால பிளெட்டியாவின் சுவரின் நீளம் ஒரு மைலுக்குச் சற்று அதிகமாக இருக்க முடியாது ஏனென்றால் நானூறு பிளெட்டிய வீரர்களும் 80 அத்தீனிய விரர்களும் ஒரு பெரிய நகரத்தைத் தற்காத்திருக்க முடியாது. அவ்வளவு சிறிய படைக்கு உதவி செய்யுமளவில் இயற்கையின் சூழ்நிலை அந் நகரத்தில் இருந்ததில்லை.

நகரத்தைவிட்டு யாரும் வெளியேரு வண்ணம் மரவேலியைச் சுற்றி வளைத்துக் கொண்டதோடு நின்று விடாமல் தென்பக்கச் சுவரிற்கு எதிரே ஒரு குன்று எழுப்பினன். அதற்காக அவனுடைய படைவீரர்கள் எழுபது நாள் இரவும் பகலும் வேலை செய்தார்கள். அவன் முயற்சியைத் தடுப்பதற்காக பிளெட்டியா பட்டினத்து மக்கள் அந்தக் குன்றிற்கு எதிரே தங்கள் நகரத்தின் சுவரைச் செங்கற்களைக் கொண்டு கட்டி உயர்த்தினர்கள். எதிரியினுடைய தீயம்புகளிலிருந்து வேலையாட்களைப் பாதுகாக்கத் தோலினல் திரை கட்டினர்கள். அந்தச் சுவர் உயர்ந்துகொண்டே போனபோது ஒரு புதிய திட்டம் செயலாக்கப்பட்டது. சுவரின்கிழே ஒரு துளையைத் தோண்டிக் குன்றிலிருந்த மண்ணை அப்புறப்படுத்தினர்கள். இந்தத் திட்டத்தை நாசமாக்கப் பெலப்போனீசியர்கள் பிரம்புக் கூடைகளில் களி மண்ணை நிரப்பி, அக் கூடைகளை மண் அகற்றப்பட்ட இடங்களில் அடுக்கினர்கள். இந்தக் களிமண்ணை எளிதில் அகற்றி விட இயலாது. முற்றுகைக்குள்ளான பிளெட்டியா நகரத்து மக்கள் சுவருக்குக் கீழே குன்றின் அடியில் ஒரு சுரங்கம் தோண்டினர்கள். முன்பு செய்தது போல குன்றின் மண்ணை அப்புறப்படுத்தினர்கள். இம்முறை மேட்டை உயர்த்தும் வேலையைத் தடைசெய்தது. எனினும் அவர்களுக்கு மண்ணை நெடுந்தூரம் எடுத்துச் செல்லவேண்டியிருந்தது. அந் நகரத்து மக்கள் மற்ருெரு முறையைக் கையாண்டார்கள். தங்கள் பழைய உயரமான சுவரின் இரு முனைகளிலிருந்து மூன்ரும்பிறைச் சந்திரன் வடிவில் மற்ருேர் உள் சுவரையும் எழுப்பினர்கள். வெளிச்சுவர் அழிக்கப்பட்டால் இப் புதிய சுவர் பாதுகாப்பளிக்கு மென்பதே அவர்களின் நோக்கம். அவர்களுக் கெதிரே நிறுத்திவைக்கப்பட்ட இடிப் பொறிகளின் நாச வேலையைத் தடுப்பதற்கான நடவடிக்கைகளையும் அவர்கள் கையாண்டார்கள். இரண்டு கம்பங்களைச் சுவர்களின் மேல் அவற்றின் நுனி வெளியே நீண்டிருக்குமாறு நட்டு, அந் நுனிகளில் இரும்புச் சங்கிலிகளின் மூலம் ஒரு பெரிய மரத்தடியைத் தொங்கவிட்டனர். இடிப்பொறி சுவரை நெருங்கும்போது,

மரத்தடியை அவிழ்த்து விட்டு அதனுல் பொறியை அழித்துவிட எண்ணினுர்கள். கடைசியாக அந் நகரத்தைத் தீக்கிரையாக்கிவிட பெலப்போனீசியர்கள் முயன்றனர். விறகுக்கட்டுகளை சுவரருகே குவித்தார்கள். கந்தகக் கற்களையும் எண்ணெயையும் கொண்டு விறகுக் கட்டுகளுக்குத் தீ மூட்டினர். தென்றல் காற்று மலைச்சரிவிலிருந்து கீழ் நோக்கி வீசியிருந்தால், பிளெட்டியா நகரத்தைத் தீயிலிருந்து காப்பாற்றியிருக்க முடியாது. பெலப்போனீசியர்களுடைய இந்த முயற்சியும் தோல்வியடைந்தது.

ஆர்ச்சிடாமஸ் தன்னுடைய முயற்சிகள் தோல்வியுற்றதைக் கண்டு வேறு ஒரு முறையைக் கையாண்டான். அந் நகருக்கு நூறு கஜ தூரத்தில் ஒரு பெரிய வட்டமான சுற்றுச் சுவரை எழுப்பினுன். சுவரின் வெளிப்பக்கத்திலும், உட்பக்கத்திலும் அகழிகள் தோண்டினுன். ஆர்ச்சிடாமஸ் பனிக்காலத்தில் முற்றுகையைத் தொடர்ந்து நடத்தும்படி தன் படையின் ஒரு பகுதியை விட்டுச் சென்றுன். முற்றுகையாளர்களில் பாதிப்பேர் போஷியர்கள். அவர்கள் தீபர்களோடு தீப்பந்த அடையாளங்கள் மூலமாகத் தொடர்பு வைத்துக் கொண்டார்கள். மறு ஆண்டின் கடைசியில் அத்தீனியர்களிடமிருந்து எவ்வித உதவியும் வராதென்பதையும், தங்களிடமிருந்த உணவுப் பொருள்கள் குறைந்துகொண்டு போவதையும் பிளெட்டியர்கள் உணர்ந்தனர். எனவே, வெளியேறுதலுக்கு அவர்கள் முயன்றனர்.

பெலப்போனீசியர்கள் கட்டிய சுவர் மிகவும் கனமான ஒரே ஒரு சுவராகக் காணப்பட்டது. ஆனுல் உண்மையில் அது ஒன்றல்ல; இரண்டு சுவர்களாகும். ஒவ்வொன்றிற்கும் இடையே பதினுறடி இடைவெளியிருந்தது. இரு சுவர்களுக்குமிடையில் காவல்படை வீரர்கள் தங்குவதற்காக அமைக்கப்பட்டிருந்த பகுதிகளுக்குக் கூரை போடப்பட்டிருந்தது. ஒரு காவல் காப்போர் கூரையின்மேல் நிறுத்தப்பட்டிருந்தனர். சுவரின் மீது கூடுபோன்ற மாடங்கள் (battlements) அமைக்கப்பட்டிருந்தன. பத்து மாடங்களுக்கு இடையிலே ஒரு கோபுரம் எழுப்பப்பட்டிருந்தது. அது சுவருக்குச் சுவர் இடையே உள்ள அகலத்தை மூடியிருந்தது. கோபுரங்களின் நடுவே பாதைகள் இருந்தன. அவைகளின் பக்கங்களில் பாதைகள் இல்லை. புயலும் மழையுமுள்ள இரவுகளில் மட்டும் காவல் காப்பவர்கள் மாடங்களில் தங்குவதில்லை; கோபுரங்களின் அடியில் இருந்த பாதுகாப்பு இடங்களுக்குச் சென்று விடுவார்கள். பாதிக்குக் குறைவான காவல் வீரர்கள் தப்பிச் செல்ல முயன்றுர்கள். அச் செயல் அபாயம் நிறைந்ததாக இருந்தது. தப்பிச் செல்லும் திட்டம் மிகக் கவனமாக ஆராயப்பட்டது. எதிரியின் மதிற்சுவரில் சாந்து பூசப்படாத இடத்திலிருந்த செங்கற்களை எண்ணி அச் சுவரது உயரத்தைக் கணித்தார்கள். அவ்வுயரத்திற்

குத் தகுந்த ஏணிகளை அமைத்தார்கள். மழையும் புயலும் கலந்து வீசிய ஓர் இருண்ட இரவில் தங்கள் நகரத்தின் சுவரைக் கடந்து, உள்ளிருந்த எதிரியின் அகழியைக் கடந்து, யாருக்கும் தெரியா வண்ணம் அதனுடைய சுவரை அணுகினார்கள். அவர்கள் பளுவற்ற ஆயுதங்களை வைத்திருந்தார்கள். சேற்றில் வழுக்காமலிருக்க அவர்கள் இடக்காலில் செருப்புகள் அணிந்தும், வலதுகாலில் ஒன்று மில்லாமலும் சென்றனர். அம்மியாஸ் என்பானின் தலைமையின் கீழ் பன்னிருவர் இரு கோபுரங்களுக்குச் சமீபத்தில் ஏறிக் கோபுரங்களி லிருந்த காவல் வீரர்களைக் கொன்று பாதையைக் கைப்பற்றினார்கள். அவர்கள் தங்கள் நண்பர்கள் அப் பாதைகளின் வழியே வெளியேறும் வரையில் அவர்களைக் காவல் புரிந்தார்கள். கூரையின்மேல் ஏறிய பிளெட்டிய நாட்டினர்களில் ஒருவன் ஒருகல்லில் மோதிக்கொண்டான் அக் கல் பெருஞ் சத்தத்துடன் கீழே விழுந்தது. அச் சத்தத்தைக் கேட்ட பெலப்போனீசிய வீரர்கள் விழிப்படைந்து சத்தம் வந்த திசையை நோக்கிச்சென்றார்கள். இருட்டில் அவர்கள் எதையும் பார்க்க முடியவில்லை. இருந்த இடத்தை விட்டு நகரவும் பயந்தனர். தங்கள் நண்பர்கள் தப்பித்துச் செல்லும் பாதையிலிருந்து எதிரிகளின் கவனத்தை வேறு பக்கம் திருப்ப, நகரத்திலிருந்த பிளெட்டியர்கள் அப்பாதைக்கு எதிரில் திடீர்த் தாக்குதல் செய்தார்கள். பெலப்போனீ சியர்கள் தீபர்களுக்கு அபாய அறிவிப்புக் கொடுக்கத் தீப்பந்தங்களை ஏற்றினார்கள். அப்படி நடக்கும் என்பதை எதிர்பார்த்ததைப் போலவே முன் கூட்டி அறிந்த பிளெட்டியா நகரவாசிகளும் தீப் பந்தங்களை உயர்த்திக் குழப்பத்தை யுண்டுபண்ணி, எதிரியினுடைய முயற்சியைப்பாழாக்கினார்கள். ஆனால் அவர்கள் நகரத்துக்கு வெளியே சுற்றி வந்து காவல் புரியும் முந்நூறு பெலப்போனீசிய வீரர்களின் தாக்குதலுக்குப் பயந்தார்கள். கடைசிப் பிளெட்டியாவின் வீரன் கீழே இறங்கியதும் வெளிச்சங்களுடன் அவர்கள் வெளி அகழியை நெருங்கி னார்கள். அவ் வெளிச்சத்தின் உதவியால் அகழியை மிகச் சிரமப் பட்டுக் கடந்தார்கள். அவ் வழி மழைநீரால் நிரம்பியிருந்தது; பொறுக்க முடியாத பனிக்கட்டியினால் மூடப்பட்டிருந்தது. ஒரு வில்லாளியைத் தவிர எல்லோரும் பத்திரமாக அதைக் கடந்தார்கள். ஒருவன் மட்டும் அதில் சிக்கிக்கொண்டான்.

தப்பிச் சென்ற செயல் அந் நகரத்தின் வடபகுதியில் நடந்தது. தங்களைத் துரத்திப் பின் செல்பவர்களிடமிருந்து தப்புவதற்காக அந்த அகதிகள் தீப்ஸ் நகருக்குச் செல்லும் சாலையில் சென்றார்கள். ஒரு மைல் தூரம் நடந்த பிறகு, வலப்பக்கம் திரும்பி, எரித்திரேயிக்குச் சமீபத்திலுள்ள தீப்ஸிலிருந்து ஏதென்சுக்குச் செல்லும் சாலையை அடைந்தார்கள். ஏதென்சு நகரத்துக்குத் தப்பிச் சென்றவர்கள் 212 பிளெட்டியர்களே. தப்பிச் செல்ல முயன்றவர்களில் சிலர் தங்கள்

நகரத்துக்குத் திரும்பி விட்டார்கள். நகரத்தை விட்டு வெளியேறாமல் இருந்து வந்தவர்களின் கதி மிகவும் ஆபத்துக்குள்ளாயிற்று. உணவு நெருக்கடியின் காரணமாக அவர்கள் லாசிடோமோனீயர்களிடம் சரண் அடைய நேர்ந்தது. அவர்களுடைய கதியை நிர்ணயிப்பதற்காக ஐந்து பேர் ஸ்பார்ட்டாவிலிருந்து அனுப்பப்பட்டார்கள். ஆனால் அவர்கள் கதி தீப்ஸ் நாட்டவர்களால் முன்பே நிர்ணயிக்கப்பட்டு விட்டது.' நீ இந்த யுத்தத்தில் லாசிடேமோனியாவுக்கோ அதன் நேச நாட்டுக்கோ பணியாற்றியதுண்டா?' என்று ஒவ்வொரு பிளெட்டியனை யும் தீபர்கள் வினவினர்கள். அந்த வினவில் அவர்களுக்கு அளிக்கப் போகும் தண்டனையும் அடங்கியிருந்தது. அவர்களது முன்னோர்கள் பாரசீக யுத்தத்தில் பிளெட்டியா ஹெல்லாசுக்குச் செய்த சேவையை பிளெட்டியக் கைதிகள் எடுத்துக் கூறினர்கள். அப் போரில் பாரசீகர்களால் கொல்லப்பட்ட பெலப்போனீசிய வீரர்களின் சவக்குழிகளுக்கு அவர்கள் ஆண்டு தோறும் செய்துவரும் வீரவணக்கத்தை எடுத்துக் காட்டினர்கள். அதனல் எவ்விதப் பயனும் ஏற்படவில்லை. அவர்களுக்கு மரண தண்டனை அளிக்கப்பட்டது. இவ்விதமாக 200 பிளெட்டியா நாட்டுப் போர் வீரர்கள் இரக்கமின்றிக் கொல்லப்பட்டார்கள். அவர்களில் இருபத்தைந்து பேர் அத்தீனியப் போர்வீரர்களாவார்கள். பிளெட்டியா நகரத்தை இடித்துத் தரைமட்டமாக்கினர்கள். இப்பொழுது மெகாராவிலிருந்து தீப்ஸ் நகரம் செல்லும் சாலை லாசிடோமோனியர்களின் ஆதிக்கத்தில் வந்து விட்டது.

இரு காரணங்களுக்காக ஏதென்சைக் கடிந்துகொள்ள வேண்டியதாயிற்று. முதலாவதாகத் தாங்கள் நீண்டநாளாக நேசவுறவு கொண்டிருந்த நாட்டிற்கு உதவியளிக்க முன் வராமலிருந்தது. இரண்டாவது, பெலப்போனீசியாவுக்கும் போஷியாவுக்கு மிடையே இருந்த போக்குவரத்து நிலையைப் பாதுகாக்காமல் விட்டுவிட்டது. ஏதென்சு உதவியளிக்காமல் இருந்ததற்கு இரு காரணங்களுள்ளன. முதலாவது, கொள்ளைநோய் இன்னும் அங்கே பரவியிருந்தது. இரண்டாவது அதனுடைய கடற் கூட்டமைப்பில் சேர்ந்த ஒரு நாட்டின் கலகம் ஏதென்சின் கவனத்தை வேறுபக்கம் இழுத்தது.

## 6. மைட்டிலேனேயின் கலகம்

ஆர்ச்சிடாமஸ் மூன்ருவது தடவையாக அட்டிக்காவின்மீது படையெடுத்தான். அவன் அட்டிகாவை விட்டு வெளியேறிய பொழுது மேத்திம்ன தவிர மைட்டிலேனிலும் லெஸ்பாஸின் மற்ற விடங்களிலும் கலகம் தோன்றிய செய்தி வந்தது. அத்தீனியர்களுக்கு அக் கலகம் சின மூட்டவில்லை. பெரிய இந்தக் கலகம் தனிப்பட்ட

குறையின் காரணமாகத் தோன்றியதல்ல. தங்கள் நாட்டை நன்ருகவும் கண்ணியமாகவும் ஏதென்சு நடத்திற்று என்பதை மைடிலேனேயின் சிறு குழு ஆட்சி (oligarchy) ஒப்புக்கொள்கின்றது. இக் கலகமே அத்தீனியப் பேரரசை எதிர்த்துப் பூரண சுதந்திரமடைய விரும்பும் ஹெலன் மக்களுடைய பிறவிப் பண்பாகும். லெஸ்பியன் நகரங்களின் பூரண ஆட்சியுரிமை (sovereignty) ஏதென்சால் கட்டுப்படுத்தப்பட்டிருந்தது; கூட்டமைப்பிலிருந்த இதர நாடுகளுடன் அதற்கிருந்த உறவு ஏதென்சின் கட்டுப்பாட்டுக்குட்பட்டது. அதனுடைய கப்பல்கள் அத்தீனியர்களின் உபயோகத்திற்குப் பயன் படுத்தப்பட்டு வந்தன. அப்படிப்பட்ட கட்டுப்பாடு அவர்களுக்கு எரிச்சலூட்டிற்று. அத்துடன் அண்மையில் சமோஸ் நகரம் (Samos) சுதந்திரத்தை யிழந்ததைப்போல் தாங்களும் தங்கள் சுதந்திரத்தை இழக்க நேரிடுமோ என லெஸ்பியன் நகரத்தார் பயந்தார்கள். கலகம் செய்ய வேண்டுமெனச் சில ஆண்டுகளாகத் திட்டம் போட்டுவந்தனர். அதற்கான ஆயத்தங்கள் முடிவடைவதற்கு முன்னே கலகம் ஆரம்பமாயிற்று. ஏனென்ருல் மெதிம்ன (Methymna), தேனேடோஸ் (Tenedos) முதலிய நாடுகளிலிருந்த பகைவர்கள் அந்தத் திட்டத்தை ஏதென்ஸ் மக்களுக்கு அறிவித்துவிட்டார்கள். அத்தீனியர்கள் அச் செய்தியைக் கேட்டதும் கிளிபிடெஸ் என்பவன் தலைமையில் ஒரு கடற்படையை அனுப்பி, அப்பொல்லாவின் திருவிழா நாளில் மைட்டிலினேயின்மீது திடீர்த் தாக்குதல் செய்யும்படி உத்தரவிட்டார்கள். ஏனென்ருல் அன்று அந் நாட்டு மக்கள் திருவிழாக் கொண்டாடுவதற்கு நகரச் சுவருக்கு வெளியில் வருவது வழக்கமாக இருந்தது. ஆனுல் மைட்டிலேனியர்களுக்கு அச் செய்தி அனுப்பப்பட்டது. உடனே அவர்கள் அத் திருவிழாவை மற்ருெரு நாளைக்கு மாற்றி வைத்துவிட்டார்கள். லெஸ்பியர்களிடம் ஒரு பெருங் கப்பல் படை இருந்தது. பெலப்போனிசியர்களுடைய உதவி கிடைக்குமானுல் லெஸ்பியன் கலகம் பகைவர்களுக்கு வெற்றியைக் கொடுக்குமென ஏதென்ஸ் நாட்டினர் அறிந்தார்கள். அவ்வாண்டு கொண்டாடப் பட்ட ஒலிம்பிய விளையாட்டுக் கூட்டத்தில் லெஸ்பாசின் அரசியல் தூதுவர்கள் அவர்களுடைய குறைகளை எடுத்துக் காட்டினுர்கள். தங்களது வெளிநாட்டு விவகாரங்களில் ஏதென்சு தலையிட்டுக் கட்டுப் படுத்துவதை, லெஸ்பாஸ் விரும்பவில்லை என்பது தெளிவாக்கப்பட்டது. அக் கூட்டத்தில் பூரண சுயாட்சிக்கொள்கை வலியுறுத்தப்பட்டது. லெஸ்பாஸ் பெலப்போனிசிய கூட்டுறவில் சேர்த்துக்கொள்ளப்பட்டது. ஆனுல் அதற்கு எவ்வித உதவியும் அளிக்கப்படவில்லை.

கலகத்தோடுகூட லெஸ்பாஸினுடைய எல்லைக்குள்ளேயே அரசியல் அமைப்பு மாறுதலும் ஏற்பட்டது. மெதிம்னுவைத் தவிர அந்தத் தீவிலிருந்த மற்றப் பட்டினங்களாகிய ஆண்டிஸா, எரிசஸ், பிரா

தங்களுடைய அரசியல் தனி உரிமைக் கொள்கையை மைட்டிலேனிய ரின் அரசியல் கொள்கையுடன் இணைத்துக்கொள்ள இசைந்தன. அந்த அரசியல் அமைப்பின் மாறுதல்படி ஏதென்சு அட்டிக்கா விற்கு எவ்வளவு முக்கியமோ, அதைப்போலவே மைட்டிலேனியா லெஸ்பாஸுக்கு முதன்மையான நாடாயிற்று. அன்றுமுதல் பிரா, எரிஸோஸ், ஆண்டிஸா ஆகிய நாடுகளின் குடிமக்கள் மைட்டிலேனேயின் குடிமக்களானுர்கள். அட்டிகாவிலிருந்து பிரிவதற்குமுன் அது ஏதென்ஸிடம் எவ்விதம் நட்புக்கொண்டிருந்ததோ அதைப்போலவே மைட்டி லேனே லெஸ்பாவிடம் உறவு கொண்டிருந்தது.

அத்தீனியர்கள் மைட்டிலேனேயின் இரு துறைமுகங்களையும் முற்றுகை யிட்டார்கள். அம் முற்றுகையை வலுப்படுத்த பேச்சஸ் 1000 வீரர்களுடன் அங்குவந்து சேர்ந்தான். நகரத்துக்கு வெளியே ஒரு சுவரை அவன் எழுப்பினுன். அப்பொழுது அத்தீனியர்களுக்குப் பண நெருக்கடி ஏற்பட்டது. போட்டிடேயின் முற்றுகையினுல் அவர்கள் பணம் (ஒதுக்கு நிதியைத் தவிர) செலவழிந்துவிட்டது. அவர்கள் சொத்து வரி மூலமாக (property tax) தேடவேண்டிய தாயிற்று.

இந்த வரி ஆரும் நூற்ருண்டில் வசூலிக்கப்பட்ட சொத்து வரிக்கு நோக்கத்திலும் தன்மையிலும் மாறுபட்டது. முதன்முதலாக அது தாற்காலிக நெருக்கடியைச் சமாளிக்க விதிக்கப்பட்ட வரியேதவிர நிரந்தர வரியல்ல. இரண்டாவதாக அவ் வரியினுல் ஏற்பட்ட பணம் படைத்துறைக்கு மட்டுமே செலவிடப்பட்டது. மூன்ருவதாக நிலத் துக்குமட்டுமன்றி எல்லாச் சொத்துகளின் பேரிலும் விதிக்கப்பட்ட வரியாக இருந்தது. பிசிஸ்ட்ராட்டஸ் காலத்திலிருந்து ஏதென்ஸில் பொருளாதார நிலை மாறுதல் அடைந்திருந்தது. மிராசுதார்களில் பெரும்பாலோர் செல்வந்தர்களல்லர். வரியளவைத் திட்டம் செய்வ தற்காக சோலோன் முறைப்படி குடிமக்களை நான்கு பிரிவுகளாகப் பிரிப்பது அவர்களுடைய வழக்கமாக இருந்தது. ஒவ்வொரு வகுப்பின் வருவாயும் பணமாகக் கணக்கிடப்பட்டு, வருவாயைத் தரும் முதல் சரிவு முறைப்படி கணக்கிடப்பட்டு வரி விதிக்கப்பட்டது. ஒரு தாலந்து முதலுடையவர்கள் உச்ச வகுப்பினர்களாகவும், அரை தாலந்துக்கு அதிகமான சொத்து உடையவர்கள் இரண்டாம் வகுப்பினர் எனவும், ஆறில் ஒரு தாலந்து முதல் படைத்தவர்கள் மூன்ரும் வகுப்பினர் என வும், ஒரு முதலும் இல்லாதவர்கள் கடைசி வகுப்பினர் எனவும் அத்தீ னியக் குடிமக்கள் பிரிக்கப்பட்டிருந்தார்கள். கடைசி வகுப்பினருக்கு வரிவிலக்கு அளிக்கப்பட்டது. சொத்து வரியினுல் 200 தாலந்து கிடைத்தது.

குளிர்காலத்தின் கடைசியில் ஸ்பார்ட்டர்கள், சாலேத்தஸ் என் பவனே மைட்டிலேனிக்கு அனுப்பி, ஸ்பார்ட்டா அவர்களுடைய உத விக்காகப் போர்க் கருவிகளை அனுப்பப் போகின்றது என்று அறிவித் தனர். அவன் அத்தினியர்களிடமிருந்து தப்பி நகரத்துக்குள் புகுந் தான். அவன் கொண்டுவந்த செய்தி நகர மக்களுக்கு உற்சாக மூட் டிற்று. கோடை வந்தபோது ஆல்சிடாஸ் தலைமையில் 42 கப்பல்கள் அனுப்பப்பட்டன. அதே சமயத்தில் பெலப்போனீசியர்கள் அட்டிக் காவின்மீது நான்காவது தடவையாகப் படையெடுத்தார்கள். மைட்டிலேனியாவின் மீது அத்தினியர்களுக்கிருந்த கவனத்தைத் திருப்பும் நோக்கத்துடன் இப் படையெடுப்பு நடந்தது. மைட்டி லேனிய மக்கள் கப்பல்களை எதிர்பார்த்து ஏமாந்தனர். நகரத்தில் உணவுப் பொருள் குறைந்துவிட்டது. நம்பிக்கையிழந்த சாலேத்தஸ் திடீர்த் தாக்குதல் செய்யத் தீர்மானித்து விட்டான். அதனால் நகர வாசிகளைக் கேடயங்களையும் ஈட்டிகளையும் கொண்டு போருக்கு ஆயத்தப்படுத்தினன். ஆனல் போர்க் கருவிகள் கிடைத்த பிறகு, மக்கள் கீழ்ப்படிய மறுத்துவிட்டனர். சிறுகுழு ஆட்சியினர் (oligarchy) உடனடியாக உணவுப் பொருள்களைக் கொண்டுவந்து எல்லோருக்கும் பகிர்ந்து கொடுக்கவேண்டுமென மக்கள் கோரினர்கள். இல்லாவிடில் நகரத்தை எதிரி கையில் ஒப்படைப்போம் என்ருர்கள். மக்களுடன் தனி சமாதான உடன்படிக்கை செய்ய அரசினர் கருதினர். அவர்க ளுடைய விதி ஏதென்சில் தீர்மானிக்கப்பட வேண்டியதாயிற்று. எந்த மனிதனையும் கொல்லுவதற்கு பேச்சஸ் அனுமதிக்கப்படவில்லை.

ஆல்சிடாசின் கடற்படை பெலப்போனிசில் காலம் கடத்திற்று. அப் படை மைக்கோனஸ் (Myconus) தீவுக்கு வந்தபோது மைட்டி லினே சரணடைந்த செய்தியை ஆல்சிடாஸ் கேள்வியுற்ருன். அவன் எரித்ரேவுக்குச் (Erythrae) சென்ருன். அவன் மைட்டிலினே யைத் தாக்க வேண்டுமென்ற கட்டளை அவனுக்கு அவ்விடத்தில் கிடைத்தது. ஆசியக் கடற்கரையினுள் ஒரு பட்டினத்தைப் பிடிக்கவேண்டுமென்றும், அயோனியா மாவட்டத்திலே ஏதென்சுக்கு விரோதமான கலகத்தைத் தோற்றுவிக்க வேண்டுமென்றும் அவ னுக்கு யோசனை அனுப்பப்பட்டது. இப்படிப்பட்ட யோசனைகளைச் செயலாக்குவது ஒரு லாசிடோமேனியா கடற்படைத் தலைவனல் இய லாத செயலாகும். அவன் தெற்கு நோக்கிப் பிரயாணம் செய்யும் போது பேச்சஸ் அவனை பாத்துமோஸ் (Patmos) வரையில் துரத்திச் சென்ருன். கடைசியில் அவன் தனக்குப் பழக்கமான பெலப்போனி சியா கடற்பகுதிக்குப் போய்த் தப்பிக்கொண்டான்.

மைட்டிலேனி கலகத்துக்குத் தலைவர்களுடன் ஸ்பார்ட்டன் படைத் தலைவனுகிய சாலெத்தெஸ் என்பவனும் ஏதென்சுக்கு அனுப்

பப்பட்டான். சாலெத்தெஸ் உடனே கொல்லப்பட்டான். யுத்தக்கைதிகளின் விதியைத் தீர்மானிக்க ஏதென்சு சபை கூடிற்று. அச் சபை ஏதென்சுக்கு அனுப்பப்பட்ட கைதிகளையும், வயது முதிர்ந்த எல்லா ஆண்களையும் கொன்று விடுவதென்றும், பெண்களையும் குழந்தைகளையும் அடிமைகளாக்கி விடுவதென்றும் தீர்மானித்துவிட்டது. இந்த பயங்கரக் கட்டளையை பேச்சசுக்கு அறிவிக்க ஒரு போர்க் கப்பல் உடனே அனுப்பப்பட்டது.

அத்தீனியர்களின் சபையால் கொடுக்கப்பட்ட கொடிய தண்டனை அவர்கள் மைட்டிலேனிய மக்களின்மீது கொண்டிருந்த கொடிய பகைமையைக் காட்டுகின்றது. அவர்களுடைய வெறுப்புக்குப் பல காரணங்களிருந்தன. ஏதென்சு யுத்தத்தினாலும் கொள்ளை நோயினாலும் நொந்து இருந்த சமயத்தில் அந்தக் கலகம் ஏற்பட்டது முதல் காரணமாகும். அத்தீனியன் ஒவ்வொருவனும் மைட்டிலேனியின்மீது வெறுப்புக் கொண்டிருந்தான். அக்கலகத்தால் ஏதென்சின் மக்கள் மீது வரி விதிக்கப்பட்டது. கிழக்கே ஏதென்சின் ஆதிக்கத்துக்குட்பட்ட தீவுகளின் கடற்பகுதிகளில் பெலப்போனிசிய போர்க் கலங்கள் பிரவேசித்தது அவர்களது பெருமையை இழிவுபடுத்தியதாக அவர்கள் கருதினார்கள். அக் கலகம் தன்னுடைய ஆதிக்கத்தின் கீழுள்ள நாட்டினால் ஏற்பட்ட கலகமல்ல. ஆனால் அது சுதந்திரமாக வாழ்ந்த அத்தீனிய நேச நாட்டின் கலகம். விடுதலைக்காகக் கலகம் செய்யும் தன்னுடைய ஆதிக்கத்தின் கீழுள்ள மக்களை ஏதென்சு மன்னித்துவிடும். ஆனால் கூட்டமைப்பில் சேர்ந்த ஒரு நேசவுறவு நாடு அதன் தலைமைக்கெதிராகக் கலகம் செய்வதை அது மன்னிப்பதில்லை. அத்தீனியப் பேரரசு விரும்பத்தகாதது, நேர்மையற்றது என்பதை எடுத்துக்காட்டுவதாக மைட்டிலினியர்கள் செய்கை இருந்தது. அத்தீனியர்கள் கலகத்தின் உட்பொருளை உணர்ந்தார்கள். ஏதென்சின் தற்காப்பு உணர்ச்சி மற்றவர்களுக்கும் எச்சரிக்கை தரக்கூடிய கொடிய கொள்கையைத் தோற்றுவித்தது. அம் முறை சரியான முறையா என்பது வேறு விஷயம்.

ஏதென்சு சபைக்கு அறிவூட்டவும் வழிகாட்டவும், பெரிக்கிளீசின் அமைதியான அறிவு அங்கில்லாமல் மறைந்துவிட்டது. பெரிக்கிளீசின் இடத்தில் அமர, குடியாட்சி முறையை விரும்பும் பல அரசியல் வாதிகள் முன் வந்தார்கள். தோல் விற்கும் கிளியான், கயிறு விற்கும் யுக்ரேட்டஸ், விளக்குச் செய்கின்ற ஹைபர்போலஸ் போன்ற வணிகர்கள் ஏதென்ஸ் மக்கள் சபையை நிரப்பினர். அரிஸ்ட்டைடிஸ், கைமான், பெரிக்கிளீஸ் போன்றவர்களுக்கிருந்த குடும்பப் பாரம் இவர்களுக்கு இல்லை. அவர்களுடைய குடியாட்சிக் கொள்கைக்கு அரண் செய்யும் செல்வப் பரம்பரை அவர்களுக்கிருந்ததில்லை.

அவர்கள் சுய முயற்சியினல் உயர்ந்தவர்கள். அவர்கள் தங்கள் அறிவுத் திறமையாலும் நாவன்மையாலும் உழைப்பின் பலத்தாலும் தைரியத்தினுலும் நாட்டின் செல்வாக்கைப் பெற்றவர்கள். நாம் இப்போது காண்கின்ற சபையில் அதிகாரப் பூர்வமற்ற தலைமைப் பதவியை வகிக்கும் கிளியேனெட்டசின் (Cleaenetus) மகனுகிய கிளியான் பினிஸ் பகுதிக்கு வாரந்தோறும் தவருமல் போயிருக்கவேண்டும். சிறந்து விளங்குவதற்கு அரசியல் அலுவல்களின் நுணுக்கங்களை ஐயமறக் கற்றிருக்கவேண்டும். பெரிக்கிளீசின் ஒலிம்பியன் அதிகாரக் குழுவைச் சந்திக்க வேண்டிய வீரமும், தெளிவுபடச் சில வார்த்தைகளைப் பேசும் திறமையும் அவன் பெற்றிருக்கவேண்டும். சொற்பொழிவுக் கலையையும் அவையோரைக் கவரும் ஆற்றலையும் பெற்றிருக்கவேண்டும். வளர்ச்சி யடைந்த மக்களாட்சியினல் படைக்கப்பட்டுப் பயிற்றுவிக்கப்பட்ட அரசியல் அறிஞர்களைப் போலவே கிளியானும் மற்ற அரசியல் அறிஞர்களும் குறிப்பிடத் தகுந்தவர்கள். சுயநல வேட்கையோ, கட்சியின் கொடிய நோக்கமோ அவர்களுடைய கொள்கையில் இருந்தது என்று எண்ணினல் அது பெருந் தவருகும்; நேர்மையற்றதுமாகும். அவர்களுடைய கொள்கைகளை வெறுத்து, அவர்களை இழிகுடிப் பிறந்து முன்னுக்கு வந்தவர்கள் என்று பழித்து எழுதியவர்களின் நூல்களிலிருந்தே அவர்களைப்பற்றி நாம் அறிகிரும். அவர்கள் தங்களுடைய நடத்தைகளில் முரடர்களாகவும்கொடியவர்களாகவும் இருந்தபோதிலும், அவர்கள் திறமை மிக்கவர்கள் என்பதை நிரூபிக்கும் ஆதாரங்கள் பல இருந்தன. அவர்கள் நேர்மையற்ற அரசியல் வாதிகள் என்பதைப் பொதுவாகக் காட்டக்கூடிய ஆதாரம் எதுவுமில்லை. பெரிக்கிளீசின் உயர்வான பண்புகளைக் கண்டு வியந்தவர்களுக்கு, கிளியானுடைய அல்லது ஹைபர்போலசினுடைய சொற்பொழிவு, பண்பற்ற கொடுமொழியாகத் தோன்றும். பின்னல் வந்த தலைமுறையில் தோன்றிய சிறப்பான மனிதர்களுடைய நடத்தைகளை டெமஸ்தனிஸ் குறை கூறியுள்ளான். அப்படிப்பட்ட செயல்களை மிஞ்சுமளவில் கிளியான் நடந்து கொண்டதில்லை.

புதிய அரசியல் வாதிகள் உறுதியான ஏகாதிபத்தியக் கொள்கையைக் கொண்டவர்கள். அடிமைப்பட்ட நேசநாடுகளைக் கட்டுப்படுத்தி வைத்திருக்க வேண்டுமென்ற பெரிக்கிளீசின் கோட்பாடு, கிளியானின் கோட்பாடாயிற்று. மைட்டிலீனிய மக்களுக்கு மரண தண்டனை அளிக்குமளவிற்கு ஏற்பட்ட ஏதென்சு சபையின் கோபம் கிளியானின் தூண்டுதலால் ஏற்பட்டது. சபை கலைந்த பிறகு ஒரு பகுதியில் எதிர்ப்புத் தோன்றியது. அமைதி யடைந்தபின் தங்கள் நடவடிக்கை மனிதத் தன்மையற்றது என்பதை மக்கள் உணரத் தொடங்கினர். அக் கொள்கையின் தன்மையை ஆராயவும் முற்பட்டனர். ஏதென்சுக்கு வந்து தங்கள் கட்சியை எடுத்துப் பேச அனுமதிக்

கப்பட்ட மைட்டிலினே நாட்டு அரசியல் தூதுவர்கள், அத்தீனியர்களிடம் ஏற்பட்ட மாறுதலைக் கண்டு, சபை மறுபடியும் கூட்டும்படி படைத் தலைவர்களைத் தூண்டினார்கள். சட்டத்தின் நேர்மையாலும் கொள்கைச் சிறப்பாலும், மைட்டிலினேயர்களுக்கு அளிக்கப்பட்ட தண்டனை சரியென்பதை விளக்க கிளியான் முன்வந்தான். கொடுங்கோல் நகர அரசு கொடுங்கோல் முறைகளைக் கடைப்பிடிக்கவேண்டும். பயமுறுத்தித் தங்களுடைய நேசவுறவு நாடுகளை ஆளவேண்டும். இரக்கமின்றித் தண்டிக்கவேண்டும் என்று கிளியானின் கொள்கையை தூசிடைடிஸ் குறிப்பிடுகிறார். அக் கொடிய கொள்கையை எதிர்த்தவன் டியோடாட்டஸ் என்பவனாவான். புகழ் பெற்ற அந்தப் பிரச்சினையில் டியோடாட்டஸ் தன் செயலின் மூலமாக அழியாப் பெயர் பெற்றான். அக் கொள்கை சரியான கொள்கையா? என்று ஆராய்வதே டியோடாட்டசின் நோக்கமாக இருந்தது. இரக்கம் அல்லது மனிதப் பண்பு என்ற கருத்துக்குப் புறம்பான ஆராய்ச்சிகளை கிளியான் கண்டித்தான். மைட்டிலேனியர்கள் மரண தண்டனைக் குரியவர்களா என்று சிந்திப்பது ஏதென்சு மக்களின் பிரச்சினையல்ல. அது நெருக்கடி நிலைக்கு ஏற்றதா என்பதே முதன்மையான பிரச்சினை. ‘நமக்கும் மைட்டிலேனியர்கள் மீது சுமத்த ஒரு குற்றமும் அவர்களிடம் இல்லை. நீதி இன்னதென்று தெரிந்துகொள்ளவும் நாம் விரும்பவில்லை. நாம் ஒரு கொள்கையைப்பற்றி ஆராய்கிறோம். அதற்கு நாம் எவ்வகையில் பொறுப்பாளியாவோம் என்பதை அறிய விரும்புகிறோம்.’ மரண தண்டனை அளித்தது ஒரு தடுப்பு நடவடிக்கை அல்ல என்றும், அக் கொடிய நடவடிக்கை ஏதென்சுக்கு அபாயத்தைக் கொண்டுவரும் என்றும் தன்னுடைய வாதத்தில் டியோடாட்டஸ் குறிப்பிட்டான். சமாதானத்திற்கு வந்தாலும் வராவிட்டாலும் அதனுடைய விளைவு ஒரே விதமானதுதான் என்று அறிந்து அவர்கள் கலகம் செய்தனர். நீண்ட நாள் முற்றுகையால் நம் பணம் விரயமாகும். “அந்த இடத்தைக் கைப்பற்றியபோதிலும் அது ஓர் பாழடைந்த இடமாக யிருக்கும்.” சிறு குழு ஆட்சியின் அரசாங்கத்தினால் கலகம் விளைவிக்கத் தூண்டிவிடப்பட்ட மைட்டிலினேயர்கள் அழிக்கப்படுவார்களேயானால், ஏதென்சுக்கு எல்லா இடங்களிலும் எதிர்ப்பு ஏற்படும்.

அனுதாப உணர்ச்சியினால் உந்தப்பட்ட சபையினரில் பலர் டயோடாட்டஸ் சொன்ன கருத்துக்களை ஏற்றுக்கொண்டனர். அப்போதுகூட சபை இருகட்சிகளாகப் பிரிந்துவிட்டது. மைட்டிலினியர்களை விடுதலை செய்ய வேண்டுமென வாக்களித்தவர்களின் தொகை, எண்ணிக்கையில் சற்று அதிகமாக இருந்தது. மரண தண்டனைக் கட்டளையை எடுத்துச் சென்ற கப்பல் ஒரு நாளைக்கு முன்னதாகவே புறப்பட்டுப் போய்க்கொண்டிருந்தது. அந்தத் தண்டனையை ரத்து

செய்யும் கட்டளையைச் சுமந்து செல்லும் கப்பல், முந்திய கப்பலை எட்டிப் பிடித்தாகவேண்டும். அதற்காக மைட்டிலினியா அரசியல் தூதுவர்கள், மாலுமிகளையும் அவர்களுக்கு வேண்டிய சாராயம், பார்லி முதலியவைகளையும் கொடுத்ததோடு, அவர்கள் வெற்றிகரமாக அந்தப் பணியைச் செய்தால் நல்ல பரிசு அளிப்பதாகச் சொன்னார்கள். மாலுமிகள் நன்றாகச் சாப்பிட்டார்கள். நன்றாகவும் குடித்தார்கள். முறை போட்டுக்கொண்டு கப்பலை ஓட்டினார்கள். விரும்பத்தகாத பணியை மேற்கொண்ட முதற் கப்பல் மெதுவாகச் சென்றது. இரண்டாம் கப்பல் சென்று சேர்வதற்குச் சற்று முந்தியே அது சென்றடைந்தது. பேச்சஸ் கையில் கட்டளை சேர்க்கப்பட்டது. அதை அப்போதுதான் நிறைவேற்ற அவன் முற்பட்டான். உடனே இரண்டாவது கப்பல் துறைமுகத்தினுள் வந்தது. அந்த நகரம் காப்பாற்றப் பட்டது.

கலகத்துக்குக் காரணமாக இருந்தவர்களை விசாரித்து மரண தண்டனை யளித்தார்கள். நேச நாடாகிய மைட்டிலினேயின் மீது இருந்த கோபத்தை ஏதென்ஸ் இவ்விதமாகத் தீர்த்துத் திருப்தி அடைந்தது. முப்பது பேர்களே கொலைத் தண்டிக்கப்பட்டனர்.

லெஸ்பானிய மரக்கலங்களைக் கைப்பற்றி, நகரத்தின் சுவர்களைத் தரை மட்டமாக்கிய பிறகு, அந்தத் தீவில் மெத்தீம்னுவைத் தவிர மற்ற இடங்களை 3000 பகுதிகளாகப் பங்கிட்டு, 300 பகுதிகளை கோயிலுக்கு ஒதுக்கிவிட்டார்கள். மற்றவை அத்தீனியன் குடி மக்களுக்கு அளிக்கப்பட்டன. லெஸ்பேனியர் அந் நிலங்களைப் பயிரிட்டு ஆண்டுதோறும் அத்தீனியர்களுக்குக் குத்தகை கொடுத்து வந்தார்கள்.

## 7. மேற்கு கிரீசில் யுத்த நடவடிக்கை. கார்சிராவில் துயரச் சம்பவங்கள்

பிளெட்டியா, மைட்டிலினே ஆகிய இடங்களில் கிரேக்க நாட்டின் கவனம் சென்றிருந்தபோது அதன் மேற்குப் பகுதியிலும் அது தொடர்ந்து நடந்தது. இதனால் அத்தீனியர்களின் கடற் படையின் புகழ் உயர்ந்தது. அகர்னனியாவின் மீது படையெடுக்குமாறு, ஆம்பிரசியோட் ஸ்ப்பார்ட்டாவைத் தூண்டியது. பெலப்போனிசியர்கள் அப் பகுதியில் பலமாக வேரூன்றி விடுவார்களேயானல், அவர்கள் மேற்கில் அத்தீனியர்களின் நேச உறவு நாடுகள் முழுவதையும் தம் பக்கம் சேர்த்துக் கொள்வார்கள். சினிமஸ் (cnemus) 1000

வீரர்களுடன் அங்கு அனுப்பப்பட்டான். அவன் ஸ்ட்ராட்டஸ் பட்டினத்தைத் தாக்கினுன். ஆனுல் அவன் பின்வாங்க நேர்ந்தது. அதே சமயத்தில் அவனுக்கு உதவி புரிய ஓர் பெலப்போனீசியக் கப்பற் படை கொரிந்தியாவிலிருந்து அனுப்பப்பட்டது. அக் கப்பற் படையில் நாற்பத்தேழு மரக்கலங்கள் மட்டுமே யிருந்தன. இருபது கப்பல்களுடன் கொரிந்தியன் குடாவைக் காவல் புரிந்துவந்த போர்மியோ என்பானை அவைகள் கடந்து செல்லவேண்டி யிருந்தன. அவைகளைப் போர்மியோன் தப்பித்துச் செல்ல அனுமதித்தான். அவைகளை குடாவுக்கு வெளியே தாக்க வேண்டுமென்பதே அவனுடைய நோக்கமாக இருந்தது. ஒரு குறுகிய இடத்தில் அவைகள் கூட்டமாகச் சேரும்படியான சூழ்ச்சியை அவன் ஏற்படுத்தினுன். காலையில் வீசிய காற்று அக் கப்பல்களை ஒன்றோடொன்று மோதிக் கொள்ளும்படி செய்தது. அங்கே குழப்ப மேற்பட்டதை யறிந்த அத்தீனியர் அவைகளைத் தாக்கி, தோற்கடித்தனர். எண்ணிக்கையில் மிகுந்துள்ள கப்பற் படை எவ்வாறு வெல்லப்பட்டது என்பதை ஸ்பார்ட்டன் அரசு அறிந்துகொள்ள முடியவில்லை. இதனை விசாரணை செய்ய ஆணையாளர்களை அனுப்பினுர்கள். அவர்கள், மறுபடியும் முயன்று வெற்றியடைய வேண்டுமென்று சினிமஸ்ஸுக்கு ஆணையிட்டார்கள். பெலப்போனீசியக் கப்பற் படை அச்சேயாவில் பானேர்மஸ் என்ற இடத்தில் நிறுத்தப்பட்டது. எதிர்ப்பக்க மிருந்த ரியோனில் (Rhion) போர்மியோவின் படை இருந்தது. ஏதென்சு கப்பல்களைக் குடாப் பக்கம் இழுத்துச் செல்ல சினிமஸ் முயற்சி செய்தான். ஏனெனில் குடாவில் உள்ளே எதிரிகளின் பலம் குறையும் என எண்ணினுர். அவனுடைய போர்க்கலங்கள் நௌபாக்டசை நோக்கிச் சென்றன. அவ்விடத்தைப் பாதுகாக்க, போர்மியோ தன் கப்பல்களுடன் கரையோரமாகச் சென்ருன். அத்தீனியக் கப்பல்கள் கரையருகே ஒவ்வொன்ருகச் சென்றபோது அவைகளைச் சுற்றி வளைத்துக்கொண்டு சினிமஸ் தாக்கினுன். நௌபாக்டசுக்குச் சமீபத்திலிருந்தபதினெருகப்பல்கள் தப்பித்துக் கொண்டன. மீதி கப்பல்கள் மூழ்கடிக்கப்பட்டன. நௌபாக்டசை நோக்கிப் போய்க் கொண்டிருந்த பதினெரு கப்பல்களையும் இருபது பெலப்போனீசியக் கப்பல்கள் துரத்திச் சென்றன. நௌபாக்டசுக்கு அருகில் ஒரு வியாபாரக் கப்பல் ஆழ்கடலில் நங்கூரமிட்டு நின்றுகொண்டிருந்தது. அத்தீனியக் கப்பல் வியாபாரக் கப்பலைச் சுற்றிவந்து திடீரெனத் தன்னைத் துரத்தி வந்த எதிரிக்கப்பலைத் தாக்கி மூழ்கடித்தது. அச் செயல் இதுவரையில் வெற்றிக் கீதங்களைப் பாடிக் கொண்டுவந்த பெலப்போனீசியர்களுக்கு அதிர்ச்சியைத் தந்தது. முன் பகுதியிலிருந்த கப்பல்கள், துடுப்பைத் தள்ளாமல் மற்றக் கப்பல்களுக்காகக் காத்திருந்தன. நௌபாக்டசுக்குப் போய்ச் சேர்ந்த அத்தீனியக் கப்பல்கள், அந்தச் சூழ்நிலையை அறிந்து திரும்பி வந்துதாக்கி வெற்றியடைந்தன.

திறமை மிக்க கடற்படைத் தலைவன் போர்மியோ உயிரோடிருந்திருந்தால் அத்தினியர்களின் செல்வாக்கைக் கிரேக்க நாட்டு மேற்குப் பகுதியில் நிலைநாட்டியிருப்பான். ஆனால் குளிர் காலத்தில் அவனுடைய அகார்னனியா (Acarnania) படையெடுப்பிற்குப் பின் அவன் இறந்து விட்டான். அகார்னனியர்களின் வேண்டுகோளுக்கிணங்க போர்மியோவின் மகன் அஸோப்பியஸ் (Asopius) அடுத்த கோடையில் அனுப்பப்பட்டான். அவனும் விரைவில் இறந்து விட்டான். அஸோப்பியஸ் ஒயினியாடே மீது (Oeniadae) தாக்குதல் நடத்திய போது கொல்லப்பட்டான். லூகாஸ் (Leucas) தீபகற்பமும், ஆர்கானனியன் ஒயினியாடே (Arcananian Oeniadae) என்ற இடமும் மேற்கில் அத்தினியர்களின் கவனத்தைக் கவர்ந்தன. லூகாஸைக் கைப்பற்ற முடியவில்லை. ஆனால் நான்காண்டிற்குப்பின் ஒயினியாடே அத்தீனியக் கூட்டமைப்போடு சேரும்படி வெல்லப்பட்டது.

அயோனியா கடலிலே கார்சிரா அடுத்த போர்க்களமாயிற்று. அத்தினியர்களின் நேச உறவிலிருந்து கார்சிராவைப் பிரித்து விடும் நோக்கத்துடன் கொரிந்தியா எப்பிடாம்னியன் சண்டையில் பிடித்த யுத்தக் கைதிகளுக்கு விடுதலையளித்தது. நாட்டை இரண்டாகப் பிரித்து, இரத்தாறு ஓடக்கூடிய புரட்சியை எழுப்ப வேண்டுமென்ற அவர்களுடைய சதியோலோசனைகள் பயனளித்தன பெலப்பொனிசியர்களுக்கும் அத்தினியர் கூட்டுறவு நாடுகளுக்கு மிடையேயிருந்தவேற்றுமை கார்சிராவில் சிறு குழு ஆட்சிக்கும் மக்களாட்சிக் கட்சிக்கும் இடையியிருந்த வேற்றுமையுடன் பிணைக்கப்பட்டிருந்தது. மக்களாட்சிஅரசியல் அமைப்பை அழித்து விடுவதற்கு ஒரு சதித் திட்டத்தைக்கொரிந்தியாவிலிருந்த சதிகாரர்கள் உருவாக்கினார்கள். கார்சிராவை ஏதென்சின் அடிமை நாடாக்க, மக்கள் கட்சித் தலைவனாகிய பெயித்தியாஸ் (Peithias) திட்டமிடுவதாக அவன்பேரில் குற்றம் சுமத்தி அவனை ஒழிப்பதே அவர்களுடைய முதல்வேலையாகயிருந்தது. அவன் குற்றவாளியல்லவென தீர்ப்பளிக்கப்பட்டான். அடுத்து அவர்கள் ஐந்து செல்வந்தர்களைத்தாக்கினார்கள். அவர்கள் சியஸ் (Zeus), ஆல்சினேவஸ் (Alcinous) தெய்வங்களின் ஆலயங்களிலுள்ள திராட்சைக் கொடிகளை வெட்டியதாகக் குற்றம் சுமத்தப்பட்டனர். நீதி மன்றத்தில் அவர்கள் விசாரிக்கப்பட. குற்றவாளிகளெனத் தீர்ப்பளிக்கப்பட்டது. ஒவ்வொரு கொடிக்கும் ஒரு ஸ்ட்டாட்டர் அபராதம் விதிக்க வேண்டுமென்று தீர்மானிக்கப்பட்டது. அவர்கள் அப் பெருந்தொகையைத் தவணைகளில் கட்ட கெஞ்சிக் கேட்டார்கள். அவர்கள் வேண்டுதல் மறுக்கப்பட்டது. நம்பிக்கையிழந்த அவர்கள் அந் நாட்டு மேல்சபை கூடும் இடத்திற்கு ஓடினார்கள். பெயித்தியாசையும் அவரோடிருந்த 60 அங்கத்தினர்களையும் கொன்றார்கள்.

இப்பொழுது சிறுகுழு ஆட்சியாளர்கள் கையில் ஆட்சியிருந்தது. நகரத்தின் அரணை நோக்கியும் ஹைலேக் (Hyllaic) துறைமுகத்தை நோக்கியும் ஓடிய பொதுமக்களை அவர்கள் தாக்கினுர்கள். மற்ருெரு துறைமுகத்தையும் சிறுகுழு ஆட்சியினர் கைப்பற்றினுர்கள். மறு நாளில் இருபக்கங்களிலும் படைவன்மை அதிகரித்தது. குடிமக்களுக்கு அத் தீவின் மற்றப் பகுதிகளிலிருந்தும், சிறு குழு ஆட்சியாளர்களுக்கு பெருநிலப்பகுதியிலிருந்தும் படைபலம் கிடைத்தது. சண்டை மறு படியும் துவங்கியது. குடிமக்கள் கை ஓங்கியிருந்தது. படைக்கலச் சாலை அணுகுவதைத் தடுப்பதற்கு சபைக் கூட்டத்துக்குப் பக்கத்தி லிருந்த வீடுகளுக்கும் கட்டடங்களுக்கும் தீ வைத்தார்கள்.

அடுத்த நாள் பன்னிரண்டு அத்தீனியக் கலங்கள் நௌபாக்டசி லிருந்து நிகோஸ்ட்ராட்டஸ் என்பவருடைய (Nicostratus) தலைமை யில் வந்து சேர்ந்தன. அவன் இருகட்சிகளும் ஒத்துப் போகும்படித் துண்டினுன். ஆனுல் குடியரசுக் கட்சியினர் தங்களுடைய எதிரிகள் மீது தங்களுக்கு நம்பிக்கை இல்லாதபடியால் ஐந்து அத்தீனியப்போர்க் கலங்களை அமைதிப்பாதுகாப்பிற்காக விட்டுச் செல்லுமாறு கேட்டுக் கொண்டார்கள். அவைகளுக்குப் பதிலாக அவன் ஐந்து கார்சிகா கப்பல்களை எடுத்துச்செல்ல ஏற்பட்டாயிற்று. அந்த ஐந்து கப்பல்களின் மாலுமிகள் யாவரும் சிறுகுழு ஆட்சிக் கட்சியினர். தங்கள் கட்சிக் காரர்களின் நடத்தைக்கு ஜாமீனுக நிறுத்தப்பட்டார்கள். ஆனுல் தங்களை ஏதென்சுக்குக்கொண்டுபோவார்கள் என்ற பயத்தின் காரண மாகத் தப்பி ஒரு கோயிலில் அடைக்கலம் புகுந்தார்கள். நிகோஸ்ட் ராட்டஸுக்கு அவர்களை இணங்கி வருமாறு செய்யமுடியவில்லை! அவன் வேண்டுகோளை அவர்கள் ஓர் சதித்திட்டமாகக் கருதி, மறுபடி யும் போர்க்கோலம் பூண்டார்கள். மீதியிருந்த சிறுகுழு ஆட்சிக் கட்சி யினர் ஹீரா தெய்வத்தின் ஆலயத்தில் தஞ்சம் புகுந்தார்கள். ஆனுல் குடியாட்சிக் கொள்கையினர் அவர்களைக் கடற்கரை ஓரமாகவுள்ள ஒரு சிறிய தீவுக்குப் போகும்படித் தூண்டினுர்கள்.

நான்கு அல்லது ஐந்து நாளைக்குப்பின் 53 மரக்கலங்களைக் கொண்ட பெலப்போனீசியக் கடற்படை அல்சிடாஸின் தலைமையில் வந்து சேர்ந்தது. அயோனியா படையெடுப்பிலிருந்து அப்போதுதான் அவன் திரும்பி வந்திருந்தான். துறைமுகத்திற்கு வெளியில் நடந்த கடற்போரில் கார்சிரியர்கள் தீவிரமாகப் போர் புரிந்தார்கள். அத் தீனியர்கள் பின்வாங்க நேரிட்டது. ஆனுல் பெலப்பனீசியர்கள் தங்கள் வெற்றியைத் தொடர்ந்து போர் நடத்தவில்லை. வெகு சீக்கிரத்தில், அறுபது அத்தீனியப் போர்க்கப்பல்கள் அவ்விடத்தை நோக்கி வருவதைக் கேட்டதும், அவர்கள் தங்கள் நாட்டிற்குத் திரும்பி விட்டனர்.

நாட்டின் அமைதியைக் குலேத்தும் தங்கள் நாட்டைத் தங்களுடைய பழைய விரோதிக்கு அடிமைப்படுத்தி விடவும் முயன்ற சிறு குழு ஆட்சியினரை (oligarehs) பழிவாங்கக் குடியரசுச் கட்சியினர் விரும்பினர். சிறுகுழு ஆட்சியினர் விடுதலே பெறச் செய்த முயற்சி, குடியரசுக் கட்சியினரின் கோபத்தையும் அரக்க உணர்ச்சியையும் கிளறி விட்டது. கண்ணியத்தையும் கொள்கையையும் புறக்கணித்து, குடியரசுக் கட்சி ஆத்திரம் அடைந்தது. மன்னிப்புக் கோரிய சிறுகுழு ஆட்சியினர் தீவிலிருந்து திரும்பி வந்து, மீண்டும் ஹீரா தெய்வத்தின் ஆலயத்தில் அடைக்கலம் புகுந்தார்கள். அவர்களில் ஐம்பது பேர் ஆலயத்தை விட்டு வெளியே கொண்டுவரப்பட்டு, நீதிமன்றத்தின்முன் நிறுத்தப்பட்டுக் கொலே செய்யப்பட்டனர். அவர்களுக்கேற்பட்ட நிலேயைக் கண்ட மற்றவர்கள் தாங்களாகவே தற்கொலே செய்து கொண்டார்கள். கோயிலேச்சுற்றி நின்றுகொண்டிருந்த மரங்களில் சிலர் தூக்குப் போட்டுக் கொண்டு இறந்தார்கள். யூரிமேடான் என்பான் (Eurymedon) அத்தீனியக் கப்பல்களுடன் அவ்விடத்திற்கு வந்து ஏழு நாள்கள் தங்கி இருந்தான். அச்சமயத்தில் குடியரசுக் கட்சியின் பகைவர் என்று சந்தேகிக்கப்பட்டவர்களே கார்சிரியர்கள் கொன்றனர். சிலர் தனிப்பட்ட விரோதத்தின் காரணமாகக் கொலேயுண்டார்கள். ‘அங்கே எல்லாவகையான மரணத்தையும் காணமுடிந்தது. புரட்சிகளில் நிகழும் எல்லா விதமான கொலேகளும் அப்பொழுது நடந்தன. தகப்பன் மகனேக் கொன்றுன். மன்னிப்புக் கோரியவர்கள் கோயிலிலிருந்து வெளியே இழுத்துவரப்பட்டு அதனருகில் கொல்லப்பட்டார்கள். சிலர் டயோனிசஸ் (Dionysus) கோயிலில் சுவரோடு மோதப்பட்டுக் கொலே செய்யப்பட்டார்கள். அப் புரட்சியின்போது எண்ணமுடியாத கொடுமைகள் நடந்தன. புரட்சிகளில் அது மிகப் பயங்கரமான புரட்சியாக இருந்தது. ஏனென்றுல் அதுவே முதன் முதலில் ஏற்பட்ட புரட்சியாகும்’. யூரிமிடான் வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தானே தவிர அதில் தலேயிடவில்லே.

குடியாட்சி அதனுடைய அத்துமீறிய செயல்களுக்காக மன்னிக்க முடியாததாக இருந்தபோதிலும், புரட்சியை உண்டாக்கிய குற்றம் சிறு குழு ஆட்யிசினரின் குற்றமாகும். குடியாட்சிக் கட்சியினரின் கோபத்திஞல் கொல்லப்பட்டவர்களின்மீது கருணே காட்டுவதற்கு இல்லே. ஏனென்றுல் மூர்க்கத்தனமான செயல்புரிய அவர்கள்தாம் வழிகாட்டிஞர்கள். கார்சிராவில் நடந்த சம்பவங்கள் கிரேக்க நாட்டில் என்றும் மறக்கமுடியாத சம்பவங்களாகிவிட்டன. தூசிடைடிஸ் இந்த சம்பவங்களே விவரமாக விளக்கியுள்ளான். கிரேக்கர் நாடுகளின் அமைதியைக் குலேக்க விரைவில் பாதிக்க ஆரம்பித்த புரட்சியின் துடிப்பை, சோகக்கதையாக, தூசிடைடிஸ் வரைந்து தருகின்

ருன் அன்னியர் தலையிடுவர் என்ற பயத்தாலோ நம்பிக்கையாலோ, கட்சிப்பிளவுகள், விரிந்து வலிவடைகின்றன. சிறு குழு ஆட்சியினர் லாசிடோமேனியர்களின் உதவியையும், குடியாட்சிக் கொள்கையினர் அத்தீனியர்களின் உதவியையும் நாடினர். அமைதிக் காலங்களில் கட்சிப் போராட்டம் கடுமையாக இருந்ததில்லை. நவீன காலத்தில் ஏற்பட்ட பிரஞ்சுப் புரட்சி இதற்கு ஒரு சான்று அப் புரட்சியின் கொடுமைகள் அன்னியரின் தலையீட்டினுல் விளைந்தவையே. புரட்சி கொந்தளிப்படையும்போது, அதனுல் மனிதர்களுடைய ஒழுக்க நெறியில் ஏற்படும் விளைவுகளைக் கிரேக்க வரலாற்று அறிஞன் விளக்கி யுள்ளான். பிரஞ்சுப் புரட்சியின் விளைவுகளும் அவ்வறிஞன் கூற்றை ஒத்திருந்தன. 'தங்களது ஆத்திர மனப்பான்மையாலும் பழிவாங்கும் செயல்களாலும், புரட்சியாளர்கள் முன்னிருந்த நிலையை ஒழிக்கும் துணிவு கொண்டுள்ளனர். அவர்களுடைய வார்த்தைகளுக்கும் அவற்றின் பொருள்களுக்கும் தொடர்பேயில்லை. அவர்கள் விருப்பப்படியே வார்த்தைகளுக்குத் தனிப் பொருள் கொடுத்துக் கொண்டார்கள் மடத்துணிச்சல் பற்று மிக்க வீரம் என்று கருதப்பட்டது. யோசனை யுடன் செய்யும் காலதாமதம், கோழையின் தன்மையாகக் கருதப் பட்டது. மிதவாதம், மனிதப் பண்பற்ற பலவீனனுக்கு ஒரு போர்வை யாயிற்று ஒவ்வொன்றையும்பற்றித் தெரிந்துகொள்ள விரும்புவது ஒன்றுமே செய்யாமையாகும். வெறிகொண்ட ஆற்றல். ஒரு மனித னுடைய உண்மையான இயல்பாகக் கருதப்பட்டது கொடுமையை விரும்புபவன் நம்பிக்கைக்கு உரியவன். அவனுடைய பகைவர்கள் எல்லோராலும் சந்தேகிக்கப்பட்டார்கள். அமைதியாய் இருப்பதும், எக் கட்சிகளிலும் சேராதிருப்பதும் ஆபத்தாயிற்று, 'இரு கட்சிகளி லும் சேராத குடிமக்கள் இரு கட்சிகளுக்கும் பகைவர்களானுர்கள். சேராமல் தனித்திருந்தபடியால் ஒன்று அவர்கள் வெறுக்கப்பட் டார்கள் அல்லது அவர்கள் உயிருடன் இருப்பதைக்கண்டு பொருமை யடைந்தார்கள்'. கட்சிப்பற்றின் ஆர்வம், அமைதித்துடிப்பு, பேராசை யின் கொந்தளிப்பு, பழிவாங்கும் வெறி முதலியவைகளால் சமய விதிகள், சமூக நெறிகள் யாவும் மீறப்பட்டன. இவை, கிரீசின் நகர நாடுகளின் இழிந்த அரசியல் நிலையை விவரித்து உரைத்த தூசிடைடி ஸின் குறிப்பிலிருந்து எடுக்கப்பட்ட பகுதிகள்.

கார்சிரா புரட்சியின் விளைவுகளை மேலும் குறிப்பிட வேண்டி யிருக்கிறது. தங்களைப் பழிவாங்குவதற்கிருந்த பகைவர்களிடமிருந்து தப்பியோடிய சுமார் 600 கார்சிக சிறு குழு ஆட்சியினர் அத்தீவின் வடகிழக்கிலிருந்த இஸ்ட்டோன் குன்றின்மீது குடியேறினுர்கள். ஈராண்டுக்காலம் அவர்கள் நகர வாசிகளுக்குத் தொல்லை கொடுத்து வந்தார்கள். அப்பொழுது யூரிமிடோன்; சோபோக்கிளில் என்ற இரு தலைவர்களின் கீழ், சிசிலியை நோக்கிச் சென்றுகொண்டிருந்த அத்

தினியக் கப்பல்கள் கார்சிராவுக்கு வந்தன. இஸ்ட்டோன் குன்றைத் தாக்குவதில் அவர்கள் குடியரசு கொள்கையினருக்கு உதவி புரிந்தார்கள்.

தங்களுடைய கதியை நிர்ணயிக்கவேண்டும் என்கிற நிபந்தனையோடு சிறுகுழு ஆட்சியினர் அத்தீனியர்களிடம் சரணடைந்தார்கள். அத்தீனியத் தலைவர்கள் அவர்களை பிடிச்சியா (Ptychia) தீவில் குடியேற்றினார்கள். அத்தீனியப் படைத் தலைவர்கள் அத் தீவை விட்டு அவர்கள் தப்பிச் செல்ல முயன்றால் அவர்களுக்கு ஏதென்ஸ் பாதுகாப்பு அளிக்காதென்று எச்சரித்தார்கள். அக் கைதிகள் தங்களை ஏதென்சுக்குக் கொண்டுபோய் அங்கே கொல்வார்களோ என்று பயந்தார்கள். ஆனால் அவர்கள் தங்களுடைய விரோதிகளை உயிரோடு வாழ விடக் கூடாதென்று முடிவு செய்துவிட்டார்கள். அவர்கள் சதித் திட்டமொன்று தயாரித்து, அதை நிறைவேற்றினார்கள். கைதிகளுடைய நண்பர்கள் அவர்களுடைய தீவுக்கு அனுப்பப்பட்டார்கள். அத்தீனியத் தளபதிகள், தங்களை விரோதிகளிடம் ஒப்படைத்துவிடத் தீர்மானித்துவிட்டார்களென்றும், அவர்களை அங்கிருந்து தப்பிப் போகும்படி யோசனைகூறி, தப்பிச் செல்வதற்காக ஒரு மரக்கலத்தையுமளித்ததாகவும் அந் நண்பர்கள் கூறினார்கள். அவர்களில் சிலர் அந்தச் சூழ்ச்சியில் சிக்கிப் பிடிபட்டார்கள். எல்லாக் கைதிகளும் குடியரசு கட்சியினரிடம் ஒப்படைக்கப்பட்டனர். அவர்கள் கைதிகளை ஒரு பெரிய கட்டிடத்தில் அடைத்து வைத்தார்கள். இருபது பேர் கொண்ட அணியாக அவர்களுடைய கைகளைக் கட்டி, படைவீரர் வரிசையில் இழுத்துச் சென்றார்கள். ஒவ்வொரு படைவீரனும் தான் விரோதி என்று கண்டவனை அடித்துக் காயப்படுத்தினான். இவ்விதமாக மூன்று அணிகள் இக் கொடிய தண்டனைக்குள்ளாயின. கட்டிடத்திலுள்ள அவர்களுடைய நண்பர்கள் அவ்வுண்மையை அறிந்து கொண்டார்கள். அவர்கள் அத்தீனியர்களின் உதவியை நாடினார்கள். அவர்களிடமிருந்து எவ்வித உதவியும் வரவில்லை. அப்பொழுது அவர்கள் கட்டிடத்திலிருந்து வெளிவர மறுத்து, வேறு யாரையும் உள்ளே நுழைய விடவில்லை. கார்சிரியர்கள் பலவந்தமாக உள்ளே நுழைய முயலவில்லை. அவர்கள் கூரையைப் பிரித்துக் கற்களாலும் அம்புகளாலும் அவர்களைத் தாக்கினார்கள். ஆதரவற்ற கைதிகள் தங்களைச் சித்திரவதை செய்பவர்களின் நோக்கத்தைப் புரிந்துகொண்டு. தங்கள் உயிரைத் தங்கள் கைகளால் போக்கிக்கொள்ள முற்பட்டனர். தம்மீது எறியப்பட்ட அம்புகளால் தொண்டையைக் கிழித்தும், படுக்கையில் அகப்பட்ட கயிறுகள் அல்லது தங்களுடைய உடையிலிருந்த கயிறுகள் முதலியவைகளால் தங்களுடைய தொண்டைகளை நெரித்தும் உயிரைப் போக்கிக் கொண்டார்கள். இந்த அழிவுவேலை இரவின் பெரும்பகுதி வரையில் நடந்தது. பொழுது விடிவதற்குள் எல்லாம்

முடிந்துவிட்டது. பிணங்கள் நகரத்துக்கு வெளியே இழுத்துச் செல்லப் பட்டன. இவ்விதமாகக் கார்சிராவின் புரட்சி முடிவடைந்தது. முந்திய காட்சியைவிட பிந்திய காட்சி மிகவும் கொடுமை நிறைந்தது. ஈராண்டுக்குமுன் தலையிட மறுத்துவிட்ட யூரிமீடானை அன்று மன்னித் ததைப்போல் இந்த சந்தர்ப்பத்தில் மன்னித்துவிட முடியாது. ஏனென்றால் அக் கைதிகள் அத்தீனியர்களிடம் சரணடைந்தவர்கள் என்றபோதிலும் யூரிமீடியோனும், சோபோகிளிசும் சிசிலியை நோக் கிப் போய்க்கொண் டிருந்தபடியால், அந்தக் கைதிகளை ஏதென்சுக்கு கொண்டுபோய்ச் சேர்க்க இயலவில்லை. ஆகையினால் அங்கு நிகழ்ந்த கொலைப்பழிக்கு அவர்கள் பொறுப்பாளிகளல்லவென்று சொல்லப் பட்டது. அதன்பிறகு கார்சிராவில் சிறுகுழு ஆட்சி கும்பல் அறவே ஒழிக்கப்பட்டு குடியாட்சி மக்கள் அமைதியாக வாழ்ந்தார்கள்.

## 8. மேற்கில் டெமாஸ்த்தனிஸ் சண்டைகள்

கார்சிராவில் புரட்சி நடந்த அதே காலத்தில் மேற்கு கிரீசிலும் போர் நடந்தது. டெமாஸ்த்தனிஸின் தலைமையில் ஒரு அத்தீனிய கடற்படை பெலப்போனீசியாவைச் சுற்றி வந்து, லேவுகாஸ் (Leucas தீவைத்தாக்கிற்று. டெமாஸ்த்தனிஸ் அறிவு மிக்க ஒரு படைத் தலைவன். சுயமாகச் 'சிந்திப்பதில், மற்றப் படைத்தலைவர்களைவிட அவன் மேம்பட்டு விளங்கியவன். அந்தச் சந்தர்ப்பத்தில் அவன் ஒரு பெரிய வெற்றியை விளைவிக்க லேவுகாசை விட்டுவிட்டுக் கொரிந்தி யக்குடாவை நோக்கிப் புறப்பட்டான். ஆனால் அகார்னனியர்கள் அவன் லே'வுகாசை முற்றுகையிட்டுப் பிடித்ததாகக் கருதினார்கள். அப்பொழுது போயிஷியாவுக்கும் மேற்குக் கடலுக்குமிடையே இருந்த பட்டினங்கள்—போஸிஸ், லோக்ரிஸ், அகார்னனியா—ஏதென்சுடன் நட்பாயிருந்தன. அங்கே பண்படாற்ற எட்டோலியர்களின் (Aetolians) தொல்லை உச்ச நிலையைடைந்திருந்தது. அதனால் நிலப்போர் நடவடிக்கை எளிதாக இல்லை. அவன் போயிஷியாவின் மீதில் தாக்கு தல் நடத்தும்போது போக்கு வரத்து சாதன அபாயம் ஏற்படாம லிருப்பதற்காக எயிட்டோலியாவைப் பிடிப்பதற்கு ஒரு திட்டம் வகுத்தான். கொரிந்தியன் குடாவிலிருந்து, யூபோயின் (Euboean) கடலுடன் தொடர்பு வைத்துக் கொள்ள விரும்பினான். இதே சமயத்தில் ஸ்ப்பார்ட்டர்கள் ஒயட்டா குன்றின் (Mount Oeta) பகுதியில் தங்கள் முழு கவனத்தையும் செலுத்திக் கொண்டிருந் தார்கள். மலை வாசிகளுடைய தொல்லையிலிருந்து பாதுகாப் பளிக்கவேண்டுமென்று ஒயிட்ட (Oeta) மலைப் பகுதியின் தெற்கி லிருந்த டோரிஸ்களும் (Doris), வடக்கிலிருந்த திராசிஸ்களும் (Trachis) லாசிடாமோனியர்களிடம் கேட்டார்கள். அதன் விளை

வாக திராச்சிசில் ஒரு குடியேற்ற நாடு ஏற்படுத்தப்பட்டது. ஹைராக்களி என்றழைக்கப்பட்ட அக்குடியேற்ற நாடு தெர்மாபயிலே(Thermopylae) கணவாய்க்குச் சமீபத்திலுள்ளது. குடியேற்ற நாட்டை உண்டாக்குவது ஸ்பார்ட்டன் மக்களுக்கு ஒரு கடினமான செயலாயிற்று. ஹெராகளிஸுக்கு இப்போது ஓர் தனிச் சிறப்பேற்றப் பட்டது. அங்கிருந்து இபேயா (Euboea) மீது தாக்குதல் நடத்தலாம். அங்கிருந்து சால்சிடிக் (Chalcidic) தீபகற்பத்தின் மீதும் போர் தொடுக்கலாம். இக்குடியேற்றத்தின் காரணமாக ஏதென்ஸ் அதிர்ச்சி யுற்றது. ஆனுல் அதன் பயம் நீடிக்கவில்லை. ஏனென்ருல் ஹெராக்ளியா வளம் பெற்றுச் சிறக்க வில்லை. தெசாலியர்களின் பல தாக்குதல்களும், பெலப்போனிசியர்களின் நேர்மையற்ற நிர்வாக ஊழல்களும் அதன் அழிவுக்குக் காரணமாயிருந்தன. அதனுடைய ஆரம்பம் இடர் நிரம்பியதாக இருந்தது. டோரிசை முதலில் கைப்பற்றி பின் தென் பகுதியிலிருந்து ஹெராக்ளிசைத் தாக்கவும் வேண்டு மென்பதே டெமோஸ்த்தனிஸ் நோக்கம். அவனுடைய திட்டம் பொருத்தமானதாகத் தோன்றிய போதிலும் நடைமுறைக்கு ஒவ்வாத திட்டம். முதலில் அவன் மலைவாசிகளை ஒடுக்கியாக வேண்டும். மலைப்பகுதியில் போரிட அவன் அனுபவமற்றவன். அவனுடைய படை வீரர்களும் போதிய அனுபவம் பெற்றிருக்கவில்லை. மதிற் சுவர்களில்லாத ஏ்ட்டோலியாவை (Aetolia) மிக எளிதில் பிடித்து விடலாமென்று நௌபாக்டசிலிருந்த மெகானியர்கள் அவனுக்கு எடுத்துக் கூறினுர்கள். மெசானியர்கள் இந்த சந்தர்ப்பத்தைத் தங்களுக்குக் உகந்ததாசகிக் கொள்ள எண்ணினுர்கள். மெசானியர்களுக்கும் எயிட்டோலியர்களுக்கும் மிக நீண்ட நாளாகப் பகை இருந்து வந்தது. அவர்கள் தங்களுடைய சொந்த நலனுக்கு அத்தீனியப்படைத்தலைவனுகிய டெமாஸ்தனிசின் பேராசையைப் பயன்படுத்திக்கொள்ள விரும்பினுர்கள்.

லேவுகாசினுடைய தோல்வியை எதிர்பார்த்திருந்த அகர்னுனியர்கள், டமோஸ்தனீஸ் அதை முற்றுகையிடாதபடியால் அவன்மீது கோபமுற்றனர். அவர்கள் எயிட்டோலிக்கு எதிர்ப்பாக அவனுடன் சேர மறுத்துவிட்டார்கள். அத்தீனியர்களும் சில நேச உறவு நாடுகளும் லோக்ரிஸி (Locris) லுள்ள ஒனேயான் (Oeneon) என்ற இடத்திலிருந்து புறப்பட்டு, நாட்டினுள் முன்னேறிச் சென்ருர்கள். தனிப்பட்ட பல இனங்கள் ஒன்ருகச் சேர்வதைத்தடுப்பதே அவர்களுடைய நோக்கம். ஏற்கனவே அவர்களுடைய திட்டத்தை அறிந்திருந்த எயிட்டோலியர்கள் ஒரு பெரும் படையைத் திரட்டிக் கொண்டிருந்தார்கள். எயிட்டோலியன் நாட்டையும், அந்நாட்டு மக்கள் போராடும் முறையையும், அவர்கள் போர்க் கோலம் பூணும் விதத்தையும் ஓசோலியான் லோக்கிரியர்கள் நன்கறிந்திருந்தார்கள். அவர்களுடைய

ஒத்துழைப்பைப் பெற டெமோஸ்த்தினீசுக்கு வாய்ப்பு இருந்தது. அவர்களுக்காகக் காத்திருக்காத பெருந்தவற்றை டெமொஸ் தினிஸ் உணர்ந்துகொண்டான். அதனல் ஈட்டி பிடித்துப் போரிடும் எயிட்டோலிய வீரர்களை அவனல் சமாளிக்க முடியவில்லை.

ஏஜிஷானில் (Aegition) அந்நாட்டு வீரர்கள், தங்கள் நகரத்தைப் பிடித்து விட்ட படையெடுப்பாளரின் மீது மலையிலிருந்து பாய்ந்து வந்து தாக்கிப் பெருஞ் சேதத்தை விளைவித்தார்கள். நூற்றிருபது அத்தீனிய வீரர்கள் மாண்டார்கள். 'அந்த போரில் ஏதென்சு நகரம் இழந்த வீரர்கள் மிகவும் திறமையான வீரர்கள்'. டெமோஸ்த்தினீஸ் ஏதென்சுக்குத் திரும்பிப் போகத் துணிவு கொள்ளவில்லை. அவன் நௌபாக்டசில் தங்கினன். அவனுடைய புகழை மறுபடியும் நிலை நாட்டுவதற்கான சந்தர்ப்பம் அவனுக்குக் கிடைத்தது.

எயிட்டோலியப் படையைத் திருப்பித் தாக்க, லாசிடோமினியா 3000 வீரர்களை யூரிலோச்சஸ் என்பவன் (Eurylochus) தலைமையில் நௌபாக்டஸுக்கு எதிராக அனுப்பிற்று. அவர்களில் 500 பேர், புதியதாக ஏற்பட்ட குடியேற்ற நாடாகிய ஹெராக்களியிலிருந்து வந்தவர்கள். நௌபாக்ட்டஸ் டெமாஸ்த்தனெஸின் முயற்சியால் காப்பாற்றப்பட்டது. அவன் அகர்ஞனியர்களைப் படை யுதவி அனுப்பும்படி தூண்டினன். ஆர்காஸ் மீது நடத்தும் ஒரு தாக்குதலில் ஆம்ப்ராசியாட்டு மக்களுடன் சேரும் நோக்கங் கொண்ட யுரிலோச்சஸ், முற்றுகையைக் கைவிட்டு, எயிட்டோலியாவின் தென்பகுதியிலுள்ள காலிடோன் (Calydon), புளூரோன் (Pleuron) என்ற பிரதேசத்திற்குப் பின் வாங்கிச் சென்ருன். பனிக்காலம் வந்தது. ஆம்பிராசியட்டார் வடக்கிலிருந்து இறங்கிவந்து, ஒல்ப்பே என்ற கோட்டையைக் கைப்பற்றினர். அக்கோட்டை அர்காசுக்குச் சிற்று வடக்கிலிருந்தது. அக்கார்ஞனியன் சங்கத்தாரால் அக்கடற்கரைக் குன்று, நீதி மன்றமாகப் பயன்படுத்தப்பட்டு வந்தது.

இத்தாக்குதலைச் சமாளிப்பதற்குத் தங்களுக்குத் தலைமை தாங்கும்படி டெமாஸ்த்தானிசை அகார்ஞனியர்கள் கேட்டுக்கொண்டார்கள். பெலப்போனிசியக் கடற்பகுதியில் நிறுத்தப்பட்டிருந்த இருபது அத்தீனிய மரக்கலங்களிடம் உதவி கோர ஒரு தூதுவன் அனுப்பப்பட்டான். யூரிலோச்சன் படை, தெற்கிலிருந்து புறப்பட்டு அகார்ஞனியாவைக் கடந்து தன்னுடைய நேசவுறவு நாடுகளுடன் ஒல்பேயி என்னுமிடத்தில் சேர்ந்து கொண்டது. படை பலத்துடன் அத்தீனியப் போர்க்கப்பல்கள் ஆம்பரேசியன் குடாவை வந்தடைந்தது. ஒல்போயிக்கும் ஆர்காசுக்கும் இடையில் போர் மூண்டது. எதிரிகள் மிக்க திறமையுடன் திட்டமிட்டு உருவாக்கிய, மறைந்திருந்து தாக்குதலை,

டெமாஸ்த்தனிஸ் பாழாக்கினன். அங்கே யூரிலோச்சஸ் கொல்லப் பட்டான். ஆம்பரிசியாட் மக்களை ஒதுக்கி விட்டு, பெலப்போனீசி யர்கள் டெமாஸ்த்தனிஸுடன் ஒரு இரகசிய உடன்படிக்கை செய்து கொண்டார்கள். அவர்கள் ஆர்காசுக்கும் அத்தீனிய போர்க் கப்பல் களுக்கும் இடையிலிருந்த அபப்ரான இடத்திலிருந்து தப்பித்துச் சென்றுர்கள். தங்கள் நோக்கத்தை அம்பரரசி நாட்டு மக்களுக்குச் சொல்லாமலும், அவர்களுக்குத் தெரியாமலும் அவர்கள் பின்வாங்கிப் போக வேண்டுமெனத் திட்டமிடப்பட்டிருந்தது. டெமாஸ்த்தனீஸ் கடைப்பிடித்த இத்திட்டம் மிகச் சிறப்பான திட்டமென்று கருதப் படுகிறது. இப்படிப்பட்ட துரோகச் செயலினுல் லாசிடோமோனி யர்கள் கிரேக்க நாட்டின் இப்பகுதியில் தங்கள் செல்வாக்கை இழக்க நேரிட்டது.

பெலப்போனிசியர்கள் விறகுகளையும் மூலிகைகளையும் சேகரிப்ப தைப் போல் நடித்துக்கொண்டு ஒருவன் பின் ஒருவனுக ஒல்பேயே விட்டு வெளியேறிச் சென்றுர்கள். வெகுதூரம் சென்ற பிறகு, அவர்கள் வேகமாகச் சென்றுர்கள். நடந்ததை அறிந்த ஆம்பரசி யாட்டு மக்கள் அவர்களைத் துரத்திப் பிடிக்க வெளியே ஓடினுர்கள். ஆர்கானுனியர்கள் 200 பேர்கள் ஆம்பரசியாட்டுகளைக் கொன்றுர்கள். பெலப்போனிசியர்கள் ஆக்ரேயா (Agraea) நாட்டுக்கு ஓடிவிட் டார்கள். மேலும் ஒரு பலத்த அடி ஆம்ப்ரேசியாவுக்காகக் காத் திருந்தது. அச்சம்பவத்தை அறிந்து கொள்ளாமல் உதவிப்படை ஒல்பேக்கு வந்து கொண்டிருந்தது. டெமாஸ்த்தனிஸ் தன்னுடைய வீரர்கள் சிலரை அவர்கள் வரும் வழியில் மறைந்திருக்கும்படி செய்தான். ஒல்பேக்கு வடக்கில் சில மைல் தூரத்தில் இடோ மென்னில் (Idomene) சம உயரமில்லாத இரு சிகரங்கள் இருக்கின்றன. டெமாஸ்த்தெனிசின் ஆட்கள் முன்னதாகவே அவ்வாண்டில் மிக உயரமான இடத்தைக் கைப்பற்றியிருந்தனர். அங்கு வந்து சேர்ந்த ஆம்பரசியாட்டுப் போர் வீரர்கள் உயரம் குறைவான சிகரத்தில் கூடாரம் அடித்திருந்தார்கள். டெமாஸ்த்தனிஸ் தன்னேடிருந்த வீரர்களுடன் முன்னேறி, விடியற்காலையில் அரைத் தூக்கத்திலிருந்த அப் போர் வீரர்களைத் தாக்கினுன். அவர்களில் பெரும் பாலோர் கொல்லப்பட்டார்கள். தப்பியோடியவர்கள் மலையின் கணவாயில் போர் வீரர்கள் காத்துக்கொண்டிருப்பதைக் கண்டார்கள். பத் தாண்டு நடந்த போர்களிலும்கூட அப்படிப்பட்ட அவ்வளவு சொற்ப நாட்களில், ஹெலனிக் நாட்டில் அத்தகைய துக்க சம்பவம் நடந்த தில்லை' என்று துசிடைடிஸ் கூறுகிறுன். மாண்டவர்களின் எண்ணிக்கை யையும் அவன் கொடுக்கவில்லை. ஏனென்றுல் அவர்களுடைய எண் ணிக்கை, நாட்டின் அளவுக்குப் பொருத்தமற்றதாக இருந்திருக்கும். சற்று முன்னேறியிருந்தால் டெமாஸ்த்தனிஸ் அந்நகரைப் பிடித்திருக்

கக்கூடும். ஆகர்ஞனியர்கள் தங்களுடைய நாட்டின் அருகே அத்தீனியர்கள் நிலேயாகத் தங்கி விடுவதை விரும்பவில்லே. அவர்கள் தங்கள் அண்டைநாடு, இடையூறு செய்யாதவாறு தடுக்கப்பட்டதை எண்ணி அமைதி கொண்டார்கள். ஆர்காஸைச் சார்ந்த ஆம்ப்ரோச்சியர்களும், அக்கார்னேனியர்களும் ஆம்பரிசியாட்டு மக்களுடன் நூறுண்டு நேசவுறவு உடன்படிக்கை செய்து கொண்டார்கள். அப்போதிருந்த பெரிய யுத்தத்தில் அவர்களுக்குள் எந்த நாடும் தங்கள் சொந்த நேசவுறவு நாடுகளுக்கு எதிரே சேர்வதில்லேயென்றும், தங்கள் நாடுகளேத் தற்காத்துக் கொள்ளும் பணியில் ஒருவருக்கொருவர் உதவி புரிவது என்றும் முடிவு செய்து கொண்டார்கள். சில காலத்திற்குப் பின் அனக்டோரியானும் (Anactorion) பிறகு ஒளியாடேயும் (Oeniadae) அத்தீனியன் நேச உறவு நாடுகளாயின.

## 9. நிசிகியாசும் கிளியானும், ஏதென்சில் அரசியல்

ஆம்பிரேசியாவில் கிடைத்த வெற்றி எயிட்டோலியாவில் ஏற்பட்ட தோல்விக்கு ஈடு செய்துவிட்டபடியால் டெமாஸ்த்தனிஸ் ஏதென்சுக்குத் திரும்பி வந்தான். அவனுடைய போர் முறையும், திடமான திட்டங்களும், வயதில் முதிர்ந்தவர்களுக்கும், நீண்டநாள் அனுபவ முடையவர்களுக்கும் சாதாரண சேனேத் தலேவர்களுக்கும் அவநம்பிக்கையை யுண்டு பண்ணின. நிசிரேட்டசின் (Niceratus) மகன் நிசியாஸ் (Nicias) ஏதென்சின் போர்த்துறை முதலிடம் பெற்றவனுக இருந்தான். மேற்கு கிரீசில் நடந்த சம்பவங்களேக் கேட்டு டெமஸ்த்தனிசின் செயல்களேப் போற்றுது பேசி வந்தான். அவன் செல்வம் படைத்தவன்; பழமைவாதி. அவனிடம் பல அடிமைகள் இருந்தார்கள். லாரியான் (Laurion) வெள்ளிக்கனி சுரங்கங்களின்மீது கவனம் செலுத்தி வந்தான். கட்சியின் முக்கிய தலேவர்களில் ஒருவனுக இருந்தான். அவன் கட்சியினர், ஏதென்ஸின் அரசியல் கலாசார முன்னேற்றத்தை வெறுத்தனர். அவன் ஏதென்சு சபையில் மிக்க செல்வாக்குப்பெற்ற கிளியான் போன்ற புதிய அரசியல்வாதிகளேக் கடுமையாக எதிர்த்து வந்தான்.

நிசியாசின் திறமை நடுத்தரமானது. அவன் சிறப்பான அரசாங்க பணியாளனுக இருந்திருக்கவேண்டும். ஆனுல் தலேவனுகவோ, அரசியல் அறிஞனுகவோ இருப்பதற்கு வேண்டிய பண்புகள் அவனிடமில்லே. இருந்த போதிலும் அவனுக்கு ஏதென்சில் நிலேயான செல்வாக்கிருந்தது. வளேந்து கொடுக்காத தன்மானமும், லஞ்சம் வாங்காத பண்பும், ஆழ்ந்த மூட நம்பிக்கையும், படை விவர அறிவும் அவனுக்கு ஏதென்ஸில் மக்களுடைய செல்வாக்கைத் தந்தன. இது

இவ்வாறு நடுத்தரத் திறமையுள்ளவனுக்கு அத்தீனியர் செலுத்தும் மரியாதை, அதன் குடியாட்சியின் தன்மையையும் பழமை வாதக் கட்சியின் பலத்தையும் தெளிவாக்குகின்றது. நிசியாஸ் சமாதானத்தை விரும்பும் கட்சியைச் சேர்ந்தவன். அவன் ஸ்பார்ட்டாவிடம் அனுதாபமுள்ளவன். இதனுல் இவனே (Cimon) ஸைமனைப் பின்பற்றுபவன் என்று கருதப் பல காரணங்கள் இருக்கின்றன. ஆனுல் அவனுடைய அரசியல் விரோதிகள், அவனைப் பல முறை தோல்வியுறச் செய்தபோதிலும் அவனுடைய செல்வாக்கைக் குறைக்க முடியவில்லை. தவறுன கருத்துகளை சிறு பொருள் கொடுத்து நீக்கி விடுவதனுல் ஏற்படக் கூடிய அரசியல் மதிப்பை அவன் நன்கறிவான். சமயச் சேவைக்குத் தாராளமாகப் பணம் செலவிட்டு வந்தான்.

தூசிடைடிஸ் சொல்லுவதைப் போல, அவன் தெய்வச் செயல், சகுனம், ஆருடம் முதலியவைகளில் அளவு கடந்த நம்பிக்கையுள்ளவனுக இருந்தான். டிலாஸ் தீவைத் தூய்மைப்படுத்தும்போது, அவனுடைய சமயப்பற்றையும் தாராள மனப்பான்மையையும் காட்ட அவனுக்கு ஒரு வாய்ப்பு ஏற்பட்டது. பரவியிருந்த கொள்ளை நோயைத் தடுப்பதற்குத் தெய்வத்தை வேண்டுவதற்கே தூய்மைப் படுத்தும் பணி மேற்கொள்ளப்பட்டது. சடலங்கள் கல்லறைகளிலிருந்து அப்புறப்படுத்தப்பட்டன. அந்தப் புண்ணிய பூமியில், மரணமடைவதையோ அல்லது குழந்தை பெறுவதையோ தடுப்பதற்கான சட்டம் கொண்டுவரப்பட்டது. இறப்பையோ குழந்தைப் பேற்றையோ எதிர்பார்க்கின்றவர்கள் ரேனியாவுக்குப் (Rheneia) போய்விட வேண்டும். அத்தீனியர்கள் புதிய முறையில் பழைய திருவிழாக்களுக்கு புத்துயிர் அளித்துள்ளார்கள். ஹோமரின் வழிபாட்டில் குறிப்பிட்டதுபோல் நீண்ட அங்கி யணிந்த அயோனியர்கள் ஒன்று கூடி குத்துச் சண்டை, சங்கிதம், நடனம் முதலியவற்றின் மூலமாக அப்போலாவை மகிழ்வித்தனர். போட்டிப் பந்தயங்கள் மீண்டும் துவங்கப்பட்டன. குதிரைப் பந்தயங்கள் புதிதாகத் தோற்றுவிக்கப்பட்டன. நான்காண்டுகளுக்குப் பின் அங்கு குடியிருந்தவர்களை வெளியேற்றியதோடு, தூய்மைப் படுத்தல் பரிபூரணமாக நிறைவேறியது. பாரசிகர்கள் வெளியேறியவர்களுக்கு ஆட்ராமெட்ஷனில் (Adramyttion) ஒரு புகலிடமளித்தார்கள்.

அப்படிப்பட்ட விழாக்களை முன்னின்று நடத்தி வைத்தபடியால் நிசியாஸ் ஏதென்ஸ் மக்களின் செல்வாக்கைப் பெற்றிருந்தான் ;தகுதியற்றவனுக்குச் சிறப்புத்தருவது நகர நாடுகளில் காணப்படும் குறைபாடுகளில் ஒன்ருகும். தற்காலத்திலுள்ள பெரிய நாடுகளில் அரசியல்வாதியினுடைய தனி வாழ்க்கை, தனி அபிப்

பிராயங்கள் அவனுடைய அரசியல் வாழ்க்கையைப் பெரும்பாலும் பாதிப்பதில்லே. ஆனல் கிரேக்க நாட்டின் நகர ஆட்சியில் ஓர் அரசியல் வாதியினுடைய சொந்த வாழ்க்கையும் சொந்த அபிப்பிராயங்களும் அவனுடைய அரசியல் வாழ்க்கையில் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தன. அரசாங்கத்தில் அவனுக்கிருக்கும் செல்வாக்கு அவனுடைய சொந்த நடத்தையைப் பொறுத்திருக்கிறது. நடுத்தர மனிதன் தனது அறிவுத்திறமையால், தகுதியில்லாதிருந்தும், அவன் அதிகாரத்தைக் கைப்பற்ற முடிகின்றது. பெரிக்கிளீஸ் தன்னுடை நல்லொழுக்கமும் சமயக் கொள்கையும் தாக்குதலுக்குள்ளான போதும், தன் செல்வாக்கை நிலைநிறுத்திக்கொள்ளும் ஆற்றல் பெற்றிருந்தான். ஆஸ்பாஸியவுடனே அனக்ஸகோராஸுடனே தொடர்பு கொண்டு மக்களின் ஒழுக்கத்தையும், சமயப்பற்றையும் பழிக்காமல் நிசியாஸ் தன் நிலையைக்காத்துக்கொண்டான். அத்தீனியர்கள் அறிவாற்றலும் கண்ணியத்தையும் போற்றும் பெருமை படைத்தவர்கள். அவர்களுடைய முன்னேற்ற உணர்ச்சி, அடிக்கடி பழைமை வாதிகளின் எதிர்ப்புகளால் நசுக்கப்பட்டு வந்தது.

பெரிக்கிளீஸின் கொள்கையை ஆதரிக்காத அத்தீனியர்களில் நிசியாசும் ஒருவன். பெரிக்கிளீசைப் பின்பற்றுபவர்களுடைய கொள்கையையும் அவன் ஏற்றுக்கொள்ளவில்லே. அவன் மக்களாட்சி அரசாங்கத்தில் மாருத பற்றுள்ளவனுக இருந்தான். ஆனல் ஏதென்ஸில் ஓர் சிறு குழு ஆட்சிக் கட்சி இரகசியமாகவே வளர்ந்து வந்தது. சந்தர்ப்பம் வாய்க்கும்போது குடியாட்சி அரசியலமைப்பை மாற்றிவிட வேண்டுமென்ற நம்பிக்கையுடன் அது இருந்தது. இந்தக் கட்சியை அல்லது அதில் ஒரு பகுதியை அப்பொழுது ‘இளேய கட்சி’ யென்று அழைத்தார்கள். அக் கட்சியில் இருந்தவர்களில் சிலர் பின்னல் வரலாற்றில் சிறப்பான இடம் பெற்றவர்கள். அவர்களில் ஒருவன் ஆன்டிபோன் என்பவனுவான். ஒரு கலவரத்தினுல் ஏற்பட்ட வழக்கு விசாரணேயிலே முதன் முதலில் பொது மக்களின் கவனம் இவன் மீது திரும்பிற்று. இக் கட்சியின் மறைவான திட்டங்களேயும், படைத் தலேவர்களுடைய தவருன நடத்தையைப் பற்றியும் கிளியான் இடைவிடாமல் விழிப்புடன் கவனித்து வந்தான். ‘மக்களுடைய காவல் நாய்’ என்று அவர் தன்னேப்பற்றி ஏதென்சு சபையில் அடிக்கடி சொல்லி வந்தான். ஆனல் தற்போது சிறு குழு ஆட்சியினர், தீங்கற்றவர்களாக இருந்தார்கள். ஏதென்சுக்கு வெளியிலிருந்து கடுந் துன்பம் வந்தாலன்றி இவர்கள் முன்னேற வாய்ப்பில்லே. ஆனல், அவர்கள் கிளியானுடைய எதிரிகளுடன் சேர்ந்துகொண்டு, அநாமதேயக் குறிப்புக்களின்மூலம் தங்கள் வெறுப்பை வெளியிட்டு வந்தனர். அவ்வாண்டுகளில், சிறு குழு ஆட்சிக் கொள்கையைப் பின்பற்றும் ஓர் அத்தீனியன் நமக்காக ஒரு சூழ்நிலே அமைக்கப்பட்டு வருகின்றது

என எழுதி வைத்தான். அத்தீனியனின் மக்களாட்சி என்பதே அந் நூலின் பொருளாகும். அந் நூலில், இதர கிரேக்க நாடுகள் ஏதென்ஸின் அரசியல் நிருவாகங்களைப்பற்றிக் கூறிய குறைபாடுகளுக்கு அத்தீனியர்களின் சார்பாக அந் நூலாசிரியன் விடையளிக்கிறான். அவன் சொல்வதாவது: 'என்னைப் பொறுத்தமட்டில் நான் மக்களாட்சியை விரும்பவில்லை, ஆனால் அத்தீனியர்களின் எண்ணத்தின்படி, தங்கள் அரசாங்கத்தைத் திறமையோடும், மக்களாட்சிக்குப் பொருத்தமாகவும் நடத்துகிறார்கள் என்பதை நான் விளக்கிக் காட்டுவேன்'. குற்றச்சாட்டுகளுக்கு விடையளிப்பதன் மூலமாக, அவன் குடியாட்சியை மறைமுகமாகத் தாக்குகிறான் அவனுடைய நூல் குறைபாடுகளை நுட்பமாகவும், தெளிவாகவும் குறிப்பிடுகின்றது. நூலாசிரியன் ஏதென்சின் கடலாதிக்கத்திற்கும், அதனுடைய முன்னேற்ற மடைந்த குடியாட்சிக்குமுள்ள தொடர்பை நன்றாகத் தெரிந்து, அதனை மன ஆழத்தில் பதிய வைத்துக் கொண்டான். மனத்தில் பதித்துக்கொண்டுவிட்டான். ஏதென்ஸில் பிரபுக்களையும் செல்வர்களையும்விட ஏழைகளுக்கும் பாமர வகுப்பினருக்கும் மட்டுமே மேலான ஆதிக்கம் இருக்கவேண்டும் என்று அவன் குறிப்பிடுவது முறையாகும். ஏனென்றால் பாமர மக்கள் கலம் செலுத்தி, நகரத்தை வலிமையாக்குகிறார்கள். ஆனால் போர் வீரர்களும் உயர்குடிப் பிறந்தோரும், சிறப்பு வாய்ந்தவர்களும் அப்படிப்பட்ட பணியாற்றுவதில்லை. தேவையற்ற சுதந்திரமும், தனி வுரிமைகளும் அடிமைகளுக்கும் ஏழைகளுக்கும் அளிக்கப்படுகின்றது என அவன் கூறுவது கூர்ந்து ஆராயற்பாலது. 'அவர்களில் ஒருவனை ஏன் நீ தாக்கமுடிவதில்லை. அடிமை தெருவில் உனக்கு வழி விடுவதில்லை.'

அவன் கெட்ட எண்ணத்தோடு கொடுக்கும் விளக்கங்கூட கவர்ச்சியாக இருக்கிறது. அடிமையா அல்லது பாமர மகனா என்று பிரித்துக்கூற முடியாத வகையில் பாமர மக்கள் உடையணிகிறார்கள். ஒரு குடிமகனை நீ அடித்துவிட்டால் அதனால் பெரிய குழப்பம் ஏற்படுகிறது. ஏதென்ஸின் வாணிகம், நாட்டிற்கு உலகத்தின் செல்வங்களைக் கொண்டு வருகிறது எனினும் வியாபாரத்தின் காரணமாக அன்னிய மொழி ஏதென்சின் மொழியில் கலந்து நலிவடைகின்றது. அத்தீனியர்களின் பழக்க வழக்கமும் மாறுதல் அடைகின்றன என்று அவன் கூறும் விளக்கத்தில்கூட இழிவான எண்ணமிருக்கிறது.

ஏதென்சின் அரசியல் வரலாற்றில் இக் காலத்தில் மாறுதல்கள் நிகழ்ந்தன. மக்கள் சபையின் தலைவரிடமிருந்து, படைத் தலைமை நீக்கப்பட்டதும், அங்கு மக்களுடைய தலைவர்களுக்கும் படைத் தலைவர்களுக்குமிடையில் ஒற்றுமை யின்மையும் குறிப்பிடத்தக்கவை. மக்கள் சபையில் பெரும்பான்மையோராக இருந்த வணிகர்களுக்கு

போர்முறைப் பயிற்சியோ திறமையோ இல்லை. சபையில், படைக் கொள்கைபற்றி, பல போர்த்திறமை மிக்க மக்கள் பேசும்போது, அவ் வணிகர்கள் தாழ்ந்துபோகும் நிலையில் இருந்தார்கள். சமீபகாலம் வரையில் சேனையில் தலைமைக் பதவி உயர்குடிப் பிறந்தவர் களுக்கும் செல்வம் படைத்த குடும்பத்தினருக்குமே கொடுக்கப் பட்டுவந்தது. இப்போது, பெர்க்கிளீஸின் இறப்புக்குப்பின் ஒரு மாறுதல் ஏற்பட்டது. சேனைத் தலைவர்கள் மக்களிலிருந்து தேர்ந் தெடுக்கப்பட்டார்கள். நகைச்சுவைக் கவிஞனை இயுப்போலிஸ் தன்னுடைய டெமேஸ் (Demes) என்ற நாடகத்தில் இம் மாறுதலைக் குறிப்பிடுகிறான். அந் நாடகத்தில் பெருந் தலைவர்களாகிய மில்ட்டி யாடிஸ், தெமிஸ்ட்டோக்கிளிஸ், அரிஸ்ட்டைடிஸ், பெரிக்கிளிஸ் ஆகியோர் உயிர்பெற்றெழுந்துவந்து சீர்கெட்டுப்போன ஏதென்ஸ் மக்களைப் பார்த்து வருந்துகின்றனர். அவன் தற்போதுள்ள படைத் தலைவர்களை முந்தியகாலத்தவர்களுடன் ஒப்பிட்டுக் காட்டுகின்றான்: ‘முன்பிருந்த நம்முடைய படைத்தலைவர்கள் உயர் குடியில் பிறந்தவர் கள் ; செல்வம் மிக்குடைய பிரபுக்கள், உயர்தரமானவர்கள், புகழப் படத் தக்கவர்கள். அவர்களை நாம் தேவர்களைப்போல் வழிபட் டோம். அவர்களும் தெய்வங்களைப்போலவே நமக்கு வழி காட்டி, நாட்டைப் பாதுகாத்தனர்.’

‘அப்போதிருந்த நிலை இன்றில்லை. நம்முடைய புதிய படைத் தலைவர்கள் முற்றிலும் வேறுபட்டவர்கள். கயவர்களும் இழிந்தவர் களும் இன்று நமது படைத்தலைமை தாங்க தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள னர்.’ [மேலே தரப்பட்டது டெமிஸ் (Demes) என்ற நாடகத்தில் கவிஞன் யூப்போலிசின் கருத்துகள்.]

கிளியான் அறிவும் மன உறுதியும் படைத்த ஒரு மனிதன். அவன் பெரிக்கிளீசைப் போலவே ஆட்சிபுரிய அவாக் கொண்டான். இந்த நோக்கத்திற்காக யுத்த களத்திலும், ஏதென்ஸ் மக்கள் சபையிலும் வெற்றியடைய வேண்டுமென்பதை அவன் அறிந்துகொண்டான். இதுவரையில் நீதிமன்றங்களில் பணியாற்றி, அங்கு அரசாங்க அலு வலர்களின் பணியைக் கண்காணித்தான். ஏதென்ஸ் மக்களாட்சி யைப் பாதுகாத்தான். எதிர்க்கட்சித் தலைவருக்கும் மேலாகக் கொள் கையைச் சபையில் வற்புறுத்தவும், நிர்வாகத்தில் நிலையான ஆதிக்கத் தைச் செலுத்தவும், தக்க தருணம் வாய்க்குமானல், தலைமைப் பதவியையும் அவன் மேற்கொள்ளத் தயாராக இருந்தான். திறமை மிக்க தோழனின் உதவியும் இருந்தால் அவன் வெட்கப்படவேண்டிய தில்லை. திறமையுள்ள டெமாஸ்தனிசின் ஒத்துழைப்பும் இப்போது அவனுக்குக் கிடைத்தது. இருவரும் தம்மிடையே செயற்படுவதென்று தீர்மானித்துவிட்டார்கள். அவர்கள் தங்களுடைய ஒத்துழைப்பின்

மூலமாக, அரசியலிலும் படைத்துறையிலும் நிசியாஸ் வகித்துவந்த செல்வாக்கை அழித்துவிடக்கூடும்.

அவர்களுடைய ஒத்துழைப்பின் விளைவினுல் ஏற்படக்கூடிய புகழ் பெற்ற ஒரு தீரச் செயலைப்பற்றி அறியுமுன், தொடர்ந்து நடந்த யுத்தத்தினுல் ஏற்பட்ட பொருள் செலவைப்பற்றி நாம் அறிந்து கொள்ளவேண்டும். படைச் செலவுக்காகக் கோயில் களஞ்சியத்தி லிருந்து சொற்ப வட்டிக்குக் கடன் வாங்கும் நிலைமை ஏற்பட்டது. அத் தொகை போதுமானதன்று. ஏதென்சின் நிதிப்பொறுப்பை வகித்தவர்கள், கீழ்ப்பட்ட நாடுகளின் கப்பத்தை உயர்த்த வேண்டு மென மக்களிடம் கூறினர்.

கிளியானும் அப்பொறுப்பின் பெரும்பகுதியை ஏற்கவேண்டிய தாயிற்று. கப்பம் இரு மடங்காக உயர்த்தப்படவில்லை யென்றுலும், இருமடங்குக்குச் சற்றுக் குறைவாக வசூலிக்கப்பட்டது. அதனுல் கிடைத்த மொத்தத் தொகை சுமார் 1000 தாலந்துக்குக் குறைவாக இருந்ததில்லை. இவ் வரிவசூல் பற்றிய விவரம் செதுக்கப்பட்ட கற்கள் நம்மிடமுள்ளன. ஏகாதிபத்தியத்தின் பேராசையையும், மக்களாட்சி யின் நேர்மையின்மையையும் விளக்கும் நினைவுச் சின்னமாக அக்கற்கள் விளங்குகின்றன. மெலெசியாசின் (Melesias) மகனை தூசிடைடிஸ், ஆரம்பக் கட்டத்தில் இதற்குத் தன் எதிர்ப்பைத் தெரிவித்திருக் கிருன்.

ஆனுல் இந்த நிலையில் கப்பம் உயர்த்துவது மிகத் தேவையாக இருந்தது. ஏதென்ஸ் பின்வாங்கக் கூடாது. மற்ற நகரங்களின் சார் பாகப் பேசக்கூடிய மக்கள், சிறப்பாக இளையகட்சியில் இருந்தார்கள். ஏதென்ஸ் இழைத்த இந்த அநீதியை அரிஸ்ட்டோபேனஸ் இகழ்ந்து கூறினுன். மற்ற நகரங்கள் தங்கள் கடமையைச் செய்யவேண்டு மென வற்புறுத்தப்பட்டால், ஒவ்வொரு நகரமும் தன் நிலத்தின் செழுமையினுல் இருபது அத்தீனியர்கள் சுகமாக வாழ வழி செய்யு மென்று எண்ணி எழுதிவைத்தான்.

நிதி நெருக்கடிக்காக வரிப் பளுவும் கீழ்ப்பட்ட நாடுகளின் கப்பமும் அதிகரிக்கும்போது, ஏதென்ஸ் தன் செலவையும் உயர்த்த எண்ணியது வியப்பாக இருக்கின்றது. நீதிபதிகளின் சம்பளம் உயர்த்தப்பட்டது. பெரிக்கிளீஸ், ஒரு நீதிபதிக்கு ஒரு ஒபோல் (obol) சம்பளமென நிர்ணயித்தான். கிளியான் இப்போது அதை மூன்று ஒபோலாக உயர்த்தினுன். இந்த நடவடிக்கை பொதுமக்களின் நல்லெண்ணத் தைப் பெறுவதற்கு மேற்கொள்ளப்பட்ட நடவடிக்கை என்று கருது வது தவருகும். ஆண்டுதோறும் அட்டிக்காவின் மீது நடத்தப்பட்ட

படையெடுப்பும், ஏழைகளின் அறுவடையில் ஏற்பட்ட இழப்பும், இத்தகைய முயற்சியால் ஈடுசெய்யப்படமாட்டா.

## 10. பைலாசை அத்தீனியர்கள் கைப்பற்றல்

டெமாஸ்தனிஸ் அரசாங்கக் கட்டளையைப் பெருவிடினும், யூரிமீடோன், சோபோகிளிஸ் என்ற தலைவர்களின் கீழ், மேற்கு நோக்கிச் செல்லவிருந்த நாற்பது போர்க் கப்பல்களுடன் செல்லுமாறு டெமஸ்தனிஸ் கிளியானுல் அனுப்பப்பட்டான். இது கிளியானின் தூண்டுதலால் ஏற்பட்டதென்று சந்தேகமின்றிக் கூறலாம். இந்தக் கடற்படையைக் கார்சிராவில் பார்த்தோம். அப்போது, அது இஸ்டோன் குன்றில் குடியேறிய ஆலிகார்க் அகதிகளுக்கு எதிராகப் போர் புரியும் குடியாட்சி மக்களுக்கு உதவி புரிந்துகொண்டிருந்தது. டெமாஸ்த்தனிஸ் அரசாங்கக் கட்டளையின்றி இந்தப் படையெடுப்பில் கலந்துகொண்டான். பெலப்போனீசுக்கு மேற்கில் ஒரு கடற்படை தங்குமிடத்தை உண்டாக்க வேண்டுமென்பதே அவனுடைய திட்டமாக இருந்தது. படையை அவன் விருப்பப்படியே நடத்தவும் அவனுக்கு அனுமதி அளிக்கப்பட்டது. அக் கப்பற்படை மெசானியா கடற்கரையை அணுகியபோது, டெமோஸ்த்தனிஸ் அதன் தலைவர்களுக்கு; பைலாஸ் என்ற இடத்தில் தங்கும்படி சொன்னுன். பெலப்போனிசியக் கடற்படை கார்சிராவுக்குப் போய்ச் சேர்ந்ததை அவர்கள் கேள்வியுற்றிருந்தபடியால் அவர்கள் அவனுடைய கட்டளைக் கிணங்க மறுத்துவிட்டார்கள். காலநிலை அவர்களைப் பைலாஸ் துறைமுகத்திற்கு இழுத்துச் சென்றது. டெமாஸ்த்தனிஸ் அவ்விடத்தைப் பலப்படுத்தும்படி அவர்களைக் கட்டாயப் படுத்தினுன். அது எளிதாக இருந்தது. ஏனென்ருல் அத் துறைமுகம் இயற்கையாகவே வலுவுள்ள துறைமுகமாக இருந்தது. அதனுடன் அங்குக் கட்டடங்களுக்கு வேண்டிய கற்களும், மரங்களும் அருகிலேயே கிடைத்தன. படைத்தலைவர்கள் அந் நோக்கத்தை இகழ்ந்து கூறினுர்கள். நீ நாட்டின் பணத்தைப் பாழ்படுத்த விரும்பினுல், அதற்குப் பெலப்போனீசியாவில் அநேக பாலைவன நிலங்கள் இருக்கின்றன’ என்று அவர்கள் ஏளனம் செய்தனர். புயலின் காரணமாக அவர்கள் அங்கேயே தங்க நேர்ந்தது. போர் வீரர்கள் சோம்பலாக இருந்தார்கள். ஏதாவது ஒரு வேலை செய்யவேண்டுமென்பதற்காகப் பைலாஸ் துறைமுகத்தைப் பலப்படுத்தும் வேலையில் அவர்கள் ஈடுபட்டார்கள்.

குறிப்பிடத்தக்க போர் நிகழ்ச்சி அவ்விடத்தைச் சிறப்பித்தபடியால், அதன் தோற்றத்தைப்பற்றி நன்கு அறிய வேண்டும். உயரமான பைலாஸ் அல்லது காரிபோஷன் என்றவிடம் மூன்று பக்கங்களிலும்

நீரால் சூழப்பட்டிருந்தது. ஒரு காலத்தில் அது ஒரு தீவாக இருந்தது. இப்போது அது மேற்கில் ஒரு மணல் மேட்டினுல் பெரு நிலப்பகுதி யோடு இணைக்கப்பட்டிருக்கிறது.

அது வரலாற்றுக் காலத்துக்கு முந்திய காலத்தில் தொடர்ச்சி யாக இருந்த ஒரு செங்குத்தான கடற்கரைப் பாறையின் சிகரமாக இருந்தது. இந்த மலைத் தொடரில் மூன்று உடைப்புகள் ஏற்பட்டன. அதன் காரணமாகப் பைலாஸ். ஸ்ப்பேக்ட்டிரியா என்ற இரு தீவுகள் தோன்றின. படிப்படியாக அந்த உடைப்பு மணலால் மூடப்பட்டுப் பைலாஸ் நிலத்தோடு சேர்க்கப்பட்டு விட்டது. மற்ற உடைப்பு கள் நிரப்பப்படவில்லை யாதலால், ஸ்ப்பேக்ட்டிரியா இன்னும் தீவா கவேயிருக்கிறது. முதலில் பைலாசும் ஸ்ப்பேக்ட்டிரியாவும் பிரிந் திருந்தபோது நிலத்தால் சூழப்பட்ட ஒரு விரிகுடாவின் (Bay) கடற் சுவராக இருந்தது. ஆனுல் வளைவுள்ள மணல் திட்டுகள் படிப்படியாக ஏற்பட்டு, பைலாசின் தெற்கு முனையை ஒரு பெரு நிலப் பகுதியோடு சேர்த்துவிட்டது. மணல் திட்டு டெமோஸ்த்தனிஸ் காலத்தில் ஏற் பட்டதாகச் சொல்ல முடியாது. அந்த மணல் திட்டு தொடர்ச்சி யாகவுள்ள குடாவுக்கு இடையூருக அமைந்திருக்கவில்லை. குடாவின் வடக்கு மூலை—இப்போது சதுப்பு நிலங்களால் சூழப்பட்ட ஓர் உப்பங் கழியாக மாறிவிட்டது. அங்கே கப்பல்கள் தங்குவதற்கு வழி ஏற் பட்டது. குடாவின் மற்றப் பகுதியாகிய தற்கால நவாரிணு குடா— கப்பல்கள் தங்குவதற்கேற்ற இடமாக இல்லை. அந்நீர்ப் பரப் பில், வடக்கு மூலை துறைமுகமென அழைக்கப்பட்டது. அந்தக் குடாவில் இரண்டு வாயில்கள் இருந்தன. குறுகிய நீர்ப் பரப்பொன்று பைலாசை ஸ்ப்பாக்ட்டிரியாவிலிருந்து பிரிக்கிறது. அகன்ற வழி யொன்று ஸ்பாக்ட்டிரியாவைப் பெரு நிலப்பரப்பிலிருந்து பிரிக்கிறது. பைலாஸ் குன்றின் வடபகுதியிலுள்ள மற்ரெரு சிறிய குடாவைப் பற்றியும் நாம் அறிந்து கொள்ளவேண்டும். பைலாசைப் பெரு நிலப் பகுதியோடு சேர்க்கும் அந்த மணல்திட்டு பிறை வடிவமாக இருக் கிறது. தெற்கில் பைலாஸ் என்ற குன்றுக்கும், வடக்கில் வேரெரு குன்றுக்கும் இடையில் பூபராஸ்பேசின் என்ற வட்ட வடிவமான நீர்ப் பரப்பு இருக்கிறது.

பைலாசின் நீளம் ஒரு மைலுக்கும் குறைவு. கடற்பகுதியில் காலடி எடுத்து வைப்பது கடினம். துறைமுகத்தின் பக்கம் செங்குத் தான பாறைகளால் பாதுகாக்கப்பட்டிருக்கின்றது. மூன்று இடங் களில் மட்டுமே சுவர்கள் எழுப்ப வேண்டியிருந்தது; 1. செங்குத்துப் பாறை சரிவுற்றுக் கால்வாயை நோக்கிச் சுமார் 100 கெஜ அளவு செல்லும் தென் கிழக்கு மூலையிலும், 2. குடாவின் வாயிலுக்குச் சமீ பத்தில் 400 அல்லது 500 கெஜம் தூரத்திலுள்ள தென் மேற்குப்

பக்கக் கடற்கரையிலும், 3. மேற்குக் கோடியிலே ஒன்றுமாக மூன்றிடங்களில் சுவர் எழுப்ப வேண்டியதாயிற்று. அரண்கள் எழுப்பப் பட்டதை போர் வீரர்களில் ஒருவன், தூசிடைடிசுக்கு விவரித்துக் கூறினன். பழக்கமான இரும்புக் கருவிகள் போர் வீரர்களுக்குக் கொடுக்கப்படவில்லை. அவர்கள் கற்களைச் சேகரித்துக் கொண்டு




படம் 7. பைலோசும் ஸ்பாக்ட்டீரியாவும் முற்றுகையிடப்படல்

வந்தார்கள். அவைகளை ஒன்றின் மீது ஒன்ருய் அடுக்கினர்கள் காரையை முதுகிற் சுமந்து கொண்டு சென்றார்கள். காரை கீழே விழாதபடி இருகரங்களையும் பின் பக்கம் இணைத்து, குனிந்த நிலையில் அதைச் சுமந்து சென்றார்கள். ஆறு நாட்களில் சுவர்கள் பூர்த்தியாகி

விட்டன. பைலாசு துறைமுகத்தைப் பாதுகாக்க ஐந்து கப்பல்களை டெமாஸ்த்தனிஸ் வசம் விட்டுவிட்டுக் கடற்படை தன் பிரயாணத்தைத் தொடர்ந்தது.

வயல்களில் கதிர்கள் முற்றுவதற்கு முன், வழக்கமான காலத்திற்குச் சற்று முன் கூட்டியே லாசிடோமானியர்கள் அஜிஸ் என்பவனின் தலைமையில் அட்டிக்காவின் மீது படையெடுத்தார்கள். உணவுப் பற்றுமையும், குளிரும், பைலாஸ் துறைமுகத்திலிருந்து வந்த செய்தியும் லாசிடோமோனியர்களை ஸ்ப்பார்ட்டாவுக்குத் திரும்பிப் போகும்படி செய்தன. இரண்டு வாரகாலம் அவர்கள் அட்டிக்காவின் எல்லைகளில் சுற்றித் திரிந்தார்கள். அவர்கள் பைலாஸ் துறைமுகத்துக்கு உடனே புறப்படவில்லை. மற்றொரு ஸ்ப்பார்ட்டன் படை அங்கு அனுப்பப்பட்டது. பெலப்போனீசிய நேசவுறவு நாடுகளின் உதவி கோரப்பட்டது. கார்சிராவில் இருந்த கப்பல்களும் அவசரமாக வரவழைக்கப்பட்டன. சாசின்தாஸ் பிரதேசத்துக்கு அப்பொழுதுதான் வந்து சேர்ந்த அத்தினியக் கப்பல்களிடமிருந்து அவைகள் தப்பிச் சென்றன. அதே சமயத்தில் ஸ்பார்ட்டன் போர் வீரர்கள் டெமாஸ்த்தினிஸைத் தாக்கினார்கள். அவன் இரண்டு கலங்களை யூரிமிடானிடம் அனுப்பித் திரும்பி வந்து தனக்கு உதவி செய்யக் கோரினான்.

பைலோசின் குன்றை கடல், தரை இரு பக்கங்களிலுமிருந்து முற்றுகையிட்டு அத்தினியர்களின் உதவிப் படை வராமல் தடுத்து நிறுத்துவதே லாசிடோமோனியர்களின் நோக்கமாகும். கப்பல்கள் எதுவும் பூபராஸ் குடாவில் புகுந்து அத்தீனியர்களுக்கு உதவியளிக்க முடியாவண்ணம், அவர்கள் தங்கள் காவற் படையைப் பைலோஸ் தீவின் வடக்குப் பகுதியில் நிறுத்தினார்கள். மேலும் ஸ்பாக்ட்டேரிய திவை அத்தினியர்கள் பிடித்து, அதைத் தங்கள் போர் நடவடிக்கைகளுக்கு ஆதாரமாக்கிக் கொள்வார்களோ என்று பயந்தனர். 420 ஸ்ப்பார்ட்டன்களும் அவர்களுடைய பணியாட்களும் எபிடாடாஸ் என்பவனின் தலைமையின்கீழ் சென்று அத் தீவைக் கைப்பற்றினார்கள். பைலோசுக்கும் அத் தீவுக்கு மிடையேயுள்ள அக் குடாவின் வாயில் குறுகியதா யிருந்தபடியால் அதை அடைத்து விடுவது மிகவும் எளிதானதுதான். அதனால் ஏற்படும் அனுகூலம் மிகச் சொற்பமே ஏனென்றால் அத்தினியக் கப்பல்கள் தீவின் பக்கத்திலிருந்த முக்கால் மைல் அகலமுள்ள வாயில் மூலமாக உட்புகும் வாய்ப்பு இருந்தது. சிறிய கப்பற் படை நுழைந்துவிட முடியாதபடி அவ் வாயில் அவ்வளவு அகலமாக இருந்தது.

லாசிடோமோனியர்கள், அத்தினியர்களுக்கு உதவ வருவதற்கு முன்னதாகவே அந்த இடத்தைத் தாக்க வேண்டியதற்கான முன்

னேற்பாடுகளைச் செய்தார்கள். டெமொஸ்த்தனிஸ் வடக்குப் பாது காப்பு அணியையும் தென்கிழக்கு மூலை அணியையும், காப்பதற் காகத் தன்னுடைய படையின் பெரும் பகுதியை அங்கே நிறுத்தினுன். தென் மேற்குப் பகுதியின் கடற்கரை ஒரு அபாயகரமான பாறை; எதிரியின் அப் பகுதியில் இறங்கி, தாக்குதல் நடத்தலாம் என்று கருதி, 60 வீரர்களும், சில வில் வீரர்களும் கொண்ட ஒரு சிறிய படையுடன் அந்த இடத்தை டெமஸ்தினிஸ் காவல் புரிந்து வந்தான். ஸ்ப்பார்ட்ட னுடைய, கடற்படைத் தலைவன் திராசிமெலிடாஸ் (Thrasymelidas) தன்னிடமுள்ள 43 போர்க் கப்பல்களைப் படிப்படியாக அங்கே கொண்டுவந்தான். கடற் பாறைத் தொடரில் கப்பல் செலுத்துவது அபாயமாக இருந்தது. அவைகளில் ஒரு கப்பலை நடத்திச் சென்ற (Brasidas) பிரேசிடாஸ் என்பவன் முன்னணி வீரனுக இருந்தான். பாறைப் பகுதியிலிருந்து பின் வாங்கப் போவதாகத் தோன்றிய சில வீரரைக் கண்டு அவன் கூறியதாவது : ' மரக் கலங்களில் ஒன்றை யும் தப்பவிடாதீர்கள். பகைவன் உங்கள் நாட்டிலேயே ஒரு கோட்டையைக் கட்டி யிருக்கிறுன். கப்பல்களை அழித்து எதிரிகளைக் கரையில் ஏற்றவும்'. அவன் கப்பலிலிருந்து இறங்க முயன்றபோது காயமுற்றுன். தன்னுடைய கேடயத்தை இழந்தான். அக் கேடயம் கரையோரமாக ஒதுக்கப்பட்டது. அத்தீனியர்கள் அதைப் பின்னுல் எழுப்பிய வெற்றிச் சின்னத்தில் புதைத்து வைத்தார்கள். இரண்டு நாட்கள் தொடர்ச்சியாக நடைபெற்ற ஸ்ப்பார்ட்டன் தாக்குதல் இறுதியில் முறியடிக்கப்பட்டது. லாசிடோமோனியர்கள் தங்கள் சொந்த மண்ணில் இறங்குவதற்காகக் கடல் மூலமாக நடத்திய தாக்குதலை அத்தீனியர்கள் முறியடித்தது ஒரு அரியவாய்ப்பு என்றே கூறவேண்டுமென தூசிடைடிஸ் கூறுகிறுன். ஏனென்றுல் அக் காலத் தில் ஹெல்லாசில் லாசிடோமோனியர்கள் தரையில் சிறப்பான வீரர்கள் என்று அழைக்கப்பட்டனர். அவர்களுக்குக் கிடைத்த தனிச் சிறப்பாக அதனைக் கருதினுர்கள். அதைப்போலவே அத்தீனி யர்களும் தங்கள் நாட்டை நாவாய் வலிமையுள்ள நாடென்று அழைக் கப்படுவதைத் தங்களுக்குக் கிடைத்த தனிச் சிறப்பாகக் கருதி னுர்கள்.

சாசிந்தஸிலிருந்த கடற்படை இப்போது வந்து சேர்ந்ததால், அத்தீனியர் படை அதிகமாகியது. அது சாசிந்தஸ் தீவிலிருந்து புறப் பட்டுப் பைலோசுக்கு வந்து சேர்ந்தது. பூபாரஸ் குடாவின் கரை களும் ஸ்ப்பாக்ட்டேரியா தீவும் ஆக்கிரமிப்பிலிருப்பதை யறிந்து, அக் கடற்படை அன்றிரவைச் சில மைல் தூரத்திலுள்ள பொரோட்டி (Prote) தீவில் கழித்தது. அடுத்த நாட் காலையில், பகைவன் தங்களைத் தாக்குவதற்கு வெளியே வராவிடில் துறைமுகத்தினுள் புகுந்து விடுவதென்ற தீர்மானத்துடன் அவைகள் திரும்பி வந்தன.

லாசிடோமோனியர்கள் குடாவினுள்ளேயே போரிடும் நோக்கத்துடன் முன்னேற்பாடுகள் செய்து கொண்டிருந்தார்கள். ஆகையினல் அத்தினியர்கள் இரு வாயில்களின் வழியே குடாவினுள் புகுந்தார்கள். குடாவுக்கு வெளியே வர முயன்ற விரோதியின் கப்பல்களில் சில அத்தினியர்களால் கைப்பற்றப்பட்டன.

குடாவின் கரைக்கு அருகில் ஒரு பெரிய போராட்டம் நடந்தது. தரை தட்டிய லாசிடோமோனியர்களின் கப்பல்களைத் தங்களுடைய துறைமுகப் போர்க் கப்பல்களைக் கொண்டு நீரினுள் இழுத்தார்கள்; அவைகளைத் தங்களுக்குச் சொந்த மாக்கிக்கொள்ள முயன்றார்கள். அதைக் கண்ட லாசிடோமோனியர்கள் பாய்ந்து வந்து அவர்களுடைய முயற்சியைத் தடுத்தார்கள். அந்தக் கப்பல்களை அத்தீனியர்கள் கைப்பற்றினல் ஸ்ப்பாக்ட்டேரியா தீவிலுள்ளவர்கள் பாதிக்கப்படுவார்கள் என்பதை லாசிடேமோனியர்கள் அறிவார்கள். பெரும் பகுதிக் கப்பல்கள் மீட்கப்பட்டன. கப்பல்கள் பல அழிந்து விட்டதனல் அத்தீனியர்கள் ஸ்பாக்ட்டேரியாவை முற்றுகையிட உதவியாக இருந்தது.

இந்தக் கதை இப்போது பைலோசிலிருந்து ஸ்ப்பாக்ட்டேரியா நிகழ்ச்சிக்குப் போகின்றது. பைலோசில் ஸ்ப்பார்ட்டன் வீரர்கள் டெமாஸ்த்தனிசையும் அவனுடைய அத்தீனிய வீரர்களையும் முதலில் வளைத்துக்கொண்டனர். பின்னர் எப்பிட்டாடஸும் அவனுடைய ஸ்ப்பார்ட்டன் வீரர்களும் இருந்த ஸ்ப்பாக்ட்டேரியா அத்தீனியர்களால் முற்றுகை யிடப்பட்டது இச் செய்தியைக் கேட்டு ஸ்ப்பார்ட்டா அதிர்ச்சியுற்றது. நீதிமன்றத் தலைவர்கள் நிலைமையை நேரில் அறிந்துகொள்வதற்கு அங்கு வந்தார்கள். அத் தீவை மீட்க ஒன்றுமே செய்ய இயலாதென்பதை அறிந்து, ஏதென்சுக்குச் சில அரசியல் தூதுவர்களை அனுப்பினர்கள். சமாதானம் செய்துகொள்ள விரும்பி டெமோஸ்த்தனிசிடம் தற்காலிகப் போர் நிறுத்த ஒப்பந்தமொன்றைச் செய்துகொண்டார்கள். அந்த உடன்படிக்கையின் நிபந்தனைகளாவன :

லாசிடோமோனியர்கள், பைலோசில் போரில் ஈடுபட்ட ஸ்ப்பார்ட்டன் போர்க் கப்பல்களை அத்தீனியர்களிடம் ஒப்படைத்து விட வேண்டும்; லாக்கோனியாவிலுள்ள பிற போர்க்கப்பல்களை அங்குக் கொண்டு வந்து அவர்களிடமே சேர்ப்பிக்க வேண்டும். அந்தக் கோட்டையை ஸ்ப்பார்ட்டர்கள் தரை மூலமாகவோ, அல்லது கடல் மூலமாகவோ தாக்கக் கூடாது. கரைப்பகுதியிலிருந்த லாசிடமோனியர்கள் குறிப்பிட்ட ஓர் அளவுள்ள பிசைந்த மாவையே, தீவிலிருக்கும் மக்களுக்கு அனுப்பலாம்.

அதாவது ஒரு போர் வீரனுக்கு இரண்டு 'பைன்ட்' அளவுள்ள பார்லி உணவும், ஒரு பைன்ட் திராட்சை ரசமும், ஒரு துண்டு இறைச்சியும் வீதம் அனுப்பலாம். ஒரு வேலையாளுக்கு அந்த அளவில் பாதியே அனுப்பலாம். அவைகள் அந்தத் தீவிலுள்ளவர்களுக்கு அத்தீனியர்களின் கண்காணிப்பின் கீழ் அனுப்பப்பட வேண்டும். கப்பல் எதுவும் திருட்டுத்தனமாகத் தப்பிச் செல்லக் கூடாது. முன் போலவே அத்தீனியர்கள் அத் தீவைக் காவல் புரிவார்கள். ஆனால் அவர்கள் நிலப் பகுதியைக் காவல் புரிய மாட்டார்கள். பெலப்போனிசியப் படையைத் தரைமார்க்கமாகவோ, அல்லது கடல் மார்க்கமாகவோ தாக்குதல் கூடாது. அவர்களில் ஏதாவது ஒரு கட்சியினர், அந்த நிபந்தனையின் ஒரு சிறு பகுதியை மீறினாலும், உடன்படிக்கை முறிந்துவிடும். அந்த உடன்படிக்கை லாசிடோமோனிய அரசியல் தூதுவர்கள் எதென்சிலிருந்து திரும்பி வரும் வரையில் நீடித்திருக்கும். அத்தீனியர்கள் அவர்களை அங்கிருந்து ஏதென்சுக்கு எடுத்துச் சென்ற பிறகு கப்பலில் அவர்களைத் திருப்பிக் கொண்டுவர வேண்டும். அவர்கள் திரும்பி வரும்போது, தாற்காலிகமாக ஏற்பட்ட அவ்வுடன்படிக்கை முறிந்துவிடும். அத்தீனியர்கள் ஸ்பார்ட்டன் கப்பல்கள் எந்த நிலையில் தங்களிடம் ஒப்படைக்கப் பட்டனவோ, அதே நிலையில் அவர்களிடம் அவைகளைத் திருப்பிக் கொடுத்துவிட வேண்டும்.

உடன்படிக்கையின் நிபந்தனைகளின்படி 60கப்பல்கள் டெமாஸ்த்தனிஸ் வசம் ஒப்படைக்கப்பட்டன. அரசியல் தூதுவர்கள் ஏதென்ஸ் நகருக்கு அனுப்பப்பட்டார்கள். ஸ்ப்பார்ட்டா சமாதான உடன்படிக்கை செய்துகொள்ள விரும்புவதாகவும், ஏதென்சு பெருந்தன்மையுடன் ஸ்ப்பார்ட்டாவை நடத்த வேண்டுமென்றும், அந்த அரசியல் தூதுவர்கள் கோரினார்கள். அத்தீனியர்களில் பலர் சமாதானத்தை விரும்பினார்கள். ஆனால் ஏதென்சு சபையில் கிளியானுக்குச் செல்வாக்கு மிகுந்திருந்தது. சமாதானக் கட்சியும் நிசியாசும் அவனுடைய அரசியல் எதிரிகள். ஆகையினால் அவன் ஸ்பார்ட்டன் நாட்டினர் ஏற்றுக்கொள்ள முடியாத நிபந்தனைகளைப் பிரேரிக்கும்படி அத்தீனியர்களைத் தூண்டினான். முப்பதாண்டுச் சமாதான உடன்படிக்கையில் ஏற்பட்ட இழிவை அகற்றிவிடவும் இது ஒரு நல்ல வாய்ப்பு. இருபதாண்டுகளுக்கு முன் இழந்த இடங்களைத் மீட்டுக் கொள்ளவும் இது வாய்ப்பாகும். ஸ்பேக்ட்டேரியாவிலுள்ள ஸ்ப்பார்ட்டன் மக்களின் உயிரைக் காப்பாற்ற மெகாரிடின் துறைமுகங்களாகிய நெசாயா, பாகே (Nisaea and Pagae) இவைகள் மட்டுமல்லாமல், அச்சேயா (Achaea), ட்ரேஜன் (Troezen) முதலியவைகளையும் ஏதென்சிடம் ஒப்படைக்குமாறு கோரப்பட்டது. ஏமாற்றமடைந்த ஸ்ப்பார்ட்டன் அரசியல் தூதுவர்கள் பைலோசுக்குத் திரும்பி வந்தார்கள். அவர்கள் ஏற்

கெனவே செய்து கொண்ட தாற்காலிக உடன்படிக்கை ரத்தாயிற்று. ஒப்பந்தத்தில் ஒரு சிறிய பகுதியை லாசிடோமோனியர்கள் மீறிவிட்ட தாகப் பொய்க் குற்றத்தைக் காட்டி, தங்களிடம் ஒப்படைத்திருந்த 60 ஸ்ப்பார்ட்டன் போர்க் கப்பல்களைத் திருப்பிக் கொடுக்க அத்தீனியர்கள் மறுத்து விட்டார்கள்.

அத்தினியர்கள் எதிர்பார்த்ததைவிட அந்த முற்றுகை நீண்டதும் மிகவும்கடினமானதுமாகஇருந்தது. ஏதென்சு, படையைவலுப்படுத்த மூன்றடுக்குத் துடுப்புக்கொண்ட இருபது கப்பல்களை பைலோசுக்கு அனுப்பியது. அவைகள் அந்தத் தீவைச் சுற்றிலும், கடலில் பலத்த காற்றில்லாத சமயத்தில் குடாவில் நிறுத்தி வைக்கப்பட்டன. ஸ்ப்பார்ட்டர்கள் அவர்களுடைய காவலைக் கடந்து ஸ்ப்பாக்ட்டேரியா தீவிலுள்ள ஸ்ப்பார்ட்டன் வீரர்களுக்கு உணவுப் பண்டங்களை இரகசியமாகக் கொடுத்து வந்தார்கள். அத் தீவுக்கு உணவு, திராட்சை ரசம், வெண்ணெய் முதலியவைகளை எடுத்துச் செல்லுகின்றவர்களுக்குப் பெருந் தொகைகள் கொடுக்கப்பட்டன. அவ்வாறு சேவை செய்த அடிமைகளுக்கு விடுதலை வழங்கப்பட்டது. மேற்கிலிருந்தோ, வடக்கிலிருந்தோ வீசும் பெருங்காற்று அத்தீனியர்களின் காவல் கப்பல்களைக் குடாவுக்குள் தள்ளும் போது, உணவுப் பண்டங்களை எடுத்துச் செல்லும் படகுகளின் மாலுமிகள், கடல் பக்கத்திலிருந்த கடற்கரையில் அடித்துத்தள்ளப்பட்டார்கள். திறமை மிக்க முத்துக் குளிப்பவர்கள் அத் தீவுக்குத் தேன் கலந்த கசகசா விதைகளையும், தூளாக்கப்பட்ட ஆளி விதைகளையும் தோல்களில் சுமந்து எடுத்துச் சென்றார்கள். இந்த இருவிதமான திட்டங்களும் கண்டுபிடிக்கப்பட்டுத் தடுக்கப்பட்டன. காற்றுக் கெதிராகச் சரிவர முற்றுகையிட முடியவில்லை. அதைப் பாதுகாக்கும் பணியும் மிக்க அதிருப்தியை உண்டு பண்ணிற்று. அங்கே நங்கூரம் பாய்ச்சுவதற்கேற்ற தகுதியான இடமின்மையால் மாலுமிகள் ஒருவர் பின் ஒருவராய்த் தரையில் இறங்கி உணவு உட்கொள்ள நேர்ந்தது. பொதுவாக ஸ்ப்பார்ட்டன்களால் ஆக்கிரமிக்கப்படாத ஸ்ப்பாக்ட்டேரியாவின் தென் பகுதியில் இது நடந்தது. பைலோஸ் கோட்டையிலிருந்த கிணறு ஒன்றைத்தான் குடி நீருக்காக நம்பியிருந்தார்கள். உணவுப் பொருள்கள் பெலப்போனிசியாவை சுற்றி வந்து கொடுக்கும் நிலைமையினால், உணவு சரிவர வழங்கப்படவில்லை.

நீண்ட நாள் முற்றுகையால் சோர்வடைந்து ஏதென்ஸ் பொறுமையை இழந்தது. லாசிடோமோனியர்களின் சமாதானத் திட்டங்களுக்கு இணங்கி வராததை நினைத்து அம்மக்கள் வருந்தினார்கள். கிளியானுக்கு எதிராக எதிர்ப்பு உணர்ச்சி ஏற்பட்டது. அரசியல்

வாதியாகிய கிளியான் பைலாசிலிருந்து வந்த செய்திகளை மறுப்பதற்கான துணிகர நடவடிக்கைகளில் ஈடுபட்டான். கிளியான், படைத் தலைவர்கள் மனிதர்களானால் உடனே அத் தீவில் படையை இறக்கி அதைக் கைப்பற்றுவார்கள் என்று அழுத்தமாகக் கூறினான். ‘நான் படைத்தலைவனாக இருந்திருப்பேனாகில் நானே அதைச் செய்திருப்பேன்’ என்று அவன் சொன்னான். தொடர்ந்து அச் சபையில் நடந்த நிகழ்ச்சியை, ஒரு அரிதான நூல் விவரிக்கின்றது. மிகக் குறைவான விளக்கம்தரும் சரித்திர விரிவுரையாளர்களும் கூட தன்னிலையிலிருந்து இறங்கி வெறுப்பை வெளிப்படையாகக் காட்ட முற்படுவர். கிளியானைப் பற்றி மக்கள் முணுமுணுப்பதைக் கேட்ட நிசியாஸ் எழுந்து நின்றான். கிளியானுக்கு எவ்வளவு பெரிய படை வேண்டுமானாலும் தருவதாகவும், கிளியான்செயலில் ஈடுபடவேண்டுமென்றும் நிசியாஸ் சொன்னான். கிளியான் நிசியாஸ் சொன்னது வெறும் நடிப்பு என்று கருதினான். படைக்குத் தலைமைத் தாங்கிச் செல்ல இசைந்தான். பிறகு நிசியாஸ் சொன்னது உண்மை என்பதைக் கிளியான் உணர்ந்து, நிசியாசையே படைக்குத் தலைமை தாங்கிச் செல்லுமாறு கூறினான். நிசியாஸ் தன்னுடைய பதவியை தனக்குக் கொடுப்பான் என்பதை கிளியான் எதிர்பார்க்கவில்லை. ஆகவே கிளியான் அதிர்ச்சியுற்றான். நிசியாஸ் சபையின் முன் தன்னுடைய படைத் தலைமையை விட்டுவிட்டபடியால் பைலோசுக்குப் படைத் தாங்கிச் செல்லும்படி நிசியாஸ், கிளியானுக்கு மறுபடியும் கட்டளையிட்டான். கிளியான் எவ்வளவுக்கெவ்வளவு கொடுக்கப்பட்ட கட்டளைக்குக் கீழ்ப்படியாமல் தான் சொன்னவைகளை மறுக்க ஆரம்பித்தானோ, அவ்வளவுக்கு அங்குக் கூடியிருந்தவர்கள் நிசியாசைப் பதவியைத் துறந்துவிட வேண்டும், கிளியான் போர்முனைக்குப் போக வேண்டுமென வற்புறுத்தினார்கள் முடிவில் கிளியான், தான் சொன்ன வார்த்தைகளிலிருந்து தப்பித்துக் கொள்ளும் வகை அறியாமல் படைக்குத் தலைமை தாங்கிச்செல்ல இசைந்தான். லாசிடேமோனியர்களிடம் தனக்குப் பயமில்லை என்றும் ஒரு மனிதனைக்கூட உதவிக்கு நகரத்திலிருந்து எடுத்துச் செல்வதில்லை என்றும், தன்னுடன் ஏதென்சிலிருந்த லெம்னியான் படையையும் இம்பிரியன் படையையும் அயினிஸிலிருந்து (Aenus) குறி தவறாது பாயும் உதவிப் படையையும், 400 வில்லாளிகளையும் அனுப்பும்படிக் கேட்டான். இந்தப் போர் வீரர்களையும் பைலோசிலுள்ள போர் வீரர்களையும் கொண்டு லாசிடேமோனியர்களை உயிரோடு கொண்டு வருவேன் அல்லது கொன்றுவிட்டு வருவேன் என்று சூளுரைத்தான். தற்பெருமை கொண்ட கிளியானுடைய வார்த்தைகளைக் கேட்டு அங்கிருந்தவர்கள் நகைத்தார்கள். கிளியானுடைய படையெடுப்பில் ஒன்று லாசிடேமோனியர்கள் உயிரோடு ஒப்படைக்கப்படவேண்டும், அல்லது கிளியான் ஒழிந்துபோகவேண்டுமென அம் மக்களில் அறிவு

மிக்குடையார் எண்ணினர். அவை இரண்டில் ஒன்று நடக்கப்போவது உறுதி என நம்பினார்கள்.

அந்தக் கதை நம்பத்தகாத அளவு சுவையாக இருக்கிறது. கிளியான் படைத் தலைமையை விரும்பினதனால் கிடைத்ததோ, அல்லது படைத்தலைமை அவன் விருப்பத்திற்கு மாறாக அவன்மேல் திணிக்கப் பட்டிருந்ததா என்பது ஐயப்பாடே. எனினும், அங்கிருந்தவர்களை நகைக்கச் செய்த அவனுடைய வார்த்தைகள் மட்டும் ஒரு சம்பவத்தினால் விளக்கப்படுகின்றது. தனக்குத் துணையாக டெமெஸ்த்தனிசை அவன் சேர்த்துக்கொண்டான். ஏதென்ஸ் சட்டசபையின் ஒப்புதல் மூலம் படைக்குத் தலைமை தாங்கும் பதவி கிளியானுக்குக் கொடுக்கப்பட்டது. கிளியான் உடனே பைலோசை நோக்கிப் புறப் பட்டான்.

கிளியான் விரும்பியதைப்போலவே, டெமாஸ்த்தனிஸ் போரை சீக்கிரத்தில் ஒரு முடிவுக்குக் கொண்டுவர எண்ணினான். ஸ்பாக்ட்டேரியாவைத் தாக்கத் திட்டமிட்டான். அந்தப் பாலைவனத் தீவு இரண்டே முக்கால் மைல் நீளமுள்ளது. பைலாசின் உயரமான பகுதியைவிட உயரமான ஒரு குன்று அத் தீவின் வடகோடியில் இருக்கிறது. கிழக்குப் பக்கத்தில் குடாவை நோக்கி ஓர் பாறை சாய்வாக அமைந்திருக்கின்றது. சில ஸ்ப்பார்ட்டன் வீரர்கள் குன்றின் உச்சியில் இருந்தார்கள். மற்றவர்கள் தீவின் நடுவில்மட்டுமிருந்த ஓர் கிணற்றைச் சுற்றிலும் தங்கி இருந்தார்கள். தெற்கில் மிகத் தூரத்திலிருந்த ஓர் குன்றின்மீது காவல் நிலையம் அமைக்கப் பட்டிருந்தது. இரு பக்கங்களிலும் இறங்கு துறைகள் மோசமாக இருந்தபடியால் அங்கே படையை இறக்கி, தாக்குதல் செய்வது மிகக் கடினமாக இருந்தது. அத் தீவு புதர்கள் நிறைந்த தீவு. ஸ்ப்பார்ட்டன் வீரர்கள் எல்லா இடங்களையும் நன்கு அறிந்திருந்தார்கள். அது அவர்களுக்குக் கிடைத்த ஓர் அனுகூலம். மரங்கள் நிறைந்த இடத்தில் போர் செய்யும் துன்பங்களை எயிட்டாலியா போரில் ஈடுபட்ட டெமெஸ்த்தனீஸ் அறிவான். ஒரு நாள் அத்தீனிய வீரர்கள் தீவின் தென்கரையிலே பகல் உணவு அருந்திக்கொண்டிருந்தபோது, காட்டில் எதிர்பாராத முறையில் தீப்பிடித்துக்கொண்டது. காற்று சாதகமாக இருந்தபடியால் காடு தீயினால் அழிந்து சாம்பலாயிற்று. இதனால் அத்தீனியர்களுக்கு அத் தீவின் இயற்கை நிலையையும், அங்கிருந்த ஸ்ப்பார்ட்டன் வீரர்களின் எண்ணிக்கையையும் அறிந்துகொள்வது எளிதாயிற்று. கிளியான் அங்கு வந்து சேர்ந்தபோது படையெடுக்கும் திட்டம் பூர்த்தியாகிவிட்டது. கிளியானும் டொமோஸ்த்தினீசும் தங்களிடமுள்ள படை வீரர்களை (hoplites) இரவில் சில கப்பல்களில் ஏற்றிச் சென்றார்கள். பொழுது விடிவதற்குள் தீவின் தென்

பகுதியில் லாசிடாமோனியர்களின் காவல் நிலேயத்திற்குப் பக்கத்தி லுள்ள ஓரிடத்தில் இறங்கினுர்கள். அங்கு இறங்கிய அத்தீனியப் படையின் எண்ணிக்கை 14,000. தீவிலிருந்த ஸ்ப்பார்ட்டன் வீரர் களின் தொகை 420. ஸ்ப்பார்ட்டன் வீரர்களோடு அவர்களுடைய அடிமைகளும் அதே அளவில் இருந்தார்கள் இருந்தபோதிலும் அத்தீனியர்களின் அந்த தீரச் செயல் ஓர் பைத்தியக்காரச் செயல் என்று படை அதிகாரி குறிப்பிட்டார். ஸ்ப்பார்ட்டன் படைத்தலே வன் இறங்கு துறைகளில் காவல் வீரர்களே நிறுத்தி, சைகையால் செய்தியனுப்பும் முறையை ஒழுங்குப்படுத்தி தன்னிடமுள்ள அந்த சிறிய படையை நல்ல முறையில் பயன்படுத்தி யிருந்தால் அத்தீனியர் கள் வெற்றியடைவது கடினமாக இருந்திருக்கும்.

காவல் நிலேயம் உடனே கைப்பற்றப்பட்டது. எளிய ஆயுதங்கள் அணிந்த போர் வீரர்கள், ஸ்ப்பார்ட்டன் வீரர்கள் தங்கியிருந்த இடத்தை நோக்கித் தீவின் துறைமுகப் பக்கத்திலுள்ள ஓர் உயர மான பாறை முகட்டின் வழியே முன்னேறிச் சென்ருர்கள். மற்ற வர்கள் கடல் பக்கமுள்ள தாழ்ந்த கரையின் வழியே முன்னேறினுர் கள். காவல் நிலேயம் கைப்பற்றப்பட்டது. காவல் வீரர்கள் கொல் லப்பட்ட செய்தியை அறிந்த ஸ்ப்பார்ட்டன் வீரர்கள் அத்தீனிய வீரர்களே எதிர்த்து தெற்கு நோக்கிச் சென்ருர்கள். அவர்கள் வில்லாளிகளாலும், திசை நோக்கித் தாக்குகிறவர்களாலும் துன்புறுத் தப்பட்டபடியால், எண்ணிக்கையில் அதிகமான வீரர்களால் இக்கட் டான இடத்தில் சுற்றி வளேத்துக்கொள்ளப்பட்டபடியால், தங்கள் எதிரிகளேப் பின்தொடர்ந்து விரட்ட முடியவில்லே. எளிய ஆயுதம் அணிந்த வீரர்களின் எண்ணிக்கை அதிகமானது என்று அத்தீனியர் உணர்ந்ததாலும், எதிரி களேத்துப் போகிருன் என்பதை உணர்ந்த தாலும், அவர்கள் வன்மை படைத்தவர்களாகிவிட்டனர். தூசிடை டிஸ் அக் காட்சியை நேரிற் கண்டதுபோல் தெளிவாக விளக்குகிருன். அம்பும், கல்லும் எதிரிகளால் மழைபோல் வாரி வீசப்பட்டன. அச் சமயத்தில் எரிந்துபோன காட்டிலிருந்து புகைப்படலம் எழும்பி எதிரே நடப்பது என்னதென்று அறியமுடியாத நிலேமை ஏற்பட்டது. அவர்கள் அணிந்திருந்த உடை அம்புகளின் கூர்மையிலிருந்து அவர் களேப் பாதுகாக்க இயலாமல் போய்விட்டது. எதிரிகள் எறிந்த கல், அம்பு முதலியவைகளால் ஸ்ப்பார்ட்டன் வீரர்கள் பெருந்துயரமடைந் தார்கள். கண்களால் எதையும் பார்க்க இயலாமலும், எதிரிகளின் கூச்சலினுலும் தங்கள் தலேவனின் ஆணே காதுகளுக்கு எட்டாதபடி யாலும், அவர்களுக்குத் தாங்கள் என்ன செய்வதென்றே புரிய வில்லே. அவர்களுடைய அழிவு அவர்களே எதிர்நோக்கியிருந் தது. தப்பிப்பிழைக்க அவர்களுக்கு வழியுமில்லே, நம்பிக்கையு மில்லே.

தீவின் வடக்கிலுள்ள உயரமான குன்றை நோக்கிப் போவதெனக் கடைசியாக அவர்கள் தீர்மானித்தனர். அக்குன்றின் அடிவாரம் போய்ச் சேர்வதற்கு ஒரு மைல் தூரம் நடக்க வேண்டியிருந்தது. பாதை மிகக் கடினமானது. சமபலமற்ற யுத்தத்தினுல் விளைந்த துயரத்தோடு, தாகத்தினுலும், களைப்பினுலும், கொடிய வெய்யிலில் மெதுவாகக் குன்றை நோக்கிச் செய்த பிரயாணம் ஸ்ப்பார்ட்டா வீரர்களின் சகிப்புத் தன்மையையும் கட்டுப்பாட்டையும் தெளிவாக எடுத்துக் காட்டியது.

அவர்கள் மலை உச்சியைப் போய்ச் சேர்ந்ததும் யுத்தத்தில் புதிய திருப்பம் ஏற்பட்டது. இன்றைக்கும் காணக்கூடிய ஓர் பழைய சைக்ளோப்பியன் சுவர் அவர்களுக்குத் தற்காப்பின் அரணுயிற்று. லாசிடோமோனியர்கள் தங்களைத் தாக்குகிறவர்களை முறியடிக்கும் சக்தியைப் பெற்ருர்கள். சரணடைவதில்லை என்று அவர்கள் தீர்மானித்து விட்டார்கள். ஓர் மெசானிய வீரன், தனக்குத் தெரிந்த பாதையின் மூலம் பளுவற்ற போராயுதமணிந்த வீரர்களுடன் மலை உச்சியில் லாசிடோமோனியர்களின் பின்புறம் அழைத்துச் செல்ல முடியுமென அத்தினியப் படைத்தலைவர்களுக்குச் சொன்னுன். கிழக்குப் பக்கத்திலுள்ள குன்று, குடாவின் பக்கம் செங்குத்தாக இருக்கிறது. செங்குத்தான பாகம் ஒரே சீராக இல்லை. குன்றின் உச்சி சுமார் ஐம்பது அடி அகலமுள்ள ஓர் பள்ளத்தை நோக்கிச் சரிந்திருக்கிறது. அங்கிருந்து அக் குன்று மறுபடியும் உயர்ந்து பிறகு பாறை வரையில் நீர்ப் பகுதியோடு இணைந்திருக்கிறது. ஆனுல் அந்த செங்குத்தான பாறையின் தென் கோடியில் மலையருவியினுல் உண்டான பாறை இடுக்கு இருக்கிறது. அதன் மூலமாக 50 அடி அகலமுள்ள பள்ளத்தாக்கிற்கு ஏறிச் செல்லமுடியும். மெசானியர்கள் ஓர் படகின் மூலம் கிழக்குப் பக்கம் வந்தார்கள். அங்கிருந்து ஒடுக்கமான வழியில் சிரமப்பட்டு ஏறிச்சென்ருர்கள். அந்த வழியின் மூலமாக விரோதிகள் வரமுடியாது என்று லாசிடோ-மோனியர்கள் நினைத்துக்கொண்டிருந்தார்கள். அவர்களுக்குத் தெரியாமல் மெசானியர்கள் அங்கு வந்து குன்றின் உச்சியில் நின்ருர்கள். லாசிடோமோனியர்கள் மேற்குச் சரிவிலும் வடக்குச் சரிவிலும் அரை வட்டவடிவில் அணிவகுத்து நின்ருர்கள். அத்தினியர்கள் அவர்களைச் சரணடையும்படிச் சொன்னுர்கள். பெருநிலப் பகுதியிலிருந்த தங்களின் நண்பர்களின் ஒப்புதலுடன் ஸ்ப்பார்ட்டன் வீரர்கள் தங்கள் ஆயுதங்களைக் கீழே போட்டு விட்டுச் சரணடைந்தார்கள். நானூற்று இருபது (420) வீரர்களில் உயிரோடிருந்த இருநூற்றுத் தொண்ணூற்று இரண்டு (292) ஸ்ப்பார்ட்டன் வீரர்கள் ஏதென்சுக்குக் கொண்டுவரப் பட்டார்கள். இந்தசரணுகதி ஸ்பார்ட்டன் வீரர்களிடம் உயர்ந்த அபிப்பிராயம் கொண்டிருந்தவர்களுக்கு ஆச்சரியத்தை விளைவித்தது. லாசி

டோமோனிய வீரர்கள் தங்களுடைய ஆயுதங்களை எதிரியிடம் ஒப் படைக்க எதனாலும் இசையமாட்டார்கள் என்று கிரேக்கர்கள் எண்ணியிருந்தார்கள்.

கிளியான் கொடுத்த வாக்குறுதியை நிறைவேற்றினான். இருபது நாட்களுக்குள் கைதிகளைக் கொண்டு வந்தான். அந்த வெற்றி போர் முறையில் முக்கியத்துவம் வாய்ந்ததாக இல்லாவிடினும், அரசியல் முக்கியத்துவம் வாய்ந்தது. அத்தீனியர்களால், பைலோசிலிருந்து லாசிடோமோனியாவை அழித்துவிட முடியும். அதைவிட, அக் கைதிகளை ஏதென்சில் வைத்திருப்பதன் மூலம் லாசிடோமோனியர் கள் அட்டிகாவின்மீது படையெடுப்பதைத் தவிர்க்கலாம்; தங்களுக்கு அனுகூலமான சமாதான உடன்படிக்கைக்கு அவர்களை இணங்கச் செய்யலாம். அந்த வெற்றி ஓர் சிறப்பான வெற்றி. பெரிக்கிளீஸ் யுத்த ஆரம்பத்தில் வகுத்த திட்டத்தின் அடிப்படையில் பெற்ற அவ் வெற்றி மற்ற யுத்தங்களுக்கு உதாரணமாக இருக்கக்கூடிய ஓர் சிறந்த வெற்றி.

அது கிளியானின் செல்வாக்கை உயர்த்திற்று. நிசியாஸ் தன் புகழை நிலைநாட்ட ஏதாவது செய்தாக வேண்டியிருந்தது. நிசியாஸ் அச் சம்பவம் நடந்த சிறிது நாளைக்குள் கோரிந்திய நாட்டின்மீது படையெடுத்துச் சென்றான். அவன் சோலிகோயி என்ற விடத்தில் வெற்றிசூடினான். பிறகு ட்ரோஜனுக்கும் எபிடாரசுக்கும் (Troezen and Epidaurus) இடையிலுள்ள மெதோன் (Methone) தீபகற்பத்தை நோக்கிச் சென்றான். நில முனைக்குக் குறுக்காக ஓர் கோட்டையைக் கட்டி அதனுள் போர்வீரர்களை நிறுத்தி வைத்தான்.

அடுத்த ஆண்டில் சித்தேரா (Cythera) தீவைக் கைப்பற்றினான். அங்கிருந்து அவன் ல்லாக்கோனியாவுக்குள் (Laconia) புகமுடிந்தது. ஸ்ப்பார்ட்டன் நாட்டினர் பைலோசை இழந்ததைவிட சித்தேராவை இழந்ததைப் பெரும் இழப்பாகக் கருதினர். என்றாலும் அதனுடன் சம்பந்தப்பட்ட சூழ்நிலைகளால், முதல் இழப்பே நாட்டில் பரபரப்பை விளைவித்தது. அத்தீனியர்கள் பெலப்போனீசியாமீது படையெடுப்ப தற்குச் சாதகமாக பைலோஸ், சித்தேரா, மெதோன் ஆகிய மூன்று மூலதளங்கள் கிடைத்தன.

ஸ்ப்பார்ட்டன் நாட்டினருக்கு நேர்ந்த இழப்பைக் கண்டு, மிக்க மகிழ்ச்சியடைந்தவர்கள் நாடுகடத்தப்பட்ட மெஸானியர்களே. ஏனெனில், அன்று நடந்த மறக்கமுடியாத போரில் முதன்மையான பங்கெடுத்துக் கொண்டவர்கள் அவர்களே. ஒலிம்பியாவில் வெற்றி யின் சின்னம் ஒன்றிருக்கிறது. காற்றினால் அசையும் திரைச் சீலை

அச் சின்னத்தின் மேலே பறந்து கொண்டிருக்கின்றது. அதற்கு கீழே ஓர் கழுகு வட்டமிட்டுக் கொண்டிருக்கின்றது. அது (Paeonius) பேயோனியல் என்ற சிற்பக்கலைஞனுடைய வேலைப்பாடு. சீயஸ் என்ற தெய்வத்தின் ஆலயமாகிய அல்ட்டிசிக்கு, மெசானியர்கள் அதைக் கொடுத்தனர். அந்த சிலையையும், தங்களால் வெறுக்கப்பட்ட பகைவனுடைய நாட்டிலிருந்து கொண்டுவந்த கொள்ளைப் பொருளில் ஒரு பாகத்தையும் அக் கோயிலுக்குக் கொடுத்தார்கள்.

## 11. நிசாயியாவை அத்தீனியர்கள் கைப்பற்றியது

போர் நடந்த ஏழாண்டுகளில், இரண்டு ஆண்டுகளைத் தவிர, மற்ற ஒவ்வோராண்டும் அட்டிகாவின்மீது படையெடுப்பு நடந்தது. அவ்விரண்டு வருடங்களில், ஒரு தடவை பிளெட்டேயா தாக்கப்பட்டது. மற்றொரு தடவை, பெலப்போனீசியப் படை பூகம்பத்தினால் நிலமுனையைத் (isthmus) தாண்டி அட்டிகாவில் அடியெடுத்து வைக்க முடியவில்லை. பெலப்போனீசியர்களுடைய நடவடிக்கைகளுக்கு ஈடுசெய்ய, அத்தீனியர்கள் மெகாரிட் (Megarid) நாட்டை ஆண்டுக்கு இருமுறை, வசந்த காலத்திலும் இலையுதிர் காலத்திலும் தாக்கினார்கள். பைலோஸ் வீழ்ச்சியினால் ஆண்டுதோறும் நடைபெறும் இரு சம்பவங்களும் பாதிக்கப்பட்டன. ஸ்ப்பார்ட்டன் கைதிகளைப் பிணையாக வைத்திருந்தபடியால். ஏதென்ஸ், அட்டிகாவின் மீது ஆண்டுதோறும் நடத்தும் படையெடுப்பு நிறுத்தப்பட்டது. வெற்றியினால் ஏற்பட்ட தற்பெருமை அத்தீனியர்களை மெகாராவின் மீது துணிகர நடவடிக்கை எடுக்கும்படித் தூண்டிவிட்டது.

மீனோயா (Minoa) இப்பொழுது பெருநிலப் பகுதியில் ஓர் குன்று. ஆனால் அக் காலத்தில் அது ஓர் தீவு. அது நிசாயி துறைமுக வாயிலில் இருக்கிறது. வெளியே நீட்டிக் கொண்டிருந்த இரு கோபுரங்களால் பாதுகாக்கப்பட்ட ஓர் குறுகிய கால்வாய் அதை நிசாயிலிருந்து பிரித்திருந்தது. நிசியாஸ் (Nicias) மூன்றாண்டுகளுக்கு முன் அக் கோபுரங்களை அழித்து, மீனோயில் பலமுள்ள ஓர் கோட்டையைக் கட்டியிருந்தான். மெகாரியர்கள் பாகாய் துறைமுகத்தையும் கிரிசன் குடாவையும் தங்கள் போக்குவரத்துக்காக நம்பியிருந்தனர். அதனால் அவர்கள் கடினமாக ஒடுக்கப்பட்டார்கள். அச் சம்பவம் நடந்த ஈராண்டுகளுக்குப் பின் நடிக்கப்பட்ட, அச்சரினியன் என்ற (Acharnians) நாடகம், அவர்கள் அடைந்த துயரத்தை விளக்கிக் காட்டுவதாயிருந்தது. கற்பு நெறி தவறியதற்காக ஓர் சிறிய கட்சி நாடு கடத்தப்பட்டது. அக் கட்சியினர் பாகேயி (Pagae) துறைமுகத்தைக் கைப்பற்றினர். அதனால் மெகாராவின் உணவுப் பண்டங்கள்

பெற்றுவந்த போக்கு வரத்து துண்டிக்கப்பட்டது. நாடு கடத்தப் பட்டவர்களைத் திரும்பி வரும்படிச் சொல்வதா? அல்லது ஏதென்சுக் குப் பணிந்து போவதா? என்ற பிரச்சினை எழும்பிற்று. நாடு கடத்தப் பட்ட விரோதிகள் பாகேயிலிருந்து வருவதனுல் ஏற்படும் அபாயத்தை அறிந்தவர்கள், ஏதென்சுடன் இரகசியமாக உறவு கொண்டு, மெகாராவையும், நிசேயாவையும் காட்டிக் கொடுப்பதற்கு முன் வந் தார்கள். அந்த நீண்ட சுவர்களும் (The Long Walls) நிசாயாவும் பெலப் போனீசியக் காவல்படை வீரர்களிடமிருந்தது. தளகர்த்தர்கள் ஹிப் போகிரேட்டஸ், டெமெஸ்த்தனிஸ் (Hippocrates and Demosthenes) ஆகிய இருவரும் ஓர் துணிவுள்ள நடவடிக்கைக்கான ஏற்பாடுகளைச் செய்தார்கள். தரைமார்க்கமாக 4000 போர் வீரர்களும் 600 குதிரை வீரர்களும் எலுசிஸ்ஸில் (Eleusis) முன்னேறிக் கொண்டிருந்தபோது அவ்விரு படைத்தலைவர்களும் கடல் மார்க்கமாக மீனேயிக்குச் (Minoa) சென்றுர்கள். இரவில் அவர்கள் பெருநிலப் பகுதியை அடைந்தார்கள். நிசியா எழுப்பிய அரணுக்குப் பக்கத்தில் ஓர் வாயில் இருந்தது. செங்கற்கள் செய்வதற்காக மண் தோண்டியதனுல் ஏற் பட்ட பள்ளம் அவ் வாயிலருகே இருந்தது. ஹிப்போகிரேட்டஸ் (Hippocrates) 600 போர் வீரர்களுடன் அங்கு ஒளிந்திருந்தான். அதே சமயத்தில் பளுக்குறைவுள்ள ஆயுதம் தாங்கிய அட்டிகாவின் பெரிப் போலியி அல்லது பேட்ரோலர்கள் (Peripoloi or Patrollers) என்ற வீரர்களுடனும் பிளெட்டிய வீரர்களுடனும், யுத்த தேவதையாகிய என்யாலியாஸ் ஆலயத்துக் கருகில் அணி வகுத்து நின்றுன். சதி காரர்கள் அத்தீனியர்களை உள்ளே அனுமதிப்பதற்கு நீண்ட நாளாகத் திட்டமிட்டிருந்தார்கள். மீனேயின் ஆக்கிரமிப்பால் படகு எதுவும் துறைமுகத்தை விட்டு வெளியே வரத் தடையிருந்தபடியால் இந்த வாயில் மூலமாக வண்டியில் ஒரு படகைக் கடற்கரைக்கு எடுத்துச் செல்ல பெலப்போனீசியப் படைத் தலைவனின் அனுமதி யைப் பெற்றுர்கள். நிசேயாவைச் சூழ்ந்திருந்த குழியின் வழியாக அப் படகைச் சில நாட்களாகக் கடலுக்குக் கொண்டு போவதும் பொழுது விடியுமுன் திரும்பிக் கொண்டு விடுவதுமாக இருந்தார்கள். இந்த செயல் லாசிடோமோனியர்களுக்கு எவ்வித ஐயப்பாட்டையும் உண்டாக்கவில்லை. ஓர் நாள் இரவு படகு திரும்பி வந்தது. கோட்டை யின் கதவு திறக்கப்பட்டது. உடனே மெகாரியர்களின் உதவியினுல் டெமோஸ்த்தனிஸ் பாய்ந்து வந்து, கோட்டையினுள் நுழைந்தான். ஹிப்போகிரேட்டஸ் வரும் வரையில் வாயிலின் கதவுகள் திறந்திருந் தன. அவர்கள் உள்ளே பிரவேசித்தவுடன் அந்த நீண்ட சுவர்களும் (the Long Walls) ஆக்கிரமிக்கப்பட்டன. கோட்டையைக் காவல் புரிந்த வர்கள் நெசாயாவை நோக்கிப் பின்வாங்கிச் சென்றுர்கள். காலையில் அத்தீனியப்படை வந்து சேர்ந்தது. மெகாராவைக் காட்டிக்கொடுக் கும் சதித்திட்டம் நிறைவேற்றப்பட்டது. சதிகாரர்கள் அத்தீனியர்

களுடன் சேர்ந்து தாக்கும்படி தங்கள் நாட்டு வீரர்களைத் தூண்டி விட்டார்கள். அங்கே நடந்த சண்டையின்போது அத்தீனியர்கள் தங்களைக் கொல்லா வண்ணம் எண்ணெய் பூசிக் கொண்டு நின்றார்கள். எண்ணெய் பூசிய சதிகாரர்களை அத்தீனிய வீரர்கள் கொல்லாது விட்டுவிடுவார்கள். அவர்களது சதித்திட்டத்தை அறிந்த மெகாரா மக்கள் வாயிற்கதவை விரைந்து சென்று மூடினார்கள். அதைத் திறக்க முடியாதபடித் தடுத்து விட்டார்கள். பட்டணத்துக்குள் இருந்த உள் எதிரியை:முறியடிக்க ஆரம்பித்தார்கள். கோட்டைக் கதவு சாத்தப்பட்டிருந்தபடியால் அத்தீனியர்கள் தங்கள் நண்பர்களுக்கு உதவி செய்ய முடியவில்லை. தங்கள் நண்பர்கள் ஏய்க்கப்பட்டார்கள் என்று அத்தீனியர்கள் அறிந்து கொண்டார்கள். உடனே அவர்கள் நிசாயாவை முற்றுகை யிட்டார்கள். அவர்களைப் பட்டினி போட்டுப் பணியவைக்கப் பட்டினத்தைச் சுற்றிலும் பலமான ஓர் சுவரை இரண்டு நாளைக்குள் எழுப்பினார்கள். உணவுப் பற்றுக் குறை காரணமாக நிசாயா சரணடைந்தது. மறுபடியும் நிசாயா அத்தீனியர்கள் வசம் வந்து விட்டது. ஸ்பார்ட்டன் படைத்தலைவன் பிராசிடாஸ், வடகிழக்கு பெலப்போனீசியாவில், தெரேஸ் மீது போர் தொடுக்கப் படை திரட்டிக் கொண்டிருந்தான். அவன் மெகரா மக்களின் மீட்புக்காக விரைந்து வந்தான். வெற்றி தேல்வி இல்லாத சிறு போர் ஒன்று அங்கே நடந்தது. அத்தீனியர்களும் யுத்தத்தை விரும்பவில்லை. அவர்கள் நிசாயாவைக் கைப்பற்றியதுடன் திருப்தியடைந்தார்கள். அந் நிகழ்ச்சிக்குப் பின் மெகாராவில் ஓர் புரட்சி ஏற்பட்டது. நாடு கடத்தப்பட்டு பாகேயில் (Pagae) இருந்த அகதிகள் திரும்பி வருவதற்கு அனுமதிக்கப்பட்டனர். திரும்பி வந்தவர்கள் தங்களுடைய பகைவர்களைக் கொன்று, அரசாங்கத்தைக் கைப்பற்றினர். சிறுகுழுவாட்சி (oligarchy) அந் நாட்டில் ஏற்படுத்தப்பட்டது. அப் புதிய அரசியல் அமைப்பு நீண்ட நாள் நிலைத்திருந்ததாக தூசிடைடிஸ் கூறிகிறான்.

## 12. போயிஷாவில் ஏதென்ஸின் தோல்வி

முப்பதாண்டுச் சமாதான உடன் படிக்கையின் மூலமாக இழந்து போன நிசாயாவை மீண்டும் கைப்பற்றியது ஓர் சிறந்த வெற்றியே. பேராசை கொண்ட அவ்விரு அத்தீனியப் படைத்தலைவர்கள் அவ்வுடன்படிக்கையால் இழந்துபோன மற்ற இடங்களையும் கைப்பற்ற விரும்பினார்கள். படைத்தலைவர்களாகிய ஹிப்போகிரட்டீஸும் டெமோஸ்தினீஸும் கொரோனியாவை (Coronea) மீண்டும் கைப்பற்றுவதற்கான திட்டங்களை வகுக்கும்படி ஆதென்சைத் தூண்டினார்கள். போயிஷா, மெகாராவைப் போன்ற நாடல்ல. போயிஷா

வைத் தாக்க முயல்வது, பெரிக்கிளீசினல் முடியாதென்று கைவிடப் பட்ட பழைய கொள்கையாகும். மீண்டும் அக் கொள்கையைப் பின் பற்ற முன் வருவது ஓர் மதியீனமாகும்.

இரண்டாம் ஒனோபிட்டா வைப்பற்றி (Oenophyta) மீண்டும் கனவு காண்பது, கோரோனியாவைப்பற்றிய இரண்டாம் கனவை விடப் பயங்கரமானது. அந்த தீரச்செயல், பெரிக்கிளீசின் அரசியல் தந்திரத்திற்கு முரணானது. அதை எதிர்த்தவர்களில் முதன்மையான வன் ஆனதால் நிசியாஸ் அம் முயற்சியில் ஈடுபடவில்லை. அத்துடன் தெரேசிஸ் பகுதியின் பாதுகாப்பு ஆபத்தாக இருந்ததால் ஏதென்ஸி னுடைய முழு கவனம் தெரேசை நோக்கி இருந்திருக்க வேண்டும். மெகாராவைப் போன்று போயிஷாவிலும் சிறுகுழு ஆட்சியை அழித்து மக்களாட்சியை நிலைநாட்டவும், போயிஷாவின் கூட் டமைப்பைக் கலைத்துவிடவும் சிலர் திட்டமிட்டனர். போயிஷா கூட் டமைப்பைக் கலைத்து, குடியரசு ஆட்சியை நிறுவ இதனை வாய்ப்பாக அத்தீனியர் கருதினர். அந்த சமயத்தில் போயிஷாக் கூட்டமைப்பு பதினொரு போயிட்டார்ச்சுகளாலும் நான்கு குழுவினராலும் நடத் தப்பட்டு வந்தது. போயிட்டார்ச்சுகளில் இருவர் தீபு நாட்டினர். குழுவின் தன்மையும் பணிகளும் யாரும் அறியாத முறையிலிருந்தன.

டெமோஸ்தனீஸ் சம்பந்தப்பட்ட இந்த போயிஷியா புதிய திட் டம் அவன் எட்டோலியாவின் (Aetolia) மீது படையெடுக்கச் செய்த திட்டத்தைப்போல் அவ்வளவு விரிவானதல்ல. ஆனல் ஒரு வகையில் அவ்விரு திட்டங்களும் ஒத்திருந்தன. அவ்விரு படையெடுப்புகளின் நடவடிக்கைகளுக்கு கிரீசியன் குடா முதன்மையான இடமாக இருந் தது. டெமாஸ்த்தினீஸ் நௌபாக்ட்டஸ்க்குச் (Naupaetus) சென்று அகார்னனியன் நாட்டுப் படையைத் திரட்டினன். அவன் ஹெலிக் கான் மலைக்குக் கீழிருந்த ஓர் நில முனையின் கடற்கரையிலுள்ள தெஸ்ப்பியாவின் (Thespiae) துறைமுகமாகிய சிபே (Siphae) என்ற இடத்தைப் பிடிப்பதற்குப் படையெடுத்துப்போகவேண்டியதாயிற்று. அதே நாளில் அத்தீனியப்படை, ஹிப்போகிரேட்ஸ் தலைமையில், போயிஷாவில் வடக்கில் இறங்கவும், யுபேயாவில் (Euboea) லெலாண் டைன் (Lalatine) சமவெளிக்கு எதிரில் கடற்கரையில் அப்போலோ வின் ஆலயமிருந்த டெலியம் (Delium) என்ற இடத்தைக் கைப்பற்ற வும் வேண்டியதாயிற்று. அதே சமயத்தில் அந் நாட்டின் மேற்குக் கோடியிலிருந்த சாரோனியா (Chaeronea) என்ற பட்டணம் உள் நாட்டுச் சதித்திட்டக்காரர்களின் உதவியால் கைபற்றப்பட வேண் டியதாயிற்று. இவ்விதமாக மூன்று பக்கங்களில் ஏக காலத்தில் போயி ஷிய அரசாங்கத்தைப் பயமுறுத்த வேண்டியதாயிற்று. அதே நாளில் மூன்று தாக்குதல்களை நடத்துவதென்று திட்டமிடப்பட்டது. ஆனல்

அத் திட்டம் ஓர் போஷயனல் (Phocian) காட்டிக் கொடுக்கப்பட்டு போட்டார்ச்சுகளால் முறியடிக்கப்பட்டது. சிபே (Siphae), சாரோனியா (Chaeronea) ஆகிய இடங்களைப் பலம் பெருந்திய படைகள் காத்து நின்றன. மேலும் ஹிப்போகிரேட்டசை எதிர்க்கவும் போயிஷியர்களைக் கொண்ட ஓர் படையும் தயாராக இருந்தது. தாக்குதல் நடத்த குறிப்பிட்ட நாளில் டெமெஸ்தனீஸுக்கு ஓர் தவறுதல் நேர்ந்துவிட்டது. தன்னை போயிஷியப் படை எதிர்த்ததைக் கண்டு அவன் பின் வாங்கவேண்டியதாயிற்று. அத்தீனியர்கள் எதிர் பார்த்தபடிஉள் நாட்டில் எவ்விதக் கலகமும் ஏற்படவில்லை.

ஹிப்போகிரேட்டஸ் டெலியம் என்ற இடத்திற்குப் போய்ச் சேர்ந்தான். அதைப் பலப்படுத்த அவனுக்குப் போதுமான நேரமிருந்தது. அவனிடம் 7,000 போர் வீரர்களும் 20,000க்கு மேற்பட்ட பளுவற்ற ஆயுதம் அணிந்த படை வீரர்களும் இருந்தார்கள். போர் வீரர்கள் பதுங்கி இருந்து போர் செய்வதற்காக ஓர் அகழியும், அதைச் சுற்றி மேடையும் அதன்முன் ஓர் வேலியும் அமைக்கப்பட்டன. ஏதென்சிலிருந்து வந்த ஐந்தாம் நாள் அந்த வேலை பூர்த்தியாயிற்று. அந்தப் படை டெலியத்தை விட்டுச் சொந்த நாட்டிற்குப் புறப்பட்டது. அவர்கள் அந் நாட்டின் எல்லையைக் கடந்து, டெலியத்திலிருந்து ஒருமைல் தூரத்திலிருந்த அத்தீனிய நாட்டின் ஒரோபஸ் (Oropus) என்ற இடத்தில், ஹிப்போகிரேட்டஸ்வருவதற்காகப் படை வீரர்கள் தங்கினர். ஹிப்போகிரேட்டஸ் கோயில் பாதுகாப்புக்கு ஏற்பாடு செய்ததால் வரச் சற்றுத் தாமதமேற்பட்டது. பளுவற்ற ஆயுதம் தாங்கிய போர் வீரர்கள் தங்களுடைய பயணத்தைத் தொடர்ந்தார்கள். அப்போது ஹிப்போகிரேட்டஸ் எதிரிகள் தங்களைத் தாக்க வருவதால் போருக்கு ஆயத்தமாகுங்கள் என்று அங்குக் காத்துக் கொண்டிருந்த வீரர்களுக்கு(hoplites)ஓர் தூதுவன் மூலமாகக் கட்டளை அனுப்பினான். டெலியத்திலிருந்து சுமார் ஐந்து மைல் தொலைவிலுள்ள தநகரா (Tanagra) என்ற இடத்தில் போயிஷியாப் படை குவிக்கப்பட்டிருந்தது. தீப்சைச் சேர்ந்த போட்டார்ச்சுகளில் ஒருவனாகிய பாகொண்டாஸ் என்பவன், அத்தீனியர்கள் போயிஷியா எல்லையிலிருந்து பின் வாங்கிப் போனபோதிலும், அவர்களைப் பின் சென்று தாக்குங்கள் என்று போயிஷியா வீரர்களைத் தூண்டினான். மிக வேகமாக எதிரியைத் துரத்திச் சென்ற பாகொண்டாஸ், அத்தீனியர்களின் பார்வையிலிருந்து மறைந்துகொள்ள ஓர் குன்றுக்குப் பின்னால் நின்று, தன்னுடைய படையைப்போருக்கு ஆயத்தப்படுத்தினான். அப் படையில் பளுவான ஆயுதங்கள் அனிந்த 7,000 தரைப் படையினரும், 1,000 குதிரைப் படையினரும், பளுவற்ற ஆயுதங்கள் அணிந்த 10,000 தரைப் படையினரும் இருந்தார்கள். வலது பக்கத்தில் தீபன் போர் வீரர்கள் இருபத்தைந்து வரிசையில் நிறுத்தப்

பட்டார்கள். அத்தீனியப் படையினர் எட்டு வரிசையில் அணி வகுத்து நின்றனர். ஹிப்போகிரேட்டஸ் அங்கு வந்து, போர் வீரர் களின் அணி வகுப்பிற் சென்று அவர்களுக்கு உற்சாக மூட்டிக் கொண்டிருந்தான்.

அங்கிருந்த குன்றின் பின்னுல் நின்றுகொண்டிருந்த பகைவன் தன்னுடைய யுத்த சின்னத்தை உயர்த்திப் போரைத் துவக்கினுன். இரு பக்கங்களின் கோடியிலிருந்த வீரர்களுக்குப் போர் புரியும் வேலே யில்லாதிருந்தது. ஏனென்ருல் அவர்களுக்கிடையே நீர்த் தேக்கங்கள் இருந்தன மற்ற வீரர்கள் கேடயங்களோடு கேடயங்களே மோதி மிக்க கடுமையாகப் போர்புரிந்தார்கள். வலப்பக்கத்தில் அத்தீனியர் கள் வெற்றிபெற்ருர்கள். ஆனுல் இடப்பக்கத்தில் தீபர்களின் தாக்கு தலேச் சமாளிக்க முடியவில்லே அவர்களால். ஏனெனில் கடிய உடற் பயிற்சியால் திப வீரர்கள் அத்தீனியர்களேவிட ஆற்றல் வாய்ந்தவர்க ளாக இருந்தனர். வலப்பக்கத்தில் கிடைத்த வெற்றியுங்கூட பய னற்றதாயிற்று. ஏனென்ருல் அத்தீனியர்களுக்குத் தெரியாமல் பாகொண்டாஸ் மறைத்துவைத்திருந்த குதிரைப்படை திடீரென்று அங்கு கொண்டுவரப்பட்டது அதைக் கண்ட அத்தீனிய வீரர்கள் அது பின்னணியில் மறைத்துவைக்கப்பட்டிருந்த ஓர் தீபப் படை யின் பகுதி என்று நினேத்து,ஓட்டமெடுத்தார்கள். ஹிப்போகிரேட்டஸ் கொல்லப்பட்டான். அத்தீனியப் போர்வீரர்கள் சிதறியோடினுர்கள்.

டெலியம் போர் கொரேனியாவின் தீர்ப்பை உறுதிப்படுத்தியது.

போயிஷியர்கள் வென்றபோதிலும், டெலியம் இன்னும் ஆக்கிர மிப்பாளர் வசம் இருந்தது. இச் சம்பவம் நூதனமான ஓர் உடன் படிக்கையைத் தோற்றுவித்தது. அத்தீனியர்கள் இறந்துபோன தங்கள் வீரர்களின் சவங்களேத் தருமாறு கோரினுர்கள். அத்தீனி யர்கள் அப்போலோவின் கோயிலே விட்டு வெளியேறினுல் மட்டுமே பிணங்களே எடுத்துச் செல்ல அனுமதி அளிப்பதாகக் கூறினர். உலக நாடுகளால் ஏற்றுக்கொள்ளப்பட்ட வழக்கம் கிரேக்கர் களிடத்திலும், நாகரிகமற்ற எயிட்டோலியர்களிடத்தும் இருந் திருக்குமானுல், யுத்தத்தில் வெற்றி யடைந்தவன் தோற்றவ னுடைய இறந்துபோன வீரர்களின் சவங்களே எடுத்துச் சென்று அடக்கம் செய்வதற்கு நிபந்தனேயின்றி அனுமதி தந்திருப்பான். இந்த வழக்கம் சமய உணர்ச்சியின் அங்கீகாரம் பெற்றிருந்ததால் அபூர்வமாக அது மீறப்பட்டது. ஆனுல் இந்த சந்தர்ப்பத்தில் நடை முறையிலுள்ள பழக்கத்தை மீறியதற்கு அவர்களுக்குக் காரணம் இருந்தது. அத்தீனியர்கள் டெலியத்திலிருந்த தேவாலயத்தைக் கைப் பற்றி, அதில் தங்கியிருந்தனர். ஆலயத்தின் புனித நீரை உப

யோகித்தபடியால் யுத்தத்தில் ஹெலனி மக்கள் கடைப்பிடித்து வரும் யுத்த தர்மங்களை அவர்கள் மீறிவிட்டார்களெனக் காரணம் காட்டினார்கள். ஒப்புக்கொள்ளப்பட்ட வழக்கத்தைப் போயிஷியர்கள் மீறியது, அத்தீனியர்களின் நடத்தையைவிட இழிவானதன்று. அத்தீனியர்களால் ஆக்கிரமிக்கப்பட்ட டெலியம் அப்பொழுது அட்டிகாவுக்குச் சொந்தமென்றும் அத்தீனியர் அக் கோயிலுக்கு வழக்கமாக நடத்தி வரும் கைங்கரியங்களை ஒழுங்காகச் செய்தார்கள் என்றும் அத்தீனியத் தூதுவன் கூறியது, போயிஷியர்களுக்கு அறிவின்மையான ஓர் விடையாக இருந்தது. அவன் சொன்னதாவது. ''எங்களைப் போயிஷியாவைவிட்டு வெளியேற நீங்கள் சொல்லக்கூடாது. ஏனென்றால் டெலியத்திலுள்ள காவல்படை போயிஷியா எல்லையிலில்லை''. அத்தீனியனுடைய சிலேடைப் பேச்சுக்கு போயிஷியன் தக்க பதிலளித்தான்: ''நீ போயிஷியாவிலிருந்தால் உனக்குச் சொந்தமானதை எடுத்துக் கொண்டு போ; நீ உன்னுடைய நாட்டில் இருந்தால் உன் விருப்பப்படியே செய்.'' அச் சவங்கள் அத்தீனியர்களிடம் ஒப்படைக்கப்படவில்லை போயிஷியர்கள் டெலியத்தை முற்றுகையிடும் வேலையை மேற்கொண்டார்கள், ஓர் நூதன முறையால் அவர்கள் டெலியத்தைக் கைப்பற்றினார்கள். ஒரு பெரிய மரத்தை இரண்டு துண்டாக அறுத்து, அவைகளில் பொந்துகள் உண்டாக்கினார்கள். அவைகளை ஓர் ஊதுகுழலைப்போல் ஒன்றாகச் சேர்த்தார்கள். ஒரு பெரிய பாத்திரத்தைச் சங்கிலி மூலமாக அதன் முனையில் பொருத்தினார்கள். பாத்திரத்தினுள் கீழே நோக்கியுள்ள துருத்தியின் இரும்பு வாயை, அக் குழாயில் கீழ்நோக்கிப் பொருத்தினார்கள். இந்தப் பொறியை நெடுந்தூரத்திலிருந்து வண்டிகள் மூலம் மதில் சுவரின் பலவிடங்களுக்கும் கொண்டு போனார்கள். அதற்காக மரக்கட்டைகளும், திராட்சைக் கொடிகளும் பெருமளவில் பயன்படுத்தப்பட்டன. அதை மதில் சுவருக்கு அருகில் கொண்டு வந்தபோது தூணின் மறுமுனையில் பெரியதொரு துருத்தியைப் பொருத்தி, துருத்தியை ஊதினார்கள். அதனின்று காற்று தப்பிச் செல்லாமல் தடுக்கப்பட்டது. நிலக்கரி, கந்தகம், மரத்துண்டு ஆகியவற்றால் எரிந்து கொண்டிருந்த பெரிய பாத்திரத்தில், காற்று வந்து மோதியது. இதனால் ஒரு பெருந்தீ மேலெழுந்து மதில் மீது எரிந்தது காவலாளிகள் ஒருவராலும் மதில் சுவரின்மீது நிற்க முடியவில்லை. காவல்படை ஓட்டமெடுத்தது. அந்தக் கோட்டை கைப்பற்றப்பட்டது [1] பொயிஷியர்கள் மாண்டுபோன அத்தீனிய வீரர்களின் சவங்களைக் கொடுப்பதற்குத் தயங்கவில்லை. அந்த யுத்தத்தில் மாண்டுபோன அத்தீனிய வீரர்களின் எண்ணிக்கை ஆயிரத்திற்கும் சற்று குறைவாகவே யிருந்திருக்கும்.

[1] அந்தப் பொறியைப் பற்றி தூசிடைடீஸின் விளக்கத்திலிருந்து எடுக்கப்பட்டது.

## 13. தெரேசில் யுத்தம்.
## ஏதென்ஸ் ஆம்பிபோலிசை இழத்தல்

டெலிய யுத்தம் ஏதென்சுடைய செல்வாக்கை மறைத்தது. ஆனால் அந்த வீழ்ச்சி அதனுடைய படைப்பலத்தைக் கடுமையாகப் பாதிக்கவில்லை என்றபோதிலும் அவ்வாண்டு ஏதென்சுக்கு ஓர் துக்க கரமான ஆண்டு. அதைவிடப் பெரும் நஷ்டத்தை விளைவிக்கக்கூடிய பேரிடி அதனுடைய ஆதிக்க நாடாகிய தெரேசில் அதற்கு அளிக்கப் பட்டது.

தெரேசில் நடந்த யுத்தம், அதனுடைய அண்டை நாடுக ளாலும் மாஸிடோனியாவாலும் எப்பொழுதும் சிக்கலாக்கப்பட்டு வந்தது. போட்டிடே வீழ்ச்சிக்கு முன் தெரேசின் மன்னனாகிய சிட் டால்செஸ் ((Sitalces) என்பவனோடு ஏதென்சு நட்புபூண்டு அவனு டைய மகன் சாடோகாசுக்கு (Sadocas) அத்தீனியக் குடியுரிமை (citi-zen) அளித்தது. சிட்டால்செஸ் மன்னனுடைய நாடு, ஸ்ட்ரிமோனி லிருந்து (Sytrymon) யூக்சைன் (Euxine) வரையில் பரந்து கிடந்தது. அதனுடைய கடற்கரை அப்டேராவில் ஆரம்பித்து இஸ்ட்டர் (Ister) நதியின் முகத்துவாரத்தில் முடிவடைந்தது. அவனுக்குப் பின்வந்த அரசனின் காலத்தில், கிரேக்க நகரங்களிலும், புறச் சாதியார்களிடத் திலுமிருந்து கிடைத்த அரசாங்கத்தின் வருவாய் நாணய மதிப்பின் படி 400 தாலந்து. அந்த அரசனின் மரணம் வரையில் ஏதென் சுடைய நேசவுறவு நிலைத்திருந்தது. அரிஸ்ட்டோபேன்ஸின், 'அச்சார் னியன்' என்ற நாடகத்தில் தெரேசிலிருந்து வந்த அத்தீனிய அரசியல் தூதுவன் ஏதென்ஸ் சபைக்குக் கூறுவதாவது: 'நாங்கள் எங்கள் நேரத்தை சிட்டால்செஸ்ஸுடன் சேர்ந்து குடிப்பதில் கழித்தோம். அவன் உங்களுடைய நண்பன். எப்போதாவது உங்களுக்கு ஓர் நண் பன் இருப்பானாகில் அப்படிப்பட்ட நண்பன் சிட்டால்செஸ்தான். அவன் ஏதென்ஸ் என்ற வார்த்தையைத் தன்னுடைய சுவர்களில் எழுதுகிறான்.'

சூழ்ச்சி மனப்பான்மையுள்ள மாசிடோனியாவின் அரசன் பெர் டிக்காஸ் (Perdiccas) ஏதென்சுக்கும், ஸ்பார்ட்டாவுக்குமிடையே வஞ்சக நாடகமாடினான். ஒருசமயம் ஏதென்சுக்கு எதிராக சால்சி டியர்களுக்கு உதவி புரிந்தான். மற்றொரு சமயம், ஏதென்சில் நேச வுறவு நாடுகளுடைய கலகத்தில் ஏதென்சுடன் சேர்ந்திருந்தான்.

ஹாலியாக்குமோன் நதியின் முகத்துவாரத்தின் தென்பக்கத்தில் மெதோன் (Methone) என்ற நாடு இருந்தது. ஏதென்சுக்கும், பெர்டிக்

காசுக்குமுள்ள உறவு அடிக்கடி மாறியதால் அதனுடைய நலன் கடுமை யாகப் பாதிக்கப்பட்டபோதிலும் ஏதென்சிடம் அந்நாடு மெய்ந்நட்புக் கொண்டிருந்தது. அத்தீனியக் குடியாட்சிச் சின்னம் இருந்துகொண்டு, மெதோன் குடியாட்சிச் சின்னத்தை நோக்கிக் கைநீட்டிக் கொண் டிருக்கின்றது. மெதோன் சின்னத்தின் அருகில் ஒரு நாயும் இருக்கின் றது. இவ்வாறு செதுக்கப்பட்ட ஒரு உருவத்தினுல் அலங்கரிக்கப்பட்ட ஓர் சலவைக் கல்லில், மெதோன் சம்பந்தப்பட்ட சில சட்டங்கள் பொறிக்கப்பட்டிருக்கின்றன.

பெர்டிக்காஸ் மன்னனும் (ஒலிந்தசுடைய) சால்சிடியர்களும் அத் தீனியர்களுடைய பைலோஸ் வெற்றியைக் கண்டு பயந்தார்கள். ஏனென்றால் அத்தீனியர்கள் தெரேசில் கடுமையான நடவடிக்கை யில் இறங்கலாம் என எண்ணினுர்கள். ஸ்பார்ட்டாவிடம் படை உதவியளிக்கக் கோரினுர்கள். உதவிப்படையின் எண்ணிக்கை எத்தகையதாக இருப்பினும் அதற்குத் தலைமைதாங்க பிரேசிடாசை அனுப்ப வேண்டுமென்றும் அவர்கள் விரும்பினுர்கள். தங்களுடைய விருப்பத்தைத் தெரிவிக்க ஸ்பார்ட்டாவுக்கு ஓர் அரசியல் தூதுவனை அனுப்பினுர்கள். தான் வெற்றி பெறுவது உறுதியல்ல என்று இருந்த போதிலும் இந்த சந்தர்ப்பத்தில் தெரேசிலுள்ள பகைவனுக்குப் பய மூட்ட இந்த வழி சிறந்தது என்று ஸ்பார்ட்டா கருதியது. ஸ்பார்ட்டா தன்னுடைய போர் வீரர்களை அனுப்பவில்லை. அவர்களுக்குப் பதிலாக 700 அடிமைகளை ஸ்பார்ட்டன் வீரர்களைப்போல் ஆயுதமளித்து அங்கு அனுப்பியது. நாட்டில் அடிமைகள் இருப்பது அபாயமானதென்று ஸ்பார்ட்டா கருதிற்று. அடிமைகளில் ஒரு பகுதியினரை த்ரேசுக்கு அனுப்புவதைப்பற்றி அரசாங்கம் மகிழ்ச்சியடைந்தது. மெகாராவை மீட்ட பிராசிடாஸ், பெலப்போனீசிய உதவிப் படையோடு புதிய குடியேற்ற நாடாகிய ஹெராகளிக்கு வடக்குநோக்கிப் பயணமானுன்.

பிராசிடாஸ் ஸ்பார்ட்டனுகத் தப்பிப்பிறந்தவன். அவனுடைய பண்பில் மிகச் சிறப்பானதாகக் கருதப்படும் வீரம் ஒன்றைத் தவிர மற்றவைகளில் அவன் ஸ்பார்ட்டன் வீரர்களினின்றும் மாறுபட் டவன். சலியாமல் உழைக்கும் ஆற்றலும் தீரச் செயலுக்கான உணர்ச்சியும் அவனிடமிருந்தது. ஸ்பார்ட்டன் அரசாங்கம் அவனிடம் காணப்பட்ட சிறப்பான பண்புகளுக்கேற்ற முறையில் அவனுக்கு ஊக்கம் அளிக்கவில்லை பிராசிடாஸ் சிறந்த நாவன்மை பெற்றவன். லாசிடோமோனியர்கள் சொற்பொழிவாற்றும் திறமை யற்றவர்கள். அரசியல் பிரச்சினைகளைக் குரோத மனப்பான்மை இல்லாமல், சகிப்புத் தன்மையோடு, நேர்மையுடன் அவன் தீர்த்து வைப்பவன். அவனிடம் எளிமையும் நேர்மையுமிருந்தன. ஐயப்பாடின்றி அவனுடைய வார்த்தைகளை நம்பலாமென்பதை மக்கள் அறிவார்கள். அயல்நாடு

களில் செல்வாக்குப் பெற்றவன். அன்னியர்களால் விரும்பப்பட்டவன். இப் பண்புகள் அவன் வாழ்க்கையில் சிறந்து விளங்குவதற்கு உதவிபுரிந்தன; அவனை ஸ்பார்ட்டா மக்களிடமிருந்தும் வேறுபடுத்திக் காட்டின. கிரீசில் ஸ்பார்ட்டன் என்ற சொல்லை வெறுப்பு, கெட்ட நடத்தை என்ற பொருளில் வழங்கினர். கள்ளங் கபடற்ற கவர்ச்சியுடைய நடத்தையினுல் பிராசிடாஸ் இருண்ட சூழ்நிலையில் நன்கு பிரகாசித்தான்.

அவனுடைய நுண்ணறிவும், துரிதமாகப் படை நடத்துதலும், அத்துடன் பெர்டிக்காஸ் மன்னனின் ஆதரவும், லாசிடோமோனியர்களோடு வெறுப்புக்கொண்ட தெஸாலி வழியாகச் செல்ல உதவியாக இருந்தன. அவன் மாசிடோனியாவை அடைந்தபோது, லின்செஸ்டிய அரசனுகிய அர்ராபேயஸ் (Arrhabaeus) என்பவனோடு போர்புரிய உதவிபுரிய வேண்டுமென்று பெரிடிக்காஸ் வேண்டிக் கொண்டான். பிராசிடாஸ், சால்சிடிக் நாட்டிற்குப் போய்ச்சேர ஆவலாய் இருந்தான். ஆனுல் பிராசிடாஸ், அர்ராபேயசுகளுடன் தனியான ஓர் ஏற்பாட்டை செய்யத் திட்டம் வகுத்து, லின்செஸ்ட்டிஸின் நாட்டின்மீது படை எடுப்பதைத் தடுத்தான். இதனுல் பெர்டிக்காஸ் ஏமாற்றமடைந்தான். ஆக்ட்டே (Acte) என்ற தீபகற்பத்திலிருந்த ஆகான்தஸ் (Acanthus) நகரத்தின்மீது படையெடுத்தான். அத்தீனியன் கூட்டமைப்பில் தங்கள் நாடு சேர்ந்திருப்பதில் அந் நாட்டு மக்கள் விருப்பம் கொண்டவர்கள். அவர்கள் ஏதென்சுமீது எவ்விதமான மனக்குறையுமில்லாதவர்கள். பிராசிடாசின் மயக்குமொழிகளை அவர்கள் ஏற்றுக் கொள்ள விருப்பமில்லாதிருந்தார்கள். பிராசிடாசை மட்டும் நகருக்குள் அனுமதித்து அவன் தங்கள் சபையில் சொல்வதைக்கேட்கும்படி அந் நாட்டு மக்களை ஓர் சிறிய கட்சி தூண்டிவிட்டது. அவன் பேச்சிலிருந்து அகாந்தியர்கள் லாசிடோமோனியர்களுடைய திட்டங்களை அறிந்துகொண்டார்கள். அவன் பேசியவற்றின் சாரத்தை மட்டும் குறிப்பாக தூசிடைடிஸ் கொடுத்திருக்கிறுன் ; 'யுத்த ஆரம்பத்தில் ஹெல்லாசின் உரிமைகளைப் பாதுகாக்க, ஏதென்சுக்கு எதிராகப் போர் தொடுப்பதாக அறிவித்தோம். அந்த நோக்கத்துக்காகவே இப்போது நாங்கள் இங்கிருக்கிறோம். நீங்கள் அறிவாலும், ஆற்றலாலும் புகழ் பெற்றவர்கள். ஆகையினுல் உங்களது மறுப்பு, அந் நல் நோக்கம் நிறைவேறுவதைத் தாமதப்படுத்தும். என்னோடு சேருகின்ற ஒவ்வொரு நகரமும் தன் சுதந்திரத்தை அடையும். புனிதமான சபதமெடுத்து லாசிடோமோனியர்கள் என்னிடம் உறுதி மொழியளித்துள்ளனர். நான் பூசலின் கருவியாக இங்கு வரவில்லை. பலரைச் சிலருடைய அடிமையாக்கவும் நான் இங்கே வரவில்லை. என் நோக்கம் அப்படிப்பட்டதானுல் அத்தீனியர்களுடைய கொடுங்கோன்மையைவிட நாங்கள் மோசமான செயலைச் செய்கின்ற

வர்களாவோம். ஓர்நாட்டு மக்களை அவர்களுடைய விருப்பத்துக்கு மாறாக அவர்கள் மீது நேசஉறவு உடன்படிக்கையைத் திணிக்க எனக்கு உரிமையில்லை என்று நீங்கள் மறுப்புக் கூறுவீர்களானால், நான் உங்கள் நாட்டை நாசம் செய்து உங்களை என் நோக்கத்துக்கு ஒத்துக் கொள்ளும்படிக் கட்டாயப்படுத்துவேன். இரு காரணங்களால் நான் அப்படிச் செய்வது நியாயமாகும். நீங்கள் ஏதென்சுக்குச் செலுத்தும் திறைப்பணம் ஸ்ப்பார்ட்டாவுக்கு நேரடியாகக் கேடு விளைவிப்பதாகும். ஏனென்றால் அந்தத் திறைப்பணம் அதனுடைய பகைவனை வலுப்பெறச் செய்கிறது. இரண்டாவதாக உங்களைப் பின்பற்றி மற்ற நாடுகளும் சுதந்திரம் அடையாமற் போகலாம்.' பிராசிடாஸ் அவ்விடத்திலிருந்து அகன்றபொழுது அங்கே ஓர் பெரிய சொற்போர் நடந்தது. சிலர் பிராசிடாசை ஆதரித்தும், சிலர் எதிர்த்தும் பேசினார்கள். பிராசிடாசின் ஒழுக்கம் ஓர் சாதகமான பயனை விளைவித்தது. சபையில் ரகசிய ஓட்டு எடுக்கப்பட்டது. பெரும்பாலோர், தங்களுக்கு ஏதென்ஸ் மீது மனக்குறை இல்லாவிட்டாலும், ஏதென்சின் தொடர்பை வெட்டிக்கொள்ள ஓட்டளித்தார்கள். என்றாலும் அவர்களுக்கு அரசியல் மாறுதலைப்பற்றிய ஆர்வம் எதுவுமில்லை.

அகாந்தஸ் ஓர் ஆன்திரியக் குடியேற்ற நாடு. ஸ்ட்டாஜிரா (Stagira), ஆர்ஜிலஸ் (Argilus) என்ற இரு ஆன்திரியன் (Andrian) குடியேற்ற நாடுகளும் அகாந்தசைப் பின்பற்றின. பிராசிடாஸ் ஆர்ஜிலஸ் நகரத்தோடு ஏற்படுத்திய உறவு, தெரேசில் அத்தீனியர்களுடைய காவல் நிலையங்களையும் ஆம்பிபோலிஸ் பட்டினத்தையும் கைப்பற்ற உதவியாக இருந்தது.

இந்த இடம் ஆர்ஜிலசின் சிறப்பைக் குறைத்தது. ஆர்ஜிலியன் மக்களின் பொறுமையைக் கிளறிவிட்டது. அவர்களில் சிலர் ஆர்ஜிலியன் இனத்தைச் சேர்ந்தவர்கள். பிராசிடாஸின் வருகை ஆர்ஜிலஸ் நாட்டினருக்கு, ஆம்பிபோலிசிலுள்ள அத்தீனியர்களுக்கு எதிராக அவர்கள் காத்துக் கொண்டிருந்த சந்தர்ப்பத்தை அளித்தது ஓர் குளிர்கால இரவில் பிரயாணம் செய்து, சித்திரிமோன் பாலத்தை பிரசிடாஸ் அடைந்தான். அப் பாலம் ஒரு சிறிய படையால் காக்கப்பட்டு வந்தது; பிராசிடாஸ் அப் பாலத்தை எளிதில் கைப்பற்றிவிட்டான். ஆம்பிபோலிஸ் யுத்தத்திற்கு முற்றிலும் தயாராகயில்லை. இருந்தபோதிலும் பிராசிடாஸ் அதை உடனே தாக்கத் துணியவில்லை. நகரத்தின் கதவுகளை உள்ளிருக்கிற சதியாளர்கள் திறந்துவிடுவார்கள் என்று எதிர்பார்த்திருந்தான். அத் தருணத்தில் அவன் அப் பகுதியைக் கிழ்ப்படுத்திக் கொண்டான்.

பிராசிடாசைப் போன்ற பலமுள்ள பகைவன் பக்கத்திலுள்ள அத்தீனிய நகரங்களை ஆக்கிரமித்துக் கொண்டிருந்தபோது ஆம்பி

போலிஸ் போன்ற பட்டினம் யுத்தத்திற்கு ஆயத்தப்படாதிருந்தது என்றால், அது, தெரேசிலுள்ள நலன்களைப் பாதுகாக்கும் பொறுப்பை ஏற்றுக்கொண்ட ஏதென்சின் இரு நிர்வாகத் தலைவர்களின் மன்னிக்க முடியாத பொறுப்பின்மையைக் காட்டுகின்றது. அவ்விருவரில் ஒருவன் ஒலோரஸ் மகனாகிய தூஸிடைடிஸ்; மற்றவன் யூக்கிளிஸ் (Eucles). யூக்கிளிஸ் பாலத்தைப் பாதுகாக்கப் போதுமான காவற் படையை நிறுத்திவைக்காமல் ஆம்பிபோலிஸ் நகரத்திலிருந்தான் என்பது மன்னிக்க முடியாத ஓர் குற்றமாகும். தூசிடைடிஸ் தனக்குச் சொந்தமான கனிச் சுரங்கங்களுள்ள தாசோஸ் (Thasos) தீவுக்கு அத்தீனியப் படைகளை அனுப்பியதும் ஓர் பெரும் குற்றம். தூசிடைடிசுக்கு பிராசிடாஸின் வருகையைப் பற்றிய செய்தி அனுப்பப்பட்டது. அவன் மூன்றடுக்குத் துடுப்புகளை யுடைய ஏழு கப்பல்களுடன் புறப்பட்டு அன்று மாலை சித்தரிமோன் முகத்துவாரத்தை அடைந்தான். அதே சமயத்தில், பிராசிடாஸ் ஆம்பிபோலிஸ் மக்கள் எளிதில் ஒப்புக்கொள்ளக்கூடிய நிபந்தனைகளை அறிவித்தான். சம அரசியல் உரிமைகளை விரும்புகிறவர்களுடைய சொத்தைப் பறிமுதல் செய்வதில்லை என்றும், நகரத்தை விட்டுப் போய்விட விரும்புகிறவர்களுக்குத் தங்கள் உடைமைகளை எடுத்துச் செல்ல ஐந்து நாட்கள் கொடுப்பதாகவும் சொன்னான். தூசிடைடிஸ் சமீபத்தில் வந்து விட்டான் என்பதை அவர்கள் அறிந்திருந்தால் சரணடைந்திருக்க மாட்டார்கள். தூசிடைடிஸ் அப்போது சற்று தமாதித்து வந்தான். ஆற்றின் முகத்துவாரத்திலிருந்த ஈயான் என்ற இடத்தை அவன் கைப்பற்றினான். பிராசிடாசின் ஓர் தாக்குதலை முறியடித்தான்.

ஆம்பிபோலிஸ் வீழ்ச்சிக்குப் படைத்தலைவர் பொறுப்பாளியல்ல. ஆனால் போயிஷியாவில் டெமஸ்த்தனிசின் புதிய போர் முறைத் திட்டத்திற்குச் செவிசாய்த்து, தெரேசில் தற்காப்புக்கான சாதனங்களைச் செய்யத் தவறிய அத்தீனியர்களே அதற்கு உண்மையான பொறுப்பாளிகள். சால்சிடிஸ், தெரேஸ் என்ற இரு இடங்களின் கடற்கரையின் பாதுகாப்புக்கு தூசிடைடிஸ் தான் பொறுப்பாளி என்பதையும், எந்த சமயத்திலும் போட்டிடேயிலிருந்து செர்சோனிஸ் (Chersonese) வரையிலுள்ள ஏதாவது ஒரு பகுதியைப் பாதுகாக்க அவன் அழைக்கப்படக் கூடும் என்பதையும் மனதில் வைக்க வேண்டும். அத்துடன் ஈயோன் அல்லது தாசோஸ் அவனுடைய தலைமைக் காரியாலயத்திற்குத் தகுதிவாய்ந்த இடம் என்பதையும், ஈயோனுக்குத் துறைமுகம் இல்லாத குறைபாடு இருந்தது என்பதையும் நினைவு கூர வேண்டும்.

அந்த யுத்தத்தினுடைய புகழ் பெற்ற வரலாற்றுக்காக, ஆம்பிபோலிஸின் வீழ்ச்சிக்கு நாம் கடமைப்பட்டுள்ளோம். முக்கியத்துவம்

வாய்ந்த தங்களுடைய நாடுகளில் ஒன்று தங்களை விட்டுப் போய் விட்டதற்குப் படைத்தலைவர்களின் கவனக் குறைவுதான் காரணமென்று, அவ்விருவர் மீதும் குற்றம் சுமத்தப் பட்டது. தூசிடைடிஸ் நாடு கடத்தப்பட்டான். அவன் செய்த தவறு, அத்துணைப் பெரியதன்று. எனினும் அக் கொடிய தண்டனை அவனுக்கு அளிக்கப்பட்டது, அது கிளியானின் தூண்டுதலால் நடந்திருக்க வேண்டும். அவன் தன்னுடைய தேசாந்தர வாழ்க்கையிலே கிரேக்க நாட்டின் வரலாற்று விரிவுரையாளர்களில் மிக்க புகழ்பெற்றவனானன். அவன் ஏதென்சில் தங்கி தன்னுடைய அரசாங்க அலுவல் வாழ்க்கையில் நிலைத்திருப்பானாகில், தன் முழு சிந்தனையையும் அவனுடைய வரலாற்றில் ஈடுபடுத்தி இருக்க முடிந்திராது. அயல் நாடுகளில் ஏதென்சின் பகைவர்கள் மத்தியிலும், நடுநிலைமை நாடுகளிலும் பிரயாணம் செய்து, ஹெலனிக் உலகத்தின் நிறைந்த அறிவைப் பெற்றான். பரந்த நோக்கத்தோடு வரலாற்றை எழுதினான். அவன் ஏதென்சில் தங்கி அத்தீனியன் அனுபவத்தைக் கொண்டு எழுதியிருந்தால் அது அவ்வளவு சிறப்பாக இருந்திருக்க முடியாது. அவன் தன்னைப் பற்றிக் கூறுவ்தாவது: 'நான் என்னுடைய நாடு கடத்தப்பட்ட வாழ்க்கையின் காரணமாக, அத்தீனியர்களுடனும் பெலப்போனீசியர்களுடனும், தொடர்பு கொண்டு, நிகழ்ச்சிகளின் போக்கை உற்றுக் கவனிக்க என்னால் முடிந்தது.' ஆம்பிபோலிஸ் வீழ்ச்சி ஏதென்சுக்கு ஓர் பெரிய நஷ்டம்; ஆனால் உலகத்துக்கு ஒரு லாபம் என்று நினைக்க வேண்டியதாயிற்று.

சித்ரிமோனைக் (Strymon) கைப்பற்றியப் பின் பிராசிடாஸ் சால்சிடிஸ் (Chalcidice) நாட்டின் கிழக்குப் பாகத்திலிருந்த சிறிய பட்டினங்களைக் கீழ்ப்படுத்தினான். ஆன்டிரியன் சேன் என்ற இடமும் மற்றோர் இடமும் தனித்திருந்தன. அவைகள் இரண்டும் பிராசிடாசின் படையெடுப்புக்குத் தப்பின. சித்தோனியாவின் பலமுள்ள இடமாகிய டோரோனே என்னும் நகரத்தை ஆக்கிரமித்துக்கொண்டான். அந் நகரத்தின் குடிமக்களில் சிலர் அவனை வரவேற்றனர். அவர்கள் அவனுக்காகக் காத்திருந்தனர். அவன் அந்த இடத்தைக் கைப்பற்றும் வரையில் அவனது வருகை அத்தீனியக் காவற்படைக்கும் அந் நகரத்தின் பிற குடிமக்களுக்கும் தெரியாதிருந்தது. டோரோனே (Torone) ஓர் மலை மேல் கட்டப்பட்ட ஓர் பட்டினமாகும். இப் பட்டினம் குறுகிய தரைமூலமாக இணைக்கப்பட்டிருத்தது. நீர்மட்டத்திலிருந்து மிக உயரத்தில் கட்டப்பட்ட கோட்டையும், சுவர்களும் அந் நகருக்குப் பாதுகாப்பளித்தன. லெசித்தஸ் (Lecythus) என்று அழைக்கப்பட்ட அக்கோட்டையில், அத்தீனிய காவற்படை இருந்தது. பொழுது விடியு முன் நகரத்துக்குச் சுமார் அரைமைல் தொலைவில் பிராசிடாஸ் தங்கினான். பளுவற்ற :ஆயுதமணிந்த ஏழு போர் வீரர்

களை சதிகாரர்கள் இரகசியமாக காட்டையினுள் கொண்டு வந்தார்கள் குன்றின் மேலிருந்த காவலாளிகளை அவர்கள் கொன்றுர்கள். பின்புறக் கதவை உடைத்தார்கள். இருபக்கங்களிலுமிருந்து ஆட்கள் உள்ளே நுழைவதற்காகச் சந்தைக்குச் சமீபத்திலிருந்த பெரிய தடைகளை அழித்தார்கள். கவண் எறியும் வீரர்கள் நூறு பேர் முதலில் உள்ளே பாய்ந்து வந்தார்கள். அவர்கள் காட்டிய சைகை அறிந்த பிராசிடாஸ், மற்றப் போர் வீரர்களுடன் சோட்டையினுள் நுழைந்தான். ஐம்பது அத்தீனிய வீரர்கள் தூங்கிக் கொண்டிருந்தார்கள். சிலர் கொல்லப்பட்டனர். மற்றவர்கள் லெசித்தஸ் கோட்டைக்குத் தப்பி ஓடினுர்கள். அக் கோட்டையும் பின்னர் கைப்பற்றப்பட்டது.

பிரேசிடாஸ் டோரோனே சபையைக் கூட்டி. உரை நிகழ்த்தினுன். ஹெலனிய வீரனின் வாயிலிருந்து வந்த வார்த்தைகள் அவர்களுக்கு விநோதமாகத் தோன்றின. அவன், அந்த பட்டினத்திற்கோ அல்லது அதனுடைய குடிமக்களுக்கோ, தீங்கு செய்ய வரவில்லை என்றும் தான் உள்ளே நுழைவதற்கு உடந்தையாக இல்லாதவர்களும் மற்றவர்களும் சமமாக நடத்தப்படுவார்கள் என்றும், லாசிடேமோனியர்களுக்கு எதிராக, டோரோனே எத் தீங்கும் செய்ததில்லை என்றும், தன்னை எதிர்த்தவர்களை மிகக் கெட்டவர்கள் என்று தான் நினைக்கவில்லை என்றும் அவன் கூறினுன்.

## 14. சமாதானத்துக்கான பேச்சுகள்

அப்பொழுது அத்தீனியர்கள் பிராசிடாசின் வெற்றிகரமான குளிர்கால யுத்தத்தைத் தடுக்க எவ்வித நடவடிக்கைகளும் எடுக்காமல் செயலற்று இருந்தார்கள் அவர்களுடைய செயலின்மைக்கு இரு காரணங்கள் இருந்தன. முதலாவதாக, டெலியத்தில் ஏற்பட்ட அழிவு அவர்களுடைய நம்பிக்கையைக் குலைத்தது. ஆகையால் தெரேசில் நடைபெற்ற யுத்தத்தில் ஈடுபட விருப்பமில்லாதிருந்தார்கள். கிரேக்க வரலாற்றில் குடிமக்களைக் கொண்ட போர் வீரர்களையே நாம் காண்கின்றேம். ஆனுல் போரையே தொழிலாகக் கொண்ட வீரர்களை நாம் காண்பதில்லை. நம்பிக்கையோ, மனத்தளர்ச்சியோ அவர்களுடைய போர் நெறியையும், ஆட்சி முறையையும் ஒழுங்குபடுத்தி வந்தது. இரண்டாவதாக நிசியாஸ், லாச்சஸ் என்ற தலைவர்களைக் கொண்ட சமாதானத்தை விரும்பும் கட்சி போரை விரும்பவில்லை. இச்சூழ்நிலையைச் சாதகமாக்கிக்கொண்டு சமாதானம் செய்து கொள்வது அவர்களுடைய முதன்மையான கருத்து. ஸ்ப்பார்ட்டன் கைதிகள் தங்களிடம் வைக்கப்பட்டிருந்ததால், எச் சமயத்திலும் ஸ்பார்ட்டன்களுடன் உடன்படிக்கை செய்து கொள்ளும் வழியிருந்தது. ஆனுல் அது நிபந்தனைகள் சம்பந்தப்பட்ட மட்டில் ஓராண்

டுக்கு முன்னிருந்த அனுகூலமான நிலை இன்றில்லை. பெரிக்ளிஸைப் போல் திறமை வாய்ந்த ஓர் அரசியல் அறிஞன், ஏதென்ஸ் சபையின் நம்பிக்கையைப் பெற்று, அத்தீனியக் குழுக்களுக்கு வழி காட்டியிருந்தால், பிராசிடாசின் வெற்றி அறவே தடுக்கப்பட்டு, ஏதென்சின் மதிப்பு மீண்டும் நிலைநாட்டப்படும் வரையில் சமாதானம் செய்து கொள்ளும் எண்ணத்தை ஒத்திவைக்கும்படி அவன் சபையைத் தூண்டியிருப்பான். ஸ்ப்பாக்ட்டேரியா யுத்தக் கைதிகளைப் பயன்படுத்தி, நிலைமையைத் தமக்கு அனுகூலமாக்கும் இக் கொள்கை ஓர் தெளிவுள்ள உண்மையான கொள்கை. எதிரிகளை விடத் திறமையுள்ள அரசியல்வாதியான கிளியான் ஏதென்ஸ் சபையில் இக் கொள்கையையே வற்புறுத்திக் கூறியிருப்பான். கொள்கையைச் சீர்தூக்கிப் பார்க்கும் மனநிலை அத்தீனியர்களுக்கு அப்போதில்லை. போர் முறை நிபுணர்களின் வார்த்தைகளினால் மயக்குற்ற மக்கள் சமாதானம் செய்து கொள்ளவும் இசைந்து விட்டனர்.

அத்தீனியர்களை விட, லாசிடோமோனியர்கள் சமாதானம் செய்து கொள்ள விரைந்து வந்தார்கள். ஸ்ப்பாக்டீரியக் கைதிகளை விடுதலை செய்யும் ஆர்வம் அவர்களுக்கு அதிகரித்தது. அத்துடன் சால்சிடிஸ் நாட்டில் பிராசிடாசின் விரைந்த போக்கை நிறுத்திவைக்க விரும்பினார்கள். அவன் ஏற்கனவே அடைந்திருந்த மெச்சத்தக்க வெற்றிகள் ஓர் தோல்வியின் மூலமாகப் பாழாவதற்கு முன் அல்லது எதிர்பாராத விளைவுகளை ஏற்படுத்துவதற்கு முன் அவைகளை அனுகூலமாக்கிக் கொண்டு அவைகள் மூலம் தங்களுக்குச் சாதகமான நிபந்தனைகளைக் கொண்ட உடன்படிக்கையை ஏற்படுத்திக்கொள்ள விரும்பினார்கள். அவன் அடைந்த வெற்றிகளின் செய்தியை அவர்கள் முழு மகிழ்ச்சியோடு ஏற்றுக் கொள்ளவில்லை. அவற்றை, பொறாமை, அவநம்பிக்கை என்ற ஈனக்கண் கொண்டு நோக்கினார்கள். அவனுடைய வெற்றி ஸ்ப்பார்ட்டன் குடிமக்களுடைய படையைக் கொண்டு பெறப்பட்ட வெற்றியன்று. அவ் வெற்றி ஸ்ப்பார்ட்டன் பண்புகளுக்கு மாறுபட்டதும், படைத் தலைவனுடைய திறமையைக் கொண்ட படையின் வெற்றியாகும். பிராசிடாஸ் லாசிடோமோனியப் போர் முறையின் கட்டுப்பாடுகளை உடைத்தெறிந்தான். அவனுடைய நாட்டு மக்கள், அவனைத் தங்களினின்றும் வேறுபடுத்தி அவனைச் சந்தேகித்து வெறுத்தார்கள். பெலிட்டோனக்ஸ் என்ற அரசனும் சமாதான உடன்படிக்கை விரைவில் நடைபெறுவதற்குக் காரணமாக இருந்தான். இந்த அரசன், முப்பதாண்டுச் சமாதான உடன்படிக்கை ஏற்படுவதற்கு முன், மெகராவின் வீழ்ச்சிக்குப்பின், அட்டிகாவின் மீது படையெடுத்தபோது அதற்குத் தீங்கு செய்யாமல் இருப்பதற்காக, லஞ்சம் வாங்கிய குற்றத்திற்காக நாடு காடுத்தப்பட்டவன். இவன், சியாசின் பயங்கரக் கோயிலுக்குப் பக்கத்தில், லைசாயோன் மலை மேலுள்ள மேற்கு

ஆர்க்காடியாவில் இருபது ஆண்டுகள் வாழ்ந்து வந்தான். அந்த சியஸ் ஆலயத்தில் யாராவது பிரவேசித்தால் முதலில் அவன் தன் நிழலை இழந்து, ஓராண்டிற்குள் இறந்து விடுவானென்று கிரேக்க நாட்டு மக்கள் நம்பினார்கள். இங்குகூட பெலிஸ்ட்டோனஸ் தன் உயிருக்குப் பயந்து வாழ்ந்தான். அவன் வீடு கோயிலுக்குப் பக்கத்தில் இருந்தது. ஆகையினால் ஆபத்துக் காலத்தில் அவன் கோயிலுக்குள் அடைக்கலமாகப் புகுந்து கொள்ள வழி இருந்தது. ஆனால் அவனுக்கு டெல்பியில் செல்வாக்கு இருந்தது. ஸ்ப்பார்ட்டர்கள் டெல்பிக்குச் சென்று குறி கேட்கும்போதெல்லாம், அத் தெய்வங்கள், சியசின் மகனும் அவர்களின் அரசனுமாகிய தெய்வமனிதனை தங்கள் நாட்டில் அழைத்துக்கொள்ள வேண்டுமென்றும், அப்படிச் செய்யாவிடில் அவர்கள் நாடு கஷ்டத்திற்குள்ளாகுமென்றும் அறிவிக்கப்பட்டது. கடைசியாக லாசிடாமோனியர்கள் அவனைத் திரும்ப வரவழைத்து வழக்கப்படி ஏற்பட்ட புனிதச் சடங்குகள் மூலம் அவனை மறுபடியும் அரசுக் கட்டிலில் அமர்த்தினார்கள். ஆனால் அவனுடைய விரோதிகள் அவன் பிதியான் பூசாரிப் பெண்ணுக்கு லஞ்சம் கொடுத்து மறுபடியும் இழந்த பதவியை கேட்கச் செய்த சூழ்ச்சி கூறினார்கள்.

அவன் ஏதென்ஸில் இருக்கும் கைதிகளை விடுவித்துக் கொண்டு வந்து, இருநாட்டினருக்கும் சமாதான உடன்படிக்கை ஏற்படுத்தினால், அவன் மீதுள்ள குற்றச்சாட்டுகள் மறையுமென்று அவன் கருதினான். பிராசிடாசின் வெற்றியின் மீது முழு நம்பிக்கை வைத்திருப்பார்களானால் ஏதென்சு பின்பற்றிவந்த ஆதிக்கக் கொள்கையைப் பின்பற்றி இருப்பார்கள். ஆனால் ஏதென்சு நாட்டில் கடலாதிக்கம் அவர்களுடைய ஆசையைத் தடுத்தது.

பெலிசிட்டோனசும் நிசியாசும் ஒருவரை யொருவர் நன்றாகப் புரிந்து கொண்டார்கள். நிசியாஸ் சாதாரண ஆற்றலுடையவன். சமாதானத்தை விரும்புகிற ஒரே நோக்கத்துடன் இருந்த அவன் ஸ்ப்பார்ட்டர்களின் கைப்பொம்மையாக இருந்தான். தெரேசில் மேலும் நஷ்டம் ஏற்படுவதற்கு முன் ஓராண்டுக்காவது சமாதானம் செய்து கொள்ள ஏதென்சு மக்கள் விரும்பினார்கள். இரு நாடுகளும் ஓராண்டுச் சமாதான உடன்படிக்கைக்கு இசைந்தன. இதற்கிடையில் நிரந்தர சமாதானத்துக்கு வேண்டிய ஆயத்தங்கள் செய்ய அவர்களுக்கு வசதி ஏற்படும் என்பதே அவர்களுடைய நோக்கம். அந்த உடன்படிக்கையும் அதனுடைய நிபந்தனைகளும் ஏதென்சு நாட்டினரால் கொண்டுவரப்பட்டவைகள். உடன்படிக்கையின் பிரிவுகள் ஸ்ப்பார்ட்டாவில் தயாரிக்கப்பட்டு அவர்களுடைய சபையினால் ஒப்புக் கொள்ளப்பட்டவைகள். பிறகு உடன்படிக்கை ஏதென்சுக்கு அனுப்பப்பட்டது. லாச்சஸ் என்பவன் அதை ஏதென்சு சபையின்

முன் அங்கிகாரத்திற்காகக் கொண்டுவந்தான். உடன்படிக்கையின் பிரிவுகள் பின்வருமாறு :

1. டெல்பியின் தெய்வ வாக்கு கேட்கும் உரிமை எல்லோருக்கும் இருக்கவேண்டும். போர்க்காலத்தில் ஏதென்சுகளுக்குத் தடை விதிக்கப்பட்டிருந்தது.

2. இரு நாடுகளும் டெல்பியின் செல்வத்தைப் பாதுகாக்கும் பொறுப்பை ஏற்றுக்கொண்டன.

3. சமாதான உடன்படிக்கையின் காலத்திலே, இரு நாடுகளும் தங்கள் வசம் இருந்தவற்றை வைத்திருக்கவேண்டும். பைலோஸ், சித்தேரா, ஆர்காலிக, மெதோன், நிசாயா, மினோ முதலிய இடங்களை ஏதென்ஸ் தன்வசமே வைத்திருக்கவேண்டும்.

4. பன்னிரெண்டு டன்கள் எடைக்கு மேற்பட்ட எந்த ஸ்ப்பார்ட்டன் கப்பலும், வியாபாரக் கப்பல்கூட, லாசிடோமோனியர்களின் கடற்கரையோரமாகப் பிரயாணம் செல்லக்கூடாது.

5. சாமாதான உடன்படிக்கையை எடுத்துச்செல்லும் அரசியல் தூதுவர்களின் பயணம் தடைப்படக்கூடாது.

6. இரு நாடுகளும், படைக்கொள்கையைப் புறக்கணித்தவர்களை ஏற்றுக்கொள்ளக்கூடாது.

7. ஏற்படக்கூடிய தகராறுகளை மத்தியஸ்தர்களின் மூலம் தீர்த்துக்கொள்ள வேண்டியது.

உடன்படிக்கையின் முறைப்படி ஒப்புக்கொள்ளப்பட்டது. ஏதென்ஸ், ஸ்ப்பார்ட்டா என்ற இரு நாடுகளின் அரசியல் வாதிகள் உருவாக்கிய சமாதான உடன்படிக்கை பாதிக்கப்படக்கூடிய அளவில் சால்சிடிஸ் நாட்டில் சம்பவம் நடந்துவிட்டது. சால்சிடியாவின் மேற்குப் பகுதியிலிருந்த சியோன் (Scione) என்ற பட்டின மக்கள், ஏதென்சுக்கு எதிராகக் கலகம்செய்து, பிராசிடாஸ் வியப்படையும் வகையில் அவனை வரவேற்றது. ஏதென்சின் அதிகாரத்தை, 'பள்ளேன்' தீபகற்பத்திலுள்ள மற்றப் பட்டணங்களைவிட, சியோன் துணிந்து எதிர்த்தது. ஒடுங்கிய நிலப்பகுதியில் நீண்டு கிடந்த பொட்டிடேயால், அந் நாடு தனியே பிரிக்கப்பட்டது. அதனுல் அத்தீனியப் படையின் தாக்குதல்களுக்கு இலக்காக இருந்தது. பிராசிடாசின் வருகையும், அவனுடைய சொற்பொழிவுகளும் அவர்களுக்கு மிகுந்த உற்சாகத்தைத்

தந்தன. அவன் ஹெல்லாசின் விடுதலை வீரன் என்பதாக அவன் தலையில் ஓர் பொற்கிரீடத்தைச் சூட்டினார்கள். பந்தயத்தில் வெற்றி பெற்றவனுக்குத் தரும் சிறப்பைப்போல அவனுக்கு மாலை சூட்டி அவன்மீது தங்களுக்கிருந்த மதிப்பைக் காண்பித்தார்கள். அவனுடைய செல்வாக்கு அவ்வளவுக்கு உயர்ந்துவிட்டது.

சியோன் கலகத்திற்குமுன் செய்யப்பட்ட உடன்படிக்கையை அறிவிப்பதற்காக ஓர் அத்தீனிய ஆணையாளனும் ஓர் லாசிடோமோனிய ஆணையாளனும் அங்கு வந்து சேர்ந்தார்கள். சமாதான உடன்படிக்கையினால் ஏற்படும் பலனை சியோன் மக்கள் அனுபவிக்க அத்தீனிய நாட்டு ஆணையர் அனுமதிக்கவில்லை. ஏதென்ஸ் சியோன் கலகத்தைக் கேட்டு ஆத்திரமடைந்தது. அக் கலகம், ஸ்ப்பார்ட்டாவின் தரைப்படையை நம்பி உருவான கலகம். கிளியான் சியோனின் சினமூட்டும் செய்கையைத் தனக்குச் சாதகமாக்கிக்கொண்டு சியோன் அழிக்கப்படவேண்டுமென்றும், நாட்டு ஆண் மக்கள் கொலை செய்யப்படவேண்டும் என்றும் ஓர் உத்தரவு பிறப்பித்தான். இந்தச் சம்பவம் தீபகற்பப் பகுதியிலுள்ள மூன்று நாடுகளின் புவியியல் வேறுபாட்டைக் காட்டுகின்றது. ஆக்டேயின் கடற்கரை மனிதர் அணுகாவண்ணம் அவ்வளவு செங்குத்தானது அதை நீரால் சூழப்பட்ட நாடு என்பதைவிட அதை ஓர் பெருநிலப் பகுதி எனலாம். சித்தோனியாவின் அமைப்பு பெருநிலப் பகுதியாகவும் தீவாகவும் சமமாகக் கருதும் தன்மை வாய்ந்தது. பள்ளேன் பெரும்பாலும் ஓர் தீவு. அப்படிப்பட்ட புவியியல் மாறுபாடுகளை உடைய நாடுகளின் அரசியல் மாறுபாடுகளையும் நாம் காண்கிறோம். அத்தீனியர்கள் சியோன் நாட்டை இழந்ததால் ஏற்பட்ட ஆத்திரம் டோரோனைக் கைநழுவ விட்டதனால் ஏற்பட்ட ஆத்திரத்திலும் மிகக் கடுமையானது.

சியோன் கலகத்தைத் தொடர்ந்து மென்டே பட்டினத்தில் கலகம் நடந்தது. இக் கலகம் சமாதான உடன்படிக்கை ஏற்பட்டபின் தோன்றிய கலகம். பிராசிடாஸ் அந் நாட்டுடன் நேசவுறவு உடன்படிக்கை செய்துகொள்ளத் தாமதிக்கவில்லை. முதன்முதலில் அத்தீனியர்களே உடன்படிக்கையை மீறினார்கள் என்று அவன் குற்றம் சுமத்தினான். மென்டே நிகழ்ச்சி சியோன் நிகழ்ச்சிக்கு மாறுபட்டது. ஏனென்றால் மென்டே நாட்டில் மக்கள் கலகத்தைத் தோற்றுவிக்கவில்லை. ஆனால் சில குழு ஆட்சிக் கும்பலே அக் கலகத்தை மூட்டியது. லின்ஷியாவின் நாட்டு மன்னன் அராபேயசுக்கு எதிராகப் படையெடுக்க பெரிடிகாசுக்கு உதவிபுரிய பிராசிடாஸ் இணங்கி விட்டான். மாசிடோனிய மன்னனாகிய பெர்டிக்காஸ், பெலப்போனிசியப் படைவீரர்களுக்கு அளிக்கும் சம்பளத்தொகையில் ஒரு பகுதியைக்

கொடுத்துவந்தான். அதனல் கிரேக்கர்களுக்குப் பயனில்லாத போரில் பிராசிடாஸ் ஈடுபட்டான். யுத்தத்தில் அர்ராபியாஸ் தோற்கடிக்கப் பட்டான். அவனுக்கு உதவிபுரிய இல்லிரியாவிலிருந்து (Illyria) படைப்பலம் வந்தது. இல்லிரியர்கள் யுத்தமுறையில் புகழ் பெற்ற வர்கள். அவர்களுடைய வருகை மாசிடோனியர்களிடம் பயத்தைத் தோற்றுவித்தது. பெரிடிக்காசின் படை ஓட்டம் பிடித்தது. பிராசிடாஸ் இடுக்கணில் சிக்கிக்கொண்டான். ஆனல் அவன் வெற்றிகரமாகப் பின்வாங்கிச் சென்ருன். அச் சம்பவம் பிராசிடாசுக்கும் மாசிடோனியர்களுக்கு மிடையே பகையை உண்டாக்கிற்று. பெரிடிக்காஸ் மறுபடியும் கட்சி விட்டான். இப்பொழுது அவன் அத்தீனியர்களுடன் சேர்ந்து தனக்கு உதவியாக அனுப்பப்பட்ட மாசிடோனியப்படை தெசாலிக்குள் புகாவண்ணம் தடுத்துவிட்டான்.

பிராசிடாஸ் டோரோனேக்குத் திரும்பிவந்து, நிசியாஸ், நிசிராட்டஸ் என்பவர்களின் தலைமையில் ஐம்பது அத்தீனியப் போர்க்கப்பல்கள் மென்டேயை மீட்டதையும், அவைகள் சியோனை முற்றுகையிட்டுக் கொண்டிருப்பதையும் கண்டான். தெரேசில் ஏற்பட்ட பகைமை எங்கும் பரவாவண்ணம் திறமையோடு தடை செய்யப்பட்டது. சமாதான உடன்படிக்கை எந்த நோக்கத்தோடு ஏற்கப்பட்டதோ, அந்த நோக்கம் நிறைவேருமையைத் தடுக்க முடியவில்லை. துவக்கத்தில் ஒத்துக்கொண்ட முறைப்படியே சமாதானப் பேச்சுக்கள் பின்பற்றப் படுவதும் இயலாததாயிற்று. அவ்வாண்டு முடிவில் ஏதென்சின் பொது மக்களின் கருத்து. ஓர் குறிப்பிடத்தக்க மாறுதல் அடைந்தது. மறுபடியும் கிளியானின் செல்வாக்கு உயர்ந்திருந்தது. நிசியாஸ் ஸ்பார்ட்டர்களின் கைப்பொம்மையாக இருந்ததைப்போல் பிராசி ஏதென்சின் கைப்பொம்மையானது ஸ்பார்ட்டாவைத் திகைக்கச் செய்தது. அவனுடைய செய்கை முதலில் சியோனிலும், பிறகு மென்தேயிலும் பாதுகாப்புக்கான நடவடிக்கை அன்று, தன்னலத்திற்காகச் செய்த ஓர் செயல். சியோனின் பொன்முடி, அவனுடைய பேராசையைக் கிளப்பிவிடும் ஓர் சக்திவாய்ந்த மந்திரமாக இருந்தது. அதனல் அவன் தன் விருப்பப்படியே போர் விளையாட்டு விளையாட ஆரம்பித்தான். அவனுடைய கொள்கை மிகவும் வருந்தத்தக்க ஓர் கொள்கை. ஏனென்ருல் பள்ளேன் பட்டினங்களை ஏதென்சு கடற்படைக்கு எதிராகப் பாதுகாப்பது இயலாத செயல் என்பதை அவன் நன்கு அறிவான். அவனுடைய நாட்டுத் தலைவர்கள் உண்மையாக விரும்பின சமாதான உடன்படிக்கை நிறைவேருவண்ணம் வெற்றிகரமாகத் தடுத்தான். பிராசிடாசும் கிளியானும் சமாதானத்தின் விரோதிகள் என்று தூசிடைடிஸ் கூறுகிருன். பிராசிடாசின் நோக்கங்கள் சுயநல நோக்கங்கள். ஆனல் கிளியானுடைய நோக்கங்கள் எத்தகையதாக இருந்த போதிலும், அரசியல் தலைவனுக்கேற்ற நோக்கங்கள். ஏதென்சுப்

பேரரசு குன்ருத வலிமையுடன் இருக்கவேண்டுமென்ற பெரிக்கிளீசின் கொள்கையை கிளியான் பின்பற்றிஞன். திரேசில் பிராசிடாசின் முன்னேற்றத்திற்கு வன்மைமிக்க எதிர்ப்பை உண்டுபண்ணுமல் அக் கொள்கையை நிறைவேற்ற முடியாதென்பதையும் அவன் அறிந்திருந் தான். சமாதான உடன்படிக்கையில் தனக்கு விருப்பமில்லை என்பதை எளிதில் மறைக்க முடியாதபடியால், கிளியான் சண்டையை விரும் பிஞன் என்று தூசிடைடிஸ் கூறும் குற்றச்சாட்டில் சிறிதளவும் உண்மையில்லை. தற்கால உடன்படிக்கைக் காலம் முடிந்தபோது, ஆம்பிபோலிஸ் நாட்டைத் திரும்பக் கைப்பற்ற வேண்டுமென்று ஓர் தீர்மானத்தைக் கிளியான் கொண்டுவந்தான். முந்தின சமயம் அவன் பைலோசில் அடைந்த வெற்றியின் காரணமாக அவன் படைக்குத் தலைமைதாங்க விரும்பிஞனு, அல்லது போர்முனையின் தளர்ச்சியும், எதிர்க்கட்சியும் சேர்ந்து அவனைப் படைக்குத் தலைமை தாங்கச் செய் தனவா என்று தெரியவில்லை. அவனுடைய முயற்சி தோல்வியடைவ தில் சிறிதளவுகூட சந்தேகமற்ற நிசியாசும் சமாதானத்தை விரும்பும் கட்சியும் அவனுக்கு எவ்வளவு இடையூறுகளை விளைவிக்க முடியுமோ, அவ்வளவையும் தோற்றுவித்தார்கள் என்பது உறுதி. ஏனெனில் அவர்கள் அப் போர் முயற்சி தோல்வியடையுமென்று நம்பிஞர்கள்.

## 15. ஆம்பி போலிஸ் யுத்தமும் நிகியாஸினுடைய சாமாதானமும் :

கிளியான் பளுவுள்ள ஆயுதம் தாங்கிய ஆயிரத்து இருநூறு அத் தீனியத் தரைப்படை வீரர்களையும், முன்னூறு அத்தீனியக் குதிரைப் படை வீரர்களையும் அத்துடன் நேச உறவு நாடுகளின் போர்வீரர்களை யும் கொண்ட முப்பது கப்பல்களுடன் புறப்பட்டான். சியோனை இது வரையில் முற்றுகையிட்டுக் கொண்டிருந்த வீரர்கள் சிலரையும் சேர்த்துக் கொண்டான். அவன் டோரனேவை ஆகிரமித்தும் லாசி டோமோனிய ஆட்சித்தலைவரைக் கைது செய்தும் மெச்சத் தக்க வெற்றியை ஆரம்பத்தில் அடைந்தான். அந் நாட்டைப் பாதுகாக்க பிராசிடாஸ் தகுந்த நேரத்தில் அங்கு வந்து சேரவில்லை. அவன் சித்திரமோன் முகத்துவாரத்துக்குச் சென்ருன். தன் தலைமைக் காரியாலயத்தை ஈயான் (Eion) என்னுமிடத்தில் அமைத்துக் கொண் டான். தேரேஸிலிருந்தும், மாசிடோனியாவிலிருந்தும் படைப்பலம் வரும் வரையில் காத்திருப்பதே அவன் நோக்கம்.

சித்திரமோன் ஆற்றின் முகத்துவாரம் கெர்க்கிநைட்டிஸ் ஏரியாக விரிந்துள்ளது. மறுபடியும் அங்கிருந்து கிளம்பி, மேற்கு நோக்கி வளைந்து சென்று கடலுக்குள் விழுவதற்கு முன் ஈயான் நாட்டுக்குப்

பக்கத்தில் ஓர் குன்றைச் சுற்றி ஓர் வளையத்தைப் போல் ஓடுகிறது, இந்த வளைவினுள் ஈயோன் பட்டினம் கட்டப்பட்டிருக்கிறது. ஆம்பி போலிஸ் என்றால் நீர் சூழ்ந்த பட்டினம் என்பது பொருள். அந்த ஆறு அந்தப் பட்டினத்துக்கு இயற்கை அரண், அதனுடைய கிழக்குப் பகுதி யில்மட்டும் செயற்கை அரண் தேவைப்பட்டது. பட்டினத்திற்கு மேற் கில் ஆற்றின் வலப்பக்கத்தில் சிர்புலியோன் (Cerdylion) குன்று இருக் கிறது. கிழக்கில் பாங்கேயஸ் (Pangaeus) மலைச்சிகரங்கள் இருக்கின்றன. பாங்கேயாசை ஆம்பிபோலிஸ் குன்றுடன் ஒரு பாறை சேர்க்கிறது. பட்டினத்தின் மதிற் சுவர் அந்தப் பாறையின் குறுக்கே அமைந்திருந் தது. சித்திரமோன் பாலம் சுவரின் தென் மேற்குக் கோடியின் வெளியே இருந்தது. சுவரையும் பாலத்தையும் இணைக்கும் வேலி அமைக்கப்பட்டிருக்கின்றது. பிராசிடாஸ் தன்னுடைய படை வீரர்கள் சிலரோடு செர்டிலியோன் குன்றுக்குச் சென்று அங்கே தங்கினான். அக் குன்றிலிருந்து சுற்றிலுமுள்ள நாட்டைக் கண்ணுக் கெட்டிய தூரம் பார்க்க முடியும். பிரெசிடாஸ் கவர்னராக நியமித்த கிளியரி டாஸ் தலைமையில் ஆம்பி போலிஸ் மலையடிவாரத்தில் எஞ்சிய படை வீரர்களுடன் தங்கியிருந்தான். அவர்களுடைய படை வீரர்களின் எண்ணிக்கை தன் சுமார் இரண்டாயிரம் படை வீரர்களுடைய அதிருப்தியும், முணு முணுப்பும் குறிப்பிட்ட நேரத்துக்கு முன் முன்னேற்றும்படிக் கிளியானைத் தூண்டின. போர்முறை அனுபவ மற்றகிளியானின் தலைமையில், படை முறையில் சிறந்த அனுபவ முள்ள பிராசிடாசை எதிர்ப்பதற்காக ஏதென்சை விட்டு வந்ததை எண்ணியே, படை வீரர்கள் முனகினார்கள். ஏதாவது செய்தாக வேண்டும் என்ற நோக்கத்தோடு அவன் தன்னுடைய போர் வீரர் களுடன் பட்டினத்தின் சுவர்ப் பக்கத்திலிருந்த பாறைமீது ஏறினான். அங்கிருந்து அவன் அப்பாலுள்ள நாட்டைப் பார்க்க முடிந்தது. பிராசிடாஸை செர்டிலியன்மீது பார்த்தபோது தாம் தாக்கப் படுவோம் என்ற பயம் அவனை விட்டு நீங்கியது. படை உதவி வருவதற்கு முன்னே தாக்குதலைத் துவங்கவேண்டுமென பிராசிடாஸ் தீர்மானித்து விட்டான். அத்தீனியர்கள் வருவதைக் கண்டதும், செர்டிலியோனிலிருந்து இறங்கி ஆம்பிபோலிசுக்குள் நுழைந்தான். மலைத் தொடரை அடைந்த அத்தீனியர்கள் விரோதியின் படைகள் பட்டினத்துக்குள் திரண்டு இருப்பதையும், பிராசிடாஸ் அத்தேனே ஆலயத்தில் பூசை செய்வதையும் கண்டார்கள். கிளியான் உடனே தாக்குதலுக்குப் பட்டினத்துச் சுவரின் அருகில் விரைந்து செல்லும்படி காலாட் படைக்கும், குதிரைப் படைக்கும் கட்டளையிட்டான். இடது பக்கம் திரும்பி ஈயோனுக்கு (Eion) பின்வாங்கிப் போகும்படிக் கட்டளையிட்டான். பின் வாங்கிச் செல்ல அந்த ஓர் எல்லைதான் இருந்தது. போரிடும்போது, தேவைப்பட்டால், அதைச் சமாளிக்க கிளியான் எவ்வித ஏற்பாடும் செய்யாதது பெரும் தவறு. தப்பித்துச்

செல்ல நேரம் இருக்குமென்று தவருக எண்ணிக்கொண்டான். பிராசிடாஸ் 150 போர் வீரர்களுடன் கோட்டை வாயில் ஒன்றின் வழியாக வெளியே வந்தான். சாலையை நோக்கி விரைந்து சென்று படையின் நடுப்பகுதியைத் தாக்கினுன். படையின் இடதுபக்கம் இருந்தவர்கள் பயந்தோடினுர்கள். கிளாரிடாஸின் படை அத்தீனியப் படையின் வலப் பகுதியைத் தாக்கியது. கிளியான் யுத்த அபாயங்களின் அனுபவ மற்றவனுக இருந்தபோதிலும் அத்தீனிய வீரர்களில் சிறந்தவனன்று என்பதை அச்சமயம் நிரூபித்து விட்டான்.

இருப்பினும் அவன் ஓட்டமெடுத்தான். ஆனுல் எதிரியின் கவண்கல்லினுல் அவன் தாக்கப்பட்டு கீழே விழுந்தான், மரணம் பிராசிடாசின் வீரத்தை அழித்ததைப் போலவே கிளியானின் கோழைத்தனத்தையும் அழித்துச் சம நீதி வழங்கியது. கிளாரிடாசுக்கு உதவிபுரிய பிராசிடாஸ் முனைந்தபொழுது படுகாயப்பட்டு பட்டணத்துக்குள் சுமந்து செல்லப்பட்டான். பகைவன் தோற்கடிக்கப்பட்டு, துரத்தப்பட்ட செய்தியை அறியும்வரையில் அவன் உயிருடன் இருந்தான். நடைமுறையில் அவனுடைய வெற்றி தோல்வியாக மாற்றப்பட்டது. ஆம்பிபோலிஸ் மக்கள் ஓர் வீரனுக்குச் செலுத்தும் மரியாதையை அவனுக்குச் செலுத்தினுர்கள். அவனைத் தங்கள் நாட்டின் முதல்வனுகக் கருதினுர்கள். தங்கள் குடியேற்ற நாட்டின் உண்மையான முதல்வனுகிய அத்தீனியன் ஹேகனின் நினைவுச் சின்னங்களையெல்லாம் அப்புறப்படுத்தினுர்கள். பிராசிடாசுக்குப் பூசைகள் செய்யப்பட்டன. வருடாந்திரப் போட்டிப் பந்தயங்கள் அவனைக் கௌரவப்படுத்த நடத்தப்பட்டன.

பிராசிடாசின் மரணம் சமாதானத்தின் தடைகளை நீக்கிற்று. ஏனென்ருல் அவனுக்கு இணையானவன், அல்லது அவனுடைய பெருந்திட்டங்களைத் தேரேசில் தொடர்ந்து நிறைவேற்றுபவன் எவனுமில்லை. கிளியானுடைய தோல்வியும் மரணமும், நிசியாசும், சமாதானக் கட்சியும், விரும்பியவாறே தடையின்றிச் செயலாற்ற இடமளித்தது. கிளியானைவிட, அவனைத் தவருன நிலைமையில் அமர்த்திய சமாதானக் கட்சியினர்தான் அழிவுக்குப் பொறுப்பாளிகள். இவ்விதமாக ஆம்பி போலிஸ் சண்டை சமாதான உடன்படிக்கையை உடனே செய்வதற்கு வழியாயிற்று. நகைச்சுவைக் கவிஞர்கள் யுத்த உணர்ச்சியினுலும் குழப்பத்தினுலும் கிரேக்கப் பட்டினங்களை அழித்த சக்திகள் (பிராசிடாஸ், கிளியான்) மறைந்ததற்காக மகிழ்ந்திருப்பார்கள். சமாதான விருப்பம் ஏதென்சைவிட ஸ்பார்ட்டாவில் மிகுதியாக இருந்தது. யுத்தத்திலிருந்து ஓய்வுபெறும் விருப்பத்தோடு தங்கள் பட்டினத்தில் ஒளி மங்கிவிட்டதென்றும், அதை நீக்க வருந்தி உழைக்கவேண்டுமென்ற எண்ணமும் அத்தீனியர்களுக்கு ஏற்பட்டது. பாப்டோரியா

கைதிகள் அத்தீனியச் சிறையிலிருந்தபடியால் அவர்கள் அட்டிகாவைப் படையெடுக்கும் முயற்சியை விட்டுவிட நேர்ந்தது. சமரச யோசனைகள் இலையுதிர்காலத்திலும் குளிர்காலத்திலும் நடந்தன. மார்ச் மாதமுடிவில் சமாதான உடன்படிக்கை செய்யப்பட்டது.

நிசியாஸ், பெலிஸ்ட்டோனுஸ் ஆகிய இரு பெருந்தலைவர்களால் ஐம்பது ஆண்டுச் சமாதான உடன்படிக்கை உருவாயிற்று. பெலப் போனீசியாவிடமிருந்து கைப்பற்றிய எல்லா நாடுகளையும் விட்டு விட ஏதென்சு இசைந்தது. அப்படித் திருப்பி ஒப்படைக்கப்பட்ட இடங்களாவன; பைலோஸ், சித்தேரா, மெத்தோன். அடலாண்டா தெசல்லியில்பெட்லாண்ட முதலியன. ஆனுல் சோல்லியான், அனுக்ட் ரேரியன், நெசியாவின் துறைமுகம் முதலியவைகளைத் தனக்குக் கொடுத்துவிடும்படி ஏதென்சு வற்புறுத்தியது. லாசிடோமோனியர்கள் ஆம்பிபோலிசைத் திருப்பிக் கொடுத்து விட்டார்கள். அப்படியே ஏதென்சுக்கு அரிட்டைடிஸ் குறிப்பிட்ட திறை செலுத்திவந்த சுதந்திர நாடுகளாகிய ஆர்ஜிலஸ், ஸ்ட்டாஜிரா, அகான்தஸ், ஸ்கோலஸ், ஒலிந்தஸ், ஸ்ப்பார்ட்டோலஸ் ஆகிய நாடுகளை லாசிடோமோனியா விட்டு விட்டது. சித்தாயிரோன் (Cithaeron) குன்றின் மேலுள்ளதும் சமீபத்தில் போயிஷியர்கள் கைப்பற்றியதுமான பானுக்ட்டோன் (Panacton) என்ற கோட்டை ஏதென்சுக்குக் கொடுக்கப்பட்டது. ஏதென்சு வசமிருந்த டோரோனே போன்ற சில பட்டினங்களின் கதியை நிர்ணயிக்கும் உரிமை ஏதென்சுக்குக் கொடுக்கப்பட்டது. இரு நாடுகளும் தங்கள் வசமுள்ள கைதிகளை விடுதலை செய்துவிட வேண்டியதாயிற்று.[1]

நிரந்தரமான சமாதானம் ஏற்படுவதற்கான சூழ்நிலையில்லை என்பது உடனே தெரிந்துவிட்டது. ஸ்பார்ட்டாவில் பெலப்போனீ

[1] இந்த உடன்படிக்கையின் விவரங்களையும் கி.மு. 423-இல் ஏற்படுத்திய தற்காலிக உடன்படிக்கையின் விவரங்களையும் தூசிடைடிஸ் பதிவு செய்து வைத்திருக்கிருன். கிரேக்க நாடுகளின் அரசியல் சூழ்ச்சித் திறனைப்பற்றி அறிவதற்கு அவைகள் முக்கியத்துவம் வாய்ந்தவைகளாக இருக்கின்றன. நிசியாஸ் உடன்படிக்கையின் மற்றப் பிரிவுகள் பின்வருமாறு அமைத்திருக்கின்றன: கிரீஸ் நாட்டின் பொதுக் கோயில்கள் எல்லோருக்கும் சொந்தமாக இருக்கவேண்டும். டெல்பியர்களும் அவர்களுடைய கோயிலும் சுதந்திரமாக இருக்கும் உறுதிவேண்டும். கருத்து மாறுபாடுகள் சட்டப்படி தீர்க்கப்பட வேண்டும். அத்தீனியர்களிடம் ஒப்படைக்கப்பட்டவர்கள் எந்தப் பட்டினத்தைச் சேர்ந்தவர்களாக இருந்தபோதிலும், அவர்கள் அதை விட்டுப்போவதற்கும் போகும்போது தங்கள் உடைமைகளையும் எடுத்துச் செல்வதற்கும் அனுமதி அளிக்கப்பட வேண்டியது. ஆர்ஜிலஸ், ஒலின்தஸ் முதலான நாடுகள் விரும்பினுல் ஆதென்சின் நேச உறவு நாடுகளாகலாம். மேசிபிரனே, சானே, சின்கி ஆகிய நாடுகளுக்கு சுதந்திரம் அளிக்கப்பட்டது. இந்த ஒப்பந்தத்தில் சேர்க்கத் தவறிவிட்டவைகளை, அதென்ஸ், லாசிடோமோனியா ஆகிய இருநாடுகளின் பரஸ்பர ஒப்புதலின் பேரில் திருத்தங்கள், சேர்க்கப்பட வேண்டியது. ஒவ்வோராண்டும் சமாதான உடன்படிக்கையின் விசுவாசப் பிரமாணம் புதுப்பிக்கப்படவேண்டும். ஒலிம்பியா, டெல்பி, இஸ்த்மஸ், ஏதென்சின் அக்ராபோலிஸ், அமிகிலேயிலுள்ள அப்பொல்லா கோயில் ஆகிய இடங்களிலுள்ள தூண்களில் உடன்படிக்கையின் நிபந்தனைகள் பொறித்து வைக்கப்பட வேண்டும்.

சிய நேச வுறவு நாடுகளின் பிரதிநிதிகள் கூடிய உடன்படிக்கையின் வாசகங்களை ஆழ்ந்து ஆராய்ந்தபோது, அவைகள் நியாயமற்றவைகள் என்று அவைகளை ஒப்புக்கொள்ள கொரிந்தியா, போயிஷ்யா, மெகாரா ஆகிய மூன்று முதன்மையான நாடுகள் மறுத்துவிட்டன. கொரிந்தியா தன்னுடைய சோல்லியோனும் அனக்டோரியனும், தன்னிடமிருந்து எடுத்துக்கொள்ளப்பட்டதற்காக ஆத்திரமடைந்தது. நிசியாவைப் பகைவனுக்கு விட்டுவிடுவதற்காக மெகாரா குறைப்பட்டது. போயிஷ்யா தன்னுடைய பானக்ட்டோனைப் பகைவனிடம் கொடுத்துவிட விரும்பவில்லை. என்றாலும் ஏதென்சு மிகவும் குறைவான இடங்களைப் பெறவிரும்பவில்லை. இவை காரணமாக உடன்படிக்கை முழு உடன்படிக்கையல்ல. இந்த யுத்தத்திற்கே காரணமாயிருந்த நேச நாடுகள் அதை ஏற்றுக்கொள்ள மறுத்தன. எலிஸ் (Elis) நாடும் அவற்றுடன் சேர்ந்து விட்டது. நிசியாசின் அரசியல் தந்திரம் முழுத் தோல்வியடைந்தது. நிரந்தர சமாதானத்துக்காகத் திட்டமிட்டு உருவாக்கிய உடன்படிக்கை படுதோல்வி அடைந்து விட்டது. ஏதென்சு, கொரிந்தியா என்ற இரு நாடுகளிடையே ஏற்பட்ட வாணிபப் போட்டி இந்த யுத்தத்திற்கு முதற் காரணமாக இருந்தாலும், ஸ்ப்பார்ட்டாவின் நலன் அதனால் பாதிக்கப் படாமல் இருந்தாலும், அப்போது ஏற்பட்ட நெருக்கடியைத் தீர்த்த சிறப்பு அந்த உடன்படிக்கைக்கு இருக்கின்றது.

நாம் பெரிக்கிளீசின் பேரரசுக் கொள்கையை நேர்மையான தென்று ஒப்புக்கொள்வோமானால், அந்தக் கொள்கை தீவிரமாக செயல்பட வேண்டுமென் வற்புறுத்திவந்த கிளியானுடைய கொள்கையையும் நேர்மையானதென்று ஒப்புக்கொள்ள வேண்டும். நிசியாசும் அவனுடைய கட்சிக்காரர்களும் கிளியானுடைய எதிர்ப்பில்லாமல் தங்கள் தங்கள் விருப்பப்படியே அரசாங்கத்தை நடத்தியதால் ஏற்பட்ட நலன்களைவிட, கிளியானிடம் அரசாங்கத்தை ஒப்படைத்து, போருக்கு வேண்டிய வாய்ப்புகளனைத்தும் அவனுக்கு அளிக்கப்பட்டிருக்குமானால் அவன் சேவையால் ஏதென்சுக்குச் சிறந்த நலன்கள் (பெரிக்கிளிஸ் எண்ணிய நலன்கள்) கிட்டியிருக்குமென்பதைத் துணிந்து சொல்லக்கூடும். தூசிடைசினால் வெறுத்துக் கண்டிக்கப் படுவதும், அரிஸ்ட்டோபேன்ஸ் என்பவனால் எக் காலத்திலும் இகழ்ந்து கூறப்படுவதுமான குறைபாடுகள், கிளியான் போன்ற சிறப்புடைய சில அரசியல் வாதிகள் மீது எதிர் காலத்திலே சாற்றப் படுவதுண்டு. நாம் தூசிடைஸ் என்பவனின் சொந்த ஒரு தலையான கூற்றுகளுக்குச் செவி சாய்த்தால், கிளியானின் பண்புகளை மறந்து, அவன் முரடன், கூச்சல் போடுகிறவன், இழிகுலத்தோன், ஆத்திர மிக்கவன், பிரபுக்களுக்கு எதிரி, அரசாங்க அதிகாரிகளுக்கும் பகைவன், மக்களின் காவல் நாய்—என்று நம்பிவிடுவோம். அவனுடைய

அரசியல் நுண் அறிவோ அல்லது அரசியல் கண்ணியமோ குறைவான தென்று யாரும் மெய்ப்பிக்க முடியாது. அரிஸ்ட்டபேன்ஸ் (Aristophanes) எழுதிய நைட்டுகள் (Knights) என்ற நூலில் கிளியானைப் பற்றிய குறிப்புக்கு வரலாற்றுச் சிறப்பு இல்லை; அது நகைச்சுவைப் பத்திரிகையில் காணப்படும் கேலிச்சித்திரத்துக்கே ஒப்பாகும். அவன் கூட கிளியானின் தாக்குதலால் அவதியுற்றான்.

கிளியான் அவனை மேல் சபைக்கு (Senate House) இழுத்துச் சென்றான். அவனைக் கீழே தள்ளி, அவன் மேல் உட்கார்ந்து கொண்டு, மனம் கொண்ட மட்டும் அடித்துக் குத்துயிரோடு விட்டுவிட்டான்', பெர்ரி — (Frere).

நிசியான் சமாதான உடன்படிக்கையைச் சிறப்பித்துக்கொண் டாட அரிஸ்டோபேன்ஸ் என்பவனுடைய நாடகம் நடத்தப்பட்டது. அதன்மூலம் ஏதென்சு மக்களின் மட்டற்ற மகிழ்ச்சி தெளிவாகக் காணப்படுகின்றது. கிளியானின் கொள்கையால், கவிஞனின் மகிழ்ச்சி விரைவில் தோன்றியதென்பதை அவன் இந் நாடகத்தில் மறைத்து விட்டான்.

நாம் அந்த நகைச்சுவைக் கவிஞனுடைய கருத்தைத் தவறாகப் புரிந்து கொண்டால் அரிஸ்டோபேன்சைத் தவறாக எடுத்துக் கொள்வோம். நகைச்சுவை நாடகங்கள் பொதுமக்கள் அபிப்பிராயத் துக்கு வழி காட்டுவதில்லை. ஆனால் அவை மக்கள் குரலின் எதிரொலி யாக இருந்தன. நகைச்சுவை நாடகங்கள் உயர்வான கோட்பாட் டையோ, உயர்ந்த செயலையோ நிலை நாட்டியதில்லை. சிறந்த நாடகம் சந்தை வெளியில் இருக்கும் மக்களை மகிழச் செய்கின்றது; மக்களின் சிந்தனைக்கு விடையளிக்கின்றது. அரிஸ்ட்டபேன்ஸ் தவறானதும் கோணலானதுமான அரசியல் கருத்தைக் கொண்டவன். சிறப்பு வாய்ந்த மக்களாட்சிக் கொள்கையால் ஏதென்ஸ் பெருமைபெற்றது. அந் நாட்டு மகனாகிய அரிஸ்டோபேன்ஸும் அதனால் சிறப்புப்பெற் றான். அவன் வாழ்ந்த காலத்தின் அமைப்பையும் தன்மையையும் நகைச்சுவை என்ற கண்ணாடியில் கோணலாகக் காட்டுதல் அவ னுடைய தொழிலாகவும் அவனது கவியின் தன்மையுமாக இருந்தது. ஆனால் "செல்வர்களையும் புகழ் வாய்ந்தவர்களையும், ஊதா நிறமான தலைப்பாகை அணிந்தவர்களையும் உலக நாடுகள் கண்டு பொறாமைப் படும் ஏதென்ஸ்" என்று எழுதிய அக்கவிஞனுக்குத் தன்னுடைய நாட் டின் பேரரசை நிலைநாட்டப் போராடியவர்களிடம் அனுதாபம் இல்லாதிருக்க முடியாது.

# 11. அத்தீனியப் பேரரசின் சிதைவும் அழிவும்

## 1. ஆர்காமசுடன் புதிய அரசியல் இணைப்பு

ஸ்பார்ட்டா சமாதானத்தை விரும்புவதற்கான சிறப்பான காரணங்கள் இருந்தன. பெலோப்பேனிசியாவின் செயல்கள் அதற்குத் தொல்லையைக் கொடுத்தன. மேன்ட்டினே (Mantinea) தெற்கு நோக்கிப் படிப்படியாகத் தான் எல்லையைப் பெருக்கிக்கொண்டு வந்தது. ஸ்பார்ட்டா அதற்கு ஒப்புதலளிக்க முடியவில்லை. ஸ்பார்ட்டா எலிஸுக்கு எதிராக ஒரு போரில் அதன் பகைவனுடன் சேர்ந்திருந்தது. தனக்கெதிராக ஸ்பார்ட்டா போரிட்டபடியால் எலிஸ் அதன்மீது வெறுப்பும் விரோதமும் கொண்டது. இவை யாவும் சிறிய காரணங்கள். இவைகளைவிட மிகவும் முதன்மையான காரணம், ஆர்காசுடன் (Argos) செய்துகொண்ட உடன்படிக்கையின் காலம் முடிவடையும்போது ஏற்பட்ட சூழ்நிலை. ஸ்பார்ட்டா ஏதென்சுமீது போர் தொடுத்தபோது, பெலப்போனீசியப் பகைமை முற்று என்று கருதியிருந்தது. ஏனென்றால், இனி பத்து வருடங்களுக்குத் (தான்) தன்னுடைய பழைய பெலப்போனீசிய விரோதியினிடமிருந்து தப்பியிருக்கலாம் என்று அது எண்ணியது. ஆனல், இப்பொழுது ஏதென்சுடன் ஆர்காசும் ஒன்றுசேரும் வாய்ப்பு இருந்தது. ஆர்காஸ், ஸ்பார்ட்டாவுடன் சமாதான உடன்படிக்கையை மறுபடியும் புதுப்பிக்க இசைந்து வராதபடியால், ஏதென்சுடன் ஒப்பந்தம் செய்து கொள்வது மிகவும் தேவையாயிற்று. ஸ்பார்ட்டாவுடன் செய்துகொண்ட சமாதான உடன்படிக்கை ஏதென்ஸுக்குத் தடையாக இருந்தது. இந்த உடன்பாடு படுதோல்வி அடைந்தது. கொரிந்தியாவும் இதர நேசஉறவு நாடுகளும், அந்த உடன்படிக்கையை ஏற்றுக்கொள்ள மறுத்துவிட்டன. மேலும் உடன்படிக்கையில் கையொப்பமிட்ட நாடுகளும், அதன் நிபந்தனைகளின்படியே ஒழுகுவது இயலாதென்பதை உணர்ந்தன. ஆம்பிபோலிசை ஒப்படைக்க சால்சியர்கள் மறுத்தார்கள். அதை

ஒப்படைக்கும்படி ஸ்பார்ட்டா சால்ஸியாவை வற்புறுத்த இயல வில்லை. ஆகையினுல் ஏதென்ஸ் உடன்படிக்கையின் நிபந்தனைகளை நிறைவேற்றி வைக்க மறுத்துவிட்டது. இந்தச் சூழ்நிலையில் ஸ்பாக்ட் டேரியா கைதிகளை விடுவிக்கும் கவலை ஸ்பார்ட்டாவுக்கு அதிகரித்தது. ஆகையால் ஸ்பார்ட்டா தன் பழைய விரோதியோடு தற்காப்புக்காக ஒரு உடன்படிக்கையை ஏற்படுத்தத் திட்டமிட்டது. ஸ்பாக்ட் டேரியா கைதிகள் உடனே ஸ்பார்ட்டாவிடம் ஒப்படைக்கப்பட் டார்கள். ஏதென்ஸ் இன்னும் பைலோசையும் சித்தேராவையும் தன் னுடைய ஆதிக்கத்தில் வைத்திருந்தது.

ஏதென்ஸ், ஸ்பார்ட்டா என்ற இரு நாடுகளின் கூட்டு ஒப்பந்தத் தால் பெலப்போனீசியக் கூட்டமைப்பு கலைந்தது. கொரிந்தியா, மேன்டினு, எலிஸ் ஆகிய நாடுகள், தங்களுடைய தலைவனுல் கைவிடப் பட்டதை அறிந்து, அதனின்றும் விடுபட்டு, தற்சமயம் தலைதூக்கிய ஆர்காஸ் (Argos) நாட்டுடன் ஓர் நேசஉறவு (alliance) ஏற்படுத்தின. தெரேஸின் சால்சிடியர்களும் (Chacidians) இப் புதிய நேசஉறவில் சேர்ந்துவிட்டனர் என்றபோதிலும் ஸ்பார்ட்டா, ஏதென்ஸ் ஆகிய இரு நாடுகளிடையே ஏற்பட்ட நெருங்கிய உறவு நீடிக்குமென்ருே, உறுதிப்படுமென்ருே கருதுவதற்கும் அஞ்சுவதற்கும் காரணம் இருந் தது. ஏதென்ஸ் ஆம்பிபோலிசை திரும்பப்பெறும் வரையில் (பிற நாடுகளும் சமாதானத்தை ஏற்றுக்கொள்ளும் வரையில்) சித்தேரா வையும் (Cythrera)பைலாசையும் விட்டுவிடாது. ஸ்பார்ட்டாவின் அத் தீனியஎதிர்ப்புக் கட்சியின் கை ஓங்கியது. ஏதென்சிலும் கட்சி சம நிலையில் மாறுதல் ஏற்பட்டது. இதனுல்உறுதியற்ற அரசியல்கூட்டுறவு தலைகீழாய்க் கவிழ்ந்துவிட்டது. அப்போது கிளியோனைப் போன்ற திறமையுள்ளவனும் அவனுடைய இனத்தைச் சேர்ந்தவனுமான ஹைபர்போலஸ் (Hyperbolus) நியாசின் எதிர்கட்சிக்குத் தலைவனுக இருந்தான். ஹைபர்போலஸைப் போன்ற அரசியல்வாதி எவனும் நகைச்சுவைப் புலவர்களால் ஏளனம் செய்யப்பட்டதில்லை. ஹைபர் போலஸ் கிளியானின் நிழல் என்று வருணிக்கப்பட்டுள்ளான். ஆல்ஸிபி யாடிஸ் உயர்குடிப் பிறந்தவன். சிறந்த அறிவுள்ளவன். ஆனுல் ஒழுக்க மற்றவன். அவன் தந்தை கிளினியாஸ் (Cleinias) என்பவன். ஆல்சி பிடியாஸ் எதிர்க்கட்சியில் சேர்ந்தபடியால் அக் கட்சி வலுவடைந்து விட்டது. அவன் தன் இனத்தைச் சேர்ந்த பெரிக்கிளீசினுல், குடி யாட்சிக் கொள்கையை நன்கறிந்தவன். அவன் ஒப்பற்ற அழகும், ஆற்றலும் உடையவன். நல்வினைப் பயனுக திரண்ட பரம்பரைச் சொத்து அவனை வந்தடைந்தது. ஆகையினுல், அவன் அரசியலில் சிறந்த ஆர்வமுள்ளவனுகத் தன்னைக் காட்டிக் கொள்வதற்கு அது மிகவும் உதவியாக இருந்தது. ஒழுக்கமின்மையும், இறுமாப்பும் சேர்ந்து அவனுடைய உறவினருக்கு அதிர்ச்சியையும், நாட்டுக்கு

ஆத்திரத்தையும் விளைவித்தன. யாரும் அவனைத் தண்டிப்பதற்குத் துணியாத அவனுடைய அக்கிரமங்களைப் பற்றிய கதைகள் யாவும் உண்மையானவை அல்ல. அத்தீனியக் குடியாட்சி முறையில் உயர்குடிப் பிறந்தோருக்கும் செல்வமுடையோர்களுக்கும் தேவை யற்ற மரியாதையும் செல்வாக்கும் அளிக்கப்பட்டு வந்த வழக்கம் மறையவில்லை என்பதை இது காட்டுகின்றது. ஆண் பெண் இருபாலரும் அவனைப் பின் தொடர்ந்தனர். மக்களுக்கு அவன்மீது பயமும் மதிப் பும் இருந்தன. டெலியத்தில் அவன் வீரத்தோடு போர் செய்தான். தத்துவ ஞானியான சாக்ரடீஸ் அவனை மரணத்திலிருந்து காப்பாற் றினான். அவ்விருவரது நட்பு, புகழ்வாய்ந்தது. அறிவாற்றலும் உடல் வலிமையும் இருவரிடமும் ஒத்து இருந்தன. ஆனால் நற்பண்பாலும், நல்லொழுக்கத்தாலும், செல்வத்தாலும் அவ்விருவரும், தனியாகப் பிரிக்கப்பட்டிருந்தனர். சாக்ரட்டீஸுக்கு (Socretes) அரசியலில் ஈடு பாடு இல்லாவிடினும், ஒப்பற்ற தர்க்கவாதியாக இருந்தான்; தன் னுடைய அரசியல் வாதத் திறமையை வளர்ப்பதற்கு, தன் சமூகத் தைப் பயன்படுத்திய அரசியல் பெருமகன். ஆல்சிபியாடிஸுக்கு அரசியல் ஞானம் வளர்க்கும் திறம் இல்லை. அதனைப் பெறும் நோக் கமோ, விடாமுயற்சியோ, மனஉறுதியோ அவனிடம் இல்லை. ஆனால் அவன் ஒரு திறமையுள்ள அரசியல்வாதியாக வாழ்ந்துவந்தான். அவன் அரசியலில் பெருமகனாக இருப்பதற்குரிய நல்ல பண்பையும், தீயபண்பையும் கைக்கொண்டிருந்தான். தன்னுடைய நாட்டின் மக்களாட்சி நிறுவனங்களின்மீது அவனுக்கு நம்பிக்கை இல்லை. அதைப்போலவே தான் சார்ந்திருந்த கட்சியாகிய முன்னேற்றக் குடி யாட்சிக் கட்சியினிடமும் அவனுக்குப் பற்றுதல் கிடையாது. அவன் தன் வாழ்க்கையின் பிற்பகுதியில் ஸ்பார்ட்டாவிலிருந்தபோது மக்க ளாட்சி யாவராலும் ஒப்புக் கொள்ளப்பட்ட மடைமை என்று அவன் கூறியதாக தூசிடைடீஸ் குறிப்பிடுகிறான். அவன் தன்னுடைய மனத்தில் உணர்ந்ததைச் சொன்னான். அச் சமயத்தில் பெரிக்கிளீஸ் வகித்த பதவியைத் தான் வகிக்கவும், அவனைப்போல் நாட்டை நடத் திச்செல்லவும் வேண்டுமென்பதே அவனுடைய உறுதியான நோக்கம். எல்லா நிகழ்ச்சிகளிலும், போரினாலும், படையெடுப்பினாலும், அவன் தான் விரும்பிய பதவியைப் பெற முனைந்தான்.

ஆல்சிபியாடிஸ் தீவிரவாதக் கட்சியில் சேர்ந்ததை அக் கட்சியி னர் வரவேற்றனர். அவனுடைய உயர்குடிப் பிறப்பு, அரசியல் தந்தி ரம், நாவன்மை ஆகியவற்றால் அவன் வரவேற்கப்படவில்லை. அவ னுடைய யுத்தப் பயிற்சியும் போர்க்குழுவில் பணியாற்றும் திறமை யும் அவனை அக் கட்சியினர் வரவேற்கக் காரணமாக இருந்தன, அக் கட்சி ஹைபர்போலஸ், கிளியான் போன்றவர்கள் போர்க்குழுப் பணிக்கு ஏற்றவர்கள் பலர் என்பதற்காகவே, அவர்கள் தகுதியற்ற

வர்களாயினர். நிசியாஸ் மறுபடியும் தேர்ந்தெடுக்கவில்லை. அவனுக்குப் பதிலாக ஆட்சிபியாடிஸ் தேர்ந்தெடுக்கப்பட்டான். அதனால் தீவிரவாதக் கட்சியில் செல்வாக்கு உயர்ந்தது. எல்லோரும் இம் மாறுதலை உணர்ந்தனர். ஏதென்ஸ், ஆர்காஸுடனும், அதனுடைய நேச உறவு நாடுகளான எலிஸ், (Elis) மேன்டினே (Mantinea) ஆகியவற்றேடும், ஒரு நூறுண்டு நேசஉறவு ஒப்பந்தம் செய்துகொண்டது[1] எப்பிடாரஸ் (Epidaurus) நாட்டின்மீது அந்நாடுகள் ஒன்ருகச் சேர்ந்து படையெடுத்ததன் மூலமாக அவ் வொப்பந்தம் உறுதி செய்யப்பட்டது. ஸ்ப்பார்ட்டா எப்பிடாரசுக்கு உதவி புரிந்தது. உடனே ஏதென்ஸ் சமாதான உடன்படிக்கையை லாசிடோமோனியா மீறிவிட்டதாக அறிவித்தது.

நிசியாஸ் மறுபடியும் பதவிக்கு வந்தபடியாலும் தீரச்செயலை விரும்பும் ஆல்சிபியாடிசை மறுபடியும் தேர்ந்தெடுக்க மறுத்தபடியாலும், இந்தப் புதிய கொள்கைக்குத் தடை ஏற்பட்டது ஆனல் ஏதன்ஸ் ஆர்காசுடன் ஏற்படுத்திய நேச உறவு ஒப்பந்தம் முறியவில்லை.

எப்பிடாரஸ் நாட்டிற்கு எதிராக ஆர்காசின் படையெடுப்பு, ஸ்ப்பார்ட்டாவுக்கு அதிர்ச்சியை உண்டுபண்ணியது ஆகையால் ஸ்ப்பார்ட்டா ஆர்காசைத் தாக்கி முறியடிக்கும் தீர்மானத்துடன், கோடையில் அகிஸ் (Agis) மன்னனை ஆர்கைவ் நாட்டின் (Argive) மீது படையெடுத்துச் செல்லக் கட்டளையிட்டது. நேச உறவு நாடுகளின் கூட்டம் பிலியஸ் (Phlius) என்ற விடத்திலும் கொரிந்தியாவிலும் நடைபெற்றது. இனித் தனித்திருக்க இயலாதென்பதைக் கண்ட கொரிந்தியாவும் ஓர் படையை அனுப்பியது. நேசவுறவு நாடுகளாகிய மேன்டினே (Mantinean) எலிஸ் (Elis) ஆகிய நாடுகளின் படையுடன் ஆர்கைவ் நாட்டின் படை திராசிலஸ் (Thrusyllus) தலைமையில் புறப்பட்டது. ஆர்கைவ் படைகள் பகைவனின் பகையை விடப் பலம் குறைந்தது. நேமேக்குப் (Nemea) பக்கத்தில் அவைகள் திரண்டு, வடக்கிலிருந்து சமவெளிக்கு வரும் வழியிலுள்ள கணவாயை எளிதில் பாதுகாத்திருக்க முடியும். ஆனல் அகிஸ் அவைகளை ஏமாற்றிவிட்டுச் சென்றுன். அவன் போயிஷயன் படை வீரர்களை நேமோயின் முதன்மையான சாலையின் வழியே செல்லும்படி அனுப்பினன். மேற்கிலிருந்து வேறு பாதையின் மூலமாக, தன் படைகளை மலைகளின் வழியே இஞச்சஸ் பள்ளத்தாக்குக்குப் பக்கத்திலுள்ள சமவெளிக்குக் கொண்டுவந்தான். அவன் கொரிந்தியப் படைகளையும்

1 தூசிடைடிசினல் கொடுக்கப்பட்ட உடன்படிக்கையின் முழு விவரங்களும் டயனிசியா மண்டபத்தின் ஓர் கல்லில் காணப்படுகிறது.

பிலியாசியான் படைகளையும் மற்ருெரு கணவாய்வழியே அனுப்பினுன். இவ்விதமாக இரு படைகளும் ஆர்கைவ்ஸ் படைகளைச் சுற்றி வளைத்துக்கொண்டு விட்டன. அவர்கள் நகரத்திலிருந்து துண்டிக்கப்பட்டார்கள். போர் வீரர்கள் நேமாவுக்கு அருகிலிருந்த தங்களிடத்தை விட்டுச் சமவெளிக்கு வந்தார்கள். போயிஷியர்கள் அவர்களுடன் வரவில்லை. திராசிலஸின் படைவீரர்களும் அகிஸின் படைவீரர்களும் வெற்றி உறுதி என்று நம்பினுர்கள். ஆனல் இரு படைத் தலைவர்களும் அவ்வாறில்லை. ஒவ்வொருவரும் தங்கள் படையின்பலம், எதிரியின் படைபலத்தைவிட மோசமாக இருப்பதாக எண்ணினுர்கள். அவர்கள் இருவரும் நான்கு மாதத்திற்கு ஓர் தற்காலிக உடன்படிக்கை செய்துகொண்டார்கள். இரு பக்கங்களிலிருந்தும் போர் வீரர்கள் தங்கள் படைத் தலைவர்களுக்கு எதிர்ப்பாகக் கூச்சலிட்டார்கள். திராசிலசின் ஏமாற்றமடைந்த போர் வீரர்கள், அவனை கல்லாலடித்து, குற்றுயிராக விட்டுவிட்டார்கள்.

அத்தினியப் படைகள், லாச்சஸ் (Laches), நிகோஸ்ட்ராட்டஸ் (Nicostratus) என்பவர்களின் தலைமையில் அனுப்பப்பட்டன. அப்பொழுது ஆல்சிபியாடீஸ் அரசியல் தூதுவனுக அப்படையோடு ஆர்காசை வந்தடைந்தான். அப்பொழுது ஆல்சிபியாடிஸ் தனக் களிக்கப்பட்ட கட்டளைகளை மீறி நேச உறவு நாடுகளை, நான்கு மாதத்திற்காக ஏற்படுத்திய தற்காலிக சமாதான உடன்படிக்கையைக் கைவிடும்படித் தூண்டினுன். அத்தினியர்களின் அங்கீகாரம் பெருத அந்த உடன்படிக்கை செல்லுபடியாகாதென்று அவன் கூறினுன். அதன்படி நேசநாடுகளின் படை, மலைகளைக் கடந்து ஆர்க்காடியாவிற்குள் புகுந்து ஓர்கோமேனஸைக் (Orchomenus) கைப்பற்றியது. எலிஸ் போர் வீரர்கள் தங்களுடைய பகைவர்களாகிய லெப்பிரயோன் (Lepreon) நாட்டு மக்களைத் தாக்க வேண்டுமெனச் சொன்னுர்கள். அவர்களுடைய கருத்து ஏற்றுக்கொள்ளப் படவில்லை. அதனுல் கோபமுற்ற எலிஸ் போர் வீரர்கள் நேச உறவு நாடுகளுடனிருந்த உறவை முறித்துக்கொண்டு தங்களுடைய சொந்த நாட்டை நோக்கிப் புறப்பட்டனர். அதன் காரணமாக அந்தப் படை 3000 போர் வீரர்களை இழக்க நேர்ந்தது. அகிஸ் தலைமையிலிருந்த லாசிடோமோனியர் படையும் தேகாவின் (Tegea) படையும் மேன்டனேயைக் காப்பாற்றத் தெற்குநோக்கி விரைந்து சென்றது.

கடைசியில் ஒரு பெரிய போர் நடந்தது. இரு பக்கங்களிலுமுள்ள போர் வீரர்களின் எண்ணிக்கையின் கணக்கு நமக்குக் கிடைக்காவிடினும் ஒவ்வோரு படைகளிலும் 10,000 போர் வீரர்கள் இருந்திருப்பார்களென்று கருதப்படுகிறது. ஸ்கோப் (Scope) குன்றை லாசிடோமோனியர்கள் சுற்றி வந்தார்கள். இரு நாடுகளும் சந்திக்கு

மிடத்திலே எதிரியின் படை அணிவகுத்து நிற்பதை அவர்கள் கண் டார்கள், அவர்கள் அப் படையைத் தாக்கி வெற்றியடைந்தார்கள். அவர்களுடைய வெற்றி ஆபத்து நிறைந்த வெற்றியாகிவிட்டது. அதை அவர்களால் முழு வெற்றியாக்கிக் கொள்ள முடியவில்லை; அக் குறை போர்த் துவக்கத்தின் போதே ஏற்பட்ட தவற்றினுல் விளைந்தது. கிரேக்கப் போர்வீரர்கள் போர் செய்யும்போது, வலது பக்கமாகவே முன்னேறிச் சென்றனர். அதனுல் வலப்பக்கம் தன்னை வெளிக்காட் டிக் கொள்ளாமல், அருகிலிருப்பவனின் கேடயத்தின் கீழ் மறைந்து கொள்ள முடியும் இது கிரேக்க வீரர்களின் பழக்கம். அதே சமயத்தில் தன்னுடைய வலப் பக்கத்திலுள்ள படைவீரர்கள் எதிர்ப்பக்கத்தி லுள்ள எதிரியின் இடப்பக்கம் போர் வீரர்களைச் சுற்றி வளைத்துக் கொள்ளும் முறையும் அவர்களிடமிருந்தது. இந்த யுத்தத்தில் மேன்டி னேயின் போர் வீரர்கள் எதிரியினுடைய வலப் பக்கத்தில் நிறுத்தி வைக்கப்பட்டிருப்பதை அகிஸ் பார்த்துவிட்டான். அவர்கள் தன் னுடைய இடப் பக்கத்திலுள்ள வீரர்களைச் சுற்றி வளைத்துக் கொள் வார்களெனப் பயந்தான். அதனுல் அப்பொழுது அவன் தன்னுடைய இடப்பக்கப் போர் வீரர்களைப் பரவலாக நீண்டதூரம் வரையில் நிற்கும்படிச் செய்தான். அதனுல் ஏற்படும் காலிஇடத்தைப் பூர்த்தி செய்ய வலது வியூகத்திலிருந்த ஒரு சிறிய படைத் தலைவர்களுக்குக் கட்டளையிட்டான். போர் வீரர்கள் அவன் கட்டளைப்படியே இடப் பக்கக் கோடியை விரிவாக்கினுர்கள். வலப்பக்கத்திலிருந்த தலைவர்கள் அவனுடைய கட்டளைக்குக் கீழ்ப்படியவில்லை. அதன் விளைவாக இடப் பக்கத்தின் கோடியிலிருந்தவர்கள் தோற்கடிக்கப் பட்டார்கள். அதனுல் ஏற்பட்ட காலி இடத்தைப் பூர்த்திசெய்ய 1000 ஆர்கைவ்ஸ் வீரர்கள் அங்கு விரைந்து சென்ருர்கள். வலப்பக்கத்தில் அத்தீனியர் களும் அவர்களுடைய நேசவுறவு நாட்டுப் படைகளும் முறியடிக்கப் பட்டன. இடப் பக்கச் சேனைக்கு உதவியளிக்க, அகிஸ் தன் வலப்பக்க அணியை அழைக்காமல் இருந்தால், அத்தீனியப் படைகள் தோற் கடிக்கப்பட்டிருக்கும். படைத் தலைவர்களாகிய லாச்சசும் நிகோஸ்ட் ராட்டசும் போரில் மடிந்தனர்.

லாசிடோமோனியர்கள் வீடு திரும்பினுர்கள். அவர்கள் கார்னி யான் அப்பொல்லோ என்ற (Carnean Apollo) விழாவைக் கொண் டாடி மகிழ்ந்தார்கள். ஸ்ப்பாக்ட்டேரியா தோல்வியால் இழந்த சிறப்பை, ஸ்பார்ட்டாவின் இந்த வெற்றி மீட்டுத் தரவில்லை. ஸ்ப்பார்ட்டர்கள் அறிவற்றவர்களென்றும் சோம்பேறிகளென்றும் கிரேக்க மக்கள் எண்ணி யிருந்தனர். இந்த வெற்றிக்குப்பின் கிரேக் கர்களுடைய இவ்வெண்ணம் மாற்றப்பட வேண்டியதாயிற்று. இந்த வெற்றி நேரடியான அரசியல் முடிவுகளைத் தோற்றுவித்தது. அது பெலப்போனீசியாவிலிருந்த நிலையை மாற்றிவிட்டது. ஆர்காசில்




படம் 8. மான்டினியா—டெகியா சமவெளி

கி—19

அதனுடைய அரசியல் அமைப்பும், அயல்நாட்டுக் கொள்கையும் மாறுபாடடைந்தது. அங்கு குடியாட்சி ஒழிக்கப்பட்டு, சிறு குழு ஆட்சி முறை நிலை நாட்டப்பட்டது. ஏதென்சுடன் அந் நாடு செய்திருந்த நேச உறவு ஒப்பந்தம் அழிக்கப்பட்டு ஸ்ப்பார்ட்டாவுடன் நேச உறவு ஏற்பட்டது. மேன்டினே, எலிஸ், அச்சேயன் ஆகிய பட்டினங்கள் ஸ்ப்பார்ட்டாவுடன் சேர்ந்து கொண்டன. ஏதென்ஸ் மறுபடியும் தனியாக விடப்பட்டது.

அச் சமயத்தில். முன்னேற்றக் குடியாட்கிக் கொள்கையாளர் ஏதென்சில் மக்களின் செல்வாக்குப் பெற்றிருந்த தங்கள் எதிரியான நிசியாசை நாட்டிலிருந்து வெளியேற்றிவிட முயன்றூர்கள். அவனுடைய அறிவுரையின் காரணமாக ஆர்காசுக்குத் தக்க உதவி அளிக்கப்படவில்லை. அதற்காக ஏதென்சில் அதிருப்தி ஏற்பட்டிருந்தது. ஹைபர்போலஸ் அவனை நாடுகடத்தும் யோசனையை வாக்கெடுப்புக்கு விட்டான். வாக்கெடுப்பின் மூலம், நிசியாஸ் நாடுகடத்தப்படுவான் என்று நம்பினுன். மேலும் அவன் நிசியாவின் ஆதரவாளர்கள் ஆல்சிபியாடீசுக்கு எதிராகவும் வாக்குப் பதிவு செய்வார்களென்று தப்பாக நம்பி யிருக்கலாம். அவன் எண்ணிய எண்ணம் நிறைவேறவில்லை. ஆல்சிபியாடிஸ் தனக்கு நேரும் அபாயத்தை உணர்ந்து, ஹைபர்போலஸையும் குடியாட்சிக் கட்சியையும் கைவிட்டு நிசியாஸ் கட்சியில் சேர்ந்துகொண்டான். ஆகையால் ஹைபர்போலஸ் தான் வெட்டிய கிணற்றில் தானே விழ நேர்ந்தது. நிசியாஸின் கட்சியினரும் ஆல்சிபியாடீஸ் கட்சியினரும் ஹைபர்போலஸுக்கு எதிராகத் தங்களுடைய வாக்குகளைப் பதிவு செய்தார்கள். ஆகையால் அவனுக்குப் பத்தாண்டுக் காலம் நாடுகடத்தப்படும் தண்டனை கொடுக்கப்பட்டது. அத்துடன் அவனுடைய அரசியல் வாழ்க்கை முடிவடைந்தது. ஏதென்ஸ் கடைப்பிடித்த நாடுகடத்தும் இறுதித் தண்டனை அதுவே. அதற்குப்பின் கிராப்பி பாரானேமோன் (Graphe Paranomon) என்ற புதிய முறை கைக்கொள்ளப்பட்டது. இம் முறைப்படி அரசியல் அமைப்புக்கு அபாயத்தை விளைக்கிறவர்களுக்கு மரண தண்டனை அளிக்கப்பட்டது. நிசியாஸ் சமாதானத்தின் வீரனும் பக்தியுள்ளவனுமாக இருந்தான். ஆல்ஸிபியாடிஸ் ஒழுக்கங் கெட்டவன்; கட்சிவிட்டுக் கட்சி மாறும் நிலையற்ற கொள்கையுடையவன். எப்போதும் யுத்தத்தை விரும்புகிறவன். இருவருக்குமிடையே ஏற்பட்ட நட்பு முரண்பாடானது. ஒருவன் உயர்குடிப் பிறந்தவன்; மற்றவன் விளக்கு வேலை செய்கிறவன். நிசியாஸ் தன்னுடைய சோம்பலை ஒரளவுக்கு உதறி எறிந்துவிட்டு, செயலில் இறங்க முன் வந்ததாகத் தோன்றுகிறது. அவன் சாலிசிடிஸ் மீது படையெடுத்தான். அங்கும் சியோனைக் (Scione) கைப்பற்றி அந் நாட்டிலுள்ள ஆண் மக்களைக் கொலை செய்யச் செய்தான். இதைத் தவிர

அவன் சமாதானத்திற்கு ஒன்றும் இப்போது செய்யவில்லை. அந் நாடு படை யெடுப்புக்காளாயிற்று

ஆம்பிபோலிசில் நிசியாவின் முயற்சி தோல்வி அடைந்தது. அடுத்த ஆண்டில் ஏகியானின் தென் பகுதியில் அவன் எடுத்துக் கொண்ட முயற்சி வெற்றி யடைந்தது. இதுவரையில் மிலாஸ்(Melos) தீவுஅத்தீனியக் கடலாதிக்கத்தினுல் பாதிக்கப்படாதிருந்தது. ஆல்சிபிடியாஸின் தூண்டுதலினுல் ஏதென்ஸ் மிலாஸ் மீது போர் தொடுத்தது. மிலாஸ், கோடையில் தரை மூலமாகவும் கடல் மூலமாகவும் முற்றுகையிடப்பட்டது. அந்தப் பட்டினத்தின் மக்கள் குளிர் காலத்தில் சரணடைந்தார்கள். போர் புரியும் தகுதிவாய்ந்த ஆண்கள் அனைவரும் கொல்லப்பட்டார்கள். மற்றவர்கள் அடிமைகளாக விற்கப்பட்டார்கள். அத் தீவில் அத்தீனியர்கள் குடியேறினுர்கள்.

மிலியர்கள் மீது எடுத்துக்கொண்ட கடும் நடவடிக்கை பிளெட்டியா, மைட்டீலினி, சியோன் ஆகிய நாடுகளீன் மீது எடுக்கப்பட்ட மனிதப் பண்பற்ற செயலே, மிலாஸ் நாட்டின்மீது மேற்கொள்ளப்பட்டது. எனினும் மிலாஸ் படையெடுப்பு வெற்றி சிறப்பானது. ஏனெனில் அது ஆத்திரத்தால் எழுந்த படையெடுப்பன்று அதற்கு ஒரு காரணமுமில்லை. அத்தீனிய அரசியல் தூதுவர்களுக்கும் மீலியின் அரசாங்கத்திற்கும் நிகழ்ந்த சுவையான உரையாடலை தூசிடைடிஸ் விளக்கமாகக் கூறுகிருன். நாடகக் கதைபோல் அதனை அவன் எழுதியுள்ளான். அக் கதையில் பலமுள்ளவன் பலமற்றவன்மீது ஆதிக்கம் செலுத்துவதுதான் ‘இயற்கையின் சட்டம்’ என ஓர் அத்தீனியன் கூறுகிருன். ஹெலன் நாட்டு மக்கள் பின்பற்றவேண்டிய கொள்கையாக அது இருந்தது. ஆனுல் அவர்கள் அக் கொள்கையின் அடிப்படையில் தங்களுடையு நாடுகளை ஆண்டுவரவில்லை. முற்றுகைக்கு முன், தூசிடைடிஸ் சொன்ன இச் கருத்தை, அத்தீனியர்களில் ஒருவனும் பேசவில்லை. இருந்தபோதிலும் தூசிடைடிஸ் அலங்காரமான சொற்களால் அப்போதிருந்த அத்தீனியர்களின் மனநிலையை விளக்கிக் காட்டுகிருன். அத்தீனியர்கள் தங்களுடைய நகரம் தாங்கள் செய்த கொடுமைகளால் அழியும் காலம் வருவதற்கு முன்பு அக் கதையில் உள்ளவர்களாக இருந்தார்களென்பதைத் தூசிடைடிசின் குறிப்பு காட்டுகிறது. தூசிடைடிசும், ஹெரோடட்டசும் கொள்கையிலும் நடைமுறையிலும் வேறுபட்டவர்களாக இருந்தபோதிலும், இப்படிப்பட்ட சந்தர்ப்பங்களில் அவர்களிருவரும் ஒரே கருத்தையுடையவர்களாக இருந்தார்கள். இருவரும் ஒரேவிதமான ஹெலனிக் உணர்ச்சியுடையவர்களாகவே வாழ்ந்துவந்திருக்கிருர்கள்.

ஏதென்சின் தடை இளைய வரலாற்று ஆசிரியனின் கருப்பொருளாக இருந்தது. பாரசீகத்தின் தடை முதிய வரலாற்ருசிரியனின்

கருப்பொருளாக இருந்தது. நெமசிஸ், ஹெரோடட்டசின் நூலில் நன்முக வருணிக்கப்பட்டுள்ளான். ஆனுல் தூசிடைடீசின் நூலில் அவனைப்பற்றிய குறிப்பு எதுவுமில்லை.

யுத்த காலத்தில் மிகவும் புறக்கணிக்கப்பட்ட சமய வழிபாடுகள் சமாதானம் ஏற்பட்ட ஆண்டிலிருந்து முதன்மையான இடம் கொடுக்கப்பெற்றன என்பதற்குச் சில ஆதாரங்கள் இருக்கின்றன. இவ்வாண்டுகளில், அத்தினுவுக்கும்எரிட்சுத்தியசுக்கும்(Athena and Erechtheus) ஓர் புதிய கோயில் கட்டப்பட்டதாகத் தோன்றுகிறது. அக்கோயிலைப் பற்றிய விவரங்களைப் பின்னுல் காணலாம். நோய்களைக் குணப்படுத்தும் தெய்வமாகிய ஆஸ்க்லீப்பியஸ், தன்னுடைய பாம்புடன், எப்பிடோரஸை விட்டுவந்து, அக்ரோபோலிசின் தென்பக்கச் சரிவில்வந்து குடியேறியதும் இச் சமயத்தில்தான். அதன் பின்னர் எலுசிஸ் என்ற தெய்வ வழிபாடுகளுக்காக, நிலத்திலிருந்து கிடைக்கும் மகசூலின் மீது வரி போடவேண்டுமென்ற தீர்மானம் சபையில் நிறைவேற்றப்பட்டது. அட்டிக்காவின் விவசாயிகள் கோதுமை விளைச்சலில் $\frac{1}{1200}$ பங்கும், பார்லி விளைச்சலில் $\frac{1}{600}$ பங்கும் வரியாகக் கோயிலுக்குக் காணிக்கையாகச் செலுத்த வேண்டியதாயிற்று. ஹெலனிக் நாடுகள் அனைத்தும் இவ்வாறு நிலத்தின் விளைச்சலில் ஒரு பகுதியை அளிக்கவேண்டுமென்று சபை தீர்மானித்தது.

## 2. ஏதென்சின் மேற்கத்தியக் கொள்கை

ஐந்தாம் நூற்றுண்டிலே அத்தீனிய அரசியல் அறிஞர்களுடைய கண்கள் கடலுக்கு அப்பாலிருந்த மேற்குக் கிரேக்க நாடுகளில் உலாவி வந்தன. தெமிஸ்ட்டோகிளீஸ் காலத்திலே இது ஆரம்பமாயிற்று. பெரிக்கிளீஸ் காலத்தில் திட்டமான மேற்கத்திய கொள்கை உருவாயிற்று. எலிமியன் பட்டினமாகிய செஜெஸ்டாவுடன் ஓர் நேச உறவு உடன்படிக்கை ஏற்பட்டது. அதையடுத்து நேச உறவு உடன்படிக்கைகள்—இவையடங்கிய கல்வெட்டுகள் இன்னும் பாதுகாக்கப்பட்டு வருகின்றன—லியோன்டினி, ரேஜியம் ஆகிய இரு நாடுகளுடன் செய்யப்பட்டிருக்கின்றன. டோரியன் பட்டினங்களுக்கு எதிராக, ஐயோனியப் பட்டினங்களைப் பாதுகாக்க வேண்டுமென்கிற ஓர் பொது நோக்கத்துடன் அவ் வுடன்படிக்கை ஏற்படுத்தப்பட்டது. டோரியன் பட்டினங்கள் எண்ணிக்கையிலும் பலத்திலும் ஐயோனியப் பட்டினங்களைவிட மேம்பட்டிருந்தன. அவற்றுள் கொரிந்தியாவுடன் நட்பாயிருந்த அதன் குடியேற்ற நாடாகிய சயரகூஸ் தலைசிறந்தது. டோரியர்களுடைய செல்வாக்கைக் கட்டுப்படுத்தும் நோக்கத்துடன் தூரி என்ற குடியேற்ற நாடு ஏற்படுத்தப்பட்டது: குடியேற்ற

நாட்டு மக்கள் ஒரே நகரத்தைச் சேர்ந்தவர்களல்லர். அங்கு அத்தீனிய எதிரிகளின் கை ஓங்கியிருந்தது. அதன் விளைவாக தூரியில் டோரியர்கள் ஆதிக்கம் மிஞ்சி, அதீனியர்களுக்கு ஆதரவு குறைந்தது. தூரியைத் தோற்றுவித்தபோது சுமார் முப்பதாண்டுக் காலம் வரையிலும், ஏதென்ஸ் மேற்கில் தனக்கு ஆதரவைத் தேடிற்றே தவிர அது தன்னுடைய ஆதிக்கத்தை நிலைநாட்ட விரும்பவில்லை. ஏதென்சுக்கும் இத்தாலி, சிசிலி போன்ற நாடுகளுக்குமிருந்த தொடர்பும், வாணிகத்தாலும், கொரிந்தியப் பகைமையாலும் வளர்ந்தது.

அத்தீனியர்கள் சிசிலியின் விவகாரங்களில் உடனடியாகத் தலையிடுவதற்கு, லியோன்டினி, ரேஜியம் ஆகிய நாடுகளுடன் ஏற்பட்ட உடன்படிக்கைகள் காரணமாக இருந்ததில்லை. ஆருண்டுகளுக்குப் பின் இரு நாடுகளும் அனுப்பிய முறையீட்டின் காரணமாக முதல் போர் தோன்றியது. லியோன்டினி தெற்கிலிருந்த அதனுடைய அண்டை நாடான சைரகூசுக்கு எதிராகத் தன் சுதந்திரத்தைப் பாதுகாக்கப் போராடிக்கொண்டிருந்தது. அக்ரகாஸ், காமரினு, என்ற இரு நாடுகளைத் தவிர (Acragas and Camarina) ஏனைய டோரிய பட்டினங்களனைத்தும் சைரகூசுக்கு ஆதரவாகவும், ரேஜியம் (Rhegium) காட்டனே (Catane) நாக்ஸாஸ் (Naxos) காமரினு (Camarina) என்ற நாடுகள் லியோன்டினுக்கு உதவியாகவும் இருந்தன. மேற்குக் கிரீசில், அயோனியர்களின் சுதந்திரத்திற்கு ஆபத்து நேரிட்டது. லியான்டினி அனுப்பிய அரசியல் தூதுக்குழுவில் அந் நாட்டின் தலைசிறந்த குடிமகனுகிய கோர்ஜியாஸும் (Gorgias) இருந்தான். சொற்சாதுரியம் வாய்ந்த பேராசிரியனுகிய அவனுடைய புகழும் செல்வாக்கும் ஹெலனிய நாடுகளில் பரவி இருந்தன. தூதுக்குழு வந்து சேர்ந்தபோது, அத்தீனியர்களின் கவனம் அந்தக் குழுவின் நோக்கத்தைவிட கோர்ஜியாஸின்மீது சென்றது. ஆகையால் வியப்பினுல் அத்தீனியர்கள் சபைக் கூட்டத்தில் வந்து கூடிவிட்டார்கள். அவன் சொன்ன பொருளைக் கூர்ந்து கவனிப்பதற்குப் பதிலாக அவன் எவ்வாறு பேசினுன் என்பதையே கவனித்தார்கள். ஆகையினுல் அப் பேராசிரியனின் சொற்பொழிவு எதிர்பார்த்த பலனை விளைவிக்கவில்லை. சிசிலியைத் தங்களுடைய அரசியலமைப்புக்குள் கொண்டுவர வேண்டியதன் அவசியத்தை ஏதென்ஸ் ஒப்புக்கொள்ளும்படிச் செய்யப்பட்டது. அங்கிருந்து தன்னுடைய பெலபனிசியா பகை நாடுகளுக்குத் தானியமும் இதர உதவிகளும் அனுப்பப்படுவதைத் தடுக்க வேண்டிய அவசியமும் அங்கு வற்புறுத்திக் கூறப்பட்டது. மேலும் கொரிந்தியாவின் நேச நாடாகிய சைரகூஸ் தலையெடுக்கா வண்ணம் அதை நசுக்க வேண்டுமென்றும் கருதப்பட்டது. அத்தீனிய ஆதிக்கம் மேற்கிலும் ஏற்படவேண்டுமென்று ஏதென்ஸ் வீண் கனவு காண ஆரம்பித்ததுவிட்டது.

மத்தியதரைக் கடலின் மேற்குப் பகுதியில் அத்தீனிய ஆதிக்கம் ஏற்படவேண்டும் என்ற கொள்கை, ஹைபர்போலசிடம் இருந்த தாகத் தெரிகிறது. அவன் கார்த்தேஜிக்கு எதிரான நடவடிக்கை எடுத்துக்கொண்டிருந்ததாக, அரிஸ்ட்டபேன்ஸ் அவன் கொள்கை யைப் பரிகசித்து எழுதியுள்ளான்.

லாச்சஸ் என்பவனுடைய தலைமையில் ஓர் படை அங்கு அனுப்பப் பட்டது. அது சாதித்த சாதனை மிகச் சிறியது. அவர்கள் தொடர்ந்து போர் செய்திருந்தால் சிறந்த பயன் விளைந்திருக்கலாம். ஏதென் சுடன் மெசானு சேரும்படித் தூண்டப்பட்டது. இதன் மூலமாக ஜலசந்தியில் தடையற்ற கப்பல் போக்குவரத்து வசதியை ஏதென்ஸ் பெற்றது. செஜெஸ்டா (Segesta) வுடனிருந்த பழைய உறவு புதுப் பிக்கப்பட்டது. ஆனுல் இனேசாவைப் பிடிக்க எடுத்துக்கொண்ட முயற்சி ஓர் கடும் எதிர்ப்புக்குள்ளாயிற்று. இந்தப் படை எடுப்பில் முழு வெற்றி கிடைக்காமல் போனதற்கு லாச்சஸும் அவனது பொருளாளனும் பொறுப்பாவார்கள். படைத்தலைவன் லாச்செஸ் செய்த தவறுகளுக்குக் காரணம் கூறும்படி கிளியான் கேட்டதாகத் தோன்றுகிறது. சிசிலி பால்கட்டிக்குப் பெயர் பெற்றது. லாச்சஸ் எவ்வாறு பாற்கட்டியைத் தன்னுடைய பொருளாளனுடன் தின்ருன் என்பதை நகைச்சுவைப் புலவர் பரிகசித்துள்ளார்.

சிசிலியில் அத்தினியர்களுடைய செல்வாக்கு அழிந்ததற்குப் பைலோஸ் சம்பவமும், கார்சிரா நடவடிக்கைகளும் காரணங்களாகக் கருதப்படுகின்றன. ஏனென்ருல் இந்தச் சம்பவங்கள், யூரிமீடான், சோபோக்கிளிஸ் என்ற இருவரின் தலைமையின் கீழ்ச் சென்ற கப்பற் படைப் பிரயாணத்தைத் தாமதப்படுத்தின. லாச்சஸின் படையெடுப் பால் பெற்ற மெசானியா, இக் காலதாமதத்தால் இழக்கப்பட்டது. அப் பட்டினம், அரசியல் கட்சிகளிடையே பிளவு ஏற்பட்டதால், கலகம் செய்தது. அவனுடைய கடற்படை அங்கு வந்தபோது குறிப் பிடத்தக்க வெற்றி கிட்டவில்லை. அக் கப்பற்படையின் வருகை சிசிலியன் நாடுகள் யாவும் ஒன்று சேர்ந்து சமாதானத்தை உருவாக்க உதவியது. ஆனுல் அது அத்தீனியர்களின் திட்டத்துக்கு முரணுனது. அத்தினியப் படைத் தலைவர்கள் சைரகூசுக்கு எதிரே போர் புரியத் தங்களோடு சேர மற்ற நகரங்களை அழைத்தபோது சிசிலியிலுள்ள பட்டினங்களின் பிரதிநிதிகள் ஜெலாவில் கூடினுர்கள். அக் கூட்டத்தி லிருந்தவர்களில் சைரகூஸ் நாட்டின் ஹெர்மோகிராட்டஸ் (Hermocrates) மிக்க சிறப்பு வாய்ந்தவனுவான். அவன் சிசிலியர்களின் கொள்கையை அங்கே உருவாக்கினுன். அக் கொள்கையின்படி சிசிலி ஓர் தனி உலகம். அதற்குத் தன்னுடைய சொந்த நலன்களும் அரசி யல் கொள்கைகளுமுண்டு; சிசிலிக்கு வெளியிலிருக்கிற கிரேக்கர்கள்

அன்னியர்களாகக் கருதப்படவேண்டும்; அவர்கள் சிசிலியின் விவகாரங்களில் குறுக்கிடலாகாது. சிசிலிய நகரங்கள் தங்களுக்குள்ள வேற்றுமைகளைத் தாங்களே தீர்த்துக்கொள்வார்கள்; ஏதென்ஸோ, பிற வெளி நாடோ தலையிடுமாயின் சிசிலிய நகரங்கள் ஒன்று சேர்ந்து அதனை எதிர்க்கும். இவ்விதமாக ஹெர்மோகிராட்டசின் கொள்கை சிசிலியக் கொள்கையாகவே இருந்தது; அதன் உள்நாட்டுக் கொள்கையாகவோ, ஹெலனிக்கு நாடுகளின் கொள்கையாகவோ இல்லை. அது அமெரிக்க ஐக்கிய நாட்டின் மன்ரோ கொள்கையோடு ஒப்பிடப் பட்டுள்ளது அந்தக் கொள்கை ஒருபோதும் பின்பற்றப்படவில்லை. அக் கொள்கையைப் போதித்த ஹெர்மோகிராட்ஸே அதனைக் கைவிடும் சூழ்நிலை ஏற்பட்டது. ஆனால் ஜெலாவில் கூடிய கூட்டம் தோல்வி யடையவில்லை. அச் சமயத்தில் சமாதானக் கொள்கை அத்தீனியர்களின் தலையீட்டைத் தடுத்தது. விரைவில் ஏற்பட்ட ஓர் கலகம் லியோன்டினிக்கு அபாயமாக இருந்தது. அந் நாட்டின் சிறுகுழு ஆட்சிக் கட்சியினர் சைரகூசின் குடிமக்களாகி விட்டார்கள். லெயோன்டினி, தன் சுதந்திரத்தை இழந்து சைரகூஸ் நாட்டின் கோட்டையாக மாறிற்று. இச் சம்பவம் சிசிலி நாட்டினரிடம் ஓர் புதிய எண்ணத்தை ஏற்படுத்தி இருக்கவேண்டும். தன் அண்டை நாடுகளை, தன்னுடைய கொடுங்கோலாட்சியின்கீழ்க் கொண்டுவருவதற்காகவே அது அத்தீனியர்களை விலக்கிவிட விரும்பியதாகத் தோன்றியது. மறுபடியும் ஏதென்ஸ், சிசிலியின் விவகாரங்களில் தலையிடும்படி அழைக்கப்பட்டது. ஏதென்சும் அப்படியே தலையிட்டது. ஆனால் கடுமையாகவோ, பயனுள்ள அளவிலோ தலையிடவில்லை. மிலாஸ் ஆக்கிரமிக்கப்பட்ட அதே ஆண்டு வரையில், ஏதென்ஸ் மேற்கு ஹெல்லாஸ் அரசியல் விவகாரங்களில் மறுபடியும் ஊக்கத்தோடு தலையிடவில்லை.

## 3. சிசிலிமீது படையெடுத்தல்—கடற்பயணம்—சிசிலியில் முதல் யுத்த நடவடிக்கைகள்

அதே ஆண்டில் தன்னுடைய அண்டை நாடாகிய செலினசுடன் (Selinus) போர் தொடுத்த செஜெஸ்ட்டா முறையீடு செய்ய ஏதென்சுக்கு வந்து சேர்ந்தது. அந்த மேல் முறையீட்டை லியோன்டினிக் குடியாட்சிக் கொள்கையினர் ஆதரித்தார்கள். ஏதென்ஸ் அரசியல் தூதுவர்களை சிசிலிக்கு அனுப்பியது. அவர்கள் செஜெஸ்ட்டாவிலுள்ள நிலைமையைப்பற்றி ஏதென்சுக்கு ஓர் அறிக்கையை அனுப்பவேண்டியதாயிற்று. அத்தீனியர் அனுப்பும் படைக்குரிய செலவைத் தாங்கக்கூடிய பொருளாதாரம் செஜெஸ்ட்டாவிடமிருக்கிறதா என்பதையும் அவர்கள் ஆராய்ந்து அறிவிக்க வேண்டியதாயிற்று. இந்த நோக்கத்

துடனே அரசியல் தூதுவர்கள் அங்கு அனுப்பப்பட்டார்கள். 60 வெள்ளித் தாலந்துடனும், செஜெஸ்ட்டா நாட்டு மக்களின் திரண்ட செல்வங்களைப்பற்றிய வியக்கத்தக்க கதைகளுடனும், அந்த அரசியல் தூதுவர்கள் ஏதென்சுக்குத் திரும்பிவந்தார்கள். பொன்னுலான புனித பாத்திரங்களைப்பற்றியும் தனிப்பட்ட ஒவ்வொரு மனிதரிட முள்ள வெள்ளித்தட்டுகளைப் பற்றியும் விரிவாகக் கூறினர்கள். ஆல்சிபிடியாசும் பிற இளைஞர்களும் செஜெஸ்டாவின் வேண்டுகோளுக் கிணங்கவும்; செலினஸால் எதிர்க்கப்பட்ட செஜெஸ்ட்டாவுக்கும், சைரக்கூசால் எதிர்க்கப்பட்ட லியோன்டினுக்கும் ஆதரவளிக்கவும் விரும்பினர்கள். நிசியாஸ் மிகத்திறமையுடன் அவர்களுடைய நோக் கங்களை எதிர்த்தான். நன்மையை விளைவிக்கக்கூடிய படையெடுப்புக் குத் தேவைப்படும் பணச்செலவை எடுத்துக் கூறினன். சமீபத்தில் மீலாஸ் (Melos) மீது அடைந்த வெற்றியால் பூரிப்படைந்த மக்கள், தொலைவிலுள்ள புதிய நாட்டின் மீது படைஎடுக்க ஆர்வம் கொண்ட னர். சாதாரண அத்தீனியனுக்கு சிசிலியைப்பற்றித் தெளிவாகத் தெரியாது. அத்தீனியர்கள் மேற்கில் ஓர் பேரரசை ஏற்படுத்த விரும்பினர்கள். அவர்கள் நிசியாசின் அறிவுரைக்குச் செவிசாய்க்க வில்லை, எனவே, வழக்கமாக அனுப்பப்படும் 60 முத்துடுப்புக்கப்பல் களுக்குப் பதிலாக, 100 கப்பல்கள் அனுப்புவதற்கு இசைந்தனர்.

நிசியாஸ் விடுத்த எச்சரிக்கையை அவர்கள் பொருட்படுத்த வில்லை. ஆனல் அந்தப் படையெடுப்பை விரும்பாத நிசியாஸையே தலைமைத் தாங்க தேர்ந்தெடுத்தார்கள். இது அவர்கள் செய்த மிகப் பெரிய தவருகும். அவன் படைத்தலைவனுக நியமிக்கப்பட்டான். அவ னுடன் ஆல்சிபியாடிஸ், லாமாச்சஸ் ஆகிய இருவரையும் படைத் தலைவர்களாக நியமித்தார்கள். படைமுறையில் அவனுக்கிருந்த திற மையை சம்பவம் காட்டுகிறது. அவனுடன் சேர்ந்த மற்ற இரு படைத் தலைவர்களின் துணிச்சலை அவன் கட்டுப்படுத்தக் கூடுமென்ற நம்பிக்கை அவர்களுக்கிருந்தது. அத்தீனியர்கள் இதுவரையில் பின் பற்றி வந்த பெரிக்கிளியன் போர்த்தந்திரத்தை நிஸியாசும் திறமை யோடு பின்பற்றக் கூடும் என்று இருந்தாலும், சிறந்த தீரமும், கடும் உழைப்பும் தேவையாக இருந்த அந்தப் படை எடுப்புக்கு அவ னுடைய திறமையும் பண்பும் தகுதியற்றவைகளாக இருந்தன.

கோடையின் ஆரம்பத்திலே படை வீரர்கள் கடல் பிரயாணத் தைத் தொடங்க ஆயத்தமாக இருந்தனர். அப்போது ஓர் சம்பவம் அந்த பிரயாணத்தைத் தாமதப் படுத்தியது. மே மாதத்தில், ஒரு நாள் காலையில் கோயில்களின் வாயிலிலும், தனிப்பட்டவர்களின் வீட்டு வாயில்களிலும், நிறுத்திவைக்கப்பட்டிருந்த ஹெர்மே என்ற சதுரக்கல் உருவங்கள் சிதைக்கப்பட்டிருந்தன. பக்தியுள்ள அத்தீனி

யர்களுக்கு அது வேதனையை அளித்தது. சிசிலியன் படையெடுப்புக்கு அது ஓர் அபசகுனமாக இருந்தது, சிலர் அச் சம்பவம் அரசாங்கத்திற்கு எதிராக ஏற்பட்ட சதித்திட்டத்தின் விளைவு என்று கூறினார்கள். ஆல்சிபியாடிசின் விரோதிகள், இதனைத் தங்களுக்குச் சாதகமாக்கிக் கொண்டு சதித்திட்டத்தில் ஆல்சிபியாடிசையும் சம்பந்தப்படுத்திப் பேசினார்கள். அவனுடைய வீட்டில் ஓர் வகையான மாந்திரீகச் சடங்கு நடந்ததாகவும் அதன் விளைவினாலேயே அச் சம்பவம் ஏற்பட்டதென்றும் சொன்னார்கள். அந்த சதித்திட்டம் மக்களாட்சி முறைக்கு எதிராக அவன் தலைமையில் ஏற்பட்ட சதித்திட்டம் எனவும் கூறப்பட்டது. ஆனால் ஓர் தேசத்துரோகி அதை ஏன் இவ்வளவு வெளிப்படையாகச் செய்தான் என்பது யாருக்கும் தெரியவில்லை. போர்க் கப்பல்கள் புறப்படும் முன்பே தன்மீது சுமத்தப்பட்ட பழியைத் துடைத்தெறிய ஆல்சிபியாடிஸ் விரும்பினான். படையெடுப்பில் அவனுடைய சேவை மிகவும் அவசியமாக இருந்தால் அவன்குற்றமற்றவன் என்று தீர்மானிக்கப்படுவது உறுதி என்று அவன் நம்பினான். ஆனால் அவனுடைய விரோதிகள் அவன் மீதுள்ள குற்ற விசாரணையை படை எடுப்பிலிருந்து திரும்பி வந்தபிறகு நடத்துவதென ஒத்திப் போட்டார்கள். போர்க்கப்பல்கள் புறப்பட்டுவிட்டன. படை புறப்படும் ஆரவாரத்தில் அவன்மீது சுமத்தப்பட்ட பழியை அவர்கள் மறந்தார்கள். ஓர் கிரேக்க நாடு தனிப்பட்ட முறையில் அவ்வளவு பெரும் படையை இதுவரையில் அனுப்பியதில்லை என அப் படையெடுப்பைப் பற்றி தூசிடைடீஸ் கூறினான். அப் படையில் யில் 134 முத்துடுப்புகள் கொண்ட கப்பல்கள் இருந்தன. அத்துடன் கணக்கற்ற சிறிய கப்பல்களுமிருந்தன. அப் படையில் பளுவுள்ள ஆயுதமணிந்த 5100 போர் வீரர்களிருந்தார்கள். மொத்தத்தில் 30,000 போர் வீரர்கள் சிசிலியை நோக்கிப் புறப்பட்டார்கள். குதிரைப் படைக்காக அவர்கள் சிசிலிய நேச உறவு நாட்டை நம்பி இருந்தார்கள். அப்போது அவர்களிடம் முப்பது குதிரைகள் மட்டுமிருந்தன.

ரேஜியத்தில் அவர்கள் தங்கினார்கள்; அங்கு எதிர்பாராத நிகழ்ச்சிகள் காத்திருந்தன. அத்தீனியர்கள் எதிர்பாராத விதமாக, ரேஜியம் நாட்டு மக்கள் ஒதுங்கி நின்றார்கள். அவர்களுடைய அரசாங்கம், பிற இத்தாலிய நாடுகளின் கொள்கைக்குக் கட்டுப்பட்டது என்றார்கள். சிசிலிய நாட்டு மக்கள் ஜெலாவில் (Gela) கூடிய கூட்டத்தில் விளக்கப்பட்ட சிசிலியக் கொள்கையைப் போன்றதே இத்தாலியக் கொள்கையும் என்று தோன்றியது. தங்கள் படைச் செலவுக்காக அத்தீனியர்கள் செஜெஸ்ட்டா நாட்டின் நிதியை நம்பி யிருந்தார்கள். இப்பொழுது அவர்கள் தங்களுடைய தூதர்கள் எளிதில் ஏமாற்றப்பட்டு விட்டதாக உணர்ந்தார்கள். தங்கமுலாம்

பூசிய வெள்ளித்தட்டுகள், உண்மையான தங்கத் தட்டுகளென அத்தீனியர்களிடம் காட்டப்பட்டன. தாங்கள் நாட்டிலும் பிற நாடுகளிலும் இருந்த வெள்ளித் தட்டுகளையும் ஒன்றுகத் திரட்டி ஒவ்வொரு வீட்டிற்கும் சில தட்டுகள் கொடுத்திருந்தார்கள். அத் தந்திரத்தை அறியாத அத்தினிய அரசியல் தூதர்கள் ஒவ்வொரு வீட்டிலும் வெள்ளித் தட்டுகள் உபயோகத்தில் இருப்பதாக நம்பினுர்கள்.

இந்த உண்மை, படைவீரர்களுக்கும், தலைவர்களுக்கும் வெறுப்பையும் ஆச்சரியத்தையும் தந்தது. நிசியாஸ் உள்பட எவருக்கும் அந்த முயற்சியைக் கைவிடும் எண்ணம் இருந்ததில்லை. அப்பொழுது செய்ய வேண்டியதைப்பற்றி யோசிக்க ரேஜியத்தில் ஓர் போர்க்குழு கூடிற்று. நிசியாஸ் ஆபத்தான, பயன்தராத ஓர் முறையைக் கூறினுன். அதன்படி அவர்கள் கப்பல்களைச் செலுத்தி தங்கள் படைப்பலத்திறமையைக் காட்டவேண்டுமென்றும், தொல்லைப்படாமல் பெறமுடிந்தவற்றை அடையவேண்டுமென்றும், வியோன்டினியின் மக்களுக்கு வேண்டிய உதவியை அபாயமற்ற முறையில் செய்ய வேண்டும் என்றும் சொன்னுன். அரசியல் தந்திரத்தின் மூலமாக சிசிலி நாடுகளை வசப்படுத்த வேண்டுமென்றும், அவ்வாறு தங்களைப் பலப்படுத்திக் கொண்டு, செஜெஸ்டா வியோன்டினி ஆகிய இரு நாடுகளுக்கு நீதி வழங்குமாறு செலிநஸ் நாட்டையும் சைரகூஸ் நாட்டையும் பலமாக வற்புறுத்த வேண்டுமென்றும், ஆல்ஸிபியாடீஸ் லியான்டினிக்கும் செஜெஸ்டாவுக்கும் இழைக்கப்பட்ட கொடுமையைப் போக்கும் நோக்கத்துடன், நிசியாவும், ஆலிசிபியாடியும் பேசினுர்கள். ஆனுல் லமாச்சஸ் அரசியல் அறிவோ அல்லது தந்திரமோ இல்லாதவன். அவன் படைத்தலைவனுமல்ல. அவன் ஓர் சாதாரண போர் வீரனுக்குரிய முறையில் நோக்கினுன். சைரகூஸ் நாடு அவர்களுடைய உண்மையான பகை நாடு என்றும், அந் நாட்டுக்கு எதிராகத்தான் படையெடுக்கப்பட்டதென்பதை அத்தீனியர்கள் உணரவேடுமென்றும், யுத்தத்திற்கு ஆயத்தமில்லாத அந் நாட்டை உடனடியாகத் தாக்க வேண்டுமென்றும் ஆலோசனை கூறினுன். சைரக்கூஸின் நல்வினைப்பயனுக அவன் யோசனைக்கு ஆதரவு கிட்டவில்லை. போர்க்களம் ஒன்றைத் தவிர மற்ற இடங்களில் அவனுக்குச் செல்வாக்குமில்லை, அதிகாரமுமில்லை. அவனை ஓர் சாதாரணப் போர் வீரனுகவே படை வீரர்கள் மதித்துவந்தார்கள். அவன் மற்றவர்களைத் தன்னுடையக் கருத்துக்கு இசையும்படிச் செய்யமுடியவில்லை. ஆகவே அவன் அல்சிபியாடிஸின் திட்டத்தை ஆதரித்தான்.

நாக்ஸால், கேட்டனே என்ற இரு இடங்களும் கைப்பற்றப்பட்டன. அத்தினியப் போர்க் கப்பல் சைரக்கூசின் பெரிய துறைமுகத்திற்குள் புகுந்து ஓர் கப்பலைக் கைப்பற்றியது. தெய்வ நிந்தனைக்

குற்றத்திற்காக நீதிமன்றத்தில் விசாரணைக்கு ஆல்பிடியாசை அழைத்துப்போக ஏதென்சிலிருந்து ஓர் தூதுவன் அப்போது அங்கு வந்தான். எனவே, அவர்களால் மேற்கொண்டு எவ்வித நடவடிக்கையும் எடுக்க முடியவில்லை. ஹெர்மேயின் சிதைவு அத்தீனியர்களுடைய சமய உணர்ச்சியை மாசுபடுத்தியதோடு அவர்களுடைய பயத்தையும் அதிகரிக்கச் செய்தது, வழக்காராய்வுக் குழு ஒன்று நியமிக்கப்பட்டது. பலர் கைது செய்யப்பட்டார்கள். அத்தீனியர்களில் ஓர் உயர் குடியைச் சேர்ந்த ஆண்டோசைட்ஸ் (Andocides) கைது செய்யப்பட்டான். அவன் தன்னுடைய குற்றத்தை ஒப்புக்கொண்டு கடைசியாக அவன் தன்னுடைய கூட்டாளிகளின் பெயர்களைச் சொல்லவும் தீர்மானித்துவிட்டான். அவனுடைய கூற்று நம்பப்பட்டது. பொது மக்களுடைய ஆத்திரம் தணிந்தது. அவனால் குற்றம் சாட்டப்பட்ட கைதிகள் விசாரிக்கப்பட்டு, மரண தண்டனை அளிக்கப்பட்டு, கொல்லப்பட்டார்கள். அவனுக்கு மட்டும் மன்னிப்பளிக்கப்பட்டது. சிறிது நாளைக்குள் அவன் ஏதென்சைவிட்டுப் போய்விட்டான், ஆனால் அவன் சொன்ன செய்தி உண்மை என்று சொல்ல ஆதாரங்களில்லை. அந்த ரகசியத்தின் உண்மை ஒரு போதும் வெளிப்பட்டதில்லை என தூசிடைடிஸ் கூறுகிறான்.

அந்த சதித் திட்டத்துக்கு மூலகாரணமாக இருந்தவர்கள் யார் என்பதை ஒருபோதும் அறிய முடியாதிருந்தது. அந் நிகழ்ச்சியைப் பொறுத்த மட்டில் அது ஓர் புதிராகவே இருந்தது. அந்த சம்பவத்தின் நோக்கமும், அது எவ்வாறு உருவாயிற்று என்பதும் சந்தேகத்துக்கு இடமில்லாமல் தெரிகின்றன. அது சிசிலிப் படை யெடுப்பின் ஆரம்பத்தின் முதல் நாள் நடந்தது. பொது மக்களின் மூடக் கொள்கையை ஆதாரமாகக் கொண்டு, போர்க் கப்பல்கள் புறப்படுவதைத் தடுக்கும் நோக்கம் ஒன்றைத் தவிர அதற்கு வேறு நோக்கம் இருந்திருக்க முடியாது. போர்க் கப்பல்கள் புறப்படுவதைத் தடுப்பதில் முதன்மையான பங்கெடுத்துக் கொண்டவர்கள், கொரிந்தியர்களும் சைரக்கூசியர்களும்தாம் என்பது தெளிவு. அக் கொடுமையான செயலுக்குக் காரணமாக இருந்தவர்கள், கொரிந்தியர்களிடம் பணம் வாங்கிய அதனுடைய கையாட்கள் என்று நாம் ஊகிக்கிறோம். அவர்கள் பெயர்களை அறிவதால் நமக்குப் பயனில்லை. உண்மையில் ஹெர்மோன் சிதைவு ஒரு மர்மமன்று.

ஹெர்மே சிதைவு சம்பந்தப்பட்ட ஆராய்ச்சி மற்ற தெய்வ நிந்தனைகளைப் பற்றியும் சிறப்பாக, அல்ஸிபியாடிஸ் ஈடுபட்டுள்ள எலுசினியன் (Eleusinian) தெய்வ ரகசியத்தின் ஏளனம்பற்றியும் ஆராய வழி காட்டிற்று. இரு கட்சிகளிலுமிருந்த அவனுடைய பகைவர்கள் அவனைத் தாக்குவதற்கு அது ஓர் நல்ல சந்தர்ப்பமென்று கருதி

னார்கள். கைமனின் மகனாகிய தெஸ்ஸாலஸ் (Thessalus) குற்ற விசாரணை நடத்துவதை விரும்பினான். அவ் விசாரணை இவ்விதம் ஆரம்பித்தது. லாசிடேயி (Lacladae) ஊரைச் சேர்ந்த கைமனுடைய மகன் தெசாலஸ் என்பவன் ஸ்க்காம்போனிடே (Scambonidae) ஊரைச் சேர்ந்த கிளினியாசின் மகனாகிய ஆல்சிபியாடிஸ் மீது பெருங் குற்றம் ஒன்றைச் சுமத்தினான். ஆல்சிபியாடிஸ் டெமிட்டர், கோர் என்ற தெய்வங்களைப் பரிகசித்தான். அத் தெய்வங்களின் செயல்களைப் பொய்யாகத் தன் நண்பர்கள் முன்னால் நடித்துக் காட்டினான். அத் தெய்வங்களின் பூசாரியைப்போல் ஆடை யணிந்து அப் பூசாரிகளைப்போல் நடித்து, தான் அத் தெய்வங்களின் பூசாரி என்று சொல்லிக் கொண்டான். இப்படிப்பட்ட செயல்கள் அவ்விரு தெய்வங்களையும் கேலி பண்ணும் வகையில் செய்யப்பட்ட பெருங் குற்றங்களென தெஸ்ஸாலஸ் கூறினான். ஆல்சிபியாடிசை அழைத்து வர சாலமினியா என்ற துடுப்புக் கப்பல் ஒன்று அனுப்பப்பட்டது. அவனிடம் பலாத்காரமாக நடக்கக் கூடாதென்று அழைக்கச் சென்றவர்களுக்கு ஆணையிடப்பட்டிருந்தது. ஆல்சிபியாடிஸ் திரும்பி வர மறுத்திருக்கலாம். ஆனால் அவன் அதைச் செய்யவில்லை. கட்டளைக்குக் கீழ்ப்படிந்து சாலமினியா கப்பலில் ஏதென்ஸை நோக்கிப் புறப்பட்டான். அவன் துரி என்ற இடத்துக்கு வந்ததும் தப்பிச் சென்றான். தானாகவே நாடு கடத்தப்பட்டவனாகக் கருதினான். அத்தீனியர்கள் அவனுக்கும் அவன் குடும்பத்தைச் சேர்ந்த சிலருக்கும் மரண தண்டனை அளித்தார்கள். அவனுடைய சொத்து பறிமுதல் செய்யப்பட்டது.

ஆல்சிபியாடிஸ் சிசிலியை விட்டுச் சென்ற பிறகு, அங்கு அத்தீனியர்கள் சிறு தாக்குதல்களிலீடுபட்டார்கள். ஆனால் அங்கே எவ்வித பயனும் ஏற்படவில்லை. கடைசியாக குளிர்காலம் வந்தபோது நிசியாஸ் கடும்போரிலீடுபட்டான். அவன் ஓர் தந்திரமான சூழ்ச்சியைக் கையாண்டான். அத்தீனியர்களின்மீது அவர்கள் எதிர்பாராத தாக்குதலை நடத்த, சைரக்கூஸ் படையினரைத் தூண்டிவிட்டு அப் படை காடனே வரையில் போகும்படிச் செய்துவிட்டான். அதே சமயத்தில் அத்தீனியப் படைகளை காட்டேனேயிலிருந்து போர்க் கப்பல்கள்மூலம் சைரக்கூசின் பெரிய துறைமுகத்துக்குக் கொண்டுவந்தான். துறைமுகத்திற்குத் தென்மேற்கில் டாஸ்க்கன் முனைக்குப் பக்கத்தில், ஒலிம்பியன் சியஸ் ஆலயத்திற்குச் சற்று தெற்கில் இறங்கி, அதைப் பலப்படுத்திக் கொண்டான். ஒலிம்பியன் சியசுக்குச் செய்யவேண்டிய பூசையைப்பக்தியோடுசெய்தான். சைரக்கூஸ்போர் வீரர்கள் திரும்பி வந்தவுடனே அந்த யுத்தத்தின் முதல் தாக்குதல் நடந்தது. குதிரைப் படையில்லாமை அத்தீனியர்களுக்குப்பாதகமாக இருந்தது. சைரகூஸ் படையில் 1200 குதிரைகள் இருந்தும், கட்டுப்பாடு இல்லாமையால்,

குதிரைப் படையினுல் ஏற்படும் பயனைப் பெறவில்லை. புயல், மழை, மின்னல் யாவும் அத்தீனியர்கள் சைரக்கூஸ் போர் வீரர்களை முறியடிக்க உதவி புரிந்தன. ஆனல் அந்தக் குதிரைப்படை சைரக்கூஸ் போர் வீரர்கள் பின்வாங்கிச் செல்வதற்குப் பயன்பட்டது.

ஓர் வெற்றி கிடைத்தது; ஆனல் நிசியாசின் குணம், அவ் வெற்றி மேலும் வன்மைபெருதபடி தடை செய்தது. அதற்கடுத்த நாள் படை முழுவதையும் கப்பலேறிக் காட்டனேக்குப் புறப்படும்படிக் கட்டளையிட்டான். அப்படிக் கட்டளையிடுவதற்கு அவனுக்குப் பல காரணங்கள் இருந்தன. குளிர்காலம், குதிரைப்படை இல்லாத குறைபாடு, பணமில்லாக் குறைபாடு, நேச உறவு நாடுகள் இல்லாக் குறைபாடு ஆகியவை. அதற்கிடையில் சைரக்கூசியர்கள் போருக்கான ஆயத்தங்களைச் செய்வதற்கு வாய்ப்பு கிடைத்தது. ‘அத்தீனியப் போர்க் கப்பல்களும், படையும் ஊக்கமும் உற்சாகமும் இழந்தன. அத்தீனியப் போர்க் கப்பல்கள் அங்குமிங்குமாக மிதந்து சென்றதைச் சிசிலி மக்கள் கண்டனர். சிறிய தாக்குதல்களின் மூலம் போர்க்கப்பல்களின் ஆற்றல் குறைந்துவிட்டது. எதிரியைப் பலமாகத் தாக்கி அதனுல் அடைந்த வெற்றியைத் தொடர்ந்து பூரண வெற்றியாக மாற்றமுடியாத நிலை ஏற்பட்டது. இவை யாவும் சிசிலி மக்களுக்கு ஓர் சாதாரணக் காட்சிகளாக இருந்தன.’’[1]

குளிர்காலத்தில் இரு கட்சிகளும் நேச உறவு நாடுகளைத் தேடுவதில் முனைந்தன. சிசிலித் தீவின் சிசெல்ஸ் (Sicels) என்ற பகுதி ஏதென்சுக்குத் துணையாக இருந்தது. காமரினு (Camarina) நடுநிலைமை வகித்தது. காமரினு சபையில் ஹெர்மோகிராட்டஸ் என்பவன், சிசிலியர்கள் கொள்கையை மீண்டும் வற்புறுத்தியதாக தூசிடைடிஸ் கூறுகிருன். இக் கொள்கையை ஹெமோகிராட்டஸ் பத்தாண்டுகளுக்கு முன்னே ஜெலாவில் (Gela) உருவாக்கினுன். ஓர் அத்தீனிய அரசியல் தூதுவன், அதிலிருந்து ‘சுத்த சுயநலக் கொள்கை’யை உருவாக்கினுன். இது, மிலியன் (Milian) உரையாடல் என்று தூசிடைடிஸ் காட்டிய அத்தீனியன் கொள்கையை நமக்கு மறுபடியும் ஞாபகமூட்டுகின்றது. ஆல்சிபியாடிஸை ஏதென்சுக்கு அழைத்துக் கொள்வதற்குமுன், மெசானுவைப் பிடிக்க ஓர் திட்டம் வகுக்கப்பட்டது. அத் திட்டத்தை நிறைவேற்றத் துவங்கும் சமயத்தில் அது தோற்றுவிட்டது. ஆல்சிபியாடிஸ், மெசானுவிலிருந்த (Messana) சைரக்கூசின் கட்சிக்கு அந்த ரகசியத் திட்டத்தை அறிவித்துத் தன் நாட்டின்மீது வஞ்சத்தைத் தீர்த்துக்கொள்ள முயன்ருன்.

1 பிரீ மேன் (Freeman)

மிகவும் எளிதென்றெண்ணி ஏதென்ஸ் ஈடுபட்டுள்ள அப் படை எடுப்பு, அதற்குக் கேடாகத் தோன்றியது. நிசியாஸ் அகற்றப்பட்டு, படைக்குத் தலைமை தாங்கும் பணி ஆல்சிபியாடிஸ், லாமாச்சஸ் என்ற இருவருக்கும் கொடுக்கப்பட்டிருந்தால் அப் படையெடுப்பு வெற்றி கரமாக முடிந்திருக்கும். நிசியாசுக்குப் படைத் தலைமை கொடுத்தது விரும்பத்தகாத செயல். அத்துடன் திருப்தியடையாமல் ஆல்சிபியாடிசுக்கு வாய்ப்பு அளிக்காமல் முழுப் பொறுப்பையும் அவனிடமே விட்டு விட்டார்கள். அரசியல் தந்திரம் படைத்த ஆல்சிபியாடிஸ் படையெடுப்புக்காக எவ்வளவு வருந்தி உழைத்தானோ, அவ்வளவுக்கு அதன் அழிவுக்காகவும் வருந்தி உழைத்தான். அவன் ஸ்பார்ட்டாவுக்குச் சென்றான். ஸ்பார்ட்டன் சபையில் அப்போது சைரக்கூசிலிருந்து ஓர் அரசியல் தூதுவன் ஸ்பார்ட்டாவின் உதவியை நாடி வந்திருந்தான். ஆல்சிபியாடிஸ் வீரம் நிறைந்த, பயன் விளைவிக்கக்கூடிய ஓர் சொற்பொழிவாற்றினான். அத்தீனியர்களுடைய பேராசையின் எல்லைமீறிய திட்டங்களை அவன் வெளிப்படுத்தினான். மேற்கில் கார்த்தேஜ் உட்படப் பல நாடுகளை அவர்கள் கைப்பற்றவிருந்த நோக்கத்தையும், அதனால் மேற்கில் அவர்களுக்குக் கிடைக்கும் வெற்றியால் திரும்பி வந்து, பெலப்போனீசியாவையும் கீழ்ப் படுத்துவார்கள் என்று அவன் குறிப்பிட்டான். ஒருவேளை அவனுடைய சொந்தக் கற்பனையாக இருக்கலாம். அவை ஓர் சாதாரண அத்தீனிய அரசியல் அறிஞனின் மனத்தில் இத்தகைய திட்டம் தோன்றியதில்லை. ஸ்பார்ட்டர் இருவித நடவடிக்கைகள் எடுக்கவேண்டுமென அவன் வற்புறுத்தினான். ஒன்று ஒரு படைத் தலைவனை சைரக்கூஸுக்கு அனுப்பவேண்டுமென்று சொன்னான். இரண்டாவது, அட்டிக்காவில் டெக்கிளியாவை (Decelea) வலுப்படுத்தவேண்டுமென்று சொன்னான். ஏனென்றால் அப்பகுதி மூலமாக இடையூறு வரக்கூடுமென அத்தீனியர்கள் எப்போதும் பயந்துகொண்டிருந்தார்கள். கொள்கையைக் கைவிட்டவனை ஆல்சிபியாடிஸ் சொன்னதாவது: ‘அத்தீனியர்களுடைய எல்லா ரகசியங்களையும் அறிவேன்’. அவன் தன்னுடைய பழிவாங்கும் நடத்தைக்காக இவ்விதமான தற்காப்பு செய்திருக்க கூடுமென்பதைத் தூசிடைடிஸ் குறிப்பிடுகிறான். அதைத் துரோகமென்று கூறமுடியாது. அவன் அத்தீனியக் குடியாட்சிக் கொள்கையை ‘ஒப்புக் கொள்ளப்பட்ட மடமை’ என அழைத்தான். தீவிரப் பகை, நாடு கடத்தும் தண்டனையைத் தந்தது இந்த உணர்ச்சியைத் திருப்திப்படுத்த மட்டும் இந்தச் செயலைச் செய்தானா அல்லது அவன் வாழ்க்கைக்கு மேலும் திட்டங்கள் இருந்திருக்காதா? எனக் கேட்கலாம். அவன் பேசியதாகத் தூசிடைடிஸ் கூறுவதை நாம் ஏற்றுக் கொள்வதாயின், அவன் தன் நாட்டு மக்களின் நம்பிக்கையைப் பெறுவதே அவன் நோக்கம் என்று கருதலாம். ஸ்பார்ட்டாவின் மூலம் ஏதென்சுக்கு ஏற்படும் இடரைத் தனக்குச் சாதகமாகக் கொண்டு தலைதூக்க

வேண்டுமென்பதே அவனுடைய நோக்கமாயிருந்தது. அவனை இரண்டாவது பிஸிஸ்ட்ராட்டஸ் (Pisistratus) என்று அழைப்பதைத் தவிர, அவனை வேறு விதத்தில் காணமுடியாது.

ஹெல்லாசின் வரலாற்றின் மிகவும் நெருக்கடியான அச் சமயத்தில், திறமை வாய்ந்த அவனுடைய சொற்பொழிவு முன்பிருந்த சம நிலையை மாற்றிவிட்டது. நடுநிலைமையைப் பின்பற்றுவதா அல்லது தலையிடுவதா என்று உறுதியற்ற மனநிலையிலிருந்த லாசிடோமோனியர்கள், அவனுடைய அறிவுரைக்குச் செவிசாய்த்தனர். ஜிலிப்பஸ் (Cylippus) என்பவனை சைரக்கூஸ் படைத்தலைவனாக நியமித்தார்கள். கொரிந்தியாவும் தன்னுடைய குடியேற்ற நாடாகிய சைரக்கூசுக்கு உதவிபுரியப் போர்க்கப்பல்களை அனுப்பியது. போர்ப்படை சிசிலிக்குப் படையெடுத்தது முதல், அத்தீனியர்கள் கனவுகள் பல கண்டு கொண்டிருந்தனர். தங்களுடைய செல்வ நிலையில் எதிர்பாராத, வியப்பூட்டும் மாறுதல் ஏற்படும் என்று நம்பிக்கொண்டிருந்தனர். அரிஸ்டோபேன்ஸ் என்ற நாடக ஆசிரியன் தன்னுடைய நாட்டு மக்களுடைய இந்த மனோநிலையை. 'பறவைகள்' (Birds) என்ற நாடகத்தின் கருப் பொருளாகக் காட்டியுள்ளான். அதை அவன் பெரிய டயோனிசியா (Great Dionysia) என்ற இடத்தில் அரங்கேற்றினான்.

கிளவுட்டுக் கூட்டௌனின் (Cloudcuckootown) அடித்தளம் என்ற கதையில் வரும் பறவைகளுக்கு சிலர் அரசியல் உவமானம் காட்டுகின்றனர். தூண்டுதல், நம்புதல் என்ற இரு அத்தீனிய வீரர்களின் கட்டளையின்கீழ் பறவைகள் வாழ்கின்றன இந்தக் கதையின் மூலமாக அரிஸ்டபேன்ஸ் அத்தீனியர்களுடைய அரசியல் வாழ்க்கையை உருவகப்படுத்திச் சுட்டிக் காட்டுகிறான். ஆனால் இது அந்த நாடகத்தின் நோக்கத்தைத் தவறாகப் புரிந்துகொள்ளவும், கவிஞனுடைய கலைக்குத் தீங்கு செய்யவும் ஏதுவாக இருக்கிறது. அத்தீனிய மக்களிடமிருந்த மனநிலையை இந் நாடகம் எடுத்துக் காட்டுகின்றது என்பதையே வரலாற்று ஆசிரியன் புரிந்துகொள்கின்றான்.

## 4. சைரக்கூஸ் முற்றுகை கி.மு. 414

ஆர்ச்சியாஸின் ஆரம்பக் குடியேற்ற நாடாகிய சைரக்கூஸ் தீவு அந் நகரத்தின் இருதயமாகவும் நடுநாயகமாகவும் விளங்கிற்று. மேலே இருந்த குன்றுவரையில் அந் நகரம் பரந்து இருந்தது. ஏதென்சுக்கு அக்ரபோலிசும், ஆர்காசுக்கு லாரிசாவும் எவ்வளவு முதன்மையானவையோ அவ்வாறே அந்தத் தீவு அந் நாட்டு மக்களுக்கு முன்பே வாய்த்தது. அத் தீவு அக்ரபோலிஸ் என்றுகூட அழைக்கப்பட்டு




படம் 9. சைரக்கூஸை அத்தீனியர்களும் கார்த்தஜினியர்களும் முற்றுகையிடல்

வந்தது. ஆனுல் அப் பெயர் ஒருபோதும் அந்த குன்றுக்கு வழங்கப் படவில்லை. எப்பிப்போலே (Epipolae) என்பது ஓர் நீண்ட குன்று. அது பெரிய துறைமுகத்தின் வடபகுதியை அடைத்துவிடுகிறது. எப்பிபோலேயின் போர் முக்கியத்துவத்தைப் புறக்கணிக்க முடியா திருந்தது. படிப்படியாக சைரக்கூசர்கள் அதன் முக்கியத்துவத்தை உணர்ந்தார்கள். அந்தத் தீவுக்கும் பெருநிலப் பகுதிக்கும் இடையே யுள்ள பகுதி நீர் நிறைந்து இருந்தது. குன்றுவரையில் மனிதர்கள் போய்க் குடியேறுவதற்கு ஏற்றதாக இருந்தது. கடைசியில் ஆச்சார் டினு என்ற குன்றின் கிழக்குப் பகுதி, தெற்கு வடக்காக அமைக்கப் பட்ட சுவரினுல் பலப்படுத்தப்பட்டிருந்தது. பிற்காலத்திலே, திராசி பூலஸ் (Thrasybulus) என்பவன் நாடுகடத்தப்படுவதற்குக்காரணமாக இருந்த உள்நாட்டுக் கலகத்தின்போது, அக்ராடினுவுக்கு வடமேற்கி லிருந்த் டிச்சா (Tycha) சுற்றுப்புறப் பகுதி நகரத்தோடு இணைக்கப் பட்டது. டிச்சா சுவரிலிருந்து அக்ராடினு வரையிலுமுள்ள அக் குன்றின் பகுதி மட்டும் அன்றிலிருந்தே எப்பிபோலே (Epipolae) என்று அழைக்கப்படுகிறது. சுவரை அடித்தளமாகவும் யூரியாலஸ்சை முனையாகவும் கொண்டு, அவ்விடம் முக்கோண வடிவத்தில் அமைந் திருக்கிறது.

சைரக்கூசர்கள் முற்றுகையை எதிர்க்க இயன்றவரையில் தயா ராக இல்லாவிடினும் ஓரளவு விழிப்புடனிருந்தார்கள். தங்கள் படை முறையைத் திருத்தியமைத்து ஹெர்மேகிராட்டஸ் (Hermocrates) என்பவனைப் படைத்தலைவனுக்கினுர்கள். ஆக்ராடினு மதிலுக்கு வெளியே சற்று அண்மையிலிருந்த அப்போல்லோ டெமெனிட்டஸ் என்ற எல்லைப்புறத்தைப் பலப்படுத்தினுர்கள். குன்றுக்குத் தெற்கில் ஒலிம்பியன் சியஸ் ஆலயத்திற்குச் சமீபத்திலிருந்த போலிச்சாணு (Polichana) என்ற கோட்டையையும் பலப்படுத்தினுர்கள்.

பெரிய துறைமுகத்திற்கு மேற்கிலிருந்த சமவெளி அத்தீனியர் களுக்கும் சைரக்கூசர்களுக்கும் முதல் போர்க்களமாக இருந்தது. தளிர் விடு காலத்தில் இரண்டாவது போர்க்களம் வடபகுதிக்கு மாற்றப் பட்டது. எப்பிபோலேயின் மேட்டுப் பகுதி போர்க்களமாக விளங் கிற்று. அந்த மேட்டுப் பகுதியைப் பாதுகாப்பதன் முக்கியத்துவத்தை ஹெர்மோகிராட்டஸ் உணர்ந்திருந்தான். படையில் பணிபுரியத் தகுதியுள்ள மக்களின் எண்ணிக்கை மறுபடியும் கணக்கிடப்பட்டது. எபிபோலாவைப் பாதுகாக்க 600 வீரர்கள் தேர்ந்தெடுக்கப்பட் டார்கள். ஆனுல் குறிப்பிட்ட நேரம் பெரும்பாலும் கடந்துவிட்டது. அனுப்பஸ் (Anapus) ஆற்றங்கரையிலிருந்த புல்வெளியில் போர் வீரர்கள் அணிவகுத்து நின்றனர். அதே சமயத்தில் அவர்களருகே அத்தீனியப் போர்வீரர்கள் வந்துவிட்டார்கள். அதற்கு முந்திய இரவு

போர்க் கப்பல்கள் காட்டனேயை விட்டுப் புறப்பட்டன. எபிபோலேயின் வலப்பக்கமாக குடாவுக்குள் புகுந்து, யூரியாலஸ் குன்றுக்கு ஒரு மைல் தூரத்தில் இறங்குதுறையை அடைந்து அங்கு படையை இறக்கின. சைரக்கூசர்களுக்குத் தெரியாமல் போர்வீரர்கள் மலையின் உச்சிக்கு விரைந்து சென்று அவ்விடத்தை அத்தீனியர்கள் ஆக்கிரமித்துக் கொண்டார்கள். அங்கிருந்த 600 போர் வீரர்களும் அவர்களை எதிர்த்தார்கள். ஆனால் பெரும் நஷ்டத்துடன் அவர்கள் பின்வாங்க நேர்ந்தது. வடக்கிலிருந்த பாறைகளுக்கருகில் லாப்டாலரின் என்ற இடத்தை அத்தீனியர்கள் பலப்படுத்தினர்கள். யூரியாலஸ் என்ற இடத்தையும் அவர்கள் பலப்படுத்தவில்லை என்பதற்காகக் குற்றம் சாட்டப்பட்டார்கள்.

வடக்குக் குன்றுகளிலிருந்து துறைமுகத்தின் தென்கோடி வரையில், குன்றின் வலப்பக்கத்தில் குறுக்காக ஓர் மதிற்சுவர் கட்டவேண்டுமென்பது அம் முற்றுகையின் நோக்கம். இது தரைமார்க்கப் போக்குவரத்தைத் தடைசெய்துவிடும். அதே சமயத்தில் தாப்ஸஸ் (Thapsus) குடாவில் நின்றுகொண்டிருந்த கப்பல்கள் பெரிய துறைமுகத்தில் புகுந்து நீர் மார்க்கமாகவுள்ள போக்குவரத்தைத் தடைசெய்ய முடியும். இந்த நோக்கத்திற்காகக் கட்டப்படவிருந்த சுவரின் நடுவே வட்டமான கோட்டை ஒன்று எழுப்பப்பட்டது. அவ் வட்டக் கோட்டையிலிருந்து சுவர்கள் தெற்கு நோக்கியும் வடக்கு நோக்கியும் மதில் எழுப்பப்பட வேண்டியதாயிற்று. அதையறிந்த அத்தீனியர்கள் தென்பக்கத்து மதிற்சுவர் கட்டுவதைத் தடுத்துப் பயனில்லை என்று கண்ட சைரக்கூசர், டெமினிட்டிஸ் (Temenites) என்ற இடத்தில் ஆரம்பித்து மேற்கு நோக்கிச் செல்லும் மற்ருெரு மதிலைக் கட்டினர்கள். அத்தீனியர்கள் சுவரை எழுப்புவதைத் தடுக்கமுடியாததால் இம் முயற்சியில் ஈடுபட்டார்கள். அத்தீனியர்கள் சைரக்கூசர்கள் சுவர் எழுப்புவதைத் தடுக்கவில்லை. வட்டமான கோட்டையின் வடபகுதியில் சுவர் எழுப்புவதில் அவர்கள் கண்ணுங் கருத்துமாக இருந்தார்கள். தாப்சஸிலுள்ள அவர்களது கப்பற்படையுடன் தொடர்பு கொள்ளும் நோக்கத்துடன் அவர்கள் இருந்ததாகத் தோன்றியது. வெளிப்படையாக சைரக்கூசர்களைப்பற்றி எவ்வித அக்கறையும் அவர்கள் காட்டிக் கொள்ளாவிடினும், உள்ளூர அவர்களைத் தாக்குவதற்கு ஓர் நல்ல சந்தர்ப்பத்தை எதிர்நோக்கிக் கொண்டிருந்தார்கள். அவர்கள் எதிர்பார்த்த வாய்ப்பைச் சைரக்கூசர்கள் கொடுக்க நேர்ந்துவிட்டது. தங்களுக்கு எதிராக எழுப்பிக் கொண்டிருந்த சுவரை அத்தீனியர்கள் தாக்கி அதைத் தரைமட்டமாக்கினர்கள். அத்தீனியப் படைத்தலைவர்கள் தென்பக்கத்துச் சுவர் எழுப்புவதில் தங்கள் கவனத்தைச் செலுத்தினர்கள். வட்டமான கோட்டைப்பக்கத்தில் சுவரைக் கட்டி முடிப்பதில் கவனம் செலுத்தாமல் பெரிய துறைமுகத்

தின் வடமேற்குப் பக்கத்திலிருந்த சதுப்பு நிலப் பகுதிக்குமேலே ஹிராக்கிளிஸ் கோயிலுக்குச் சமீபத்தில் பாறைக்குத் தென் பகுதியைப் பலப்படுத்த ஆரம்பித்தார்கள்.

அத்தீனியர்கள் தங்களுடைய மதிற் சுவரைப் பாறையின் உச்சியிலிருந்து துறைமுகம் வரையில் கட்டிக்கொண்டு வருவதைத் தடுப்பதற்காக, குன்றுக்குக் கீழேயுள்ள ஓர் சதுப்பு நிலத்துக் கருகில் இரண்டாவது தடுப்பு வேலை ஒன்றை சைரக்கூசர்கள் ஆரம்பித்தார்கள். இப்போது அவர்கள் சுவர் எழுப்பவில்லை; சதுப்பு நிலத்தில் மதில் எழுப்புவது கடினமாக இருந்தது. எனவே அவர்கள் ஒரு அகழியைத் தோண்டி அதைச் சுற்றி வேலி எழுப்பினார்கள். விடியற்காலையில் அத்தீனியர்கள் லாமாச்சஸ் தலைமையிலே சதுப்பு நிலப்பகுதியில் இறங்கி வந்து சைரக்கூசர்களின் அகழியையும் அதைச்சுற்றி எழுப்பிய கிராதியையும் அழித்தார்கள். அதனால் அவர்கள் அடைந்த நஷ்டம் அவர்களுக்குக் கிடைத்த அனுகூலத்தைவிட மிகப் பெரியது. சைரக்கூஸிலிருந்து படைகள் வந்து குவிந்தன. ஓர் யுத்தம் நடந்தது. விகட கவிகளால் கேலியாக வீர லாமாச்சஸ் என்று அழைக்கப்பட்ட லாமாச்சஸ், முன்னணியில் நின்று போரிட்டபடியால் கொல்லப்பட்டான். இது அத்தீனியர்களின் நலனைப் பாதிக்கக்கூடிய மூன்றாவது அடியாகும்.

நிசியாவுக்குப் படைத் தலைமைப் பதவி அளிக்கப்பட்டது. ஆல்சிபியாடிஸ் திரும்ப ஏதென்சுக்கு வரவழைத்துக் கொள்ளப்பட்டான். இப்பொழுது லாமாச்சஸ் உலகத்தைவிட்டே போய்விட்டான். நிலைமை மிகவும் மோசமடையும் வகையில் நிசியாஸ் நோயினால் பீடிக்கப்பட்டான்.

அத்தீனியர்களுடைய தென் பக்கத்துச் சுவர் தெற்கு நோக்கி நீண்டுகொண்டே வந்தது. அது இரட்டைச் சுவர்களாக மிக நெருக்கமாக எழுப்பப்பட்டது. அத்தீனியப் போர்க்கப்பல்கள் பெரிய துறைமுகத்துக்குக் கொண்டுவந்து நிறுத்தி வைக்கப்பட்டன. சைரக்கூசர்கள், லாமாச்சஸ் மரணத்தினால் தங்களுக்கேற்பட்ட நன்மையை உணராமல் காரணமற்ற மனச்சோர்வடைந்தார்கள். தங்களுடைய படைத்தலைவர்களை மாற்றினார்கள். சமாதான உடன்படிக்கை செய்துகொள்ள ஆயத்தமானார்கள். நிசியாஸ் நூதனமாகத் தனக்கு வழக்கமான பொறுமையைக் கைவிட்டுக் காரணமற்ற மகிழ்ச்சியடைந்தான். சைரக்கூசை வென்றுவிட்டதாக அவன் எண்ணினான். வடக்கில் சுவர் எழுப்பும் வேலை பூர்த்தியடைவதில் அவன் கவனம் செலுத்தாமல், பெருந் தவறு செய்துவிட்டான். அப்பொழுது சைரக்கூசின் தாய்நாடாகிய கொரிந்தியாவிலிருந்து உதவி வந்துகொண்

டிருப்பதை அவன் கேள்விப்பட்டு தன் தவறை உணர்ந்தான். எப்போதும் விழிப்புடன் இருக்கும் நிசியாஸ், இப்போது மிகையான தன்னம்பிக்கையால், தவறு செய்துவிட்டான்.

காங்கிலஸ் (Gongylus) என்ற ஓர் கொரிந்தியப் படைத்தலைவன் சைரக்கூசுக்கு வந்து கொரிந்தியப் போர்க்கப்பல்களும், ஸ்பார்ட்டன் படைத்தலைவனும், சைரக்கூசர்களை நோக்கி வந்துகொண்டிருக்கும் செய்தியை அவன் அறிவித்தபோது, சரணடையும் எண்ணங்களும் கைவிடப்பட்டன. ஸ்பார்ட்டன் நாட்டுப் படைத்தலைவன் அத்தீனியர்களின் வெற்றியையும், சைரக்கூஸ் மக்களின் தோல்வியையும் கேள்விப்பட்டான். அதனால் அவன் சைரக்கூஸ் நாட்டினருக்கு உதவி புரிவதில் பயனில்லை என்பதை உணர்ந்து தன்னுடைய முயற்சியை விட்டுவிட்டான். எனவே, அவன் இத்தாலிய நகரங்களுக்கு உதவி புரியும் நோக்கத்தோடு, அவன் இத்தாலியின் கடற்கரையை நோக்கிப் பயணமானான். லோக்கிரி (Locri) என்ற இடத்திற்கு வந்தபோது, அத்தீனியர்களின் வடக்குச் சுவரின் வேலை பூர்த்தியடையவில்லை என்றும் சைரக்கூசை மீட்க இன்னும் வாய்ப்பு இருக்கின்றது. என்றும் கேள்விப்பட்டான். உடனே அவன் ஜிலா (Gela), செலினஸ் (Selinus), ஹெமிராவுள்பட என்ற நாடுகள் கொடுத்த தரைப்படை வீரர்களை ஒன்று சேர்த்து ஓர் பெரும்படையுடன் சைரக்கூசில் வந்திறங்கினான். அத்தீனியப் படைகள் எபிபோலே குன்றின் உச்சியை அடைவதற்கு உபயோகப்படுத்திய வடக்குப் பாதையின் வழியே, அவன் தன் படையுடன் குன்றின் சிகரத்துக்குப் போய்ச் சேர்ந்தான். அக் குன்றின் வடக்குப்புறத்திலுள்ள வளைவிலிருந்து டிச்சா (Tycha) வரையில் எவ்வித எதிர்ப்புமின்றி முன்னேறி, பட்டினத்துக்குப் போய்ச் சேர்ந்தான். அவ்வளவும் நிசியாவின் அசட்டுத்தனத்தால் ஏற்பட்ட விளைவுகள். அச் சுவர் வேலை முற்றுப்பெற்றிருக்குமானால், ஸ்பார்ட்டப் படைத்தலைவன் கிளிப்பஸ் ஒருபோதும் முயற்சி பயனளித்திருக்காது. யூரியாலஸ் பலப்படுத்தப்பட்டிருந்திருக்குமேயானால் அந்த முயற்சி பெரும்பாலும் தோல்வியடைந்திருக்கும்.

கிளிப்பஸ் சைரக்கூஸ் படையின் தலைமையை ஏற்றுக்கொண்டான். அந் நாட்டு மக்களின் உள்ளத்தில் ஓர் புதிய நம்பிக்கையூட்டினான். நிசியாஸ் எவ்வகையில் ஓர் சரியான அத்தீனியனில்லையோ அதைப்போல கிளிப்பஸ் ஓர் சரியான ஸ்பார்ட்டனல்ல. ஓர் போர் வீரனுக்குரிய கவர்ச்சிகரமான தோற்றத்தைத் தவிர, மற்ற எல்லா வகையிலும் சிறப்பாக ஊக்கத்திலும் திறமையிலும் அவன் பிராசிடாசை ஒத்து இருந்தான். உடனே பாதுகாப்பு நடிவடிக்கையில் ஈடுபட்டான். லாப்டலோன் கோட்டையை முதலில் கைப்பற்றினான். அத்தினியர்கள் அவர்களுடைய சுவரின் வடபகுதியிலுள்ள வேலையைப்

பூர்த்தி செய்துகொண்டு பட்டினத்தைச் சூழ்ந்துகொள்ளா வண்ணம் தடுப்பதுதான் அவனுடைய முதன்மையான நோக்கமாக இருந்தது. அதற்காக அவன் அவ்விடத்தில் ஓர் எதிர்ச் சுவர் எழுப்பவேண்டிய தாயிற்று. அத்தீனியர்கள் மிக விரைவாகத் தங்களுடைய சுவரை எழுப்பிக்கொண்டிருந்தார்கள். சைரக்கூசர்களும் சுவர் கட்டும் வேலையில் முனைந்திருந்தார்கள். ஆகவே இரு படைகளும் சுவர்கட்டும் பணியில் ஈடுபட்டிருந்தார்கள். அவ்வாறு அவர்கள் எழுப்பும் வேலை நடந்துகொண்டிருந்தபோது, இரு சேனைகளும் அடிக்கடித் தாக்குதல் நடத்தின. வெற்றி ஒருவர் பக்கம் மட்டும் நிலைக்காமல் கைமாறிக் கொண்டிருந்தது. முடிவில் சைரக்கூசர் சுவரெழுப்பும் வேலையில் வெற்றி பெற்றார்கள். அத்தீனியர்கள் சுவர் எழுப்பும் வேலையில் தோற்றுவிட்டார்கள். கிளிப்பஸின் சுவர் யூரியாலஸ் வரையில் எழுப் பப்பட்டது. குன்றின் மேற்குப் பகுதியில் நான்கு கோட்டைகளைக் கட்டினான். கிளிப்பஸ் சென்ற பாதையின் மூலமாக அத்தீனியர்கள் உதவிபெற முடியாவண்ணம் கோட்டைகளும் சுவரும் அமைக்கப் பட்டன. அதே சமயத்தில் நிசியாஸ் அத் தீவுக்கு எதிரேயுள்ள பிளமிரியோனைக் கைப்பற்றினான். பிளமிரியோன் பெரிய துறைமுக வாயிலின் கீழ்க்கரை. இங்கே அவன் மூன்று கோட்டைகளைக் கட்டி னான். கப்பல்கள் தங்குவதற்கு ஓர் இடத்தையும் ஏற்படுத்தினான். சில கப்பல்கள் கொரிந்தியாவிலிருந்து எதிர்பார்த்த கப்பல்களுக்காகக் காத்திருக்கும்படி அனுப்பப்பட்டன. துறைமுகத்தின் தென்பக்கத் தைப் பாதுகாக்க, போலீச்சானு என்ற கோட்டைக்கு ஓர் குதிரைப் படையைக் கிளிப்பஸ் அனுப்பினான். ஆனால் அத்தீனியர்கள் எப்பிபோ லேயின் தெற்குப் பாகத்தையும் துறைமுகத்தின் வாயிலையும் தங்கள் ஆதிக்கத்தில் வைத்திருந்தபோதிலும், டிச்சாவிலிருந்து (Tycha) யூரியாலஸ் வரையில் எழுப்பிய சுவரால் சைரக்கூஸ் மக்களின் நிலை மாறிவிட்டது. அவர்களுடைய மனச் சோர்வு நீங்கி, நம்பிக்கை பிறந்தது.

குளிர்காலம் ஆரம்பித்துவிட்டது. குளிர்காலம் அரசியல் தூது வர்களை அனுப்புவதிலும், போர் ஆயத்தங்கள் செய்வதிலும் கழிக்கப் பட்டது. சிசிலியில் புதுப்படைகளை உருவாக்குவதில், கிளிப்பஸ் குளிர்காலத்தைக் கழித்தான். இதுவரையில் நடுநிலைமை வகித்த காமரினாவும் அவனுடன் சேர்ந்துகொண்டது. கிரேக்க சிசிலியில், சைரக்கூசின் பகை நாடாகிய அக்ரகாஸ், மற்றும் நாக்ஸாஸ், காட் டேன் என்ற பட்டினங்களைத் தவிர, மற்ற நாடுகள் யாவும் சைரக்கூஸ் பக்கம் சேர்ந்துவிட்டன. பெலப்பனேசசுக்கும் உதவி கோரி வேண்டுதல் அனுப்பப்பட்டது. கொரிந்தியாவின் ஆவல் குன்றிவிட வில்லை. ஸ்பார்ட்டா 600 பளுவான ஆயுதம் அணிந்த போர் வீரர் களையும் நீயோடாமோடிஸ், ஹெலாட்ஸ் என்ற போர் வீரர்களையும்

அனுப்பியது. தீப்சு, தெஸ்பியே ஆகிய இரு நாடுகளும் துணைப் படைகளை அனுப்பின.

நாம் சிறிது நேரம் பழைய கிரீசுக்குப் போகவேண்டும். பொதுவான போர் அங்கே மறுபடியும் நடந்துகொண் டிருந்தது. சிசிலியில் மூண்ட சண்டை கிரீசிலும் பரவ ஆரம்பித்தது. சைரக்கூசிலும் சிசிலியிலும் ஏற்பட்ட சம்பவங்களைவிடக் கொடிய நிகழ்ச்சிகள் இங்கேயும் நடைபெறப் போகின்றன. பழைய போராட்டங்களில் தாங்களே தவறிழைத்தவர்கள் என்று ஸ்பார்ட்டர் உணர்ந்தார்கள். அத்தீனியர்களின் வெற்றி, சிறப்பாக பைலாசை அவர்கள் கைப்பற்றியது, தங்கள் தவறுதலால் ஏற்பட்டது என்பதையும் அவர்கள் உணர்ந்தார்கள். இப்போது அத்தீனியர்கள் சிசிலியை ஆக்கிரமித்துள்ளதால், அவர்கள் தவறிழைத்துவிட்டதாகக் கருதி ஸ்பார்ட்டர்கள் அவர்களுடன் போர் தொடுத்திருக்கலாம். எனவே, ஆல்சிபியாடிஸ் அறிவுரையின்பேரில் ஸ்பார்ட்டர்கள் டெசிலேயை (Decelea) பலப்படுத்த ஆரம்பித்து விட்டார்கள். ஒரு கோட்டையைக் கட்டி அஜிஸ் மன்னனின் தலைமையில் ஓர் காவல் படையை அங்கு நிறுத்தினர்கள். ஏதென்சிலுள்ள லைகாபெட்டஸ் மலையிலிருந்து (Mt. Lycabettus) வலப்பக்கமுள்ள பென்டீலிகசுக்கும் (Pentelicus) இடப்பக்கத்திலுள்ள பார்னெஸ் (Parnes) என்ற இரு இடங்களுக்கும் மேலுள்ள ஓர் இடைவெளி மூலமாக டெசிலேயின் உயரத்தைக் காணலாம். ஏனென்ருல் டெசிலே ஒரு தனிக் குன்று. அங்கிருந்து அட்டிக்காவின் எல்லா இடங்களையும் அடையக்கூடிய ஓர் சிறந்த இடமாக அது அமைந்திருந்தது. அத்துடன் போயிஷியாவுடன் போக்குவரத்து வைத்துக்கொள்வதற்கும் அது ஓர் சிறப்பான இடமாக இருந்தது.

பெலப்போனிசியர்கள் யுத்தத்தை ஏதென்ஸ் பட்டினத்தின் வாயிலருகே கொண்டு வந்திருந்த அச் சமயத்தில், நிசியாஸ் அதாவது முதலில் அனுப்பியதைப்போலவே, ஒரு பெரும் படையை அனுப்பும்படிக் கேட்டிருந்தான். நிசியாஸ் யுத்த நிலையைப்பற்றித் தெளிவாக, வருணனையின்றி ஒரு கடிதம் எழுதியிருந்தான். வாய்மொழி மூலமாகச் செய்தி அனுப்பும் வழக்கத்திற்கு மாருக நிலைமையை எழுத்து மூலமாக அறிவித்ததாகச் சொல்லப்படுகிறது. அத்தீனிய சபை உண்மையான நிலையை அறிந்துகொள்ள வேண்டுமென்பதற்காக அதை எழுத்து மூலமாக அறிவித்தான். கிளிப்பஸ் வருகையினுலும், படைவீரர்களின் எண்ணிக்கை உயர்ந்ததனுலும் அத்தீனியர்களின் மதிற்சுவருக்கு எதிராக ஓர் மதில் சுவர் எழுப்பப்பட்டதாலும், அத்தீனியர்கள் முற்றுகைக் குள்ளாயினர் என்று நிசியாஸ் விவரித்து எழுதியனுப்பினுன். கப்பல்கள் தாக்கப்பட்டன. அவற்றுள் நீர்புக ஆரம்பித்து விட்டது. கப்பலோட்டிகள் பயிற்சியின்றி வீழ்ந்தனர்—என அக் கடிதத்தில்

அவன் குறிப்பிட்டிருந்தான். மேலும் பகைவன் வெற்றிபெற்ருல், இத்தாலியிலிருந்து படை பெற்றுவரும் பண்டங்களின் வருகையும் தடைப்படுமென்றும் கடிதத்தில் குறிப்பிட்டான். இரண்டு காரியங் களில் ஒன்று செய்தே தீரவேண்டும் என்று எழுதினுன் ; ஒன்று படை யெடுப்பு முயற்சியைக் கைவிட்டு விடவேண்டும் ; அல்லது முன்னுல் அனுப்பிய படையைப்போல் வலுவுள்ள ஓர் புதிய படையை உடனே அனுப்பவேண்டும். இரண்டாவதாக தான் நோயினுல் அவதியுறு வதைச் சுட்டிக் காட்டித் தன்னே ஏதென்சுக்குத் திருப்பி அழைத்துக் கொள்ளுமாறு கெஞ்சிக் கேட்டுக் கொண்டான். இரண்டாவது படை யெடுப்புக்கு ஆதரவு காட்டியமையாலும், நிசியாஸைத் திருப்பியழைக்க மறுத்தமையாலும், அத்தீனியக் குடி மக்கள் முன்பு செய்த மடைமையான துணிகரச் செயலே, மீண்டும் செய்தார்கள். அம் மக்கள் நிசியாசைக் கண்மூடித்தனமாக நம்பினுர்கள். புதிய படைக்கு யூரிமிடான், டெமஸ்த்தனிஸ் ஆகிய இருவரையும் படைத் தலைவர்களாக நியமித்தார்கள்.

## 5. இரண்டாவது படையெடுப்பு

'சிசிலியன் உள்நாட்டு விவகாரங்களில் ஏதென்ஸ் ஆரம்பத்தில் தலையிட்டதும், செலினசுக்கு எதிராக செஜெஸ்ட்டாவையும், சைர கூசுக்கு எதிராக லெயோன்டைனேயையும் பாதுகாக்க முன் வந்த தும், ஓர் மாபெரும் போராட்டமாக வளர்ந்துவிட்டது. அப் போராட்டத்தில் ஹெலன் நாட்டின் பெரும் பகுதி ஈடுபட்டிருந்தது. போர் பழைய பெலப்பனீசிய யுத்தம், சிசிலியன் யுத்தத்தோடுசேர்ந்து மறுபடியும் இதுவரையில் கண்டிராத முறையில் ஆரம்பமாயிற்று. ஆரம்பத்தில், சிசிலியன் யுத்தம் பழைய கிரீசில் நடந்த யுத்தத்திற்கு ஓர் சாதாரண இணைப்பாக இருந்தது. இப்பொழுது அது சிசிலியப் போராட்டத்தின் தலைமை இடமாக மாறியது.'[1]

பாரசீகப் படை யெடுப்பு கிரேக்கர்களுக்கு எவ்வளவு கடும் பிரச்சினையாக இருந்ததோ அதுபோன்று, சிசிலிக்கு அந்த போராட் டம், வாழ்வா, சாவா என்ற பிரச்சினையாக மாறிவிட்டது. ஹெர்மோ கிராட்ஸ், கிளிப்பஸ் என்ற இரு படைத் தலைவர்களின் தலைமையில் சைரக்கூஸ் ஓர் கப்பல் படையைத் திரட்டுவதற்காக முழு மூச்சுடன் ஈடுபட்டது. வசந்த காலத்தில் அதனிடம் முத்துடுப்புக்கப்பல்கள் எண் பது இருந்தன. மாலுமிகள் அனுபவமற்றவர்கள். பாரசீகப் போர் நெருக்கடியினுலேயே அத்தீனியர்கள் சிறந்த மாலுமிகளாக விளங்கி னுர்கள் என்பது அவர்களுக்குத் தெரியும். பிளமெரியோன் என்ற இடத்தில் அத்தீனியர்களேத் தரை மூலமாகவும் கடல் மூலமாகவும்

[1] ஃப்ரீமான்.

தாக்கக் கிளிப்பஸ் தீர்மானித்தான். கடற் போரில், சைரக்கூசர்கள் தோற்கடிக்கப்பட்டார்கள். ஆனல் கடல் யுத்தம் நடந்து கொண்டிருந்தபோது கிளிப்பஸ் தலைமையின் கீழ் ஓர் தரைப் படை பிளம்மிரியோனேச் (Plemmyrion) சுற்றிவந்து, பெருநிலப் பகுதியிலிருந்த கோட்டைகளைக் கைப்பற்றியது. இதனுல், அத்தினியக் கப்பல்கள் துறைமுகத்துக்கு வடக்கில் எழுப்பப்பட்ட இரட்டைச் சுவருக்கருகில் திரும்பிச் செல்ல நேர்ந்தது. துறைமுகத்தின் வாயில் சைரக்கூசர்களின் ஆதிக்கத்தில் இருந்தது. இவ்விதமாக அத்தினியர்கள் தரை, கடல் இரு நிலைகளிலும் முற்றுகை இடப்பட்டார்கள். தாக்குதலைச் சமாளித்த போர்க் கப்பல்கள் மட்டுமே துறைமுகத்திற்கு வெளியே வர முடிந்தது. ஏனைய கப்பல்கள் வெளியே வரத் துணியவில்லை. அப்பொழுது ஏதென்சிலிருந்து சரக்குகளைக் கொண்டுவந்த ஓர் அத்தினியக் கப்பலை இத்தாலியக் கடற் கரைக்கு அருகில் சைரக்கூசர்கள் கைப்பற்றினுர்கள்.

கடைசியாக, யூரிமிடான், டெமஸ்தனிஸ் ஆகிய இரு தலைவர்களும் போர்க் கப்பல்களுடன் வரும் செய்தியை அவர்கள் அறிந்தனர். அக் கடற்கரையில் முத்துடுப்புகளையுடைய 73 கப்பல்களும், பளுவுள்ள ஆயுதம் தாங்கிய 5000 வீரர்களும், பளுவற்ற ஆயுதமணிந்த போர் வீரர்களும் ஆயிரக்கணக்கில் இருந்தார்கள். அப் படை அங்கு வந்து சேர்வதற்கு முன் தாக்குதலை நடத்தும் சந்தர்ப்பம் சைரக்கூசர்களுக்கிருந்தது. ஆனுல் நிசியாஸ் எதிரியைத் தாக்குவதற்கு எவ்வித நடவடிக்கையும் எடுக்கவில்லை. சைரக்கூசர்கள் ஏககாலத்தில் மதில் சுவர்களையும், சுவர்களுக்கருகில், துறைமுகத்திலிருந்த கடற்படையையும் தாக்கினுர்கள். தரையில் அத்தினியர்கள் சைரக்கூசர்களை எதிர்த்துப் பின்வாங்கும்படிச் செய்தார்கள். ஆனுல் கடலில் இரண்டு நாள் சண்டைக்குப்பின் சைரக்கூசர்களுக்கு வெற்றி கிடைத்தது. அத்தினியர்கள் கடற்போரில் திறம்படப் போரிட்டு வெல்ல முடியாதவாறு, பெரிய துறைமுகத்தின் பரப்பு அமைந்திருந்தது. அத்துடன் அவர்களுடைய கப்பல்கள் குறுகிய நீர்ப்பரப்பில் போரிடும் பழக்கமில்லாதிருந்தது. நீண்டு, குறுகிய முனைகளையுடைய மரக்கலங்களைச் செலுத்துவதற்கு தனித் திறமை வேண்டியிருந்தது. சைரக்கூசர்கள் குறுகலான இடத்தில் போர் செய்யக் குறுகலான முனைகளையுடைய பலமுள்ள கப்பல்களைக் கட்டிவைத்திருந்தனர். வெற்றி கிடைத்த மறுநாள் யூரிமிடானையும் டெமாஸ்த்தனிசையும் தலைமையாகக் கொண்ட போர்க்கப்பல்கள் பெரிய துறைமுகத்துக்குள் நுழைந்தன.

சைரக்கூசர்களுடைய குறுக்குச் சுவரைக் கைப்பற்ருவிடில் அத்தினியர்கள் தோல்வியடைவது உறுதி என்பதை டெமாஸ்தனிஸ் உணர்ந்தான். அதைக் கைப்பற்ற, தென்பகுதியில் நடத்திய தாக்கு

தல் முறியடிக்கப்பட்டது. குன்றின் மேற்குக் கோடியைச் சுற்றிவந்து, யூரியாலஸ் என்ற இடத்திற்கு அருகிலிருந்த பழைய பாதையின் மூலம் குன்றின்மேல் செல்லும் ஒரே வழிமட்டுமிருந்தது. அதுவும் கடினமான முயற்சியாக இருந்தது. எபிபோலேயின் மேற்குப் பகுதி கோட்டைகளாலும் சுவரினலும் பாதுகாக்கப்பட்டிருந்தது. அதே சமயத்தில் 600 போர் வீரர்கள் மிகக் கவனமாகக் காவல் புரிந்து கொண்டிருந்தார்கள். நிலா வெளிச்சத்தில் தாக்குதலை நடத்தத் தீர்மானித்திருந்தார்கள். ஆரம்பத்தில் அத்தீனியர்களுக்கு வெற்றி கிடைத்தது. ஒரு கோட்டை கைப்பற்றப்பட்டது. ஹெமோகிராட்டஸின் கீழிருந்த 600 வீரர்களும் பின்வாங்க நேர்ந்தது. ஆனல் அவர்களுடைய படையில் ஓர் பிரிவு தெஸ்ப்பியப் போர் வீரர்களால் தடுத்து நிறுத்தப்பட்டது. அதனல் ஏற்பட்ட குழப்பம் எங்கும் பரவிற்று. போர் வீரர்கள் மலையிலிருந்து கீழே ஓடினர்கள். சிலர் குன்றின்மீது ஏறிக்கொண்டிருந்த போர் வீரர்களை மிதித்துக்கொண்டு ஓடினர்கள். சிலர் கேடயங்களைப் போட்டுவிட்டு குன்றிலிருந்து குதித்தனர். சுமார் 2000 போர் வீரர்கள் கொல்லப்பட்டார்கள்.

இத் தோல்விகள் போர்வீரர்களுடைய ஊக்கத்தைத் தணித்துவிட்டன. அங்கே மேற்கொண்டு தங்கி இருப்பதால் எவ்வித பலனும் கிட்டாதென்பதை டெமஸ்தனிஸ் அறிந்தான். குளிர்காலம் தொடங்குதற்கு முன், தங்கள் கடலாதிக்கம் ஓங்கி இருக்கும்போதே சுகாதாரமற்ற சதுப்பு நிலப் பகுதியைவிட்டு வெளியேறுவது அறிவுடைமையாக இருந்தது. சைரக்கூசில் தங்கள் பணத்தையும், பலத்தையும் வீணக்கிக்கொண்டிருந்தார்கள். ஏனைய படைத்தலைவர்களும், போர்வீரர்களும் டெமாஸ்தனிஸின் கருத்தை ஏற்றுக்கொள்வார்களெனினும், நிசியாசை ஏற்றுக்கொள்ளுமாறு செய்ய அவனல் முடியவில்லை. சைரக்கூசைத் தாக்குமாறு லமாச்சஸ் சொன்ன அறிவுரையை ஏற்றுக்கொள்ள மறுத்த நிசியாஸ், இப்பொழுது சைரக்கூசை விட்டு வெளியேற வேண்டுமென்ற டெமாஸ்த்தனீசின் அறிவுரையையும் ஏற்றுக்கொள்ள மறுத்துவிட்டான். நிசியாசின் பண்புகளில், பொறுப்பேற்க அஞ்சும் பண்பே, முதன்மையானது. அவன் 'புலிடாமாசுக்கும் ட்ரோஜன் பெண்களுக்கும்' பயந்தான்; அவன் அத்தினியச் சபையின் கண்டனத்திற்கும் தண்டனைக்கும் பயந்தான் காட்டனே என்ற இடத்திற்குச் சென்று அங்கிருந்து புதிய முறையில் யுத்தத்தை நடத்தும் நோக்கத்துக்கும் அவன் இசைந்து வரவில்லை. நோக்கத்திலும் கொள்கையிலும் ஒரே மனப்பான்மையுள்ள யூரிமிடானும் டெமாஸ்த்தனிசும் அவ்விடத்தை விட்டுச் செல்வதைப்பற்றி நிசியாசிடம் அடிக்கடிக் கூறி வந்தனர். ஆனல் அவர்கள் பிடிவாத குணம் படைத்த தங்களுடைய துணை அதிகாரிக்குக் கீழ்ப்படிந்திருந்தார்கள். சில நாட்களில் நிகழ்ந்த

சம்பவங்கள் நிசியாசின் தீர்மானத்தை மாற்றிவிட்டன. கிளிப்பஸ் அத்திவுகளில் திரட்டிய ஓர் புதிய படையுடன் சைரக்கூசுக்கு வந்து சேர்ந்தான். பெலப்போனிசியர்களையும் போயிஷியர்களையும் கொண்ட ஓர் படை, சிரேனேயைச் (Cyrene) சுற்றிக்கொண்டு நீண்ட பிரயாணத்திற்குப்பின் துறைமுகத்தை அடைந்தது. நிசியாஸ் சைரக் கூசை விட்டுப் புறப்படுவதற்கிணங்கினான். அத்தீனியர்களின் படை அன்றிரவு புறப்படுவதாக இருந்தது. பகைவன் அவர்களைப் பற்றி எவ்வித ஐயமும் கொள்ளவில்லை. அதனால் பூரண சந்திரன் கிரகணத் தால் இருண்டுவிட்டது. அதனால் மூட நம்பிக்கை கொண்ட அந்தப் படை நிலா மறைந்ததைத் தெய்வம் அனுப்பிய எச்சரிக்கை என நினைத்துப் புறப்படத் தாமதித்ததற்காகக் கூச்சலிட்டார்கள். மூட நம்பிக்கையில் நிசியாஸ் மாலுமிகளை விடக் குறைந்தவனல்ல. துரதிர்ஷ்டவசமாக அவனுடைய சிறந்த தீர்க்கதரிசி இறந்துவிட் டான். மற்ற நிமித்திகர் அவன் குறைந்தது மூன்று நாட்கள் அல்லது அடுத்த பௌர்ணமி வரையில் அங்கே தங்கவேண்டுமெனச் சொன் னார்கள். அந்த தீர்க்கதரிசிகளுக்குள்ளேயே அபிப்பிராய பேதமிருந் தது. நீசியாஸ் அங்கே நீண்ட நாட்கள் தங்கிவிடுவதுதான் நலமெனக் கருதினான். சந்திர கிரகணத்தைவிட நாச விளைவைக் காட்டக்கூடிய பெரிய தெய்வ எச்சரிக்கை வேறொன்றுமில்லை. நிசியாசின் பிடிவாதத் துடன் சந்திரகிரகணமும் சேர்ந்து அத்தீனியர்களின் படை அழிவது உறுதி எனக் காட்டிற்று.

அடுத்த சில நாட்கள் தெய்வ வழிபாட்டில் கழிக்கப்பட்டன. அத்தீனியர்கள் முற்றுகையைக் கைவிடும் நோக்கத்தை சைரக் கூசர்கள் அறிந்தார்கள். அத்தீனியர்கள் தோல்வியை மறைமுகமாக ஒப்புக்கொண்டது, சைரக்கூசர்களின் நம்பிக்கையை உறுதிப்படுத் திற்று. சைரக்கூசர்கள் தங்கள் பட்டினத்தைப் பாதுகாத்துவிட்ட தற்காக மட்டும் திருப்தி அடைந்துவிடக் கூடாது என்றும், பகை வர்கள் தப்பிச் செல்லுமுன், அவர்கள் எல்லோரையும் அழித்து விட வேண்டுமென்றும் உறுதி கொண்டார்கள். ஆகையினால் அவர்கள் யுத்தத்திற்காக எழுபத்தாறு கப்பல்களைத் துறை முகத் துக்குக் கொண்டு வந்தார்கள். எண்பத்தாறு அத்தீனியப் போர்க் கலங்கள் அவைகளை எதிர்த்துக் கொண்டு வரப்பட்டன. கடற்போரில் கடைப்பிடிக்க வேண்டிய தந்திரங்களை அவ்விடத்தில் கைக்கொள்ள அத்தினியர்களால் முடியவில்லை. ஆகையினால் மையம், வலம், இடம் ஆகிய மூன்று பக்கங்களிலும் அவர்கள் தோற்கடிக்கப்பட்டார்கள். படைத்தலைவன் யூரிமிடான் கொல்லப்பட்டான். தாஸ்கனுக்கும் தங்க ளுடைய சொந்த சுவருக்கும் இடையில் துறைமுகத்தின் வடமேற்குப் பகுதியிலுள்ள சதுப்புநிலப் பக்கத்தில், இடதுசாரிக் கப்பல்கள் துரத்தியடிக்கப்பட்டன. •ஓர் சிறிய படை ஜிலிப்பஸ் தலைமையில்

விசிமேலா சதுப்புநிலப் பக்கமாக முன்னேறி, மாலுமிகள் தரையில் இறங்குவதைத் தடுக்க முயன்றது. அப்பொழுது ஏதென்ஸின் நேச உறவு நாடாகிய எற்ருரியா அனுப்பிய வீரர்கள், ஜிலிப்பஸ் படையுடன் போரிட்டுப் பின்வாங்கச் செய்தார்கள். அவர்கள் அப் பக்கத்துக் கடற்கரையில் காவல் புரிந்து வந்தார்கள். மறுபடியும் அங்கே ஓர் கடல் யுத்தம் நடந்தது. சைரக்கூசர்கள் அத்தீனியர்களுடைய 18 கப்பல்களைக் கைப்பற்றினர்கள்.

அத் தோல்வியினல் அத்தீனியர்கள் நம்பிக்கை இழந்தார்கள். வெற்றி பகைவர்களின் நம்பிக்கையை வளரச் செய்தது. சந்திரகிரகணம் அடியோடு மறக்கப்பட்டது. அத்தீனியர்கள் தப்பிச் செல்லும் வழியைக் கண்டுபிடிப்பதில் தங்கள் சிந்தனையைச் செலுத்தினர்கள். சைரக்கூசர்கள் தங்களுடைய பகைவன் தப்பிச் செல்வதை விரும்பவில்லை. சைரக்கூசர்கள் துறைமுகத்தின் வாயிலில் போர்க் கப்பல்களையும் படகுகளையும் நிறுத்தி, அவைகளைச் சங்கிலிகளால் பிணைத்து, பாலங்களோடு இணைத்து, வழியை அடைத்துவிட்டார்கள். அத்தீனியர்களின் விதி தடையை உடைத்தெறிந்துவிட்டு வெற்றிகரமாக வெளியேறுவதைப் பொறுத்திருந்தது. குன்றின்மீதிருந்த காவல் நிலையங்களை விட்டு வெளியேறி எல்லோரும் கப்பலேறினர்கள். நெருக்கடியான அந்தச் சந்தர்ப்பத்தில் நிசியாஸ் அப்போது தன்னுடைய சிறந்த பண்பைக் காட்டினன். தன்னுடைய போர் வீரர்களை மகிழ்விக்க எல்லா வகையாலும் முயன்ருன். ‘பெரும் போராட்டங்களில் தலைவர்களைப் போல் அவன் செய்யவில்லை. அவர்கள் பேசுவதில் அரை பங்குக்கூட அவன் பேசவில்லை’ என்று தூசிடைடிஸ் குறிப்பிடுகின்ருன். வழக்கமான சொற்பொழிவுக்குப் பின் ஓர் படகில், ஒவ்வோர் போர்க் கப்பலருகிலும் சென்று மாலுமிகளைச் சந்தித்துப் பேசினன்: ‘அப்படிப்பட்ட சந்தர்ப்பத்தில் மனிதர்கள் எப்படிப் பேசுவார்களோ அதைப்போல் அவர்களுடைய மனைவிமார்களைப் பற்றியும், குழந்தைகளைப் பற்றியும் நாட்டின் தெய்வங்களைப் பற்றியும் அவன் பேசினன். ஏனென்ருல் அவர்களுடைய பேச்சில் பொருத்தமாக இருக்கின்றதா என்பதைப்பற்றி ஒருவரும் கவலை கொள்வதில்லை. ஆனல் ஆபத்தான அந்தச் சந்தர்ப்பத்தில் தங்கள் வார்த்தைக்குச் சிறிது பலனளிக்குமென நினைக்கலாம்.’ வெற்றிப் பாடல்கள் ஒலித்தன. அத்தீனியர்களின் கப்பல்கள் ஒன்றுசேர்ந்து துறைமுகத்தை அடைந்திருந்த தடையைத் தாக்கச் சென்றன. அக் கப்பல்கள் துறைமுக வாயில் தடையை அணுகியதும் சைரக்கூசரின் கப்பல்கள் எல்லாப் பக்கங்களிலுமிருந்து அவற்றைத் தாக்கின. அத்தீனியர்கள் துறைமுகத்தின் நடுப்பகுதிக்குத் தள்ளப்பட்டார்கள். அந்த யுத்தம் எண்ணற்ற தனி வீரர்களின் சண்டையாக மாறியது. அந்த யுத்தம் நீண்டநேரம் நடந்தது. தீவின் மதில்மீதும், அக்ராடினுக்

குன்றின் சரிவுகளிலும் பெண்களும் முதியவர்களும், கரையில் போர் வீரர்களும் குழுமி நின்று சண்டையைப் பார்த்துக்கொண்டிருந்தனர். தூசிடைடிஸ் அந்தக் காட்சியைத் தெளிவாக விவரித்துள்ளான். அவன் அக் காட்சியை நேரே பார்த்ததைப்போல் எழுதியுள்ளான். 'யுத்தத்தில் வெற்றி கைமாறிக் கொண்டிருந்தது. கடற்கரையில் வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்த எல்லோரும் ஒரேவிதமான காட்சியைக் காணவில்லை. சமீபத்தில் பல கோணங்களிலுமிருந்து பார்த்தவர்களில் சிலருக்குத் தங்கள் கப்பல்கள் வெற்றியடைவதைப் போலத் தோற்றமளித்தது. அதனால் அவர்களுடைய வீரம் எழுச்சிபெற்றது. தங்களுடைய விடுதலை நம்பிக்கையைத் தங்களிடமிருந்து பிரித்துவிடக் கூடாதென்று அவர்கள் தெய்வங்களை வேண்டிக் கொண்டார்கள். மற்றும் சிலர் தங்கள் கப்பல்கள் முறியடிக்கப்பட்டதாகக் கண்டார்கள். அதனால் அவர்கள் கதறி அழுதார்கள். தோற்றுப்போன போர் வீரர்களை விட அவர்களுடைய மனவுறுதி முற்றிலும் தளர்ந்து போயிற்று. மற்றும் சிலருக்கு வெற்றியோ தோல்வியோ முடிவாகத் தெரியவில்லை. முடிவு தெரிவதற்காக மிகவும் ஆர்வங் கொண்டு நோக்கினார்கள். அந்த உறுதியான போராட்டம் நடந்துகொண்டிருந்தபோது இவர்கள் பயத்துக்கும் நம்பிக்கைக்குமிடையே, தங்கள் உடல்களை வளைத்து அங்குமிங்குமாக அசைத்துக்கொண்டிருந்தார்கள். ஒரு கணம் அவர்கள் வெற்றியடைந்ததாகக் கருதினார்கள்; மறுகணம் அவர்கள் அழிந்துபோனதாகக் கண்டார்கள். அந்தப் போராட்டம் முடிந்துவிட்டது. அத்தீனியர்களின் புலம்பலையும், ஓலத்தையும், வெற்றி அல்லது தோல்வியின் கூக்குரலையும், அபாயத்தின் எல்லையில் உழலும் மக்களின் எல்லாவிதமான குரல்களையும் அங்கே கேட்க முடிந்தது. உறுதியின்மை, துயரம், வெற்றி, நம்பிக்கை இழத்தல் ஆகிய மனித உணர்ச்சிகள், அந்தப் பெரிய துறைமுகத்தைச் சுற்றிலும் அதன்மேலும், இருந்த ஆயிரக்கணக்கான மக்களின் உள்ளங்களிலிருந்து, அன்று ஊசலாடிக் கொண்டிருந்தது.' பிற்கால மக்களும் நேரில் காண்பது போன்று தூசிடைடிஸ் எழுதி வைத்திருக்கிறான்.

அத்தீனியர்கள் இறுதியில் தோற்று விட்டார்கள். அவர்கள் பாதுகாப்பிற்காகத் தங்கள் அரணை நோக்கி ஓடினார்கள். பகைவர்கள் அவர்களைத் துரத்திச் சென்றார்கள், அறுபது கப்பல்கள் இன்னும் அழியாதிருந்தன. மாலுமிகள் தங்கள் கப்பல்களை விட்டுக் கரையேறினார்கள். தரைப்படைக்கு மரண பயம் பிடித்து விட்டது. அத்தீனியர்கள் இதுவரையில் அப்படிப்பட்ட பயத்தை அனுபவித்து அறியார்கள். தூசிடைடிஸ் அந்த நிலைமையை ஸ்பாக்டேரியாவின் நிலைமையோடு ஒப்பிடுகிறான். மாண்டவர்களின் உடல்கள் தண்ணீரில் மிதந்து கொண்டிருந்தன. சவங்களை அடக்கம் பண்ணுவதற்காக வழக்கமாக ஏற்படுத்திக் கொள்ளும் தற்காலிக சமாதான உடன்

படிக்கையைக்கூட படைத்தலைவர்கள் கேட்கவில்லை. விடியற்காலையில் வழியை அடைத்திருக்கும் தடையை உடைத்தெறியக்கடைசி முயற்சி ஒன்று எடுக்கலாமென டெமாஸ்தனீஸ் சொன்னான். அப்பொழுதும் அவர்களிடம், எதிரிகளைவிட அதிகமான கப்பல்களிருந்தன. ஆனால் வீரர்கள் கப்பலில் ஏற மறுத்துவிட்டார்கள். தரை மூலமாகத் தப்பிச் செல்வதைத் தவிர வேறொன்றும் அங்கில்லை. அவர்கள் உடனே புறப்பட்டிருந்தால் காட்டானே என்ற இடத்திற்குச் சென்றிருக் கலாம். அல்லது அந்த தீவில் நட்புள்ள சிசிலியர்களிடம் போய்ச் சேர்ந்திருக்கலாம். அவர்கள் செல்லும் பாதையை அடைக்க விரும் பிய ஹெர்மோகிராட்டஸ் ஓர் சூழ்ச்சி செய்து அவர்கள் பயணத்தைத் தாமதப்படுத்தினான். சைரக்கூசில் அவர்களுக்கு நண்பர்கள் இருப் பதை ஹெர்மோகிராட்டஸ் அறிந்திருந்தான். ஆகையினால் சில குதிரை வீரர்களை அவர்களிடம் அனுப்பினான். அக் குதிரை வீரர்கள் அத்தீனியர்களிடம் வந்து அவர்கள் நண்பனைப்போல் நடித்தார்கள். அவர்கள் செல்லக் கூடிய பாதை பாதுகாப்பில் இருப்பதாகவும், அதைக் கடப்பதற்கான ஆயத்தத்தோடு அவர்கள் புறப்பட வேண்டு மென்றும் சொன்னார்கள். அத்தீனியர்கள் அவன்வார்த்தையை நம்பி அடுத்த நாள் வரையில் அங்கேயே தங்கினார்கள். அதற்குள் பாதை அடைக்கப்பட்டு விட்டது.

அத்தீனியர்களுடைய துயரம் நிரம்பிய இந்தப் பிரயாணத்தைத் தூசிடைடிஸ் வியக்கத்தக்க முறையில் விவரமாக எழுதி இருக்கிறான். அத்தீனியப் போர்வீரர்கள் புறப்படுவதற்கு ஆயத்தமானார்கள். நோயுற்றவர்களும் காயமுற்றவர்களும் பகைவனின் இரக்கத்துக்கு விட்டுச் செல்லப்பட்டார்கள். அவர்களுடைய வேண்டுகோளுக்குக் கண்ணீர் வடிப்பதைத் தவிர வேறொன்றும் அவர்களால் செய்ய முடிய வில்லை. அவர்கள் தங்கள் பாதுகாப்பு இடத்தில் தங்கி இருந்தபோது அதைத் தங்கள் வீடாகக் கருதினார்கள். நிசியாஸ் நோய்வாய்ப்பட் டிருந்தும் தன்னுடைய போர் வீரர்களுக்கு ஊக்கமூட்ட முன் வந்தான்; நம்பிக்கை யூட்டும் வார்த்தைகளைப் பேசினான். நிசியாஸ் முன்னும் டெமாஸ்த்தனிஸ் பின்னுமாக அவர்கள் பிரயாணத்தை ஆரம்பித் தாாகள். மேற்குச்சாலை வழியே நடந்தார்கள். அச் சாலை அனப்பஸ் (Anapas) என்ற இடத்தைக் கடந்து பிளாரிடா (Floridia) கிராமத் துக்குச் செல்லுகிறது. முதலில் சிஸெல் நாட்டுக்குச் சென்று அங்கிருந்து காட்டானே நாட்டிற்குப் போய்ச் சேருவதே அவர்கள் நோக்கம். சைரக்கூசர்களுடைய கோட்டைகளைச் சுற்றிக் கொண்டு நேராகச் சிசிலிக்குச் செல்லுவது மடைமையாகத் தோன்றிற்று. நான்குநாள் கடுமையாகப் பிரயாணம் செய்து அம்பெய்கிறவர்களா லும், குதிரை வீரர்களாலும் அவதி அடைந்து, அக்ரேயன் (Acraean) மலை உச்சிக்குப்போய்ச் சேர்ந்தார்கள். அங்கே ஒரு சுவரால் தங்க

ளுடைய பாதை அடைக்கப்பட்டிருப்பதையும், அதன்பின்னே, சைரகூஸ் போர்வீரர்கள் காவல் புரிந்து கொண்டிருப்பதையும் கண்டார்கள். அப் படையைக் கடப்பது கடினமாக இருந்தது. புயலிலும் இடியிலும் பிளாரிடியாவை நோக்கிப் பயணமானுர்கள். சிசெல் நாட்டிற்குச் செல்லும் நோக்கத்தைக் கைவிட்டு, தெற்கு முகமாகத் திரும்பி ஹெலோரைன் (Helorine) சாலையை நோக்கி நடந்தார்கள். அச் சாலை ஜெலாவுக்குக் கொண்டு போய்ச் சேர்க்குமென்பது அவர்களுடைய நோக்கம். ஆருவது நாள் பிரயாணத்தில் அந்தப் படையின் பின்பகுதி ஆபத்துக்குள்ளாயிற்று. அப் படை டெமெஸ்தனீசின் தலைமையில் வந்தது. அது மெதுவாக வந்துகொண்டிருந்தது. அதனுல் பின் தங்கிப் பிரிந்து விட்டது. நிசியாஸ் மிக வேகமாகப்போய்க்கொண்டிருந்தான். படை இரு துண்டாகப் பிரிந்திருந்தது. அங்கே நிசியாஸ் பல நீரோடைகளைக் கடக்கவேண்டியிருந்தது. பகைவன் சுவரால் வழியை அடைப்பதற்கு முன் அதைக் கடந்துவிட வேண்டுமென்பது நிசியாசின் நோக்கம். ஹெலேரைன் சாலை, காக்கிபாரிஸ் (Kakyparis) நதி கடலில் கலக்கும் இடத்திற்கு அருகிலுள்ள கடற்கரை வரை செல்கிறது. அவர்கள் ஆற்றைக் கடக்குமிடத்திற்கு வந்தபோது, அடுத்த கரையில் சைரக்கூசர்கள் ஓர் சுவரை எழுப்பிக்கொண்டிருப்பதைக் கண்டார்கள். எளிதில் அவர்கள் பகைவனை விரட்டியடித்துவிட்டு எரினியாஸ் ஆறு வரையில் மிக வேகமாகச் சென்ருர்கள். அன்றிரவு அவர்கள் அங்கே தங்கிவிட்டார்கள். அடுத்த நாள் காலையில் ஒரு சைரக்கூசத் தூதுவன் அவர்களைச் சந்தித்து ஒரு செய்தி சொன்னுன். டெமெஸ்த்தனீஸ் தலைமையிலிருந்த படை, போலிசாலஸ் (Polyzalus) என்ற ஒலிவத் தோட்டத்தில் பகைவர்களால் சூழ்ந்துகொள்ளப்பட்டு சரணடையுமாறு செய்யப்பட்டது. 6000 போர் வீரர்களுடைய உயிர் காப்பாற்றப்பட வேண்டியதாயிற்று. டெமாஸ்த்தனிஸ் தற்காலிக உடன்படிக்கை செய்துகொள்ள விரும்பவில்லை. 6000 போர் வீரர்களையும் கைதியாக்குவதற்கான ஏற்பாடு நடந்துகொண்டிருக்கும்போது டெமாஸ்த்தனிஸ் தன் கையினுல் தன் உயிரைப் போக்கிக் கொள்ள முயன்ருன். ஒரு படைத்தலைவனை உயிரோடு கைதுசெய்ய வேண்டுமென்ற நோக்கத்துடன் இருந்த எதிரிகள் அதைத் தடுத்து விட்டார்கள். நிசியாஸ் அந்தச் செய்தியை நம்பினுன். தற்காலிக உடன்படிக்கை செய்துகொள்ள ஓர் தூதுவனை அனுப்பினுன். உடன்படிக்கையின் நிபந்தனைகளாவன்: எஞ்சிய படை வீரர்கள் தடையின்றித் திரும்பிச் செல்ல அனுமதிக்கப்பட வேண்டும்; யுத்தத்தினுல் ஏற்பட்ட செலவை அத்தீனியர்கள் கொடுத்துவிட வேண்டும். ஒரு தாலந்துக்கு ஓர் ஆள் ஜாமீனுக விடப்பட வேண்டியது. அந் நிபந்தனைகள் உடனே மறுக்கப்பட்டன. முழுப்படையையும் கைதியாக்குவது சைரக்கூசர்களுடைய நோக்கமாக இருந்தது. உணவின்மையால் களைப்படைந்து பரிதாபத்துக்குரிய நிலையிலிருந்த படை அங்கேயே தங்கிவிட்டது. அடுத்த

நாள் அப் படை தன் பிரயாணத்தை ஆரம்பித்து, அசினுரோஸ் (Assinaros) ஓடையை நோக்கிச் சென்றுகொண்டிருந்தது. ஆற்றின் அக் கரையில் எதிரியின் படை இருப்பதைக் கண்டார்கள். அவர்கள் மிகவும் தாகமடைந்திருந்தபடியால், பகைவனைப்பற்றிக் கவலை கொள்ளவில்லை. ஆற்றுப் படுகையில் நீரை நோக்கி விரைந்து சென்றார்கள். அவர்களைத் துரத்திக்கொண்டு வந்த சைரக்கூசர்கள் கரையை விட்டுக் கீழே இறங்கி அவர்கள் தண்ணீர் குடித்துக் கொண்டு இருக்கும்போது கொலை செய்தார்கள். தண்ணீர் அசுத்த மாயிற்று. இரத்தம் கலந்த சேற்று நீராக இருந்தபோதிலும் அவர் கள் அதைக் குடித்துக்கொண்டே சண்டை செய்தார்கள்.

கடைசியாக நிசியாஸ் சரணடைந்தான். அவன் ஜிலிப்பசிடம் சரணடைந்தான். ஏனென்றால் சைக்ரகூசர்களைவிட ஜிலிப்பசை அவன் நம்பினான். போரில் நடைபெறுவதுபோன்று அங்கு நிகழ்ந்த கொலை நிறுத்தப்பட்டது. உயிரோடிருந்தவர்கள் கைதிகளாக்கப் பட்டார்கள். கைதான வீரர்களை வென்ற வீரர்கள் தங்கள் சொந்த உபயோகத்துக்குப் பிடித்துக்கொண்டனர். அவர்கள் பொதுவாக நல்ல நிலைமையில் வைக்கப்பட்டனர். ஆனால் அரசாங்கத்தால் கைது செய்யப்பட்டவர்களின் நிலைமை மிகக் கொடுமையாக இருந்தது. அக்ராடீனுவினுடைய பாறைக் குழிகளில் 7000 பேர் அடைக்கப்பட் டார்கள். அக் குழிகள் கூரையில்லாதவை. பகலில் கொடிய வெய்யி லும், இரவில் கடுங்குளிரும், உணவுப் பற்றாமையும் அவர்களை மிக வாட்டின. அத்தீனிய நேச உறவு நாடுகளின் கைதிகள் 70 நாள் இத்தகைய துன்பத்துக்குள்ளாக்கப்பட்டனர். அத்தீனியர்கள் இக் கொடிய தண்டனையை ஆறு மாத காலம் குளிர் காலம் முழுவதும் அனுபவிக்க நேர்ந்தது. சைரக்கூசர்கள் தங்கள் நாட்டின்மீது படை யெடுத்து வந்தவர்களை இவ்வாறு பழிவாங்கினார்கள். இக் கொடுமைக் குப் பின்னும் உயிரோடிருந்த கைதிகள் பொதுச் சிறைச்சாலைகளில் உழைத்தனர் அல்லது அவர்கள் அடிமைகளாக விற்கப்பட்டனர். தங்கள் நல்ல நடத்தைகளால் இளைஞர் உள்ளங்களைக் கவர்ந்த சிலர் விடுவிக்கப்பட்டார்கள். ஓர் அத்தீனியக் கவிஞன் தன்னுடைய கவி பாடும் வன்மையினால் சிசிலியிலும் ஏதென்சிலுமுள்ள மக்களின் உள் ளத்தில் இரக்க உணர்ச்சியை உண்டுபண்ணினான். அதன் காரண மாகச் சில கைதிகள் நல்ல முறையில் நடத்தப்பட்டார்கள். சிலருக்கு விடுதலை கிடைத்தது. யூரிபீடிஸ் என்பவனுடைய சொற்பொழிவுகளை யும் பாடல்களையும் நன்கு கற்றிருந்தவர்கள், அவற்றைத் தங்கள் எஜ மானர்களிடம் சொல்லியோ, பாடியோ காட்டி அவர்களது அன்பைப் பெற்றார்கள். அவர்கள் விடுதலை பெற்று, ஏதென்சிலுள்ள தங்கள் வீடுகளுக்கு நீண்ட நாட்களுக்குப்பின் திரும்பி வந்தார்கள். தங்கள் மீட்சிக்குக் காரணமாயிருந்த அந்தக் கவிஞனை வாழ்த்தினார்கள்.

டெமாஸ்த்தெனிஸ் நிசியாஸ் என்ற இரு படைத் தலைவர்களும் சந்தேகமில்லாமல் இரக்கமின்றிக் கொல்லப்பட்டிருக்க வேண்டும். சித்திரவதைக்கு அவர்கள் ஆளாயினர் என்று கருத இடமுண்டு. ஹெமோகிராட்டசும் ஜிலிப்பசும் அவர்களைக் காப்பாற்ற விரும்பி யிருக்கலாம். வெற்றி யடைந்த ஸைரக்கூசர்கள் அத்தீனியர்கள் மீது அளவற்ற ஆத்திர மடைந்திருந்தபடியால், அவ்விருவராலும் அவர் களைக் காப்பாற்ற முடியாது போயிற்று. ஓர் மனிதனுக்கு அளிக்கப் படும் தண்டனை அவனது கெட்ட எண்ணத்துகாகவன்றி, அவன் செய்த கொடுமைகளுக்காக அளிக்கப்பட்டால், நிசியாசுக்கு அளிக்கப் பட்ட தண்டனை மிகக் கடுமையானதன்று. அவனுடைய தகுதி இன் மையும், நம்பமுடியாத பிழைகளும் படை எடுப்பைக்கெடுத்து ஏதென் சின் வீழ்ச்சிக்கு வழி வகுத்தன. நிசியாசின் தவறுதல்கள் அவனுடைய இயற்கையான சுபாவத்தை வெளிப்படுத்துகின்றன. அவனுடைய சொந்த சுபாவத்திற்காக அவன் பதில் சொல்லத் தேவை இல்லை. முற்றிலும் தகுதியற்றவனை, ஒரு பொறுப்புள்ள காரியத்தைச் செய் யும்படி வற்புறுத்திய அத்தீனியர்கள்தான் முழுக் குற்றத்திற்கும் காரணமானவர்கள். நிசியாசின் பண்பில் மிகச் சிறந்ததாகிய பொறுப்பேற்க அஞ்சும் அந்தப் பண்பை ஏற்கெனவே நாம் அறிந்திருக் கிறோம். வெகு தூரத்தில் நடந்த அம் மாபெரும் போரில் முதன்மை யான படைத் தலைமை முழுப் பொறுப்பேற்கும் தலைவனிடம் ஒப் படைக்கப்பட்டிருக்க வேண்டும். இருந்தபோதிலும் நிசியாஸ் தேர்ந் தெடுக்கப்பட்டான். அத் தேர்வு மக்களிடம் அவனுக்கிருந்த செல் வாக்கையும் மரியாதையையும் காட்டுகிறது. படையின் செல்வாக்கை அவன் பெற்றிருந்தான். ஆனால் தேவைப்பட்ட கண்டிப்பும் கட்டுப் பாடும் அவனிடம் இல்லை எனத் தோன்றுகிறது. தன் ஆணைக்குட் பட்டிருந்த போர் வீரர்களுக்கு எக்கிளிசியா (Ecclesia) என்ற சபை யில் வாக்குரிமையுண்டு என்பதையும், அதை அவர்கள் ஏதென்சுக்குத் திரும்பியபின் தனக்கு எதிராக உபயோகிப்பார்கள் என்பதையும் பாசறையிலிருக்கும்போது ஒருபோதும் அவன் மறந்துவிடவில்லை என்று சொல்லப்படுகிறது. நிசியாஸ் நாணமுள்ள படைத் தலைவன், நாணமுள்ள அரசியல் அறிஞன். மூடக்கொள்கைகளில் மூழ்கிய வன். கண்ணியமிக்கவன். அவன் ஒரு ஆண்மையுள்ள போர்வீரன், நல்லிணக்கமுடையவன். அவனுடைய மதிப்புவாய்ந்த இப் பண்புக ளால் அவன் தன் தகுதிக்கொவ்வாத பதவியைத் தாங்க நேர்ந்தது. அவன் இதைவிடக் குறைந்த அறிவும், பக்தியுமுடையவனாக இருந்து கூரிய அறிவையும் பெற்றிருந்தால் தன்னுடைய நாட்டை அழித் திருக்க மாட்டான். மக்கள் தேர்ந்தெடுக்கும் தலைவர்களைப் பொறுத்தே மக்களின் தகுதியின்மையும் வெளிப்படுகின்றது. அத் தீனியக் குடிமக்களின் பண்பை நாம் மதிப்பிடும்போது மன உறுதியில் லாத இந்த வீரனைத் தேர்ந்தெடுத்ததை நாம் மறந்துவிடக்கூடாது.

அத்தீனியர்களுக்கு ஏற்பட்ட துயரத்துக்கு மிக மிக இரங்குகின்ருேம். அவர்கள் கொடுமையான துன்பத்தைக் கடந்தவர்கள். தங்களுடைய உரிமையைப் பறிக்க வந்த பகைவனை அழித்து விட்டார்கள். தங்களுடைய வெற்றியை ஆண்டுதோறும் கொண்டாடுவதற்காகப் பல போட்டிப் பந்தயங்களை ஏற்படுத்தினர்கள். அவர்களுடைய இறுதி வெற்றி அசிநாரியன் என்ற ஆற்றங்கரையில் கிட்டியதால் அப் பந்தயங்களுக்கு அசிநாரியன் பந்தயங்கள் எனப் பெயர் வழங்கப் பட்டது. அப் பந்தயங்களோடு தொடர்புள்ள அழகிய நாணயங்கள் அச்சிடப்பட்டன. அந் நாட்டுக்காக நாம் அன்பு கொள்ளுமளவுக்கு அவர்களுடைய நாணயங்கள் இருக்கின்றன. அந்தக் காலத்தில் நாணய வார்ப்புருவைச் செதுக்கும் கலையை அவர்கள்தான் முதன் முதலில் கொண்டு வந்தார்கள். உலகத்தில் சிசிலி நாட்டைப்போல் உணர்ச்சியூட்டக்கூடிய திறமையோடு நாணயம் செய்தவர்கள் எந்த நாட்டிலும், எப்போதுமிருந்ததில்லை. சிசிலியர்கள் தங்கள் வெள்ளி நாணயங்களில் தெய்வங்களின் முகங்களை அழகுபெறப் பொறித்திருந்ததைப் போல் ஹெல்லாசிலுள்ள எந்தப் புனித இடத்திலும், செம்பில் அல்லது சலவைக் கற்களில் முகங்களை அவ்வளவு அழகாகச் செதுக்கி வைத்திருந்ததில்லை. சிசிலியில் சிறந்த கலைஞர்கள் சைரக்கூசியர்கள். சைரக்கூசின் சிறந்த கலைஞனுக இருந்தவன் சைமன், இயற்கை வடிவமுள்ள (life-size) அல்லது மிகப் பெரிய சிற்பங்களைச் செய்யும் சிற்பிகளின் திறமையுடன் ஒப்பிட்டுப் பார்க்கும்போது உருவங்களை நாணயத்தில் செதுக்குவது மிகச் சிறிய வேலையாகத் தோன்றுகிறது. இருந்தபோதிலும் அழகுள்ளவைகளை உருவாக்குகிறவர்களில் எவானெட்ட்ஸ் என்பவரும் அவனது தோழர்களும் பிடியாசுக்கு (Phidias) ஒப்பாவார்கள். அவர்களுடைய பெர்சிபோன் (Persephonc) தலைகளும், கடல் பிராணிகளால் சூழப்பட்ட அரித்தூசா என்ற கடற்கன்னியின் தலைகளும், அவர்களுடைய நூதனமான நான்கு குதிரைகள் பூட்டிய ரதங்களும் சைரக்கூஸ் முன் அடைந்திராத புகழை அதற்குத் தந்தது. ஹெமெராவில் ஜிலான் (Gelon) அடைந்த வெற்றியை நினைவுக்குக் கொண்டு வந்த டாமாராட்டன் (Damaratean) நாணயங்களின் மாதிரியைப்போல், ஏதென்சின் தோல்விக்குப் பிறகுள்ள ஆண்டுகளில் பல வகையான பத்து ட்ராக்கம் பதக்கங்கள் அச்சிடப்பட்டிருந்தன (ten-drachm medallions). அவைகளின் உருவங்கள் செதுக்கும் பணி சைமன், எவானெட்டஸ், பேரில்லாத ஓர் கலைஞன் ஆகிய மூவருக்குங் கொடுக்கப்பட்டிருந்தது. பேரில்லாத கலைஞன் மற்ற இருவரை விடச் சிறந்த கலைஞனுக இருந்திருக்கவேண்டும். பார்லியினுலான கிரீட மணிந்த பெர்ச்சிபோனின் உருவந்தாங்கிய ஓர் சிறிய பதக்கம் எட்னு (Aetna) மலைச் சரிவில் கிடைத்தது. அது பேரில்லாத கலைஞன் வேலைப் பாடுடையது.

## 6. சிசிலியின் பெருங்கேட்டால் ஏற்பட்ட விளைவுகள்

ஏதென்சின் பொதுவான ஆக்கிரமிப்புக் கொள்கையின் ஒரு பகுதிதான், சிசிலியப் படையெடுப்பு. அதனுல் கிரீஸில் அதற்குள்ள செல்வாக்கை இழக்கும்படி செய்தது இந்தப் படையெடுப்பு. அதனுடைய மற்றப் படையெடுப்புகளில் சிலவற்றைப்போல் அவ்வளவு பண்பற்ற செயலன்று. மேற்கே பலமற்ற நாடுகளைப் பலமுள்ள நாடுகளின் ஆதிக்கத்திலிருந்து காப்பாற்ற எடுத்துக்கொண்ட முயற்சி என்ற காரணம் கூறலாம். அரசியல் சம்பந்தப்பட்ட வரையில் இந்தப் படையெடுப்பு, கால நிலைக்கு ஏற்றதா என்பது பலமுள்ள பிரச்சினையாகும். கிரிமியப்போரில் ஆங்கிலேயர்கள் நடந்து கொண்டதைப் போல மதியிழந்து, வெறி கொண்ட இம் முயற்சியில் ஈடுபட்டார்கள் என அடிக்கடிச் சொல்லப்படுகிறது. இந்த உண்மையை அறிவது கடினமாகத் தோன்றுகிறது. விளைவுகளைக் கொண்டு அறிவை மதிப்பிட முடியாது சைரகூஸ்மீது எடுத்த படையெடுப்பின் விளைவால் அது முறையற்றது என்று கூற முடியாத எல்லாச் சூழ்நிலைகளும் அதற்கு அனுகூலமாகவே இருந்தன. லாமாச்சஸ் என்ற படைத்தலைவனின் அறிவுரைக் கிணங்கி, சைரக்கூஸ் உடனே தாக்கப்பட்டிருக்குமேயானுல், சைரக்கூஸ் யுத்த ஆரம்பத்திலேயே பணிந்திருக்கும் என்பதில் ஐயமில்லை. நிசியாஸ் காலத்தைக் கடத்தாமல் எபிபோலேயின் வடப்பக்கத்து மதில் சுவரை எழுப்பியிருந்தால், அந்த நகரத்தின் அழிவு உறுதியாக்கப்பட்டிருந்திருக்கும்; ஜிலிப்பஸ் ஒருபோதும் அதனுள் பிரவேசித்திருக்கமாட்டான். தோல்வி ஏற்பட்டதற்குப் படையெடுப்பு காரணமில்லை. அத்தீனியர்கள் படைத்தலைவனை நியமித்த வகையில் தோல்விக்கு வித்திட்டார்கள். கிழக்கில் கடலாதிக்கத்தை நிலைநாட்டிய நாடு மேற்கிலும் கடலாதிக்கத்தை நிலைநாட்ட முயல்வது இயல்பு. அவர்களுடைய அரசியல் அமைப்பே, அத்தீனியர்கள் மேற்கில் தங்கள் செல்வாக்கை நிலை நாட்டக் காரணமாக இருந்தது. கொரிந்தியாவுக்கும் ஏதென்சுக்கும் ஏற்பட்டிருந்த வாணிகப் போட்டியே பகைமைக்குக் காரணமாயிருந்தது என்பதை நினைத்துப் பார்க்கவேண்டும். அத்தீனியர்கள் தலையிடுவதற்கு, கொரிந்தியா மேற்கில் தன்னுடைய குடியேற்ற நாடுகளோடும் நேச நாடுகளோடும் தொடர்புகொண்டிருந்தது அத்தீனியர்கள் தலையிடுவதற்குக் காரணமாகக் கருதவேண்டும். கொரிந்தியர்களுடைய செல்வாக்கை முறியடிக்க ஏற்கனவே நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன. ஸ்ப்பார்ட்டாவோடு உடன்படிக்கை செய்து கொண்டபோது அத்தீனியப் போர் வீரர்கள் கிரேக்க நாட்டுக்கு வெளியிலும் ஏஜியான் கடலிலும் சுதந்திரமாகப் பணிசெய்ய உரிமை அளித்ததைப்போல, மேற்கிலும் அவர்கள் விரும்பிய நாடுகளில் பணி புரியும் உரிமையைப் பெற முயன்றிருக்கவேண்டும்.

அத்தீனிய மக்களின் வெறி, படையெடுப்பை நடத்துவதற்கன்று. படைக்குத் தலைமை தாங்கும் பொறுப்பை டெமாஸ்தனீசுக்குக் கொடுக்காமல் நிசியாசுக்குக் கொடுப்பதிலேயே அவர்கள் ஆர்வமிருந்தது. ஆல்சிபியாடிசைத் திரும்பி வரவழைத்ததும் அவர்களுடைய அறிவீனத்தைக் காட்டுகிறது. இத் தவறுகள் அந்த நாட்டு அரசியல் அமைப்பிலோ, அதனைச் செயல்படுத்தும் முறையிலோ இருக்கின்ற குறைபாடுகளைச் சுட்டிக்காட்டுவதாகத் தோன்றிற்று. அப்படிப்பட்ட ஓர் படையெடுப்பு மக்கள் சபையால் உறுவாக்கப்பட்டு, அது மக்கள் சபையால் நடத்தப்பட்டிருந்தாலும் சரி, அல்லது அப் படையெடுப்பில் தலையிடுவது கட்சியின் நோக்கமாக இருந்தாலும் சரி, அது தவறிழைத்ததில் எவ்வித வியப்புமில்லை

அசிநாரோஸ் (Assiinaros) நாச விளைவுக்குப்பின் நிர்வாகத்தில் (administration) சில மாறுதல்களை செய்யவேண்டும் என்ற உணர்ச்சியே எழுந்தது. டேசேலியா என்ற இடத்தில் ஏற்படுத்திய லாசிடோமோனியாவின் காவல் நிலையம் அத்தீனியர்களுக்குத் தொல்லை விளைவித்தது. அது விவசாயத்தொழில் நடைபெருமல் தடுத்தது. அது தப்பிச்செல்லும் அகதிகளுக்கு அடைக்கலம் அளித்துக்கொண்டுமிருந்தது. அவர்களில் இரண்டாயிரம் அடிமைகள், லாரியோன் (Laurion) கனிச்சுரங்கங்களில் பணியாற்றியவர்களில் ஒரு பிரிவினர். டெஸேலியாவைக் (Decelea) கைப்பற்றியதால் கனிச்சுரங்கங்களை மூடிவிடும் நிலை ஏற்பட்டது. அட்டிக்காவின் தென் பகுதி லாசிடாமோனியர்களின் ஆதிக்கத்தில் வாழ்ந்துவந்தது. இவ்விதமாக அத்தீனியர்கள் நல்ல வருவாய் வரக்கூடிய ஓர் இடத்தை இழக்க நேரிட்டது. அந் நாடு கொடுத்துக்கொண்டுவந்த லாரட் அவுல் (Laureot owls) என்ற வருவாயை இழக்க நேரிட்டது. சிறிது நாளைக்குள் பொன் நாணயங்கள் செய்ய அந் நாடு கோயிலுக்குக் கொடுத்திருந்த தங்கக் கட்டிகளை உருக்கவும், பித்தளை நாணயங்களை அச்சடிக்கவும் முனைந்திருந்ததை நாம் காண்கிறோம். லாரியோன் கனிச் சுரங்கங்கள் முக்கால் நூற்றுண்டுக் காலம் வரையில் மீண்டும் திறக்கப்படவில்லை.

களஞ்சியம் வற்றிவிட்டது. சிசிலியில் மாண்டுபோனவர்களுக்கு ஈடுசெய்ய முடியவில்லை. அந்த நெருக்கடிச் சமயத்தில் ஐந்நூறு அங்கத்தினர்களடங்கிய சபை குழு ஆட்சியை நடத்தத் தகுதியற்றிருந்தது. அந் நாட்டில் மிகச் சிறியதும் நிரந்தரமானதுமான ஓர் சபையை உருவாக்கவேண்டியதாயிற்று. முக்கிய அரசியல் அலுவல்கள், பத்துப்பேரடங்கிய ஒரு குழுவிடம் ஒப்படைக்கப்பட்டது. அக் குழு பொரோபோலி என்று அழைக்கப்பட்டது. தற்காலிகமாக அக் குழு, சபையின் பொறுப்பை ஏற்றுக்கொண்டது.

அதே சமயத்தில் வரி வசூலிக்கும் முறையில் ஓர் சிறப்பான மாறுதல் ஏற்படுத்தப்பட்டது. குடிமக்களைத் துன்புறுத்தி வாங்கிய கொடிய வரி தள்ளப்பட்டது. கூட்டமைப்பு நாடுகளின் துறைமுகங்களின் வழியாக ஏற்றுமதி, இறக்குமதி செய்யப்படும் பொருள்களின் மீது ஐந்து சதவிகித வரி புதிதாக விதிக்கப்பட்டது. இந்தப் புதிய வரியின்மூலம் கிடைக்கும் தொகை, திறையாகப் பெற்றுவந்த தொகையைவிடப் பெரிதெனக் கணக்கிட்டார்கள். திறைப் பணம் வசூலிக்கும்போது ஏற்படும் தொல்லை இந்தப் புதிய முறையில் இல்லை. அதனல் அத்தீனியக் கூட்டமைப்பு நாடுகளின் பொறுப்புக்கு ஆளாக வேண்டியதுமில்லை. மேலும் அரசியலில் சிறப்பான மாறுதலும் ஏற்பட்டது. இந்த வரி பிரேயசிலும் (Piraeus) இன்னும் இதர இடங்களிலும் வசூலிக்கப்பட்டது. இதனல் ஏதென்சும் அவ் வரிக்காளாயிற்று. நேச நாடுகள் ஏதென்ஸ் நாட்டோடு சமமான நிலையில் வைக்கப்படுவதற்கும் கூட்டமைப்பைப் பெருந் தேசமாக மாற்றுவதற்கும் இது முதற்படியாக இருந்தது.

தெரோஸ் நாட்டுக் கூலிப்படை சிசிலிக்குப் போவதற்குத் தாமதமாக வந்தது. பண நெருக்கடியின் காரணமாக அப் படையைக் கலைத்துவிட்டார்கள். அவர்கள் டியிட்ரிப்பேஸ் என்பவன் தலைமையில் தங்கள் நாட்டிற்குத் திரும்பிச் சென்றூர்கள். அவனுக்கு அப் படையை வழியில் பகைவனுக்கு எதிராகத் தான் விரும்பியவாறு பயன்படுத்திக் கொள்வதற்கு அனுமதியளிக்கப்பட்டது. அவர்கள் வடக்கு நோக்கி யூபோயாவுக்கும் (Euboea) பெருநிலப் பகுதிக்கும் இடையேயுள்ள கடலில் பிரயாணம் செய்து பேயிடியா கடற்கரையில் இறங்கினூர்கள். விடியற்காலையில் அவர்கள் மைக்கலெஸஸ் பட்டினம் சென்று அதைக் கைப்பற்றிக் கொண்டார்கள். அது எதிர்பாராத அச்சம் தரக்கூடிய நிகழ்ச்சி. அங்கு வாழ்ந்த மக்களனைவரையும் கொன்று தெரேசியர்கள் தங்களுடைய மிருகத்தன்மையைக் காட்டிக்கொண்டார்கள். கண்ணில் பட்ட உயிர்ப் பிராணிகளை எல்லாம் கொன்றூர்கள். ஓர் ஆண் பாடசாலைக்குள் புகுந்து அங்குள்ள பள்ளிச் சிறுவர்களையும் கொன்று குவித்தார்கள்.

ஏதென்ஸைப் பயமுறுத்திக்கொண்டிருந்த அபாயங்களை, சீர்திருத்தங்கள் மூலமாகமட்டும் தவிர்க்கமுடியாது. சிசிலியில் தங்கள் இளைஞர்களுக்கு நேர்ந்த இடர்ப்பாட்டின் செய்திகள் ஹெல்லாஸின் நாடுகள் முழுவதிலும் பரவிற்று. பகை, நடுநிலைநாடுகள், அடிமை நாடுகள் யாவும் ஏதென்ஸ் தலைதூக்க முடியாத வாறு அதன் ஆதிக்கத்தை ஒழிக்கும் சந்தர்ப்பத்தை எதிர்நோக்கியிருந்தன. லெஸ்பாஸ், சியோஸ், யுபேயா ஆகிய சில கூட்டமைப்பு நாடுகளிடமிருந்து, தேசிலியாவிலுள்ள ஏஜிஸுக்கும் ஸ்ப்பார்ட்ட நீதிபதிகளுக்கும்

செய்திகள் வந்தன. அதாவது, பெலப்போனீசியக் கடற்படை தங்கள் கடலருகேவந்தால், தாங்கள் கலகம் செய்வதாக அச் செய்தி கூறியது. செய்யவேண்டிய வேலையைச் செய்வதற்கு ஒரு கடற்படை தேவைப்பட்டது. எனவே ஸ்ப்பார்ட்டாவிடம் ஒரு கப்பற்படைக் கொள்கை ஒப்படைக்கப்பட்டது. நூறு கப்பல்கள் போர்க் கருவி களுடன் ஆயத்தப்பட வேண்டும். அதில் சரிபாதியை ஸ்ப்பார்ட்டா வும், போயிஷாவும் தரவேண்டும்.' குளிர்காலத்தில் ஏதென்ஸ் ஒரு துடுப்புக் கப்பல்கள் கட்டுவதிலீடுபட்டிருந்தது. தானியம் கொண்டு வரும் தன்னுடைய கப்பல்களைப் பாதுகாக்க சூனியம் (Sunium) முனையை ஏதென்ஸ் வலுப்படுத்திற்று.

அஜிஸ் மன்னன் டெசேலேயில் இருந்தபோது, அவன் தன்னுடைய விருப்பப்படியே படையைப் பலவிடங்களுக்கு அனுப்பும் அதிகாரத் தைப் பெற்றிருந்தான். அவனுக்கு யூபோயே, லெஸ்பாஸ் முதலிய நாடுகளிலிருந்து படை உதவி கிடைத்ததுடன், அவனுக்கு வேண்டிய உதவியளிப்பதாகவும் அவைகள் உறுதியளித்திருந்தன. சியாஸ் நாட் டிற்கு ஸ்ப்பார்ட்டா உதவி செய்யவேண்டியிருந்தது. ஆகையினுல் யூபோயே, லெஸ்பேஸ் என்ற நாடுகளுக்கு உதவிபுரிய முடியவில்லை. பாரசீகம் மிக நீண்ட காலத்திற்குப் பின் கிரீஸ் நாட்டின் விவகாரங் களில் தலையிட ஆரம்பித்தது. ஒரு நாட்டோடு மற்றொரு நாட்டைச் சண்டையிலீடுபடச் செய்தும் அதன் மூலமாக ஆசியாக் கண்டத்தின் கடற்கரையில் முன்பு இழந்த தீவுகளைக் கைப்பற்றுவதும் அதனுடைய நோக்கமாக இருந்தது, சார்டிஸ் அதிபரான திசர்பரனஸும், ஹெலஸ் பான்டைன் பிஜிரிஜியா (Hellespontine Phrygia) நாட்டு அதிபரான பர்னபாஸும் ஏதென்சுக்குச் சிசிலியில் ஏற்பட்ட இடர்ப் பாட்டைத் தங்களுக்குச் சாதகமாக்கிக்கொண்டு ஆசியா கடற்கரையி லுள்ள தங்களுடைய பழைய நாடுகளைத் திரும்பக் கைப்பற்றத் தீர்மா னித்து விட்டார்கள். ஸ்ப்பார்ட்டாவுடன் நேச உறவு கொள்வதா லும், கலகத்தைக் கிளப்பி விடுவதாலும், தங்களுடைய நோக்கம் நிறைவேறுமென்று நம்பினர்கள் அவர்கள் இருவரும் ஸ்ப்பார்ட்டா வுடன்நேச உறவு உடன்படிக்கை செய்துகொள்வதில் ஒருவருக்கொரு வர் முந்திக் கொண்டார்கள் தனித்தனியே அரசியல் தூதர்களை ஸ்ப்பார்ட்டாவுக்கு அனுப்பினர்கள். பர்னபாஸ் ஹெல்லஸ்பான்டில் கலகம் ஏற்பட உதவி புரிந்தான். டிஸ்ஸாபர்னஸ் சியாஸ் கலகத்திற்கு ஆதரவு அளித்தான். அல்சிபியாடிஸின் அறிவுரையின் பேரில் ஸ்ப்பார்ட்டர் சியாவுக்கு உதவி செய்வதெனத் தீர்மானித்துவிட் டார்கள்.

அடுத்த கோடையில் ஏதென்சுக்கு எதிராகக் கலகம் தோன்றியது. ஸ்ப்பார்ட்டன் போர்க் கப்பலைக் கண்டதும் கியோஸ் (Chios) கலகம்

செய்தது. அவர்கள் மிலிடஸ் (Miletus), டியோஸ் (Teos), லெபேடஸ் (Lebedus) என்ற நாடுகளையும் கலகத்திலீடுபடும்படித் தூண்டினுர்கள். அந்தக் கலகத்தில் மெத்திம்னுவும் மைதிலேனேடியும் (Methymna and Mytilene) சேர்ந்துகொண்டன. சிமே நாடும் போக்காயே நாடும் (Cyme and Phocaae) மற்ற கலக நாடுகளைப் பின்பற்றின. இக் காலத்தில் சிறப்பான பங்கு எடுத்துக்கொண்ட நாட்டைப் பற்றி அத்தீனிய வரலாற்று விரிவுரையாளர்கள் புகழ்ந்து எழுதியிருக்கின்றனர். தூசிடைடிஸ் சொல்வதாவது; 'நான் பார்த்த நாடுகளில் சியானர்களையும் லாசிடோமோனியர்களையும் தவிர வெறிகொண்ட எந் நாடும் செழிப்பான காலத்தில் நடுத்தரக் கொள்கையை அனுசரிக்கவில்லை. அதனுடைய அரசாங்கமும், ஆதிக்கமும் நடுத்தரக் கொள்கையைக் கைவிடவில்லை. இக் கலகத்தில் அவர்கள் முன்யோசனை யற்றவர்களாகக் காணப்படலாம்; எனினும், வீரமுள்ள அதனுடைய நேச உறவு நாடுகள் தங்களுடன் சேர்ந்து நெருக்கடியில் பங்கு எடுத்துக்கொள்ளும் வரையில், அது கலகத்திற்குத் துணைபுரியவில்லை. மேலும் அவர்களுக்குச் சிசிலியில் ஏற்பட்ட இடர்ப்பாட்டினுல், தங்கள் நிலைமை நலிந்துவிட்டதென்று உணரும் வரையில் அவர்கள் தங்களை இடையூறுகளுக்கு ஆளாக்கிக்கொள்ளவில்லை. அவர்கள் தங்களுடைய முயற்சியில் தோல்வியடைவார்களாகில், அத் தோல்வி எல்லோருக்கும் சாதாரணமாக ஏற்படக்கூடிய தோல்வி என்றே கருதவேண்டும். மற்றவர்களைப் போலவே இவர்களும் அந்நியர்களின் ஆதிக்கம் விரைவில் அகற்றப்படுமெனத் தவருக மதிப்பிட்டார்கள்.

வெற்றிகரமான இதே ஆரம்பம், ஸ்ப்பார்ட்டாவுக்கும் பாரசீகத்துக்குமிடையே, மிலிட்டஸ் என்றவிடத்தில் உடன்படிக்கை ஏற்பட வழியாயிற்று. ஏதென்ஸை ஒழித்துக் கட்டுவதற்காக லியோனிடாஸின் நாடு (Leonidas) ஆசியாவிலுள்ள கிரேக்கர்களுடைய சுதந்திரத்தை ஒரு அந்நியனுக்கு விற்றுவிட்டது. எழுபது ஆண்டுகளுக்கு முன்னே பெர்சியப் பேரரசனுடைய ஆசியாப் பட்டணங்களின் உரிமைகளைப் பறித்துக் கொண்டதாக ஏதென்ஸ்மீது குறைகூறப்பட்டது. பாரசிக அரசன் இப்போது அப் பட்டணங்களின்மீது உரிமை கொண்டாடினுன். அவைகள் எழுபதாண்டுக் காலமாகக் கட்டவேண்டிய கப்பத்தின்மீதும் அவன் இப்போது உரிமை கொண்டாடினுன். அவனுக்கும் அவன் முன்னேருக்கும் சொந்தமான இடங்களின் மீதுள்ள உரிமையை ஸ்ப்பார்ட்டா ஒப்புக்கொண்டு விட்டது. ஏதென்சுடன் நடக்கும் யுத்தம் முடியும் வரையில் பெலப்போனீசிய கப்பல் - படை, மாலுமிகளுக்குக் கொடுக்கவேண்டிய சம்பளத்தைப் பாரசிகப் பேரரசன் கொடுப்பதாக ஒப்புக் கொண்டான். அந்தச் சமயத்தில் ஸ்ப்பார்ட்டா அவனிடம், பணத்தை மட்டும் எதிர்பார்த்ததாகவும் அவனுடைய விருப்பத்தை நிறைவேற்றுவது அதனுடைய

நோக்கமல்ல வென்றும் தெரிகிறது. ஸ்ப்பார்ட்டா தன்னுடைய நோக்கம் நிறைவேறிய பிறகு ஆசியா நாடுகளை அவனிடமிருந்து விடுவித்துவிடத் திட்டமிட்டதென்றும் தோன்றுகிறது, ஆனால் மிலேட்டஸ் உடன்படிக்கை கிரேக்க நாடுகளின் அரசியலில் ஓர் புதிய முறையை உண்டாக்கிவிட்டது. அதாவது, பாரசீக அரசன் கிரேக்க நாடுகளின் மத்தியஸ்தனுவதற்கும் நீதி வழங்குவதற்கும் வாய்ப்பை அளித்தது.

ஏதென்சு சோம்பரிஸ் காலம் கழிக்கவில்லை. அப்போது நிதி நெருக்கடி கடுமையாக இருந்தபடியால் ஏதென்சு சபை காப்பு நிதியாக வைத்திருந்த ஆயிரம் தாலந்துகளையும் பயன்படுத்தச் சட்டம் கொண்டு வந்தது. கடற் பகுதியிலே சியோசுக்குச் சென்றுகொண்டிருந்த ஓர் கொரிந்தியக் கப்பற்படையை ஆர்கோலிஸ் கடற்கரையிலே முற்றுகையிட்டது. அது சியோசைப் பாழாக்கிற்று. மேலும் அது அந்தப் பட்டினத்தை முற்றுகையிட்டு லெஸ்போஸைத் தன்பக்கம் சேர்த்துக்கொண்டது. அது மிலட்டஸ்மீது வெற்றிகொண்டது. ஆனல் சினிடஸ் (Cnidas) கலகம் செய்தது. சிமே (Cymc) என்ற சிறிய தீவுக்கருகில் நடந்த கடற்போரில் பெலப்போனிசியர்கள் சில வெற்றிகள் அடைந்தார்கள். இதன் விளைவாக ரோட்ஸ் (Rhodes) தீவில் கலகம் ஏற்பட்டது. அடுத்த ஆண்டு வசந்த காலத்திற்குள் ஏதென்சு தன்னுடைய வட திசையிலுள்ள நாடுகளையும், ஹெல்லஸ்பாண்டையும் தன் ஆதிக்கத்தின்கீழ் வைத்திருந்தது. ஆசியாவின் மேற்குக் கடற்கரையில் லெஸ்போஸ், சாமோஸ், காஸ், ஹாலிக்கார்னஸஸ் (Lesbos, Samos, Cos and Halicarnassus) நாடுகளைத் தவிர மற்றவைகளைப் பற்றி அது காவலைப்படவில்லை. பாரசீகர்களுடைய பெரிய கப்பல் படையையும் சிசிலியிலிருந்து ஹெர்மோகிராட்டஸ் கொண்டுவந்த போர்க்கப்பல்களும் பெலப்போனீஸியரிடமிருந்தன. சைரக்கூஸ் தன் விடுதலைக்காகச் செய்த உதவிக்காக அவைகள் சிசிலியிலிருந்து அனுப்பப்பட்டன. இவைகள் அனைத்தையும் ஏதென்ஸ் எதிர்க்க வேண்டியதாயிற்று.

பெர்சியாவுக்கும் லாசிடோமோனுக்குமிடையே சம்பவங்கள் யாவும் அமைதியான முறையில் நிகழ்ந்துகொண்டிருந்ததாகச் சொல்ல முடியாது. உதவித்தொகை சம்பந்தமாக அபிப்பிராய பேத மெழுந்தது. அதனல் புதிய ஒப்பந்தம் ஏற்பட்டது. அதில் குறைவான முறையில் பாரசீக மன்னனின் உரிமைகள் குறிப்பிடப் பட்டுள்ளன. அப்பொழுது ஆல்சிபியாடிஸ் மிலிட்டஸிலிருந்த டிஸ்ஸாபர்னஸ் என்பவனேடு நட்புக்கொண்டான். ஸ்ப்பார்ட்டர் அதன் காரணமாக அவன் மீது ஐயங் கொண்டனர். அகிஸ் மன்னனுடைய மனைவியை அவன் கற்பழித்தபடியால் அகிஸ் இவனைப் பகைத்தான். தன் உயிருக்கு ஆபத்து வந்துவிட்டதை அறிந்துகொண்ட அவன்

மிலெட்டசை விட்டுப் புறப்பட்டு அதிபரின் அவைக்குப் போய்ச் சேர்ந்தான். அங்கிருந்து அவன் ஏதென்சுக்குத் திரும்பிவரும் நோக்கத்துடன் பல உபாயங்களை மேற்கொண்டான். ஸ்ப்பார்ட்டாவில் உண்மையில் அவன் வேலை முடிந்துவிட்டது. ஏதென்ஸ் அரசியலில் ஏற்பட்ட மாறுதல்கள், புதிய திட்டங்கள் உருவாக வழி வகுத்தன. டிஸ்ஸாபர்னேஸ் ஸ்ப்பார்ட்டாவுடன் உறவு கொள்ளச் செய்தவன் ஆல்ஸிபியாடிஸ். இப்போது அவனே ஸ்ப்பார்ட்டா டிஸ்ஸாபர்னேஸ் உறவைக் கலைத்து, தசாபர்னஸ் ஏதென்சுடன் உறவுகொள்ளத் திட்டமிட்டான். பாரசிகத்திற்கும் தன்னுடைய பகை நாடாகிய ஸ்ப்பார்ட்டாவுக்கு மிருந்த ஐக்கியத்தை அழித்து விடுவது ஏதென்சுக்குச் செய்யும் முதன்மையான பணி என்று அவன் கருதினான். ஆல்கிபியாடிஸ் இந்த முயற்சியில் வெற்றிபெற்றால் அவன் தன் நாட்டுக்குத் திருப்பி அழைத்துக்கொள்ளப் படுவான்.

## 7. சிறுகுழு ஆட்சிக் கட்சியின் புரட்சி

கி. மு. 411 ஜனவரி—பிப்ரவரி இந்த மாதங்களில் ஏதென்சில் துன்பம், பயம், அதிருப்தி ஆகியன பெருகி யிருந்தன. இந்த நெருக்கடியில், கவிஞன் அஸ்ட்டோபேன்ஸ் லைசிஸ்ட்றேட் (Lysistrate) அல்லது டேம் டிஸ்பேன்டர் (Dame Disbander) என்ற நகைச்சுவை நாடகத்தின் மூலமாக ஏதென்ஸ் மக்கள் இந்த நீண்ட போரினால் அடைந்த துயரத்தை விளக்கி கூறுகிறான். கதாநாயகி கிரீசில் யுத்தத்தில் ஈடுபட்ட நகரங்களின் பெண்கள் எல்லோரும் இணைந்து, அப் பெண்கள் சங்கத்தின்மூலம் சமாதானத்தை உருவாக்கும்படி ஆண்களை வற்புறுத்துகின்றனர். அச்சார்னியர்களும் சமாதானமும் (Acharnians and Peace) என்ற நாடகத்தில் காணப்படாத துயர சம்பவங்களை இந் நாடகத்தில் களிப்பூட்டும் சம்பவங்களுக்கிடையில் சேர்த்திருக்கிறான். திருமணம் செய்வதற்கும் திருமணம் செய்து வைப்பதற்கும் யுத்த காலம் ஏற்றதல்ல. 'மணமான மாதர்களைப் பற்றி நாம் கவலைப்படவில்லை. பருவம் கடந்து வீட்டில் அடைபட்டுக்கிடக்கிற கன்னியர்களைப் பற்றியே கவலையடைகிறோம்' என லைஸிஸ்டரேட் கூறுகிறாள். ஆண்களுக்கு வயது முதிர்வதில்லையா? என அவளுடன் வாதாடும் பொரேபூலோஸ் கேட்கிறான். ஆனால் அது ஒரேவிதமானதல்ல. மீசை நரைத்துப் போன ஆண் மகன் ஓர் இளம் பெண்ணை மணந்துகொள்ளலாம். ஆனால் பெண்ணின் கன்னிப் பருவம் குறுகியது. அவள் அப் பருவத்தை இழந்தால் ஒருவனும் அவளை மணக்க மாட்டான். இந்தச் சமயத்தில் பாரசிகத்தைப் பற்றிய பயத்தின் நிழல் ஏதென்சைச் சூழ்ந்து கொண்டிருந்தது. அத்துடன் சிறு குழு ஆட்சிக் கட்சியினர் புரட்சி செய்யத் திட்டமிட்டுக்கொண் டிருக்கிறார்கள் என்ற பயமோ,

அல்லது டெசேலியத்திலுள்ள (Decelea) பகைவனேடு அவர்கள் சதியாலோசனை செய்துகொண்டிருக்கிறுர்கள் என்ற சந்தேகமோ அங்கே நிலவியது. லிசிஸ்ட்ரேட்டே நாடகம் நடந்த இரண்டு மாதங்களுக்குப் பின் டயோனிசஸ் (Dionysus) என்ற பெரிய விருந்தில் அர்ஸ்டோபேன்ஸ் மற்ருெரு நாடகத்தைக் கொண்டுவந்தான். அந் நாடகம் அரசியல் சம்பந்தமான நாடகமல்ல— 'தெஸ்மோபேரியாவின் பாராட்டப்படுவோர்' (The Celebrants of Thesmophoria) ஆனுல் அநேகர் உள்ளங்களிலிருந்த அச்சம் அந் நாடகத்தில் எதிரொலித்தது. 'நகரத்தின் தனிக் காவலர்' என்ற பலர் பாடல் மூலம் அத்தேனே தெய்வத்தை விளித்தபோது கொடுங்கோலரை வெறுப்பவனே என்பதுபோல் ஒலித்தது,

குடி மக்களாட்சியை விரும்புகிறவர்கள் நகரத்தைக் காவல் புரியும் தேவதையை நோக்கி வழிபட்டிருப்பார்கள். சிறுகுழு ஆட்சியினர் நீண்ட நாளாக எதிர்பார்த்துக் கொண்டிருந்த சந்தர்ப்பம் கடைசியாக அவர்களுக்குக் கிடைத்தது. செல்வாக்குள்ள மக்கள் பலர் அக்கட்சிக்கு வெளியே இருந்தார்கள். அவர்கள் சிறுகுழு ஆட்சிக் கொள்கையை எதிர்த்தபோதிலும் அப்போதிருந்த அரசியல் அமைப்பை அவர் வெறுத்தனர். அரசியல் அமைப்பை மாற்றி அமைக்க வேண்டுமென்பது அவர்களுடைய விருப்பம். அவர்கள் கூறுவதற்குக் காரணங்கள் இருந்தன. தற்போதுள்ள குடியாட்சியில் அயல் நாட்டுக் கொள்கை தவருக நிர்வகிக்கப்பட்டது. கல்வியறிவு பெற்றவர்களுக்கு அரசாங்கத்தை நடத்துவதில், இடமளிக்கப்படவில்லை; இவ்வாறு அவர்கள் குறை கூறினுர்கள். தவிர குடியாட்சி முறைக்கும் சிறுகுழு ஆட்சி முறைக்கும் இடையில் மிதவாதக் கொள்கை ஆட்சி முறையை ஏற்படுத்த வேண்டுமென விரும்பியவர்களில் தெராமேனஸ் (Theramenes) என்பவன் முதன்மையானவன். அவன் பொரோபூலிகளில் ஒருவனுகிய ஹாக்னேன் (Hagnon) என்பனின் மைந்தன். 'நமது மூதாதையரின் பழைய அரசியல் அமைப்பு' என்பது மிதவாதக் கட்சியினரின் தாரகமந்திரமாக இருந்தது. இதனுல் அவர்கள் சோலோனுடைய அரசியலமைப்பைக் குறிப்பிடவில்லை. சோலோனுக்கு முன்பிருந்த அரசியல் அமைப்பைக் குறிப்பிட்டார்கள். அவர்கள் தங்களுக்கேற்ற அரசியல் நோக்கத்தோடு ஏதென்ஸின் வரலாற்றுக்குப் புதிய விளக்கம் கொடுத்தார்கள். மக்கள் தலைவனுக இருந்து தீங்கு இழைத்த முதல்வனென்று கருதப்படும் சோலானையும், அவனுடைய மக்களாட்சியையும் அவர்கள் வெறுத்தார்கள். சாலாமிஸின் (Salamis) வீரன் தெமிஸ்ட்டோக்கிளிஸ் அல்ல அரியோபேகஸ் என்று அவர்கள் வாதித்தார்கள். டெலியன் கூட்டமைப்பின் தந்தையாகிய அரிஸ்ட்டைட்டிஸ் (Aristides) நேசநாடுகளில் 20,000 சோம்பேறிகள் வீணில் உண்டு வாழ வழி வகுத்தவன்

என்று அவனைக் கண்டித்தனர். பெரிக்கிளிஸ் சுய அறிவற்றவன். மற்றவர்களின் அறிவை நம்பி வாழ்ந்தவனென்றும் கூறினார்கள். இருநூறாண்டு மோசமான ஆட்சிக்குப் பின் ஏதென்சு சோலோனுக்கு முன்னிருந்த காலத்திற்குத் திரும்பவேண்டும்; டிரேகன் (Dracon) அரசியல் அமைப்பை மீண்டும் அவர்கள் கொண்டுவர வேண்டும். டிரேகனுடைய அரசியலமைப்பில் நானூறுபேர் (Council of Four Hundred) கொண்ட அரசியல் சபை முதன்மையானது. அத்தகைய சபை ஒருபோதும் இருந்ததில்லை. தெராமினசும் அவனுடைய நண்பர்களும் டிரேக்கனிடமிருந்து, இவ்வமைப்பு தோன்றியது என்று கூறி வந்தார்கள்.

தெரோமனேசின் கொள்கையை, சிறு குழு ஆட்சிக் கொள்கையினர் ஒத்துக்கொள்ளவில்லையென்றாலும், தீவிர சிறு குழுக் கட்சியினர் அவர்களுடன் சேர்ந்து மக்களாட்சியைக் கவிழ்க்க ஆரம்பத்தில் ஆயத்தமாயிருந்தார்கள். அந்தச் சதி திட்டத்திற்குத் தலைவன், ரேம்னஸ் (Rhamnus) என்ற ஊரைச்சேர்ந்த ஆன்டிப்போனுவான் (Antiphone) அவன் ஓர் நாவன்மை படைத்த வழக்கறிஞன். அவன் கிளியான் காலத்தில் தன் திறமையை வெளிப்படுத்தினான். அவனுடைய மறைவற்ற சிறுகுழு ஆட்சிக் கொள்கைக்காக மக்கள் அவனை வெறுத்தார்கள். ‘அவன் நற்பண்பில், தன் காலத்தில் வாழ்ந்தவர்களில் எவருக்கும் இளைத்தவன் அல்லன்’ எனத் தூசிடைடிஸ் அவனைப் பற்றிக் குறிப்பிடுகிறான். கட்சிக்கொள்கையிலுள்ள பற்றுதான் அவனுக்கு நற்பண்பாக இருந்தது. முன்பு கிளியானுடைய நண்பனாயிருக்க பைசாண்டரும் (Pisander), சாமாஸில் நிறுத்தி வைக்கப்பட்ட கடற்படைக்குத் தலைவனாக இருந்த பிரினிச்சஸ் என்பவனும் சதிகாரருள் முதன்மையானவர்கள். அவ்வியக்கம் வெற்றிபெறும் நல்வாய்ப்பைப் பெற்றிருந்தது. அந்த இயக்கத்தைப் பொரோபூலியர்களும் கடற்படை அதிகாரிகளும் ஆதரித்தார்கள். பாரசீகர்களுக்கு அஞ்சி, அந்நியர்களிடமிருந்து தங்களுடைய நகரம் காப்பாற்றப்படுமானால் தங்களுடைய அரசியல் அமைப்பையும் மாற்றியமைக்க அத்தீனியர்கள் ஆயத்தமாக இருந்தார்கள். திஸ்ஸாபெர்னசுடன் ஓர் நேச உறவு உடன்படிக்கைசெய்துவைப்பதாக, ஆல்சிபியாடிஸ் கடற்படை அலுவலர்களிடம் உறுதி கூறினான். இதற்காக மக்களாட்சி கைவிடப்படவேண்டுமென்றும் அவன் ஒரு நிபந்தனை விதித்தான். சதித்திட்டத்திலீடுபட்ட சிறுகுழு ஆட்சியினரில் பலர் இத் திட்டத்தை மகிழ்ச்சியுடன் வரவேற்றனர். படைவீரர்கள், பாரசீக அரசனிடமிருந்து பணம் வாங்கும் ஆசையால் சதித் திட்டத்திற்கு உடந்தையானார்கள். அவர்களில் அறிவுள்ளவர்கள் இது ஆல்சிபியாடிசின் சொந்தத் திட்டமென எண்ணினார்கள். பிரினிச்சஸ் அப் புரட்சிக்குத் தலைமைதாங்க விரும்பினான். ஆல்சிபியாடிசை அவன் விரும்பவில்லை.

ஆகையால் அவனை ஒழிக்கப் பல தந்திரங்கள் செய்தான். உண்மையில் ஆல்சிபியாடிஸ் சிறுகுழு ஆட்சியினரின் நண்பனல்லன். ஆல்சிபியாடிஸ் தன்னை மறுபடியும் ஏதென்சுக்கு வரவழைக்காத மக்களாட்சியை ஒழிக்கத் தீர்மானித்தான். சிறுகுழு ஆட்சி அமைக்கப்பட்டால், மக்களாட்சியை மீண்டும் கொண்டுவர அவன் முயல்வான். அம் முயற்சிக்காக தனது பழைய குற்றங்கள் மன்னிக்கப்படுமென்பது அவன் நோக்கம். ஆனால் சூழ்நிலைகளுக்கு ஏற்ப அவன் செயலாற்ற வேண்டியதாயிற்று.

ஆல்சிபியாடிஸ் நாடு திரும்பவும், மக்களாட்சியில் திருத்தங்கள் செய்யவும் வழிவகுக்க பிஸாண்டர் ஏதென்சுக்கு அனுப்பப்பட்டான். ஆரம்பத்தில் அரசியலமைப்பில் மாறுதல் செய்யவும் நாடுகடத்தப் பட்டவனைத் திரும்ப ஏதென்சுக்கு அழைக்கவும் பொதுமக்கள் விரும்ப வில்லை. எமோல்பிடே என்பவன், தெய்வ ரகசியங்களைப் பழித்தவனுடன் தொடர்புகொள்ள விரும்பவில்லை. பாரசீகர்களை பெலப்போனீசியர்களிடமிருந்து பிரித்துவிட்டால் ஏதென்சின் நெருக்கடி நீங்குமென்றும், அதைச் செய்ய ஆல்சிபியாடிசின் சேவை மிகவும் அவசியமென்றும், ஏதென்சில் மக்களாட்சி நிலவும்வரை பாரசீகப் பேரரசன் ஏதென்ஸை நம்பமாட்டான் என்றும் கூறப்பட்டது மக்களுக்கும் இது பொருத்தமாகவே இருந்தது. அரசியலில் மாறுதல் கொண்டுவர ஹைட்டரியே (Hetaeriae) என்ற ஓர் அரசியல் குழு ரகசியமாக வேலை செய்துகொண்டிருந்தது. பிஸாண்டரும், ஒரு சில அரசியல் தூதுவர்களும் டிஸ்ஸாபெர்னசுடன் ஓர் ஒப்பந்தம் செய்துகொண்டு, ஆல்சிபியாடிசுடன் ஏற்பாடுகள் செய்யவேண்டுமென்று முடிவு செய்யப்பட்டது.

ஆர்சிபியாடிஸ் கொடுத்த வாக்குறுதி அவன் சக்திக்கு மேற்பட்டதாகத் தோன்றிற்று. ஸ்ப்பார்ட்டாவுக்கும் டிஸ்ஸாபெர்னசுக்குமிடையில் ஒரு பெரும் பிளவு இருந்து வந்தது. லிச்சாஸ் (Lichas) என்றழைக்கப்பட்ட ஓர் ஸ்ப்பார்ட்ட அதிகாரி, ஒரு நாட்டு அதிபதியுடன் (satrap) தொடர்புகொண்டு, உடன்படிக்கையின் வாசகங்களையெல்லாம் நிராகரித்துவிட்டான். தன்னுடைய முன்னோர்கள் ஆண்டு வந்த நாடுகளின் மீது பேரரசனுக்கு அதிகாரம் அளிக்கும் உடன்படிக்கையின் ஓர் வாசகத்தை எடுத்துக் காட்டி, அதனாலேற்படும் விளைவுகளை விளக்கிக் காட்டினான். அதனால் வடகிரேக்கத்தின் பகுதிகளும், தெஸ்ஸாலியும் பாரசீக அரசின் ஆதிக்கத்துக்குட்படும் என்றும் அவன் கூறினான். இவ் வாசகங்களால் நம்முடைய கடற்படை வீரர்களுக்குச் சம்பளம் தரப்படமாட்டாது என்றும், அதனால் அவன் வேறொரு உடன்படிக்கை தயாரிக்கப்பட வேண்டுமென்றும் தெரிவித்தான். அதனால் எரிச்சலடைந்த டிஸ்ஸாபர்னெஸ் அங்

கிருந்து போய்விட்டான். ஆனால் அவன் ஏதென்சுடன் நட்புக் கொள்ளும் பிரச்சினை எழுந்தபோது, தான் ஸ்ப்பார்ட்டாவுடன் கொண்டுள்ள உறவைத் தனக்கு முறிக்கும் விருப்பமில்லை என்றான். அத்தினிய அரசியல் தூதுவர்கள் ஒப்புக்கொள்ள முடியாத நிபந்தனைகளை அவன் கூறிவிட்டு, லிச்சாஸ் மறுத்த வாசகத்தை மாற்றி, ஸ்ப்பார்ட்டாவுடன் ஒரு புதிய ஒப்பந்தம் செய்துகொண்டான். பாரசீகத்துக்குச் சொந்தமென ஸ்ப்பார்ட்டா அங்கீகரித்த நாடுகள் யாவும் ஆசியாவுடன் இணைக்கப்பட்டன.

திஸ்ஸாபர்னசையும் அல்சிபியாடிசையும் பொருத்தமட்டில் புரட்சிக்கான காரணங்கள் நீக்கப்படுமென்று தோன்றியது என்றாலும், அதற்கான ஆயத்தங்கள் சுமுகமாக நடைபெற்று வந்தன. பிசாண்டரின் தூதுக்குழு வெற்றிப்பெருமையால் மாறுதல் எதுவும் ஏற்படவில்லை. சதிகாரர்கள் மூர்க்கத்தனமான பயங்கரமான செயல்களைச் செய்யத் தயங்கவில்லை. மக்களாட்சிக் கொள்கைக்காரனும் ஆல்சிபியாடிசின் பகைவனுமான ஆண்டரோக்கிளிஸ் கொல்லப்பட்டான், மற்றும் சிலர் கொலையுண்டார்கள். நகரத்தில் அச்சமும் அவநம்பிக்கையும் எழுந்தன. ஏதென்ஸ் நகரின் அழிவு நெருங்கிவிட்டதாக எல்லோரும் நினைத்தனர். அதைத் தடுக்க, அரசியலமைப்பை மாற்றுவதைத் தவிர வேறு வழியில்லை. அபிடஸ் (Abydus), லாம்ப்சாக்ஸ் (Lampsacus) ஆகிய இரு நாடுகளிலும் கலகம் தோன்றியதாக வந்த செய்தி அரசியலில் மாறுதல் செய்வதைத் துரிதப்படுத்தியது. புரட்சி பொரோபூலியின் (Ten Probuli) உதவியினால் அமைதியாக நடந்தது. பொரோபூலியும் மக்களால் நியமிக்கப்பட்ட இருபது அங்கத்தினர்களும், ஆக முப்பது அங்கத்தினர்களைக் கொண்ட ஓர் குழு அமைக்கப்பட்டு, அங்கு நாட்டின் பாதுகாப்புக்கான திட்டங்களை வகுத்து, அவற்றை ஒரு குறிப்பிட்ட நாளில் ஏதென்சு சபைக்குமுன் வைக்க வேண்டும் என ஓர் ஆணை பிறப்பிக்கப்பட்டது. குறிப்பிட்ட நாளன்று நகருக்கு ஒரு மைல் தூரத்திலுள்ள கொலோனஸ் (Colonus) என்ற இடத்திலிருந்த போசிடான் (Poseidon) என்ற ஆலயத்தில் ஏதென்சு சபை கூட்டியது நடைமுறையிலுள்ள பழைய சட்டங்களை மாற்றி யமைப்பதனால் ஏற்படும் சிக்கல்களுக்கு விடை கண்டபின், தீவிர மாறுதல்கள் கொண்டுவரப்பட்டு, அச் சபையினரால் ஏற்றுக் கொள்ளப்பட்டன. முழு அதிகாரமுடைய மக்கள் சபையில், எதிர் காலத்தில், குடிமக்கள் எல்லோருக்கும் இடமளிக்க வேண்டியதில்லை என்றும், சபையில் 5000 அங்கத்தினர்கள் மட்டுமே யிருக்கவேண்டுமென்றும் தீர்மானமாயிற்று. சபையிலுள்ள 5000 அங்கத்தினர்கள் செல்வமும், உடல் வன்மையும் பெற்றவர்களாக இருத்தல் வேண்டுமெனத் தீர்மானிக்கப்பட்டது. அந்த (5000) ஐயாயிரம் உறுப்பினர்களைத் தேர்ந்தெடுக்கவும், தேர்வுப் பட்டியலைத் தயாரிக்கவும் ஒவ்

வோர் இனத்திலும் பத்து அங்கத்தினர்கள் தேர்ந்தெடுக்கப்பட வேண்டியதாயிற்று. பொது அலுவல் துறைகளிலுள்ளவர்களுக்கு அளிக்கும் ஊதியம் பெரும்பாலும் நிறுத்தப்பட்டது. இப் புரட்சித் திட்டங்களுடன் ஒரு விதிவிலக்குச் சட்டமும் இணைக்கப்பட்டது. போர் நிலவும் காலம்வரை இச் சட்டம் நடைமுறையிலிருக்கும். மக்கள் இச் சட்டத்தை ஏற்றுக்கொள்ளுமாறு தூண்டப்பட்டனர். ஆனால் இது பூர்வாங்க நடவடிக்கைதான்.

புதிய அரசியலமைப்பு இன்னும் உருவாகவில்லை. ஐயாயிரவர் சபை தேர்ந்தெடுக்கப்பட்டது. அரசியல் அமைப்பை வரைவதற்காக அச் சபை நூறுபேர் கொண்ட ஓர் குழுவை நியமித்தது. அவர்கள் பழைய அரசியல் அமைப்பிலுள்ள குறைபாடுகளை எடுத்துக் காட்டினார்கள். பழைய மக்கள் சபை வகித்து வந்த அதிகாரம் ஐயாயிரவர் சபைக்கு அளிக்கப்பட வில்லை. ஐயாயிரவர் சபை, நான்கு குழுவாகப் பிரிக்கப்பட்டது. ஒவ்வொரு குழுவும் முறைப்படி ஓராண்டுக்கு ஆட்சிப் பொறுப்பை வகிக்கவேண்டுமென்ற நிபந்தனை ஏற்படுத்தப் பட்டது. ஆட்சிக்குழு உயர்தர நீதிபதிகளை குழு அங்கத்தினரிட மிருந்து நியமிக்க வேண்டும். இதனால் ஆட்சிக் குழுவின் திட்டங்களில் மக்கள் சபை குறுக்கிடும் இரட்டை அதிகார முறை அகற்றப் பட்டது. இதன் விளைவாக, படைத் தலைவர்களும் உயர்தர அரசாங்க அலுவலர்களும், குழுவில் அங்கத்தினர்களாகச் சேர்த்துக்கொள்ளப் படுவார்கள். பழைய அரசியல் அமைப்பில் மக்கள் சபைக்கும், கழகத் திற்கும் முரண்பாடு இருந்தது. படைத் தலைவர்கள் அரசாங்க அலு வலர்கள் குழு அங்கத்தினர்கள் அல்லர். ஆகையால் அவர்கள் கழகத் திற்கு எதிராகச் சபையைத் தூண்டிவிட முடியும். அத்தகைய முரண் பாடு இப்போது நீக்கப்பட்டது.

இந்தத் திட்டத்தின்படி, நிர்வாக அமைப்பின் அளவு குறைபா டுடையதாக இருந்தது. இந்தத் திட்டம் நடைமுறைக்குக் கொண்டு வரப்படவில்லை. அப்படிக் கொண்டுவரப்பட்டிருந்தாலும் அது பல னற்றதென்று கைவிடப்பட் டிருக்கும். எதிர் காலத்தில் இந்தத் திட்டம் அமுலுக்குக் கொண்டுவரப்பட வேண்டுமென சபை தீர்மா னித்தது. இதற்கிடையில் நூறு ஆணையாளர்களின் திட்டமான வகையில் நானூறு பேரடங்கிய சபையொன்றை ஏற்படுத்தி அதன் மூலம் நாட்டை நிருவகிப்பதென்று தீர்மானிக்கப்பட்டது. இந்தக் கழகத்திற்கு ஒவ்வொரு இனமும் நாற்பது அங்கத்தினர்களைத் தேர்ந் தெடுத்து அனுப்பவேண்டும். இச் சபைக்கு அங்கத்தினர்கள் தேர்வு முறை பின்வருமாறு: சபைத் தலைவர்கள் (Presidents) என்று அழைக் கப்பட்ட ஐவரைப் பொதுச்சபை தேர்ந்தெடுத்தது. இந்த ஐந்து தலை வர்களும் ஆளுக்கு நூறு வீதம் உறுப்பினர்களைச் சபைக்கு நியமிக்க

வேண்டும். நானூறு பேரடங்கிய இச்சபை தற்காலிக அரசாங்க மெனக் கருதப்பட்டது. ஆனால் அரசாங்கத்தின் வரவு செலவைக் கவனித்தல், நீதிபதிகள் உள்பட அரசாங்கத்தின் உயர்தர அலுவலர் களை நியமிப்பது முதல் எல்லா அரசாங்க நிர்வாகங்களும் அவர்கள் வசம் ஒப்படைக்கப்பட்டது. ஐயாயிரவர் சபையைக் கூட்டுவது நானூற்றுவர் கொண்ட சபையின் பொறுப்பாகும். இதன் காரணமாக ஐயாயிரவர் சபையின் முக்கியத்துவம் குறைந்தது. தற்காலிக அர சியல் அமைப்பு கலப்பற்ற சிறுகுழு ஆட்சி (ஆலிகார்க்கி) அமைப் பாக இருந்தது. நானூற்றுவர் சபை, டிராகன் (Dracon) எழுதிய அரசியல் அமைப்பின் புது வடிவம் என்று கூறப்பட்டது. டிராகனின் அரசியல் முறையால் ஏதென்ஸ் செழிப்புடனிருந்ததாகக் கூறப் பட்டது. அதன்பின்னரே கும்பலாட்சியாளரால் ஏதென்சு சீரழிந்தது. ஆனால் கிளஸ்தனீஸ் (Cleisthenss) என்பவன் உருவாக்கிய பத்து இனங்கள், மாறுபாடின்றி வைத்துக்கொள்ளப்பட்டது. அவ் வாண்டு முடிவதற்குள் பழைய ஐந்நூற்றுவர் சபை கலைக்கப்பட்டு விட்டது. அதற்கு ஏழு நாளைக்குப் பின்னர் நானூற்றுவர் குழுவின் ஆட்சிமுறை ஆரம்பமாயிற்று. இவ் வரசியல் மாற்றங்கள் நிகழ்ந்தபோது சதிகாரர் கள் அச்சுறுத்திக் கொண்டேயிருந்தனர். அவர்கள் வாள்களை மறைத்து வைத்துக்கொண்டு ஐந்நூற்றுவர் சபை மண்டபத்தில் நுழைந்து சபையைக் கலைக்கும்படி வற்புறுத்தினர். இந்தப் புரட்சியை நடத்தி யவர்களின் திறமையைப் பற்றி தூசிடைடிஸ் புகழ்ந்தெழுதியிருக் கிறான்: 'கொடுங்கோலர்களின் வீழ்ச்சிக்கு நூறாண்டுகளுக்குப்பின், சுதந்திரமாக வாழ்ந்த ஐம்பது ஆண்டுகளுக்கு மேலாக ஏகாதிபத் தியம் செலுத்திய அத்தினிய மக்களின் சுதந்திரத்தை அழித்தல் எளி தான செயலன்று'.

நூறு ஆணையாளர்கள் உருவாக்கிய அரசியல் அமைப்பை நிலையுள்ள அமைப்பாக்குவதற்குப் பதிலாக ஏன் தற்காலிக அரசியலமைப்பு நிறுவப்பட்டது என்று கேட்கலாம். நாம் அங்கே அப்போது அரசியலி லிருந்த உட்பொருளை உற்று நோக்கவேண்டும். அந்த இரு அரசியல் அமைப்புகளும் புரட்சியிலிருந்த இரு விதமான தூண்டுதல்களை வெளிப்படுத்துகின்றன. தேராமேன்சும், மிதவாதிகளும், ஆன்டி பனையும், சிறு குழு ஆட்சியினரையும் திருப்திப்படுத்தவே, நானூற்று வர் சபை நிறுவப்பட்டது. மிதவாதிகள் அந்த நிறுவனம் தற்காலிக நிறுவனமெனக் கருதினார்கள். ஆனால் சிறு குழு ஆட்சியினர் அதை நிரந்தரமான நிறுவனமாகக் கருதினார்கள்.

## 8. நானூற்றுவர் சபையின் வீழ்ச்சி—அரசியல் அமைப்பு—மக்களாட்சி முறை திரும்ப நிலைநாட்டப்பட்டது

மூன்று மாதங்களுக்குமேல் நானூற்றுவர் சபை நகரத்தைத் தன்னிச்சைப்படி ஆண்டுவந்தது. அதன்பிறகு அச் சபை ஒழிக்கப்பட்டது. அவர்களுடைய வெற்றிக்குக் காரணமாக இருந்தவர்கள், சாமாஸில் கப்பல் படையிலிருந்த மக்களாட்சிக் கட்சியினராவர். அப் படையின் செயல்களாலேயே அவ் வீழ்ச்சி ஏற்பட்டது. மாலுமிகள், சிறுகுழு ஆட்சியின் அலுவலர்களுக்கும் சாமாசிலுள்ள சிறுகுழு ஆட்சியினருக்கும் விரோதமாக எழுந்தார்கள். அச் சிறுகுழு ஆட்சிக் கொள்கையினர் மக்களாட்சிக்கு விரோதமாகச் சதிசெய்து, நாடு கடத்தப்பட்ட ஹைபர்போலஸ் என்பவனையும் கொலை செய்தார்கள். திராசிபூலஸ் என்பவனும், திராசிலஸ் என்பவனும் சிறுகுழுவினரை எதிர்த்தவர்களுக்குத் தலைவர்களாக இருந்தார்கள். பழைய மக்களாட்சியை ஆதரிக்கவும் புதிதாக ஏற்படுத்திய நானூற்றுவர் குழுவைப் புறக்கணிக்கவும் அவர்கள் தூண்டினார்கள். ஏதென்சில் வீழ்த்தப்பட்ட மக்கள் சபை மறுபடியும் சாமோசில் கூடியது. படையிலிருந்தவர்கள் யாவரும் அத்தீனியர்களானபடியால் சபையிலிருந்த படைத் தலைவர்களை நீக்கிவிட்டு, பிற தலைவர்களைத் தேர்ந்தெடுத்துக் கொண்டார்கள். சாமாஸிலுள்ள அத்தீனியர்கள், ஏதென்சிலுள்ள அத்தீனியர்களுடைய நிலைமையைப் போன்று தங்கள் நிலைமை சிறந்ததென்றெண்ணினார்கள். ஆல்சிபியாடிசின் உதவியால், பாரசிகத்துடன் ஓர் நேச உறவு ஏற்படுமென அவர்கள் நம்பினார்கள். அவனைத் திரும்ப ஏதென்சுக்கு வரவழைக்கவும் அவனுடைய குற்றங்களை மன்னிக்கவும் முன்பே அவர்கள் ஒப்புக்கொண்டுள்ளனர். திராசிபூலஸ் ஆல்சிபியாடிசை சாமாசுக்கு அழைத்து வந்தான். அங்கே அவன் படைத்தலைவனாகத் தேர்ந்தெடுக்கப்பட்டான். அவர்கள் நம்பியிருந்த நேச உறவு உடன்படிக்கை பெர்சியாவுடன் நிறைவேறவில்லை. திஸாபெர்னஸ் ஓர் தவறு செய்தான். அவன் ஆஸ்பெண்டஸ் என்ற இடத்தில் நிறுத்தி வைத்திருந்த போயினீசியன் போர்க் கப்பல்களை அத்தீனியர்களைத் தாக்குவதற்குப் பயன்படுத்தவில்லை. அத்துடன் அவனுக்கும் பெலப்போனீசியர்களுக்குமுள்ள உறவு நாளுக்குநாள் மோசமாகிக் கொண்டுவந்தது. அவன் ஆஸ்பெண்டசுக்குச் சென்றான். ஆனால் அவன் அங்கே தன்னுடைய கப்பற் படையைக் கொண்டுவரவில்லை. அவன் அங்கு சென்றதற்குக் காரணம் பலவாறு கூறப்பட்டது. தூசிடைடிஸ் அப் பிரயாணத்தைப் பற்றி, தான் நம்பியதைக் கூறுகின்றான். 'ஹெலனியப் படைகளைக் களைப்படையச் செய்து அவைகளை நடுநிலைமை வகிக்கும்படிச் செய்வதே அவனுடைய விருப்பமாயிற்று. அவர்கள் இருவரையும் கடைசியில் அழித்து விடுவதே அவனுடைய நோக்கமாக இருந்தது. ஆஸ்பெண்டசுக்குச் சென்றதனால் காலத்தை வீணாக்கினானே

தவிர ஏதாவது ஒரு கட்சியுடன் சேர்ந்து, அதை அவன் பலப்படுத்த வில்லை. அவன் அந்த யுத்தத்தை முடிக்க விரும்பியிருந்தால் எவ்வித ஐயப்பாடுமில்லாமல் செய்து முடித்திருப்பான்.' அத்தீனியர்கள் நேரே ஏதென்சுக்குப் போய் அங்கு நானூற்றுவர்களின் ஆட்சியை அழித்து விடுவதெனத் தீர்மானித்தார்கள். அத்தீனியர்கள் செய்த முடிவிலிருந்து அவர்கள் பெலப்போனீசியக் கப்பற்படையை வெறுத் தார்கள். பெலப்போனீசியப் படைத்தலைவன் அஸ்ட்டியோச்சஸ் (Astyochus) திறமையற்றவன். அவன் அந்த ஆண்டு கோடையை வீணுகக் கழித்தான். சாமோசை விட்டுச் செல்வது மதியற்றவர் களின் செயலாகும். அவர்களுடைய செயலினல் அவர்கள் ஐயோனி யாவையும், ஹெல்லஸ்பாண்டையும் இழக்க நேர்ந்திருக்கும். ஆல்சிபி யாடிஸ் அப்படிப்பட்ட நெருக்கடி நேராவண்ணம் தடுத்துவிட்டான். ஏதென்சிலிருந்த சிறுகுழுக் கட்சியுடன் பேச்சு வார்த்தை நடந்தது. அவன் ஐயாயிரவர்களின் சபையை ஆதரித்தான். நானூற்றுவர் சபையை அவன் நிராகரித்தான்.

சாமோஸில் நிகழ்ந்த பேச்சு வார்த்தை நானூற்றுவர்களின் சபையின் பெரும்பான்மையோரால் வரவேற்கப்பட்டது. தங்களுடன் சேர்ந்த அங்கத்தினர்கள் மீதுள்ள அதிருப்தியும் தங்களுடைய சொந்த நிலைமையும் அவர்கள் வரவேற்பதற்குக் காரணமாக இருந்தன. அரசியல் முறை தன்னுடைய மக்களாட்சியை நீக்கி, அவ்விடத்தில் அமர்ந்த சிறுகுழு ஆட்சியின் தன்மை தலைநீட்ட ஆரம்பித்தது. 'சிறு குழுவினரின் அரசாங்கம் ஏற்பட்டதும் அதைத் தோற்றுவித்தவர் களே சமத்துவத்தை மறந்து ஒவ்வொருவனும் தன்னை மற்ற வர்களைவிட உயர்வானவனென்று எண்ண ஆரம்பித்து விட்டான். அதைப்போலவே குடியாட்சிக் கொள்கையாளர் தேர்வில் தாம் தோற்றுவிட்டால் ஏமாற்றமடைவதில்லை. ஏனெனில் தாம் தமக் குச் சமமானவர்களுடன் போட்டியிடவில்லை என்று அமைதி பெறுவர்' என தூசிடைடிஸ் அந்த இடைக்கால அரசாங்கத்தைப் பற்றிக் கூறு கிருன். நானூற்றுவர் ஆட்சி ஒரு இடைக்கால, தற்காலிக அரசாங்க மாகவே ஏற்படுத்தப்பட்டது. மக்களாட்சிக் கொள்கை மிகுந்தும் சிறுகுழு ஆட்சிக்கொள்கை குறைந்தும் உருவான ஒரு புதிய ஆட்சியே நிரந்தரமாக அமைக்கப்படவிருந்தது. தெராமேனஸ் அத்தகைய ஆட்சியை அமைக்க ஆர்வம் கொண்டிருந்தான். நானூற்றுவர் சபையில் பிளவு ஏற்பட்டது. ஆன்டிபோன், பிரநிச்சஸ் என்பவர்கள் தலைமையில் தீவிர சிறுகுழுக் கட்சினர் ஒரு சார்பிலும், தெராமானஸ் தலைமையில் சீர்திருத்த மிதவாதிகள் மற்ருெரு சார்பிலும் இருந்தனர். மிதவாதிகளுக்கு சாமோஸிலுள்ள படையின் ஆதரவு இருந்தது. மற்றக் கட்சியினர் பகைநாடாகிய ஸ்ப்பார்ட்டாவுடன் சமாதான உடன்படிக்கை செய்துகொள்ள ஸ்ப்பார்ட்டாவுக்கு அரசியல் தூது,

வர்களை அனுப்பினார்கள். அதே சமயத்தில் பைரஸ் துறைமுகத்தின் வடக்குப் பகுதியிலிருந்த எட்டியோனே (Eetionea) என்ற ஒரு மேட்டு நிலத்தைக் கோட்டைகளால் பலப்படுத்தினார்கள். லாசிடோமோனி யர்களைத் துறைமுகத்தினுள்ளே அனுமதிப்பது, அல்லது சாமோசி லுள்ள கப்பற்படையை வெளியேற்றுவது என்ற நோக்கத்தோடு அவ்வாறு செய்தார்கள்.

ஸ்ப்பார்ட்டாவுக்குச் சென்ற அரசியல் தூதுவர்கள் சமாதான உடன்படிக்கை ஏற்படும் நற்செய்தியைக் கொண்டு வரவில்லை. அதற் குப் பதிலாக பெலப்போனீசியர்களின் போர்க் கலங்கள் மட்டும் வந் தன. அதைக் கண்ணுற்ற மிதவாதக் கொள்கையினர் ஆத்திரமடைந் தார்கள். பிரனிச்சஸ் (Phrynichus) கடைத்தெருவில் அயல்நாட்டுக் கொலையாளியால் கொல்லப்பட்டான். எட்டியினே கோட்டையைக் கட்டிக் கொண்டு இருந்த வீரர்கள் தொரமேனஸ் என்பவனுடைய தூண்டுதலால் சிறுகுழு ஆட்சியினருக்கு எதிராகக் கிளம்பினார்கள். துறைமுகப் பகுதியில் ஓர் கலவரம் நடந்தது. கோட்டைச் சுவர்கள் இடித்துத் தள்ளப்பட்டன. 'ஐயாயிரவர் சபை ஆட்சியை ஆதரித்த வர்கள் எல்லோரும் நானூற்றுவர்களின் சபையைப் புறக்கணித்து. உதவ முன் வாருங்கள்' என்று கூறிக்கொண்டே கோட்டையை இடித்தார்கள். அந்தக் கூட்டத்தில் இருப்பவன் ஒருவனுக்காவது ஐயாயிரவர் சபை இருக்கிறதா அல்லது இல்லையா என்பது தெரியா திருந்தது. கோட்டை இடித்துத் தள்ளப்பட்ட பிறகு முனுச்சியாக் (Munychia) குன்றின் சரிவிலிருந்த ஒரு மண்டபத்தில் ஓர் சபை கூடி யது. எதிர்ப்பினால் ஏற்பட்ட கலகம் நின்றுவிட்டது. நானூற்றுவர்களு டன் சமாதானப் பேச்சுவார்த்தை தொடங்கியது. ஐயாயிரவர்களின் அரசியல் அமைப்பைப் பற்றிப் பேசுவதற்காக டயோனிசஸ் என்ற மண்டபத்தில் கூடுவதென ஒரு நாள் குறிப்பிடப்பட்டது. சபை கூட வேண்டிய தினத்தில் பெலப்பனீசியக் கடற்படை சாலமாமிஸின் (Salamis) கடற்கரையில் உலவுவதாகச் செய்திவந்தது. அதைக் கேட்ட அத்தீனியர்கள் பயந்தனர். துறைமுகத்துக்கு விரைந்தோடி னார்கள். பிரேயஸ் துறைமுகத்தைப் பொறுத்தமட்டில் பயத்தோடு நின்றுவிட்டது. ஆனால் மிகவும் நெருக்கடியான ஆபத்து தூரத்தில் காணப்பட்டது. யுபேயாவுக்கு ஆபத்து நேர்ந்தது. அத்தீனியர்கள் யுபேயாவைச் சார்ந்திருந்தார்கள். இப்போது அட்டிக்காவும் அவர்கள் கையை விட்டுப் போய்விட்டது. எஜாண்டரிதாஸ் என்பவன் தலைமை யில் நாற்பத்திரண்டு லாசிடீமோனியப் போர்க்கப்பல்கள் சூனியத் தைச் சுற்றிக்கொண்டு ஒரோபசுக்கு (Oropus) வந்துவிட்டன. அத்தீனியர்கள் முப்பத்தாறு கப்பல்களைத் திமோக்காரஸ் தலைமையில் அனுப்பினார்கள். எரிட்டீறியா பகுதியில் கடற்சண்டை ஏற்பட்டு அத்தீனியர்கள் தோற்கடிக்கப்பட்டார்கள். அத்தீனியர்களின் குடி

யேற்ற நாடாகிய வடக்கிலுள்ள ஓரியஸ் நகரத்தைத் தவிர, யுபோயாவிலுள்ள எல்லா நாடுகளும் கலகம் செய்தன.

பாரசீகப் போருக்குப் பின் ஒருபோதும் இத்தகைய நெருக்கடி ஏற்பட்டதில்லே. ஏதென்சிடம் நெருக்கடிக்கான காப்புக் கப்பற் படையில்லே. சாமாசில் இருந்தவர்கள் விரோத மனப்பான்மை யுடையவர்கள். படை உதவிக்காக இதுவரையில் பொருள்கள் அனுப்பிய யுபேயாவை ஏதென்ஸ் இழந்தது. சண்டைகளும் கலகங்களும் நகரத்தில் தாண்டவமாடின. இச் சந்தர்ப்பத்தில் லாசிடோமோனியர்கள் தரைமூலமாகவும் கடல் மூலமாகவும் ஏதென்சைத் தாக்கினுர்கள். அகிஸ் டெசேலேயிலிருந்தும், எகிஸான்டாரிடாஸ், பிரேயத்திலுமிருந்தும் தாக்கினுல் அத் தாக்குதலே அத்தீனியர்களால் எதிர்த்திருக்க முடியாது. ' தூசிடைடிஸ் சொல்வதைப்போல் லாசிடாமோனியர்கள் வசதியான பகைவர்கள். அவர்கள் அந்த நல்ல வாய்ப்பை இழந்தார்கள். எரிட்டிரியா யுத்தம் சிறு குழு ஆட்சிக்குச் சாவு மணி அடித்து விட்டது. பினிக்ஸ் (Pnyx) என்ற இடத்தில் ஓர் சபை கூடியது. அவர்கள் போர்க்களம் புகும் வீரர்களேக் கொண்ட சபையிடம் அரசாங்கம் ஒப்படைக்கப்பட வேண்டுமென்று தீர்மானிக்கப்பட்டது. அச் சபை ஐயாயிரவர் சபையென அழைக்கப்பட்டது. அரசியல் அமைப்பைத் தயாரிக்க சட்ட வல்லுனர்கள் நியமிக்கப்பட்டார்கள். அரசாங்க அலுவலர்களுக்கு அளிக்கப்பட்டு வந்த ஊதியம் தள்ளப்பட்டது. சிறுகுழுக் கட்சியினரில் பலர் தப்பித்து டெசேலேவுக்கு ஓடி விட்டார்கள். அவர்களில் ஒருவன் பொயிஷியாவின் எல்லேயிலிருந்த ஓனேயி (Oenoe) என்ற கோட்டையைப் பகைவனுக்கு காட்டிக் கொடுத்து விட்டான். ஆண்டிபோனும், ஆர்ச்சிபோட்டேலெமசும் கொல்லப்பட்டார்கள்.

அந்தப் புதிய அரசியல் திட்டம் தோன்றுவதற்குக் காரணமாக இருந்தவன் தெராமென்ஸ். இந்த அரசியல் அமைப்பை ஆரம்பத்திலிருந்து கொண்டுவர அவன் விரும்பினுன். சட்டம் தொகுப்பதற்காக நியமிக்கப்பட்ட நூறு (100) ஆணையாளர்களும் அவனுடைய திட்டத்தை அடிப்படையாக்க் கொண்டு, இந்த அரசியல் அமைப்பைத் தயாரித்தார்கள். மக்களாட்சியின் கொள்கையும் சிறுகுழு ஆட்சியின் கொள்கையும் வியக்கத்தக்க முறையில் இணைக்கப்பட்டிருக்கின்றன. அச் சூழ்நிலேக்கும் அப்படிப்பட்ட அரசியல் அமைப்பு தேவையாயிருந்தது. அதை கோத்தூர்னஸ் (Cothurnus)—அதாவது எக் காலுக்கும் பொருந்தும் பெரிய செருப்பு—என்று அவனேச் சிறு குழுக் கட்சியினர் ஏளனமாக அழைத்தார்கள்.

அதே சமயத்தில் சோம்பேறியான ஸ்ப்பார்ட்டக் கடற்படைத் தலேவன் அஸ்டியோச்சஸ் (Astyochus) பதவியிலிருந்து நீக்கப்பட்டான்.

அவன் வகித்த பதவிக்கு மின்டாரஸ் (Mindarus) நியமிக்கப்பட்டான் பர்னபாசஸால் வரவழைக்கப்பட்ட பெலப்பேனீசியக் கப்பற்படை ஹெல்லல்பான்ட்டுக்குச் (Hullespont) சென்றது. திராசிபூலஸ்(Thrasybulus), திராசிலஸ் (Thrasyllus) என்ற இரு அத்தீனியக் கடற்படைத் தலைவர்கள் பர்னபாஸைத் துரத்திச் சென்று ஜலசந்திகளில் அவனுடைய கடற்படையைத் தாக்கினுர்கள். அத்தீனியர்கள் தங்கள் வசமுள்ள எழுபத்தாறு போர்க் கப்பல்களை செர்சோனேசே (Chersonese) கடற்கரை முழுவதும் நிறுத்தி வைத்தார்கள். பெலப்பேனீசியர்களிடம் அத்தீனியர்களைக் காட்டிலும் பத்துப் போர்க்கலங்கள் அதிகமாக இருந்தன. அத்தீனியர்களுடைய போர்க் கப்பல்களைச் சூழ்ந்து கொள்ளவும், அவைகள் ஜலசந்தியை விட்டு வெளியேருமல் தடுக்கவும், அவர்களுடைய படையின் நடுப்பகுதியை நெருக்கவும், பெலப்பேனீசியர்கள் திட்டமிட்டிருந்தார்கள். அதையறிந்த அத்தீனியர்கள் பகைவர்களுடைய நோக்கத்தை முறியடிக்கத் தங்கள் போர்க்கப்பல்களை வலப் பக்கத்தில் நீண்ட தூரம் வரையில் நிறுத்தி வைத்தார்கள். இவ்வித ஏற்பாட்டினுல் படை வரிசைகள் பலவீனமடைந்தன. பெலப்பேனீசியர்கள் அத்தீனியர்களுடைய நடுப்பகுதியைத் தோற்கடித்தார்கள். ஆனுல் வலப்பக்கத்திலிருந்த படைக்குத் தலைமை தாங்கிய திராசிபூலஸ் பெலப்பனேசியப் படையில் ஏற்பட்ட குழப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு அவர்களைக் கடுமையாகத் தாக்கினுன். அத்தீனியர்களின் இடப்பகுதி சினேசிம்மா (Cynossema) முனையில் தாக்கப்பட்டது. பலத்தபோராட்டத்தின் பிறகு பெலப்பேனீசியர்கள் பின் வாங்கினுர்கள். இந்த வெற்றி அத்தீனியர்களுக்கு ஊக்கமளித்தது. அதன் விளைவாக, ஏதென்சுக்கு எதிராகக் கலகம் செய்த சிசிகஸ் (Cyzicus) மறுபடியும் கைப்பற்றப்பட்டது. மிண்டார்ஸ் யுபேயாவைச் சூழ்ந்துள்ள கடற்படையிலிருந்த போர்க்கப்பல்களை வரவழைக்க நேர்ந்தது. ஆனுல் ஓர் சிறு பகுதியே அவனிடம் வந்து சேர்ந்தது. மற்றக் கப்பல்கள் அத்தோஸ் மலையில் (Mt. Athos) ஏற்பட்ட புயலால் அழிக்கப்பட்டன. அபிடஸ் (Abydus) என்ற இடத்தில் அத்தீனியர்களுக்குக் கிடைத்த வெற்றியோடு அந்த ஆண்டின் யுத்த நடவடிக்கைகள் முடிந்து விட்டன. திசாபர்னஸ், ஏதென்சுக்குக் கிடைத்த வெற்றியைக் கண்டு அதிருப்தி அடைந்திருந்தான். குளிர்காலத்தில் ஆல்சிபியாடிஸ் அவனைச் சந்தித்தபோது அவன் ஆல்சிபியாடிசைக் கைது செய்தான். ஆனுல் ஆல்சிபியாடிஸ் தப்பித்து வெளியேறினுன்.

திஸ்ஸாபர்னேஸை விட பர்னபாசஸ் நம்பிக்கைக்குரிய சிறந்த மனிதனுக விளங்கினுன். அவன் பெலப்பேனீசியர்களுக்கு உதவி செய்வதில் மிக ஊக்கம் காட்டினுன். மிண்டாரஸ் தளிர்விடு காலத்தில் சிசிகஸ் (Cyzicus) என்ற இடத்தை முற்றுகை யிட்டான். அத

னுடைய கவர்னர் அவனுக்கும் படைஉதவி அளித்தான். அத்தீனியர்களுடைய எண்பத்தாறு போர்க் கப்பல்கள் யாரும் அறியா வண்ணம் வெற்றிகரமாக ஹெல்லஸ்ப்பாண்டைக் கடந்து சென்றன. அக் கடற்படை மூன்று பிரிவுகளாகப் பிரிந்திருந்தன. அவைகளுக்கு ஆல்சிபியாடிஸ், தெராமெனஸ், திராசிபூலஸ் என்ற மூவரும் தலைமை வகித்தார்கள். அவர்கள் மிண்டாரஸை (Mindarus) திடீரென்று தாக்கினார்கள். யுத்தம் தரையிலும் கடலிலும் நடந்தது. வெற்றி அத்தீனியர்களுக்குக் கிடைத்தது. மிண்டாரஸ் கொல்லப்பட்டான். முத்துடுப்புகளுடைய அறுபது கப்பல்கள் நீரில் மூழ்கடிக்கப்பட்டன. இது பெலப்பனீசியர்களுடைய கப்பற்படையை அழித்து விட்டது. இத் தோல்வியை ஸ்ப்பார்ட்டன் நாட்டு நிர்வாகத் தலைவர்களுக்கு அறிவிப்பதற்காகச் சென்றுகொண்டிருந்த ஒரு சிறிய கப்பலை அத்தீனியர்கள் வழிமறித்து விட்டார்கள். 'எங்களுடைய வெற்றி முடிந்தது. மிண்டாரஸ் கொல்லப்பட்டான், உங்கள் போர் வீரர்கள் பட்டினியால் வாடிக்கொண்டிருக்கின்றார்கள். என்ன செய்வதென்று எங்களுக்குத் தெரியவில்லை.' சமாதானத்துக்கான சம உரிமை அடிப்படையில் ஸ்ப்பார்ட்டா ஓர் திட்டத்தைத் தயாரித்தது. ஏதென்சு அச் சமாதானத் திட்டத்தை ஏற்றுக்கொள்வது பொருத்தமுடையது. அதன் மூலமாக டெசாலேயிலுள்ள காவற்படைத் தாக்குதலிலிருந்து விடுதலை யடையலாம். கடற்படையிலுள்ளவர்கள் சமாதானத்தை விரும்பவில்லை. ஏனென்றால் ஏஜியான், ஆசிய மைனர் நாடுகளின் மீது ஏதென்சுக்குள்ள ஆதிக்கம் அவ் வுடன்படிக்கையால் திருப்பித் தரப்பட வில்லை. சிசிகஸ் வெற்றி இழந்துபோன இடங்களை பர்னபாசினுடைய பணவுதவி யின்றியே மறுபடியும் பெறுவதற்கான உறுதியை அளித்ததாகத் தோன்றிற்று. ஸ்ப்பார்ட்டர்களுடைய சமாதானத் திட்டம் நிராகரிக்கப்பட்டது.

சிசிகஸ் வெற்றி அத்தீனியன் நாட்டின் ஐக்கியத்தை மறுபடியும் நிலைநாட்ட வழிகாட்டிற்று. ஓராண்டுக்காலம் ஏதென்சிலும், சாமோஸிலும் அதன் ஒற்றுமை பிளவுண்டு இருந்தது. ஏதென்சிலுள்ள மக்களாட்சியைச் சார்ந்த கடற்படை வெற்றியால், அக் கட்சி, தெராமெனசுடைய அரசியல் அமைப்பைத் தூக்கி எறிந்துவிட்டு, மக்களாட்சியை நிலைநாட்ட முடிந்தது. அவர்கள் நிலைநாட்டிய மக்களாட்சிக்கு வரம்பில்லா ஓட்டுரிமை அளிக்கப்பட்டது. கிளீஸ்தனீஸ் ஏற்படுத்திய ஐந்நூற்றுவர் குழு மறுபடியும் புதுப்பிக்கப்பட்டது. இந்த இயக்கத்தின் தலைவர்களில் முதன்மையானவன் யாழ் செய்கின்றவனாகிய கிளியோபோன் (Cleophon) ஆவான். அவன் ஹைபர்போலஸ், கிளியான் ஆகியோருடைய 'வகுப்பைச் சேர்ந்தவன். அவன் அவர்களைப் போலவே ஆற்றல் மிக்கவன். கிளியானைப் போலவே இவனும் ஆழ்ந்த பேரரசுக் கொள்கையுடையவன். இப்பொழுது மக்களிடையே

எழுந்துள்ள போர் உணர்ச்சியை வெளியிடுபவனுக இருந்தான். நிதி நிர்வாகத் திறமையில் இவன் கிளியானுக்கு இணைத்தவனல்லன். அரசாங்க அலுவலர்களுக்குச் சம்பளம் கொடுக்கும் முறை மறுபடியும் புதுப்பிக்கப்பட்டது. அது அத்தீனிய மக்களுக்கு இன்றியமையாதது. கிளியோப்போன் சம்பளம் வழங்குவதில் ஓர் புதிய முறையைக் கொண்டு வந்தான். அதனுல் அவன் பெயர் என்றும் அழியாதிருந்தது. அந்த முறை 'இரு ஒபோல் வழங்கல்' என்றழைக்கப்பட்டது. (ஒபோல் என்பது பழங்கால கிரேக்கர்களின் டிராக்மா என்ற நாணயத்தின் ஆறில் ஒரு பகுதி). இம் முறையை கிளியோபோன் ஏற்படுத்திய போதிலும் எந்த நோக்கத்துக்காக யாருக்குக் கொடுக்கப்பட்டதென்பதைத் தெரிவிக்கத்தக்க ஏடுகள் இல்லை. சிலர் அது நீதிபதிகளுக்குக் கொடுக்கப்பட்ட ஊதியம் என்றும், முன்பே கொடுக்கப்பட்டுவந்த மூன்று ஒபல்கள் இப்பொழுது இரண்டு ஒபல்களாகக் குறைக்கப்பட்டதென்றும் சொல்லுகின்றுர்கள். இது உண்மையான செய்தியன்று. இரண்டு ஒபல் சம்பளம் ஒரு புதிய முறை என்ற பொருளில் குறிப்பிடப்பட்டுள்ளது. இது அந்த யுத்தத்தின் காரணமாகப் பாதிக்கப்பட்ட ஏழை மக்களுக்குத் தரப்பட்ட சம்பளம் என்று சொல்வதே பொருத்தமுடைத்து. அட்டிக்காவில் பகைவர் இருந்தபடியால் ஏழைகளின் வாழ்க்கை வருமானம் குறைந்தது அல்லது தடை செய்யப்பட்டது. வயல்களிலும், கப்பல்களிலும், நீதிமன்றங்களிலும் பணியாற்றும் மக்கள் அரசாங்கப் பணத்திலிருந்து, சம்பளம் பெருதவர்களாகையால், நாளொன்றுக்கு இரண்டு ஒபல்கள் அளிக்கப்பட்டது என்று நாம் ஊகித்துக் கொள்ளலாம். வறுமையினுல் வாடும் குடிமக்களுக்கு அரசாங்க வேலை கொடுத்துப் பாதுகாப்பது பெரிக்கிளீஸ் கொள்கைகளில் ஒன்ருகும். கிளியோபோன் அதைப் பின்பற்றி நடைமுறைக்குக் கொண்டு வந்தான். இவனுடைய செல்வாக்கினுல் அக்ரபோலிசில் புதிதாகக் கட்ட ஆரம்பித்த அத்தீனுக் கோயிலின் வேலை பூர்த்தியடைந்தது. அத் தேவதையினுடைய குன்றில் பழமையான ஆலயங்கள் இருந்தவிடத்தில் இந்தப் புதிய ஆலயம், பாறையின் வடக்குப் பகுதியில் கட்டப்பட்டது. அந்த ஆலயத்தில் எரிக்தியஸ் (Erechtheus) என்ற தேவதையும் ஆத்தேனே தெய்வத்துடன் இருந்து வந்தது. எரிக்தியசுக்குப் பழைய கோயிலில் இடமளித்ததைப் போலவே புதிய கோயிலிலும் இடமளிக்கப்பட்டது. இரு தெய்வங்களும் ஒன்ருக இருக்குமாறு அக் கோயிலை அமைத்தார்கள். எரிக்தியஸ் பார்தினு தெய்வத்தைவிட இளையவன். பழைய ஆலயத்தில் பார்த்தினுவின் மரச் சிலை ஒன்று இருந்தது. தெய்வங்களுடைய இரு அடையாளச் சின்னங்களாகிய ஒலிவ மரமும், உப்பு நீரூற்றும் அங்கிருந்தன. இப்போது அத்தேனுவுக்கு இரு ஆலயங்களுண்டு. பழைய இடத்திலிருந்த இந்தப் புதிய கட்டிடம் அதைக் கட்டி முடித்த ஈராண்டிற்குப் பின் எதிர்பாராத முறையில் தீக்கிரையானது. அது மறுபடியும் சில காலம்

வரையில் புதுப்பிக்கப்படவில்லை. கிளியோப்போனின் காலத்தை நினைவூட்டும் வகையில் அக் கோயிலின் பகுதிகள் தோற்றமளிக்கின்றன. மிகவும் தேவையான அக் காலத்தில், அந்த அயோனிக் ஆலயம், கன்னியர் செல்லும் பாதையுடன், முதல்முறையாகக் கட்டப்பட்டது என்பதை நாம் மறக்க முடியாது.

ஸ்ப்பார்ட்டன் சமாதான உடன்படிக்கை மறுக்கப்பட்ட பின்னர் யுத்த நடவடிக்கைகள் புரோப்போன்டீசிலும் அதன் சுற்றுப்புறங்களிலும் மேற்கொள்ளப்பட்டன. அத்தீனியர்கள், திறமையும் உழைப்புமிக்க ஆல்சிபியாடிசின் தலைமையின்கீழ் இழந்துபோன பழைய இடங்களை மறுபடியும் அடைந்தார்கள். தாசோஸ், செலிம்பிரியா ஆகிய இடங்கள் மீட்கப்பட்டன. கிரிசோபோலிசில் ஓர் சுங்கச் சாவடி ஏற்படுத்தப்பட்டது. யூக்சைனீ (Euxine) பிரதேசங்களிலிருந்து வரும் கப்பல்கள், அவைகள் கொண்டுவந்த சரக்குகளின் விலையில் பத்தில் ஒரு பங்கைச் சுங்கவரியாகச் செலுத்தவேண்டும். பின்னர் சால்சிடோன் (Chalcedon) முற்றுகையிடப்பட்டு, அது திறைசெலுத்தும் நாடாக்கப்பட்டது. கடைசியாக பைசான்சியத்தைப் (Byzantium) பட்டினிபோட்டுப் பணியவைத்தார்கள். இவ்விதமாக பாஸ்போரஸைத் (Bosphorus) தங்களுடைய முழு ஆதிக்கத்தின்கீழ்க் கொண்டுவந்தார்கள். அதேசமயத்தில் பர்னபாசஸ் அத்தீனிய அரசியல் தூதுவனை சூசாவுக்கு (Susa) பேரரசனிடம் அனுப்பிச் சமாதானம் செய்துகொள்வதற்கான ஏற்பாடுகளைச் செய்தான். ஏதென்சின் பக்கத்திலிருந்த நிசாயா, மேகாரியர்களுக்குக் கொடுக்கப்பட்டது. பைலாசை ஸ்ப்பார்ட்டா மறுபடியும் அடைந்தது.

பெலப்பேனீசிய யுத்தத்தின் கடைசி எட்டாண்டுகளில், ஸ்ப்பார்ட்டா பாரசீகத்தோடு சேர்ந்திருந்தது குறிப்பிடத்தக்கது. பாரசீகத்தின் ஒத்துழைப்பின் தன்மையை வைத்து, இவ்வாண்டுகளை மூன்று பிரிவுகளாகப் பிரிக்கலாம். முதல் ஈராண்டுகளில் அதிபதி திஸ்சாப்பர்னஸ், பெலப்பேனீசியர்களுடைய யுத்த நடவடிக்கைகளுக்கு ஆதரவளித்துவந்தான். இந்த சமயத்தில் ஏதென்ஸ் அயோனியாவை இழக்க நேரிட்டது. அதிபதி பர்னபாசஸ் திசாபர்னசுக்குப் பதிலாக பெலப்பேனீசியர்களுடன் சேர்ந்து ஹெல்லஸ்பாண்டில் யுத்தத்தை நடத்திவந்தான். இந்தக் காலத்தில் ஏதென்ஸ் இழந்த பகுதிகளில் பலவற்றைத் திரும்பப்பெற்றது. பேரரசனுன டாரியசின் கவனம் மேற்கத்திய நாடுகளின்மீது சென்றது. தன்னுடைய இரு அதிபதிகளும், பொறுமையின் காரணமாக யுத்தத்ததைச் சரியாக நடத்தவில்லை என்று உணர்ந்து தன்னுடைய இளையமகன் சைரஸ் என்பவனை திசாபர்னசுக்குப் பதிலாக சார்டிஸ், கப்பதோசியா, பிரிஜியா, லீதியா ஆகிய இடங்களுக்கு அதிபனுக்கிவைத்தான்.

திசாபர்னேஸ் காரியாவுக்கு (Caria) மட்டும்அதிபதியானுன். சைரசின் வருகை யுத்தத்தில், ஒரு புதிய திருப்பத்தைத் தோற்றுவித்தது.

சாலாமிஸ்ஸின் வெற்றி வீரர்களுக்கு எதிராக ஹெல்லாசுடைய பகைவன் பிளெட்டியாவின் வெற்றி வீரர்களுடன் சேர்ந்திருப்பது ஓர் புதுமையாக இருந்தது. கிரேக்க உணர்ச்சியுடையவர்களுக்கு இவ்வொற்றுமை ஓர் அதிர்ச்சியை அளித்தது. ஒலிம்பியாவில் கூடும் கூட்டத்தில் இவ்வொற்றுமைக்கு எதிர்ப்பு ஏற்படுமென எதிர்பார்க் கப்பட்டது. ஹெல்லாசின் மேற்கில் கடலுக்கப்பாலுள்ள மக்கள், ஹெல்லாசின் கிழக்குப்பகுதி அரசியல் நிலேயை அமைதிக் கண் கொண்டுப் பார்த்திருக்கவேண்டும். மேற்கே ஹெல்லாசிலிருந்த லியோன்டையின் கார்ஜியாஸ் என்பவன் கிரேக்க நாடுகள் பாரசீக உதவியை நாடுவதை எதிர்த்தான். அதைவிடப் பாரசீகத்துடன் போர் தொடுங்கள் என்று அவன் சொன்ஞன்.

## 9. அத்தீனியப் பேரரசின் வீழ்ச்சி

சைரஸ் இளவரசன் மிக்க ஆர்வமுடைய இளேஞன். அவன் பெலப்பேனீசிய மாலுமிகளுக்குச் சம்பளம் அளித்துவந்தான். அவ னுக்குத் திறமைவாய்ந்த ஸ்ப்பார்ட்டன் கடற்படைத் தலேவன் லேசாண்டர் துணேயாக இருந்திராவிடில் அவன் சம்பளமாகக் கொடுத்த பணம் பயனற்றுப்போயிருக்கும். லேசாண்டர் மிக்க திறமையும், பேரரசையுமுடையவன். அந்த நீண்ட யுத்தத்தை விரைவில் ஓர் முடிவுக்குக் கொண்டுவருவதென லேசாண்டர் தீர்மானித்துவிட்டான். அவனுடைய மாலுமிகள் அவனிடம் அளவுகடந்த நம்பிக்கை வைத் திருந்தார்கள். லஞ்சம் கொடுத்து லேசாண்டரை யாரும் வசப்படுத்த முடியாது என்பதை அறிந்திருந்த சைரஸ், அவன்மீது மிக்க அபி மானம் வைத்திருந்தான். தன்னுடைய எண்ணத்தை நிறைவேற்ற அவன் தயக்கமடைவதில்லே. அரசியல் தந்திரம் மிகுந்திருந்ததைப் போலவே, படைத்திறமையும் பெற்றிருந்தான்.

சைரசும், லேசாண்டரும் சமரசப் பேச்சுக்கள் நடத்திக் கொண் டிருந்தபோது, ஆல்சிப்பியாடிஸ் நாடு கடத்தப்பட்ட எட்டாண்டு களேக் கழித்து விட்டுத் தன் சொந்த நகரத்துக்குத் திரும்பி வந்தான். அவனுக்குப் போர்க்குழு உறுப்பினர் பதவி அளிக்கப்பட்டது. ஏதென் சின் மக்கள் மிக்க ஆர்வத்தோடு அவனே வரவேற்ருர்கள். அவன் தன் நாட்டுக்குச் செய்த துரோகங்களேக் காலப்போக்கில் மக்கள் மறந்த னர். அவன் சமீபத்தில் ஹெலஸ்பாண்டைன் நகரங்களே மீட்ப

தற்கு அவன் செய்த சேவை, ஏதென்ஸ் மக்கள் அவன் மீது வைத்திருந்த வெறுப்பை மறக்கச் செய்தது, எதிர் காலத்தில் நன்மை கிடைக்குமென்ற நம்பிக்கையில்தான், இறந்த காலத்தில் அவன் செய்த தீமைகளை மக்கள் மறந்து விட்டனர். அவனுடைய படைத் தலைமையின் மீது அவர்களுக்கு அளவு கடந்த நம்பிக்கை ஏற்பட்டது. அவனுக்கிருந்த அரசியல் அறிவைக் கொண்டு பாரசிகத்துடன் நேசவுறவு கொள்ள முடியுமென மக்கள் நம்பினார்கள். எலுசியச் சடங்குகளை அவன் மாசுபடுத்தியதாகக் கூறப்பட்ட குற்றச் சாட்டிலிருந்து, அவன் விடுவிக்கப்பட்டான். போரைத் தொடர்ந்து நடத்தச் சட்ட பூர்வமான அதிகாரங்கள் அவனுக்கு அளிக்கப்பட்டன. எலூசியக் குருமார்களுடன் சமாதானம் செய்து கொள்வதற்கான வாய்ப்புகள் அவனுக்குக் கிடைத்தன. டெசேலேயாவை ஸ்ப்பார்ட்டர் கைப்பற்றியதிலிருந்து ஏதென்சிலிருந்து புனிதப்பாதை வழியே எலூசியன் ஆலயத்துக்கு ஆண்டுதோறும் போகும் யாத்திரை நிறுத்தி வைக்கப்பட்டிருந்தது. கடல் மூலமாக ஏதென்சிலிருந்து எலூசியாவுக்கு ஆண்டுதோறும் மக்கள் சென்று வந்தனர்.

ஆல்சிபியாடிஸ் ஆட்சியின் கீழ் படையின் உதவி கொண்டு பழக்கமான வழியில் எலூசியாவுக்கு ஊர்வலம் மீண்டும் செல்ல ஆரம்பித்து விட்டது. அவனுக்குப் போதுமான துணிவு இருந்திருந்தால், மக்களின் ஆதரவைப் பயன்படுத்தி ஏதென்சில் கொடுங்கோலாட்சியை அவன் நிலை நாட்டியிருக்க முடியும். போர் வெற்றியாலும் அரசியல் தந்திரத்தாலும் மக்கள் மதிப்பைப் பெறுவது வரையிலும் அத்தகைய எண்ணம் ஆபத்தானது என்று அவன் கருதியிருக்கலாம். அச் சந்தர்ப்பம் அவன் கையிலிருந்து நழுவிவிட்டது. அது மறுபடியும் அவனுக்குக் கிட்டாது. ஓர் சிறிய நிகழ்ச்சி ஏதென்ஸ் மக்களுடைய உணர்ச்சி முழுவதையும் மாற்றிவிட்டது அத்தீனியக் கடற்படை எபேசுவை (Ephesus) காவல் புரிந்து கொண்டு, நோசன் (Notion) என்னுமிடத்தில் தங்கியிருந்தது. லைசாண்டர் அக் கப்பற் படையைத் தோற்கடித்துப் பதினைந்து கப்பல்களைக் கைப்பற்றினான். ஆல்சிபியாடிஸ் அச் சமயம் அப் போரில் ஈடுபடாவிட்டாலும், அத் தோல்விக்கு அவன் பொறுப்பாளியானான். அதனால் ஏதென்சில் அவனுக்கிருந்த மதிப்பு மறைந்து விட்டது. புதிய படைத்தலைவர்கள் உடனே நியமிக்கப்பட்டார்கள். ஆல்சிபியாடிஸ் ஹெல்லஸ்ப்பாண்டில் முன்பே கருதி வைத்திருந்த ஒரு மாளிகையில் தஞ்சம் புகுந்தான். கடற்படைத் தலைமைப் பதவி கோனோன் (Conon) என்பவனுக்கு அளிக்கப்பட்டது.

இதற்கு முன் இல்லாத பலம்வாய்ந்த நூற்று நாற்பது போர்க் கப்பல்களைக் குளிர் காலத்தில் பெலப்பனேசியர்கள் கட்டி முடித்

தார்கள். லைசாண்டர் பதவியிலிருந்து நீக்கப்பட்டான். அவனுக்குப் பதிலாக கல்லிக்கிராடிடாஸ் என்பவன் கடற்படைத் தலைவனுக்கப் பட்டான். சியாசிலிருந்த டெல்பினுன் கோட்டை, லெஸ்பாசிலிருந்த மித்தீம்னு பட்டினம் ஆகியவை கைப்பற்றப்பட்டன. கோனேனிடம் எழுபது கப்பல்கள் இருந்தன. மைட்டிலீன் என்னுமிடத்தில் நடந்த சண்டையில் கொனேன் தோல்வியுற்ருன். அதனுல் முப்பது கப்பல் களை இழந்தான். எஞ்சிய கப்பல்கள் மைத்திலேனே துறைமுகத்தில் வழிமறிக்கப்பட்டுக் கிடந்தன. நிலைமை மிக நெருக்கடியாய் இருந்தது. ஏதென்ஸ் அந்த நெருக்கடியைச் சமாளிக்க விரும்பவில்லை அக்ர போலிஸ் ஆலயங்களில் காணிக்கையாகப் பெறப்பட்ட தங்கமும் வெள்ளியும் உருக்கப்பட்டு, புதிய போர்க் கருவிகளின் விலைக்காகக் கொடுக்கப்பட்டன. யுத்த நெருக்கடியில் சேவை புரிகின்ற அடிமை களுக்கும் விடுதலை அளிக்கப்படுமென்றும், அன்னியர்களுக்கு மக்க ளுரிமை வழங்கப்படுமென்றும் உறுதியளிக்கப்பட்டது. அம் மாதக் கடைசியில் ஏதென்சும் அதனுடைய நேசவுறவு நாடுகளும் மைதிலே யின் விடுதலைக்காக நூற்றைம்பது கப்பல்களை அனுப்பின. கல்லிக் கிராடிடாஸ் (Callicratidas) தன்னிடமுள்ள நூற்றைம்பது கப்பல் களில், 50 கப்பல்களை முற்றுகையைத் தொடர்ந்து நடத்த விட்டுவிட்டு, மீதியுள்ள கப்பல்களுடன் அத்தீனியர்களை எதிர்க்கச் சென்ருன். லெஸ்பாசுக்குத் தெற்கிலுள்ள ஆர்கினூசா (Arginusae) என்ற சிறிய தீவுகளுக்குச் சமீபத்தில் ஓர் பெரிய கடற்போர் நடந்தது. அத்தீனி யர்கள் வென்றனர். எழுபது ஸ்ப்பார்ட்டன் போர்க் கப்பல்கள் மூழ் கடிக்கப்பட்டோ பிடிக்கப்பட்டோ இருக்கவேண்டும். கல்லிகிராடி டாஸ் கொல்லப்பட்டான். வெற்றியடைந்தவர்கள் உடைந்து போனகப்பலிலுள்ளவர்களை காப்பாற்ற முடியாமல், மைட்டிலேயி னேக்குச் சென்று எஞ்சியுள்ள எதிரிப் போர்க் கப்பல்களை அழித்துவிட வும் முடியாமல் எதிர்பாராத வடகாற்று வீசியது.

வெற்றி எவ்விதத் தியாகமுமின்றிக் கிட்டவில்லை. இருபத்தைந்து கப்பல்கள் அவைகளின் மாலுமிகளுடன் இழக்கப்பட்டன. மாலுமிகள் பலர் கப்பல்கள் மூழ்கிய இடத்தில் மிதந்துகொண்டிருந்தார்கள். அதி காரிகள் தக்க நடவடிக்கை எடுத்திருந்தால் இறந்தவர் காப்பாற்றப் பட்டிருக்கலாமென நம்பப்பட்டது. அவர்களுடைய மரணத்திற்குப் 'படைத் தளபதிகள் காரணமெனக் குற்றம் சுமத்தப்பட்டார்கள். இக் குற்றச்சாட்டு அரசியல்வாதிகளால் கவனிக்கப்பட்டது. படைத் தலை வர்கள் தற்காலிகமாகப் பதவியிலிருந்து நீக்கப்பட்டார்கள். தங்கள் நடத்தைக்காகப் போதிய விளக்கம் கூறும்படிக் கேட்டுக்கொள்ளப் பட்டனர். படைத் தலைவர்கள் தம் கீழுள்ள அதிகாரிகள் மீது குற்றத் தைச் சுமத்தினர். அவ்வதிகாரிகளுள் தேராமினஸும் ஒருவன். இறந்துபோன வீரர்களைக் காப்பாற்ற முடியாமல், காற்று பலமாக

வீசுவது வரையிலும், படைத் தலைவர்கள், தங்களுக்கு ஆணையிடவில்லை என்று அவ்வதிகாரிகள், தங்களைக் காத்துக்கொள்ளக் குற்றத்தைப் படைத் தலைவர்கள் மீது சுமத்தினார்கள். நாம் இதில் எத்தகைய முடிவுக்கும் வரமுடியாது. சந்தர்ப்பத்தைப் பொறுத்தே தீர்ப்பளிக்க முடியும். ஆனால் சந்தர்ப்பம் எவ்வாறு என்பது நமக்குத் தெரியாது. மாலுமிகளைக் காப்பாற்ற முடியாத அளவில் பெரும் புயல் வீசியதா என்பது நமக்குத் தெரியாது. மாலுமிகளைப்பற்றிய அசட்டுத்தனம் எப்படியோ நேர்ந்திருக்கவேண்டுமென அத்தீனியர்கள் நினைத்தது சரியான முடிவாகும். அவர்களின் இயற்கையான கோப உணர்ச்சி அவர்களைத் தவறுதல் செய்யும்படித் தூண்டியது. அதனால் எழுந்த பிரச்சினையை ஏதென்ஸ் சபையே ஆராய்ந்தது; அப் பிரச்சினை சாதாரண நீதிமன்றங்களுக்கு விடப்படவில்லை. சபை இருமுறை கூடிற்று. ஆர்கினூசே (Arginusae) என்ற இடத்தில் சபை கூடி, அப்போது அங்கிருந்த எட்டுப் படைத் தலைவர்களும் குற்றவாளிகளெனத் திர்ப்பளிக்கப்பட்டு அவர்களுக்கு மரணதண்டனையும் அளிக்கப்பட்டது. அவர்களுடைய சொத்துகள் பறிமுதல் செய்யப்பட்டன. திராசிலஸ், பெரிய அரசியல் அறிஞராகிய பெரிக்கிளீஸின் மகன் பெரிக்கிளீஸ் உள்பட ஆறு பேர்கள் மரண தண்டனைக்குள்ளானார்கள். இருவர் விடுவிக்கப்பட்டனர். அந்த வழக்கு எத்தகையதாக இருந்தபோதிலும், அவர்களுக்கு அளித்த தண்டனை மிகவும் கொடியது.

அத்துடன் சபை, ஒவ்வொருவரையும் தனித்தனியே விசாரித்துத் தீர்ப்பளிக்கும் அந் நகர வழக்கத்தை மீறி, அறுவருக்கும் சேர்த்துத் தீர்ப்பு வழங்கி விட்டது. முறைப்படி அவர்களின் நடவடிக்கை சட்ட விரோதமானதல்ல. படைத் தலைவர்களுக்கு ஆதாரவாக இருந்தவர்கள், கிரேப்பே பாரநோமோன் (Graphe Paranomon) என்ற சட்ட விதியை உபயோகிக்கத் துணிவற்றிருந்தார்கள். பழி தீர்க்கும் ஆர்வங்கொண்ட மக்கள் கூட்டத்தை எதிர்க்க முடியவில்லை. விசாரணை நடத்தியவர்களில் தத்துவஞானியான சாக்கரடீசும் ஒருவன். அவன் படைத் தலைவர்களுக்கு அளித்த தண்டனையை எதிர்த்துப் பேசினான். மக்களாட்சி, சிறு குழுவினரின் ஆட்சி, கோன் ஆட்சி ஆகிய எல்லா அரசியல் அமைப்புகளிலும், அபாயங்களும், அநீதிகளும் இருக்கின்றன. திடீரென்று ஏற்பட்ட வெறியுணர்ச்சியினால், எவ்வித பொறுப்புக்கும் கட்டுப்படாமல் ஒரு முதன்மையான சபை இழைக்கும் அநீதியை இச் சம்பவம் விளக்கிக் காட்டுகிறது. இழைத்த அநீதிக்காக வருந்துகிறது.

ஆர்கினூசேயில் அடைந்த வெற்றி, அத்தீனியர்களுக்குக் கிழக்கு ஏஜியானில் ஆதிக்கம் அளித்தது. இதன் காரணமாக சிசிகஸ்ஸில்

அடைந்த வெற்றிக்கு நான்கு ஆண்டுகளுக்குப் பின் சமாதான உடன் படிக்கைக்காகப் பேசிய சமரசப் பேச்சு வார்த்தைகளை லாசிடமோனி யர்கள் இப்போது பேச ஆரம்பித்தார்கள். அதன் பிரகாரம் டெசாலேயிலிருந்து பெலப்போனீசியர்கள் வெளியேற வேண்டுமென் பது ஒன்றைத்தவிர, அவரவர்கள் இருந்த நிலையில் அப்படியே இருப் பது என்பது முடிவாயிற்று. கிளியோப்பன் அதற்கிணங்கவில்லை; ஸ்ப்பார்ட்டர்களுக்கு அவர்களுடைய கடற்படையை மாற்றி யமைப்பதைத் தவிர வேறு ஒன்றும் அளிக்கப்படவில்லை. எட்டியோ னிகஸ் (Eteonicus) மீதமுள்ள போர்க்கலங்களை ஒன்று சேர்த்துக் கொண்டு சீயாசை நோக்கிச் சென்றான். ஆனால் மாலுமிகளுக்குக் கொடுக்க வேண்டிய பணத்தை அவனால் கொடுக்க முடியவில்லை. அம் மாலுமிகள் சீயாசின் குடியானவர்களுடைய வயல்களில் சாதாரணக் கூலியாட்களைப் போல் உழைத்து வயிற்றை வளர்க்க நேர்ந்தது. குளிர் காலத்தில் அவர்களுக்கு வேலை கிடைக்கவில்லை, பட்டினியினால் அவர்கள் வாடினார்கள். சியாஸ் பட்டினத்தைக் கொள்ளையடிக்கச் சதித்திட்டம் வகுத்தார்கள். ஒருவரையொருவர் புரிந்துகொள்வதற் காக அவர்கள் வைக்கோலை அடையாளமாக அணிந்தார்கள். எட்டி யோனிகஸ் அவர்களுடைய சதித்திட்டத்தை அறிந்து கொண்டான். நகரில் வைக்கோல் அடையாளமணிந்த பலரைக்கண்டு குழப்பமடைந் தான். அவன் ஆயுதமணிந்த பதினைந்து வீரர்களுடன் நகரத் தெருக் களில் நடந்தான். கண் நோயினால் அவதியுற்ற ஒருவன், வைத்தியர் வீட்டிலிருந்து வெளிவந்து தெருவில் நடந்துகொண்டிருந்தான். அவன் வைக்கோல் அடையாளம் அணிந்திருந்ததைக் கண்டு, அவனைக் கொல்லுமாறு ஆணையிட்டான். கண் நோய்க்காரன் கொலையுண் டான். தெருவில் ஓர் கூட்டம் கூடிற்று. அவன் ஏன் கொல்லப்பட் டான் எனக் கூட்டத்தார் எட்டியோனிகசைக் கேட்டார்கள். அவன் வைக்கோல் அடையாளம் அணிந்திருந்தபடியால் கொல்லப்பட் டான், எனப் பதில் கூறினான். அவன் சொன்னது எங்கும் பரவிற்று. வைக்கோல் அடையாளம் தரித்திருந்தவர்களுக்குப் பயம் ஏற்பட்டு அந்த அடையாளத்தை எடுத்து வீசி எறிந்தார்கள். சீயர்கள் ஒன்று கூடி மாலுமிகளுக்குத் தேவையான ஒரு மாதச் சம்பளம் கொடுத்து விடச் சம்மதித்தார்கள். மாலுமிகள் கப்பலேறிச் சென்றனர்.

பாரசீகம் பணம் கொடுக்க மறுத்துவிட்டதை இந்தச் சம்பவம் காட்டுகிறது. பாரசீகத்தின் ஒத்துழைப்பைப் பெறவேண்டுமானா லும் பெலப்போனீசியாவின் உரிமைகள் மீட்கப்பட வேண்டுமானா லும் கப்பற்படைத் தலைமை லைசாண்டரிடம் ஒப்புவிக்கப்பட வேண்டு மென்று கருதப்பட்டது. ஆனால் ஸ்ப்பார்ட்டாவில் ஒருவன் இரண் டாம் முறை படைத் தலைமை தாங்கக்கூடாதென்ற சட்டமொன் றிருந்தது. லைசாண்டர் படைத் தலைவனுக்குக் காரியதரிசியாக நியமிக்

கப்பட்டான். ஆனால் உண்மையில் படைத்தலைமை அவனிடமே தரப் பட்டது. பெயரளவில் மட்டும் படைத்தலைவனிருந்தான். லைசாண் டர் சைரசை சார்டியாவில் சந்தித்தான். தன்னுடைய பழைய நட்பை அவனுக்கு எடுத்துக்காட்டித் தேவையான படை உதவியை அவனிடமிருந்து பெற்றுக்கொண்டான். பல நகரங்களின் வலுவுள்ள கட்சிகளின் ஆதரவின் மூலம், ஓர் கப்பற்படையை உருவாக்கினான், ஓர் எதிர்பாராத சம்பவம், லைசாண்டரின் அதிகாரத்தையும் மதிப்பையும் பெருக்கிற்று. டேரியஸ் அரசன் நோய்வாய்ப்படடான். அவன் பக்கத்திலிருப்பதற்காக சைரஸ் வரவழைக்கப்பட்டான். அவன் புறப்படுவதற்கு முன் லைசாண்டரைத் தனக்குப் பதிலாக அதி பதியாக நியமித்தான். அந்த மாகாணத்தின் நிர்வாகமும் அதன் வருமானமும் லைசாண்டரிடம் ஒப்படைக்கப்பட்டன. அசாதாரண ஸ்ப்பார்ட்டனாகிய லைசாண்டர் பண வலையில் சிக்கமாட்டான் என்று சைரஸ் நம்பினான். தனது அதிகாரத்தை ஓர் பாரசீகச் சீமானிடம் ஒப்படைக்க சைரஸ் தயங்கினான்.

இவ்விதமான நல்வாய்ப்புகளுடன் லைசாண்டர் விரைவில் தன் னுடைய திறமையைக் காட்டிவிட்டான். கோனோன் தலைமையில் அத் தீனியப் படை எபேசஸைத் தாக்கியது. லைசாண்டரின் படை அத்தீ னியர்களுடன் போரில் இறங்கவில்லை. பகைவனுடைய படை கலைந்த வுடனே, அவன் கப்பற் படையுடன் முதலில் ரோடீஸுக்குச் சென் றான். அங்கிருந்து அவன் ஏஜியானைக் கடந்து அட்டிக்காவின் கடற் கரையை அடைந்தான். அங்கு அவன் அஜிஸ் மன்னனைச் சந்தித்து அவ னுடன் கலந்தாலோசித்தான். அவன் ஏஜியான் கடலைக் கடந்து ஹெல் லஸ் பாண்டுக்குச் சென்றான். உடனே லாம்புஸாக்கஸை முற்றுகை யிட்டான். நூற்று எண்பது அத்தீனியக் கப்பல்கள் ஒன்றாகச் சேர்ந்து லைசாண்டரைத் துரத்திச் சென்றன. அவை செஸ்ட்டாசுக்குப் போய்ச் சேருமுன், லாம்புஸாக்கஸ் கைப்பற்றப்பட்டது. அங்கு அவனுடைய கப்பற்படை போருக்கு அழைக்கப்பட்டது. அத்தீனியக் கப்பற்படை கடற்கரையோரமாகப் பிரயாணம் செய்து 'வெள்ளாட்டின் ஆறுகள்' என்றழைக்கப்பட்ட அகோஸ்போட்டாமி (Aegospotami) என்ற இடத் திற்கு வந்து சேர்ந்தது. அது துறைமுகமில்லாத கடற்கரை. அது அத் தீனியர்களுக்கு அனுகூலமானதாக இல்லை. அவர்கள் தங்களுக்கு வேண் டிய உணவுப்பொருள்கள் முதலியவற்றை இரண்டு மைல் தூரத்தி லுள்ள செஸ்ட்டாசிலிருந்து பெற்றுக் கொள்ளவேண்டும். ஆனால் பெலப்போனீசியக் கடற்படைக்கு ஓர் சிறந்த துறைமுகமும் அத னருகிலுள்ள பட்டினமும் சாதகமாக இருந்தன. அத்தீனியர் ஜலசந்தி யைக் கடந்ததும் பெலப்போனீசியக் கடற்படை போருக்காக அணி வகுத்து நின்றதைக் கண்டார்கள். பலமுள்ள ஓர் கப்பற்படையை அவ் விடத்தில் தாக்குவது அத்தீனியர்களுக்கு அறிவீனமாகத் தோன்றி

யது. அவர்கள் அகோஸ்பொட்டாமிக்குத் திரும்பிவர நேர்ந்தது. நான்கு நாட்கள் வரையில் இவ்வாறு நிகழ்ந்து கொண்டிருந்தது. ஒவ்வொரு நாளும் அத்தீனியர்களின் போர்க்கலங்கள் ஜலசந்தியைக் கடந்து லைசாண்டரைச் சண்டைக்கிழுத்தன; ஒவ்வொரு நாளும் அதன் முயற்சி பலனற்றதாகிற்று. அருகிலுள்ள கோட்டையிலிருந்த ஆல்சிபியாடிஸ் அத்தீனியர்களுக்கிருந்த அபாய நிலையை எடுத்துக் காட்டி, அவர்களை செஸ்ட்டாசுக்குச் செல்லுமாறு அறிவுறுத்தினன். அத்தீனியப் படைத் தலைவர்கள் அவனுடைய சிறந்த அறிவுரையைப் புறக்கணித்து அவனையும் இழிவுபடுத்தினர்கள். வழக்கமாக உலாவிய பின் அத்தீனியப் போர்க் கப்பல்கள் லம்பாஸ்கஸுக்கு வந்து சேர்ந்தன. கடற்கரை வீரர்கள் கரையிலிறங்கிச் சுற்றுவது வழக்கம். ஐந்தாம் நாள் லைசாண்டர் ஓர் சாரணக் கப்பலை அங்கு அனுப்பினன். அத்தீனியப் படையினர் உணவருந்த கரைக்குச் சென்றிருந்தனர். அத்தருணத்தில் சாரணக் கப்பல் ஒரு கேடயத்தை அடையாளமாகக் காட்டியது. அவ் வடையாளத்தைக் கண்டதும், பெலப்போனீசியப் போர்க் கப்பல்கள் அத்தீனியக் கடற்படையைத் தாக்கின. பெலப்போனீசிய 200 போர்க் கப்பல்களும் அத்தீனியர்களைத் தாக்கிய போது அவர்களுடைய கடற்படை தற்காப்பின்றி இருந்ததைக் கண்டார்கள். ஓர் சண்டையில்லாமலே வெற்றி கிடைத்தது. போருக்கு ஆயத்தமாயிருந்த இருபது கப்பல்கள் தப்பிச் சென்றன. மற்ற 160 கப்பல்களும் பிடிபட்டன. படைத் தலைவர்களின் துரோகச் செயல் தோல்விக்குக் காரணமென அத்தீனியர்கள் நம்பினர்கள். அடிமான்டஸ் (Adeimantus) என்ற படைத் தலைவன் கைதியாக்கப்பட்டு, பிறகு விடுவிக்கப் பட்டான். அவனுக்கு லைசாண்டர் லஞ்சம் கொடுத்ததாக நம்பப்படுகின்றது. கைதியாக்கப்பட்ட 3000 அல்லது 4000 அத்தீனியர்கள் கொலையுண்டார்கள். படைத் தலைவர்களின் தலைவனை கோனேன் தப்பித்துக் கொண்டான். கிரேக்கப் போர்க் கப்பல்கள் போர் செய்ய முற்படும்போது அவைகளின் பாய்மரங்கள் முதலில் அகற்றப்படுவது வழக்கம். பெலப்போனீசியக் கப்பல்களின் பாய்மரங்களைக் கப்பலிலிருந்து கழற்றி, லைசாண்டர் அவைகளை லாம்புசாக்ஸசுக்கு அண்மையில் அபார்நிஸ் முனை (Cape Abarnis) என்ற இடத்தில் வைத்திருந்தான். கோனேன் நேரே அவ்விடம் சென்று பாய்களைத் திருடிக்கொண்டு சென்றுன். ஆகையினுல் லைசாண்டருடைய கப்பல்கள் அத்தீனியக் கப்பல்களைத் துரத்திப் பிடிக்க முடியவில்லை. பொறுப்பு வாய்ந்த ஓர் படைத் தலைவன் அத்தகைய துக்கச் செய்தியை நேரில் தாய்நாட்டிற்கு எடுத்துச் செல்வது அறிவீனமாகும். அவன் தப்பிச் சென்ற 20 கப்பல்களில், பன்னிரண்டு கப்பல்களை ஏதென்சுக்கு அனுப்பிவிட்டு மீதமுள்ள எட்டுக் கப்பல்களுடன் சைப்பரசிலுள்ள சாலமிஸ் மன்னனுன எவகோரசுக்குப் பாதுகாப்பளிக்கச் சென்றுன். அகஸ்பொட்டாமில் அடைந்த வெற்றியைப்

போல் ஓடும்போதும் குறைந்த நஷ்டத்தில் சிறந்த ஓர் வெற்றி இது வரையில் கிட்டியதில்லே.

அன்றிரவு இத் துயரச் செய்தி பிரயசுக்கு வந்து சேர்ந்தது. 'அன்றிரவு ஒரு மனிதன்கூடத் தூங்கவில்லே.' மீலாஸ், கியோன் போன்ற பட்டினங்களுக்கு அவர்கள் இழைத்த கொடுமைகளே நினைவு கூர்ந்தனர். தங்களுடைய நகரத்திற்கு அப்படிப்பட்ட கொடுமை இழைக்கப்படுமோ வென்றஞ்சினுர்கள். ஒரு பலத்த வீச்சினுல் தங்களுடைய கடலாதிக்கம் அழிக்கப்பட்டதென்பதை அத்தீனியர்களால் எண்ணிப்பார்க்க முடியவில்லே. தங்களுடைய நகரம் முற்றுகையிடப்படுவதைத் தடுக்கத் தயாராகவேண்டும். லேசாண்டரின் கொள்கையால் ஏதென்ஸ் முற்றுகை ஒத்திவைக்கப்பட்டது. ஏதென்ஸைத் தாக்குவதற்குப்பதிலாகப் பட்டினி போட்டுப் பணியவைக்க வேண்டுமென்பதே அவன் நோக்கம். அதற்காகத் தீவுகளிலிருந்த அத்தீனியக் குடியேற்ற நாட்டு மக்களே ஏதென்சில் போய்க் குடியேறும்படி விரட்டியடித்தான். ஏதென்சில் உணவுப் பற்ருக்குறை ஏற்பட்டது. குடியேற்ற நாட்டு மக்களின் வருகையால் உணவு பற்ருமை அதிகரித்தது. ஹெலஸ்பாண்டு, தெரேஸ் போன்ற இடங்களில் அத்தீனியர்களின் ஆதிக்கத்தை அழித்துவிட்டு, அவ்விடங்களில் ஆதிக்கத்தை நிலேநாட்டினுன். அதன்பின் 150 போர்க் கப்பல்களுடன் சென்று எஜினுவைத் தாக்கிக் கைப்பற்றினுன். பிரேயஸ் துறைமுகம் முற்றுகையிடப்பட்டது. அதே சமயத்தில் ஸ்ப்பார்ட்டா மன்னனுகிய பாசானியாஸ் அட்டிக்காவுக்குச் சென்று அஜிஸின் படைகளுடன் நகரத்தின் மேற்குப் பகுதியிலிருந்த அக்காடெமே (Academe) என்ற இடத்தில் தங்கினுர்கள், அவர்கள் தாக்குதல் நடத்தமுடியாத அளவுக்குச் சுவர்கள் பலமுள்ளவைகளாக இருந்தன. குளிர்காலம் நெருங்கிவிட்டது. பௌசானியன் அவ்விடத்தை விட்டுப் படையுடன் பின்வாங்கிச் சென்ருன். கடற்படைமட்டும் பிரேயசுக்குப் பக்கத்தில் நிறுத்தி வைக்கப்பட்டிருந்தது. உணவு நெருக்கடியின் காரணமாகச் சமாதான உடன்படிக்கை செய்துகொள்ள அத்தீனியர்கள் விரும்பினுர்கள். அவர்கள் பேரரசைக் கைவிட்டு லாசிடோமோனியர்களின் நேசஉறவு நாடாக இருப்பதற்கும் இணங்கினுர்கள். அரசியல் தூதுவர்கள் செல்லசியாவிலிருந்து திருப்பி ஏதென்சுக்கு அனுப்பப்பட்டார்கள். பத்துக் காத தூரம் வரையில் நகரத்தின் நீண்ட மதிற்சுவர் இடித்துத் தள்ளப்பட்டாலன்றி சமாதான உடன்படிக்கை ஏற்படாதென்று ஸ்ப்பார்ட்டர்கள் அறிவித்தார்கள். அந்த நிபந்தனையை எதிர்ப்பது மடமை என்ருலும் அத்தீனியர்கள் நீண்ட சுவரை இடித்துத்தள்ள இசையவில்லே. ஸ்ப்பார்ட்டர்கள் இருமுறை கண்ணியமான சமாதான உடன்படிக்கையை நாடினுர்கள். சிசிகஸ் யுத்தத்திற்குப் பிறகும், ஆர்கினூசே யுத்தத்திற்குப் பிறகும் இருமுறை ஸ்ப்பார்ட்டர் சமா

தானத்தை நாடி ஏதென்சிடம் வந்தார்கள். ஏதென்ஸ் அப்படிப் பட்ட உடன்படிக்கைகளைத் தடுப்பதற்கு கிளியோப்பன் காரணமாக இருந்தான். இப்போது பொருத்தமற்ற சமாதான உடன்படிக் கையை ஸ்ப்பார்ட்டா கொண்டுவந்தது. எவரும் அத்தகைய நிபந் தனைக்கு இணங்கக்கூடாதென்று கட்டளை இடப்பட்டது. அத்தகைய பிடிவாதத்தால் நிபந்தனையின்றிச் சரணடையும்படி ஏதென்சுக்குக் கட்டளையிட ஸ்ப்பார்ட்டா முன்வந்தது. லைசாண்டரை நேரில் கண்டு சாதகமான ஓர் உடன்படிக்கை உருவாகும்படிச் செய்வது அல்லது சமாதானத்திற்கான வாய்ப்புகளை அறிந்துவிடுவது என்ற நோக்கங்களுடன் தெரேமேனஸ் லைசாண்டரை நேரில் சந்திக்கப் புறப்பட்டான். காலதாமதத்தால் அத்தீனியர்கள் உண்மை நிலையை உணருவார்கள் என்ற நோக்கத்துடன் அவன் அங்கிருந்து புறப்பட் டான். அவன் மூன்றுமாதகாலம் லைசாண்டருடன் தங்கி இருந்தான். அவன் ஏதென்சுக்குத் திரும்பி வந்தபோது அங்கே அவர்கள் சமா தான உடன்படிக்கையின் வாசகங்கள் எத் தன்மையுடையவைகளாக இருந்தபோதிலும் அதற்கு இணங்கும் நிலையிலிருப்பதை உணர்ந் தான். பஞ்சத்தினால் மக்கள் இறந்துகொண்டிருந்தார்கள். கிளி யோப்பனுக்கு எதிர்ப்பு ஏற்பட்டு அதன் காரணமாக அவன் கொலை யுண்டான். போர்ப்படையில் சேவை செய்ய மறுக்கின்றான் என்ற குற்றத்திற்காக அவனுக்குக் கொலைத் தீர்ப்பு அளிக்கப்பட்டது. தெரே மேனஸ் முழு அதிகாரத்துடன் ஸ்ப்பார்ட்டாவுக்கு அனுப் பப்பட்டான். இந்தச் சந்தர்ப்பத்தில் நாடு கடத்தப்பட்ட தூசி டைடிசை மீண்டும் அழைத்துக்கொள்ள ஆணையிடப்பட்டது. படைத் தலைமைப் பதவியைத் திறம்பட நிருவகிக்கவில்லை என்ற குற்றத்திற் காக அவன் நாடுகடத்தப்பட்டவன். இப்போது முடியும் தறுவாயி லிருந்த பெலப்போனிசிய யுத்தத்தின் வரலாறு என்றும் அழியாதிருக் கும்படிச் செய்த வரலாற்று ஆசிரியன் அவன்

வீழ்ச்சியுற்ற பகைவனை நடத்தும் முறையை ஆராய, பெலப் போனீசிய நேசநாடுகளடங்கிய சபை கூட்டப்பட்டது. அத்தீனியர்க ளுக்கு இரக்கம் காட்டக்கூடாது என்பதும், ஏதென்ஸ் நகரம் அழிக்கப் படவேண்டியது என்பதும், அந் நகரவாசிகள் அடிமைகளாக விற்கப் பட வேண்டுமென்பதும் ஆங்கு நிலவிய பொதுவான அபிப்பிராயம். கொரிந்தியா, தீப்சு என்ற இரு நாடுகளுக்கும் ஏதென்சினிடமிருந்த வெறுப்பைப் போல் ஸ்ப்பார்ட்டாவுக்கு இல்லை. ஏதென்ஸ் ஸ்ப்பார்ட் டாவின் பக்கத்திலுள்ள நாடுமல்ல; இரு நாடுகளுக்கிடையே வாணிகப் போட்டியுமில்லை. ஏதென்சு அழிக்கப்படுவதால் ஸ்ப்பார்ட்டாவுக்கு அரசியல் நன்மைகள் விளையலாம். ஸ்ப்பார்ட்டாவிடம் குறைபாடுக ளிருந்த போதிலும், தகுந்த சந்தர்ப்பங்களில் தன்னுடைய சிறந்த கருத்துகளை வெளிப்படுத்தி வந்தது. தன்னுடைய கூட்டமைப்பில்

சேர்ந்துள்ள நாடுகளின் கொடுமையான கருத்துகளுக்கிணங்க மறுத்துவிட்டது. பாரசிகப் படைஎடுப்பின்போது, சிறந்த பணி யாற்றிய, ஒரு கிரேக்க நாட்டின் நகரத்தைத் துடைத்தெறியும்படிச் செய்ய அதற்கு விருப்பமில்லாதிருந்தது. இரண்டு தலைமுறைகளுக்கு முன்னே பாரசிகப் போரில் பணியாற்றிய ஏதென்ஸை இப்போது மறந்துவிட முடியாது. ஏதென்ஸ் தன்னுடைய கடந்தகால சேவைக் காக அழிவினின்றும் காக்கப்பட்டது. உடன்படிக்கையின் வாசகங் களாவன: நீண்ட சுவர்களும், பிரயஸ் துறைமுகக் கோட்டைகளும் இடித்துத் தள்ளப்பட வேண்டும்; ஏதென்ஸ் தனக்கு அயல் நாடுகளி லிருந்த ஆதிக்கத்தை இழந்தது; அட்டிகா, சாலாமிஸ் ஆகிய இரு பிர தேசங்களோடு ஏதென்ஸ் சுதந்திரமாக வாழவேண்டும்; அதனுடைய கப்பல்கள் யாவும் பறிமுதல் செய்யப்பட்டன; நாடுகடத்தப்பட்ட வர்கள் ஏதென்சுக்குத் திரும்பி வருவதற்கு அனுமதிக்கப்பட்டனர். ஏதென்ஸ் ஸ்ப்பார்ட்டாவின் நேச உறவு நாடுகளின் கூட்டமைப்பில் சேர்த்துக்கொள்ளப்பட்டது; ஏதென்ஸ் ஸ்ப்பார்ட்டாவின் தலை மையை ஏற்றுக் கொண்டது. உடன்படிக்கை ஒப்புக்கொள்ளப்பட்ட தும் லைசாண்டர் பிரயஸ் துறைமுகத்திற்குச் சென்றான். அதனுடைய அரண்களை ஸ்ப்பார்ட்டர்களும் அத்தீனியர்களும் சேர்ந்து இடித் துத் தள்ளினார்கள். மகிழ்ச்சி நிரம்பிய நேச நாடுகள் கிரேக்கர்களு டைய சுதந்திரம் உதயமாவதாகக் கருதினார்கள். ஏதென்ஸ் பன் னிரண்டு முத்துடுப்புக் கப்பல்களை வைத்திருக்கலாமென அனுமதிக் கப்பட்டது. அரண்கள் அழித்துத் தள்ளப்பட்ட பிறகு, லைசாண்டர் சாமோசைக் கைப்பற்றப் புறப்பட்டுவிட்டான்.

ஏதென்சுக்கு ஏற்பட்ட இந்த இழிவுக்காக அத்தீனியர்கள் எல் லோரும் மனமுடைந்து துயரப்படவில்லை. அந் நகரத்திற்கு ஏற் பட்ட இடர்ப்பாட்டினால், நாடுகடத்தப்பட்டவர்கள், நாட்டுக்குத் திரும்பும் உரிமைபெற்று, மகிழ்ச்சியடைந்தார்கள். சிறு குழு ஆட்சிக் கட்சியின் தீவிரவாதிகளும் நாட்டில் அன்னியரின் நுழைவுக்காக மகிழ்ச்சியடைந்தார்கள். இதனால் குடியாட்சி முறை ஒழிக்கப்பட்டு சிசிலியன் படையெடுப்பிற்குப்பின் கொண்டுவந்த அரசியல் அமைப்பு மறுபடியும் கொண்டுவரப்படும் என எதிர்பார்த்தார்கள். தெரா மீனஸ் தன்னுடைய கொள்கையை நிலைநாட்டுவதற்கான சந்தர்ப் பத்தை எதிர்பார்த்துக்கொண்டிருந்தான். நாடுகடத்தப்படும் தண் டனையிலிருந்து விடுதலையடைந்து ஏதென்சுக்குத் திரும்பி வந்தவர் களில், கள்ளஸ்கரசின் மகன் கிரிட்டியாஸ் முதன்மையானவன். அவன் வழக்கறிஞனான சோலோன் குடும்பத்தைச் சேர்ந்தவன். அவன் பல துறைகளில் தேர்ந்தவன். கார்ஜியாஸ் என்பவனின் மாணவன்; சாக்கரட்டீஸின் நண்பன்; அவன் ஓர் நாவன்மைபெற்ற வன், கவிஞன், ஓர் தத்துவஞானி.

ஏதென்சிலிருந்த சிறு குழு ஆட்சியினரும், நாடுகடத்தப்பட்டு மீண்டவர்களும் ஒன்று சேர்ந்து ஓர் பொதுத் திட்டத்தை உருவாக்கினார்கள். குடியாட்சிக் கட்சித் தலைவர்கள் சிறையிலடைக்கப்பட்டனர். இப் புதிய அரசியல் திட்டத்தைச் செயலாக்குவதற்கு லைசாண்டரின் உதவியை நாடினார்கள். லைசாண்டரின் முன்னிலையில் முப்பதுபேர் கொண்ட ஓர் குழு நியமிக்கப்பட்டது. இந்த நிறுவனத்தின் அங்கத்தினர்கள் சட்டங்களைத் தொகுக்கவும் அதுவரை அரசாங்கத்தின் பொதுப்பணியைக் கவனிக்கவும் நியமிக்கப்பட்டனர். ஆலிகார்க்குகள் கிராப்பே பேரனேமன் சட்டத்தை ரத்துசெய்வதற்கான முயற்சி எடுத்துக்கொள்ளவில்லை. ஏனென்றால் இவர்களுடைய செல்வாக்கு மிகையான செல்வாக்கானபடியால் அவர்கள் விரும்பியதைத் தடை செய்யக்கூடிய சட்டம் ஒன்றுமில்லை. அந்த முப்பதின்மரின் நிறுவனத்தில் கிரிட்டியாஸ், தெராமேனஸ், டிராகோன்டைடிஸ் ஆகியோர் அங்கத்தினர்களாக இருந்தார்கள்.

அத்தீனிய ஆதிக்கத்தின் அழிவு சிறு குழு ஆட்சிக் கட்சியினருக்கு அனுகூலமாக இருந்தது. மக்களாட்சியை ஒழிப்பதற்காக அவர்கள் ஏதென்ஸ் நகரத்தைப் பகைவனிடம் காட்டிக் கொடுத்து விடுவதென நெடுநாளாகத் திட்டமிட்டிருந்ததாக ஒரு ஐயப்பாடு உண்டு. படைத் தலைவர்களைக் குற்றம் சாட்டி, கொலை செய்ததில் தெராமீனஸ் எடுத்துக்கொண்ட முயற்சியும் சிறு குழு ஆட்சியினரிடம் அரசாங்கத்தை ஒப்படைப்பதற்காக அவன் சமாதான உடன்படிக்கையை ஏற்படுத்துவதற்காக எடுத்துக்கொண்ட நடவடிக்கையும், எகோஸ்பொட்டாமியில் விளைந்த கொடுமைகளும் நமது ஐயப்பாட்டை வலியுறுத்துகின்றன. ஸ்ப்பார்ட்டாவுடன் சமாதானம் ஏற்பட நானூற்றுவர் சபை எடுத்துக்கொண்ட முயற்சியும், சமாதான உடன்படிக்கையில் ஏதென்சுக்குத் தரப்பட்ட எளிய நிபந்தனைகளும் சிறு குழுக் கட்சியினர்களின் சூழ்ச்சிகளை வெளிப்படுத்துகின்றன. ஒன்றுமட்டும் உண்மையெனத் தோன்றுகிறது. சிறு குழுக் கட்சி சமாதானம் ஏற்படுவதைக் குறிக்கோளாகக் கொண்டிருந்தது. கிளியோப்போன் சமாதானம் ஏற்படுவதைத் தடுத்தது (அவன் எதிர்ப்பை முறையற்றதென நாம் கண்டோம்) அக் கட்சியின்மீது அவன் கொண்டிருந்த சந்தேகத்தைக் காட்டுகின்றது. அத்தீனியர்கள் எகோஸ்போடாமில் தங்களுடைய கடற்படையை நிறுத்தி வைத்ததும், பலிபீடத்துக்கு இழுத்துச் செல்லப்பட்ட ஆட்டைப்போல் பகைவன் கையில் தங்களை ஒப்படைத்ததும், அவர்களுடைய விசித்திரமான நம்பமுடியாத மடைமையைக் காட்டுகின்றது. அடிமாண்டசுக்குக் காண்பித்த கருணை அச் சம்பவத்தைப் பற்றிய நம்முடைய ஐயப்பாட்டை உறுதிப்படுத்துகிறது. படைத்தலைவன் கோனேனுக்குத் தெரியாமல் அந்த துரோகச் செயல் எப்படி நடந்திருக்கக் கூடுமென்பதைப் புரிந்துகொள்வது மிகவும்

கடினமாக இருக்கிறது. இருந்தபோதிலும் அவனைப் பொறுத்த மட்டில் எவ்வித ஐயப்பாடுமிருந்ததாகத் தோன்றவில்லை. ஹெர்மே சிலைகள் சிதைக்கப்பட்ட மர்மத்தை அறிந்துகொள்வது எவ்வளவு கடினமாக இருந்ததோ அதைவிடப் பெலப்போனீசிய யுத்தத்தின் கடைசி எட்டாண்டுகளில் சிறு குழுக் கட்சி செய்துவந்த சதித் திட்டங்களைப் புரிந்துகொள்வதும் கடினமாக இருந்தது.

## 10. முப்பதின்மர்களின் ஆட்சியும் மக்களாட்சியின் மீட்சியும்

ஓர் புதிய அரசியல் அமைப்பை உருவாக்கும் நோக்கத்துடன் முப்பது பேர் கொண்ட நிறுவனம் ஏற்படுத்தப்பட்டது. சட்டம் இயற்றும் வேலை முடிவடையும் வரையில் இவர்களுடைய ஆட்சி அதிகாரம் நிலைத்திருக்க வேண்டியதாயிற்று. இக் குழுவின் அங்கத்தினர்களில் கிரிட்டியாஸ் தலைசிறந்தவன். ஓர் புதிய அரசியல் அமைப்பை ஏற்படுத்தல் அக் குழுவினரில் பெரும்பான்மையோர் நோக்கமன்று. அதிகாரத்தைக் காப்பாற்றுவதற்கு இந்த வேலையை ஓர் பொய்க் காரணமாகக் கொண்டார்கள். ஓர் சாதாரண சிறுகுழு ஆட்சிக் கொள்கையுடைய அரசாங்கத்தை ஏற்படுத்தவும், அதன்மூலமாக அரசாங்க அதிகாரத்தைத் தங்களிடத்தில் நிலையாக வைத்திருப்பதுமே அவர்கள் நோக்கம். இந்த நோக்கத்திலுங்கூட அவர்கள் ஏகமனதாக இருந்ததில்லை. அவர்களில் ஒருவனாகிய தேராமேனஸ் என்பவனுக்கு சுத்த சிறுகுழு ஆட்சிக் கொள்கையின்மீது நம்பிக்கை இல்லை. சிறுகுழு அரசாங்க முறையும் மக்களாட்சி அரசாங்க முறையும் கொண்ட, ஓர் கலப்பு அரசியலமைப்பை ஏற்படுத்துவது தெராமேனசின் நோக்கம். கிரிட்டியாஸ், தெராமீனஸ் என்ற சிறந்த தலைவர்களின் கருத்து வேற்றுமையால் ஒற்றுமை குலைந்து, கட்சி அழிவுக்கு விரைந்தது.

முப்பது பேர் கொண்ட நிறுவனத்தின் முதல் நடவடிக்கைகள் ஏகமனதோடு நிறைவேறின. சிறுகுழு ஆட்சிக் கொள்கையில் உறுதியான நம்பிக்கை கொண்ட 500 பேரடங்கிய ஓர் சபை ஏற்படுத்தப்பட்டது. முன்னால் மக்கள்சபை வகித்துவந்த நீதிபரிபாலனம் இந்த ஐந்நூற்றுவர் சபையிடம் ஒப்படைக்கப்பட்டது. கொள்கையொன்றில்லாத, முரடனான சாத்திருஸ் தலைமையில் பதினொரு பேர் கொண்ட ஓர் குழுவினிடம் ஊர்க்காவற் பணி ஒப்படைக்கப்பட்டது. பிரேயஸ் துறைமுகத்தைப் பாதுகாக்கும் பணி, பத்துப் பேர் கொண்ட ஓர் குழுவினிடம் ஒப்படைக்கப்பட்டது. மக்களாட்சிக் கொள்கையினரில் முதன்மையானவர்கள் ஏதென்ஸ் வீழ்ச்சியின்போது, சிறுகுழு அரசாங்கமுறை ஏற்படுவதை எதிர்த்தனர். அன்னோர்கள் கைது

செய்யப்பட்டு, ஐந்நூற்றுவர் குழுவினல் விசாரணை செய்யப்பட்டு, சதிக்குற்றத்துக்காகக் கொல்லப்பட்டார்கள். அவர்களுக்குள் ஒற்றுமை இருந்தவரையில் இச் செயல் நிறைவேறிற்று. தெராமேனஸ் இக் கொடிய செயல்களை அத்துடன் நிறுத்தியிருக்கவேண்டும். ஆனல் மிதவாதக் கொள்கையினர் கிரிட்டியாஸ் மக்களாட்சியை எதிர்த்து, அக் கட்சியினரைப் பழிவாங்கும் நோக்கத்துடனிருந்தான். அவனது சிறுகுழுக் கட்சியினர் சர்வாதிகார ஆட்சியை நிலைநாட்டி, மக்களாட்சியை ஒழிப்பதில் முனைந்து நின்றனர். பழைய மக்களாட்சியை கிரிட்டியாஸ் எவ்வளவு வெறுத்தானே, அதேபோன்று, தெரமினஸின் மிதவாதக் கொள்கையையும் வெறுத்தான். மிதவாதக் கொள்கையினர் இறுதியில் மக்களாட்சிக் கொள்கையைத் தழுவுவார்கள் என்று அவன் நம்பினன். மக்களாட்சிக் கருத்தோ, சிறுகுழு ஆட்சிக் கொள்கையோ, மிதமாகக்கொண்டிருந்தவர்களை அவனும் அவனது தோழர்களும் வெறுத்தனர். மிதவாதக் கொள்கையுடையவர்கள் முப்பதின்பர் குழுவால் கொண்டுவரப்படும் புதிய அரசியல் சட்டத்தை ஆவலோடு எதிர்நோக்கியிருந்தனர். தெர்மினஸின் கட்சியைச் சார்ந்தவர்கள் அதற்குப் பொறுப்பாவார்கள்.

தீங்கு செய்கிறவர்களை நகரத்திலிருந்து ஒழிப்பதே தங்களுடைய முதன்மையான பணிகளில் ஒன்று என அந்த முப்பதின்மர் நிறுவனம் கூறிற்று. பண்பற்ற பலர் கொல்லப்பட்டார்கள். கொலையுண்டவர்களில் சில ஒற்றர்களுமிருந்தனர். அப்பொழுது அம் முப்பதின்மர் குழு விசாரணையுடனே, விசாரணை இல்லாமலோ, மக்களாட்சிக் கட்சியினரை மட்டுமின்றி சிறுகுழு ஆட்சிக் கட்சியினரையும் ஒழிக்கத் துவங்கினர். அச் சிறு குழு ஆட்சியினர், மக்களாட்சியை எதிர்த்ததுமன்றி அநீதியையும், சட்டத்துக்குப் புறம்பான செயல்களையும் வெறுத்தனர். அதனல் அவர்கள் கொல்லப்பட்டனர். அவ்வாறு கொலையுண்ட சிறுகுழுக் கட்சியினரில் நிசியாசின் மகன் நிக்கிராட்டடஸ் என்பவனும் ஒருவன். பயமும் பழிவாங்கும் உணர்ச்சியுமே படுகொலைக்குக் காரணமாக இருந்தன. அத்துடன் கொள்ளையடிக்க வேண்டும் என்ற ஆசையும் சேர்ந்துகொண்டது. செல்வந்தர்களில் பலர் கொல்லப்பட்டார்கள். உயிரைக் காக்கும் பொருட்டுத் தப்பி ஓடிவிட்டார்கள். அரசியல் தொடர்பற்ற பலரும் இத்தகைய கொடுமைக்குள்ளாயினர். சொற்பொழிவு எழுதும் லிசியாசும், கேடயங்கள் செய்யும் அவன் சகோதரன் போல்மார்ச்சசும் (Lysias aud Polemarchus) கைதுசெய்யப்பட்டார்கள். அவர்களில் லிசியாஸ் தப்பி ஓடிவிட்டான். போல்மார்ச்சஸ் கொல்லப்பட்டான். நச்சுப் பூண்டுகளால் பல அத்தீனியர்கள் ஒழிக்கப்பட்டனர். பலர் நாடுகடத்தப்பட்டனர். மக்களைக் கைதுசெய்யும் பணியில் சிலர் ஈடுபடுத்தப்பட்டனர். இதன் காரணமாக அரசாங்கம் இழைத்த குற்றத்திற்கு இவர்களும் உடந்தை

யானவர்களாயினர். சாலமிஸ் நகரைச் சேர்ந்த லியோன் (Leon of Salamis) என்பவனைக் கைதுசெய்யுமாறு தத்துவஞானி சாக்கரட்டீசை யும் வேறு நால்வரையும் பணித்தார்கள். கொடுங்கோலருடைய கட்டளைக்குக் கீழ்ப்படிய சாக்கரட்டீஸ் தயக்கமின்றி மறுத்துவிட் டான். ஏனைய நால்வரும் மறுக்கும் துணிச்சலற்றவர்களாயிருந்தனர். கீழ்ப்படியாமைக்குற்றத்திற்காகஸாக்கரட்டீஸ் தண்டிக்கப்படவில்லை. ஏனென்றால், கிரிட்டியாஸ் ஸாக்கரட்டீசுடைய பள்ளித் தோழன். ஸாக்கரட்டீஸ் பணக்காரனுமல்லன், மக்களிடம் செல்வாக்குடைய வனுமல்லன். அவன் கிரிட்டியாசின் அன்புக்குப் பாத்திரமானவன்.

கொலைபாதகங்களுக்கும் கொள்ளை யடித்தலுக்கும் தெராமேனஸ் எதிர்ப்பாக இருந்தான். சபை அங்கத்தினர்களில் பெரும்பாலோர், தெராமேனசைப் போலவே தீச்செயல்களுக்கு எதிர்ப்பாக இருந் தார்கள். கிரிட்டியாஸின் திறமையும், ஆற்றலும் இல்லாவிடில், தெராமேனஸ் மிதவாதக் கொள்கையுடைய அரசியலமைப்பை ஏற் படுத்தி யிருப்பான். அவனுடைய முயற்சியால், முப்பதின்மர் நிர் வாகம் 3000 பேர் கொண்ட ஒரு சபையிடம் ஒப்படைக்கப்படுமாறு தூண்டப்பட்டது: 3000 பேர் கொண்ட அச் சபை உறுப்பினருக்குப் போர்ப் படை தாங்கும் உரிமையுண்டு. அச் சபை ஐந்நூற்றுவர் சபையால் மட்டுமே விசாரணை செய்யப்படுவர். ஏனைய மக்களை விசாரிக்கவும் மரண தண்டனை அளிக்கவும் முப்பதின்மரின் குழுவுக்கு அதிகாரமிருந்தது. அந்த மூவாயிரவர் சபைக்கு அரசியலுரிமை கிடையாது. அப்போதிருந்த அரசாங்கத்தை ஆதரிக்கிறவர்கள் மட் டும் 3000 பேர்கொண்ட சபையில் சேர்த்துக் கொள்ளப்பட்டார்கள். அந்த 3000 பேர்களில் ஆயிரம் பிரபுக்கள் தீவிரமானவர்கள். இத்திட் டம் தெராமேனசுக்குத் திருப்தியளிக்கவில்லை. அரசாங்கத்தைக் கைப் பற்றவேண்டுமென்பது அவனுடையநோக்கம். அரசாங்கத்தை மாற்றி யமைத்தல் அவனுடைய கருத்தன்று. அதே சமயத்தில் ஏதென்சி லிருந்து சிறுகுழு ஆட்சியினரால் வெளியேற்றப்பட்டவர்கள் சோம் பேறிகளாக இருந்துவிடவில்லை. அவர்கள் கொரிந்தியா, மெகாரா, தீப்ஸ் ஆகிய நாடுகளில் அகதிகளாக வாழ்ந்தார்கள். இந் நாடுகள் முன்பு ஏதென்சின் பகைவர்களாக இருந்தன. இப்போது அவை பகைமை யுணர்ச்சியை மாற்றிக்கொண்டன. ஸ்ப்பார்ட்டா வெற்றி யடைவதற்கு இந் நாடுகள் உதவி யளித்தபோதிலும், ஸ்ப்பார்ட்டர் அவற்றுக்கு நேர்ந்த இழப்பை ஈடுசெய்யவில்லை. இந் நாடுகள் லைசாண்டரின் ஆதரவு பெற்ற முப்பதின்மர் குழுவின் சர்வாதிகார ஆட்சியை வெறுத்தன. ஆகையினால் அவைகள், ஏதென்சிலிருந்து ஓடிவந்த அகதிகளுக்கு அடைக்கலம் அளித்தது மட்டுமன்றி, கொடுங் கோலாட்சியை வீழ்த்த உதவி யளிக்கவும் தயாராக இருந்தன. தீப்ஸ் நகரம் அகதிகளுக்கு உதவிபுரிய முதலில் முன் வந்தது. திராசிபூலசும்,

அனிட்டசும் (Thrasybulus and Anytus) எழுபது அகதிகளுடன் அட்டிக்கின் கோட்டையாகிய பைலேயைத் (Phyle) தாக்கிப் பிடித்துக் கொண்டார்கள். அக் கோட்டை போயிஷாவின் எல்லையிலுள்ள பார்னெஸ் (Parnes) மலைத் தொடரிலிருந்தது. தற்காப்புக்காக அக் கோட்டையைச் சுற்றிலும் நீண்டதோர் கற்சுவரை எழுப்பினார்கள் அழிந்துபோன அச் சுவரின் அடையாளத்தை இன்னும் காணலாம். முப்பதின்மரின் குழு தன்னுடைய 1000 படை வீரர்களோடும் 3000 பளுவுள்ள ஆயுதம் தாங்கிய போர் வீரர்களோடும் சென்று அக் கோட்டையை முற்றுகை யிட்டார்கள். ஆனால் திடீரென்று ஏற்பட்ட பனிக்கட்டி மழையால் அம் முற்றுகை தடைப்பட்டது. ஆகையினால் அப்படை ஏதென்சுக்குத் திரும்பிவிட்டது. அடுத்த மூன்று மாதங்களில் திராசிபூலசும் பைலாஸிருந்த அகதிகளும் பயமின்றி இருந்தார்கள்.

இப்பொழுது சிறுகுழுக் கட்சியினர் பல தொல்லைகளுக்கு ஆளாயினர். வெளியே பகைவர்களின் தொல்லை. அப் பகைவர்களை எதிர்க்கும் முயற்சியும் தோல்வியடைந்தது. நாட்டினுள் அவர்களுக் கேற்பட்ட பலத்த எதிர்ப்பு தொல்லையைத் தந்தது. தெராமினஸ் அவர்களது கொள்கையை ஏற்றுக்கொள்ளவில்லை. மக்களிடையே அவனுக்கு மிக்க செல்வாக்கு வளர்ந்து வருகின்றது. அதனால் தங்களுக்கு எதிராக மக்கள் திரண்டு எழுவார்கள். பயந்து அவனை ஒழிக்கக் கருதினார்கள். ஐந்நூற்றுவர் சபை கூடும் கட்டிடத்தில் ஆயுதம் தாங்கிய ஆட்களை ரகசியமாகக் கிரிட்டியாஸ் நிறுத்திவைத்திருந்தான். அவன் தெராமினஸ் ஓர் துரோகி, நாட்டுக்கு விரோதமாகச் சதி செய்தவன் என்றும், அவன் சொல்லில் உறுதி இல்லாதவன்; அவனைச் சிறிது கூட நம்பக்கூடாதென்றும் இகழ்ந்துரைத்தான். அப்பொழுது திராமீனஸ் கிருட்டியாசும் அவனது தோழர்களும் கடைப்பிடித்து வந்த முறையற்ற கொள்கையை எடுத்துக் காட்டினான். அதைக் கேட்ட சபையின் பெரும்பான்மை மக்கள் மகிழ்ச்சியினால் ஆரவாரம் செய்தார்கள், அவர்கள் அவன்மீது அனுதாபம் கொண்டனர், சபையினர் தெராமீனசைக் குற்றவாளி அல்லவென்று தீர்ப்பளிப்பார்கள் என்று நினைத்து கிரிட்டியாஸ் கடுமையான செயலில் இறங்கினான்; அவனுடைய பெயரை மூவாயிரவர் சபை அட்டவணையிலிருந்து நீக்கினான்.[1] அவனும் அவனுடைய கூட்டாளிகளும் சேர்ந்து அவனுக்கு மரண தண்டனை அளித்தார்கள். அவனுடைய பெயர் மூவாயிரவர் அட்டவணையிலிருந்து நீக்கப்பட்டதால் விசாரணை நடத்தவேண்டுமென்று கோர

[1] இச் செயல் சட்டபூர்வமானதாகத் தோன்றுமாறு விளக்கம் தந்தார்கள். ஓர் சட்டம்...அதன்படி கி. மு. 411-இல் நானூற்றுவர்களை எதிர்த்தவர்கள் அல்லது எட்டியோனே கோட்டை அழிக்கப்படுவதில் பங்கு கொண்டவர்கள் அரசியல் அமைப்புச் சட்டத்திற்குப் புறமபானவர்கள் என்று ஓர் சட்டம் இயற்றினார்கள்.

அவனுக்கு உரிமையில்லை. தெராமினஸ் ஹெர்த் (Harth) என்ற புனித மேடைக்குத் தாவி ஓடி, சபையினரிடம் தன்னைக் காப்பாற்ற வேண்டுமென்று முறையிட்டான். சபையினர் அச்சத்தால் மதியிழந்து விட்டனர். கிரிட்டியாசின் கட்டளைப்படி, பதினொருவர் புனித மேடையில் சென்று தெராமினசை இழுத்துவந்தார்கள். அவனைச் சிறைச்சாலைக்குத் தூக்கிச் சென்றார்கள். அங்கு அவனுக்கு நச்சுப் பூண்டு கொடுக்கப்பட்டது. அவன் அந்த நச்சுப் பூண்டின் சாற்றைக் குடித்ததும் கோப்பையிலிருந்த ஒரு துளி நச்சுச் சாற்றை சுட்டிக் காட்டி 'இந்தத் துளி கண்ணியமுள்ள கிரிட்டியாசுக்கு' என்று கூறினான். கண்ணியமுள்ள கிரிட்டியாஸ் சபை மண்டபத்தில் எடுத்துக் கூறிய பழிச் சொற்களில் உண்மையிருந்தது. செயலாற்றுவதில் தெராமினஸ், உறுதியற்றவனாகவும், மதிநுட்பமற்றவனாகவும் இருக்கலாம். நடுத்தரமான அரசியல் அமைப்பை உண்டாக்குவதில் அவனுக்கிருந்த பற்றுதல் உண்மையானது. சிறுகுழு ஆட்சிமுறைக் கொள்கையிலும், மக்களாட்சி முறைக் கொள்கையிலும் உள்ள சிறப்பானவைகளை ஒன்றாக இணைத்து, அவைகளிலுள்ள குறைபாடுகளை நீக்கிய அரசியலை அவன் அமைக்க உண்மையாகவே விரும்பினான். இந்த அரசியல் முறையைக் கொண்டு வருவதற்கு உண்மையாகவே அவன் விருப்பம் கொண்டிருந்தானா என்ற வினாவுக்கு இடமேயில்லை. ஆனால் அவனுடைய அரசியல் கொள்கை நேர்மையற்றதாகத் தோன்றியதால், சந்தேகத்துக்கு இடம் தந்தது. மக்களாட்சி முறை, சிறுகுழு ஆட்சிமுறை இவ்விரண்டிற்குமிடையே அவனது கொள்கை ஊசலாடியது. இரு கொள்கைகளின் நன்மையையும், ஆதரவையும் நாடி இறுதியில் நடுத்தரமான ஆட்சிமுறைத் திட்டத்தை உருவாக்குவதே அவனது முடிவான நோக்கம். இவ்விதமாக, மக்களாட்சிக் கொள்கையினர் அவனை ஓர் சிறுகுழுக் கட்சியினன் என்றும், சிறுகுழுக் கொள்கையினர் அவன் மக்களாட்சிக் கொள்கையைச் சார்ந்தவனென்றும் ஐயுற்றனர். தெராமீனஸின் திறமையை மதிப்பிடும்போது, நாம் ஓர் உண்மையை மனத்தில் கொள்ளவேண்டும். அதாவது, அரசியல் கொந்தளித்துக் கொண்டிருக்கும்போது, இரு தீவிரமான கட்சிகளின் கொள்கைகளிடையே ஒரு வழியைப் புகுத்த விரும்பும் அரசியல் அறிஞன் இரு கட்சியினரின் வெறுப்புக்காளாகி இகழப்படுவான்.

தெராமீனசின் மரணத்திற்குப் பின், மூவாயிரவர் பட்டியலில் இல்லாத அத்தீனியர்கள் நிராயுத பாணியாக்கப்பட்டனர். அவர்கள் நகரத்திலிருந்து வெளியேற்றப்பட்டார்கள். அதன் காரணமாக அட்டிக்கிலிருந்த பகைவர்களின் எண்ணிக்கை நாளுக்கு நாள் பெருகிக்கொண்டே போயிற்று. கிரிட்டியாசும் அவனைச் சேர்ந்தவர்களும் தங்களுடைய நிலைமை அபாயத்திலிருப்பதை உணர்ந்தார்கள். ஆகையினால் ஸ்ப்பார்ட்டாவுக்கு ஓர் அரசியல் தூதுவனை அனுப்பி, லாசிடோ

மோனியக் காவற்படை வீரர்களை அனுப்புமாறு கேட்டுக் கொண்டார்கள். ஸ்ப்பார்ட்டா அவர்களுடைய வேண்டுகோளுக்கிணங்கி எழு நூறு போர் வீரர்களை கல்லிப்பஸ் என்பவனின் தலைமையில் மேட்டுப்பகுதிக்கு அனுப்பிற்று. முப்பதின்மரின் குழு நெருக்கடி சமயத்தைத் தவிர மற்ற நேரத்தில் இத்தகைய செயலில் ஈடுபட்டதில்லை. இச் செயல் மக்கள் வெறுக்கும் ஓர் செயலாக இருந்ததுமன்றி, வந்திருந்த படைக்கும் அன்னியர்களுக்கும் தங்கள் சொந்தப் பணத்திலிருந்தே சம்பளம் கொடுக்க நேர்ந்தது.

மக்களாட்சிக் கொள்கையினரை பைலேயிலிருந்து அகற்றுவதற்காக, மே மாதத்தின் முதல் வாரத்தில் இரண்டாம்முறை படையெடுக்க வேண்டுமெனத் தீர்மானிக்கப்பட்டது; ஸ்ப்பார்ட்டன்காவற் படைப் போர் வீரர்களும் ஆட்சியாளரின் போர் வீரர்களும் ஆங்கு அனுப்பப்பட்டார்கள். அவர்கள் அச்சார்னேக்குச் சமீபத்திலிருந்த போது திராசிபூலஸ் அவர்களைத் திடீரெனத் தாக்கி அவர்களைப் பின் வாங்கி ஓடும்படிச் செய்தான். இந்தச் சம்பவம் ஏதென்சில் பெரும் அதிர்ச்சியை உண்டு பண்ணிற்று. முப்பதின்மர் தங்களின் கட்சியைச் சேர்ந்தவர்கள் உறுதியற்றவர்களா யிருப்பதைக் கண்டு கலங்கினார்கள். தங்களுக்கு விபத்து ஏற்பட்டால், அதிலிருந்து தப்பித்துக் கொள்வதற்காக எலியூசிஸ் (Eleusis) என்ற இடத்தைப் பிடித்துக் கொண்டு அங்கிருந்த முன்னூறு எலியூசியர்களைக் கொன்றார்கள். அவர்களுடைய இந்தத் திட்டம் நிறைவேறாதபடி, திராசிபூலஸ் பைலேயிலிருந்து வந்து பிரேயஸ் என்ற துறைமுகத்தைப் பிடித்துக் கொண்டான். அவனுடன் இப்பொழுது ஆயிரம் போர் வீரர்கள் இருந்தார்கள். ஆனால் பிரேயசில் பாதுகாப்பு அரண்கள் இல்லாதபடியால் தற்காப்பு இல்லாமலிருந்தது. தன்னுடைய படையை முனுச்சியா (Munychia) என்ற குன்றின் மீது அணிவகுத்து நிறுத்தினான். அவன் ஆர்ட்டிமிஸ் (Artemis) கோயிலையும், திரேசின் தேவதையாகிய பென்டிஸ் (Bendis) கோயிலையும் கைப்பற்றினான். அக் கோயில்கள் ஓர் செங்குத்தான தெருவின் உச்சியிலிருந்தன. அம்பெய்கிறவர்கள் கவண்டிக்கல் எய்கிறவர்கள், உயரமான இடத்தில் நிறுத்தி வைக்கப்பட்டார்கள். பளு ஆயுதம் தாங்கிய போர் வீரர்களைத் தாக்குவதற்காக அவர்கள் நிறுத்தி வைக்கப்பட்டார்கள், முப்பதின்மரின் படை பிரேயசுக்குக் கொண்டு வரப்பட்டது. திரேசிபூலஸ் அப் படையின் தாக்குதலுக்காகக் காத்திருந்தான். முப்பதின்மரின் படை மலையின் அடிவாரத்திலும் இருந்தது. முப்பதின்மர் திராசுபூலசின் படையை நோக்கி மலையேறிச்சென்ற போது மலையின் மீதிருந்தவர்கள் அவர்கள் மீது கற்களையும், அம்புகளையும் சரமாரியாகப் பொழிந்தார்கள். பளு ஆயுதம் தாங்கிய போர் வீரர்கள் அவர்கள் மீது பாய்ந்தார்கள். பகைவர்களில் எழுபது பேர்

கொல்லப்பட்டனர். அவர்களின் ஒருவன் கிரிட்டியாஸ். இறந்தவர்களை அப்புறப்படுத்துவதற்காக ஒரு தற்காலிக உடன்படிக்கை செய்து கொண்டனர். குடிமக்கள் அச் சம்பவத்தைப்பற்றித் தங்களுக்குள் பேசிக் கொண்டனர். கிளியோக்கிரடஸ் என்ற எலியூசிய வீரன், தனது உரத்த குரலில், முப்பதின்மரின் போர் வீரர்களுக்குப் பின்வருமாறு கூறினன்:

நகரக் குடிமக்களே, உங்களுக்குத் தீங்கிழைக்காத எங்களை ஏன் கொல்ல விரும்புகிறீர்கள்? எங்களை நாடு கடத்துவானேன்? நாங்களும் உங்களுடைய சமயச் சடங்குகளிலும் விழாக்களிலும் பங்கெடுத்துக் கொண்டவர்கள். நாங்கள் உங்களுடைய பள்ளித் தோழர்களாகவும் பாடல் தோழர்களாகவும் இருந்திருக்கிறோம். சுதந்திரத்திற்காக உங்களோடு தரையிலும், கடலிலும் போர் செய்ததுண்டு. பெலப்போனீயர்கள் பத்து ஆண்டுக்கால யுத்தத்தில் கொன்றவர்களின் எண்ணிக்கையைவிட இந்த எட்டுமாத காலத்தில் அதிகமான அத்தீனியர்களைக் கொலை செய்தவர்களும், தெய்வ பக்தியில்லாத அரக்கர்களுமாகிய அந்த முப்பதின்மரின் கொள்கையை விட்டுவிடுமாறு நமக்குப் பொதுவாகவுள்ள தெய்வங்களின் பேரில் உங்களைக் கேட்டுக் கொள்கிறோம். இப்போது கொல்லப்பட்டவர்களுக்காக நீங்கள் எவ்வளவு கண்ணீர் விடுவீர்களோ அவ்வளவுக்கு நாங்களும் கண்ணீர் விட்டிருக்கின்றோம்.' இந்தப் பொதுவானதும் தனியானதுமான வேண்டுதல்கள் துயரமான அச் சந்தர்ப்பத்தில் அரைமனத்தோடு போரிடும் முப்பதின்மருடைய போர் வீரர்களின் உள்ளத்தில் ஓர் மாறுதலை உண்டாக்கிற்று. அவர்களுடைய திறமைமிக்க, கொடிய தலைவன் கிரிட்டியாஸ் இறந்துவிட்டான். மூவாயிரவரிடையிலும் ஐந்நூற்றுவர் சபையிலும் முப்பதின்மரிடையேயும் கருத்து வேற்றுமையும் முரண்பாடும் தோன்றின. முப்பதின்மருடைய அரசாங்கம் நிலைத்து நிற்க முடியாதென்பது தெரிந்து விட்டது. சிறுகுழு ஆட்சியினர் காப்பாற்றப்பட வேண்டுமானல் ஓர் புதிய அரசாங்கம் நிலைநாட்டப்பட வேண்டியதாயிற்று. மூவாயிரவர்கள் பொதுக் கூட்டத்தில் முப்பதின்மருடைய குழு தள்ளப்பட்டது. அதற்குப் பதிலாகப் பத்துப்பேர் கொண்ட ஓர் புதிய நிர்வாகக்குழு ஏற்படுத்தப்பட்டது. ஒவ்வொரு இனத்திலிருந்தும் ஓர் பிரதிநிதி வீதம் பத்து இனத்திற்கும் பத்து ஆட்கள் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். அன்றியும் முப்பதின்மருடைய குழுவிலிருந்தும் ஓர் அங்கத்தினர் இப் புதிய அரசாங்க உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். எஞ்சியவர்கள், தாங்களாக அமைத்திருந்த எலூசிஸ் என்ற இடத்தில் அடைக்கலம் புகுந்தார்கள். பத்து அங்கத்தினர்களைக் கொண்ட இந்தப் புதிய குழு மெய்யான சிறுகுழு ஆட்சிக் கொள்கையை ஆதரித்தது. ஆனல் அவர்கள் கிரிட்டியாசும் அவனுடைய தோழர்களும் கொண்டிருந்த தீவிரக் கொள்கையைப் புற

கணித்தார்கள். ஆனல் திராசிபூலசுடன் ஒரு உடன்பாட்டுக்கு வரத் தவறிவிட்டார்கள். போர் வீரர்களும் ஆயுதங்களும் திராசிபூலஸிடம் நாடோறும் பெருகியவண்ணமிருந்தன. உள்நாட்டுப் போர் தொடர்ந்து நடந்தது. அன்னியர் உதவியில்லாமல், குடியாட்சிக் கட்சியினருடன் பிரேயஸ் துறைமுகத்தில் அத்தீனியர்களுக்குப் போரிடுவது இயலாதெனத் தோன்றிற்று.

பதின்மரின் குழு ஸ்பார்ட்டாவுக்கு ஓர் அரசியல் தூதுக் குழுவை அனுப்பியது. அதே சமயத்தில் எலூசியிலிருந்த முப்பதின்மரின் குழுவில் எஞ்சியிருந்தவர்களும் ஒரு தூதுக் குழுவை ஸ்ப்பார்ட்டாவுக்கு அதே நோக்கத்துடன் அனுப்பினர்கள். ஏககாலத்தில் அரசியல் தூதுவர்கள் ஸ்ப்பார்ட்டாவுக்குச் சென்ருர்கள். பிரேயசிலிருந்த குடியாட்சிக் கொள்கையினர் ஸ்ப்பார்ட்டாவுக்கு எதிரான கலகக்காரர்கள் என்று அத் தூதுவர்கள் கூறினர்கள். லைசாண்டருடைய தூண்டுதலின் பேரில் லாசிடீமோனிய அரசாங்கம் பதின்மரின் குழுவுக்கு உதவி செய்ய இசைந்தது. லைசாண்டர் எலூசியாசில் ஒரு படையுடன் வந்தான். மக்களாட்சிக் கொள்கையினர் கடல் மார்க்கமாகப் பெற்று வந்த உணவுப் பொருள்களைத் தடை செய்ய நாற்பது கப்பல்கள் கொண்ட ஒரு கடற்படை லிபிஸ் (Libys) தலைமையில் அனுப்பப்பட்டது. இதனல் திராசிபூலசும், அவனுடைய தோழர்களும் துயரப்பட்டனர். ஆனல் லாசிடமோனியா நாட்டில் ஏற்பட்ட ஒரு பிளவினுல் அவர்கள் காப்பாற்றப்பட்டார்கள். உச்சநிலையிலிருந்த லைசாண்டருடைய செல்வாக்கும் சிறிது சிறிதாகக் குறைந்துக் கொண்டே வந்தது. பாசானியாஸ் மன்னன் லைசாண்டரின் பெரும் பகைவனுவான். அந் நாட்டு அரசாங்கத்தை நடத்துகிறவர்களில் பலர் அவனுடைய செல்வாக்கைக் கண்டு பொருமைப் பட்டார்கள். அவனுடைய அகந்தை மனப்பான்மையை வெறுத்தார்கள். அவனுடைய திட்டங்களைச் சந்தேகக் கண்கொண்டு நோக்கினர்கள். ஏதென்சிலும் மற்றும் பல அத்தீனிய நாடுகளிலும் அவன் ஏற்படுத்திய சிறுகுழுக்கட்சி அரசியல் முறை ஒழுங்கற்ற ஆட்சியாலும், படுகொலைகளாலும் அவமானத்தைத் தந்தன. அவ் வரசியலைத் தோற்றுவித்தவனுடைய புகழையும் அவமானம் மாசுபடுத்தியது. ஏதென்சில் அமைதியை நிலைநாட்டும் பணியைத் தனக்குக் கொடுக்க வேண்டுமென்று பாசானியஸ் ஸ்ப்பார்ட்டன் அரசாங்கத்தைக் கேட்டுக் கொண்டான். ஸ்ப்பார்ட்டன் அரசாங்கம் அவன் வேண்டுதலுக்கிணங்கிற்று. ஆகையினல் லைசாண்டர் தான் திரட்டிய சேனையை பாசானியஸிடம் ஒப்படைத்தான். திராசிபூலஸ் தான் அடைந்த தோல்வியால், பாசானியஸிடம் சமாதானம் செய்து கொள்வது நலமெனக் கருதினன். பாசானியஸ் பழைய பதின்மரின் குழுவை நீக்கிவிட்டுப் புதிய பதின்மர் குழுவை ஏற்படுத்தினன். இப் புதிய குழுவின் அங்கத்தினர்கள் நடுத்தரக்

கொள்கையினர். நகரிலும், பிரேயஸ் துறைமுகத்திலும் இருந்த இரு கட்சியினரும் ஸ்ப்பார்ட்டன் தலையீட்டுக்கு இசைந்தார்கள். அம் மன்னனுக்கு உதவிபுரிவதற்கு பதினைந்துபேர் கொண்ட ஓர் குழுவை ஸ்ப்பார்ட்டா அனுப்பிற்று. ஓர் உடன்பாடு ஏற்பட்டது. உடன்பாட்டின் கருத்துகள் பொதுப்படையானவை. இரு தரப்பினரின் கடந்த காலச் செயல்களுக்காக மன்னிப்பு அளிக்கப்பட்டது. முப்பதின்மரின் குழு, அவர்களின் ஆணையை பிரேயசில் நிறைவேற்றிய பதின்மரின் குழு, முப்பதின்மர் தூண்டுதலால் கொலைசெய்த பதினொருவரின் குழு ஆகிய இம் மூன்று குழுக்களின் அங்கத்தினர்களுக்கும் மன்னிப்பளிக்கப்படவில்லை. அவர்கள் ஏதென்சில் தங்கி வாழ விரும்பினுல் அவர்கள் புரிந்த செயல்களைப் பற்றிய விளக்கம் தரப்பட வேண்டுமென்றும் கட்டளையிடப்பட்டது. எலுயூசிஸ் ஓர் சுதந்திர நாடாக்கப்பட்டது. எலுயூசில் போய்க் குடியேற விருப்பமுள்ள அத்தீனியர்கள் குறிப்பிட்ட காலத்துக்குள் அங்கு செல்லவேண்டும்.

இறுதியில் ஏதென்சின் துயரக் கனவு முடிந்தது. ஒன்றரை ஆண்டுக் காலமாக நடந்துவந்த கொடுங்கோலாட்சியும் அக்ரபோலிசில் அயல்நாட்டுப் போர் வீரர்களின் ஆதிக்கமும் முடிவடைந்தன. திராசிபூலசின் சலியா உழைப்பும் பாசானியாசின் அறிவுத்திறனும் ஏதென்சுக்கு விடுதலையளித்தன. அரசியல் அமைப்பு நிலைபெற ஒன்ருக இணைந்த கட்சிகளின் விவகாரங்களில் தலையிடாமலிருந்து பாசானியாஸ் தன் அறிவுத்திறனைக் காட்டினுன். டிஸ்ஸாமேனஸ் (Tisamenus) என்பவனுடைய அறிவுடைமையின்பேரில், அரசியல் அமைப்பைத் திருத்துவதற்குச் சட்ட நிபுணர்கள் நியமிக்கப்படவும், அதுவரை 'சோலோனுடைய சட்ட முறைப்படியும், டிராக்கோனுடைய அரசியல் நிறுவனங்களின்படியும்' நாட்டின் ஆட்சி நடைபெறவும் தீர்மானிக்கப்பட்டது. இவ்விரு பெயர்களும் இணைக்கப்பட்டது. மக்களிடையே ஏற்பட்ட சமரசத்தைக் காட்டுகின்றது. சோலோனைச் சார்ந்த முதல் மூன்று வகுப்பினரான, கன ஆயுதம் தாங்கிய போர் வீரர்களுக்கு, வாக்குரிமை அளிக்கப்பட்டது. அரசியலுரிமை பெறுவதற்கு நில உடைமை ஒரு தகுதியாகக் கொள்ளப்படவேண்டுமென்ற எண்ணமிருந்தது. ஆனுல் அது முற்றிலும் நடைமுறைக்கொவ்வாத கொள்கையாக இருந்தது. இதனுல் பணம்படைத்தவர்கள் ஒதுக்கப்படலாம்.

நான்காவது இனத்தவரையும் சேர்த்துக்கொள்ள அச் சட்டத்தில் வழியுண்டு. முடிவில் எவ்விதப் புதிய சோதனை முறையும் நடத்திப் பார்க்கப்படவில்லை. 'சட்டம் இயற்றுபவர்கள் வரம்பில்லா வாக்குரிமையை அடிப்படையாகக் கொண்ட பழைய மக்களாட்சியை மீண்டும் கொண்டு வந்தனர். ஏதென்ஸ் தன்னுடைய வாழ்க்கையில் ஓர் புதிய கட்டத்தையடைந்தது. குற்றத்தை மன்னிக்கும் கொள்கை

உறுதியாகப் பின்பற்றப் பட்டது. மக்களாட்சிக் கொள்கையினர், சிறுகுழு ஆட்சிமுறைக் கொள்கையினரைப் பழிவாங்கவில்லை. ஆனால் மறப்பதைவிட மன்னிப்பது எளிதாக இருந்தது. நீண்ட நாளைக்குப் பின் குடிமக்களின் ஒற்றுமையில் பிளவு ஏற்பட்டது. அரசாங்கத்தால் ஏற்படவில்லை. நகரமக்கள் என்றும், பிரேயஸ் துறைமுக மக்களென்றும் ஏதென்சு நாட்டு மக்கள் இரு பிரிவுகளாகப் பாகுபடுத்தப்பட்டனர். விடுதலைக்காகப் போராடியவர்கள்என்றும் அவர்களுக்குஎதிர்ப்பாயிருந்தவர்கள் என்றும் இரு பிரிவினர் தோன்றினர். இப்படிப்பட்ட பிரிவினைத் தவிர்க்க முடியாது. சிறுகுழுக் கட்சியினர் எலேயூசில் தங்கியிருந்ததால், அவர்களுடைய ஆதரவாளர்கள் சந்தேகிக்கப் பட்டனர். ஈராண்டுக்குப் பின் ஏதென்சு எலேயூசைத் தாக்கியது. எலேயூசன் படைத்தலைவர்கள் கைது செய்யப்பட்டுக் கொல்லப்பட்டார்கள். அந்தப் பட்டினம் மீண்டும் அட்டிக்காவின் ஓர் பாகமாயிற்று. அன்று முதல் மூன்று தலைமுறைகள் வரையில் அத்தீனியர்களின் மக்களாட்சி சிறுகுழுவினரின் புரட்சியால் விளையும் பயமோ, அபாயமோ இன்றி நலமுடன் நடைபெற்று வந்தது. முப்பதின்மரின் அச்சந்தரும் கொடுங்கனவுகள் மக்களாட்சியை எக் காலத்திலுமில்லாத உறுதியான அடிப்படையில் நிலைநாட்டியது.

# 12. ஸ்ப்பார்ட்டன் மேலாண்மையும் பாரசீகப் போரும்

## 1. ஸ்ப்பார்ட்டாவின் மேலாண்மை

அத்தீனியப் பேரரசை ஒழிக்கப் பிற நாடுகளால் ஸ்ப்பார்ட்டா வற்புறுத்தப் பட்டதால், ஸ்ப்பார்ட்டா தயக்கத்துடன் அப் பணியை வெற்றிகரமாக நிறைவேற்றியது. கிரீசிலுள்ள எல்லா நாடுகளும் ஏகமனதாக அப் பணியை மேற்கொள்ளுமாறு ஸ்ப்பார்ட்டாவைக் கேட்டுக் கொள்ளாவிடினும், அவ் வேண்டுகோள் அந் நாடுகளின் விடுதலை வேட்கையைக் காட்டுகின்றது. அத்தீனியப் பேரரசு கிரேக்கர்களுடைய சுதந்திர உணர்ச்சியைக் கட்டுப்படுத்துவதாக இருந்தது. அத்தகைய பெருங் குற்றவாளி தண்டிக்கப் படுவதைக் கண்டு, அதனுடன் பகைமை கொள்ளாத நாடுகளும்கூட ஓரளவு திருப்தியடைந்தன. ஏதென்சினுல் அடிமைப் படுத்தப்பட்ட நாடுகள் மறுபடியும் விடுதலை பெறச்செய்ய வேண்டுமென்பதும், ஏதென்சால் பயமுறுத்தப் பட்ட இதர நாடுகளின் சரித்திரத்தைப் பாதுகாப்பதுமே ஸ்ப்பார்ட்டாவின் சீரிய நோக்கமாயிருந்தது ; இப்பொழுது அதனுடைய நோக்கம் விரும்பியதுபோல் நிறைவேறி விட்டது. இப்போது ஸ்ப்பார்ட்டா அத்தீனியப் பேரரசைச் சார்ந்த நாடுகள் தங்களுக்கு விருப்பமான அரசியல் அமைப்பை அமைத்துக் கொள்ளும்படி விட்டு விட்டுத் தான் பழைய நிலைக்குச் செல்லவேண்டும். அவ்வாருயின் அதன் நடவடிக்கைகள் சிறப்பானவையாக இருந்திருக்கும். அப்போது ஸ்ப்பார்ட்டாவின் நிலையில் ஏதாவது ஓர் நாடு இருந்திருக்குமேயானுல் அது அத்தீனியர்களைப் போலவே பேராசை கொண்டு பேரரசு அமைக்கும் பணியில் ஈடுபட்டிருக்கும். மற்ற நாடுகள் தங்களுக்கும் கிரீசுக்கும் சாதகமான இந்த வழியைப் பின்பற்றியிருக்கும். ஆனுல் ஸ்ப்பார்ட்டாவுக்கு இது ஓர் இயலாத செயல். ஸ்ப்பார்ட்டாவின் அரசியல் நிறுவனங்களின் இயல்பும் அந் நாட்டு மக்களின் பிறவிப் பண்பும் ஏதென்சின் பேரரசுக் கொள்கையைப் பின்பற்ற ஏற்றதன்று. இருந்த

போதிலும், ஏதென்சின் ஆதிக்கத்திலிருந்து விடுவிக்கப்பட்ட நாடுகளின்மீது ஆதிக்கம் செலுத்த ஸ்ப்பார்ட்டா விரும்பியது. இதற்காக அது அதனிடமிருந்த நல்லொழுக்கப் பாதையினின்றும் நழுவியது, பேராசைப் படுகுழியில் விழ்ந்து, அதனுல் தனக்கு அழிவையும் கிரீசுக்குப் பெருந் துயரத்தையும் விளைவித்தது. எஜோஸ்பொட்டாமி சம்பவத்திற்குப் பின் முப்பதாண்டுக் காலம் வரையில் பெலப்போனீசியாவிற்கு அப்பாலுள்ள நாடுகளில் ஸ்ப்பார்ட்டாவின் ஆக்ரமிப்பைப் பற்றிக் கூறுவது, கிரேக்க வரலாற்றின் முக்கியப் பகுதியாய் அமைந்திருக்கிறது. அக் கொள்கையினுல் ஏதென்சில் மறுமலர்ச்சி ஏற்பட்டு அது மறுபடியும் ஓர் வல்லரசாயிற்று. தீப்ஸ் நாடு ஓர் வல்லரசாக எழுவதற்கு வழி ஏற்பட்டது. முடிவில் ஸ்ப்பார்ட்டா பெலப்போனீசியாவிற்கு அப்பால் ஏற்படுத்திய தன் ஆதிக்கத்தை இழந்து பெலப்போனீசியாவில் மட்டும் ஆதிக்கம் செலுத்தும் நிலை ஏற்பட்டது. அன்றியும் அந் நாட்டின் அரசியல் நிறுவனங்கள் ஆதிக்கம் செலுத்துதற்கு ஏற்றவைகளல்ல. நிறுவனங்களை உருவாக்கும்போது, பெலப்போனீசியாவிற்கு வெளியில் பேரரசை அமைக்கும் கொள்கைக்கு ஏற்ற முறையில் அவற்றை ஏற்படுத்தவில்லை. ஏஜியாக் கூட்டமைப்பின் பரப்புக்கு ஏற்றவாறு வளைந்து கொடுக்கும் வண்ணம் அந்த நிறுவனங்கள் நெகிழ்ச்சியுடையவைகளாக இல்லை. தன்னுடைய பேரரசு வெற்றியடையும் வண்ணம் நிறுவனங்களை மாற்றியமைப்பதற்கான புரட்சி எதுவும் அந் நாட்டில் நடைபெறவில்லை. அப்படிப்பட்ட புரட்சி ஏற்படாவண்ணம் ஸ்ப்பார்ட்டாவின் குறுகிய அரசியல் முறை ஸ்ப்பார்ட்டருடைய குறுகிய தன்மையில் அமைக்கப்பட்டிருந்தது.

லைசாண்டர் ஸ்ப்பார்ட்டாவைக் கிரேக்க நாடுகளின் வழக்குத் தீர்ப்பளிக்கும் நாடாக்கினுன். அவன் லாசிடோமோனியர்களின் அரசியல் பண்பை, பேரரசுக் கொள்கையுடைய நாட்டின் பண்புடன் இணைப்பதனுல் ஏற்படும் சிக்கலை எடுத்துக் கூருமையைப்பற்றி நாம் வியப்படையலாம். லைசாண்டர் பிறப்பில் ஸ்ப்பார்ட்டன். ஆனுல் பண்பில் அவன் ஸ்ப்பார்ட்டனல்ல. அவன் தன்னுடைய நாட்டு மக்களை விட ஒரு பேரரசை ஆளுவதற்கேற்ற பரந்த அறிவைப் பெற்றிருந்தான். அவனைப் பற்றிய ஓர் கதையுண்டு. கள்ளிபியஸ் (Cllaibius) என்ற ஸ்ப்பார்ட்டன் ஏதென்சின் அதிபராயிருந்தான். அவன் ஒரு வீரனை இகழ்ந்துரைத்தான். அம் மல்லன் கள்ளிபியாசை அடித்துக் கீழே தள்ளினுன். கள்ளிபியாஸ் லைசாண்டருக்கு மேல்முறையீடு செய்தான். ஓர் சுதந்திரமாக உள்ள குடிமகனை எப்படி நடத்துவது என்று அவனுக்குத் தெரியாதென்று லைசாண்டர் பதிலளித்தான். இக் கதை ஓர் ஸ்ப்பார்ட்டன் வெளியுலகில் ஓர் சாதாரண குடிமகனை நடத்தும் வகையறியாதவன் என்ற உண்மையை இக் கதை விளக்குகிறது. கள்ளிப்பியாசைப் போன்ற சாதாரண மனிதர்களைக்கொண்டு,

லைசாண்டர் பேரரசை நிலைநாட்டத் தீர்மானித்திருந்தான். அத்தீனியர்களின் ஆதிக்கத்திலிருந்து ஸ்ப்பார்ட்டன் ஆதிக்கத்திற்குக் கொண்டு வரப்பட்ட ஒவ்வொரு நகரத்திலும் பத்துப் பேர்கள் கொண்ட ஒரு குழுவிடம் அரசாங்கம் ஒப்படைக்கப்பட்டது. அக் குழு நகரிலிருந்த ஸ்ப்பார்ட்டர் கவர்னருடைய ஆணைக்குக் கட்டுப்பட்டது. அக் கவர்னருக்கு உதவியாக ஓர் காவற்படையும் இருந்தது. இவ்விதமாக ஒவ்வொரு நகரமும் இரு வகையான அதிகாரத்துக்குள் ஒடுக்கப்பட்டது. அயல் நாட்டுக் கவர்னர்கள் கொள்ளையிடுகிறவர்களாகவும் அவர்களுடைய சொந்த நாட்டின் அரசாங்கத்தின் கட்டுப்பாடின்றியும் இருந்தார்கள். உள்நாட்டுச் சிறுகுழுக் கட்சியினர் கொடுங்கோலர்கள். அவர்கள் தங்களுடைய அரசியல் விரோதிகளைக் கொன்று குவித்தார்கள். உள்நாட்டுச் சிறுகுழுவினரும், ஸ்ப்பார்ட்டன் கவர்னர்களும் ஒத்துழைத்தார்கள். லைசாண்டர் ஒரு சர்வாதிகாரியாகத் தன் இச்சைப்படி ஆணை செலுத்தினான். அதனால் எத் தருணத்திலும் அவனது அதிகாரம் பறிக்கப்படலாம். அத்தீனியக் கூட்டமைப்பிலிருந்து விடுவிக்கப்பட்ட நாடுகளில் படைப்பலத்தைக் கொண்ட சர்வாதிகார ஆட்சியை நிலைநாட்டுவதில் அவன் முனைந்திருந்தான்.

அத்தீனியப் பேரரசுக்கும் ஸ்ப்பார்ட்டன் பேரரசுக்குமுள்ள வேறுபாடுகள் பலவாகும். அத்தீனியர்களின் கூட்டமைப்பு, ஏற்படுவதற்கான காரணங்கள் ஸ்ப்பார்ட்டன் ஆதிக்கம் ஏற்படுவதற்கிருந்ததில்லை. மைகேல் (Mycale) போருக்குப் பின்னர் இருந்த பாரசீகப் படையெடுப்பிலிருந்து பாதுகாத்துக்கொள்ள ஆசியா நாட்டு கிரேக்கர்களுக்கு ஓர் கூட்டமைப்பு தேவைப்பட்டது. அதைப் போலவே எகோஸ்பொட்டாமி யுத்தத்திற்குப்பின் அப்படிப்பட்ட ஓர் கூட்டமைப்பு பாரசீகப் பேரரசன் செய்த உதவிக்காக ஆசியாவிலுள்ள கிரேக்க நாடுகள் அவனிடம் ஒப்படைக்கப்பட்டன. ஆசியாவிலுள்ள கிழக்கு கிரேக்க நாடுகளில் வெற்றி பெற்றமையால் தன் ஆதிக்கத்தை ஏதென்ஸ் நிலைநாட்ட முடிந்தது. ஆனால் ஸ்ப்பார்ட்டா அந் நாடுகளை ஏமாற்றித் தன் ஆதிபத்தியத்தை நிலை நாட்டியது. இரு நாடுகளும் தங்கள் ஆதிக்கத்தைச் செலுத்திய முறையிலும் வேறுபாடுண்டு. ஏதென்ஸ், கூட்டமைப்பிலுள்ள நாடுகளின் சுதந்தரத்தைப் பறித்தது. கொடுங்கோன்மை, கொள்ளை, கொடுமை என்ற குற்றச்சாட்டுகளுக்கு ஏதென்ஸ் இடமளிக்கவில்லை. ஆனால் லாசிடோமோனியர்களின் ஆட்சியில் அநீதியும் பலவிதமான அக்கிரமங்களும் நிறைந்திருந்தன. அதனுடைய ஆதிக்கத்துக்குள்ளான நாடுகள் ஸ்ப்பார்ட்டாவுக்கு மேல் முறையீடு செய்துகொண்டாலும் எவ்விதப் பயனும் விளைவதில்லை. சட்டத்தின் அடிப்படையில் அவர்கள் ஆட்சி புரியவில்லை. அவர்களுடைய ஆட்சி முறை அவர்களுடைய

விருப்பு வெறுப்புகளுக்கு ஏற்றவாறு நடந்தது. இந்த உண்மை லாசிடமோனின் ஓர் நண்பனுல் கூறப்பட்டது.

உலகத்தாரின் கண்முன் லைசாண்டர் அடைந்த அதிகார நிலையும் அதைக் குறைவின்றி அவன் அனுபவித்ததும் ஸ்ப்பார்ட்டாவில் பொருமையையும் ஐயப்பாட்டையும் தோற்றுவித்தன. அவன் சமாஸில் ஓர் வகையான அரசவையைக் கூட்டினுன். அவனுக்கு அரசுக்குரிய மரியாதை அளிக்கப்பட்டது. இதுவரையில் ஹெரா என்று அழைக்கப்பட்ட விருந்து அவன் பெயரால் நடத்தப்பட்டது. அவன் ஸ்ப்பார்ட்டாவுக்குத் திரும்ப அழைத்துக் கொள்ளப்பட்டான். அதிபதியான பார்ன பாஸ்ஸின் முத்திரை பொறித்த அழைப்புச்சீட்டுக்கு அவன் கீழ்ப்படிந்து சென்ருன். அதை அவன் பிரித்துப் பார்த்தபோது, பாராட்டுரைக்குப் பதிலாக அவனைப்பற்றிய குற்றச்சாட்டுகள் பல அதில் எழுதப்பட்டிருந்தன. லைசாண்டர் பாரசீகத் தந்திரத்தால் ஏளனம் செய்யப்பட்டான். லிபியன் (Libyan) பாலைவனத்திலுள்ள சீயஸ் அம்மோன் கோவிலுக்கு ஒரு பிரார்த்தனையை நிறைவேற்றப் போவதாகக் கூறித் தப்பித்துக் கொண்டான். ஆனுல் அவன் ஏற்படுத்திய சர்வாதிகார ஆட்சி முறை நிலைத்துவிட்டது. லாசிடமோனியர் அந்த சர்வாதிகார ஆட்சி முறையில் சில மாறுதல் செய்தார்கள். என்ருலும் இணக்கமற்ற படைவீரர் ஆட்சியே அங்கு நிலவியது. ஸ்ப்பார்ட்டன் கவர்னரின் மேல்பார்வையில் அவர்கள் விரும்பும் ஆட்சி முறையை ஏற்படுத்திக்கொள்ள அனுமதிக்கப்பட்டது. ஸ்ப்பார்ட்டா இப்படிப்பட்ட ஆட்சி முறையைக் கண்காணிப்பதற்காகச் செலவாகும் 1000 தாலெந்தைத் தன் ஆதிக்கத்தின் கீழுள்ள நாடுகளிடமிருந்து ஆண்டு தோறும் வசூலித்து வந்தது. இவ் வகையில் பணம் வசூலிப்பது ஸ்ப்பார்ட்டாவின் அரசியலில் ஓர் நூதன முறையாயிற்று. அதனுடைய நிர்வாக முறைக்குப் பணம் தேவையாயிற்று. இப்படிப்பட்ட வரவு செலவுகளை லைகர்கஸ் (Lycurgus) வன்மையாகக் கண்டித்திருந்திருப்பான். லைசாண்டர் பொன்னையும் வெள்ளியையும் ஸ்ப்பார்ட்டன் களஞ்சியத்தில் கொண்டுவந்து குவித்தான். இந்தப் புதிய முறை லைகர்கஸ் ஏற்படுத்திய ஒழுங்கு முறைக்கு முற்றிலும் மாறுபட்டது. ஸ்ப்பார்ட்டன் அரசியல் அமைப்பு முறை நெகிழாத் தன்மையுடையது. எனினும் பேரரசுக் கொள்கையால் பழைய சட்டம் மீறப்பட வேண்டியதாயிற்று.

ஸ்ப்பார்ட்டாவின் ஆதிக்கம் ஒரு தலைமுறை வரையில் நீடித்திருந்தது. சிலபோது அதன் ஆதிக்கம் வெற்றியைத் தராததாகவும் இருந்தது. அவ்வாதிக்கக் காலத்தில், பாதிக்குமேல் அது பாரசீகத்துடன் கொண்டிருந்த உறவையே அதன் வரலாறு கூறுகின்றது. ஸ்ப்பார்ட்டா பாரசீகத்தின் ஆதரவாலேயே பேரரசை ஏற்படுத்தியது.

பாரசிகத்தின் உதவியாலேயே அதை இழந்தது. மறுபடியும் பாரசிகத்தாலேயே திரும்பப் பெற்றது.

## 2. சைரசின் கலகமும், பத்தாயிரம் போர்வீரர்கள் அணிவகுத்துச் செல்லுதலும்

இப்போது நாம் கிரேக்கத்தின் எல்லையைவிட்டு பாரசிகத்தின் உள்நாட்டு வரலாற்றுக்கு அழைத்துச் செல்லப்படுகிறோம். டாரியாஸ் (Darius) பேரரசன் இறந்ததும், அவனது மூத்த மைந்தன் ஆர்ட்டாஸெர்க்ஸீஸ் பல எதிர்ப்புகளுக்கிடையில் அரசுக் கட்டிலில் ஏறினான். அவனுடைய தாய் பாரிசாதிஸ் (Paryatis) இளையவனான சைரசை அதிகமாக நேசித்தாள். அவன் பட்டத்திற்கு வரவேண்டுமென்பதே அவளுடைய விருப்பம். ஆர்ட்டா ஸெர்க்ஸீஸ் அரியணை ஏறுவதற்கு டிஸ்ஸாபெர்னஸ் உதவியாக இருந்தான். சைரஸ் தன்னுடைய மாகாணத்திற்குத் திரும்பி வந்தான். ஆனால் அவனுடைய நடவடிக்கைகளைக் கூர்ந்து கவனிக்கும்படி டிஸ்ஸாபெர்னேசுக்கு ஆணையிடப்பட்டது. பொய்ச் சந்தேகங்களும், குற்றச்சாட்டுகளும் அவன்மீது சுமத்தப்பட்டன. சந்தேகங்களும் குற்றச்சாட்டுகளும் அவன்மீது சுமத்தப்படாவிட்டால் ஒரு வேளை அவன் தன் தமையனை அகற்றி அரச பதவியைக் கைப்பற்றத் திட்டம் வகுத்திருக்கமாட்டான். ஆனால் அவன் முதலிலிருந்தே தன் தந்தையின் பதவி வேண்டுமென உறுதியெடுத்துக் கொண்டான். தன்னுடைய வெற்றிக்காக கிரேக்க கூலிப்படை ஒன்று திரட்டி, அதை நம்பி இருந்தான். கிரேக்க நாடுகளில் ஏற்பட்ட புரட்சி காரணமாகப் போர்வீரர்கள் பலர் வேலையில்லாமையால், தங்களுக்குப் பணம் தருபவர்களுக்காகப் போர் புரியத் தயாராக இருந்தார்கள். அவர்களை கிளியார்க்சஸ் (Clearchus) என்ற ஸ்ப்பார்ட்டன் சைரசின் படையில் சேர்த்துக் கொண்டான். அவன் ஸ்ப்பார்ட்டாவின் ஆதிக்கத்திலிருந்த ஓர் நாட்டின் கவர்னர். பாசானியஸைப் போல் அவன் பைசாந்தியத்தின் கொடுங்கோலனாக இருந்ததால்; பதவியிலிருந்து விலக்கப்பட்டு நாடுகடத்தப்பட்டவன். லாசிடமோனிய அரசு சைரசுக்குக் கடன் பட்டிருந்தது. ஆகையால் ஸ்ப்பார்ட்டா ரகசியமாக சைரசுக்கு உதவி புரிய விரும்பி கிளியார்ச்சையும் அவனுடன் 700 போர் வீரர்களையும் அனுப்பிற்று. சைரஸ் நோக்கிப் புறப்பட்டபோது அவனிடம் 100,000 கிழக்கு நாடுகளின் சூசாவை போர் வீரர்களும், 13,000 கிரேக்கப் போர் வீரர்களும் இருந்தார்கள். பதின்மூன்றாயிரம் போர் வீரர்களில் 10,600 பேர் பளுவான ஆயுதம் தாங்கியவர்கள்.

படை அணிவகுத்துச் செல்வதின் நோக்கம் போர் வீரர்களுக்குத் தெரியாவண்ணம் மறைக்கப்பட்டிருந்தது. படைத்தலைவர்களில்

கிளியார்ச்சசைத் தவிர யாரும் அந்த நோக்கத்தை அறியமாட்டார்கள். பிசிடியா மலைச்சாதியினர் (Pisidia) எப்போதும் பாரசீக மாகாணங்களுக்குத் தொல்லை கொடுத்து வந்தார்கள். அவர்களை அடக்குவதற்காக அப் படை பிரயாணம் செய்கிறதென்ற பொய்க் காரணம் கூறப்பட்டது. சைரசின் படையில் அளிக்கப்பட்ட உயர்ந்த சம்பளம் பலரை அப் படையில் சேரும்படித் தூண்டியது. அவர்களில் ஒருவன் அத்தீனியப் போர்வீரன் ஸெனப்பன். அவன் சாக்கரட்டீசின் மாணவனும் நண்பனுமானவன். அனபாசிஸ் (Anabasis) அல்லது 'கிரேக்கர்கள் சைரசுடன் அணிவகுத்து முன்னேறிச் சென்றதும் திரும்பி வந்ததும்' என்ற போர்ப்படை வரலாறு மிகப் புகழ்பெற்ற நூலாகும். அனபாசிஸ் என்ற நூலின் கவர்ச்சிக்கு, அதன் எளிமையும் தெளிவுமே காரணங்கள். மற்றும் அதில் புதிய இடங்களைப்பற்றி விரிவாகக் கூறப்படுகிறது. படிப்படியாக ஆசியா மைனரின் பகுதிகளுக்கு அழைத்துச் செல்லப்பட்டு இறுதியில் யூப்ரிடீஸ், டைகிரீஸ் நதிகளுக்கு அப்பாலுள்ள பாரசீகப் பேரரசின் இருதயம் போன்ற தலைநகரை அடைகின்றோம். சொற்றொடர்கள் மாறி மாறி வந்து, நிகழ்ச்சியை நேரில் காண்பதுபோல் நடந்ததை நடந்தபடியே சொல்வது கவர்ச்சிகரமாக இருக்கிறது. நாட்குறிப்பில் காணப்படுவதுபோல், நாடோறும் ஒவ்வொரு பட்டணத்தின் வழியே அப் படை அணிவகுத்துச் சென்றது, சென்ற தூரம், இடையிடையே தங்கியது ஆகிய நிகழ்ச்சிகள் தெளிவாகக் குறித்து வைக்கப்பட்டிருக்கின்றன. முப்பது அல்லது நாற்பது மைல்கள் பிரயாணம் செய்து, இரண்டு இடங்களில் சைரஸ் தங்கினான். அவன் மக்கள் வாழும் பெல்ட்டேயில் மூன்று நாட்கள் தங்கி இருந்தான்.

சைரஸ் சார்டிஸ் நகரிலிருந்து புறப்பட்டான். மீயாண்டரின் குறுக்காக பிரிஜியன் கொலேசேக்குச் செல்லும் தென்கிழக்குச் சாலையில் வழிநடந்தான். அங்கே கிரேக்க சேனாதிபதிகளில் ஒருவனாகிய தெசாலியன் மேனன் என்பவன் தன்னுடைய வீரர்களுடன் சேர்ந்து கொண்டான். அங்கிருந்து பிரயாணம் செய்து, செலேனேயிக்குப் போய்ச் சேர்ந்தான். அங்கு அவன் கிளியார்ச்சஸ் (Clearchus) வருகைக்காகக் காத்திருந்தான். பிறகு அப் படை பிஸிடியா (Pisidia) நாட்டை நோக்கிப் பிரயாணம் செய்தது. சைரஸ், அங்கிருந்து எதிர்த்திசையில் திரும்பி மீயாண்டரை (Maeander) விட்டிறங்கி பெல்ட்டியாவுக்கு வடக்கு நோக்கிப் பிரயாணம் செய்தான். பெல்ட்டே, செரமோன்-அகோரா அல்லது பாட்டர்ஸ் மார்ட் (Peltae and Ceramon Agora or Potters' Mart) முதலிய நாடுகளைக் கடந்து அப் படையினர் சென்றார்கள். இப்சஸ் (Ipsus) கோட்டைக்கு அண்மையிலுள்ள கேயஸ்ட்டர் சமவெளிக்குக் கிழக்கு நோக்கிப் பயணமானார்கள். இவ்விடத்தில் கிரேக்கர்கள் தங்களுடைய சம்பளப்




படம் 10. பத்தாயிரம் போர்வீரர்கள் அணிவகுத்துச் செல்லுதல்

பாக்கியைக் கொடுக்கும்படிக் கேட்டார்கள். அவர்கள் சம்பளத்தைக் கொடுக்கப் பணம் இல்லை. நெருக்கடியான அச் சமயத்தில் சையென்னசின் (Syennesis) மனைவியும் சிலிசியன் ராணியுமாகிய எப்பியாக்ஸா, சைரசுக்குப் போதுமான பணம் கொடுத்தாள். சைரசுக்கும் சிலிசியன் கவர்னருக்கும் இடையில் ஏற்பட்ட சமரசப் பேச்சின் காரணமாக எப்பியாக்ஸா ராணி அவனைச் சந்தித்தாள். சைரஸ் செல்லும் பாதை சிலிசியா நாட்டினூடே சென்றது. அந் நாட்டில் கடினமான கணவாய்களிருந்தன. நெருக்கடியான அச் சமயத்தில் அந் நாட்டு மன்னனுடைய நல்லுறவு கிடைத்தது சைரசுக்கு ஓர் சிறந்த வாய்ப்பாகும். சைரஸ் தன் முயற்சியில் வெற்றியடைந்தாலும் தோல்வியடைந்தாலும் சையன்னசிஸ் பாதிக்கப்படுவதில்லை. சைரசின் திட்டம் இன்னும் ரகசியமாகவே இருந்தபடியால் அங்கு ஏற்பட்ட உடன்படிக்கை எப்பியாக்சா ராணியைத் தவிர வேறு யாருக்கும் தெரியாதிருந்தது நலமாகப்பட்டது. கிரேக்கப் போர் வீரர்களைச் சம்பளம் கொடுத்துத் திருப்திப்படுத்திய பிறகு சைரஸ் திம்பிரியான், டரியோன் மூலமாக இக்கோனியத்திற்குப் பயணமானான். அங்கிருந்து தெற்கு நோக்கி லைக்கோனியாவில் (Lycaonia) பிரயாணம் செய்து, தியானுவுக்குச் (Tyana) சென்றான். லைக்கோனியா நாட்டு மக்கள் முரடர்கள். அந் நாடு மலைப்பாங்கான நாடு. கிரேக்க வீரர்கள் அந் நாட்டைக் கடந்து செல்லும்போது கொள்ளையடிக்க அனுமதிக்கப்பட்டார்கள். சையன்னசிஸ் சைரசை எதிர்த்ததைப் போலவும் சைரஸ் அவனை ஏமாற்றிவிட்டுச் சென்றதைப் போலவும் பாவனை காட்டவேண்டுமென்று இருவரும் ஏற்பாடு செய்து கொண்டது போலத் தோன்றியது. இந்தத் திட்டத்தை நிறைவேற்ற, மேனோனின் படையணி, எப்பியாக்ஸா அரசியுடன், மற்றப் படைகளுடன் செல்லாமல், வேறு பக்கம் திரும்பி, தைரூசைக் கடந்து குறுக்கு வழியாக சிலிசியாவை அடைந்தது. ஒருவேளை அவர்கள் பராட்டா என்ற இடத்துக்குவந்து, சோலிக்குச் செல்லும் வழியாக லாரண்டா போய்ச் சேர்ந்திருக்கலாம். பாரசீகப் பேரரசனின் பணியாளான சையன்னஸிஸ், சைலிசிய நகரவாயிலைக் கைப்பற்ற விரைந்து சென்றான். அவ் வாயில் வழியே சைரஸின் படை சென்று கொண்டிருந்தது. அதனை மேனோன் பின்னாலிருந்து வளைத்துக்கொண்டான். இதை அறிந்த சியென்னிசிஸ் பின்வாங்கி மலைப்பக்கமுள்ள பாதுகாப்பான இடத்திற்குச் சென்றான். இதைவிட அவன் வேறு என்ன செய்யமுடியும்? சைரசின் படை தியனாவிலிருந்து போடான்டஸ் வழியே வந்தது. நுழையமுடியாத கணவாயில் எவ்வித எதிர்ப்புமில்லை. அங்கிருந்து அவன் தார்சஸ் (Tarsus) நாட்டுக்குள் சென்றான். அங்கு அவன் மேனோனைச் சந்தித்தான். சிலிசியா நாட்டு மன்னனுடைய நகரமும் அரண்மனையும் கொள்ளையடிக்கப்பட்டன. இது சைரசும் சியென்னசிசும் ஆடிய நாடகத்தின் ஒரு பகுதியேயாகும். இப்பொழுது

சியென்னசிஸ் சைரசுக்குப் பணமும் படையும் தந்து உதவுவதற்கு வசதியாக இருந்தது.

தாங்கள் எதற்காகச் செல்கிறோம் என்பதை இப்போது கிரேக்கப் படையினர் ஐயமறத் தெரிந்துகொண்டனர், தாங்கள் ஏமாற்றப்பட்டதை உணர்ந்தனர். அவர்கள் சேரவேண்டிய இடமாகிய பிசிடியாவைக் கடந்து வந்துவிட்டார்கள். இப்பொழுது அவர்கள் தங்களுடைய பிரயாணத்தின் நோக்கம் அவர்களுக்குப் புரிந்துவிட்டது. மேற்கொண்டு பிரயாணம் செய்ய அவர்கள் மறுத்துவிட்டார்கள். பாரசீகப் பேரரசுக்கு எதிராகப் போர் செய்க என்று அவர்களுக்குச் சொல்வது எளிது. ஆனால் மூன்று மாதகாலம் பிரயாணம் பண்ணி அப் பேரரசின் தலைநகரத்துக்குச் செல்லுங்கள் என்று சொல்வது எளிதன்று. கடற்கரையிலிருந்து வெகுதூரத்திலிருந்த உள்நாட்டுக்கு வந்து சேர்ந்தது மிகவும் பயங்கரமான ஓர் செயலாகத் தோன்றிற்று. படைத்தலைவனாகிய கிளார்ச்சஸ் ஓர் கண்டிப்புள்ள தலைவன். அவனுடைய தோற்றமும் குரலும் பயத்தை விளைவிக்கக் கூடியன. அவனுடைய போர்வீரர்கள் அவனிடம் வெறுப்புற்றிருந்தார்கள். கலகத்தை அடக்குவதற்குக் கொடிய நடவடிக்கை எடுக்க அவன் விரும்பினான். அச்சுறுத்துவதால் அடக்கமுடியாத அளவுக்கு அந்தக் கலகம் பெரியதாயிற்று. கிளர்ச்சஸ் கலகத்தை அடக்க ஓர் சூழ்ச்சி செய்தான். தன் படைவீரர்களை ஒன்றுதிரட்டி அவர்களுக்கு முன்னால் நின்று பேசுவதற்குமுன் அழுதுகொண்டிருந்தான். பிறகு அவர்கள் செய்த கலகத்தினால் தனக்கேற்பட்ட தொல்லையை எடுத்துக் கூறினான். சைரஸை விரோதித்துக் கொள்வதா அல்லது அவனைப் புறக்கணித்து விட்டுவிடுவதா என்ற தன் மனக்குழப்பத்தை அவர்களுக்கு எடுத்துக் கூறினான். இரண்டில் எதை நிறைவேற்ற வேண்டுமென்பதை அவன் முன்பே தீர்மானித்துவிட்டான். என்ன நேரிட்டபோதிலும் அவன் தன் படைவீரர்களுக்குத் துணையாக நிற்க விரும்புவதாகக் கூறினான். ஏனென்றால் அவர்கள் 'என் நாட்டு மக்கள், என் நண்பர்கள், என் கூட்டாளிகள்'. அவனுடைய சொற்பொழிவு அவர்கள் மனதில் பதிந்தது. அது ஓர் நல்ல பலனை விளைவித்தது. சைரஸ் தன்னை வந்து சந்திக்கும்படி கிளர்ச்சசுக்கு ஆணையிட்டான். கிளர்ச்சஸ் அவன் கட்டளைக்குக் கீழ்ப்படிய மறுத்தான். கிளர்ச்சஸ் அவர்கள் விரும்பியதைச் செய்யுமாறு கூறவே, அவர்களது களிப்பு, வியப்பாக மாறியது. ஏனெனில் அவர்கள் இனிமேல் சைரசுடைய போர்வீரர்கள் அல்லர்; அவர்களுடைய சம்பளம், உணவு அல்லது எவ்வித உதவிக்கும் சைரசை எதிர்பார்க்கவேண்டியதில்லை. கிளர்ச்சஸ் (Clearchus) அவர்களுக்கு உதவ முன்வந்தானேயன்றி, அவர்களுக்கு ஆணையிடவோ, அறிவு கூறவோ முடியாதென்று மறுத்துவிட்டான். அவனுடைய நம்பிக்கைக்குப் பாத்திரவான்களாகிய சில போர்வீரர்கள், ரகசிய

மாகக் கூடி இந் நெருக்கடியைப்பற்றித் தங்களுக்குள் கலந்தாலோசித்தார்கள், சைரஸ் தங்களைக் கொண்டுவந்த உண்மையான நோக்கத்தை வெளிப்படையாக அறிவித்துவிடும்படிக் கேட்க, ஒரு பிரதிநிதிக் குழுவை அனுப்புவது என்று தீர்மானித்தார்கள். சைரஸ், தன்னுடைய பகைவனும், இப்பொழுது யூப்ரட்டிஸ் நதிதீரத்தில் இருப்பவனும் சிரியாவின் பாரசீக தளகர்த்தனுமான அப்ரகோமாஸுடன் (Abrocomas) போரிட அழைத்து வந்ததாக அப் பிரதிநிதிக் குழுவிடம் கூறினன். மேலும், கிரேக்கர்களுக்கு முதலில் கொடுத்து வந்த சம்பளத்தைவிட அரை மடங்கு அதிகம் கொடுப்பதாகவும் சொன்ஞன். முதலில் மாதம் ஒன்றுக்கு ஒவ்வொரு கிரேக்க வீரருக்கும் ஒரு டாரிக் (daric) பொன் கொடுத்து வந்தான். இப்பொழுது மாதம் ஒன்றுக்கு ஒன்றரை டாரிக் (daric) பொன் கொடுப்பதாக ஒப்புக் கொண்டான். தங்களுக்கேற்பட்ட இக்கட்டான நிலைமையிலிருந்து தப்புவதற்கு வேறு வழியில்லாதபடியால் அரைமனத்தோடு பிரயாணத்தைத் தொடர்ந்து நடத்த இசைந்தார்கள். அவர்களில் சிலர் பிசிடியாசைத் தாக்க அழைத்து வந்ததில் எவ்வளவு உண்மை இருந்ததோ அவ்வளவு உண்மை அப்ரகோமாசுடன் போர்புரிய அழைத்துப் போவதிலுமிருக்குமோவென ஐயுற்ருர்கள்.

சைரசின் படை கிழக்கு நோக்கிப் பிரயாணம் செய்து, அடானு, மோப்சூயஸ்தியா (Adana and Mopsuestia) நாடுகளைக் கடந்தது; பிறகு சாரஸ், பைராமஸ் என்ற ஆறுகளைக் கடந்தது. பிறகு இசஸ் (Issus) கடற்கரையை வந்தடைந்தது. சைரஸ் தன் கடற்படையை அங்கு சந்தித்தான். அக் கப்பல் படையில் 700 லாசிடீமோனிய வீரர்களிருந்தனர். மேலும் 400 கிரேக்கக் கூலிப்படை சைரசுக்குக் கிடைத்தது. இவர்கள் சைரசின் பகைவனுகிய அப்ரகோமாஸ் படையிலிருந்து ஓடி வந்தவர்கள். அப்ரகோமாஸ் சிலிசியாவிலிருந்து சிரியாவுக்குப் போகும் பாதையிலுள்ள கணவாயைப் பாதுகாப்பதற்குப் பதிலாக அவன் யூப்ரடீஸ் நதிக் கரைக்கு ஓடிவிட்டான். இப்பொழுது சைரசிடம் 14,000 கிரேக்கப் போர் வீரர்கள் இருந்தார்கள். இப்பொழுது அப் படை சிரியாவின் வாயிலை எளிதில் கடந்து சென்றது. சிரியாவின் எல்லைக்குள் நுழைய ஓர் குறுகிய கணவாயைக் கடக்க நேரிட்டது. அக் கணவாய் அமானஸ் மலைக்கும் கடலுக்குமிடையிலிருந்தது. அது இசசிலிருந்து மைரியாண்ட்ரசுக்குச் செல்லும் கடற்கரைச் சாலையின் ஒரு பிரிவு. கிரேக்கர் மைரியாண்டிரசிலிருந்து கடற்கரையை விட்டு உள்நாட்டுக்குச் சென்ருர்கள். மீண்டும் கடற்கரைக்கு வருவதற்குள் கழிக்கவேண்டிய நாட்கள் எத்தனை, அனுபவிக்க வேண்டிய தொல்லை எவ்வளவு என்பதை அறியமாட்டார்கள். பேயிலான் (Beilan) கணவாய் மூலமாக ஆமனஸ் மலைப்பிரதேசத்தைக் கடந்தார்கள். அவ்விடத்தை அப்ரோகோமாஸ் பாதுகாத்திருக்க வேண்டும்.

பன்னிரண்டுநாள் பயணத்திற்குப்பின் கவர்னர் பெலெசிஸ் என்பவனுடைய பூங்கா, அரண்மனை முதலியவைகளைக் கடந்து தாப்ஸாகஸ் நாட்டை அடைந்தார்கள். அங்கே அவர்கள் யூப்ரட்டிஸ் நதியைக் கண்டார்கள். சைரஸ், இங்கே படைவீரர்களுக்குத் தன் உண்மையான நோக்கத்தைத் தெரிவிக்க வேண்டியதாயிற்று. பாரசீகப் பேரரசுடன் போர்புரிய, பாபிலோனை நோக்கி அவர்களை அழைத்துவந்த உண்மையை சைரஸ் அறிவித்துவிட்டான். கிரேக்க வீரர்கள் முணுமுணுத்தார்கள். ஆற்றைக் கடக்க மறுத்துவிட்டார்கள். இங்கே அவர்கள் முணுமுணுப்பு தார்சஸில் தெரிவித்த எதிர்ப்பைப் போல் அவ்வளவு கடுமையாக இல்லை. ஏனென்றால் தங்களை அழைத்துப் போகும் நோக்கம் இன்னதென்பதை அவர்கள் ஏற்கெனவே அறிந்திருந்தார்கள். சைரசிடமிருந்து பல வாக்குறுதிகளைப் பெறுவதற்காக இப்போது அவர்கள் முணுமுணுத்தார்கள். மாதம் ஒன்றுக்கு ஒவ்வொரு போர் வீரனுக்கும் ஒன்றரை டாரிக் (darikc) வீதம் யுத்தமுடிவில் கொடுப்பதற்கும் அதிகமாக ஓராண்டுச் சம்பளம் கொடுப்பதாகச்சொன்னான்.

கிரேக்கப் போர் வீரர்கள் இவ்விதமாகப் பேரம் பேசிக்கொண்டிருந்தபோது மேனோன் ஆற்றைக் கடக்கும்படித் தன் போர்வீரர்களைத் தூண்டினான். அவனுடைய முன்மாதிரியான செயலுக்காக அவனுக்கும் அவனுடைய போர்வீரர்களுக்கும் சைரஸ் நன்றி செலுத்தக் கடமைப் பட்டிருந்தான். அப்ரோகோமாஸ் நதியிலிருந்த கப்பல்களை எரித்துவிட்டிருந்தான். ஆனால் அந்தச் சந்தர்ப்பத்தில் யூப்ரட்டீஸ் நதியில் வெள்ளப் பெருக்கில்லை. போர்வீரர்கள் ஆற்றிலிறங்கிக் கடக்கக் கூடிய அளவில் நீரின் ஆழமிருந்தது. போர்வீரர்கள் எளிதில் ஆற்றைக் கடந்தார்கள். அவர்கள் ஆற்றின் இடது பக்கமாகப் பிரயாணத்தைத் தொடர்ந்து நடத்தினார்கள். கடைசியில் சாபராஸ் ஆற்றை அடைந்தனர். அவ்வாற்றிற்கு அப்பால் "அராபியன்" பாலைவனமிருந்தது. அப் பாலைவனத்தைப் பற்றி ஸெனப்பன் கூறுவதாவது: கடலைப்போல் மேடுபள்ளமில்லாமல் அப் பாலைவனம் சமமாகப் பரந்திருந்தது. அங்கு மரங்களில்லை. எட்டி மரங்களும், வாசனைப் பூண்டுகளும் அங்குக் காணப்பட்டன. கிரேக்கர்கள் பார்த்தறியாத அபூர்வ விலங்குகள் அங்கிருந்தன. அவைகளில் காட்டுக் கழுதைகளும், தீப் பறவைகளும், மான் வகைகளும், மரைகளும் (bustards) மிகுதியாகக் காணப்பட்டன. அந்தப் பாலைவனத்தில் பதின்மூன்று நாட்கள் பிரயாணம் நடைபெற்றது. அங்கிருந்து பாபிலோனுக்குச் சமீபத்திலிருந்த பைலே என்ற நாட்டுக்குச் சென்றார்கள். அந்தக் காலத்தில் அது வளமுள்ளநாடு. செயற்கைமுறை நீர்ப் பாசனத்தால் செழுமையுடன் இருந்தது. இன்று அது வறண்ட பாலை நிலமாக இருக்கிறது. அவ்விடத்தை அடைந்தபோது தங்களுக்கு எதிரிலுள்ள நாட்டை அழித்துக்கொண்டிருந்த உள்நாட்டுப் பெரும்படையைக் கண்டார்கள்.

பேரரசன் ஆர்ட்டாஸெர்க்ஸீஸின் முன்னேற்பாடுகள் படையெடுத்து வருகிறவர்களை எதிர்க்க மந்தமான முன்னேற்பாடுகளாயிருந்தன. பாரசீக அரசவையில் சைரஸின் படை பாபிலோனை வந்து அடையும் என்று நம்பப்படவில்லை. வடக்கிலிருந்து பகைவன் தாக்காவண்ணம் ஒரு மதில் சுவரும் ஒரு கால்வாயும் தற்காப்பு அரண்களாகவும் அமைக்கப்பட்டிருந்தன. அவையிரண்டும் யூப்ரிடீஸ், டைகிரீஸ் என்ற இரு நதிகளோடும் இணைக்கப்பட்டிருந்தன. செங்கல்லும் தார் சாந்தும் வைத்துக் கட்டப்பட்ட 100 அடி உயரம் 20 அடி அகலமுள்ள மீதியாவின் மதில் சுவரை முதலில் பகைவன் கடந்து வரவேண்டும். பாபிலோனின் வாயிலை அணுகுவதற்கு முன் அவர்கள் அரசனுடைய கால்வாய் (Royal Canal) என்ற ஓர் கால்வாயைக் கடந்தாக வேண்டியிருக்கிறது அந்த இருவிதத் தற்காப்பு அரண்களோடு மூன்றுவது தற்காப்பு அரணும் கட்டப்பட்டிருந்தது. அது 40 மைல் நீளமுள்ள ஓர் அகழி. அவ்வகழி மீதியா மதில் சுவரையும். யூபிரட்டீஸ் நதியையும் இணைக்கின்றது. அகழிக்கும் ஆற்றுக்குமிடையே ஏழு கெஜ அகலமுள்ள குறுகியப் பாதையொன்றிருந்தது. நாட்டைப் படையெடுப்பிலிருந்து பாதுகாப்பதற்கு இத்தகைய செயற்கை அரண்கள் இருந்தன. அத்துடன் 4,00,000 பேர் கொண்ட ஓர் பெரும் படையுமிருந்தது. நெருக்கடி மிக மோசமானதாகக் காணப்பட்டதால் மீதியா மாகாணத்திலுள்ள படை உடனே பாபிலோனுக்குக் கொண்டுவரப்பட வேண்டுமெனக் கட்டளையிடப்பட்டது. இந்தப் படை வந்து சேருவதற்குத் தாமதம் ஏற்பட்டது.

ஆர்ட்டா ஸெர்க்ஸீஸ் அப் படை வந்து சேர்ந்து தன் பலம் பெருகும் வரை காத்திராமல் உள்நாட்டுப் படையைப் பெருக்கிக் கொண்டான். இது சைரஸ் போர்வீரர் பதுங்கும் பள்ளத்தை நோக்கிவந்த போது அது பாதுகாப்பின்றி இருந்த ஆபத்தான நிலைமையை விளக்குகின்றது. சைரசின் படைவீரர்கள் அகழிக்கும் ஆற்றிற்குமிடையிலுள்ள குறுகிய பாதை வழியாக முன்னேறிக் கொண்டிருந்தார்கள்.

கிழக்கிலிருந்து படையுதவி வருவதற்கு எவ்விதமான அறிகுறிகள் இல்லாதிருந்த போதிலும், ஆர்ட்டாஸெர்க்ஸீஸ் பகைவன் மேற்கொண்டு முன்னேறுவதை விரும்பவில்லை. இரண்டு நாள் அகழியின் கரையில் செய்த பயணத்திற்குப் பின் சைரஸ் குனக்ஸா என்ற கிராமத்திற்குப் போய் சேர்ந்தான். அங்கு தன்னை எதிர்த்துப் பேரரசனின் படை வருவதை அவன் அறிந்தான். அரியேயஸ் (Ariaeus) தலைமையில் கிழக்கு நாடுகளின் படை சைரசுடைய இடது சாரியில் நிறுத்தப்பட்டது. மத்தியில் குதிரைப் படையுடன் சைரஸ் தலைமை தாங்கி நின்றான். வலதுசாரியில் யூப்பிரட்டீஸ் நதியருகே கிரேக்கப் போர் வீரர்கள் நிறுத்தி வைக்கப்பட்டிருந்தனர். பாரசீகப் படையின் இடது

சாரிக்கு டிஸ்ஸாபெர்னஸ் தலைமை தாங்கினான். அவனுடன் குதிரைப் படையும் வில்வீரர்களும் எகிப்துநாட்டு காலாட்படையுமிருந்தன. அத்துடன் அரிவாளேந்திய தேர்ப் படை முன்னணியில் நின்றது. மன்னன் குதிரைப் படையுடன் நடுவில் நின்றான். சைரஸ் கிழக்கு நாடுகளின் போர்முறைப் பண்பை அறிந்தவன். அரசன் கொல்லப்பட்டாலும் அல்லது போர்க்களத்திலிருந்து ஓடினாலும் வெற்றி தன்னுடைய தென்பதை சைரஸ் அறிந்திருந்தான். அவன் வகுத்த போர் முறை பின்பற்றப் பட்டிருக்குமானால் அவன் வெற்றி மாலை சூடிக் கொண்டு இருந்திருப்பான். கிரேக்கப்படை தனது அணியை இடப் பக்கம் ஒதுக்கி, ஆர்ட்டாஸெர்க்ஸீஸின் மத்திய பகுதியைத் தாக்க வேண்டுமென்று திட்டமிட்டிருந்தான். இந்த சிறப்பான திட்டத்திற்கு கிளியார்ச்சஸ் இணங்கவில்லை. வலதுசாரிப் படை எதிரியின் படையினால் சூழ்ந்து கொள்ளக் கூடாதென்று அவன் கூறினான். இந்தச் சந்தர்ப்பத்தில் அவன் கிரேக்கர்களுக்குப் பழக்கமான போர் முறையைப் பின்பற்ற வேண்டுமென வற்புறுத்தினான். சைரசைப் பாதுகாத்து நிற்கவேண்டுமென்ற எண்ணம் கிளியார்ச்சசுக்குத் தோன்றியது. ஆனால் சைரசுக்குத் தோன்றவில்லை. இதனாலேயே சைரஸ் மேற்கண்டவாறு கூறினான். சைரஸ் கொல்லப்பட்டு பாரசீகப் படையின் இடதுசாரியிலுள்ள ஒவ்வொரு போர் வீரனையும் கிரேக்கப் போர் வீரர்கள் வீழ்த்துவதால் கிரேக்கர்களுக்குப் பயனில்லை. சைரஸ் தன் திட்டப்படியே கிரேக்கர்கள் நடக்கவேண்டுமென்று வற்புறுத்தவுமில்லை. கிளியார்ச்சஸ் விருப்பம்போல் நடந்துகொள்ள அனுமதிக்கப் பட்டான். கிரேக்கர்களுடைய தாக்குதல் பகைவர்களுக்குப் பெரிய பயத்தை உண்டுபண்ணியது. பாரசீகரின் வலதுசாரிப் படை சைரசின் இடதுசாரி படையைத் தாக்கிற்று. எரியாயேசைப் பின் பக்கத்தில் சுற்றிவளைத்துக் கொள்ள அது முயன்றது. கிரேக்கர்கள் அடைந்த வெற்றியின் காரணமாக சைரஸ் அரசனாகி விட்டான் என்ற பாராட்டுரைகள் வந்தன அப்பொழுது சைரஸ் தன்னுடைய 600 குதிரை வீரர்களுடன் 6000குதிரை வீரர்களால் சூழப்பட்டிருந்த ஆர்ட்டாஸெர்க்ஸீஸ்மீது பாய்ந்தான். அவனுடைய மின்னல் வேகத் தாக்குதல் ஆர்ட்டாஸெர்க்ஸீஸ் மன்னனின் மெய்க்காப்பாளராகிய குதிரை வீரரைப் பின்வாங்கிக் கலைந்தோடுபடிச் செய்தது. அப்பொழுது அவன் தன்னுடைய உணர்ச்சியைக் கட்டுப்படுத்தி இருந்திருப்பானானால் ஒருமணி நேரத்திற்குள் பேரரசுப் பதவி அவனுக்குக் கிடைத்திருக்கும். தான் முழுமனத்துடன் பகைத்த அவனுடைய சகோதரன் மெய்க்காப்புப் படையுடன் போர்க்களத்திலிருந்து ஓடுவதை அவன் கண்டான். பகையுணர்சசியினால் உந்தப்பட்டு, ஆர்ட்டாஸெர்க்ஸீஸைத் தன் கையினால் கொல்லவேண்டு மென்ற வெறியோடு சைரஸ் தன் குதிரையை அவனுக்கு நேரே செலுத்தினான். அவனுக்குப் பாதுகாவலாகச் சில போர்வீரர்கள் மட்டுமே துணையா

யிருந்தார்கள். ஓர் ஈட்டியினுல் அவனைக் காயப்படுத்திய திருப்தி அவனுக்கு ஏற்பட்டது. அப்போது அங்கு விளைந்த குழப்பத்தில் ஒரு காரியான் (Carian) நாட்டுப் போர்வீரனுல் அவனுடைய கண்ணில் காயம் பட்டது. அவன் குதிரையிலிருந்து கீழே விழுந்தவுடனே பகைவர்கள் அவனைக் கொன்றுர்கள். அவன் இறந்த செய்தியைக் கேட்ட அவனுடைய ஆசியப் படைகள் ஓடின.

இந்தப் போரில் பங்கெடுத்துக்கொண்ட ஸெனப்பனுடைய நிகழ்ச்சியுரை, வியப்பூட்டும் சம்பவங்களை நினைவில் நிறுத்துகிறது. அச் சமயத்தில் அவன் அந்த யுத்தத்தைப்பற்றிச் சிறிதளவே அறிந்திருந்தான். அவன் பாரசீகர்களுடைய முன்னேற்பாடுகள், படைப் பெயர்ச்சிகள் ஆகியவற்றைச் சிறிதளவு தான் அறிந்திருக்க முடியும். அவன் தன்னுடைய நூலை எழுதுவதற்குமுன், பகைவன் படையில் இருந்தவனும், வியக்கத்தக்க இச் சம்பவங்களை நேரில் பார்த்தவனுமான கெட்டிசியாஸ் என்ற கிரேக்கன் எழுதிய நூலைப் படிக்கும் வாய்ப்பு இவனுக்கு இருந்தது. கெட்டிசியாஸ் (Ctesias) அரண்மனை வைத்தியன். போர்க்களத்தில் ஆர்ட்டா ஸெர்க்ஸீசுடன் இருந்தவன். அவனுடைய மார்பில் சைரஸ் ஏற்படுத்திய புண்ணை ஆற்றியவன். கெட்டியாஸ் எழுதிய நூல் மறைந்துவிட்டது. அவனுடைய நூலைக் கற்ற பிற எழுத்தாளர்கள், தங்களுடைய நூல்களில் அவன் எழுதிய கதையின் துணுக்குகளைச் சேர்த்திருக்கிறுர்கள். பேரரசனின் படை தங்கியிருந்தது பற்றியும், அவனது அரச சபையைப் பற்றியும் ஒருசில செய்திகளை அந்நூல் மூலம் அறிய முடிகின்றது. பாரசீகத்தின் நடுவில், எல்லாப் பக்கங்களிலும் பகைவர்களால் சூழப்பட்ட கிரேக்கப் படைக்கு சைரசின் மரணம், மிகமிகத் துயரத்தைத்தந்தது. ஸ்ப்பார்ட்டா இப்படையெடுப்புக்குக் காரணமாக இருந்தபோதிலும் கிரீசுக்கு இது ஓர் நல்வாய்ப்பைக் கொண்டுவந்தது. சைரஸ் தன்னுடைய பேராசையை நிறைவேற்றுதற்குத் தகுந்த திறமையுள்ள இளவரசன். அவன் அதிபதிப் பதவியின் துவக்கத்தில் அடைந்த வெற்றிகள் அவனுடைய திறமையை வெளிப்படுத்துகின்றன. படை எடுப்புக்கான ஆயத்தங்கள் செய்வதில் அவன் காட்டிய ஊக்கமும், அளவற்ற திறமையும், அப் படையெடுப்பின்போது ஏற்பட்ட இன்னல்களும், அவற்றைக் கடக்கும் துணிவும், கிரேக்கப் போர் வீரர்களை மதிப்பிட்ட தன்மையும் அவனது சிறப்பான பண்புகள். அப்படிப்பட்ட ஓர் அரசனின் ஆட்சியில் பாரசீகம் செழித்து வளர்ந்திருக்கும். ஐரோப்பிய நாடுகளுடைய உரிமைக்கு அது தொல்லை தருவதாகவும் இருந்திருக்கும். பேராசை நிறைந்த அவனுடைய மனத்தில் ஈட்டி ஏந்திப் போரிடுகிற வெல்வொண்ணுத கிரேக்கத் தரைப்படையைக் கொண்டு உலகத்தை வென்றுவிடலாம் என்று அவன் மனக் கோட்டைகள் கட்டியிருந்தானே? கூலிப் படையை வைத்திருப்பது

ஒரு மரபாக இருந்த அந்தக் காலத்தில் சைரசின் சேனையில் பணி யாற்றுவதும் விரும்பத்தக்கதாக இருந்திருக்கும். கீழ்நாட்டவர்கள் தந்திரமும் கொடுமையும் உடையவர்களாக இருந்தபோதிலும், இவன் திறந்த மனமுடையவன்; விரும்பத்தக்க குணம் படைத்தவன். பெருந்தகையன். இவனுடைய சிறப்பான பண்புகள் கிரேக்கப் போர் வீரனும், வரலாற்று ஆசிரியனுமாகிய ஸெனப்பனின் உள்ளத்தைக் கவர்ந்துவிட்டன. இவனுடைய நாட்டவர்களில் ஒருவனும் கிரேக்கர் களைப் பாராட்டியதில்லை. இவன் கிரேக்கர்களை எவ்வாறு பாராட்ட வேண்டும் என்பதை அறிந்திருந்தான். போர் வீரர்களுக்குரிய உறுதி, கட்டுப்பாடு ஆகியவற்றில் கிரேக்கர்கள் ஆசிய வீரர்களை விடச் சிறந் தவர்கள் என்பதை அவன் ஒப்புக் கொண்டவன். இந்த ஒளிவு மறை வற்ற புகழ்மொழி கிரேக்கர்களால் இச்சகம் என்று தடுக்கப்பட வில்லை. சைரஸ் மட்டும் அரசுக்கட்டில் ஏறி இருந்திருந்தால் அவ னுடைய ஆற்றலும் கொள்கையும் ஏஜியான் நாடுகளால் பாராட்டப் பட்டிருக்கும் இரண்டு தலைமுறைக் காலம் வரையில் கிரேக்கர்கள் தங்களுடைய தலையெழுத்தை உருவாக்க முடியாது. ஆர்ட்டா ஸெர்க்ஸீஸின் தலையீட்டால் கிரேக்கர்களுடைய சுதந்திரம் பாதிக்கப் படவில்லை. கிளியார்ச்சஸ், குனக்ஸா யுத்தக் களத்தில் தன் பிடி வாதத்தால் கிரேக்கர்களுக்கு வழக்கமான யுத்த முறையைப் பின் பற்றியதால், சைரஸ் திட்டத்தை ஏற்றுக்கொள்ள மறுத்து, ஹெல் லாஸ் ஒரு பாரசிக மாகாணமாக அடிமைப்படாது பாதுகாத்தான்.

அப்படிப்பட்ட எண்ணங்கள் நிறைவேறி இருக்குமானல், 10,000 போர் வீரர்களும் எவ்விதமான ஆறுதலும் பெற்றிருக்கமாட் டார்கள். பகைவன் பின் தொடர்ந்து துரத்திக் கொண்டு வருவா னென்ற பயம் அவர்களுக்கிருந்தது. தங்களுடைய படையில் ஒரு பகுதி தோற்கடிக்கப்பட்டதென்பதையும், தங்களுடைய பாசறைகள் சூறையாடப்பட்டதையும், சைரஸ் இறந்து விட்டான் என்பதையும் அவர்கள் பின்னர் அறிந்தார்கள். அத்தகைய நெருக்கடியான நேரத் தில் அவர்களது இயல்பான சுய கட்டுப்பாடு அவர்களுக்கு வழிகாட்டி யாயிருந்தது. அவர்கள் எளிதில் அடைந்த வெற்றி நம்பிக்கையளித் தது. ஆர்ட்டாஸெர்க்ஸீஸ் அவர்களைச் சரணடையும்படிக் கட்டளை யிட்டான். அதற்கு அவர்கள் மறுத்து விட்டார்கள். தன்னுடைய நாட்டின் நடுவில் சுதந்திரமாகவுள்ள ஓர் அன்னியர் நகரம் இருந்தால் அது ஒருவனுக்கு எவ்வளவு வெறுப்பைத் தருமோ, அதுபோல தன் னெதிரில் நின்ற கிரேக்கப் படையைக்கண்டு வெறுப்படைந்தான். அவர்களைப் பாபிலோனியாவைவிட்டு வெளியேற்றுவது அவனுடைய முதல் வேலையாக இருந்தது. அவன் அவர்களோடு கலந்து பேசினுன். அவர்களுக்கு வேண்டிய உணவுப் பொருள்களைக் கொடுத்தான். கிரீசுக்குப்போய்ச் சேர வேண்டுமென்பதே அப் படை வீரர்களின்

பெருங் கவலையாக இருந்தது. சார்டிஸிக்குப் போய்ச்சேர அங்கிருந்து அவர்கள் 1500 மைலைக் கடக்க வேண்டியிருந்தது. அச்சாலையோ அபாயம் நிறைந்ததாக இருந்தது. உணவுப்பொருள்களில்லாமல் அவர்கள் பாலைவனத்தைக் கடப்பது எளிதன்று. வழிகாட்டிகளில்லாமலும், போதிய புவியியல் அறிவு இல்லாமலும், டைகிரீஸ் நதியின் போக்கைப்பற்றித் தெரிந்து கொள்ளாமலும் திரும்பிச் செல்வது கடினமாகத் தோன்றிற்று. டிஸ்ஸாபெர்னஸ் மற்றொரு சாலை வழியாக அவர்களை கிரீசுக்கு அழைத்துப் போவதாகச் சொன்னான். அவ் வழியில் அவர்களுக்குப் போதுமான உணவுப் பொருள்களும் பிற வசதியும் கிடைக்குமென்றும் அவன் கூறினான். அவர்கள் அவன் வார்த்தையை வேறு வழியில்லாதபடியால் நம்பி அவன் பின்னே செல்வதற்கு இசைந்தார்கள். கிரேக்கப்படை டிஸ்ஸாபெர்னஸ் படைக்குப் பின்னால் சென்று கொண்டிருந்தது. அவர்கள் மீதியா மதில் சுவரைக் கடந்தார்கள். டைகிரீஸ் நதிக்கரைக்குப்பின் போய்ச் சேருவதற்கு முன், வழியில் இரண்டு கால்வாய்களைக் கடந்தார்கள். சிட்டாசோ என்ற இடத்திற்குச் சமீபத்திலுள்ள பாலத்தின் வழியாக அவர்கள் டைகிரீஸ் நதியைத் தாண்டினார்கள். அங்கிருந்து அவ்வாற்றின் இடது கரை வழியே வடக்கு நோக்கிப் பயணமானார்கள். அவர்கள் பாபிலோனியாவிலிருந்து மீதியாவுக்குள் புகுந்தார்கள். சிறு ஸாபைக்கடந்து (lesser Zab) பெரிய ஸாபின் கரைக்குப் போய்ச் சேர்ந்தார்கள். இதுவரை இடையூறு எதுவும் ஏற்படவில்லை. ஆனால் பெரிய ஸாப் (greater Zab) நதிக்கரையில் சந்தேகத்தின் காரணமாக கிரேக்கர்களுக்கும் பெர்சியர்களுக்கும் பூசல் ஏற்பட்டது. அதனால் இரு படைகளும் ஒன்றோடொன்று மோதிக்கொள்ளும் நிலைக்கு வந்து விட்டது. கிளியார்ச்சஸ் இப் பூசலின் காரணத்தைத் தெரிந்துகொள்ள, டிஸ்ஸாபர்னேசை அணுகினான். டிஸ்ஸாபர்னேஸின் ஒளிவு மறைவு அற்ற பேச்சால் கிளியார்ச்சஸின் சந்தேகம் தீர்ந்தது. சிலர் தன்னிடம் வந்து கிரேக்கர்களுக்கு எதிராகச் சந்தேகப்படுமாறு சொல்லி இருக்கிறார்கள் என்றும், கிரேக்கப் படைத்தலைவர்களும் தளபதிகளும் அடுத்த நாள் தன் கூடாரத்திற்கு வந்தால் அவர்கள் யார் என்பதைக் கூறுவதாக வாக்களித்தான். கிளியார்ச்சஸ் அதற்கு உடன் பட்டான். தன்னுடைய தோழர்களான ஏஜியாஸ் (Agias), மேனோன் (Menon), பிரோஸினஸ் (Proxenus), சாக்கரடீஸ் (Socrates) ஆகிய நால்வரையும் டிஸ்ஸபார்னஸைச் சந்திக்குமாறு சொன்னான். நயவஞ்சகனாகிய பாரசிக அதிபதியை நம்பியது பெருந்தவறாகும். இவ்விதமாக ஒரு பாரசிகத்தானை நம்பிப் படைத்தலைவர்களை அனுப்பியது கிளார்ச்சஸின் இரண்டாவது தவறாகும். தெஸ்ஸாலியன் மேனோன் முற்றிலும் கிளார்ச்சசின் பகைவனாகவே இருந்து வந்தான். இத் துரோகச் செயலை மேனோன் செய்திருப்பானென்றும், அவன் மீது இந்தப் பழியைச் சுமத்தி அவனை ஒழிப்பதற்கு அது தகுந்த வாய்ப்பு என்றும்

கிளார்ச்சஸ் எண்ணினுன். ஐந்து ஜெனரல்களும் இருபது கேப்டன் களும் சில போர்வீரர்களும் டிஸ்ஸாபர்னேசைச் சந்தித்தார்கள். அவன் படைத்தளபதிகளேயும் (captains) போர் வீரர்களேயும் அதே இடத் தில் கொன்முன். பெரிய படைத் தலேவர்களைக் கைது செய்து பார சிக அரசவைக்கு அனுப்பினுன். அங்கு அவர்கள் கொலேயுண் டார்கள்.

கிரேக்கப் படையைத் தாக்குவது டிஸ்ஸாபர்னேசின் நோக்க மன்று. வழிதெரியாத ஓரிடத்தில் அவர்களைக் கொண்டு போய் விட்டு விட்டால் அவர்கள் கிரீசுக்குத் திரும்பிச் செல்வது கடினமாகிவிடு மென்றும், தங்களே அழைத்துச் செல்வதற்கான தளபதிகள் இல்லே யாகில் அவர்கள் சரணடைவார்கள் எனவும் அவன் நம்பினுன். ஆரம் பத்தில் நிலேமை மோசமாகத் தோன்றியது. உடனே அவர்கள் தங் களுக்குள் தைரியத்தை வரவழைத்துக்கொண்டு புதிய தலேவர்களேத் தேர்ந்தெடுத்தார்கள். வடக்கு நோக்கித் தங்கள் பயணத்தைத் தொடர்ந்தார்கள். அத்தீனியனுகிய ஸெனப்பன் படைத்தலேவர்களில் சிறந்தவன். அவன் ஓர் சாதுரியப் பேச்சாளன். சமயோசித புத்தியுள்ள வன். அப் படைக்கு ஏற்பட்ட இடையூறுகளும் தொல்லேகளும் நீங்கு மாறு, அதற்குப் புதிய ஊக்கம் அளித்து, வழி காட்டி அதை அழைத் துச்சென்முன். ஆரம்பத்தில் அவன் ஒரு சாதாரண ஏவலாளன். இப் போது அப் படை வீரர்களால் படைத் தலேவனுகத் தேர்ந்தெடுக்கப் பட்டவன். எவரையும் வசப்படுத்தும் திறமையும், பகுத்தறிவும் அவன் படைவீரர்களுக்குத் தலேமை தாங்கும் தகுதியை அவனுக்களித் தன. படைத் தலேவர்கள் ஏமாற்றப்பட்ட பயங்கரமான அன்றிரவு அவன் ஒரு கனவு கண்டதாகச் சொல்லுகிமுன். அக் கனவில் அவனது தந்தையின் வீட்டின் மேல் இடி விழுந்து தீப்பற்றியதாகவும், அத் தீ விட்டுச் சுவர்களே எல்லாம் தீச்சுடர் மூடிவிட்டதாகவும் அவன் கண் டான். அக் கனவு அவனது உணர்வைத் தட்டியெழுப்பியது. அவனும் அவனது தோழர்களும் அப்போது அடைந்த இடர்ப்பாட்டை அக் கனவு விளக்கியது. வீடு மிக அபாய நிலேயில் இருந்தது. கனவில் கண்ட ஒளி அவனுக்கு நம்பிக்கையின் அடையாளமாக இருந்தது. படை வீரர்களுக்கு வழிகாட்ட வேருெருவனே நம்பியிராமல் அப் பணியைத் தானே ஏற்றுக்கொள்ள வேண்டுமென்ற உணர்ச்சி அவனுக்கேற் பட்டது.

அங்கிருந்து அடையவேண்டிய இடம் நெடுந்தூரத்திலிருந்தது. வழி காட்டிகளில்லே; அனுபவமற்ற தலேவர்கள்; பழக்கமில்லா ஆறுகள்; கரடு முரடான மலேகள்; அநாகரிக மக்கள் வாழும் இடங்கள்; இவற்றினூடே பிரயாணம் செய்வது ஒரு துணிகரமான செயலாக இருந்தது. இதற்கு மாருக மற்ருெரு எண்ணம் அப்போது அவர்களுக்குத் தோன்றியது:

அது மிதியாவின் நடுவே ஓர் கிரேக்க நகரத்தை அமைப்பது. இவ்வெண்ணம் யாவராலும் விரும்பப்படவில்லை. அவர்கள் கிரேக்க மண்ணை அடையவே ஆர்வமுற்றிருந்தனர். அப் படையினர் திரும்பிச் சென்ற விவரத்தை எழுதுவதாயின் அது ஒரு பெருங்கதையாகும். அது இடுக்கண் எத்தனையோ நேர்ந்த விடத்து அவர்கள் காட்டிய வீரம், கட்டுப்பாடு, பகுத்தறிவு ஆகியவற்றை விளக்கும் ஒரு வரலாற்றுச் சுவடியாகும். அவையில்லையேல் அவர்கள் தங்கள் இன்னல்களைக் கடந்து வந்திருக்க முடியாது. மீதியாவின் வடக்கு எல்லையிலுள்ள கார்டுச்சியான் மலைப் பகுதியை அவர்கள் கடக்க வேண்டியிருந்தது. நின்று போரிடத் துணியாத டிஸ்ஸாபெர்னேஸ் அம் மலைப் பிரதேசத்தைப் பாழாக்கி விட்டான். அது ஓர் சுதந்திர நாடு. மீதியாவுக்கும், அர்மினியாவுக்கும் இடையிலிருந்தது. அந் நாட்டுக்குள் அவர்கள் நுழைந்ததனல் பாரசீகப் பேரரசைவிட்டு அவர்கள் வெளியேறி விட்டார்கள். முழுப்பிரயாணத்திலும் ஏற்பட்டதைவிட இந்த நாட்டைக் கடக்க அதிக அபாயங்களும் செல்லும் பொழுது உயிர்ச் சேதங்களும் அதிகம் ஏற்பட்டன. நாகரீகமற்ற மலைச்சாதியார் கிரேக்கப் போர் வீரர்களுக்கு வளைந்து கொடாத பகைவர்களாக இருந்தனர். மூட்டை முடிச்சுகளுடன் பிரயாணம் செய்து கொண்டிருக்கிற படையைத் தடுத்து நிறுத்துவது, உயரமான கணவாய்களில் காவல் புரிந்த அவர்களுக்கு எளிதாக இருந்தது. வளைந்துசெல்லும் பாதையின் திருப்பங்களில் மலையின் உச்சியிலிருந்து பாறைகளை உருட்டி விடுவார்களோ என்ற அச்சத்தோடு அவர்கள் நடந்தார்கள். பல இன்னல்களையும் உயிர்ச்சேதங்களையும் அடைந்த பிறகு, கார்டுச்சியாவை ஆர்மேனியாவிலிருந்து பிரிக்கின்ற டைகிரீஸ் நதியின் கிளை நதியாகிய சென்டிரிட்டீஸ் (Centrites) என்ற ஆற்றங்கரைக்கு வந்து சேர்ந்தார்கள். அவர்களது வருகைபற்றி ஆர்மீனிய அதிபதி திரிபாஸஸ் கேள்விப்பட்டான். அவர்களை எதிர்க்கப் படையொன்று ஆற்றின் எதிர்க்கரையில் அணிவகுத்து நின்று கொண்டிருந்தது. முன்னே அர்மீனியப்படையும், பின்னே கார்டுச்சியின் மலைச் சாதியினரும், கிரேக்கப் போர்வீரர்களை அச்சுறுத்திக் கொண்டிருந்தனர். எதிரிலுள்ள ஆற்றைப் பத்திரமாகக் கடப்பதற்குத் தனிப்பட்ட சூழ்ச்சித்திறன் தேவையாக இருந்தது. அர்மீனிய நாட்டை அவர்கள் டிசம்பர் மாதத்தில் கடந்து சென்றார்கள். குளிர்காலம்; பனி எங்கும் உறைந்து கிடந்தது. அவர்கள் பசியோடும் குளிரோடும் போராடினார்கள். ஆனால் திரிபாஸஸ் என்பவனுடன் ஓர் ஒப்பந்தம் செய்துகொண்டதால் எத்தகைய தொல்லையுமில்லாமல் பிரயாணத்தைத் தொடர்ந்து நடத்தினார்கள். அவனுடைய நாட்டைக் கொள்ளையடிப்பதில்லை என்ற வாக்குறுதியுடன் பிரயாணம் செய்தார்கள். அங்கிருந்து அவர்கள் வடமேற்குத் திசையை நோக்கிப் போய்க்கொண்டிருந்தார்கள். வழியில் யூப்ரட்டசின் இரு கிளை நதிகளைக் கடந்தார்கள். இந் நாளில் தாவ்ரிசிலிருந்து

(Tavriz) ஏர்சிரத்துக்குச் (Erzerum) செல்லும் வழிப்போக்கனின் பிரயாணத்தை அவர்களது பிரயாணம் ஒத்து இருந்தது. சாலிபெஸ் (Chalybes) நாட்டையும் மற்றும் பல அன்னிய இனத்தவர்களுடைய நாடுகளையும் கடந்து அப் படையினர் ஜிம்னியாஸ் (Gymnias) நகரத்துக்குப் போய்ச் சேர்ந்தனர். இப்பொழுது அவர்கள் நாகரீக மடைந்துள்ள நாடுகளின் எல்லைக்குள் வந்துவிட்டார்கள். ஜிம்னியாஸ் நாட்டில் வெள்ளிச் சுரங்கங்கள் இருந்தபடியால் அது செழிப்போடிருந்தது. அந் நாட்டு மக்கள் அவர்களை அன்புடன் வரவேற்றார்கள். அவர்களுடைய பிரயாணத்தின் கதையைக் கேட்டார்கள். திரிபசின் தென்பகுதியில் படைவீரர்கள் நீண்ட நாள் தங்கவில்லை என்பதைக் கேட்டபோது அந் நாட்டு மக்கள் மிக வியப்படைந்தார்கள். அவர்களுக்குத் துணையாக வழி காட்டி ஒருவனை அனுப்பினார்கள். ஐந்து நாள் வழி நடந்து, நெடு நாட்களுக்குப்பின் முதல் தடவையாக அவர்கள் கடலைப் பார்த்தார்கள். "ஐந்தாம் நாளில் அவர்கள் தேச்சஸ் மலைப் பிரதேசத்துக்கு வந்தார்கள். அவர்கள் மலையுச்சிக்குச் சென்ற போது ஓர் பேரிரைச்சல் எழுந்தது. படையின் பின்னால்வந்த ஸெனப்பனும், மற்றத் தலைவர்களும் அந்த இரைச்சலைக்கேட்டு யாரோ பகைவர்கள் தங்கள் படையின் முன் பகுதியைத் தாக்குகிறார்களென எண்ணினார்கள். படை வீரர்கள் மேலும் வர, இரைச்சலும் அதிகரித்துக் கொண்டிருந்தது. பெரிய இக்கட்டு நேர்ந்துவிட்டதாக ஸெனப்பன் நினைத்தான். தன் குதிரைப்படையுடன் முன் வரிசைக்கு விரைந்து சென்றான். அவன் நெருங்கி வந்தபோது 'அதோ கடல், அதோ கடல்' என்ற பேரொலி அவன் காதில் விழுந்தது." மைரியாண்ட்ரஸ் என்ற இடத்தில், கடலுக்கு விடை தந்து பிரிந்த அப் படைவீரர்கள் மீண்டும் கடலைப் பார்த்ததும் அவர்கள் உள்ளத்தில் ஆபத்து நீங்கிய நம்பிக்கை பிறந்தது. பாபிலோனியச் சமவெளியிலும், மீதியாவின் ஆற்றங்கரைகளிலும் விழிப்புடனிருந்த இராக்காலங்களும், கார்டுச்சியான் மலைச்சாதியாரின் கொடுமையான முகங்களும், குளிர் மிகுந்த அர்மீனிய பீடபூமியும் ஓர் கெட்ட கனவில் கண்ட தோற்றங்களைப் போல் இப்பொழுது அவர்கள் மனத்தைவிட்டு மறைந்திருக்கலாம்.

சில நாட்கள் பிரயாணத்தைத் தொடர்ந்தபின் அவர்கள் திராபேஸெஸ் என்ற நகர் போய்ச் சேர்ந்தார்கள். அது கிரேக்கர்களுக்குச் சொந்தமான கடற்கரை நகரம். அங்கே அவர்கள் ஒரு மாத காலம் தங்கி ஓய்வு எடுத்துக் கொண்டார்கள். அருகிலிருந்த கோல்ச்சியான் (Colchian) மலைவாசிகளைக் கொள்ளை யடித்து அதனால் கிடைத்த பொருள்களைக் கொண்டு உயிர் வாழ்ந்தார்கள். திராப்செஸ் நாட்டு கிரேக்கர்கள் அவர்களுக்காக சந்தைக்கடை வைத்துப் பொருள்களை விற்றனர். அங்கு அவர்கள் சியஸ் சோட்டர் (Zeus Soter) என்ற

தெய்வத்துக்கு வழிபாடு செய்து திருவிழாக் கொண்டாடினுர்கள். பலவிதப் பந்தய விளையாட்டுகளும் நடைபெற்றன. சாபு (Zab) என்ற இடத்தில் தங்களுடைய தலைவர்களை இழந்த, அந்த இரவில், அவர்கள் எடுத்துக்கொண்ட சபதத்தை இதன் மூலம் நிறைவேற்றிக் கொண்டனர்.

வானத்திலிருந்து திடீரென்று வீழ்கிற பேரிடியைப்போல் 10,000 கிரேக்கப் போர் வீரர்கள் மலையிலிருந்து இறங்கி வந்தார்கள். கடற் கரையோரங்களிலிருந்த திராபிசஸ் (Trapezus), சிராஸஸ் (Cerasus), அவற்றின் தாய் நாடாகிய சினேப்பே (Sinope) என்ற நாடுகளில் அதிர்ச்சியும் திகைப்பும் ஏற்பட்டன. வந்தவர்கள் சாதாரண போர் வீரர்களல்ல ; வீரமும் போர்த்திறனும் படைத்த ஆயுதம் தாங்கிய வர்கள். வெகு சிலரே அனுபவித்த துயரங்களால் நெஞ்சத்தை இரும் பாக்கிக் கொண்டவர்கள். அவர்களுடைய அடுத்த திட்டம் இன்ன தென்பதை அறியாதவர்கள். 10,000 மக்களைக் கொண்ட ஒரு குடி யாட்சி போர்க்கோலம் பூண்டதை அவர்கள் ஒத்திருந்தார்கள். எந்த அரசனுக்கும் பணிசெய்யும் படையினர் அல்லர். எந் நாட்டுக்கும் அடிமை அல்லர். தங்களுக்குள்ளேயே சட்டத்தை வகுத்துக்கொண்டு தங்களுடைய தலைவர்களைத் தேர்ந்தெடுப்பதும், முக்கியமான பிரச் சினைகளைத் தாங்களே தீர்த்துக் கொண்டுவந்த, ஓர் இயங்கும் நகர மாக அவர்கள் காட்சி யளித்தனர்.

யூக்சைன் கடற் கரையில் பிரயாணம் செய்துகொண்டிருந்த அப் படை என்ன செய்திருக்கும், எதைச் செய்திருக்காது? சினேப்பே நாட்டிற்கு அண்மையில் புதிதாக ஒரு நகரத்தை ஏற்படுத்தி முடிவில் சினேப்பே நகரத்தையும் அத்துடன் இணைத்திருக்கலாம்.

பத்தாயிரம் போர் வீரர்களும் கிரேக்க நாடுகளுக்குத் திரும்பிப் போவதையே விரும்பினுர்கள். அவர்களுக்கு வேண்டிய கப்பல்கள் கிடைத்திருக்குமானுல் உடனே புறப்பட்டிருப்பார்கள். சினேப்பே நாட்டையும் அதன் குறுநில நாடுகளையும் பாழ்படுத்தாமல் இருந் திருப்பார்கள். அவர்கள் கிரேக்க நாட்டிற்குத் திரும்பிச் செல்வதனுல் ஏற்படக்கூடிய தொல்லைகளை ஸெனப்பன் முன்பே அறிந்திருந்தான். ஆகையினுல் அவன் பேசிஸ் (Phasis) போன்ற ஓர் இடத்தைப் பிடித்து அங்கு ஓர் குடியேற்றத்தை ஏற்படுத்த விரும்பினுன். அப்படிச் செய் தால் திரண்ட செல்வத்தையும் சிறந்த அதிகாரத்தையும் தேடிக் கொள்ளலாம் என்பது அவனுடைய நோக்கம். அதை அவன் வெளிப் படையாகச் சொல்லாவிடினும் மற்றவர்கள் அதைப் புரிந்துகொண் டார்கள். அதனுல் அவன் படையில் தனக்கிருந்த செல்வாக்கை இழந் தான். கோல்டன் பிளீஸ் (Golden Fleece) நாட்டிலே பேஸிஸ் என்ற

விடத்தில் குடியேற்ற நாடு அமைவதால், பத்தாயிரம் போர் வீரர்களுக்கும் நன்மை விளைந்திருக்கும். இப்போது அவர்களுக்கேற்படப் போகும் துன்பங்கள் முன்பு அவர்கள் வெற்றிகரமாக அனுபவித்தவற்றிலும் மாறுனது. இப்போது அவர்கள் நாள்தோறும் மரணத்துடன் போரிட வேண்டியதில்லே. ஒற்றுமையுணர்வும் அவர்களிடம் இருக்க வேண்டியதில்லை. முன்பிருந்த சசிப்புத் தன்மையும், வீரமும் இப்போது தேவை இல்லே. அப் படையில் கிரேக்க நாடுகளின் பல நகரங்களேச் சார்ந்தவர்களிருந்தார்கள். ஏதோ சந்தர்ப்பத்தால் அவர்கள் ஒன்ருகச் சேர்ந்தார்கள். இப்போது அவர்களே ஒன்ருகப் பிணைக்கக் கூடிய பொதுவான துயரம் எதுவுமில்லே. தாமே முன்வந்து ஒன்ருகச் சேர்ந்தவர்கள். பைசாந்தியம் (Byzantium) என்ற நாடு வரையில் அவர்கள் பிரிந்து போகாமல் இணைந்திருந்தது வியப்பைத் தருகிறது. அவர்களுடைய கட்டுப்பாடு குலேந்துவிட்டது. ஹெராக்கிளே என்ற இடத்தில் அப் படையினர் மூன்று பிரிவாகப் பிரிந்தனர். மறுபடியும் ஒன்ருகச் சேர்க்கப்பட்டார்கள். போர் வீரர்களேக் கொண்ட இப் பெரிய சமுதாயத்தின் விவகாரங்கள் அவர்களாலேயே நிர்வாகிக்கப் பட்டன. எதைச் செய்யவேண்டும் எங்கே போக வேண்டுமென்று அவர்களே தீர்மானித்துக்கொண்டனர். ஸெனப்பனே வேறு தலேவனே கூறும் யோசனேகளுக்கு இசைவாக நடந்து வந்தனர் என்பதை அறிய வியப்பாக இருக்கின்றது.

அவர்கள் திராப்பெஸஸ்: என்ற நகரிலிருந்து சால்சிடோன் நகருக்குக் கடல் மூலமாகவும் தரை மூலமாகவும் பிரயாணம் செய்தனர், பிரயாணத்தின் கடைசிக் கட்டங்களாகிய இங்கே கால தாமதங்கள். ஏமாற்றங்கள், ஒழுங்கின்மை ஆகியவை நிகழ்ந்தன. சால்சிடோனுக்குச் சென்றதும் அப் படை கலேந்துபோய் ஒவ்வொரு போர் வீரனும் தன்னுடைய சொந்த நகரத்தை நோக்கி வேகமாகப் போய்க் கொண்டிருந்திருப்பானென எதிர்ப்பார்த்திருக்கலாம். கிரேக்க நாட்டிற்குள் வந்து சேர்ந்ததை எண்ணி அவர்கள் திருப்தியடைந்தார்கள். வெறுங் கையோடு வீடு திரும்ப அவர்களுக்கு மனமில்லே. தங்களுக்குச் சம்பளம் கொடுக்கக் கூடியவர்கள் யாராயிருந்தாலும் அவர்களுடைய சேனேயில் சேர்ந்து பணியாற்ற அவர்கள் விரும்பினுர்கள். பாரசீகத்தின் மாகாணமாகிய ஹெல்லஸ்பான்டைனின் அதிபதியான பர்னபாஸஸ் பேரரசனே எதிர்த்த அப் படை கிரேக்க நாட்டிற்குத் திரும்பி வந்ததைக் கேட்டு அதிர்ச்சியுற்ருன். அப்பொழுது பாஸ்பரஸிலிருந்த (Bosphorus) லாசிடாமோனின் கடற்படைத் தலேவனுகிய அனுக்ஸிபியஸ் (Anaxibius) என்பவனுக்கு லஞ்சம் கொடுத்து அந்த 10,000 போர்வீரர்களேயும் ஐரோப்பாவிற்கு அனுப்பிவிடும்படித் தூண்டினுன். அவர்களுக்கு ஐரோப்பாவிற்குச் சென்ருல் உயர்ந்த சம்பளம் கொடுக்கப்படுமென்று அனுக்ஸிபியஸ் சொன்னுன். அவர்கள் இப்போது

பைசான்டியத்திற்குக்கொண்டு வரப்பட்டார்கள். தாங்கள் ஏமாற்றப் பட்டதைக் கண்டு கோபம் கொண்டு அப் பட்டினத்தைச் சூறையாட ஆரம்பித்தார்கள். அவர்கள் அச் செயலைச் செய்யாவண்ணம் ஸெனப்ப னின் சமயோசித புத்தியும் சொற்பொழிவும் தடுத்துவிட்டன. செய் தஸ் (Seuthes) என்ற தெரேசிய அரசனுக்கு அவர்களுடைய சேவை தேவையாக இருந்தது. அவனுடைய நாட்டில் கலகம் விளைவித்தவர் களை அடக்குவதற்காக அவர்களுடைய உதவியை அவன் நாடினன். ஆனல் அவன் அவர்களுக்குச் சேரவேண்டிய சம்பளத்தைக் கொடுக் காமல் ஏமாற்றினன். அவன் அனக்ஸிபியாஸைவிடக் கொடிய வஞ்ச கன். அவர்களுடைய நற்காலத்தின் பயனக லாசிடாமோனுக்கும் பாரசீகத்துக்கும் போர் மூண்டது. லாசிடோமோனியர்களுக்கு இவர் களுடைய பணி தேவையாக இருந்தது. சைரசின் பெரிய படையில் அழிந்தது போக பாக்கியுள்ள 6000 வீரர்கள் ஸ்பார்ட்டாவின் படை யில் சேர்ந்து முன்பணமும் வாங்கிக் கொண்டு மறுபடியும் ஆசியாவுக் குத் திரும்பி வந்தனர். ஸெனப்பன் ஒருவனைத் தவிர, மற்றவர்களைப் பற்றிய ஆர்வம் திராப்பெஸ்ஸஸ் என்ற விடத்திலேயே முடிந்திருக்க வேண்டும். கிரேக்க நாட்டிற்கு வந்தவுடனே ஸெனப்பன் படையி லிருந்து விலகிவிட விருப்பங்கொண்டான். அவனை மறுபடியும் படைத் தலைவனுக்க முயன்றார்கள். அவன் பதவி வெறுத்து மறுத்துவிட்டான், ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் அவனுக்கு படைவீரர் மேலிருந்த ஆதிக்கமும், இக்கட்டுகளில் அவர்களுக்கு உதவி புரியும் ஆற்றலும். அவனை அவர்களிடமிருந்து பிரித்துவிட முடியவில்லை. கடைசியில் அவன் படையிலிருந்து விலகி, திரண்ட செல்வத்தோடு ஏதென்சுக்கு வந்தான். அங்கே அவனுடைய ஆசிரியன் சாக்ரடீஸ் சமீபத்தில் கொல்லப்பட்டதை அறிந்தான். தன் சொந்த நகரத்தில் தங்கி வாழ அவனுக்கு விருப்பமில்லாதிருந்தது. தன்னுடைய பழைய நண்பர் களுடன் சேர்ந்து, பாரசீகத்துக்கு எதிராகப் போரிட, அவன் ஆசியாவுக்குத் திரும்பி வந்தான். அப்பொழுது ஏதென்ஸ் பாரசீகத் துக்கு நேச உறவு நாடாக இருந்தது. ஆகையினல் ஏதென்ஸ் அவனுக்கு நாடு கடத்தும் தண்டனையளித்தது. ஸ்ப்பார்ட்டா, அவனுக்கு ஸக் கில்லஸ் (Scillus)என்ற தெரிபீலியன் கிராமத்தில் அளித்த ஓர் வீட்டில் இருபது ஆண்டுகளுக்கு மேல் தன் வாழ்க்கையைக் கடத்தினன். பின் னல் ஏதென்ஸ் அவனுக்களித்த தண்டனையை ரத்து செய்துவிட்டது. ஆகையினல் அவன் ஏதென்சுக்குத் திரும்பி வந்து இறுதி நாட்களை அங்கே கழித்தான்.

திரீபிலியன் கிராமம் ஒலிம்பியாவுக்குச் சமீபத்திலிருந்தது. அங்கே ஸெனப்பன் அமைதியாகத் தன் வாழ்க்கையை நடத்தினன். இலக் கியங்களில் கவனத்தைச் செலுத்த அவனுக்குப் போதுமான நேர மிருந்தது. அவன் அங்கு எழுதிய இலக்கிய நூல்களில் 10,000 போர்

வீரர்கள் கிரீசுக்குத் திரும்பி வந்த வரலாறு மிகச் சிறப்பானது. திரிபிலியாவின் அமைதியான நாட்டுப் புறச் சூழ்நிலையில், அவனுடைய தனிப்பண்பைப் பொறிக்கும் அளவில் சிறப்பாக வாழ்க்கை நடத்தினன். அவன் பாபிலோனியாவிலிருந்து திரும்பி வரும்போது கைதிகளை விடுதலை செய்ததன் மூலமாக அடைந்த பணத்தில் ஓர் பாதியை, எபேசிலிருந்த ஆர்ட்டிமிஸ் தெய்வத்தின் ஆலயத்தில் குவித்து வைத்திருந்தான். அப் பணம் அத் தெய்வத்தின் வழிபாட்டிற்காக ஒதுக்கி வைக்கப்பட்ட பணம். ஸெனப்பன் ஸில்லஸ் என்ற விடத்தில் குடியேறியபோது அந்தப் பணக்குவியல் அவனிடம் ஒப்படைக்கப்பட்டது. அந்தப் பணத்தைக் கொண்டு ஓரிடத்தை விலைக்கு வாங்கி அங்கே எபேசியன் ஆர்ட்டிமிசுக்காக ஓர் கோவிலைக் கட்டினன். 'எபேசில், செலினஸ் என்ற ஓர் சிறிய ஓடை கோவிலைக் கடந்து செல்வதைப் போலவே இந்த இடத்திலும் செலினஸ் என்ற ஓடை இப் புதிய கோயிலையும் கடந்து செல்கின்றது. அந்த இரண்டு ஓடைகளிலும் மீன்களும் கிளிஞ்சல்களும் நிறைந்திருந்தன. ஆனல் ஸில்லசில் பறவை இனங்களும் வேட்டைக்குரிய விலங்குகளும் நிறைந்திருந்தன. அப் பணத்தைக்கொண்டு ஓர் கோயிலையும் ஓர் பலிபீடத்தையும் கட்டினன். தன்னுடைய நிலத்திலிருந்து வரும் வருமானத்தில் பத்தில் ஒரு பாகத்தை ஆண்டுதோறும் அக் கோயிலுக்குக் காணிக்கையாகக் கொடுத்து வந்தான், அந்தக் கிராம மக்களும் அதற்குப் பக்கத்திலுள்ள கிராமங்களின் மக்களும், ஆண்களும் பெண்களும், ஆர்ட்டீமஸ் தெய்வத்திற்காக அவன் நடத்திய விழாவில் கலந்து கொண்டார்கள். அவர்கள் விழாக் காலத்தில் அங்கு வந்து கூடாரங்களில் தங்கினர்கள். அக் கோயிலில் எழுந்தருளியுள்ள தேவதை அவர்களுக்கு உணவு, ரொட்டி, சாராயம், இனிப்புப் பண்டங்களைக் கொடுப்பதோடு தனக்குப் படையல் செய்த புனித பண்டங்களையும் வேட்டைப் பொருள்களையும் அவர்களுக்குப் பகிர்ந்து கொடுத்தது. ஸெனப்பனின் கிராமத்திலுள்ள வாலிபர்களும் பக்கத்துக் கிராமங்களிலுள்ள வாலிபர்களும் விருந்து நடப்பதற்கு முந்திய நாட்களில் பறவைகளையும், விலங்குகளையும் வேட்டையாடி, அதனல் கிடைத்த பறவைகளையும் விலங்குகளையும் கோயிலுக்குக் கொண்டு வந்து குவிப்பது வழக்கம். கோயிலுக்காக ஒதுக்கி வைக்கப்பட்ட இடத்திலும் போலோயி (Pholoe) குன்றிலும் காட்டுப் பன்றிகளும் கலைமான்களும், மற்றும் பலவகைகளும் வாழ்ந்து வந்தன. அந்தப் பண்ணையில் புல்வெளிகளும் காடுகள் சூழ்ந்த குன்றுகளுமிருந்தன அவைகள் பன்றிகளுக்கும் வெள்ளாடுகளுக்கும் மாடுகளுக்கும் குதிரைகளுக்கும் தகுந்த மேய்ச்சல் வெளிகளாக இருந்தன.

ஸ்ப்பார்ட்டாவிலிருந்து ஒலிம்பியன் விழாவுக்குச் செல்லும் வண்டி வாகனங்களை இழுக்கின்ற கால்நடைகளுக்கும் அவ்விடம் ஒரு மேய்ச்

சல் நிலமாக இருந்தது. ஏனென்றால் ஸ்ப்பார்ட்டாவிலிருந்து ஒலிம்பியாவிற்குச் செல்லும் சாலை அந்த ஊர் வழியாகச் சென்றது. பழ மரங்களால் சூழப்பட்ட அக் கோயில் எபேசிலுள்ள பெரிய ஆலயத்தைப் போலிருந்தது. மரத்தாலான சிலை எபேசு ஆலயத்தின் பொற்சிலைக்கு ஒப்பாக இருந்தது.' இங்கே அவன் பந்தய ஆட்டங்களிலும் இலக்கியம் எழுதுவதிலும் தெய்வ வழிபாடு செய்வதிலும், அமைதியான, இனிய வாழ்க்கையை நடத்தி வந்தான்.

மேல் பார்வைக்குக் சைரசுடைய படையெடுப்பு பாரசீக வரலாற்றுக்குச் சம்பந்தமானதாகவும், கிரேக்க வரலாற்றிற்குச் சம்பந்தமில்லாததாகவும் தோன்றலாம். பத்தாயிரம் பேர் திரும்பி வந்ததை தீரச் செயல்களைக் கூறும் நூல்களோடு சேர்க்கப்பட வேண்டியவைகளாகவும் தோன்றலாம். கிரேக்க வரலாற்றைக் கூறும் நூலில் அதை ஒருதுணைக்கதை என்று ஆசிரியனை மன்னிக்கத் தோன்றலாம். ஆனால் ஸெனப்பனும் அவனுடைய நண்பர்களும் பாரசிகத்துக்குச் சென்று வீடு திரும்பிய கதை உண்மையில் துணைக் கதையன்று. குனுக்சாவின் பிரச்சினையில் ஹெல்லாஸ் மக்களின் மனிதப் பண்பு உள்ளடங்கி இருந்ததென்பதை முன்பே குறிப்பிட்டிருக்கிறது. யுத்த காலத்திலே வினைப்பயன் வேறுவிதமாக இருந்திருக்குமானால் கிரீசின் எதிர்காலமும் வேறுவிதமாக இருந்திருக்கும். பாரசீகம் சென்றது, யுத்த களம், வீடு திரும்பியது ஆகியவற்றைக் கொண்ட முழுக் கதைக்கும், கிரேக்க வரலாற்றில் ஒரு முக்கியத்துவம் உண்டு. இவ் வரலாறு, செர்க்ஸீஸ் பேரரசனின் படையெடுப்புக்குப் பின்னுரையாகவும் அலெக்ஸாண்டருடைய படையெடுப்புக்கு முன்னுரையாகவும் இருக்கின்றது. பாரசீகப் பேரரசன் தன்னுடைய படையுடன் கிரேக்க நாட்டிற்குள் நுழைந்தான். ஆனால் அவன் கிரேக்க நாட்டிலிருந்து வெளியேற்றப்பட்டான். அது ஆசியாவுக்கும் ஐரோப்பாவிற்கும் ஏற்பட்ட போட்டியில் முக்கிய நிகழ்ச்சியாக இருந்தது. அடுத்த வரலாற்று நிகழ்ச்சி பழிவாங்கும் கட்டமாக இருக்கும். கிரேக்கர்கள் தங்கள் படையைப் பாரசீகத்தினுள் நுழையச் செய்வார்கள். ஆனால் பாரசீகம் அவர்களை அங்கிருந்து விரட்டியடிக்க ஆற்றலற்றிருக்கும். அலெக்ஸாண்டருடைய வெற்றி, ஸெர்க்ஸீஸ் அடைந்த தோல்விக்கேற்ற விடையாக அமையும். இந்த விடைக்காக உலகம் ஐந்து தலைமுறை வரையில் காத்திருக்க வேண்டியதாகிறது. இதற்கிடையில் சைரசுடைய போர் வீரர்களின் படையெடுப்பு அவ் விடை என்னவா யிருக்குமென்பதை முன்கூட்டியே அறிவிக்கின்றது. ஸெனப்பனுடைய அனுபாசிஸ், ஹெரோட்டடஸ் எழுதிய வரலாற்றின் தொடர்ச்சி. ஸெனப்பனும் அவனுடைய தோழர்களும் அலெக்ஸாண்டரின் முன்னோடிகளாக வேவு பார்த்தவர்கள். பாரசீகத்தின்மீது கிரீஸ் கண்ட வெற்றியின் உட் பொருளை விளக்குவதாக, அப் படையெடுப்பு இருந்தது. இதற்கு

முன் எந்த கிரேக்கப் படையும் சென்றிராத பாரசீகத்தின் நடுப் பகுதியில், போர் வீரர்களின் சிறு கூட்டம் எவ்வித எதிர்ப்புமின்றிச் சென்று மீண்டது. பேரரசனுடைய தலைநகரத்திற்குச் சில மைல்கள் தூரத்தில், எண்ணிக்கையில் மிகுதியாக உள்ள பாரசீகப் படையை எளிதில் தோற்கடித்தது. வெளிப்படையாகப் போரிடும் துணிச்சலற்ற பல பகைவர்களிடமிருந்து தப்பி அப் போர் வீரர்கள் தங்கள் நாட்டிற்குத் திரும்பினர். பாரசீகர்களுடைய ஆற்றலின்மை உலகத்தை வியப்படையச் செய்தது. ஓர் சிறிய கூட்டத்தினுல் வெற்றிகரமாகத் தாக்கப்பட்ட பாரசீகத்தின் ஆட்சியை, கிரீஸ் ஏளனம் செய்திருக்கக்கூடும். எந்த ஹெலனிக் நாடும் அநாகரிகர்களை எதிர்த்து வெற்றியடைந்ததில்லை. வீரத்திலும், கட்டுப்பாட்டிலும், திறமையிலும் ஆசிய நாட்டினர்களைவிடத் தாங்கள் மேலானவர்களென்று உணர்த்திய பெருமை ஹெலனிக் நாடுகளுக்கு உண்டு. அப் பெருமையின் விளைவை நாம் பின்னுல் ஆராய்வோம், ஒன்று அல்லது இரண்டு ஆண்டுகளுக்குப்பின் ஓர் ஸ்பார்ட்டன் அரசன் அப் பாரசீகத்தை வெற்றிகொள்ள முனைந்தான். ஆனுல் அது அலெக்சாண்டருக்காக ஒதுக்கி வைக்கப்பட்டிருந்தது அவன் திறமையிலும் செயலிலும் கீழ்த்தரமானவன். அஜிஸிலாஸ் செய்த எளிய யுத்த நடவடிக்கைகளைவிட, அனுபாசிஸ் என்ற வரலாற்று நூலின் பயன் இன்னும் அங்கே நீங்காத நினைவாக இருந்தது. பத்தாயிரம் போர் வீரர்களைப் பற்றிய கதை ஹெல்லாஸைப் பொறுத்தவரை ஒரு தனிப்பட்ட கதையாகஇருக்கலாம். ஹெலனிக் நாடுகளுக்கு வெளியில் நடந்ததாகவுமிருக்கலாம். ஆனுல் கிரேக்க நாட்டின் வரலாற்றில் அது ஓர் சிறப்பான இடத்தைப் பெற்றிருக்கிறது. ஏதென்சுக்கும் ஸ்ப்பார்ட்டாவுக்கும், பிற கிரேக்க நாடு நகரங்களுக்கு மிடையே நடந்த சம்பவங்களைவிட இப் பாரசீக நிகழ்ச்சி சிறப்பு வாய்ந்தது.

## 3. பர்சியாவுக்கும் ஸ்ப்பார்ட்டாவுக்கும் யுத்தம்

சைரஸின் படையெடுப்பு ஐயோனியாவிலிருந்த கிரேக்க நகரங்களின் நலன்களை உடனடியாகப் பாதித்து அவர்களுடைய ஒப்பந்தப்படி, ஸ்ப்பார்ட்டா அபிடஸ்ஸைத் (Abydus)தவிர மற்ற ஆசிய நகரங்களைப் பாரசிகத்துக்குக் கொடுத்து விட்டது. அபிடஸ் போர் முக்கியத்துவம் வாய்ந்த இடம். கிரேக்கர்கள் உதவியை நாடிய சைரஸ், கிரேக்கப் பட்டினங்களை, தங்கள் அதிபதியான டிஸ்ஸாபர்னசுக்கு எதிராகக் கலகம் செய்யவும், அவைகளைத் தன்னுடைய பாதுகாப்பின் கீழ் வந்து சேரவும், தூண்டிவிட்டான். டிஸ்ஸாபர்னஸ் மிலிட்டசைத் தக்க நேரத்தில் வந்து மீட்டு விட்டான். மற்ற நகரங்களுக்குக் கிரேக்காவல் படையினரின் உதவி கிடைத்தது. சைரஸ் ஆசியாவின் உட்

பகுதிக்குச் சென்ற போது, அவைகள் யாவும் பாரசீகத்தின் ஆதிக்கத்திலிருந்து தங்களை விடுவித்துக் கொண்டன. குனக்சாவில் சைரஸ் தோல்வியடைந்த பிறகு, டிஸ்ஸாபர்னேஸ் ஏஜியன் கடற்கரைப் பகுதிக்குத் திரும்பி வந்தான். இப்போது அவன் சைரஸின் ஆதிக்கத்திலிருந்த மாநிலங்களின் அதிபதியாக நியமனம்பெற்றான். அத்துடன் தூரத்திலுள்ள ஆசியப்படைகளுக்குத் தலைமை தளபதிப் பதவியும் அவனுக்குக் கிடைத்தது (Further Asia). இப் பதவியின் காரணமாக அவனுக்குப் பிற மாநிலங்களிலும் ஆதிக்கம் செலுத்தும் உரிமை கிடைத்தது. கடற்கரையிலிருந்த கிரேக்கப் பட்டினங்களை மறுபடியும் பாரசீகத்தின் ஆதிக்கத்தில் கொண்டு வருவது அவனுடைய முதன்மையான நோக்கமாயிற்று. உடனடியாக அவன் கைமே (Cyme) என்ற நகரத்தைத் தாக்கினான். ஆசியாவிலிருந்த கிரேக்கர்கள அச் சம்பவத்தைக் கண்டு அதிர்ச்சியுற்றார்கள். அவர்கள் ஸ்பார்ட்டாவுக்குத் தங்களுடைய பாதுகாப்புக்காக மேல் முறையீடு செய்து கொண்டார்கள்.

ஸ்பார்ட்டாவுக்கும் பாசீகத்துக்குமிடையே உறவு முன்னிருந்தது போன்றில்லை. ஏனெனில் ஸ்ப்பார்ட்டா சைரசுக்கு உதவியளித்துப் பேரரசனுடன் போர் தொடுத்ததாகும். பத்தாயிரம் போர் வீரர்களின் வெற்றிகரமான பிரயாணம், கிரேக்கர்கள் பாரசீகப் பேரரசின் பலத்தை ஏளனம் செய்யும் உணர்ச்சியை யுண்டுபண்ணியது. பர்னபாஸஸ், டிஸ்ஸாபர்னேஸ் என்ற சிற்றரசுகளின் செழிப்பான மாநிலங்களைக் கொள்ளையடித்தது, ஸ்பார்ட்டாவின் பேராசையால்தான். பாரசீகத்துடன் போர் புரிந்து வெற்றியடைவோம் என்ற நம்பிக்கை அவர்களுடைய பேராசைக்கு ஓர் தூண்டு கோலாக இருந்தது. இந்த எண்ணங்கள் ஆசியாவுக்கு ஓர் படையை அனுப்பும்படி ஸ்ப்பார்ட்டாவைத் தூண்டியது. அப் படையோடு 10,000 போர் வீரர்கள் சேர்ந்து கொண்டார்கள். அவர்கள் தெரேசிலிருந்து சென்று ஸ்ப்பார்ட்டன் படையில் சேர்ந்துகொண்டார்கள். அப் படைக்குத் திறமை வாய்ந்த படைத் தலைவன் ஒருவன் கிடைத்திருந்தால் அவர்கள் அபார வெற்றிகளைக் கொண்டு வந்திருப்பார்கள். ஆனால் அப் படைக்கு திப்ரோன் தலைமைதாங்கினான். அவனால் படையில் கட்டுப்பாட்டை நிலைநாட்ட முடியவில்லை. அவனடைந்த வெற்றிகள் ஸ்ப்பார்ட்டா எதிர் பார்த்ததைவிட மிகக்குறைவாக இருந்தன. திப்ரோனை விலக்கி விட்டு தேர்சிள்ளிதாஸ் என்பவனைப் படைத்தலைவனாக்கினார்கள். அவனோ அசாதாரண வஞ்சகன் என்ற சிறப்புப்பட்டம் பெற்றவன். தேர்கிள்ளிதாசுக்கும் அதிபதி பர்னபாசஸ் என்பவனுக்கும் தனிப்பட்ட முறையில் பகை இருந்தது. டிஸ்ஸாபர்னேஸ், பர்னபாஸ் ஆகிய இருவருமே பகைமை கொண்டவர்கள். தேர்சிள்ளிதாஸ் திஸ்ஸாபர்னசுடன் ஓர் தற்காலிக ஒப்பந்தம் செய்து கொண்டு பர்னபாஸஸின் மாநிலத்தின் மீது தன் படையை ஏவினான். அங்கு நேர்ந்த ஓர்

சம்பவம் அவன் திரோட் அல்லது எயோலிஸ் (Troad or Aeolis) என்ற இடத்தைக் கைப்பற்ற அனுகூலமாயிருந்தது. டார்டானஸ் (Dardanus) ஊரைச் சேர்ந்த ஸெனிஸ் (Zenis) என்பவனுக்கு அந்நாட்டின் உதவி அதிபதிப் பதவியை பர்னபாஸஸ் கொடுத்திருந்தான். அவன் தன் விதவை மனைவி, மகள், மகன் ஆகியவர்களைவிட்டுவிட்டு இறந்தபோது பர்னபாஸஸ் வேருெரு அதிபதியைத் தேர்ந்தெடுக்க இருந்தான். ஆனல், மேனியா என்ற அந்த விதவை தன் கணவன் வகித்த பதவி தனக்குக் கொடுக்கப்படவேண்டுமென்று முறையிட்டாள். அவள் எழுதியதாவது: 'என் கணவன் ஒழுங்காகத் திறை செலுத்திவந்தார். அதற்காக நீங்கள் அவருக்கு நன்றி செலுத்தினீர்கள். நானும் அவ்வாறு செய்வதற்கிருக்கும்போது நீங்கள் வேருெருவரை நியமிப்பது ஏன்? என்னிடம் உங்களுக்கு அதிருப்தி ஏற்படுமானல் நீங்கள் என்னை எச் சமயத்திலும் பதவியிலிருந்து விலக்கிவிடலாம்.'' அவள் முறையிட்டதுமன்றி, அதிபதிக்கும், அவனுடைய காதலிகளுக்கும் மற்றுமுள்ள அவனுடைய அரசாங்க அதிகாரிகளுக்கும் பணத்தையும் அன்பளிப்பாக அனுப்பிவைத்தாள். அதனல் அவளுக்கு அப் பதவி கிடைத்தது. திறையை ஒழுங்காக அனுப்பி, பர்னபாசஸுக்கு மிகுந்த மனநிறைவைக் கொடுத்து வந்தாள். அவளுடைய திறமையான நிர்வாகத்தின் காரணமாக எயோலிஸ் ஓர் செல்வமும் தற்காப்பும் கொண்ட நாடாயிற்று.

அவளுடைய படையில் கிரேக்கக் கூலிப்பட்டாளமொன்றிருந்தது. ஸ்கெப்சிஸ், ஜெர்ஜிஸ், கெப்ரென் (Scepsis, Gergis and Cebren) ஆகிய மலைக்கோட்டைகளில் திரண்ட செல்வத்தைக் குவித்துவைத்திருந்தாள். திரோட்டுக்குத் தெற்கிலுள்ள கடற்கரைப் பட்டினங்களை அடக்கித் தன்னுடைய அதிகாரத்தின் கீழ் அவள் கொண்டு வந்தாள். காரியான் ஆர்ட்டிமிசியாவைப்போல், அவள் சேனையோடு யுத்த களத்திற்குச் செல்வது வழக்கம். ஆனல் அவளுடைய மருமகனை ஸ்கெப்ஸிஸ் (Scepsis) நாட்டைச் சேர்ந்த மேயிடியாஸ் (Meidias) ஓர் வஞ்சகத் துரோகி. அவளுக்கு அவனிடம் அளவுகடந்த நம்பிக்கையும் அன்புமிருந்தது. அவள் அனுபவித்து வந்த பதவியைக் கைப்பற்றுவதற்காக, அவளை அவன் கழுத்தை நெரித்துக் கொன்ருன். பிறகு அவளுடைய மகனையும் கொன்றுவிட்டான். அந்த மாநிலத்திலிருந்த மூன்று கோட்டைகளையும் அக் கோட்டைகளில் அவள் சேமித்து வைத்திருந்த பணக்குவியலையும் அவன் கைப்பற்றினன். மேனியாவைக் கொன்ற கொலை பாதகனுகிய அவனுக்கு அவள் வகித்துவந்த பதவியைக் கொடுக்க பர்னபாஸஸ் மறுத்துவிட்டான்; அவன் அனுப்பிய அன்பளிப்புகளையும் அவனுக்கே திருப்பியதோடு ஓர் செய்தியையும் சொல்லியனுப்பினன்: 'நான் வந்து உன்னையும் நீ அனுப்பிய அன்பளிப்புகளையும் கைப்பற்றும் வரையில் அவைகளை நீயே வைத்திரு. மேனியாவைக்

கொன்றவனை நான் பழிவாங்காவிடில் எனது வாழ்க்கை வாழத் தகுதியற்றதாகிவிடும்.'

மெயிடியாஸ் பர்னபாசஸ் தன்னைப் பழிவாங்க வருவானென்று அதிர்ச்சியை அடைந்திருந்தபோது ஸ்ப்பார்ட்டன் படை அங்கு காட்சியளித்தது. ஸ்கெப்சிஸ், ஜெர்ஜிஸ், சேப்ரென் கோட்டைகளைத் தவிர மற்ற நகரங்களில் எதிர்ப்பின்மையால், தேர்சிள்ளிதாஸ் எலியாட்டின் அதிபதியானான். ஸ்கெப்சிஸ் என்ற இடத்தில் மெயிடியாஸ் ஒப்பந்தம் பேசுதற்குத் திட்டமிட்டிருந்தான். தெர்சிள்ளிதாஸ் அதற்காகக் காத்திருக்கவில்லை. அவன் பட்டினத்தின் வாயில் வரைக்கும் வந்துவிட்டான். கதவைத் திறந்து விடுங்களென்று சொல்வதைத் தவிர மெயிடியாஸ் வேறெதுவும் செய்யமுடியவில்லை. அவ்வாறே கெர்கிஸ் கோட்டையின் கதவுகளும், அவனது விருப்பமில்லாத ஆணையால் திறந்துவிடப்பட்டன. மெயிடியாசின் சொந்த உடைமை அவனுக்குத் திருப்பி அளிக்கப்பட்டது. மேனியாவின் களஞ்சியம் ஸ்பார்ட்டத் தலைவனால் கைப்பற்றப்பட்டது. அது பர்னபாஸஸுக்குச் சொந்தமானதால் பகைவனின் கொள்ளைப் பொருளாயிற்று. இந்தக் கொள்ளைப் பொருள் அவனுடைய 8000 போர் வீரர்களுக்குச் சுமார் ஓராண்டிற்குச் சம்பளம் கொடுக்கப் போதுமானதாக இருந்தது. அன்று முதல் அனுபாஸிஸ் என்பவனுடைய வீரர்களின் நடத்தையில் முன்னேற்றமடைந்ததாகத் தோன்றியது. டெசெலெ அட்டிகாவைத் தாக்குவதற்குப் பயன்பட்டதைப்போல், எயோலிட் பர்னபாஸஸைத் தாக்குவதற்குப் பயன்பட்டது. பகைவனுடைய நாட்டில் அது பலப்படுத்தப்பட்ட ஓர் மாவட்டம். இந்த வெற்றிகள் பாரசீகத்துடன் சமாதானம் செய்யவும், கிரேக்கப் பட்டினங்களின் சுதந்திரத்தை அங்கீகரிக்கவும், பாரசீகத்தைத் தூண்டக் கூடுமென்ற நோக்கத்துடன், டிஸ்ஸாபர்னேசுடனும் பர்னபாசஸுடனும் ஓர் உடன்படிக்கை ஏற்படுத்திக் கொண்டு, அரசியல் தூதுவர்களை ஸ்ப்பார்ட்டா சூசாவிற்கு (Susa) அனுப்பியது. அதேசமயத்தில் தெர்சிள்ளிதாஸ் ஐரோப்பாவுக்கு வந்தான். செர்சோனிசே நாட்டின் செஸ்ட்டாஸ் நகரத்தையும், மற்றும் பல நகரங்களையும் தெரேசின் படையெடுப்பிலிருந்து பாதுகாத்து வந்த குறுக்குச் சுவரைப் புதுப்பிக்கும் பணியில் அவன் ஈடுபட்டிருந்தான். அங்கே வசித்து வந்தவர்கள் அவனுடைய படைக்கு உணவும், சம்பளமும் மகிழ்ச்சியோடு கொடுத்து வந்தார்கள். அவன் ஆசியாவிற்குத் திரும்பி வந்து நீண்ட முற்றுகைக்குப் பின் அட்டார்நேயஸ் என்ற வன்மை வாய்ந்த பட்டினத்தைக் கைப்பற்றினான். ஸ்ப்பார்ட்டாவிலிருந்து வந்த ஓர் சிறப்பான கட்டளையின்படி அவன் காரியாவை நோக்கிச் சென்றான்.

பார்னபாஸஸ், ஸ்ப்பார்ட்டாவைக் கடல் மூலமாகத் தாக்க வேண்டுமென்று பேரரசனைத் தூண்டிவிட்டபடியால், பேரரசன்

ஸ்ப்பார்ட்டாவின் சமாதானப் பேச்சுக்கு இணங்கி வர மறுத்துவிட்டான். போயினிசியாவும் சைப்ரசும் (Cyprus) பேரரசுக்குக் கொடுக்கும் கப்பல்களின் எண்ணிக்கையோடு ஸ்ப்பார்ட்டா எதிர்த்து நின்று போரிட முடியாது. வெற்றி கடற்படைத் தலைவனைப் பொறுத்திருந்தது. இங்கே நல்வாய்ப்புப் பலன் பேரரசனுக்குத் துணையாக இருந்தது. ஓர் கடற்படை அலுவலன் அவன் ஸ்ப்பார்ட்டாவின் ஆதிக்கத்தை ஒழிக்கப் பலவகையிலும் முயன்று வந்தான். அவன்தான், அத்தீனியக் கடற்படைத் தலைவனாகிய கோனோன். அவனை நாம் கடைசியாக அகோஸ்போட்டாமி சம்பவத்தின்போது தப்பித்தோடியதைக் கண்டோம். அன்று நடந்த அவமானத்திற்குப் பழிவாங்க அவன் காத்துக்கொண்டிருந்தான். சைப்பீரிய சலாமிஸ் மன்னனாகிய எவாகோரஸ் அரசவையில் பாதுகாப்பும், விருந்தோம்புதலும் கிடைத்தன. அம் மன்னன் மூலமாகக் கிரேக்க வைத்தியனாகிய சிட்டிசியாஸ் என்பவனோடு தொடர்பு வைத்துக்கொண்டிருந்தான். சிட்டிசியாஸை நாம் குனாக்ஸா போர்க்களத்தில் சந்தித்தோம். அவனுக்கு அரசனுடைய தாயாகிய பாரிசாதிஸ் ராணியிடம் செல்வாக்குண்டு. அவளுடைய செல்வாக்கின் காரணமாகவும் பர்னபாஸஸின் அறிவுரையின் காரணமாகவும் பேரரசன் கோனோனைத் தன்னுடைய கடற்படைக்குத் தலைவனாக்கினான். அப்போது அவனிடம் போனிசியாவும் சிலிசியாவும் அனுப்பிய 300 போர்க் கப்பல்கள் ஒப்படைக்கப்பட்டன. அவனுடைய தலைமையில் அக் கப்பற்படை மிகவும் பலம் பொருந்தியதாக இருந்தது. பாரசிகப் போர்க் கப்பல்களின் பலக் குறையை முன்பே ஸ்பார்ட்டா அறிந்திருந்தது. அதனால் தனக்கு எதிராக வந்துகொண்டிருக்கிற அபாயத்தை அது உணர்ந்ததாகத் தோன்றவில்லை. அவர்கள் தங்கள் முழு கவனத்தையும் தரைச்சண்டையில் செலுத்தினார்களே தவிர தங்கள் ஆதிக்கம் நிலை பெறுவதற்குக் கப்பல் பலம் முதன்மையானதென்பதை உணராமல் அசட்டையாக இருந்தார்கள். இதனால் அவர்கள் ஓர் தவறு செய்து விட்டார்கள். போர்க் கப்பல்கள் எல்லாம் ஒன்று சேர்ந்து வருவதுவரை காத்திராமல், கோனோன் காரியாவிலுள்ள காவுனசுக்கு நாற்பது கப்பல்களுடன் புறப்பட்டான். ஸ்ப்பார்ட்டர் விழிப்படைந்தார்கள். கவுனுசைப் பாதுகாக்க 120 கப்பல்களை பாராக்ஸ் தலைமையில் அனுப்பினார்கள். துறைமுகத்தையும், துறைமுகத்திலுள்ள கோனோனுடைய கப்பற் படையையும் தடுத்து விடும்படி அவனுக்குக் கட்டளை யிட்டார்கள். தேர்சிள்ளிதாஸ் என்பவனையும் அங்கு அனுப்பினார்கள். டிஸ்ஸாபர்னேஸ், பர்னபாஸஸ் ஆகிய இருவரின் படைகள் ஒன்றாக இணைக்கப்பட்டன. அவர்கள் முதலில் காவுனஸ் முற்றுகையில் கவனம் செலுத்தினார்கள். இரண்டாவதாக அவர்கள் தெர்சிள்ளிதாஸை, மியாண்டர் பள்ளத்தாக்கிலே எதிர்த்தார்கள். ஸ்ப்பார்ட்டன் போர் வீரர்களில் சிலருக்கு ஏற்பட்ட பயம், ஸ்ப்பார்ட்டாவுக்குப் பாதகமாக முடிந்திருக்கும்.

டிஸ்ஸாபர்னேசுக்குப் பத்தாயிரம் போர் வீரர்களைப் பற்றிய அனுபவம் இருந்தது. ஆகையினால் அவர்களை அவன் எதிர்த்துப் போரிடுவதை விரும்பவில்லை. அவன் போர் நிறுத்தம் செய்வதற்குக் கட்டளையிட்டான். ஆனால் ஸ்ப்பார்ட்டா பாரசீகத்துடன் முழுபலத்தோடு, பெருமளவில் போர் தொடுப்பதெனத் தீர்மானித்து விட்டது. இப்போது :ஸ்ப்பார்ட்டாவின் படைக்குத் தலைமை தாங்க தெர்சிள்ளிதாசை விலக்கி விட்டு, அப் பதவி ஸ்ப்பார்ட்டன் மன்னன் ஒருவனுக்குக் கொடுக்கப்பட்டது.

எதிர்பாராத சூழ்நிலைகளினிமித்தம் ஏஜெஸிலாஸ் அண்மையில் ஆட்சிப் பொறுப்பேற்கும் பேறு பெற்றான். லைசாண்டர் பொது வாழ்க்கையிலிருந்து விலகி சீயஸ் அம்மோன் ஆலயத்திற்கு வழிபாடு செய்யப்போனபோது, அவன் தன்னுடைய பேராசையை விட்டுவிடவில்லை, அவனுடைய செல்வாக்கு அழிந்து விடவுமில்லை. அவன் ஸ்ப்பார்ட்டன் அரசியல் அமைப்பில் மாறுதலைக் கொண்டுவர ஓர் திட்டத்தை உருவாக்கினான். அத் திட்டம் ஓர் புரட்சிகரமான திட்டம். சட்டப்படி யூரிசெத்தநிட் (Eurysthenid), புரோகிளிட் (Proclid) என்ற இரு குடும்பங்களைச் சேர்ந்தவர்களே ஸ்பார்ட்ட அரசர்களாகப் பாரம்பரிய உரிமை பெற்றிருந்தனர். லைசாண்டர் அதை மாற்றி, அரசர்கள் ஹெராகிளிட்டுகளிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட வேண்டுமென்றமுறையைக் கொண்டுவரத் திட்டமிட்டான். ஸ்பார்ட்ட அரசன் நாம் வழக்கமாகக் குறிப்பிடும் பொருளில் கூறப்படுபவனல்ல. அவனுக்கு சர்வ அதிகாரம் கொடுக்கப்படவில்லை. அவன் ,நாட்டின் ஒரு பெரிய அதிகாரி. ஆனால் பரம்பரையாக அரசுரிமை பெற்றுவந்த வழக்கத்தை மாற்றித் தேர்வு முறையைக் கொண்டு வருவது ஓர் முக்கியத்துவம் வாய்ந்தது. லைசாண்டர் ஆயுள் காலம் வெளிநாட்டுப் படைத் தலைமைப் பதவியை ஏற்க வேண்டியதாயிற்று. அப்படிப்பட்ட பதவியை ஓர் அரசன் மட்டுமே வகிக்கக் கூடும். அதன்படி பதவிக்குரிய காலம் முடிந்தவுடனே அவனை விலக்கிவிடவோ அல்லது திரும்ப வரவழைத்துக் கொள்ளவோ இயலாது. இப்படிப்பட்ட நிலையான பதவி லைசாண்டருக்கு அளிக்கப்பட்டிருக்குமானால் அதன் விளைவு, புரோக்கிளிட் அல்லது யூரிசெத்தநிட் குடும்பத்தினர் வகித்துவந்த பதவியின் விளைவுக்கு மாறுபட்டிருந்திருக்கும். அரசனுக்கும் ஈப்பர் என்ற அரசகுருவுக்குமுள்ள அதிகார விகிதம் மாறி இருந்திருக்கும். பிரின்சிபேட் அல்லது முதன்மையானவன் என்ற அதிகாரத்தை அரசனுக்களிக்க வேண்டுமென்பது அவன் நோக்கம். ஸ்ப்பார்ட்டாவின் பேரரசுக் கொள்கைக்கு இந்தப் புதிய நிறுவனம் ஏற்றதாக இருக்குமென்பது லைசாண்டரின் கருத்து. இந்தத் திட்டங்களை அரசாங்கத்தைத் திடீரென்று கைப்பற்றி நிறைவேற்ற லைசாண்டர் விரும்பவில்லை. அவன் திட்டத்தைச்சமயச் செல்வாக்குடன் நிறைவேற்ற விரும்பினான்.

தன் திட்டம் நிறைவேற, தெய்வ வாக்குகளையும் இரகசியமாகப் பயன் படுத்திக் கொண்டான். ஆனால் தெய்வ வாக்குகள் அவனுடைய திட்டத்துக்கு எதிராக இருந்தன. மிகத் துணிச்சலான திட்டமென்று பூசாரிகள் நினைத்தார்கள். இருந்த போதிலும் டெல்பிக் பூசாரிகள் அவன் திட்டத்தை ஆதரித்தார்கள். அது நிறைவேறுவதற்கான தெய்வ வாக்கை அவர்கள் உருவாக்கினார்கள். டெல்பியில் புனிதமான பழைய ஏடுகள் பாதுகாப்பில் வைக்கப்பட்டிருக்கின்றவென்றும், அப்பாலோவின் மகன் ஒருவனுக்கு மட்டும் அதன் உண்மை வெளிப் படுத்தப்படும் என்றும் ஓர் பொய்ச் செய்தியை அவர்கள் பரப் பினார்கள். அதே சமயத்தில் சிலேநஸ் என்ற ஓர் வாலிபன் இருக்கிறானென்றும், அவனுடைய தாய் அப்போல்லோவே அவனுடைய தந்தை யென்று கூறுவதாகவும் மற்றொரு பொய்க்கதையைப் பரப்பினார்கள். அத் திட்டம் முறிந்துவிட்டது. சதித்திட்டத்தில் ஈடுபட்ட ஒருவன் தனக்கு அளிக்கப்பட்ட வேலையைச் சரிவரச் செய்யவில்லை. ஸ்பார்ட்டன் கோனாட்சி முறை பற்றிய தெய்வ வாக்கு வெளிப்படுத்தப்படவில்லை. லைசாண்டர் தன்னுடைய புரட்சிகரமான கொள்கையை விட்டு விட்டான். அஜீஸ் (Agis) மன்னன் இறந்து விட்டான். லைசாண்டர் அந்த சந்தர்ப்பத்தைப் பயன் படுத்திக் கொள்ள முயன்றான். அவன் தன்னுடைய கைப்பாவையாக ஒருவனை அரசுக் கட்டிலில் அமர்த்த விரும்பினான். சட்டப்படி அஜீஸ் மன்னனுடைய மைந்தன் லியோட்டிச்சிடாஸ் அரசுரிமையைப் பெற வேண்டும். ஆனால் அவன் அஜீஸ் மன்னனுக்குச் சட்டபூர்வமாகப் பிறந்தவனல்லன். ஆல்சிபியாடிசுக்குப் பிறந்தவனென்று பொதுவாக நம்பப் பட்டது. ஐயப்பாட்டின் காரணமாக லியோட்டிச்சிடாசை (Leotychidas) ஒதுக்கி விட்டு, அஜீஸ் மன்னனுடைய மாற்றாந்தாயின் மகன் அஜிஸ்லாஸை, லைசாண்டரின் செல்வாக்குடன் அரசனாக்கினார்கள்.

லைசாண்டர் இவனை அரசனாக்கியதில் ஏமாற்ற மடைந்தான். அஜிஸிலாஸ் தன்னுடைய கைப் பொம்மையல்ல வென்பதை லைசாண்டர் புரிந்து கொண்டான். அஜிஸிலாஸ் இதுவரையில் தன்னுடைய பண்பின் ஒரு பகுதியையே காட்டியுள்ளான். அவன் தன்னுடைய இளமைப் பருவமுதல் லைகர்கஸ் ஏற்படுத்திய சட்டதிட்டங்களனைத்தையும் விடாமல் கடைப்பிடித்து வந்தவன். கடமைகளனைத்தையும் அவன் மகிழ்ச்சியோடும் பணிவோடும் செய்து வந்தவன். அவன் சாந்தமும் பணிவுமுள்ளவனென்பதை எல்லோருமறிய நடந்து கொண்டான். பிற குடிமக்களைவிடத் தான் பெரியவன் என்றோ, அதிகாரமுள்ளவனென்றோ அவன் ஒருபோதும் காட்டிக் கொண்டதில்லை. ஆனால் ஸ்பார்ட்டக் கட்டுப்பாடு என்ற திரைக்குள் அவன் தற்பெருமையையும், பேராசையையும் மறைத்துவைத்திருந்தான். யாரும் இப் பண்பைச் சந்தேகப்பட்டதில்லை. அவன் வீரமும், ஆற்றலும்

உள்ளவனுக இருந்தபோதிலும் உருவத்தில் மிகச் சிறியவன்; நொண்டி; அவன் அரசுக் கட்டிலுக்காக உரிமை கொண்டாடிய போது அவன் அங்கவீனன் என்று பல எதிர்ப்புகள் எழுந்தன. அங்கவீனனுன ஒருவனே அரசு கட்டிலில் அமர்த்துவதில் ஜாக்கிரதையாக இருக்கவேண்டுமென்று ஓர் தெய்வ வாக்கு முன்பே கூறியுள்ளது. தெய்வவாக்குகள் யாவையும் சந்தர்ப்பத்திற்கு ஏற்றவாறு புறக்கணிக்கப் படுவதைப் போலவே இந்த எச்சரிக்கையும் புறக்கணிக்கப்பட்டது. அங்கவீனமென்பதில் தெய்வ வாக்கு, உடல் சம்பந்தமான அங்கவீனத்தைக் குறித்துக் காட்டவில்லே. ஹெராக்ளீஸ் குடும்பத்துக்குச் சொந்தமில்லாத ஒருவன் அரசனுவதைப் பற்றிக் குறிப்பிடுகிறதென்று லைசாண்டர் சொன்னுன். தெய்வ வார்த்தையின்ரி சயான பொருளே ஏற்கும் ஸ்பார்ட்ட மக்கள், அஜிஸிலாஸ் அரசுக் கட்டில் ஏறியதை விரும்பவில்லே.

இந்தப் புதிய அரசன் தனக்கு மற்றவர்களேக் காட்டிலும் வியக்கத் தக்க சுயஅறிவும் கொள்கையும் உண்டென்பதை வெளிப்படையாகக் காட்டிவிட்டான். மற்ற அரசர்கள் ஆணவத்தினுலும் செருக்கினுலும் அடைய முடியாத உண்மையான அதிகாரத்தை, இவன் எளிதில் அடைந்தான். அவன் எல்லோரோடும் இணக்கமாக இருந்தான். அவன் சாதாரண ஓர் குடிமகனேப் போல் எளிய வாழ்க்கை நடத்தி வந்தான். அவன் தன் நண்பர்களிடம் மாருத உண்மையோடு நடந்து கொண்டான். இந்த நற்பண்பு அவனுடைய நண்பர்களிழைத்த குற்றங்களிலிருந்து அவர்களேப் பாதுகாக்க முயன்றபோது, கேடாக முடிந்தது.

அவன் அரசுக்கட்டில் ஏறிய சிறிது நாளேக்குள் ஸ்ப்பார்ட்டாவில் ஓர் நெருக்கடியான சம்பவம் நிகழ்ந்தது. அப்போதிருந்த சமூக நிலேயை அது விளக்குகின்றது. அப்போது ஸ்ப்பார்ட்டா வெளிநாடுகளில் தன்னுடைய பேரரசை நிலேநாட்டப் பாடுபட்டுக்கொண்டிருந்தது. உள்நாட்டில் ஏற்பட்ட நெருக்கடி அதனுடைய பேரரசுக்கு ஆபத்து விளேவித்தது. அதனுடைய வாணிகம் ஓங்கியிருந்தது. திரண்ட செல்வம் குவிந்தது. அதன் காரணமாக உள்நாட்டில் செல்வத்தின் சமநிலே பாதிக்கப்பட்டது. சமூகத்திலிருந்த உயர்வு தாழ்வு நிலேயில் மாறுதல் ஏற்பட்டது. ஸ்ப்பார்ட்டன் பிரபுக்கள் அல்லது முழுக் குடியுரிமை பெற்றவர்களின் எண்ணிக்கை நாளடைவில் குறைந்துகொண்டே வந்தது. சிஸிஸ்ட்டியா என்ற வரி கொடுக்க முடியாத நிலேயிலுள்ள ஏழைகளின் எண்ணிக்கை அதிகரித்துக் கொண்டே வந்தது. அதாவது பிரபுக்களின் எண்ணிக்கை குறைந்து ஏழைகள் பெருகினர். அவ் வரியை அவர்களால் கொடுக்க முடியாத அளவில் போனபடியால் அவர்கள் குடிமக்கள் உரிமையை இழந்

தார்கள் அப்படிப் பட்டவர்களை ஸ்ப்பார்ட்டா பெரியோசி (Perioeci) இனத்துடன் சேர்த்து விடவில்லை. இவர்களை ஓர் தனி இனமாக, தாழ்த்தப்பட்டவர்கள் (Inferiors) எனப் பாவித்தது. வரிப் பணம் கட்டிவிட்டால் இவர்கள் மறுபடியும் குடிமக்கள் உரிமையைப் பெற லாம். ஆனல் கீழ்த்தரமானவர்கள் என்றழைக்கப்பட்ட ஏழைகள் திருப்தி பெருத் தனி இனமாக மாறிவிட்டார்கள். இவர்கள் பெரி யோசி, ஹெலாட்ஸ் ஆகிய இனத்தவர்களுடன் சேர்ந்து, அரசாங்கத் தைக் கவிழ்க்கச் சதித்திட்டம் வகுப்பார்களோ என்ற பயம், சிறு குழு ஆட்சிக் கொள்கையரான பிரபுக்களுக்கிருந்தது. ஸ்ப்பார்ட்டாவில் ரகசிய ஊர்க்காவல் படையொன்று நிறுவப்பட்டது. தாழ்த்தப்பட் டவர்கள் தயாரித்த சதித் திட்டம் ஒன்றை அப் படை கண்டுபிடித்து, அது நிறைவேருவண்ணம் தடுக்கப்பட்டது. இந்த சதித் திட் டத்திற்குத் தலைமை தாங்கியவன் சினடோன் (Cinadon) என்பவன். அவன் கீழ்த்தரமான வகுப்பைச் சேர்ந்தவன். அவன் ஓர் பலமுள்ள வீரன். அவன் சந்தை வெளியில், ஸ்ப்பார்ட்டர்களுடைய எண் ணிக்கை குறைவானதென்றும், அவர்களது பகைவர்களுடைய எண் ணிக்கை மிகையானதென்றும், ஒவ்வொரு ஸ்ப்பார்ட்டனுக்கு நூறு பகைவர்கள் வீதம் இருக்கிருர்கள் என்றும் அவன் சொன்னதாக அவன் மீது குற்றம் சாட்டப்பட்டது. தாழ்த்தப்பட்டவர்கள், நியோடா மோட்ஸ், பெரியோசி, ஹெலாட்ஸ் ஆகியோர் அவனுடைய கூட் டாளிகள்; 'அவர்களில் யாராவது ஒருவன் ஸ்ப்பார்ட்டனைப் பற்றிப் பேசுவதைக் கேளுங்கள்; அவன் அவர்களைப் பச்சையாக விழுங்கி விடு வதைப் போல் பேசுகிருன்.' சதித் திட்டத்தில் ஈடுபட்டவர்களுக்கு ஆயுதங்கள் எங்கிருந்து கிடைக்குமென்று அவனிடம் கேட்கப்பட்டது. அதற்கு அவன் சந்தைக் கடைகளிலுள்ள கொல்லர்களிடமிருந்து கிடைக்குமென்றும், ஒவ்வொரு கூலியாளும், அடிமையும் கருவிகளை வைத்திருக்கிருர்களென்றும் அவன் பதிலுரைத்தான். அவனை ஸ்ப் பார்ட்டன் நாட்டு அரச நீதிபதிகள் அடிக்கடி ஊர்க்காவல் பணி செய் வதற்கு அனுப்புவதுண்டு. அவனை அவர்கள் வரவழைத்தார்கள். உளவறிவதற்கு அவனை அவர்கள் அனுப்பினர்கள். அவனுக்குப் பாது காப்பாகச் சிலரை அவனுடன் அனுப்பினர்கள். பாதுகாப்புக்காகச் சென்றவர்கள் அவனை வழியில் கைது செய்தார்கள். அவனுடைய கூட்டாளிகளின் பெயர்களைச் சொல்லும்படி அவனைச் சித்திர வதை செய்தார்கள். ஸ்ப்பார்ட்டாவுக்குள் அவனைக் கைது செய்வது ஆபத்தானது. அவனுடைய கூட்டாளிகளுடைய பெயர்களை அவன் சொல்வதற்குமுன், அவனைக் கைது செய்த செய்தி எங்கும் பரவிற்று. சதித்திட்டம் அவன் வகுத்ததற்குக் காரணம் கூறும்படி அவனிடம் கேட்கப்பட்டது. 'நான் ஸ்ப்பார்ட்டாவில் யாருக்கும் கீழ்த்தரமான வனக இருக்க விரும்பவில்லை' என்று அவன் பதிலுரைத்தான். நகரத்தைச் சுற்றி அவனைக் கொண்டு வரும்போது கசை

யால் அடித்தார்கள். அவனையும் அவன் கூட்டாளிகளையும் கொன்றார்கள்.

மற்ற நாடுகளுடைய வரலாறுகளை நாம் நினைவுபடுத்திக் கொள்ளும்போது, பெருவாரியான மக்களின் மனக் குறைகளையும், சினடோன் செய்த சதித் திட்டத்தையும், தன்னுடைய பேராசையை நிறைவேற்ற, லைசாண்டர் ஏன் பயன்படுத்தவில்லை என்று வியப்படைகின்றோம். தன்னுடைய இன மக்களின் நலனுக்கு எதிராக எந்தப் பிரபு இனத்தவனும் ஸ்ப்பார்ட்டாவில் நடந்துகொள்ளமாட்டான்.

## 4. அஜிஸிலாசின் ஆசியப் போர்கள்—சினிடஸ் யுத்தம்

தெர்சிள்ளிதாசுக்குப் பதிலாக அஜிஸிலாஸ் போர்க்களம் செல்ல வேண்டுமென ஏற்பாடாயிற்று. அவனுடன் 2000 நியோடாமோட்ஸ்களும் முப்பது ஸ்ப்பார்ட்டன்களைக் கொண்ட ஓர் போர்க்குழுவும் அனுப்பப்பட்டன, அப் போர்க் குழுவில் லைசாண்டருமிருந்தான்.

சைரசும் அவனுடன் 10,000 போர் வீரர்களும் செய்த படையெடுப்பின் விளைவால், கிரேக்கர்களுக்குப் பாரசீகத்தின் மீதிருந்த அபிப்பிராயம் புரட்சிகரமான மாறுதலையடைந்ததென்றும், பாரசீகத்தின் பேரரசு பலமற்றதென்ற எண்ணம் எங்கும் பரவி வந்ததென்றும், இந்தச் சமயத்தில் ஸ்ப்பார்ட்டாவின் திட்டங்களிலிருந்து நாம் தெளிவாக அறிகின்றோம். ஓர் வீரமுள்ள கிரேக்கன் பாரசீகப் பேரரசை எளிதில் வென்று விடலாமென்று ஸ்பார்ட்டன் தலைவர்கள் கருதியதாகத் தோன்றிற்று. இப்போது தன்னுடைய பேராசைப் பண்பை வெளிப்படையாகக் காட்ட ஆரம்பித்த அஜிஸிலாஸ் மன்னன், பேரரசனை எளிதில் அரசுக்கட்டிலிலிருந்து விரட்டி விட முடியுமென்றும், ஆசியக் கடற்கரையைப் பாரசீக ஆதிக்கத்திலிருந்து விரைவில் விடுவித்து விடலாமென்றும் மனக் கோட்டை கட்டினான். ஆனால் அவனது 60 ஆண்டுக் காலம் விரைவில் முடிந்து விட்டது. முடிவற்ற பிரச்சினையைத் தீர்த்து வைக்க மதிப்பிற்குரிய இந்த ஸ்பார்ட்டன் தகுதியற்றவன். அவன் ஓர் புதிய திராய் (Troy) நகரைக் கைப்பற்றப்போகும் அகமெம்னோன் (Agamemnon) என்று தன்னைக் கருதிக் கொண்டான். 'மக்கள் அரசன்' இலியம் நாட்டிற்கு கிரேக்கர்களை அழைத்துக் கொண்டுபோவதற்கு முன் செய்ததைப் போல், இவனும் தன்னுடைய படையின் ஒரு பகுதியை அவுலிஸ்லிருந்து (Aulis) ஆர்டிமிஸ் ஆலயத்தில் தெய்வ வழிபாடு செய்ய அழைத்துச் சென்றான். அஜிஸிலாஸ் பாரசீகப் பேரரசை வீழ்த்தி இருப்பானாகில், ஆவன் அவுலிஸில் செய்த

தெய்வ வழிபாட்டால் வாழ்க்கையில் நினைப்பதெல்லாம் நிறைவேறு மென்று நம்பி இருக்கிறவனுக்கு ஓர் எடுத்துக் காட்டாக இருந்திருக் கும். தெய்வ வழிபாடு ஒழுங்கான முறையில் நடைபெறுதபடியால் அவன் பாரசிகத்தில் புரிந்த செயல்கள் வரலாற்றில் நகைப்புக்கு இட மாக அமைந்து விட்டன. அந்தக் கோயிலில் பலியிட்டு வழிபாடு செய்வதற்கு அவன் திபன் நாட்டு மக்களின் அனுமதி பெறவில்லை. அதனால் போர்க்கோலம் பூண்ட வீரர் கூட்டம் அங்கு வந்து, வழிபாடு சரிவர நிறைவேறுமல் தடுத்து விட்டது. இந்த அவமானத்தை அஜிஸி லாஸ் ஒருபோதும் மன்னித்து விடவில்லை.

யுத்தத்தில் உண்மையான படைத்தலைமை தனக்குக் கொடுக்கப் படுமென லைசாண்டர் எதிர் பார்த்திருந்தான். அப் படை ஆசியா வுக்கு வந்தபோது அந்த நம்பிக்கையின் அடிப்படையில் அவன் நடந்து கொண்டான். விரைவில் அவனுடைய தவறுன எண்ணம் நீங்கிற்று. அஜிஸிலாஸ் பெயரளவில் படைத்தலைமை தாங்க விரும்பவில்லை. லைசாண்டரின் விருப்பப்படி நடந்து கொள்ள அவனுக்கு மனமில்லை- லைசாண்டர் மூலமாக வந்த பல மனுக்களை அவன் நிராகரித்து விட் டான். அவனுடைய இக் கொள்கை பயன் விளைவித்தது. லைசாண்டர் தனக்கேற்பட்ட அவமானத்தைப் பொறுத்துக் கொண்டு அங்கிருக்க விரும்பவில்லை. ஆகையினல் லைசாண்டர் தன்னை ஹெல்லஸ் பாண்டுக்கு அனுப்பும்படி அஜிஸிலாசைக் கேட்டுக் கொண்டான். அஜிஸிலாஸ் அதற்கு இணங்கினன். ஹெல்லஸ்பாண்டுக்குச் சென்ற லைசாண்டர் ஸ்பார்ட்டாவுக்குப் பயன் தரும் பணிகளைச் செய்து வந் தான். அதே சமயத்தில் பாரசிக அதிபதிகள் தேர்சிள்ளிதாசுடன் செய்து கொண்ட தற்காலிக உடன்படிக்கையை இப்போது அஜிஸி லாசின் ஒப்புதலுடன் போரில் புதுப்பித்துக் கொண்டார்கள். ஆனல் அவ்வுடன்படிக்கை டிஸ்ஸாபெர்னஸால் முறிவடைந்தது. அஜிஸி லாஸ் காரியாவை நோக்கி முன்னேறிச் சென்றுன். அங்கிருந்து அவன் பிரிஜியாவுக்கு வடக்கு நோக்கிப் பிரயாணம் செய்தான். அவன் பர்னபாஸஸ் மா நிலத்தின் மீது படை எடுத்துச் சென்றுன். இங்கே அவன் குறிப்பிடத் தக்க செயல் எதையும் செய்து விடவில்லை. ஆனல் கொள்ளைப் பொருள்கள் வந்து குவிந்தன. அவைகளைத் தனக்குச் சொந்தமாக்கிக் கொள்ளாமல் அவன் தன் நண்பர்களுக்கும், தன்னு டைய அன்புக்குரியவர்களுக்கும் வழங்கினன். ஸெனப்பன் அஜிஸிலா சின் வாழ்க்கையும் பண்பும் என்ற ஒரு நூல் எழுதி இருக்கிறுன். அந் நூல் இந்த யுத்த சம்பந்தமான பல குட்டித் கதைகளைக் கூறுகிறது. பொதுவாகப் பார்க்கும்போது நான்காம் நூற்றுண்டில் வாழ்ந்த கிரேக்கர்கள், ஐந்தாம் நூற்றுண்டில் வாழ்ந்த கிரேக்கர்களைவிட மனிதப் பண்பாடு மிக்குடையவர்கள். அஜிஸிலாஸ் தன்னிடமுள்ள கைதிகளைக் கொடுமையிலிருந்து தடுத்துக் காப்பாற்றினன். அவர்

களை மனிதர்களாகவே நடத்த வேண்டுமே தவிர குற்றவாளிகளாக நடத்தக் கூடாது என்பது அவனுடைய கொள்கை. சில சமயங்களில் அடிமை வியாபாரிகள் அவன் படை தங்கியிருக்குமிடத்திற்கு அருகில் சென்று கொண்டிருப்பார்கள். அவர்கள் விலைக்கு வாங்கிய குழந்தை களைச் சாலையோரங்களில் நிர்க்கதியாக விட்டு விட்டுப் போய் விடுவார் கள். அவர்கள் பசியினால் இறந்து போகாமலும் ஓநாய்களால் கொல்லப் படாமலும் இவன் காப்பாற்றினான். அந்த அநாதைக் குழந்தைகளை சாலைகளிலிருந்து எடுத்து வந்து, 'கைது செய்யமுடியாத அளவு முதுமையடைந்த சுதேசிகளிடம் ஒப்படைத்து, அவைகளை வளர்த்து வரும்படிக் கட்டளையிட்டான். ஆனால் அக் கைதிகளைக் கொண்டு தன் போர் வீரர்களுக்குத் தக்க பாடம் கற்றுக் கொடுக்க அவன் தயங்கிய தில்லை. அதனால் அக் கைதிகள் மனம் புண்படுவதையும் அவன் பொருட்படுத்துவதில்லை. குளிர் காலத்தில் எபேசஸ் என்ற இடத்தில் போர் வீரர்களுக்கு உடற்பயிற்சியளிக்கப் பட்டது. நல்ல பயிற்சிக் கும் கெட்ட பயிற்சிக்குமுள்ள வேறுபாட்டைத் தன் போர் வீரர்களுக் குக் காட்ட விரும்பினான். கைதிகளை ஏலங்கூறுவதற்குக்கொண்டு வந்து நிர்வாணமாக நிறுத்தும்படிச் சொன்னான். அவர்களுடைய பலமற்ற தசையையும், வெளுத்த தோலையும், மிருதுவான அவைய வங்களையும் கிரேக்கர்களுக்குக் காட்டுவித்தான். ஆசியா நாட்டு மக்கள் தங்கள் உடல்களை, வெப்பதட்பத்தால் பாதிக்கப்படாமல் காத்து, உடற்பயிற்சியால் வல்லமை பெறுமல் வைத்துக் கொள்கிறார் கள் என்று கிரேக்கப் போர் வீரர்கள் உணரும்படிச் செய்தான். அந் தக் காட்சி கிரேக்கர்களுக்கு, தாங்கள் உடற்பலத்தால் மேலானவர் கள் என்ற உணர்ச்சியைத் தோற்றுவித்தது. அஜிஸிலாஸ் கைதிகளை அவமானப்படுத்த வேண்டுமென்ற எண்ணத்துடன் அதைச் செய்ய வில்லை. அது அக் கைதிகளை வருத்தியதாகும். உடற்பயிற்சிக்காக கிரேக்கர்கள் தங்கள் உடைகளைக் கழற்றி விடுவார்கள். ஆனால் ஆசிய நாட்டு மக்களுக்கு நிர்வாணமாக நிற்பது நாணமான செயலாகக் கருதப்பட்டது.

குளிர்காலத்தில் அஜிஸிலாஸ் ஓர் குதிரைப் படையைத் தயார் செய்தான். வசந்த காலத்தில் போர்க்களத்தை நோக்கிப் புறப்பட் டான். சார்டிசுக்குச் சமீபத்தில் பேக்டோலஸ் (Pactolus) என்ற இடத்தில் டிஸ்ஸாபர்னசை அஜிஸிலாஸ் தோற்கடித்தான். அவ னுடைய தோல்வியைப்பற்றி சூசாவில் குறைகூறப்பட்டது. பேரரச னின் தாயாகிய பாரிசாதிஸ் டிஸ்ஸாபர்னேசை ஒருபோதும் மன்னிக்க வில்லை. தன்னுடைய அருமைமகன் சைரசின் அழிவுக்குக் காரணமாக இருந்தவனை ஒழிக்கும் ஒரு சந்தர்ப்பத்திற்காக, அவள் காத்துக் கொண்டிருந்தாள். இப்போது அவன் வீழ்ச்சிக்காக அவள் எடுக்க வேண்டிய முயற்சிகளை எல்லாம் எடுத்துக்கொண்டாள். தித்ராஸ்ட்டஸ்

(Tithraustes) அதிபதியாக நியமிக்கப்பட்டான். டிஸ்ஸாபர்னேஸ் பதவியிலிருந்து விலக்கப்பட்டுக் கொல்லப்படுமாறு தித்ராஸ்டசுக்கு ஆணையிடப்பட்டது. தித்ராஸ்ட்டஸ் அஜிஸிலாசுக்கு ஓர் சமரச திட்டத்தைக் கொடுத்தான். அதன்படியே அஜிஸிலாஸ் ஆசியாவை விட்டு வெளியேறிவிட வேண்டியது. கடற்கரையிலுள்ள கிரேக்க நகரங்களுக்குச் சுதந்திரம் அளிக்கப்படும். ஆனால் அவர்கள் முன்பு செலுத்தி வந்த திறையைப் பாரசீகத்துக்கு அனுப்பிவிட வேண்டியது. ஸ்பார்ட்டாவின் அனுமதியில்லாமல் அஜிஸிலாஸ் இந்த திட்டத்தை ஒப்புக்கொள்ள முடியவில்லை. ஆகையால் இருவருக்கு மிடையே ஆறுமாத காலத்திற்கு ஓர் தற்காலிக உடன்படிக்கை ஏற் பட்டது. அந்த உடன்படிக்கையை அஜிஸிலாஸ் பாரசீகப் பேரரச னுடன் செய்துகொள்ளவில்லை. தித்ராஸ்டசுடன் மட்டும் செய்து கொண்டான். இப்போது அவன் பர்னபாசசை எதிர்த்துப் போரிட ஆயத்தமானான்.

பிரிஜியாவில் (Phrygia) அவனுடைய இரண்டா முறை படை எடுப்பின் போது ஸ்ப்பார்ட்டன் மன்னனுக்கு, ஒட்டிஸ் என்ற பாபில கோனியன் (Paphlagonian) இளவரசனும் முன்பு லைசாண்டரால் புரட்சி செய்யுமாறு தூண்டப்பட்ட பாரசீகப் பிரபுவான ஸ்பித்ரி டேட்சும் (Spithridates) உதவி புரிந்தார்கள். பர்னபாஸஸ் வசித்து வந்த டாசிளியோன் (Dascylion) மதில் சுவர் வரையில் படைஎடுத் துச் சென்று, அம் மாநிலம் சூறையாடப்பட்டது. ஸ்பார்ட்டன் படைகள் அருகிலிருந்த பூங்கா வனங்களில் தங்கியிருந்தனர். அங்கே அவர்களுக்கு வேண்டிய பறவைகளும் மீன்களும் கிடைத்தன. பர்ன பாசஸ்ஸின் எல்லா உடைமைகளும் கைப்பற்றப்பட்டன. அஜிஸிலா சுக்கும் அவனுக்கு உதவியாக வந்த ஆசிய நாட்டினருக்கும் கொள்ளைப் பொருள்களைப் பங்கிடுவதில் ஏற்பட்ட பூசலால் அவர்கள் அஜிஸி லாசை விட்டு விலகிச் சென்றார்கள். அவர்களை விட்டுப் பிரிவதற்கு அஜிஸிலாஸ் மிகவருந்தினான். ஏனென்றால் ஸ்ப்பித்திரிடேட்ஸின் மகனான ஓர் அழகிய இளைஞனிடம் அவனுக்குத் தனிப்பட்ட அன் பிருந்தது. கிரேக்கர்கள் பிரிஜாவை வென்று விட்டார்கள். அவ் வெற்றியின் காரணமாக பர்னபாசஸும் அஜிஸ்லாசும் ஒருவரையொரு வர் சந்தித்துப் பேசும் வாய்ப்பு ஏற்பட்டது. அஜிஸிலாஸ் குறிப்பிட்ட இடத்திற்கு முதலில் போய்ச் சேர்ந்தான். அங்கே அவன் புல்தரையில் உட்கார்ந்து கொண்டு பர்னபாஸஸின் வரவுக்காகக் காத்திருந்தான். பர்னபாஸஸுனுடைய பணியாட்கள் விலைமதிப்பற்ற கம்பளங்களை தங்கள் தலைவனுக்காகக் கொண்டு வந்து தரையில் விரித்தார்கள். பர்னபாஸஸ் அஜிஸிலாஸ் எளிமையாகத் தரையில் அமர்ந்திருப்பதைக் கண்டு தானும் அவன் பக்கத்தில் போய் இருந்து கொண்டான். இருவ ரும் கைகுலுக்கிக்கொண்டார்கள். அப்போது பர்னபாஸஸ் சிறப்பான

மொழியில் தன் குறையை 'எடுத்துரைத்தான். ஸ்ப்பார்ட்டா ஏதென்சுடன் போரிட்டபோது நான் ஸ்ப்பார்ட்டாவின் உண்மையான நண்பனுக இருந்தேன். அதனுடைய வெற்றிக்கு நான் உதவி புரிந்நான் அதற்கு டிஸ்ஸாபர்னேசைப் போல வஞ்சகமாக நடந்து கொள்ளவில்லே. நான் செய்த எல்லா நன்மைகளுக்காக என்னுடைய சொந்த மாநிலத்தில் எனக்கு ஒரு வேளே உணவு கூடக் கிடைக்காத நிலேக்கு என்னேக் கொண்டு வந்து விட்டீர்கள். என்னுடைய பூங்காவனங்கள், வேட்டைக் காடுகள், வீடுகள் ஆகியவற்றை அழித்தீர்கள் அல்லது தீக்கிரையாக்கினீர்கள். இது நீதியா அல்லது நன்றியா ?' நீண்ட நேர அமைதிக்குப்பின் அஜிஸிலாஸ், தாங்கள் பாரசீகப் பேரரசனேடு போரிடுவதால் எல்லாப் பாரசீக நாடுகளேயும் பகைவர்களாகவே கருத நேர்ந்துவிட்டது என்று கூறினுன். பாரசீகப் பேரரசனுக்குப் பணிந்து நடப்பதை விட்டுவிட்டு, ஸ்ப்பார்ட்டாவின் நண்பனுகி விடும்படி அவன் சொன்னுன். அதற்கு பர்னபாஸஸ் கூறியதாவது: 'அரசன் வேறு ஒருவனே அதிபதியாக நியமித்து, என்னே அவனுக்குக் கீழ்ப்பட்டு நடக்கும்படிச் செய்வானுகில் அப்பொழுது நான் மகிழ்ச்சியோடு உன்னுடைய நண்பனுக இருப்பேன். நேச நாட்டானுமாவேன். ஆனுல் இப்பொழுது நான் அவனுக்காகப் படைத் தளபதிப் பதவியைத் தாங்கியுள்ளேன். அதனுல் என் முழு பலத்தோடும் உன்னேடு போர் புரிவேன்.' பொருத்தமான இந்த விடையைக் கேட்டு அஜிஸிலாஸ் மகிழ்ச்சியடைந்தான். அஜிஸிலாஸ் கூறியதாவது: 'நான் உன்னுடைய நாட்டை விட்டு உடனே வெளியேறுவேன். நான் வேறு பலருடன் போரிட இருப்பதால் வருங்காலத்தில் உன்னுடைய வார்த்தைக்கு மதிப்பளிப்பேன்.' இருவரும் பிரியாவிடை பெற்ருர்கள். பர்னபாஸஸ் அவ்விடத்தை விட்டு அகன்ருன். அவனுடைய அழகுவாய்ந்தமகன்அவ்விடத்தை விட்டுப் புறப்படாமல் தயங்கி நின்ருன். 'நான் உங்களே என் விருந்தினராக்குவேன்' என்று கூறினுன். அஜிஸிலாஸுக்கு ஓர் ஈட்டியைக்கொடுத்தான். அஜிஸிலாஸ் அவனது நட்பை ஏற்றுக் கொண்டான். தன்னுடைய அமைச்சனுடைய குதிரையின் ஆபரணங்களே அவனுக்குக் கொடுத்தான். இந்தச் சம்பவத்தினுல் ஓர் விளேவு ஏற்பட்டது. பின்னுல் வந்த ஆண்டுகளில் இந்த வாலிபனுடைய சகோதரர்கள் இவனேக் கொடுமைப் படுத்தினுர்கள். அதனுல் அவன் கிரீசுக்கு ஓடி வந்து அடைக்கலம்புகுந்தான். அப்போது அவன், விருந்தாளி நண்பனுகிய அஜிஸிலாசின் ஆதரவைத் தேடியது விணுகிவிட வில்லே.

அஜிஸிலாஸின் பிரிஜியா (Phrygia) வெற்றி அவனே ஆசிய மைனரின் (Asia Minor) உள் பகுதியிலுள்ள நாடுகளின்மீது படை எடுத்துச் செல்லத் தூண்டியது. அதே சமயத்தில் முக்கிய காரியங்களேத் தவருக நடத்திவிட்டான். அவன் பர்னபாஸஸை எதிர்த்துச் செல்வதற்கு முன்

ஸ்ப்பார்ட்டாவின் கடற்படைக்குப் பிரதம தலைவனாக நியமிக்கப்பட்ட செய்தி ஸ்ப்பார்ட்டாவிலிருந்து வந்தது. போதுமான வகையில் கப்பற் படையை ஆயத்தப்படுத்த வேண்டியதாயிற்று. கோனேன் (Conon) எண்பது கப்பல்களுடன் ரோட்ஸ் (Rhodes) தீவைக்கலகம் செய்யுமாறு தூண்டினான். அத்துடன் அவன், எகிப்திய இளவரசன் லாசிடமோனியர்களுக்கு (Lacedaemians) அனுப்பிய தானியக் கப்பல்களைக் கைப்பற்றினான். அவனுடைய மற்றக் கப்பல்கள் இன்னும் போர்ப் பணிக்குத் தயாராகவில்லை. தீவுகள், கடற்கரை நகரங்களின் செலவில் அவன் 120 முத்துடுப்புகளையுடைய கப்பல்களைப் போருக்கு ஆயத்தம் செய்வதற்கான முயற்சியிலீடுபட்டிருந்தான். ஆனால் அவன் ஒரு பெருந் தவறு செய்து விட்டான். அந்தக் கப்பற் படைக்குத் தலைமைதாங்கும் பணியை அனுபவமற்ற தன்னுடைய மைத்துனன் பிஸாண்டருக்கு (Pisander) கொடுத்துவிட்டான். பிரிஜியன் படையெடுப்பிற்குப்பின் அஜிஸிலாஸ் ஐரோப்பாவிற்கு வருமாறு ஆணையிடப்பட்டான். அதற்கான காரணங்கள் பின்னர் கூறப்படும். கோனேன் பேரரசனை நேரில் சந்தித்து, ஊக்கமூட்டி. தேவையான நிதியைப் பெற சூசாவுக்குச் சென்றிருந்தான். பர்னபாஸசும் கோனேனும் சேர்ந்து கடற் படைக்குத் தலைமை வகித்தார்கள். நடுக் கோடையிலே கோனேன், பர்னபாசஸ் ஆகிய இருவரின் கடற்படைகள் சிசிலியாவின் கடற் பகுதியை விட்டுப் புறப்பட்டு, சினிடியான் (Cinidian) தீபகற்பத்தின் கடற்கரைக்கு வந்து சேர்ந்தன. அவைகளின் 'எண்ணிக்கை இவ்வளவென்று தெரியாது. சினிடஸ் (Cnidus) துணிச்சலான வீரத்தோடு பாரசிகக் கடற்படையை எதிர்க்க வந்தான். பிசாண்டரின் போர்க் கப்பல்கள், பாரசிகப் போர்க் கப்பல்களைவிட எண்ணிக்கையில் குறைந்தன. அதனுடைய முடிவைப்பற்றி ஐயமுறத் தேவையில்லை. பிசாண்டரின் கீழிருந்த ஆசியத் துணைப்படைகள் போரிடாமல் அவனைக் கைவிட்டன. எஞ்சியவற்றில் பல கைப்பற்றப்பட்டன. அல்லது மூழ்கடிக்கப்பட்டன. போரில் பிசாண்டர் கொல்லப்பட்டான். ஆசியாவிலிருந்த கிரேக்கப் பட்டினங்கள், ஸ்ப்பார்ட்டக் காவற் படையினரை அங்கிருந்து துரத்திவிட்டன. அவைகள் பாரசிகத்தின் ஆதிக்கத்தை ஏற்றுக்கொண்டன. இவ்விதமாகக் கோனேன் பாரசிகக் கடற்படைத் தலைவரின் மாறுவேடத்தில், ஏதென்ஸின் பழியைத் தீர்த்துக்கொண்டான். எளிதில் வெற்றியளித்த எகோஸ் போட்டாமிப் (Aegospotami) போரின் வெற்றியை கோனேன் துடைத்தெறிந்தான். ஸ்ப்பார்ட்டாவின் கடலாதிக்கம் அழிக்கப்பட்டது. அதனுடைய பேரரசின் உறுதியற்ற அடித்தளங்கள் பெயர்த்தெறியப்பட்டன.

## 5. பெலப்போனிசிய வாயிலில் ஸ்ப்பார்ட்டா (கொரிந்திய யுத்தம்)

அதே சமயத்தில் ஸ்ப்பார்ட்டா தன்னுடைய நாட்டுக்கு அண்மையில் ஏற்பட்ட நெருக்கடியினால் அவதியுற்றுக் கொண்டிருந்தது. அஜிஸிலாஸ் பாரசீகத்திற்கு எதிராக வியக்கத்தக்க திட்டங்கள் வகுத்துக்கொண் டிருந்தபோது, கிரீசில் ஸ்ப்பார்ட்டாவுக்கும் அதனுடைய நேச உறவு நாடுகளுக்குமிடையே போர்மூண்டது. அதனால் அவனை ஆசியாவிலிருந்து அழைக்க நேர்ந்தது.

கோட்ஸ் ரிவர் (Goats River) யுத்தத்திற்குப் பின் ஸ்ப்பார்ட்டா வெற்றியின் பலன்களைத் தான்மட்டும் அனுபவித்து வந்தது. தன்னிடம் சரணடைந்த பகைவனின் கடலாதிக்கத்தை அது கைப்பற்றி, அதனால் கிடைத்த திறையை அனுபவித்து வந்தது. அதனுடைய நேச உறவு நாடுகளுக்கு அது ஒன்றும் கொடுக்கவில்லை. பெலப்பனீசிய போர் முழுவதிலும் அந் நாடுகள், ஸ்ப்பார்ட்டாவை விட அதிகமான தியாகங்கள் செய்துள்ளன. அக் காலங்களில் யுத்தத்தின் பளுவையும் அதன் தொல்லைகளையும் தாங்கிய கொரிந்தியாவும் மற்ற நேச நாடுகளும் கோரிக்கைகள் விடுத்தபோது, ஸ்ப்பார்ட்டா அந் நாடுகளை ஆணவத்துடன் நிராகரித்தது. தன்னுடைய முன்னாள் நண்பர்களை இழிவாக நடத்தக்கூடிய அளவுக்குத் தனக்குப் பலம் வந்து விட்டதாக லாசிடமோன் தனக்குள் கருதிக்கொண்டது. பெலப்போனீசிய நாடுகளில் தனக்கு அதிருப்தியை யுண்டுபண்ணிய நாடுகளின்மீது, தன்னுடைய சர்வாதிகார மனநிலையைக் காண்பித்தது. எலிஸ் (Elis) அதற்கு அடிக்கடி தொல்லை தந்தது. அதற்காக அது தண்டிக்கப் பட்டது. எஜிஸ் (Agis) மன்னன் அந் நாட்டின் மீது படை எடுத்துச் சென்று, அதைப் பாழ்படுத்தினான். எலிஸ் மக்கள் (Eleans) மீதும் கடும் நிபந்தனைகளைச் சுமத்தினான். அவர்களுடைய திரிபிலியான் (Triphylian) பகுதியையும் சில்லெனே துறைமுகத்தையும், மற்றும் பலவிடங்களையும் அவர்கள் இழந்தார்கள். அந் நகரத்தைச் சுற்றியிருந்த முற்றுப்பெறாத கோட்டை மதில்களைத் தரை மட்டமாக்கி விடும்படி அவர்கள் வற்புறுத்தப்பட்டனர். ஒலிம்பிய விழாவை நடத்தும் உரிமை ஒன்று மட்டும் அவர்களுக்குக் கருணையுடன் கொடுக்கப்பட்டது. நௌபாக்ட்டசிலும் (Naupactus) செபலேனியாவிலும் குடியேறிய மீதமுள்ள மெஸானியர்களை அவ்விடத்திலிருந்து ஸ்ப்பார்ட்டர் விரட்டியடித்து விட்டனர்.

பெலப்போனீசியாவில் அதிகாரம் செலுத்துவதன் மூலமாக, ஸ்ப்பார்ட்டா தன்னுடைய நாட்டின் ஆதிக்கத்தை ஒழுங்குபட நிலைநாட்டுவதாகக் கருதிற்று. கிரீசின் வடக்கில் அதிகாரம் செலுத்த

ஆரம்பித்தது. தெர்மாபைலேவுக்கு (Thermopylae) அண்மையிலிருந்த தன்னுடைய குடியேற்ற நாடாகிய ஹெராகிளியே (Heraclea) நாட்டிற்கு அது புதிய வன்மையைத் தந்தது. தெஸ்ஸலியில் நுழைந்து லாசிடாமோனிய காவற்படையையும் பார்ஸலசில் ஒரு கவர்னரையும் அமர்த்தியது.

பாரசிகத்திற்கும் ஸ்ப்பார்ட்டாவுக்கும் யுத்தம் மூண்டபோதெல்லாம், தன்னுடைய பகைவனுக்கெதிரே கிரீசில் சண்டையை மூட்டி விடுவதும், புகைந்துகொண்டிருக்கிற வெறுப்பைக் கொழுந்து விட்டெரியச் செய்வதும் பாரசிகத்தின் கொள்கையாகும் தித்ராஸ்ட்டஸ் என்ற அதிபதி, கிரீசிலுள்ள அரசியல் அறிஞர்களுக்கு லஞ்சம் கொடுத்து, ஸ்ப்பார்ட்டாவுக்கு எதிராகப் பாரசீகத்துடன் சேரும்படி செய்ய திமோகிராட்ஸ் (Timocrates) என்ற ரோடியனை (Rhodian) ஐம்பது தாலந்து பொன் கொடுத்து கிரீசுக்கு அனுப்பினான். ஆர்கோஸ், கொரிந்தியா, திப்ஸ் (Argos, Corinth, Thebes) முதலிய நாடுகளுக்கு திமோகிராட்டஸ் சென்றான். செல்வாக்குள்ள சிலரைத் தன் பக்கம் சேர்த்துக் கொண்டான். ஆனால் உண்மையில் பாரசீக ஒத்துழைப்பின் உறுதிப் பாடும், சாதகமான சந்தர்ப்பத்தில் லாசிடமோனிய ஆதிக்கத்திற்கு எதிர்ப்புமே தேவையாக இருந்தன. லாசிடமோனியாவிலிருந்தே முதலில் தாக்குதல் ஆரம்பமாயிற்று. போசிஸ் (Phocis) ஒப்பன்ஷயான் லாக்ரிஸ் (Opuntian Locris) என்ற இரு நாடுகளுக்குமிடையே ஏற்பட்ட ஓர் சிறிய எல்லைத் தகராறு ஓர் நல்ல சந்தர்ப்பத்தையளித்தது. லாக்ரியர்கள் (Locrians) தீப்ஸின் உதவியையும் போசியர்கள் (Phocians) லாசிடமோனின் உதவியையும் நாடினார்கள். லாசிடீமோனியர்கள் தீப்ஸைத் தாக்கி அதனுடைய துடுக்குத்தனத்தை அடக்க ஒரு வாய்ப்புக் கிடைத்ததற்காக மகிழ்ச்சியுற்றார்கள். போயிஷயாமீது (Boeotia) இரண்டு படையெடுப்புக்கான ஆயத்தங்களைச் செய்தார்கள். பௌசானியாஸ் (pausanias) மன்னன் தெற்கிலிருந்தும், லைசாண்டர் ஹெராக்ளியாவிலிருந்து புறப்பட்டு போயிஷியாவை வடக்கிலிருந்தும் தாக்குவதென்றும் திட்டமிடப்பட்டது.

சில ஆண்டுகளுக்குமுன் ஏதென்சை அடியோடு அழித்து விடவாதாடிய தீப்ஸ், இப்போது அந் நாட்டின் உதவியை நாடிற்று. இப்போதுதான் ஏதென்ஸ் தலைதூக்க ஆரம்பித்துள்ளது. சிறு ஆட்சியினர் மக்களாட்சிக் கொள்கையினரோடு மன மொத்து வாழ்ந்தார்கள். தீப்ஸ் உதவி கோரியது. அவர்கள் சபையில் கலந்தாலோசித்தபோது, ஸ்ப்பார்ட்டன் அதிகாரத்திலிருந்து விடுதலை பெறுவதற்காக வந்த அந்த அரிய வாய்ப்பைப் பயன்படுத்திக்கொள்ள வேண்டுமென்று எல்லாக் கட்சியினரும் ஏகமனதோடு வாக்களித்

தார்கள். பிரேயஸ் துறைமுகம் பாதுகாப்பின்றி இருந்ததால் அவர்கள் செய்த தீர்மானத்தைத் துணிச்சலான தீர்மானமென்றே சொல்ல வேண்டும். கோனேன் தென்கிழக்குக் கடல்களை நோக்கிச் சென்று கொண்டிருந்தான். ரோட்ஸில் கலகம் மூண்டுள்ளது என்ற செய்திகள் வந்துகொண்டிருந்தன. அந்தச் சந்தர்ப்பத்தை நழுவவிடக் கூடாதென்ற உணர்ச்சி அவர்களுக்கிருந்தது. 'போயிஷியர்களுக்கும் அத்தீனியர்களுக்கும் ஒரு நிரந்தர நேச உறவு உடன்படிக்கை' ஏற்படுத்தினார்கள். அந்தச் சொற்றொடர்கள் சமாதான உடன்படிக்கை எழுதப்பட்ட மூலக் கல்லில் பொறிக்கப்பட்டுக் காப்பாற்றப்பட்டிருக்கின்றன. அந்த நேரத்திலே அவர்களுக்கிருந்த ஆர்வமூட்டும் நம்பிக்கைகளை அது காட்டுகின்றது.

லைசாண்டர் போயிஷியாவிற்கு வந்தபோது, போயிஷியாவில் தீப்ஸின் ஆதிக்கத்தை வெறுத்து வந்த ஓர்கோமேனஸ் (Orchomenus) அவனுடன் சேர்ந்து கொண்டது. லைசாண்டரும், பௌசானியாசும் தீப்ஸ் நாட்டிற்கும் ஓர்க்கோமேனசுக்கும் பாதி வழியிலுள்ள ஹாலியார்ட்டஸ் (Haliartus) என்ற இடத்தில் சந்திப்பதென முடிவு செய்திருந்தார்கள். அவ்விடத்திற்கு லைசாண்டர் முன்னதாக வந்து விட்டானா அல்லது பாசானியஸ் தாமதமாக வந்தானா என்பதை உறுதியாகக் கூறுதற்கில்லை. ஆனால் லைசாண்டர் ஹாலியார்ட்டஸ் மாவட்டத்திற்கு முதலில் வந்து விட்டான் அந்தப் பட்டினத்தைத் தாக்கினான். தீப்ஸிலிருந்து போர் வீரர்களின் கூட்டம் அங்கிருந்த சாலை வழியே வந்து கொண்டிருந்தது. ஹாலியார்ட்டஸ் கோட்டையிலிருந்தவர்கள் வந்து கொண்டிருக்கிற தீபன்களைப் பார்க்க முடிந்தது. அவர்கள் திடீரென்று கோட்டையின் வாயில்களிலிருந்து பாய்ந்து வந்து தாக்கினார்கள். திடீரென்று இருபக்கங்களிலும் தாக்கப்பட்டதால் லைசாண்டருடைய போர் வீரர்கள் பின் வாங்கினார்கள். லைசாண்டர் கொல்லப்பட்டான். அவனுடைய மரணம் ஸ்ப்பார்டாவுக்கு ஈடு செய்ய முடியாத ஓர் பெரிய இழப்பாகும். அப்போதிருந்த ஸ்ப்பார்டாப் பேரரசு அவனால் ஏற்படுத்தப்பட்டது. ஸ்ப்பார்ட்டாவுக்கு அவனையன்றி முதல்தரமான திறமை வாய்ந்த போர் வீரன் வேறு யாருமில்லை. ஆனால் ஸ்ப்பார்ட்டனான லைசாண்டருடைய மரணத்தினால் கிரீசுக்கு எவ்வித நஷ்டமுமில்லை.

கடைசியில் பௌசானியஸ் வந்து சேர்ந்தான். தன்னுடைய நண்பனாகிய லைசாண்டருடைய பிரேதத்தைத் திரும்பப் பெறுவதே அவனுடைய முதல் கடமையாக இருந்தது. தீபர்களிடமிருந்தும் ஹாலியார்ஷியன்களிடமிருந்தும் அதைப் பெறுவதற்குப் போதுமான பலம் அவனிடமிருந்தது. ஆனால் ஓர் அத்தீனியப்படை, திராசிபூலஸ் (Thrasybulus) தலைமையில் அவர்களுக்கு உதவி புரிய சமயத்தில் அங்கு வந்து சேர்ந்து விட்டது. பௌசானியாசின் நிலைமை மிகவும்

அபாயத்துள்ளாயிற்று. சண்டை செய்தால் தோற்று விடுவது திண்ணம். பலவீனத்தை ஒப்புக்கொண்டு பிரேதத்தை அடக்கஞ் செய்ய ஓர் தற்காலிக சமாதான ஒப்பந்தம் செய்து கொண்டால், அது ஸ்ப்பார்ட்டன் பெருமைக்கு இழுக்காகும். ஓர் யுத்தக்குழு கூடிற்று. தற்காலிக போர் நிறுத்த ஒப்பந்த மொன்றை ஏற்படுத்தி விடுவ தெனத் தீர்மானிக்கப்பட்டது. தீபன் நாட்டு மக்கள் தங்களுடைய வழக்கத்திற்கு மாருன முறையில் ஓர் நிபந்தனையின் பேரில் அதற்குச் சம்மதித்தார்கள். பெலப்போனிசியப் படை போயிஷியாவை விட்டு அகல வேண்டுமென்ற அவர்களது நிபந்தனை ஒப்புக்கொள்ளப்பட்ட தால் போர் நிறுத்தம் செய்யப்பட்டது. ஸ்ப்பார்ட்டர் லைசாண் டரின் மரணத்திற்காகத் துக்கித்துப் புலம்பினுர்கள். அவர்களது துக்கம், தங்கள் மன்னன் மீது கோபமாக மாறியது. குறிப்பிட்ட இடத்தில் குறித்த நேரத்தில் அம் மன்னன் லைசாண்டரைச்சந்திக்காத படியாலும், திபன்களோடு போர் புரிவதை மறுத்தபடியாலும் அவனுக்கு மரண தண்டனை அளிக்கப்பட்டது. முதல் குற்றச்சாட்டிற் கான ஆதாரம் தெளிவாக இல்லை. இரண்டாம் குற்றச்சாட்டைப் பொறுத்த மட்டில், பகுத்தறிவுள்ள எவனும் சமயத்தில் வேறுவித மாக நடந்திருக்க முடியாது. நேரடியாக ஸ்ப்பார்ட்டாவுக்கு வரத் தயங்கிய பௌஸானியஸ் தன் வாழ்க்கையின் பிற்பகுதியை தேஜா (Tegea) என்ற இடத்தில் கழித்தான்.

ஸ்ப்பார்ட்டாவின் சிறப்பு மங்கியது; அதனுடைய திறமை மிக்க படைத்தலைவன் வீழ்ந்து விட்டான். ஸ்ப்பார்ட்டாவுக்கு கிடைத்த இந்த இரட்டையடிகளின் விளைவால் பகையான நான்கு முக்கிய நாடுகள் ஓர் கூட்டமைப்பை ஏற்படுத்திக் கொண்டன. தீப்ஸ் (Thebes), ஏதென்ஸ் (Athens) என்ற இருநாடுகளுடன் கொரிந்தியாவும் ஆர்காசும் (Corinth and Argos) சேர்ந்து கொண்டன. பிறகு யுபோயேனர்கள், அகார்நாநியர்கள், தெரேசின் சால்சிடியர்கள் (Euboeans, the Acarnaniars, the chalcidians of Thrace) மற்றுஞ் சில சிறிய நாடுகள் அக்கூட்டமைப்பில் சேர்ந்து கொண்டன. இந்தக் கூட்டு அமைப்புக்கு முதன்மையாக நின்றவன் தீபன் இஸ்மேனி யாஸ் (Theban Ismenias) என்பவனுகும். அவன் ஸ்ப்பார்ட்டரை அவர்களுடைய வடக்குக்காவல் நிலையமாகியஹெராகிளியாவிலிருந்து (Heraclea) விரட்டியடித்து விட்டு அவ்விடங்களிலுள்ள இதர பகுதி களையும் தீபன் நேசவுறவு நாடுகளோடு சேர்த்துக் கொண்டான். ஸ்ப்பார்ட்டா தெஸாலியில் தன் நிலையை இழந்தது. ஸ்ப்பார்ட்டன் கவர்னரின் பாதுகாப்பிலிருந்த போசியர்கள் (Phocians) தோற்கடிக் கப் பட்டார்கள்.

இவ்விதமாக கிரீசின் நிலைமையும், ஸ்ப்பார்ட்டாவின் எதிர்கால வாய்ப்பும் முற்றிலும் மாறுபாடடைந்தன. வசந்த காலம் வந்தது

நேச நாடுகளின் படைகள் நில முனையில் (Isthmus) ஒன்று கூடின. ஒரு கொரிந்தியாப் போர்வீரன் நேரே ஸ்ப்பார்ட்டாவுக்குச் சென்று 'குளவிகளை அவைகளுடைய கூட்டிலேயே கொளுத்திவிடுங்கள்' என்று கூறுமாறு தீர்மானிக்கப்பட்டது. நேச நாடுகளின் படை நெமியா (Nemea) என்ற விடத்திற்குப் போய்ச் சேர்ந்தது. ஸ்ப்பார்ட்டன் படை ஆர்காடியாவிலிருந்து சிசியோன் (Arcadia to Sicyon) வரையில் முன்னேறி அங்கிருந்து நெமியா (Nemea) என்ற ஊரைக் கடந்து சாரோனிக் வளைகுடாவின் தென்கரைக்குப் போய்ச் சேர்ந்தது. இந்தப் பயணத்தில் நெமேயிலிருந்த நேச உறவு நாட்டினர்களால் அதற்குப் பல தொல்லைகள் விளைந்தன நேசவுறவு நாடுகள் கொரிந்தியாவுக்குச் சமீபத்தில் ஒரு காவல் நிலையத்தை ஏற்படுத்தினார்கள். அங்கே ஓர் யுத்தம் நடந்தது. இரு கட்சிகளிலுமிருந்த போர் வீரர்களின் எண்ணிக்கை சாதாரண கிரேக்கர் போர்களிலிருப்பதைவிட மிகப் பெரியது. ஸ்ப்பார்ட்டப் போர்வீரர்களிலிருந்த பக்கத்தில் அத்தீனியர்கள் படு தோல்வியடைந்தார்கள். ஆனால் மற்றொரு பக்கத்தில் ஸ்ப்பார்ட்டாவுக்குத் தோல்வி ஏற்பட்டது. இருந்த போதிலும் இறுதி வெற்றி ஸ்ப்பார்ட்டர்களுடையது. போர்க்களத்தில் நேசவுறவு நாடுகளுக்கேற்பட்ட நஷ்டம் ஸ்ப்பார்ட்டாவுக்கு ஏற்பட்ட நஷ்டத்தை விட இரு மடங்கு அதிகம். போர்க்களத்தில் மடிந்துபோன ஐந்து அத்தீனியக் குதிரைப் படை வீரர்கள் அது வரை கண்டிராத வீரச் செயல்களைச் செய்து மடிந்தனர். ஏதென்சின் டிப்பிலோன் கேட்டு என்ற இடுகாட்டின்(Dipylon Gate கல்லறையிலே இன்றும் "ஐந்து வீரர்களில்" ஒருவனைப்பற்றி எழுதப்பட்ட நினைவுச் சின்னத்தைக் காணலாம். இருபது வயதுடைய அவ் வாலிபனின் பெயர் டெக்சிலியோஸ். அவன் தன்னுடைய குதிரையின் காலடியில் வந்து வீழ்ந்த ஒரு வீரனை ஈட்டியால் குத்தி, வெற்றி பெற்றதாக வரையப்பட்டுள்ளது. கொரிந்தியப் போரில் மாலை கூட்டமைப்பு நாடுகள் எதையும் இழந்துவிடவில்லை; வெற்றியடைந்தவர்களுக்கு எவ்விதப் பயனும் விளையவில்லை. இஸ்த்துமஸ் கூட்டமைப்பு நாடுகளிடம் ஒப்படைக்கப்பட்டது. அங்கிருந்து அவர்கள் போயிஷியாவிலுள்ள அஜிஸிலாசை எதிர்க்க எத் தடையுமில்லாதிருந்தனர்.

அஜிஸிலாஸ் போஷியாவுக்கு வந்து சேர்ந்தான். ஹாலியார்ட்டஸ் (Haliartus) போரும், அதைத் தொடர்ந்து நடந்த நிகழ்ச்சிகளும் ஸ்பார்ட்டன் அரசாங்கத்தினர் (ephrrs) அஜிஸிலாசை ஆசியாவிலிருந்து வரவழைக்குமாறு செய்தது. எனவே அவன் அப்பொழுது ஐரோப்பாவிலிருக்க வேண்டிய நிலைமை ஏற்பட்டது. பாரசீகப் பேரரசை வென்றுவிடக் கண்ட கனவு நிறைவேற வில்லையே என்று மனம் வருந்தினான். அகமம்னோன், டிராய் நகரைக் கைப்பற்றாமல் மைசினே நகருக்கு வந்துசேர்ந்தான். ஸெர்க்ஸீஸ் படை எடுப்புக்குப் பின் இது

வரையில் எந்தப் படையும் சென்றிராத தெரேஸ், மாசிடோனியா நாடுகளின் வழியே தன் படையை அஜிஸிலாஸ் அழைத்து வந்தான். அவன் ஆம்பிபோலிசுக்கு வந்த போது கொரிந்தியாவடைந்த வெற்றிச்செய்தி அவனுக்குக் கிடைத்தது. அச் செய்தி அவனுக்கு ஊக்க மளிக்கவில்லே. அவன் சென்று கொண்டிருக்கும்போதே அவனுடைய நாட்டின் ஆதிக்கப்போக்கு முடிவு கட்டப்பட்டது.

சினிடஸில் (Cnidus) கோனேன் அடைந்த வெற்றி அஜிஸிலாசின் பேராசைக்கு ஒரு சாவு மணியாக இருந்தது. அவனுடைய படை சேரோனே (Chaeronea) என்ற இடத்திற்கு வந்தபோது சூரிய கிரகணம் நிகழ்ந்தது. அப்போது அங்கு வந்த, சினிடஸ் போர்ச் செய்தி கிரகணத்துக்கு விளக்கமாக இருந்தது. அச் சண்டையின் முழு விவரத்தைப் பற்றிய செய்தியைத் தன் படைக்குத் தெரியாமல் மறைத்து வைப்பது படைத் தலேவரின் முதற்கடமையா யிருந்தது. அச் செய்தியை மறைத்து வைத்துக்கொண்டே யுத்தத்தை ஆரம்பித்துவிட வேண்டியது இரண்டாவது கடமையாகும். லாசிடோமோனிலும். போசிசும், ஆர்க்கோமேனசும் அளித்துவந்த உதவிப் படைகளின் காரணமாக அவன் படை வலுவடைந்தது. அவனுடைய படையில் அவன் ஆசியாவிலிருந்து கொண்டுவந்த போர் வீரர்கள் மிகுதியாக இருந்தார்கள். அவர்களில் ஸெனப்பனுள்பட 10,000 போர் வீரர்களில் சிலரு மிருந்தார்கள். கொரிந்தியாவில் போரிட்ட கூட்டமைப்பு நாடுகளின் படை இப்போது போயிசியாவிலிருந்தது. அது முன்னிருந்தது போன்ற பலம் வாய்ந்த படையன்று. அப் படை நிலமுனேக்கருகில் ஓர் காவற்படையாக இருந்தது. கூட்டமைப்பு நாடுகள் கோரோனே மாவட்டத்தில் தங்கள் கூடாரங்களே அமைத்துக் கொண்டார்கள். அவ்விடம் செபிஸஸ் (Cephisus) பள்ளத்தாக்கிலிருந்தும் போசிஸிலிருந்தும் (Phocis) தீப்சுக்குச் செல்லும் பாதையை, பகைவன் வராதபடி தடுக்கக்கூடிய சாதகமான இடமாக இருந்தது. அந்த யுத்தகளத்தில் அரை நூற்றுண்டுக்குமுன் போயிஷயர்கள், தங்கள் மீதிருந்த அத்தினியர் ஆதிக்கத்தை அழித்து விட்டார்கள். இப்போது அதே இடத்தில் அவ் விருவரும் லாசிடமோனியனே அழித்துவிட இணேந்துள்ளனர்.

அஜிஸிலாஸ், செபிசெஸ் பள்ளத்தாக்கிலிருந்து முன்னேறிச் சென்ருன். அவன் தன்னுடைய படையின் வலது சாரிக்குத் தலேமை தாங்கினுன். அவனுக் கெதிரிலிருந்த கூட்டமைப்பைச் சார்ந்த ஆர்கைவ்ஸ் (Argives) போர் வீரர்கள், எதிரிகளேத் தாக்காமல் அஜிஸிலாஸின் முன்னே பாய்ந்தோடி விட்டனர். கூட்டமைப்பு நாடுகளின் வலது சாரியிலிருந்த தீப்ஸ் போர் வீரர்கள் அஜிஸிலாஸ் படையின் இடது சாரியிலிருந்த ஓர்கோமேனியப் (Orchomenian) போர் வீரர்களேத்

தாக்கித் துரத்தினர். அப்பொழுது வெற்றியடைந்த இரு வதுலசாரிப் படைகளும் வளைந்து வந்து, ஒன்றையொன்று எதிர்த்தன. இப் போது போர் வெகு தீவிரமாயிற்று. தீப்ஸ்கள் தங்களுடைய நண்பர்களுடன் இணைந்து தாக்குவதைத் தடுத்து நிறுத்துவதே அஜிஸிலாசின் நோக்கம். அந்த யுத்தகளத்தில் பங்கெடுத்துக் கொண்ட பளுவாயுத வீரர்களின் போர் மிகப் பயங்கரமாக இருந்த தென்று கூறுகிறான். குள்ளனாகிய அஜிஸிலாஸ் போர் வீரர்களின் காலடிகளில் சிக்கிக் கொண்டான். வீரமிக்க அவனுடைய மெய்க் காப்பாளன் அந் நிலையிலிருந்து அவனைக் காப்பற்றினான். தீபன்களின் செறிந்த படையணி முன்னேறித் தாக்கி, லாசிடாமோனியப் படையை ஊடுருவிச் சென்றது. அப் போர்க் களத்தில் அஜிஸிலாஸ் சிறந்த தலைவனாகத் தோன்றினான். அவன் அங்கு ஒரு வெற்றிச் சின் னம் எழுப்பினான். கூட்டமைப்புப் படையினர் யுத்தகளத்தில் இறந் தோரை அடக்கம் பண்ண ஓர் தற்காலிகச் சமாதான உடன்படிக் கையை நாடினார்கள், ஆனால் கொரிந்திய யுத்தத்தைப்போல், கொரோனா யுத்தம் ஸ்ப்பார்ட்டாவின் போர் நுணுக்கத் திறமையைக் காட்டும் வெற்றியாக இருந்தபோதிலும், வரலாறு இதில் தோற்றவர் களுக்கும் பாராட்டு வழங்குகின்றது. அன்றைய யுத்த களத்தில் தீப்ஸ் நாட்டுப் போர்வீரர்கள் தங்களுடைய சிறப்பான போர்த் திறனை வெளிப்படுத்தினார்கள். பகைவன் தங்களை அழிக்க முயன்ற தைத் தடுத்து விட்டனர். எதிர் காலத்தில் அவர்கள் லாசிடாமோனி யர்களுடன் தொடுக்கப் போகும் யுத்தத்திற்கு இச் சம்பவம், ஓர் நேர்மையான, சிறப்பு வாய்ந்த தூண்டுகோலாக இருந்தது. உடனடி யாகக் கூட்டமைப்பு நாடுகளுக்கு அப் போர் வெற்றியாக மாறி விட்டது.

ஓர் ஆக்கிரமிப்பாளன், தனக்குக் கிடைத்த வெற்றியைத் தொடர்ந்து போர் செய்ய முடியாமலிருந்தால், அவ் வெற்றி, தோல் விக்கு ஒப்பாகும். அஜிஸிலாஸ் உடனடியாக போயிஷியாவை விட்டு வெளியேறினான். கொரிந்தியா, கூட்டமைப்புப் படையினரிடமிருந்த படியால் அவன் டெல்பியிலிருந்து பெலப்போனீசுக்குச் சென்றான்.

அடுத்த ஆண்டுகளில் இந்தப் போராட்டம் கொரிந்தியாவைச் சுற்றி நடந்தது. அதுவே இந்த யுத்தத்தின் நோக்கம் நிறைவேறத் தகுந்த இடமாக அமைந்தது. ஸ்ப்பார்ட்டா, பெலப்போனீசுக்கு வெளியே தன்னுடைய ஆதிக்கத்தை நிலைநாட்டப் போரிட்டது. அத னுடைய பகைவர்கள் அதனுடைய ஆதிக்கம் பெலப்போனிசியா வோடு நிற்கவேண்டும் என்ற நோக்கத்தோடு போரிட்டனர். இந்தத் திட்டம் நிறைவேறுவதற்குக் கொரிந்தியாவுக்கும், சாரோனிக்க வளை குடாவுக்கும் இடையேயுள்ள தீபகற்ப வாயில்களை அடைத்துவிட வேண்டும். ஸ்ப்பார்ட்டா அதனுள் கட்டுண்டு கிடக்கவேண்டும். இந்த

நோக்கத்தோடு கொரிந்தியாவிற்கும் அதன் மேற்குத் துறைமுகமான லெச்சாயோனுக்கு (Lechaeon) மிடையிலும், கொரிந்தியாவுக்கும் அதனுடைய கிழக்குத் துறைமுகமான சென்ச்சரேக்கு (Cenchreae) மிடையிலும், சுவர்கள் எழுப்பினார்கள். இவ் விதமாக யாரும் பெலப்போனிசியாவிலிருந்து வட கிரீசுக்குப் போக முடியாது. அப்படிப் போகவேண்டுமாயின் புதிதாக எழுப்பப்பட்ட கோட்டைகளில் காவல் புரியும் வீரர்களோடு மோதிக்கொள்ள நேரும். லாசிடாமோனுக்கு இதைப் போன்ற இக்கட்டான நிலை ஒருபோதும் ஏற்பட்டதில்லை. அது அத் தீபகற்பத்தில் ஓர் கைதியைப் போல் வாழ நேரிட்டது. அதனுடைய கடலாதிக்கம் வீழ்ந்து விட்டது. லாசிடாமோனுக்கு ஏற்பட்ட இந்த நிலை, ஏதென்ஸின் மீட்சிக்கு வழி வகுத்தது.

சுதந்திர முள்ள மற்ற கிரேக்க நாடுகளைப் போல் ஏதென்ஸ் தன்னுடைய சுதந்திரத்தை மறுபடியும் ஓர் நூதனமான முறையால் அடைந்தது. ஏதென்ஸ் அழிவுக்காக பர்னபாஸஸ் லைசாண்டருக்குத் தேவையான உதவிகளை அளித்தான். அதே பர்னபாசஸ் இப்போது அதென்ஸ் புத்துயிர் பெற அதற்கு வேண்டிய உதவிகளைப் புரிந்தான். அஜிஸிலாஸ் தன்னுடைய மாநிலத்தில் விளைவித்த அழிவை, அவன் ஒருநாளும் மறக்கவில்லை. சினிடஸ் யுத்தத்திற்குப் பின் கிரேக்கப் பட்டினங்கள் ஸ்ப்பார்ட்டாவைப் பகைத்தன. அபிடஸ் மட்டும் ஸ்ப்பார்ட்டனான தேர்சிள்ளிதாசின் ஆதரவில் அதற்கு உதவியாக இருந்தான். பர்னபாசஸின் ஸ்ப்பார்ட்டா எதிர்ப்பு இதனால் வளர்ந்தது. பர்னபாஸஸ் கோனோனுடன் கிரேக்கக் கடற்கரைக்குச் சென்றான். ஸ்ப்பார்ட்டருக்குச் சொந்தமான இடங்களைச் சூறையாடவும், ஸ்பார்ட்டாவுக்கு விரோதமாக ஏற்பட்ட கூட்டமைப்பு நாடுகளுக்கு ஊக்கமளிக்கவும், உதவி புரியவும் வேண்டுமென்ற நோக்கத்துடன் அவன் கிரேக்க எல்லைகளுக்கு வந்தான். ஒரு பாரசீக அதிபதி கொரிந்தியாவுக்கும் சாலாமீசுக்கும் சமீபத்தில் வர நேரிட்டது. கிரீசுக்கு ஐயப்பாடாக இருந்தது. அவன் ஸ்ப்பார்ட்டாவைப் பலி வாங்க எண்ணியது ஏதென்சுக்கு நன்மையாக இருந்தது. அவன் நாடு திரும்பியதும், எல்லாக் கப்பல்களையும் கோனோனிடம் விட்டு வைத்தான். அக் கப்பல்களின் உதவியைக் கொண்டு, ஏதென்சின் நீண்ட சுவர்களை மீண்டும் எழுப்பி, பிரேயஸ் துறைமுகத்தின் தற்காப்பு அரண்களைப் புதுப்பிக்கும்படிச் சொன்னான். ஸ்ப்பார்ட்டாவை ஒழித்துக்கட்ட அவன் பணமும் கொடுத்தான். பெலப்பனேசிய யுத்தத்தால் பெற்ற பயனையும் அழித்து விடுமாறும் அவன் கூறிச் சென்றான். ஏதென்சை பிரேயஸ் துறைமுகத்தோடு இணைக்கும் சமதூரமுள்ள இரு சுவர்களும் புதுப்பிக்கப் பட்டன.[1] துறைமுகம் தற்காப்புடைய

[1] சுவர்கள் கட்டும் வேலை சினடஸ் யுத்தத்திற்கு முன்னால் ஆரம்பமாயிற்று. அவ் வேலை பூர்த்தியடைவதற்குக் கோனோன் காரணமாயிருந்தான்.

தாகக் கட்டப்பட்டது. கிரேக்க நாடுகளில் சுதந்திரமாய் வாழ்கிறோம் என்ற உணர்ச்சி அத்தீனியர்களுக்கு மீண்டும் ஏற்பட்டது. அவர்களுக்கு விடுதலையைக் கொண்டுவந்த கோனேன், பிரேயஸ் துறைமுகத்தில் சினிடியன் அப்ரோடைட் (Cnidian Aphrodite) என்ற தெய்வத்துக்குத் துறைமுகத்தில் ஓர் கோயிலைக் கட்டினான். அக் கோயில் அவன் அடைந்த வெற்றியின் சின்னமாக விளங்குகிறது. இலையுதிர் கால முடிவில் தற்காப்பு அரணவேலை பூர்த்தியாயிற்று. சாலாமிஸ் சம்பவத்தில் அவர்கள் அடைந்த மகிழ்ச்சியைவிட தற்காப்பு அரண் புதுப்பிக்கப் பட்டதைக் கண்டு அவர்கள் உள்ளங்கள் பூரிப் படைந்தன. சுவர்களை மறுபடியும் புதுப்பித்ததற்காக கோனேன் தன்னை இரண்டாவது தெமிஸ்ட்டோகிளிஸ் (Themistocles) என்று அழைக்கப் படலாம். ஆனால் கிரீசில் இந்த நூற்றாண்டுக் காலமாக ஏற்பட்ட மாறுதல்களை நாம் கவனிக்க வேண்டும். அக் காலத்தில் தெமிஸ்டாக்கிளிஸ் தலைமையில் ஏதென்ஸ் ஹெல்லாசின் நலனுக்காகப் பாரசீகத்தோடு அன்று போரிட்டது. இப்போது கோனேன் தலைமையில், பாரசீகத்தின் உதவியினால் தான் இந்த நிலையை அடைந்தது. அது முன்னைய ஆதிக்க உயர்வையும், முன்னைய பேரரசையும் திரும்பப் பெறவில்லை. ஆனால் பலமுள்ள மற்ற கிரேக்க நாடுகளிடையே இதற்குச் சமத்துவம் அளிக்கப்பட்டது. தீப்ஸ், கொரிந்தியா, ஆர்கோஸ், ஸ்ப்பார்ட்டா முதலிய நாடுகளுக்குச் சமமாகத் தான் இருக்கிறதென்ற உணர்ச்சி அதற்கு ஏற்பட்டது. தீப்ஸ் நாட்டுடன் சேர்ந்து ஸ்ப்பார்ட்டாவை எதிர்த்ததைப் போல், இப்போது அமைதியாக ஏதென்ஸ் ஸ்ப்பார்ட்டாவை எதிர்த்து நிற்கமுடியும். அதே சமயத்தில் வடக்கிலுள்ள தீவுகளாகிய லெம்நாஸ். இம்பராஸ், சிசிரஸ் (Lemnos, Imbros and Scyrus) முதலியன மறுபடியும் ஏதென்சுடன் சேர்ந்து கொண்டதாகத் தோன்றுகிறது. ஸ்ப்பார்ட்டாவால் விடுவிக்கப்பட்ட டிலாசை (Delos) மீண்டும் தன்னுடைய ஆதிக்கத்தின் கீழ் ஏதென்ஸ் கொண்டு வந்தது. சியாஸும் (Chios) அதனுடைய நேச உறவு நாடாயிற்று.

தற்காப்பு அரண்களின் சில பாகங்களைக் கைப்பற்ற, பெலப்போனீசிய வாயில் வழிகளைத் தன் ஆதிக்கத்துக்குக் கொண்டு வருவது லாசிடாமோனியர்களின் முதன்மையான கடமையாக இருந்தது. இப்போது கொரிந்தியா எல்லோருடைய கவனத்தையும் கவரும் இடமாயிற்று. லாசிடாமோர்னியர்கள் தங்கள் தலைமைக் காரியாலயங்களை சிசியோன் என்ற இடத்தில் அமைத்துக் கொண்டார்கள். அங்கிருந்தபடியே கொரிந்தியா கட்டிய தற்காப்பு அரண்களை உடைத்தெறியப் பல முறை முயன்று வெற்றியுங் கண்டார்கள். ஆனால் அச் சம்பவங்களின் கால வரிசையைத் திட்டவட்டமாக அறிய முடியவில்லை. இச் சம்பவங்கள், ஏதென்சின் நீண்ட தற்காப்பு அரண்கள்

புதுப்பிக்கப்பட்டபோது நடந்தவைகளா அல்லது அதற்குப் பின்னால் நடந்தவைகளா என்று வரையறுப்பது கடினம். கொரிந்தியாவில் ஸ்ப்பார்ட்டாவுக்கு ஆதரவான ஓர் கட்சி இருந்தது. அக் கட்சி சிறு குழுவினரின் ஆட்சியைக் கவிழ்க்கத் திட்டமிட்டதாகத் தோன்றுகிறது. ஆனால் சதிகாரர்களை அரசாங்கம் கண்டுபிடித்து, அவர்களது திட்டத்தைத் தடுத்துவிட்டது. அந் நாட்டு அரசாங்கம், ஸ்ப்பார்ட்டாவின் ஆதரவாளர்களைக் கைது செய்து, யூக்கிளியா (Euclea) விழாவின் கடைசி நாளில், அவர்களைச் சந்தை வெளிகளிலும் பொது மேடைகளிலும் கொலை செய்தது. அப்போது கொரிந்தியா ஸ்ப்பார்ட்டாவின் பகைவர்களோடு நெருங்கி உறவாடியது. வியக்கத் தக்க முறையில் கொரிந்தியாவும் ஆர்காசும் ஒன்று சேர்ந்து ஓர் கூட்டாட்சி அரசாங்கத்தை ஏற்படுத்திக் கொண்டன. எல்லைத் தூண்கள் அகற்றப்பட்டன. இரு நாட்டு மக்களும் பொதுவான குடியுரிமையைப் பெற்றார்கள். கூட்டாட்சி அரசியல் அமைப்பு ஏற்பட்ட முறையைத் தெரிந்துகொள்ள நமக்கு ஆர்வம் எழுகின்றது. ஆனால் இப்படிப்பட்ட ஓர் கூட்டாட்சி முறை நிலைத்திருப்பதற்கான வழிவகை செய்யப்படவில்லை. அம் முறை கால இடச் சூழ்நிலையால் ஏற்பட்ட அரசியல் அமைப்பாகும்.

லாசிடாமோனியர்களின் ஆதரவாளர்களில் (Philo-Laconian) பலர் தப்பிச்சென்று விட்டார்கள். சிலர் இன்னும் நகருக்குள் இருந்தார்கள். அவர்கள் மேற்குச் சுவரில் ஓர் வாயிலைத் திறந்து, சிசியானிலிருந்த பராசிட்டாஸ் உள்ளே நுழைய வழி வகுத்தனர். பராசிட்டாஸ் சிசியோன் படைத் தலைவன். அவன் 600 பளுவாயுத வீரர்களோடு உள்ளே புகுந்து விட்டான். இரு சுவர்களின் இடைவெளியைத் தன்னுடைய பாதுகாப்பு நிலையமாக்கினான். அங்கு ஓர் அகழியைத் தோண்டினான். அதைப் பாதுகாக்கச் சுற்றிலும் வேலிகளை அமைத்தான். கொரிந்தியர்களும் அவர்களுடைய நேச உறவு நாட்டினரும் பட்டினத்திலிருந்து வெளியே வந்தார்கள்; வேலிகளை அழித்தார்கள். போர் மூண்டது. பராசிட்டாஸ் அவர்களைக் கடுமையாகத் தாக்கி வெற்றி பெற்றான். அவன் துறைமுகத்தைக் கைப்பற்றுவிட்டாலும் லாக்கியோன் என்ற நகரைக் கைப்பற்றினான். சுவர்களின் சில பகுதிகளை இடித்துத் தள்ளினான். சரோனிக் விரி குடாவின் வழியாக கொரிந்தியா எல்லைக்குள் புகுந்து விட்டான். குளிர்காலம் ஆரம்பித்ததும் நில முனையின் பாதுகாப்புக்கு ஏற்பாடு செய்யாமல் தன்னுடைய படையைக் கலைத்து விட்டான். அத்தினியர்கள், தச்சர்களையும், கொத்தர்களையும் அங்குக் கொண்டு வந்து சுவர்களில் ஏற்பட்ட பிளவுகளைப் பழுது பார்த்தார்கள்.

கொரிந்தியாவிலும் சிசியானிலும் இருந்த பாசறைகளிலிருந்து கொள்ளையடித்தல், திடீர்த் தாக்குதல் செய்தல் போன்ற நடவடிக்கை

களைப் பகைவர்கள் செய்து வந்தனர். இப்படிப்பட்ட பணிகளுக்கு, அத்தீனியாவின் இபிகிராட்டிஸ் என்பவனின் கூலிப்பட்டாளம் பெயர் பெற்றது. அவன் போர் செய்வதையே பிழைப்பாகக் கொண்ட வீரர்களை ஒன்று சேர்த்து, அவர்களுக்குப் பயிற்சியளித்து வந்தான். அப் படையினர் கவண்கற்களையும், ஈட்டிகளையும், பளுவற்ற கேடயங் களையும் கொண்டு போர் செய்கிறவர்கள். கூடாரங்களில் தங்கிப் போர் செய்வதற்கு இத்தகைய ஆயுதங்களே சிறந்தவை. பளுவாயுதம் ஏத்திய வீரர்களைவிட இக் கூலிப்படையினரின் பணியும் சிறந்ததாக இருந்தது. எல்லா நாடுகளிலும் இப்படிப்பட்ட படைகளை வைத் திருப்பது பழக்கமாகி விட்டபடியால், குடிமக்களைக் கொண்ட படை யின் சிறப்பு குன்ற ஆரம்பித்தது. கிரீட் (Crete), எட்டோலியா (Aetolia), அகார்ஞனியா (Acarnania) போன்ற வனந்திர நாடுகள் இத்தகைய போர் வீரர்களுக்குப் பேர் பெற்றவை. கூலிப்பட்டாள வீரர்கள் அங்கிருந்தே எடுக்கப்பட்டனர். ராம்னஸ் நகரத்தைச் சேர்ந்த இப்பிகிராட்டிஸ் (Iphicrates of Rhamnus) வீரத்திற்கும் அறிவுக்கும் புகழ் பெற்றவன். ஹெலனிக் போர் முறையில், ஓர் புதிய மாறுதலையுண்டு பண்ணினன். போர் வாள்கள், ஈட்டிகள் முதலியவை களை நீளமாகச் செய்யும்படிச் சொன்னன். அவன் நூதனமான இலே சான காலணிகளை (பூட்சுகளை) போர் வீரர்களுககுக் கொடுத்தான். இவ்விதமான செருப்புகள் அவன் பெயரால் இப்பிகிராட்டிஸ் பூட்சுகள் (Iphicratid boots) என்று அழைக்கப்படுகின்றன. இந்த மாறுதல்களைப் புகழ்ந்து கூறுவது கடினம். இருந்த போதிலும் யுத்த களத்தில் இதனல் ஏற்பட்ட பலன் புகழத்தக்கது. இம் முறையால் போர் வீரர்கள் சுறுசுறுப்போடு முன்னேறிப் பகைவனுடைய படை யைத் தாக்குவது எளிதாக இருந்தது.

இப்பிகிராட்டிசும் அவனுடைய கவுண்டிக்கல் வீரர்களும் கொரிந் தியப் போரில் சிறந்து விளங்கினர்கள். பராசிட்டாஸ் அலடந்த வெற்றியை விட, சிறப்பான, நிலையான வெற்றியை அடையும்படி அஜிஸிலாஸ் கொரிந்தியாவுக்கு அனுப்பப்பட்டான். அவனுடைய சகோதரன் தெலுட்டியாஸின் (Teleutias) கடற்படை அவனுக்கு ஒத்துழைத்தது. நீண்ட சுவர்கள் தாக்கப்பட்டன; லச்சியான் துறை முகம் கைப்பற்றப்பட்டது. அவ் வாண்டு மறுபடியும் இவன் படை எடுத்துச் சென்ருன். அப்போது இஸ்த்மியான் விழாக் காலம். நில முனைக்குப் பக்கத்திலிருந்த போசிடான் ஆலயத்தில் பந்தய விளை யாட்டுகள் நிகழும் தருணம். அப்பொழுது அஜிஸிலாஸ் அங்கு வந்து சேர்ந்தான். அவனது வருகை, விழா கொண்டாடப்பட்டதைத் துவக்க ஆயத்தமாயிருந்த கொரிந்தியர்களுக்கும், ஆர்கைவ்ஸ்களுக்கும் தடையாயிருந்தது. போட்டிகளுக்கு அவனே தலைமை தாங்கினன். அவன் அவ்விடத்தைவிட்டுப்போன பிறகே கொரிந்தியர்கள் திரும்பி

வந்து விழாவை மீண்டும் நடத்தினார்கள். விளையாட்டு வல்லுனர் சிலர் பந்தயத்தில் இருமுறை வெற்றி பெற்றார்கள்.

அஜிஸிலாஸ் பிரயோன் துறைமுகத்தைப் பிடித்துவிட்டான். அத் துறைமுகம் கொரிந்திய விரிகுடாவின் வடக்கிலிருந்தது. இது கொரிந் தியாவை, போயிஷாவின் நேச உறவு நாடுகளோடு தொடர்பு கொள் ளச்செய்யும் ஒரு முக்கியஇடம். அது பகைவனால் கைப்பற்றப்பட்டபடி யால், போயிஷியர்கள் அரசியல் தூதுவர்களை அஜிஸிலாஸ் மன்ன னிடம் உடனடியாக அனுப்பினார்கள். நிலைமை அப்போது எதிராக மாறிவிட்டது. நில முனைப்பாதை (Isthmus) இப்போது ஸ்ப்பார்ட் டாவின் அதிகாரத்திலிருந்து ஆர்கோலிஸ் ஒன்றைத் தவிர சிசியோன், பிராயோன், லெக்கியோன், சிதோன், சிரோனிக் விரிகுடாவிலுள்ள கிரோமியோன் 'ஆகியவைகளில் ஸ்ப்பார்ட்டன் ஆதிக்கமிருந்தது (Sicyon, Piraeon, Lechaeon, Sidon, Crommyon). அஜிஸிலாஸ் தன்னை கிரீசின் நடுநிலைத் தீர்ப்பாளனென்று கருதியிருந்தால், அவனுடைய வெற்றி சிறப்பானதன்று. இப்பிகிராட்டிஸ் தக்க தருணத்தில் வந்து நிலையைச் சாதகமாக்கிக் கொண்டான்.

லாச்சியோனிலிருந்த காவல் வீரர்களில் அமிகிளே (Amyclae) நாட்டுப் போர் வீரர்களும் இருந்தார்கள். அவர்கள் ஹயாசின் தஸிலிருந்து ஊர் திரும்புவதை வழக்கமாகக் கொண்டிருந்தனர். விழாக் காலம் நெருங்கி விட்டது. லாச்சியோனிலுள்ள அமிகிளே போர் வீரர்கள் சொந்த ஊருக்குப் போகத் துடித்துக்கொண் டிருந் தார்கள். அவர்கள் சிசியோன், ஆர்க்காடியா என்ற இரு நாடுகளின் வழியேதான் செல்ல முடியும்.

கொரிந்தியா எழுப்பிய சுவர்களின் 'ஓரமாக அவர்களுடைய பாதை இருந்தது. சரியான பாதுகாப்பில்லாமல் அவ் வழியில் பிரயா ணம் செய்வது ஆபத்து. ஆகையால் 600 ஸ்ப்பார்ட்டன் பளுவா யுத வீரர்கள்'அவர்களுக்குத் துணையாக வந்தார்கள், ஸ்ப்பார்ட்டன் போர் வீரர்கள் லாச்சியோனுக்குத் திரும்பி வந்துகொண் டிருந்த போது இப்பிகிராட்டெசும் அவனுடைய படைவீர்களும் திடீரென்று அவர்கள் மேல் பாய்ந்தார்கள். அவர்கள் மீது கற்களையும் ஈட்டிகளை யும் சரமாரியாகப் பொழிந்தார்கள். நீண்ட வாள்களைக் கொண்டு தூரத்திலிருந்து தாக்கினார்கள். அவர்களோடு போர் புரிவது ஸ்ப் பார்ட்டன் போர் வீரர்களுக்கு எளிதாக இல்லை. காற்றைப்போல் சுழன்று போர் புரிகிற அத்த வீரர்களுடைய தாக்குதலைப் பளுவாயுத வீரர்களால் சமாளிக்க முடியவில்லை. பலர் கொல்லப்பட்டார்கள். இந் தப் போர் அவ்வளவு சிறப்புள்ளதாகத்தோன்றுவிடினும்,இது ஸ்ப்பாக் டேரியக் கொடுமைக்கு ஒப்பாக இருக்கிறது. இரு போர்களிலும்

ஸ்ப்பார்ட்டன் போர் வீரர்களால் அம்புமாரியையும், கல்மாரியையும் சமாளிக்க முடியவில்லை. தங்களைத் தாக்குகிறவர்கள் கைக்கு எட்டாத வர்களாக இருந்தனர். முன்னேறித் தாக்குவதிலும், எதிரியின் அடி தங்கள்மேல் விழாமல் பின் வாங்குவதிலும், இப்பிகிராட்டிஸ் வீரர்கள் சமர்த்தர்கள். அவர்களோடு போர்புரிய ஸ்ப்பார்ட்டன் குடிமக்களைக் கொண்ட படை இன்னும் பழக்கப்படவில்லை. அந்த யுத்தத்தினுல் ஸ்ப்பார்ட்டப் போர் முறையிள் புகழ் தேய்ந்தது. இப்பிகிராட்டி சின் வெற்றி கவண்கல் வீரர்களுக்கு நல்ல எதிர்காலம் இருக்கின்ற தென்பதைத் தெளிவாக்கியது. அஜிஸிலாஸ் தான் பெற்ற வெற் றிப் பெருமையுடனும், தீப்ஸின் தூதர்கள் வருகையால் ஏற்பட்ட பெருமிதத்துடனும் இருந்தான். அப்போது இச் செய்தி அவ னுக்கு எட்டியது. அவனுடைய கர்வம் கவலையாக மாறியது. அவ னுடைய படை துக்கப்பட்டுப் புலம்பியது. போரில் மடிந்தவர்களின் உறவினர்கள் இப்போது களிப்புடன் திரிந்தனர். லொச்சியோனில் ஓர் காவற்படையை மட்டும் நிறுத்திவிட்டு, அஜிஸிலாஸ், சிசியோன், ஆர்க்காடியன் ஆகிய நகரங்களின் வழியே தன்னை யாருமே கண்டு கொள்ளா வண்ணம் இரவோடிரவாக ஸ்ப்பார்ட்டாவுக்குத் திரும்பி வந்தான். பிரியோன் (Piraeon), சிதோன் (Sidon), குரோமியோன் (Crommyon) ஆகிய நகரங்களை இப்பிகிராட்டிஸ் விடுவித்தான். லெச்சியோனிலிருந்த காவற்படை பெலப்போனீசிய வாயில் கதவு களைத் திறந்து விடுவதைத் தவிர வேறெதுவும் செய்ய முடியவில்லை. இதுவே 'கொரிந்திய' யுத்தத்தின் முடிவு. வடகிரீசுக்குப் போகமுடியா மல் அடைக்கப்பட்ட தடையை உடைத்தெறிவதில் ஸ்ப்பார்ட்டா வெற்றி கண்டது. ஆனுல் அதற்குப் பலத்த இழப்பு ஏற்பட்டது; அத னுடைய புகழ் மங்கியது.

## 6. அரசனுடைய சமாதானம்

நாம் இப்போது கொரிந்திய நில முனையைவிட்டு விட்டு கிழக்கி லுள்ள எஜியான் கடற்கரைக்குச் செல்லவேண்டும்.

பாரசீகத்தின் ஆதரவால் பகைவர்கள் வெற்றி பெற்றுர்களென லாசிடாமோனியர்கள் காரணம் காட்டி, பாரசீகத்தைத் தம்பால் இழுத்துக் கொண்டால் நல்லது என முடிவு கட்டினுர்கள். இந்தத் தீர்மானத்தோடு ஸ்ப்பார்ட்டா சமாதான உடன்படிக்கை செய்யப் பாரசீகத்து அண்டால்சிடாஸ் (Antalcidas) என்பவன் தலைமையின் கீழ் ஓர் தூதுக்குழுவை அனுப்பியது. ஸ்ப்பார்ட்டாவின் சமாதான உடன்படிக்கை நிபந்தனைகளாவன : (1) ஆசியாவிலுள்ள கிரேக்க நக ரங்கள்பேரரசனுடைய அதிகாரத்துக்குட்பட்டுஇருக்கவேண்டும். இது

பாரசிகம் செய்த உதவிக்குப் பிரதி உபகாரமாகும். (2) மற்ற கிரேக்க நகரங்களின் சுதந்திரத்தைஅங்கிகரித்தல்வேண்டும். இதுகூட்டமைப்பு நாடுகளைக் குறிப்பிடுகிறது சிறப்பாக போயிஷியாவில் தீப்ஸ் நாட்டின் ஆதிக்கத்தையும், கொரிந்தியா, ஆர்காஸ் என்ற நாடுகளின் கூட்டாட்சியையும் குறிப்பிடுகிறது. ஆன்தால்சிடாஸின் தூதுக் குழுவின் நோக்கத்தை முறியடிக்க அத்தினியர்களும் அவர்களது நேச உறவு நாடுகளும் கோனேனையும் மற்றுஞ் சில தூதுவர்களையும் பாரசீகத்துக்கு அனுப்பினர்கள். அதே சமயத்தில் நாவன்மை படைத்த ஆன்டோசிட்ஸ் (Andocides) என்பவனைச் சமாதானப் பேச்சு வார்த்தைகள் நடத்த ஸ்ப்பார்ட்டாவுக்கு அனுப்பின. ஆண்டோசிடாஸ் தூது குழுவும் ஆண்டால்சிடாஸ் தூதுக் குழுவும் தோல்வியுற்றுத் திரும்பின. திரிபாசஸ் ஸ்ப்பார்ட்டாவுக்குச் சாதகமாயிருந்தான். அவன் கோனேவைச் சிறையில் வைத்தான். ஆனல் திரிபாஸஸ் திருப்பி அழைத்துக் கொள்ளப்பட்டான். அவனுக்குப் பதிலாக ஸ்ட்ருத்தாஸ் நியமிக்கப் பட்டான். இவன் ஸ்ப்பார்ட்டாவுக்கு ஆதர்வாக இல்லை. இறுதியில் ஆண்டால்சிடாஸின் நோக்கம் நிறைவேறியது. ஆனல் நான்கு அல்லது ஐந்து ஆண்டுகளுக்கு அதன் நிறைவேற்றம் தள்ளிவைக்கப்பட்டது. யுத்தம் முன்போலவே தொடர்ந்து நடந்தது.

இந்தக் காலங்களில் நடந்த யுத்தங்களின்சம்பவங்கள் குறிப்பிடத் தக்கவையல்ல. அவைகளைப்பற்றி நமக்குச் சிறிதளவே தெரியும். ஆசியாவில் ஸ்ப்பார்ட்டா யுத்தத்தைத் தொடர்ந்து நடத்தியது. திப்ரான் (Thibron) உடனே அனுப்பப்பட்டான். ஸ்ட்ருத்தாஸ் (Struthas) அவனை முறியடித்தான். எபேஸஸ், மாக்னீசியா, பிரைனி (Ephesus, Magnesia and Priene) முதலிய நகரங்களை திப்ரான் கைப் பற்றிப் பிறகே தோல்வியுற்றான். அதைப் போலவே சினிடஸ், சாமேஸ் தீவுகளும் அவனுடன் சேர்ந்து கொண்டன. அஜிஸிலாஸ் ஆகர்ணனியாவைத் தாக்கி ஆகர்ணனியர்களை லாசிடாமோனியர்களுடன் சேரும்படிச் செய்தான். அவனுடைய கூட்டாளி எஜிஸ்போலிஸ் (Agesipolis) ஆர்கோலிஸ் மீது படை எடுத்தான்; அதனல் ஒரு பயனும் விளையவில்லை. ஸ்ப்பார்ட்டர் அட்டிக்காவைத் தாக்குவதற்கு ஏஜினு முதன்மையான தளமாகக் கொள்ளப்பட்டது. வியக்கத்தக்க சண்டைகள், எஜினுவின் அதிபர்களுக்கும் அத்தினியக் கடற்படைத் தலைவர்களுக்குமிடையே நடந்தன. கோர்கோபாஸ் (Gorgopas) என்ற அதிபதி அத்தினியர்களுக்குச் சொந்தமான நான்கு போர்க் கப்பல்களைக் கைப்பற்றினன். அத்தினிய சாபிரியாஸ் (Chabrias) எஜினுவில் இறங்கி மறைந்திருந்து கோர்காபாஸைக் கொன்றான். அஜிஸிலாசின் சகோதரனுகிய தெலூத்தியாஸ் (Teleutias) எஜினுவுக்கு அனுப்பப் பட்டான். அவன் ஒரு நாள் காலையில் பிரேயஸ் துறைமுகத்தைத் தாக்கி சில கப்பல்களைக் கைப்பற்றிச் சென்றான். பழைய கிரீசில்

போர் ஸ்ப்பார்ட்டாவுக்கு அனுகூலமாக இருந்த போதிலும், உறுதியான வெற்றியைப் பெறவில்லை.

பொரோபோன்டிஸிலிருந்த குடியேற்ற நாடுகளை ஏதென்ஸ் திரும்ப பெற்றுக் கொண்டது முக்கியமான சம்பவமாகும். அந்தச் சமயத்தில் ஏதென்சுக்குப் பணமுடை ஏற்பட்டது. ஏனென்றால் பாரசீகம் அதற்கு அளித்துவந்த பொருளுதவி நின்றுவிட்டது. நாற்பதில் ஒரு பங்கு மறைமுக வரியாகப் பெறப்பட்டபோதும் நிறைவேறவில்லை. ஆகையால் நேர்முக வரியாக யுத்தவரி வசூலிக்கப்பட்டது. இப்போது அத்தீனியர்கள்தெற்கிலும்வடக்கிலும்நடவடிக்கைகள் எடுக்கவேண்டுமென்று திட்டமிட்டிருந்தார்கள். தெற்கில் அவர்களுடைய நண்பன் இவாகோராஸ் (Evagoras) பேரரசனுக்கு எதிராகக் கலகத்திலிறங்கினான். அவனுக்கு அத்தீனியர்கள் உதவிபுரிய முன் வந்தார்கள். அத்தீனியர்கள் வடக்கில் யூக்ஸைன் கடலுக்கு (Euxine sea) செல்லும் பாதையைத் திரும்பக் கைப்பற்ற வேண்டியதாக இருந்தது. ஏதென்சில் மக்களாட்சியை மீண்டும் நிலைநாட்டிய திராசிபூலஸ், 40 போர்க் கப்பல்களுடன் ஹெல்லஸ்பாண்டிற்குச் சென்றான். அதன் விளைவாக தாசோஸ் (Thasos), சாமோத்தரேஸ் (Samothrace), செர்சோனிசஸ் (Chersonesus) என்ற பட்டினங்களும் பாஸ்போரஸ், பைசான்ஷியம், சால்சிடோன் (Bosphorus, Byzantium and Chalcedon) ஆகிய பட்டினங்களும் அத்தீனியாவின் நேச உறவு நாடுகளாயின. அவன் லெஸ்பாசுக்குச் (Lesbos) சென்றான். அங்கிருந்த ஸ்ப்பார்ட்டன் கவர்னரைத் தோற்கடித்துக் கொன்றுவிட்டான். அத்தீனிய ஆதிக்கத்தை அத்தீவில் நிலை நிறுத்தினான். அவன் கிளாசோமேனே (Clazomenae) என்ற தீவையும் கைப்பற்றினான். ரோட்ஸ் தன்னுடைய சுதந்திரத்தைப் பாதுகாத்துக்கொள்ள உதவி புரிவதற்காகவே அவன் அனுப்பப்பட்டிருந்தான். அத் தீவு ஸ்ப்பார்ட்டர்களால் ஆதிக்கம் செலுத்தமுற்பட்ட தீவு. ரோட்ஸின் சுதந்திரத்தைப் பாதுகாக்க அவன் பண நெருக்கடியைச் சமாளித்தாக வேண்டும். அத்தீனியப் போர்க் கப்பல்களுடன் ஆசிய மைனரின் கடற்கரையிலுள்ள நாடுகளுக்குச் சென்று, அவன் பணம் வசூல் செய்தான். அவன் இவ்விதம் பணம் வசூலித்த முறை, ஏதென்ஸ், சிசிலியப் படையெடுப்பிற்குப் பின் தன்னுடைய நேச நாடுகளுடைய வாணிகப் பொருள்களின்மீது விதித்த ஐந்து சதவீத வரியை மீண்டும் புகுத்துவதற்கு ஒப்பாக இருந்தது. அது ஓர் புதிய பேரரசு உருவாவதைப்போல் காணப்பட்டது. அவன் உதவியை நாடிய நாடுகளில் பம்பீலியாவிலுள்ள ஆஸ்பென்டசும் ஒன்றாகும். அவ் வூருக்கு அவன் சென்றது, அவனுக்குக் கேடாக முடிந்தது. அவனுடைய போர் வீரர்களின் மூர்க்கத்தனம் அவ் வூர்வாசிகளின் கோபத்தைக் கிளறிவிட்டது: ஓர் நாள் இரவு அவர்கள் அவன் கூடாரத்தைத் திடீரென்று தாக்கி அவனைக் கொன்றுவிட்டார்கள். பெரிக்

கிளிஸ் மரணத்திற்குப் பின், ஏதென்ஸ் இரு பெருந் தலைவர்களை இழந்தது. அவர்கள் கோனேனும் திராஸிபூலஸும் ஆவர். ஏதென்ஸ் அவ்விருவருக்கும் மிகவும் கடமைப்பட்டுள்ளது. கோனேன் சிறையிலிருந்து விடுதலை பெற்று சைப்பரசுக்குச் (Cyprus) சென்றான். அங்கு அவன் இறந்து விட்டான். இவன் ஆக்கிரமிப்பாளர்களாகிய லாசிடாமோனியர்களின் கடலாதிக்கத்தை ஒழித்தவன். இவன் ஏதென்ஸ் சுதந்திரமடையவும் அது மறுபடியும் கடலாதிக்க நாடாகவும் வழிவகுத்தவன். திராசிபூலஸ் அத்தீனியக் குடியாட்சிக்குப் புத்துயிர் அளித்தவன். அக்குடியாட்சியில் இணக்கமும், மிதமான போக்கும் வளரச் செய்தவன். அவனுடைய வாழ்க்கையைப் பற்றி நாம் அதிகமாகத் தெரிந்து கொள்ள முடியவில்லை.

இருந்தபோதிலும் அவன் பொறுப்பு வாய்ந்த பகுத்தறிவுள்ள ஓர் குடிமகன். ஏதென்ஸ் மக்களின் நம்பிக்கைக்கும் பாத்திரமானவர்களில் ஒருவன். பேராசையோ, வெறுப்போ இல்லாதவன். அவனுடைய அறிவுத் திறனுக்காக நாம் அவனைப் புகழவில்லை. அவனுடைய நல்லொழுக்கத்துக்காகவே நாம் அவனைப் பாராட்டுகின்றோம். அவனுடைய மரணத்திற்குப் பின் அவனுடைய நடத்தையில் களங்கம் ஏற்படுத்தும் பல கட்டுக் கதைகள் எழும்பின. எர்கோகிளிஸ் என்பவன் அவனுடைய நண்பர்களில் ஒருவன். திராசிபூலசின் படை எடுப்பின்போது வசூலித்த பணத்தை இவன் கையாடியதாக இவன் இவன்மீது குற்றம் சுமத்தப்பட்டு மரணதண்டனையளிக்கப்பட்டு அவன் ஒழிக்கப்பட்டான். இவன் பணத்தைக் கையாடிய குற்றத்திற்கான ஆதாரங்கள் எதுவுமில்லை. ஆனால் ஒரு வழக்கறிஞனுடைய வாக்குமூலத்திலிருந்து நாம் முழு உண்மையைக் காண்பது அரிது.

திராசிபூலஸ், பாஸ்பரஸ் வழியே செல்லும் வர்த்தகக் கப்பல்கள் மீது விதித்த சுங்கவரியால் ஆபத்து விளைந்தது. ஏதென்சுக்கு எதிராக ஸ்ப்பார்ட்டா அனக்ஸிபியாசை அனுப்பியது. அவன் வியாபாரக் கப்பல்களைக் கைப்பற்றி ஏதென்சுக்கு அவைகள் வரிகொடாவண்ணம் தடுத்துவிட்டான்.

ஆகையால் அவனுடைய நடவடிக்கையைத் தடுக்கும் பொருட்டு இப்பிகிராட்டிசை 1200 வீரர்களுடன் ஏதென்ஸ் அனுப்பியது. ஹெலஸ்பாண்ட் (Hellespont) யுத்தகளமாக மாறிவிட்டது. எஜினவில் நடந்ததைப் போலவே இங்கும் தாக்குதல்களும் எதிர்த் தாக்குதல்களும் நடைபெற்றன. இப்பிகிராட்டிஸுக்கு இறுதியான வெற்றி பெறும் வாய்ப்புக் கிட்டியது. ஆனக்சிபியாஸ் தான் கைப்பற்றிய அன்டான்டரஸ் (Antandrus) என்ற இடத்தில் காவற்படையை நிறுத்துவதற்காகச் சென்றான். இப்பிகிராட்டஸ் இரவோடு இரவாக

செர்சோனிலிருந்துப் புறப்பட்டு, கிரிமாஸ்தே (Cremaste) பொற் சுரங்கங்களுக் கருகில் தன் படையுடன் பதுங்கி இருந்தான். அனுக் ஸிபியாசின் படை கவலையில்லாமல் திரும்பி வந்துகொண் டிருந்தது. அப் படை வீரர்கள் ஒற்றை வரிசையில் ஓர் குறுகிய கணவாயைக் கடந்துகொண் டிருந்தார்கள். பகைவனின் படைபற்றிய சந்தேக மின்றி அவர்கள் மலையிலிருந்து கிரிமாஸ்தே சமவெளியில் கால்வைத்த போது, இப்பிகிராட்டிசின் வீரர்கள் அவர்கள்மீது பாய்ந்தார்கள். அவர்களை நீண்ட ஈட்டிகளையும் அம்புகளையும் கொண்டு தாக்கினர்கள். நிலைமை படுமோசமாகி விட்டதென்பதை அனுக்ஸிபியாஸ் அறிந்து விட்டான். சிதறுண்டு நின்ற பளுவாயுத வீரர்களால் கவண்கல் வீரர்களைச் சமாளிக்க முடியவில்லை. ‘நான் இவ்விடத்தில் உயிர்விட வேண்டும். இது என்னுடைய கண்ணியமான கடமை விடுத்த ஆணை. ஆனல் நீங்கள் உங்களைக் காப்பாற்றிக் கொள்ளுங்கள்’ என்று அவன் தன் படைவீரர்களிடம் கூறினன். அவனிடம் அளவு கடந்த பற்றுள்ள ஒரு வாலிபன், அவன் பக்கத்தில் அடிபட்டு வீழ்ந்திருந்தான். இப்பிகிராட்டிஸின் தீரச் செயல் ஹெல்லஸ்பாண்டிலும் பாஸ்பரஸிலும் ஏதென்ஸின் ஆதிக்கத்தை நிலைபெறும்படி செய்தது.

ஏதென்ஸின் கெட்ட விளைவால், அரசியல்நிலை மாறுபட்டு, புதிய நாடுகள் ஆதிக்கத்திற்காகப் போராடின. நாலாம் நூற்ருண்டின் ஆரம்பத்தில் மூன்று வல்லரசுகள், கிரேக்க நாடுகளின்மீது ஆதிக்கம் பெற நோக்கம் கொண்டன அவை பெர்சியா, ஸ்ப்பார்ட்டா என்ற இரு நாடுகளும், சைரக்கூஸின் கொடுங்கோலனுகிய டயோனிசியஸ் என்பவனுமாம். இந்த நாடுகள் ஓர் புனிதமான நேச உறவு உடன்படிக்கையால் ஒன்றுசேர்ந்து மற்ற நாடுகளின் உரிமைகளைப் பறித்துவிட முயலவில்லை. டயோனிசியஸ் கிழக்கத்திய நாடுகளின் விவரங்களில் தலையிட விரும்பவில்லை. பாரசீகமும், ஸ்ப்பார்ட்டாவும் ஆசிய கிரேக்க நாடுகள்மீது ஆதிக்கம் செலுத்தப் போட்டியிட்டன. ஆசியாவில் ஆதிக்க வெறிகொண்ட பாரசீகம் மற்ற நாடுகள் சுதந்திர நாடுகளாக இருப்பதைக் காண விரும்பவில்லை. ஸ்ப்பார்ட்டாவின் பொதுவான தோல்வி, பாரசீகத்தின் தயவை நாடிப் பிழைக்கவும், ஆசியாவிலிருந்த கிரேக்க நாடுகளின் மீதுள்ள தன்னுடைய பேராசையை விட்டுவிடவும் தூண்டியது. ஸ்ப்பார்ட்டாவின் சமாதானப் பேச்சு பாரசீகத்தின் காதுக்கேறவில்லை. அதற்குத் தடையாயிருந்தவன் அதிபதி பர்னபாசஸ். அவன் அஜிஸிலாஸ், தேர்சிள்ளிதாஸ் என்பவர்களின் நாட்டைத் தாக்குவதையே நோக்கமாகக் கொண்டவன். பேரரசனிடம் அவனுக்கிருந்த செல்வாக்கு, ஸ்ப்பார்ட்டாவுக்கு எதிர்ப்பா யிருந்தது. பாரசீக அரசவையில் அவநம்பிக்கையையும், வெறுப்பையும் தோற்றுவிக்கும் ஒரு நடவடிக்கையை ஏதென்ஸ் மேற்கொண்டது. ஏதென்ஸ் விடுதலை பெறவும், அத

னுடைய நீண்ட சுவர்களும் துறைமுகத்தின் அரண்களும் புதுப்பிக்கப் படவும் பாரசீகம் உதவியாயிருந்தது. அதே சமயத்திவ் சாலாமிஸின் இளவரசனும், கோனேனின் நண்பனுமான இவாகோராஸ் என் பவனும் ஏதென்சுக்கு உதவியாயிருந்தான். அவன் செய்த சேவைக் காக அவன் ஏதென்ஸ் குடியுரிமையைப் பெற்ருன். அப்படிப்பட் டவன் பாரசீகத்துக்கு எதிராகக் கலகம் செய்தான். அப்பொழுது ஏதென்சின் நிலே இருதலேக்கொள்ளி எறும்பு போலாயிற்று. ஸ்ப்பார்ட் டாவுக்கு எதிராகப் பாரசீகம் செய்த உதவி மறக்கமுடியாதது. ஆர்ட் டாக்ஸெர்க்ஸீஸ் அதனுடைய நண்பன். ஆனல் இவாகோராஸ் அத னுடைய குடிமகன்; ஓர் கிரேக்கன்; தன்னுடைய சைப்பிரிய (Cypriote) நண்பனுக்கு உதவியாகப் பத்துப் போர்க் கப்பல்களே ஏதென்ஸ் அனுப்பியது. அக் கப்பல்கள் லாசிடாமோனியக் கடற் படைத் தலேவனல் கைப்பற்றப்பட்ட போதிலும், அவை பாரசீகத் துக்கு எதிராகப் போர் புரியாவிட்டாலும், அந்தச் சம்பவம் பாரசீகப் பேரரசனே ஸ்ப்பார்ட்டாவுடன் சேருமாறு தூண்டியது. அரசியல் சூழ்ச்சித்திறன் படைத்த ஆன்டால்சிடாஸ் மறுபடியும் சமாதானப் பேச்சு வார்த்தைகளேத் தொடங்கினன். அவனுக்கு திரிபாஸஸ் என் பவனின் ஆதரவு கிடைத்தது. அவனுடைய உதவியுடன் ஆர்ட்டா ஸெர்க்ஸீஸை ஸ்ப்பார்ட்டன் சமாதானப் பேச்சுக்களுக்கு இணங்கச் செய்தான். பர்னபாஸஸின் எதிர்ப்பும் சமாளிக்கப்பட்டது. அவன் சூசாவுக்கு வந்தான். அங்கே ஆர்ட்டாஸெர்க்ஸீஸின் மகளே மணந்து கொண்டான்.

ஸ்ப்பார்ட்டாவின் அரசியல் தந்திரம் அதற்கு சூசாவில் மட்டும் வெற்றியளிக்கவில்லே; சைரக்கூசிலும் அதற்கு வெற்றி கிடைத்தது. ஸ்ப்பார்ட்டாவுக்கு உதவியாக டயோனிசியஸ் மன்னன் முத்துடுப்பு களேக் கொண்ட இருபது கபபல்களே அனுப்பினன்.

மேல் நாட்டிலும், கீழ் நாட்டிலுங் கிடைத்த ஆதரவால், ஸ்ப் பார்ட்டா ஹெல்லாஸில் சமாதானத்தைப் புகுத்த முயன்றது. ஆண் டால்சிடாஸும் திரிபாஸஸும் சூசாவிலிருந்து திரும்பி வந்தார்கள். அபிடஸ் என்ற இடத்தில், ஸ்ப்பார்ட்டன் போர்க்கப்பல்கள் இப்பி கிராட்டிசின் முற்றுகையில் சிக்கியிருந்ததைக் கண்டார்கள். ஆண்டால் சிடாஸ் திறமையுடன் ஸ்ப்பார்ட்டன் கப்பல்களே முற்றுகையிலிருந்து மீட்டு விட்டான். அதே சமயத்தில் அங்கு சைரக்கூசின் கப்பல்களும் பாரசீகக் கப்பல்களும் வந்து சேர்ந்ததால், ஹெல்லஸ்பாண்டிலிருந்த அத்தீனியர்களே முற்றுகையிட்டான். தானியக் கப்பல்கள் ஏதென்சுக் குச் செல்ல விடாமல் தடுத்து விட்டான். அட்டிக்காவின் கடற்கரை வாணிகம், எஜினியாவின் தொல்லேகளால் பாதிக்கப்பட்டு வந்தது. இதை முன்பே அறிந்திருக்கிறேம். சமாதானம் செய்து கொள்வதைத்

தவிர ஏதென்சுக்கு வேறு வழியில்லே. ஏதென்ஸ் இல்லாமல் போரை நடத்த நேச நாடுகளுக்கு முடியவில்லே. ஆக்ரமித்த நாடுகளின் பிரதி நிதிகள் சார்டீசுக்கு அழைக்கப்பட்டனர். அரசனுடைய முத்திரை பதிந்த அவ்வாணையை திரிபாஸஸ் அந்தப் பிரதிநிதிகளுக்குப் படித்துக் காட்டினுன். அதாவது:

'ஆசியாவிலுள்ள நகரங்களும் கிளாசோமேனே (Clazomenae), சைப்பரஸ் (Cyprus) ஆகிய தீவுகளும் தனக்குச் சொந்தமென்று ஆர்ட்டாசெர்க்ஸீஸ் மன்னன் நினைப்பது நியாயமே. மேலும் மற்ற எல்லா கிரேக்க நகரங்களும், அவைகள் பெரியவைகளாயினுஞ்சரி சிறியவை களாயினுஞ் சரி, சுதந்திர நகரங்களாகும். லெம்நாஸ் (Lemnos), இம்பராஸ் (Imbros), சிரஸ் (Scyrus) நகரங்கள் முன்போலவே ஏதென் சுக்குச் சொந்தமானவைகளாகும். இந்தச் சமாதானத்தை ஏற்றுக் கொள்ள மறுப்பவர்களோடும், மறுக்கும் நோக்கங்கொண்ட பிறரோடும் தரையிலும் கடலிலும் கப்பல்களேயும் பணத்தையும் கொண்டு போரிடுவேன்.'

அங்கு கூடியுள்ள நாடுகளின் பிரதிநிதிகள் தங்களது நகரங்களுக்கு உடன்படிக்கையின் வாசகங்களே எடுத்துச் சொல்ல வேண்டும். அதன் பிறகு அவர்கள் ஸ்ப்பார்ட்டாவில் கூடி அவர்கள் ஒத்துக்கொண்டதை அறிவிக்க வேண்டும். எல்லோரும் சமாதான உடன்படிக்கையிலுள்ள வாசகங்களே ஏற்றுக்கொண்டார்கள். கிரீசிலுள்ள ஒவ்வொரு நகரமும் தனித்தனியே உடன்படிக்கைக்கு இசைவைத் தந்தது. தீப்ஸ் மட்டும் ஓர் பிரச்சினையை எழுப்பிற்று. எல்லாப் போயிஷியா நகரங்களின் சார்பிலும் தங்கள் சார்பிலும் இசைவைத் தெரிவிக்கும் உரிமை தனக்கு உண்டு என்று கூறியது. இப் பிரச்சினை போயிஷியாவிலுள்ள பட்டினங்களே மற்றப் பட்டினங்களிலிருந்து வேறுபடுத்திக் காட்டியது. போயிஷிய நகரங்கள் தீப்ஸ் நாட்டைச் சார்ந்திருந்தன என்பதை அது காட்டுகின்றது. ஆனுல் உடன்படிக்கையின் முக்கிய நோக்கம், ஒவ்வொரு நாடும் சுதந்திரமானது என்பதை வற்புறுத்துவதேயாகும். அஜிஸிலாஸ் தீப்ஸ் எழுப்பிய ஆட்சேபனேயைக் கேட்டு உள்ளூர மகிழ்ந்தான். தீப்சு நாட்டு மக்கள் தங்கள் கொள்கையை வற்புறுத்துவார்களென்றும், அதன் காரணமாக அவர்களுடைய நகரத்தைத் தாக்கி, அதில் தன் ஆதிக்கத்தை நிலேநாட்ட ஒரு நல்ல வாய்ப்பு ஏற்படும் என்றும் அவன் நம்பினுன். ஆனுல் அப் பட்டினங்கள் பணிந்து கொண்டன. அதனுல் அஜிஸிலாஸ் மன்னன் ஏமாற்றமடைந்தான்.

அரசனுடைய சமாதானம் கற்களில் செதுக்கப்பட்டு, கிரேக்க நகரங்களிலுள்ள கோயில்களில் வைத்துப் பேணப்பட்டது. பார

சிகத்தின் நடுவர் தீர்ப்புக்குப் பணிந்ததால், கிரேக்கம் கீழ்ப்படிந்தது என்ற உணர்ச்சி பலரிடம் தோன்றியது. ஆனல் ஸ்ப்பார்ட்டாவும் ஏதென்சும் பாரசிக மன்னனின் உதவியைக் கிடைத்தபோதெல்லாம் நாடினர்கள். இதற்கு முன்னல் ஒருபோதும் ஹெல்லாசின் உள் நாட்டுப் பூசல், நாகரிகமில்லாத தீர்ப்பினல் தீர்க்கப்பட்டதில்லை. இந் நிலை ஏற்படுவதற்கு ஸ்ப்பார்ட்டா காரணமாக இருந்தது. தன்னுடைய சொந்த நிலையைப் பாதுகாத்துக்கொள்ள, ஸ்ப்பார்ட்டா தன்னைப் பேரரசனின் தூதுவனகத் தாழ்த்திக்கொண்டது. ஆசியாவிலுள்ள கிரேக்க நாடுகள் கிழ் நாட்டாருக்கேற்ற முறையில் தங்கள் அரசாங்கத்தை அமைத்துக்கொண்டன. திராசிபூலஸ் தேடிக் கொடுத்த நகரங்களை ஏதென்ஸ் இழந்தபோதிலும், வட ஏஜியனில் முன்னுள் தன்னுடன் சேர்ந்து வாழ்ந்துவந்த பழைய நகரங்களைப் பெற்றுக் கொண்டது. அது அரசனுடைய சமாதானத்தின் வாசகத்தை ஏற்றுக் கொள்வதற்காக இந்தச் சலுகை அதற்கு அளிக்கப்பட்டது: கூட்டமைப்பிலுள்ள நாடுகளை ஒடுக்குவதற்காக ஸ்ப்பார்ட்டா திட்டமிட்டுக் கொண்டிருந்தது. போயிஷியன் கூட்டமைப்பைக் கலைத்து விடுவதும், கொரிந்தியாவுக்கும் ஆர்கைசுக்குமுள்ள ஐக்கியத்தைப் பிரித்து விடுவதும் ஸ்ப்பார்ட்டாவின் நோக்கங்களாகும்.

அது கூட்டாட்சியைப் பரிசோதனை செய்த காலம். அரசனுடைய சமாதானம், ஆர்காஸ், தீப்ஸ் ஆகிய நாடுகளின் கூட்டமைப்பைக் கலைத்துவிட்டது. ஆனல் அது மற்றேரிடத்தில் கூட்டாட்சி இணைவதற்கு வழி காட்டிற்று. எபேஸஸ், சாமோஸ், சினிடஸ், இயாஸஸ் (Ephesus, Samos, Cinidus and Iasus) ஆகிய நாடுகள் பாரசீகப் பேரரசின் ஆதிக்கத்தை விட்டு அகன்றன. அவைகள் ரோட்ஸ் (Rhodes) தீவுடன் ஒன்றுசேர்ந்து ஓர் நேச உறவு உடன்படிக்கையை ஏற்படுத்திக்கொண்டன. இந்த நேச உறவுக்கு அடையாளமாக, மதிப்புள்ள பொதுவான நாணயத்தை வெளியிட்டன. குழந்தை ஹெராக்கிளிஸ் பாம்புகளை நெரிக்கின்ற படம் நாணயத்தில் செதுக்கப்பட்டிருந்தது. அது ஒருவருக்கொருவர் உதவி, உரிமைகளைப் பாதுகாத்துக் கொள்ள ஏற்படுத்திக் கொண்ட நேச உறவு உடன்படிக்கை. அக் காலம் பாரசிகம், ஸ்ப்பார்ட்டா அல்லது சைரக்கூஸ் போன்ற நாடுகளால் தங்களுடைய சுதந்திரத்திற்கு ஆபத்து வந்துவிடுமென்று அஞ்சி சிறிய நாடுகள் ஒன்றுசேர்ந்து தங்களுக்குள் கூட்டாட்சி முறை அரசாங்கத்தை ஏற்படுத்திய காலம். இந்தக் கூட்டாட்சி முறை கிரேக்க நாடுகளின் ஒரு முனையிலிருந்து மறுமுனை வரையில் பரவியது. அவைகளிடையே தோழமையுணர்ச்சி வளர ஆரம்பித்தது. அவைகளுடைய குறிக்கோள் ஒரேவிதமாக இருந்தது. மேற்கில் குரோட்டானும் (Croton) சாசின்தஸும் சைரக்கூசப் பேரரசின் வளர்ச்சியைக் கண்டு அஞ்சின. அவற்றிடையே ஒரு ரகசிய உடன்பாடு இருந்தது. இரு

நாடுகளும் தங்கள் நாணயத்தில் பொதுச் சின்னத்தைப் பொறித்து வைத்தன. பொரோபோன்டிஸ், சிசிகஸ் (Cyzicus), லாம்ப்ஸாகஸ் என்ற நாடுகளும் தங்கள் நாணயத்தில் தீப்ஸ் நாணயத்தின் சின்னத்தைப் பொறித்தன. போதுமான பிற ஆதாரங்கள் இல்லாமல், நாணயத்திலுள்ள பொதுவான உருவ அடையாளத்தைக் கொண்டு, நாடுகளின் அரசியல் உறவை விரைவில் முடிவு கட்டிவிட முடியாது. ஆனால் ஹெராக்கிளிஸ் பாம்புகளை நெரிக்கின்ற சின்னம், அக் காலத்தில் சுதந்திரத்தைக் குறிப்பதாக எல்லா நாடுகளிலும் கருதப்பட்டது.